

திருமணம்

செல்வக் கேசவராய முதலியார், எம். ஏ.

1864 - 1921

பேராசிரியர்

திருமணம் செல்வக் கேசவராய முதலியார்

பயன்படுத்திய இந்நூல்

அவர்கள்தம் பேரன் திருவாளர்

தி நம்பிராசன் அவர்களால்

மறைமலையடிகள் நூல்நிலையத்திற்கு

அன்பளிப்பாக

வழங்கப்பெற்றது.

உ

வெற்றிவேலுற்றதுணை.

மதுரை
முத்தமிழ்ச்சங்கப்புலவர்கள்
நாற்பானொன்பதின்மரில்
ஒருவராகிய

# கல்லாடர்

திருவாய்மலர்ந்தருளிய

# கல்லாடம்.



இந்நூலுக்கு
மயிலேறும்பெருமாள்பிள்ளை
உரையிட்டருளிய
முப்பத்தேழு அகவலுடன்,
மற்றைய அறுபத்துமூன்று அகவலுக்கும்
புதுவை

## க. சுப்பராயமுதலியார்

செய்த பதவுரையையுஞ்சேர்த்து
மேற்படியாரால்.


புதுவை - சுப்பு
அருணாசலகுருக்களவர்களது
லக்ஷ்மீவிலாஸசாலையில்
பதிப்பிக்கப்பட்டது.



ஆங்கிரஸ௵ ஆவணிமீ
சென்னை
சந்த்ரமௌலிப்ரஸ்.






இதன்விலை ரூபா - ௩.

உ

வேலுமயிலுந்துணை.

# கடவுள்வாழ்த்து.

---*---

## நேரிசையாசிரியப்பா.

அங்கயற்கண்ணருளமமைபாகனைக
கொங்கலர்திருமுகங்கொடியெனவாரணம்
ஏற்றமைந்தரோடிதயத்திருத்திப்
போற்றினான்மாடக்கூடற்புலவர்தாட்
டாமரைபழிச்சிவான்சங்கத்தமிழ்த்திரட்
டாமெனுங்கல்லாடப்பெருநூலிற
கூறில்சீர்வாழ்மயிலேறும்பெருமா
ஞலாபெறுவசவலறுபான்மூனறனுண்
முபபதிறறிரட்டிகூறபுடனுணாயிடப
புககனனென்புணைபொறுநருத்
தககோளகொளளுஞ்சாலபுகடைப்பிடித்தே.

## அவையடக்கம்.

மாமகடன்கொழுநனுக்காம்பாற்கடலைப்பருகவுபமன் னியற்கே, யாமதுமறறோக்கென்றுமெனவினையாதனை நிகாகல்லாடநூற்குப், பாமரனுமென்போலி யுரைக்கவு ரித்தன்றெனினும் பரிந்துரைதந்நன், தோமதனைப்பொ றுத்துரையுட் டேய்மைசெய்துபணிதருள்வார் நொன் மையோரே.

## முகவுரை.

விரிகதிர்ஞாயிறுவிளங்குபல்கிரணம்
பரவுறலென்னப்பன்மாணவேள்விப
புகழ்மைமிறுத்துப்பொலிதருமுத்தமிழ்க்
கழகத்திறைகொளீஇககசடறுகல்விப
புலமைதெரித்தபுரையறுமுரவோர்
ஒன்றுதலையிட்டவோராறெனமரு
ளியற்கல்லாடனெனும்பெயர்ப்பெரியோன்

மதுரைவளம்பதிவதிதருக்கயற்கண்
மணாட்டிபாகம்வரையாவழகியார்
பாட்டுடைத்தலைவராப்பகாதுநெடுஞ்சீர்
வாதவூரடிகள்வருபெருந்துறைக்க
ணெம்பிரற்காணூஉவிசைக்கப்பெற்றுள
குருமொழிப்பயனெனக்கூர்திருவாசக
வருட்டிருப்பனுவலிலன்பிறக்குரித்தெனுக
கல்லாடத்துக்கலந்தினிதருளியென்று

எத்துஞ் சிறப்புடைத்தாய் நிலைபெற்றுவிளங்குகின்ற கல்லாடமென்னும் இலக்கியத்தில்ஆதியில் திருநெல்வேலிப்பதியின் கணிருந்து இலக்கணக்கொத்தென்னும், அருநூலியற்றிய கல்வி கேள்விப்புலமை தலைசிறந்த திருவாவடுதுறையாதீனஞ் சாமிநாததேசிகர்க்கு முத்தமிழாசிரியராகிய மயிலேறும்பெருமாள் பிள்ளையென்பவரால், முப்பத்தேழகவற் பாக்களுக்கு உரைசெய்யப்பட்டிருந்தது.

அவ்விலக்கியத்தை வாசிப்பவர்கள் - மற்றை யகவற்பாக்களுக்கும், உரைகேட்பதில் பலவா றுழைப்புறுவதனைநோக்கிய கல்வியருமை யறிந்துள்ளசிலர் - உரையில்லாதிருந்தமற்றவைக்கும் உரைசெய்தால் யாவர்க்கு முபயோக மாகுமென்று வேண்டுகோள்செய்யக் கடைப்பிடித்துக் கடவுளையும், ஆசிரியரையும் வணக்கஞ்செய்து, அவைகட்கு உரையிடப்புகுந்ததில், என்மட்டிலகப்பட்ட பிரதிகளதோறுங் கண்டபாட பேதங்கட்கு ஓர்வரையறையில்லை, அன்றியும், சிலபிரதிகளில் கடவுள்வணக்கத்துடன் நூறகவற்பாக்களும், சிலவற்றிலவற்றுட னூற்றிரண்டுமாகவிருந்தன.

எமக்குக்கிடைத்த பிரதிகள்பலவற்றுள்ளும், ஒன்றுமிகவும் பழமையுள்ளதாயும் திருவாவடுதுறை யாதீனத்திலிருந்துநெடுநாளைக்குமுன் இவண்வந்து ஒரு பெரியமனிதர்வசத்திலிருந்த

து, அதனைச் சென்னைக் கல்விச்சங்கத்துத் தமிழ்த்தலைமைப்புல மைநடாத்திய ம - ௱ - ௱ - ஸ்ரீ - வி. தாண்டவராயமுதலியாரவர்களால், முதலில பாரவையிட்டுப பரிசோதிககப்பட்டது. பின்னர் காஞ்சிபுரம் - ம - ௱ - ௱ -ஸ்ரீ - வித்துவான் சபாபதிமுதலியாரவர்களாலும் பார்த்து அங்கீகரிக்கப்பட்டது. இத்துணைச்சிறப்புவாய்ந்த அப்பிரதியால் யான்பெற்றுள்ள வுதவி - இவ்வளாத்தென வென்றற சொல்லுதற்கியலாது.

அப்பிரதியைக் கொண்டு எமது சிற்றறிவிற் கியன்றவளையாராய்ந்து - எழுதியபதவுரையை புரசை - அஷ்டாவதானஞ் சபாபதிமுதலியார், முனனிலையில் பாரவையிட்டு, அச்சிறபதித்ததில் நடனம் - இரத்தினபபரீக்ஷை-இசை ஆகிய விம்மூன்றுவிஷயங்களையும, தனித்தனி சொல்லியிருக்கின்ற அகவறபாக்களுககுப்பொருள - நனகுபுலப்படாமையால் அதுகளை- இத்தருணத்தில் - உரையில்லாமற பதிபபிகக வேணடுவதாயிற்று. இந்நாட்டிலுள்ள சிலரிடத்தில் விசாரித்தும, அவற்றிறகுளளபொருளையறிந்துகொணடு பதிபபிககககூடாமையாலும், அசசியறறபபுகுந்து நெடுநாளாயினதாலும், இதறகுக் கையொப்பக்காரர்களை புத்தகம் வேணடுமென்று துரிதபபடுததாலும், அவ்வாறு செய்ய வுடன்படலாயிறறு. ஆயினும் - இரணடாம்பதிப்பில் அம்மூன்றகவல்களுக்கும உரையிட்டுச்சிற பதிப்பித்தறகுத் தடையிராது.

எம்மினுமிக்கோராகிய பெரியர் இந்நாட்டினுந் தென்னாட்டினும் பலருளராகலின் என்பாலன்புந்தயையுமுடையரா யவற்றின பொருளகளைத் தெரிவிப்பாராயின - அவறறை நன்றியறிதலுடன் பெற்றுக்கொள்ள எதிர்பாரானிறகின்றேன்.

பு. க. சுப்பராயமுதலியார்.

# கையொப்பக்காரர்களின்பெயர்.

| கையொப்பககாரபெயர். | பு எண |
|---|---|
| **சென்னை.** | |
| சி. செங்கல்வராயமுதலியார் | ரு |
| தி. சிவானந்தமுதலியார | க |
| மா. வையாபுரிமுதலியார் | க |
| த. வீராசாமிமுதலியார | க |
| த. வேலுமுதலியார் | க |
| ம. செந்தில்வேலுமுதலியார் | க |
| பு. குமாரவேலுமுதலியார | க |
| தி. இராமலிங்கசரணர் | உ |
| பொ. முனிசாமிமுதலியார் | க |
| உபாத்தியாயா | |
| வே. ஆறுமுகமுதலியார் | க |
| தணிகாசலமுதலியார | க |
| செ. தணிகாசலமுதலியார் | க |
| வே. குமாரசாமிஐயா | உ |
| கா. வித். தாண்டவாசாரி | க |
| **சூளை.** | |
| தி. நாராயணசாமிநாயகர் | க |
| சோமசுந்தரநாயகா | க |
| **புரசைபபாக்கம்.** | |
| பு. முகுந்துமுதலியார் | க |
| பு. அருணசலமுதலியார் | க |
| கிருஷ்ணசாமிஐயர் | க |
| **சிந்தாத்திரிபபேட்டை.** | |
| கொ. சணமுகசுந்தரமுதலியா | க |
| **புதுப்பேட்டை.** | |
| த. அப்பாவுபிள்ளை | க |
| ஆ. வடகராவ் | க |
| ஏ. தனம் | க |

| கையொபபககார்பெயர். | பு எண |
|---|---|
| **இராயபபேட்டை.** | |
| அகிலாணடமபிளளை | க |
| க. இராமலிங்கமுதலியார | க |
| **திருமயிலை.** | |
| வே. சுப்பராயமுதலியார் | க |
| ம.வித். அணணசாமிமுதலியா | |
| **பூவிருந்தவல்லி.** | [ா, க |
| ப. சுந்தரவடிவுமுதலியார | க |
| **பாடிநல்லூர்.** | |
| க. வேலாயுதமுதலியார் | க |
| **பெரிய ஆரணி.** | |
| தி வித். மதுரைநாயகம்பிள்ளை | க |
| செல்லகுடடிராமசாமிஆசாரி | க |
| குபபுசெட்டியார் | க |
| **புதுவை.** | |
| கோ. நாகலிஙகசுவாமி | க |
| **பல்லாரி.** | |
| பா. நாகபபமுதலியார | க |
| **கோயமத்தூர்.** | |
| வே. கோவிநத ராவ் | க |
| **உடுமல்பேட்டை.** | |
| வக்கில் சிவன்பிள்ளை | க |
| ,, வேதநாயகம்பிளளை | க |
| ,, முனியப்பிள்ளை | க |
| ,, இராமசாமிபிள்ளை | க |
| ,, முனியபபமுதலியார் | க |
| ,, சாமிநாதபிளளை | க |
| **தேவகோட்டை.** | |
| வனரெண்டச்செட்டியார | கo |

—*—

# செய்யுளகராதி.

செய்யுளகராதி - முற்றிற்று.

| பக்கம். | வரி. | பிழை. | திருத்தம். |
|---|---|---|---|
| ௩௫௭ | ௯ | வளைந்த | வளைந்ததோற்றம்போல |
| ,, | ௧௧ | பாசனை | பாசறை |
| ௩௬௫ | ௨௫ | தாங்ரும் | தாங்கும் |
| ௩௬௮ | ௨ | ஞெனாறத் | ஞென்றல் |
| ௩௮௪ | ௨0 | றழீஇயவர் | றழீஇயவாக் |
| ௩௯0 | ௧௭ | குயிர் | குயிருள்ளமும் |
| ,, | ,, | உயிர்கள் | உயிகளுள்ளமுமநமும் |
| ௪0௪ | ௧௩ | ருநதுவண்ணஞ் | ருந்தும்வண்ணஞ் |
| ௪0௮ | ௪௬ | நன்னூன் | நானூன் |
| ௪௧௨ | ௧ | தாளைமலரி | தாமரைமலரி |
| ௪௨௪ | ௨0 | முகன்பெறு | முகன்றரு |
| ௪௩0 | ௮ | கனத்தின்ன | களத்தினன் |
| ௪௩௯ | ௬ | மலர்சுமர்த | மலர்கமழ்ந்த |
| ௪௪௭ | ௨௩ | பொறுககலான் | பொறுககலாம் |
| ௪௪௮ | ௨௫ | வாலுளை | வாலுழை |
| ௪௫௬ | ௨௫ | றருட்பணி | றான்பணி |
| ௪௭0 | ௧௫ | நீருரர் | நீரூர |
| ௪௭௫ | ௬ | தென்னென | தென்னவென |
| ௪௯௯ | ௧௪ | மிருபுல | இருபுல |
| ௫0௫ | ௯ | கடந்து | கடந்த |
| ௫0௬ | ௧௪ | கணககர் | கணக்கர்தம் |
| ௫௧௧ | ௬ | சிறிகாய் | சிறியகாய் |
| ௫௨௬ | ௫ | வுதியேல் | வுதியெனில் |
| ௫௨௮ | ௧௩ | சேகரத்துறங்கு | சேகரத்திறங்கு |
| ௫௪௪ | ௧௫ | மலைதோற் | மலைத்தோற |
| ௫௫௪ | ௧௨ | திருவேன் | திருவேல் |
| ௫௫௫ | ௨௧ | சாழ்ச்சி | சாட்சி |
| ௫௫௬ | ௨௨ | நாளிவ் | நாளில் |
| ௫௫௮ | ௧௭ | யேன்முனை | வேன்முனை |
| ,, | ௨௫ | குடவிடை | குடவுடை |
| ,, | ௨௯ | தீங்கி | ஈங்கி |

| பக்கம். | வரி. | பிழை. | திருத்தம். |
|---|---|---|---|
| ௫௫௯ | ௬ | வருகுறி | வருங்குறி |
| ௫௬௦ | ௬ | இரகு | இறகு |
| ௫௬௨ | ௨௦ | பொடித்தது | பொடித்தன |
| ,, | ௨௬ | வுண்டாயிற்று | உண்டாயின |
| ௫௬௩ | ௨௩ | வருகுறி | வருங்குறி |
| ௫௬௪ | ௨௩ | னவ்வையிஞனை | னவ்வயிஞனை |
| ௫௬௬ | ௧௨ | வறிவிலம் | வறிஇலம |
| ௫௬௮ | ௨௬ | நெய்தலுண் | னெய்தலுண் |
| ௫௭௦ | ௧௪ | விழுதினா | விழுந்தினா |
| ௫௭௬ | ௨௬ | ளென்பது | ளென்பதும் |
| ௫௭௭ | ௧ | சொல்லுவது | சொல்லுவதும் |
| ௫௮௩ | ௨௩ | மறையெழு | மறைகெழு |
| ௫௯௧ | ௨௨ | ரனைத்தும்வந்தனையவு | ரனைவருமனையவு |
| ௬௦௮ | ௫ | நின்றன | நின்ற |
| ௬௨௩ | ௨௫ | அளித்தவவ் | அளித்த |
| ௬௩௦ | ௨௨ | பிழைநெஞ்சஞ் | பீழைநெஞ்சஞ் |
| ௬௩௬ | ௨௫ | கெதிப்பாட | கெதிர்பபட |
| ௬௩௭ | ௧ | ஞானி | ஞாளி |
| ௬௩௮ | ௩ | கவிழிணர் | களவிணர் |
| ,, | ௧௨ | தேவறிற் | தேவருட் |
| ,, | ௧௩ | கவலையங் | கவலையுங் |
| ௬௪௦ | ௧ | யலைந் | யலைந்து |
| ௬௬௪ | ௨௬ | சேதாவ் | சேதாவு |



பிழைதிருத்தம் - முற்றிற்று.



# பிழை திருத்தம்.

| பக்கம். | வரி | பிழை. | திருத்தம். |
|---|---|---|---|
| கூ | எ | வென்றும் | வெனினும் |
| உரு | கரு | எற்றந்திரை | எறறூர்திரை |
| உஎ | உ | சிறாாபெறுந்தம | சிறார்ப்பெறுந்தம |
| ௬உ | கக | சிறார் | சிறார் |
| ௬சு | க௬ | மான்றேர் | மாத்தேர் |
| எகூ | கசு | மனவணி | மணவணி |
| எகூ | க0 | மனவணி | மணவணி |
| ககசு | கஉ | சாதோபிசிதி | சந்தோபிசிதம் |
| கசு௬ | உசு | மாட்டேறெலா | மாட்டேறேலா |
| கருசு | சு | மிடற்றென்க | மிடறென்க |
| கஅ0 | உக | மாடடேறெலா | மாட்டேறேலா |
| உ0சு | உ௬ | வீழுநற்கி | வீழுநர்க்கி |
| உ0கூ | கசு | நின்றுள | நினகால் |
| உகசு | எ | விசிபப | யிசைபப |
| உகஎ | சசு | லோகையும் | லோசையும் |
| உ௬௬ | க0 | உடம்படு | உடம்பொடு |
| உ௬கூ | கக | நிரைநிரை | நிரனிறை |
| உசுசு | ரு | என்றுகு | என்றாகு |
| உருக | உசு | ஈண்டுகுரு | ஈண்டுக்குரு |
| உசுக | உசு | குயிர்வாழ்வி | குயிர்வாழவி |
| உசுசு | ரு | பிரிவில்வனா | பிரிவிலவனா |
| ,, | எ | பாவைபோற் | பாவைபொற் |
| உசுஎ | உரு | செவிசெஞ் | செவிச்செஞ் |
| உஎஉ | உக | அகங்குன்றி | புறங்குன்றி |
| ,, | ,, | முகங்குன்றி | அகங்குன்றி |
| ,, | அ | வென்டிசை | வெண்டிசை |
| உஎசு | உக | அத்தனரி | அத்தகரி |
| உஎஎ | உக | வழிதெரியா | வழிபுரண்ட |
| உஅக | ரு | அவையவி | அவயவி |
| உஅரு | உ0 | குறுாம் | குறாம் |

| பக்கம். | வரி. | பிழை. | திருத்தம் |
|---|---|---|---|
| ௨௮௫ | ௨௨ | செங்தொத் | சேஙதொத் |
| ௨௮௮ | ௩ | சிகரகோபிலு | சேகரசோயிலு |
| ,, | ௫ | மூலகாரணன | மூலகொழுஞசுடா |
| ,, | ௮ | காட்சியொடு தோற்றிய | காடசிகொளததோறறி |
| ,, | ௨௪ | நசைந்த | நிரைத்த [ப |
| ,, | ௨௭ | யியங்த | யெங்கு |
| ,, | ௨௮ | கனனியரிவரு | சனனியரவர்க்கு |
| ௨௮௯ | ௪௩ | நிரைநிரை | நிரனிறை |
| ௩௦௩ | ௧௦ | உணாபபாற்று | உணரறபாற்று |
| ௩௦௬ | ௨௩ | யாமென்று | என்று |
| ௩௦௭ | ௯ | அயராட்வெறி | அயராவெறி |
| ௩௦௮ | ௩ | சிமிற்றம்ப | சிறறம்ப |
| ,, | ௪ | விறறசேய | விறற்சேய் |
| ,, | ௯ | தொகை | தொகையான் |
| ௩௧௩ | ௨ | னவையவ | னவயவ |
| ,, | ௧௭ | பெரிதுதடை | பிறிதுதடைட் |
| ௩௧௪ | ௨௦ | யவையவத் | யவயவத் |
| ௩௧௯ | ௨ | துழையால் | துலறி |
| ,, | ௮ | கூறுவிர் | கூறுகிர் |
| ௩௨௦ | ௨௫ | செலவுதெற்ற | செலவுதேற்ற |
| ,, | ௨௬ | கூவிபடை | கூவிபபடை |
| ௩௨௬ | ௧௮ | குழிதொட்டு | குழிதொடு |
| ௩௩௭ | ௪௭ | வுடற்காட்டும் | வுருககாட்டும் |
| ,, | ௨௬ | முண்டோ | முண்டேற் |
| ௩௪௧ | ௨ | வணடுகான் | வண்டுகோண் |
| ௩௪௩ | ௨௧ | தூங்காரல் | தூங்கியாரல் |
| ௩௪௭ | ௧௧ | குவளைபாசடை | குவளைபபாசடை |
| ௩௫௨ | ௬ | துடைக்குநர் | துடைகுநர் |
| ,, | ௧௩ | முதுகனி | முதிர்கனி |
| ,, | ௨௫ | தூஞ்சலில் | துஞ்சலில் |
| ௩௫௩ | ௩ | னன்மாலை | நன்மாலை |

உ

கணபதிதுணை.

திருச்சிற்றம்பலம்.



# கல்லாடம்

மூலமும் - பதவுரையும்.

## கடவுள் வாழ்த்து.

வெண்பா.

செவ்வி திகழ்பொருட்டுச் செந்தா மரைவதனக்
கொவ்வையெயிற் செவ்வாய்க் குறத்தேனை - நவ்வி
விழியானை யைப்புணரும் வேளைமத வெள்ளம்
பொழியானையை மனமே போற்று.

விருத்தம்.

வாய்ந்தபொருட் கொருபொருளாய்க் கலைவாணிக் கருள்கொழிக்கு மனமாய்ப்பாரி, லாய்ந்தமுது தமிழ்வடித்துக் கல்லாட மெனவொருநூ லருளியிட்டார், தேய்ந்தமதிச் சடைப்பரமர் கருணைபெறச் சங்கமுது செல்வர்வாழ்த்தக், காய்ந்தபுல னடக்கியுயர் பெருஞானம்பழுத்தருள்கல் லாடனாரே.

வெண்பா.

கல்லாடர் செய்பனுவற் கல்லாட நூறுநூல்
வல்லார்சங் கத்தில் வதிந்தருளிச் - சொல்லாயு
மாமதுரை யீசர் மனமுவந்து கேட்டுமுடி
தாமசைத்தார் நூறு தரம்.

# கல்லாடம்

## கணபதிதுதி.

### நேரிசையாசிரியப்பா.

திங்கண்முடிபொறுத்த பொன்மலையருவி
கருமணிகொழித்த தோற்றம்போல
விருகவுள்கவிழ்த்த மதநதியுவட்டின்
வண்டினம்புரளும் வயங்குபுகர்முகத்த
செங்கதிர்த்திரளொழு கருங்கடல்போல
முக்கண்மேற்பொங்கும் வெள்ளமெறிகடத்த
பெருமலைச்சென்னியிற் சிறுமதிகிடந்தெனக்
கண்ணருணிறைந்த கவின்பெறுமெயிற்ற
வாறிரண்டருக்க ரவிர்கதிர்க்கனலும்
வெள்ளைமதிமுடித்த செஞ்சடைபொருத்த
னுடலுயிராட வாடுறுமனலமுந்
தென்கீழ்த்திசையோன் றெறுதருதீயு
மூழிதருதீப்படர்ந் துடற்றுபுசிகையும்
பாசக்கரகம் விதியுடைமுக்கோன்
முறிக்கலைச்சுருக்குக் கரம்பெறுமுனிவர்
விழிவிடுமெரியுஞ் சாபவாய்நெருப்பு
நிலைவிட்டுப்படராது காணியினிலைக்கச்
சிறுகாற்றுழலு மசைகுழைச்செவிய
வாம்பன்முகவரகக்கன் கிளையொடுமறியப்
பெருங்காற்றுவிடுத்த நெடும்புழைக்கரத்த
கருமிடற்றுக்கடவுளைச் செங்கனிவேண்டி

யிடங்கொண் ஞாலத்து வலங்கொளும்பருத்த
குண்டுநீருடுதத நெடும்பாரொண்ணமு
மெண்ணுவிலக்கமொடு நண்ணிடுதுயரமு
மளந்துகொடுமுடித்த னின்கடனுதலின்
வரியுடல்சூழக் குடமனைப நாறெற்றிப்
போக்குவழிபடையா துளனுயிர்விடுத்தலி
னறிவுபுறம்போய வுலண்டதுபோலக்
கடற்றிரைசிறுக மலக்குதுயாகாட்டு
முடலெனும்வாயிற் சிறைநடுவுபுக்குப்
போகாதுணங்குறும வெள்ளறிவேமு
மாரணம்போறறுநேன் காலுறவணங்குதுங்
கானமுகமேற்ற துளைகொள்வாய்க்கறங்கும்
விசைத்தநடைபோகுஞ் சகடக்காலு
நீட்டிவலிதள்ளிய நெடுங்கயிற்றூசலு
மலமருகாலு மலகைத்தேருங்
குறைதருபிறவியி னிறைதருகலக்கமு
மென்மனத்தெழுந்த புன்மொழித்தொடையு
மருள்பொழிகடைக்கண் டாக்கித
தெருளுறவைய முடிப்பையின்றெனவே.

―――*―――

திங்கண்முடிபொறுத்த பொன்மலையருவி
கரும்மணிகொழித்த தோற்றம்போல
விருகவுள்கவிழ்த்த மதநதியுவட்டின்
வண்டினம்புரளும வியங்குபுகர்முகத்த

(இதனது பதப்பொருள்)

திங்கண்முடிபொறுத்த - பிறையை முடியின்கட்டரித்த— பொன்மலை - பொன்மலையினின்றும் விழாநின்ற—அருவி - அருவியானது—கருமணி - நீலமணியை—கொழித்த - கொழிக்கப்பட்ட—தோற்றம்போல - தோற்றத்தைப்போல—இருகவுள - இரண்டுகவுளும்—கவிழ்த்த - சிந்தப்பட்ட—மதநதியுவட்டின் - மதமாகிய நதிப்பெருக்கில்—வண்டினம் - வண்டினங்கள்—புரளும் - புரளப்படுதற் கிடமாய்—வயங்கு - விளங்காநின்ற—புகர் - புகரினையுடைய—முகத்த - முகத்தினையுடையாய்;

செங்கதிர்த்திரளெழு கருங்கடல்போல
முக்கண்மேற்பொங்கும வெள்ளமெறிகடத்த

செங்கதிர்த்திரள் - சிவந்த கதிர்க்கூட்டம்—எழு - எழாநின்ற—கருங்கடல்போல - கரியகடல் வெள்ளமெறிந்தாற்போல—முக்கண்மேல் - மூன்று கண்ணினிடத்தும்—பொங்கும் - எழாநின்ற—வெள்ளமெறி - வெள்ளமாகச் சிந்தும்—கடத்த - மதத்தினையுடையாய்;

பெருமலைச்சென்னியிற் சிறுமதிகிடந்தெனக்
கண்ணருணிறைந்த கவின்பெறுமெயிற்ற

பெருமலை - பெரிதாகிய மலையினது—சென்னியில் - உச்சியில்—சிறுமதி - பிறைத்திங்கள்—கிடந்தென - கிடந்தாற்போல—கண்ணருள் - அருட்பார்வையையுடைய முகத்தில்—நிறைந்த - நிறைந்த—கவின்பெறும் - அழகுபெற்ற—எயிற்ற - கொம்பினையுடையாய்;

ஆறிரண்டருக்க ரவிர்கதிர்க்கனலுமடி,
வெள்ளைமதிமுடித்த செஞ்சடையொருத்த
னுடலுயிராட வாடுறுமனலமுந்,
தென்கீழ்த்திசையோன் றெறுதருதீயு,
மூழித்தீப்படர்ந் துடற்றுபுசிகையும்,
பாசக்கரகம விதியுடைமுக்கோன
முறிககலைச்சுருக்குக் கரம்பெறுமுனிவர்
விழிவிடுமெரியுஞ் சாபவாய்நெருப்பு,
நிலைவிட்டுப்படராது காணியிணிலைக்கச்
சிறுகாற்றுழலு மசைகுழைச்செவிய

அவிர் - திங்கடோறும் விளங்காநின்ற—ஆறிரண்டருக்கர் - பன்னிரண்டாதித்தரது—கதிர்க்கனலும் - கிரணாக்கினியும்—உடல் - உடலோடுகூடிய—உயிராட - உயிரெல்லாம நடுஙகும்படி—வெள்ளைமதி - வெள்ளிய மதிக்கலையை—முடித்த-முடித்தற கிடமாய—செஞ்சடை - சிவந்த சடையினையுடைய—ஒருத்தன் - ஏகனாகிய சிவன—ஆடுறும் - ஆடுதலைபபொருந்தாநின்ற—அனலமும் - காலாக்கினியும்—தெனகீழ்த்திசையோன் - அக்கினிககடவுள்—தெறுதரு - எலலாவற்றையுங் காயும்—தீயும் - நெருப்பும—உடற்றுபு - வருத்தாநின்று—பரந்து - உலகெங்கும்பரக்கும்படி—சிகை - சிகையினையுடைய—ஊழித்தீயும் - வடவாமுகாக்கினியும்—பாசக்கரகம் - உறியிற்றங்கிய கமண்டலமும்—விதியுடை - (அரி யய னரனென்னு மூவரையுந் தன்னிடத்தில்) விதித்தலையுடைய—முக்கோல் - திரிதண்டும்—முறிககலைச்சுருககு - துண்டுபெற்ற கலையாகியசுருக்கும்—கரம்பெறு - கையிற்பெற்ற—முனிவர் - முனிவரது—விழிவிடும் - விழி வெளிபபடுத்தும்—எரியும் - கோபாக்கினியும்—வாய் (விடும்) - வாய் வெளிப்

படுத்தும்- சாபநெருப்பும்-சாபாக்கினியும்—நிலைவிட்டு-தத்தம் நிலையினின்றும்—படராது - வெளிப்படாது—காணியினிலைக்க- உரிமையிலே நிலைபெறும்படி—சிறுகாற்றுழலும் - சிறுகாற்று லவப்பெற்ற—அசை - அசைகின்ற—குழைச்செவிய - குழைய ணிந்த செவியினையுடையாய்;

ஆம்பன்முகவரக்கன் கிளையொடுமெறியப .
பெருங்காற்றுவிடுத்த நெடும்புழைககரத்த

ஆம்பன்முகவரக்கன் - யானைமுகவசுரன்—கிளையொடு - சுற்றத்துடனே—மறிய-நமொறும்படி—பெருங்காற்றுவிடுத்த - மிகுதியாகிய காற்றினைவிடுத்த—நெடும் - நெடிதாகிய—புழை - மூக்கினையுடைய—கரத்த - கரத்தினையுடையாய்;

கருமிடற்றுக்கடவுளைச் செங்கனிவேண்டி
யிடங்கொண்ஞாலத்து வலங்கொளும்பதத்த

செங்கனிவேண்டி - சிவந்த கனியினைவிரும்பி—கருமிடற்று - கரிய கண்டத்தையுடைய—கடவுளை - சிவனை—இடங்கொள் - இடங்கொண்ட—ஞாலத்து - பூவலமாக—வலங்கொளும்- வலம்புரிந்த—பதத்த - பதத்தினையுடையாய்;

குண்டுநீருடுத்த நெடும்பாரெண்ணமு
மெண்ணுவிலக்கமொடு நண்ணிடுதுயரமு
மளந்துகொடுமுடித்த னின்கடனுதலின்

குண்டுநீருடுத்த - ஆழ்ந்தகடல்சுற்றிய—நெடும்பார் - பரந்த பாரிலுள்ளார்—எண்ணமும் - கருத்தும்—எண்ணு - இவ்வளவென்று கூட்டப்படாத—இலக்கமொடு - இலக்கத்தோடு—நண்ணிடு- பொருந்திய—துயரமும் - துன்பமும்—அளந்துகொ

டு - அளவிட்டு—முடித்தல் - முடிவுசெய்தல்—நின்கடனாதலி
ன் - நினக்கு முறையாதலின்;

கான்முகமேற்ற துளைகொள்வாய்க்கறங்கும்
விசைத்தநடைபோகுஞ் சகடக்காலு
நீட்டிவலிதள்ளிய நெடுங்கயிற்றூசலு
மலமருகாலு மலகைத்தேருங்
குறைதருபிறவியி னிறைதருகலக்கமும்

கால் - காற்றினை—முகமேற்ற - தன்முகத்திலேற்ற—
துளைகொள் - துளைகொண்ட—வாய் - வாயினையுடைய—கறங்
கும் - காற்றாடியும்—விசைத்த - விசையைப் பண்ணப்பட்ட—
நடைபோகும் - செலவோடுசெல்லும்—சகடக்காலும்-பண்டியி
னுருளையும்—நீட்டிவலிதள்ளிய - ஆடும்விசையா லுயர்த்துந் தி
ணிவைத்தள்ளிய—நெடுங்கயிற்றூசலும் - நெடியகயிற் றூசலு
ம்—அலமருகாலும் - சுழலுங்காற்றும்—அலகைத்தேரும - பே
ய்த்தேரும்—குறைதரு - குறைதருதற்குக் காரணமாகிய—நி
றைதரும் - நிறைதருகின்ற—பிறவியின் - பிறவியினது—கலக்
கமும் - தடுமாற்றமும்;

என்மனத்தெழுந்த புன்மொழித்தொடையும்

என்மனத்தெழுந்த - என் மனத்தின்கண்ணுதித்த—புன்
மொழித்தொடையும் - புனமொழியாற்றொடுத்ததமிழும்;

அருள்பொழிகடைக்கண் டாக்கித்
தெருளுறவைய முடிப்பையின்றெனவே.

தெருளுற - தெளிவுபொருந்த—அருள்பொழிகடைக்கண்
டாக்கி - அருளைப்பொழியுங் கடைக்கண்பார்வைசெய்து—இன்

று - இன்று—ஐயமுடிபபையென - வியப்ப முடிபபையென்று கருதி;

வரியுடல்சூழக் குடமபைநூறெற்றிப
போக்குவழிபடையா துள்ளுயிர்விடுதலி
னறிவுபுறம்போய வுலண்டதுபோல

நூல் - நூலால்—வரியுடல்சூழ - தன் வரியுடலைச்சூழ—குடம்பைதெற்றி - குடம்பையுண்டாக்கி—போக்கு - தான் செல்லுதலையுடைய—வழிபடையாது - வழியை யுண்டாக்காது—அறிவுபுறம்போய - அறிவின்றி—உள்ளுயிர்விடுதலின் - குடம்பைநடு வுயிர்விடுத்த—உலண்டதுபோல - உலண்டானது போல;

கடற்றினைசிறுக மலக்குதுயர்காட்டு
முடலெனும்வாயிற் சிறைநடுவுபுக்குப்
போகாதுணங்குறும் வெள்ளறிவேமு
மாரணம்போற்றுநின் காலுறவணங்குதும்

கடற்றினைசிறுக - தினைக்கடலானதுஞ் சிறுக—மலக்கு - மலக்காநின்ற—துயர்காட்டும் - துயரைக்காட்டுகின்ற—உடலெனும் - உடலென்னும்—சிறைநடுவுபுக்கு - சிறைநடுவே புகுந்து—வாயில் - (சுழிமுனைநாடியென்னும்) வாயிலின்கண்—போகாதுணங்குறும் - போகாதுவருந்துகின்ற—வெள்ளறிவேமும் - அறிவின்மையையுடையேமாயினும்—ஆரணம்போற்றும் - (இவ்விலக்கிய மினிது முடித்தற்பொருட்டு) வேதங்கள்போற்றும்—நின்கால் - நின்பாதத்தை—உறவணங்குதும் - மிகவணங்குகின்றேம்—என்றவாறு.

முகத்த கடத்த வெயிற்ற செவிய காத்த பதத்த வெண் ணமுங் துயரமு முடித்த னின்கடனுதலின் முடிப்பையென்று கருதி வெள்ளறிவேமுநின் காலுறவணங்குதுமென வினைமுடிவுசெய்க.

இனிச் செங்கதிர்த்திரளொழு கருங்கடல்போல வென்பதற்குச் செவ்விய சுடர்க்கூட்டத்தினின்றும் எழுகின்ற கருங்கடலானதுபோலவென்றும் பொருள்பொருந்தும். எற்றெனின் உபமேயத்தின் முக்கண்ணினிடத்தும் பொங்குமதமென்றதனால் உபமானத்தின் முரண்பட்டு வழுவமைதியாய் நில்லாமலே சோமசூர்யாக்கினிக் கூட்டத்தினின்றும் எழாநின்ற கடல்போலவென்க. அங்ஙனங்கூறிற் பொருண் மாறுபட்டுக் கிடக்குமென்னின் இல்பொருளுவமையென்னு மணிபெறக் கூறியதன்றி அப்பொருணிகழ்ச்சி முக்காலத்தினுமின்று "இல்பொருளுவமையாவது,, முக்காலத்தினுமில்லாத தொருபொருளை இருக்கும்பொருள்போ லுவமித்துக்கூறுவது. இதனை வடநூலார் அதியுக்தியலங்காரமென்றும், அபூதாலங்காரமென்றுங் கூறுவர். கண்ணினிடத்து மதங்கூறியது எழுமதஙகூறவந்த வடநூலாரது சித்தாந்தமென்க.

கண்ணுளருளென்றது - ஆகுபெயர்.

இவ்விடத்து ஒருத்தனென்றது - காலாக்கினியுருத்திரனை சர்வசங்காரகாலத் தவரது திருமேனியினெழு மக்கினியெனக்கொள்க.

ஊழித்தீப்படர்க் துடற்றுபசிகை யென்பதற்கு - உலகெங்கும்பரவி வருத்துகின்ற வடவாமுகாக்கினியின் சிகையென்று கூறினும் பொருந்தும். ஊழித்தீயின் சிகையெனினும் சிகையினையுடைய வூழித்தீயெனினும் இழுக்கா. சிகையின்கட் டீவரமு

தன்மைபற்றி சினையாயினும் முதலபோற்காட்டினர். இதனை வடநூலார் விசேடணோதாரமெனபா.

முறிககலைச்சுருகவென்றது - தண்டிற்கட்டியிருப்பது. அதனையவிழ்த்துச் சுத்தாசமனமுதலியசெய்தற்குக் கையிறசுருக்கிககொள்ளப்படுவது.

நிறகடனென்றும பாடாந்தரமுண்டு.

உள்ளுயிர்விடுத்தலின் அறிவில்லாத தன்மையை புடைய வுலண்டுப்பூசசிபோலவென்று அநனவயமாகவும பொருள்பொருந்தும்.

வெள்ளறிவேமும் என்ற தொருமைத்தன்மைப்பன்மை.

நீடிவலிதள்ளிய வெனபதற்கு - நீளவிழுத்து வலிநாகச செலுத்தியவென்று கூறினும் பொருநதும்.

ஐயமுடிபபையென்றதில் - ஐயனேயென்று முன்னிலையாகக்கூறினும் பொருந்தும்.

முடித்தலுககு - நாசமாக்குதலும் முற்றுறச்செய்தலும் பொருளாதலின பிறவியினது கலககத்தை நாசஞ்செய்வாயென்றும், எனது தமிழை முற்றுவிபபாயென்றுஞ் சிலேடையணிபெறப பொருளுணாத்துககொள்க. (௧)

---

## முருகக்கடவுள் துதி.

நேரிசையாசிரியப்பா.

பாய்திரையுடுத்த ஞாலமுடிவென்ன
முடங்குளைமுகத்துப் பஃறேறளவுணனொடு
மிடையுடுவுதிரச் செங்களம்பொருது
ஞாட்பினுண்மறைந்து நடுவறுவரத்தால்
வடவைநெடுநாககின் கிளைகள்விரிந்தென்னச்

செந்துகிர்படருந திரைக்கடற்புக்குக்
கிடந்தெரிவடவையிற் றளிர்முகமீனறு
திரையெறிமலைகளிற் கவடுபலபோக்கிக்
கற்செறிபாசியிற் சினைக்குழைபொதுளி
யகறிரைப்பரப்பிற் சடையலைந்தலையாது
கீழ்ணர்நின்ற மேற்பகைமாவி
னோருடலிரண்டு கூறுபடவிடுந்த
வழியாப்பேரளி யுமைககணின்று
தற்பெயர்புணர்த்திக் கற்பினொடுகொடுத்த
வமையாவென்றி யரத்தநெடுவேலோய
கீழ்மேனின்றவக் கொடுந்தொழிற்கொக்கின
கூறிரண்டாய வொருபங்கெழுந்து
மாயாப்பெருவரத தொருமயிலாகிப்
புடவிவைத்தாற்றிய பஃறலைப்பாந்தண்
மண்சிறுகவிரித்த மணிப்படநதூக்கி
விழுங்கியபல்கதிர வாய்தொறுமுமிழ்ந்தென
மணிநிரைசிந்தி மண்புகவலைப்பக்
காவிரிந்தோங்கிய மலைத்தலைக்கதிரென
வோவறப்போகிய சிறைவிரிமுதுகிற
புவனங்காணப் புகழொடுபொலிந்தோய
போழ்படக்கிடந்த வொருபங்கெழுந்து
மின்னன்மாண்டக விரலாபூத்த
சென்னிவாரணக் கொடிமபகையாகித்
தேவர்மெய்பணிப்புற வான்மிசையுடுத்திரள்

பொரியிற்கொறிப்பப் புர்நதம்பொருனுடித
தாமரைபழித்த கைமருங்கமைத்தோ !
யொருமையுளொருங்கி யிருகைநெய்வார்த்து
நாரதனோம்பிய செந்தீக்கொடுத்த
திருகுபுரிகோட்டுத் தகர்வருமதியோய் !
முலையெனவிரண்டு முரட்குவடுமரீஇக்
குழற்காடுசுமந்த யானைமகட்புணர்ந்தோய்
செங்கட்குறவர் கருங்காட்டுவளர்த்த
பைங்கொடிவள்ளி படர்ந்தபுயமலையோ
யிமயம்பூத்த சுனைமாண்டொட்டி
லறிவிற்றங்கி யறுதாய்முலையுண்
டுழன்மதில்சுட்ட தழன்கைப்பெருமான்
வணங்கிநின்றேத்தக் குருமொழிவைத்தோ
யோமெனுமெழுத்திற் பிரமம்பேசிய
நான்மறைவிதியை நடுங்குசிறைவைத்துப்
படைப்புமுதன்மாய வான்முதற்கூடித்
தாதையுமிரப்பத் தளையதுவிடுத்தோய்
கூடஞ்சுமந்த நெடுமுடிநேரி
விண்டடையாது மண்புகப்புதைத்த
குறுமுனிதேற நெடுமறைவிரித்தோ !
யாறுதிருவெழுத்துங் கூறுநிலைகண்டு
நின்றாட்புகழுநர் கண்ணுட்பொலிந்தோய் !
மணிக்காலறிஞர் பெருங்குடித்தோன்றி
யிறையோன்பொருட்குப் பரணர்முதல்கேட்ப

பெருந்தமிழ்விரித்த வருந்தமிழ்ப்புலவனும்
பாய்பாரறிய நீயேயாதலின்
வெட்சிமலர்சூழ்ந்த நின்னிருகழற்கால்
குழந்தையன்பினொடு சென்னிதலைக்கொள்ளுது
மறிவுநிலைகூடாச் சின்மொழிகொண்டு
கடவுட்கூறு வுலவாவருத்தியுஞ்
சனனப்பிணியுந் தள்ளாக்காமமுந்
தற்படுதுயரமு மடைவுகெட்டிறத்தலுந்
தென்புலக்கோமகன் றீத்தெறுதண்டமு
நரகொடுதுறக்கத் துழல்வருபிணியு
நீளாதிம்பரின் முடித்து
மீளாக்காட்சி தருதியின்றெனவே.

———*———

பாய்திரையுடுத்த ஞாலமுடிவென்ன
முடங்குளைமுகத்துப் பஃறோளவுணனொடு
மிடையுடுவுதிரச் செங்களம்பொருது

(இதனது பதப்பொருள்)

பாய்திரையுடுத்த - பரந்த திரைக்கடல்சூழ்ந்த—ஞாலம்-உலகத்தார—முடிவென்ன - உகமுடிவென்னும்படி—மிடையுடுவுதிர - செறிந்த வான்மீனுதிர—பஃறோள் - பல தோளினையுடைய—முடங்குளைமுகத்தவுணனொடு - சிங்கமுகா சுரனோடு வந்து—செங்களம்பொருது - போர்க்களத்திற்பொருது;

ஞாலம்-ஆகுபெயர். செங்களம்பொருதென்பது - இடத்தினிகழ்பொருளின் றொழிலிடத்தின்மே னின்றது. பொருதென்பதனைப் பொரவெனத்திரித்துப் போர்க்களத்திலுள்ளார் பொர

வென்று பொருள்கொள்ளின் இடத்தினிகழ்பொருளின்றொழி லிடத்தின்மேலேற்றிக் கூறுக.

ஞாட்பினுண்மறைந்து நடுவறுவரத்தால்
வடவைநெடுநோக்கின் கிளைகளவிரிந்தென்னச்
செந்துகிர்படருந் திரைக்கடற்புக்கு

நடுவறுவரத்தால் - சாவாது பாதியி லரசுரிமை யுறுதற்குக் காரணமாகிய வரத்தால்—ஞாட்பினுள் - செருக்களத்தில்—மறைந்து - மறைந்து—வடவை - வடவாமுகாக்கினியின்—நெடு நோக்கின் - நெடியநோக்கின்—கிளைகள்விரிந்தென்ன - கிளைகளவிரிந்தாற்போல—செந்துகிர் - கண்ணுக்கினிய பவளம்—படரும் - படருதற் கிடமாகிய—திரைக்கடல் - திரைகடலில்—புக்கு - புகுந்து;

நடுவறுவரமாவது - சூரன் முற்சென்மத்திலரசனாகி யோரிருடியுடனுணவைக்கேட்ப வவர் சுப்பிரமணியர்க்கு மயிலுங்கோழியுமாகச் செல்லென்றது. வரமென்றது - வேண்டுகோள். நடுவுறுவரமென்று பாடமாயின் உண்மையாகப் பொருந்துதற்குக் காரணமாகிய வரமென்க.

கிடந்தெரிவடவையிற் றளிர்முகமீன்று
திரையெறிமலைகளிற் கவடுபலபோக்கிக்
கற்செறிபாசியிற் கிளைக்குழைபொதுளி
யகறிரைப்பரப்பிற் சடையலைந்தலையாது
கீழ்நின்றமேற்பகைமாவின்

அகறிரைப்பரப்பிற்கிடந்து - அகன்ற வக்கடலிற் கிடந்து—எரி - எரியாநின்ற—வடவையில் - வடவைபோல—தளிர் - தளிரை—முகமீன்று - தன்னிடத் தீனப்பட்டு—திரையெறி - திரையெறிகின்ற—மலைகளில் - மலைகளைப்போல—கவ

டுபல - பலகோடுகளை—போக்கி - உண்டாக்கப்பட்டு—கற்செறி - கல்லிற்செறிந்த—பாசியில் - பாசிபோல—சினை - கோடுகளில்—குழைபொதுளி - இலை செறியப்பட்டு—சடையலர்ந்து - வேரலையப்பட்டு—இணா - பூங்கொத்துகள—அலையாது - அலையப்படாது—கீழ்நின்ற - கீழாகநின்ற—மேற்பகை - முற்பகையாகிய—மாவின் - மாவினது,

போனஜனனத் தரசுரிமைநீங்கி யடைந்தகாலத்துச் சுப்பிரமணியா நீயெனக்குச் சத்துருவென்றமையான் மேற்பகையென்றார்.

ஓருடலிரண்டு கூறுபடவிடுத்த
வழியாபபேரளி யுமைக்கணின்று
தறபெயர்புணர்த்திக கறபினொடுகொடுத்த
வமையாவென்றி யரத்தநெடுவேலோய்

ஒருடல் - ஒருடலானது—இரண்டுகூறுபட - இரண்டு கூறுபடும்படி—அழியாபபேரளி - அழியாத பேரளியையுடைய—உமை - பார்வதி—கண்ணின்று - எதிர்நின்று—தறபெயர்புணர்த்தி - சத்தியென்று தனதிருநாமஞ்சாத்தி—கறபினொடுகொடுத்து - சூரனை வெல்லென்று கறபித்தலுடனே கொடுப்ப—விடுத்த - விடுத்ததனால்வந்த—அமையாவென்றி - ஒடுங்காத வென்றியினையும்—அரத்தம் - குருதியினையு முடைய—அரநெடுவேலோய் - நெடிதாகிய வவ்வேலினையுடையாய்;

கொடுத்து - கொடுப்பவெனத் திரிக்க. கண்ணீன்றென்று பாடமாயின் உமையானவள் தன்கண்போற் பெற்றென்க. ஒடு - உடனிகழ்ச்சி. அகரம் - சுட்டு.

கீழ்மேனின்றவக் கொடுந்தொழிற்கொக்கின்
கூறிரண்டாய வொருபங்கெழுந்து
மாயாப்பெருவரத் தொருமயிலாகி

கீழ்மேனின்ற - கீழ்மேலாகநின்ற—அக்கொடுந்தொழில் - அக்கொடிய தொழிலினையுடைய—கூறிரண்டாய - இரண்டுகூறுகிய—கொக்கின் - மாவின்—ஒருபங்கெழுந்து - ஒருபங்கெழுந்து—பெருவரத்து - பெரியவரத்தினால்—மாயா - அழியாத—ஒருமயிலாகி - ஒருமயிலாகி;

புடவிவைத்தாற்றிய பஃறலைபபாந்தண்
மண்சிறுகவிரித்த மணிப்படந்தூக்கி
விழுங்கியபல்கதிா வாய்தொறுமுமிழ்ந்தென
மணிநிரைசிந்தி மண்புகவலைப்ப

புடவி - பூமியை—வைத்து - தலையில் வையாநின்று—ஆற்றி - தாங்கிய—பஃறலைபபாந்தள் - சேடன்—மண்சிறுக - மண்ணுஞ் சிறுகும்படி—விரித்த - பரபபிய—மணிபபடம - மணிபடத்தை—தூக்கி - கொத்தித்தூக்கி—விழுங்கிய - முன்விழுங்கிய—பல்கதிர் - பலகதிர்களை—வாய்தொறும் - வாய்தோறும்—உமிழ்ந்தென - உமிழ்ந்தாற்போல—மணிநிரை - நிரையாகிய மணிகளை—மண்புகச்சிந்தி - மண்ணிற் புகும்படிசிந்தி—அலைப்ப- அலைத்தலினால்;

வைத்தாற்றியவென்பது - நிகழ்கால முணர்த்திநின்றது. மண்ணிற் சிறப்பும்மைதொககது.

கார்விரிந்தோங்கிய மலைத்தலைக்கதிரொன
வோவறப்போகிய சிறைவிரிமுதுகிற்
புவனங்காணப் புகழொடுபொலிந்தோய்

(புரிந்தபொருளுடி - அதுவிரும்பிய கருமத்தை யுட்கொண்டு)—புவனங்காண - புவனங்காணும்படி—கார்விரிந்தோங்கியமலைத்தலை - நீலவரையிடத்தில்—கதிரொன - ஞாயிறு பொலிவுபெற்றாற்போல—ஓவற - ஒழிவற—போகிய - நீண்ட—சிறை

விரி - சிறைவிரியாநின்ற—முதுகில் - அதன்முதுகில்—புகழொடுபொலிந்தோய் - புகழோடு பொலிவுபெற்றோய்;

புரிந்தபொருள் - வாகனமாதல், புரிநரம்பிரங்குஞ் சொல்லாய்ப்போவதே பொருண்மற்றென்றனரார் பிறரும்.

போழ்படக்கிடந்த வொருபங்கெழுந்து
மின்னன்மாண்ட கவிரலர்பூத்த
சென்னிவாரணக் கொடும்பகையாகி

'போழ்படக்கிடந்த-பிளவுபடும்படி கிடந்த—ஒருபங்கெழுந்து - மற்றொருகூறெழுந்து—கொடும்பகை - கொடியபகையாகிய—மின்னன்மாண்ட - விளங்காநின்றவழகு மாட்சிமைப்பட்ட—கவிரலர் - முருக்கினது பூப்போலும்—பூத்த - செஞ்சூட்டுப் பொலிவுபெற்ற—சென்னிவாரணமாகி - தலையினையுடைய கோழியாகி;

ஆகியகோழி - ஆகியென விரியும். கவிரலர்பூத்தாற்போலுஞ் சென்னியென்று பொருளுணாகிற் பூத்தவென்னு முவம வினையொற்றுமைநயத்தா னுவமிக்கப்படும் பொருண்மேலேறி நின்றதென்க. பூத்தலைவாரணமென்றாறபோலச் சூட்டைச்சொல்லாது சென்னியென்றார். பூத்தாற்போலுஞ் சூட்டையுடைய சென்னியெனின் - முதலொடுசினைக் கொற்றுமையுண்மையாற் பூத்தவென்னும் பெயரெச்சத்திற்குச் சென்னியென்னும்பெயர் வினைமுதற்பெயராய் நின்றதென்க. வாரணமாகியென்றது-இந்திரனங்கத்துப் பிரித்துக்கொடுத்த கோழியை "மெய்யிற்பிரித்துச்செல்வ வாரணங்கொடுத்தோனென்றார்,, பரிபாடலினும். பொருள் - கொடியாதல்.

தேவர்மெய்பணிப்புற வான்மிடையுடுத்திரள்
பொரியிற்கொறிப்பப் புரிந்தபொருளுடித்
தாமுனைபழித்த கைமருங்கமைத்தோய்

தேவர்மெய்பனிப்புற - தேவர் மெய்நடுங்கும்படி—பொரியில் - பொரிபோல—வான்மிடை - ஆகாயத்தினெருங்கிய—உடுத்திரள் - மீன்கணங்களை—கொறிபப - கொறித்தலினல்—புரிந்த - அதுவிரும்பிய— பொருளுடி-கருமத்தைக்கருதித் தேவர்க்கிடுக்கணில்லாது—தாமனைபழித்த - தாமரையைபபழித்த—கைமருங்கு - கையின் வலப்பாகத்து—அமைத்தோய் - கொடியாகவமைத்தோய்;

ஒருமையுளொருங்கி யிருகைநெய்வார்த்து
நாரதனேம்பிய செந்தீக்கொடுத்த
திருகுபொரிகோட்டுத் தகர்வருமதியோய்

ஒருமையுளொருங்கி - ஐம்பொறியு மொருவழியாக வுள்ளத்தைச் சென்றவிடததுச் செலவிடாதொருவழிபபடுத்தி—நாரதன் - நாரதமுனிவன்—இருகைநெய்வார்த்து - இருகையினுனெய்வார்த்து—ஓம்பிய - ஓம்பிய—செந்தீக்கொடுத்த - வேள்வியிலுண்டான—திருகு - திருகுதலையுடைத்தாய்—பொரிகோட்டு-பொரிந்தாற்போலுங் கொமபினையுடைய—தகர்வரும் - கடாவில்வரும்—மதியோய் - மதியினையுடையாய்;

புரிகோடென்று பாடமாயிற் திருகுதலைச்செய்த கோடென்க. திருகு - வினைமாத்திரையாய்நின்றது. குழவிப்பருவத்தேயிவ்வீரஞ்செய்தமையின் மதியோயென்முர்.

முலையெனவிரண்டு முரட்குவடேரீஇக்
குழற்காடுசுமந்த யானைமகட்புணர்ந்தோய்

முரண் - மாறுபாட்டினையுடைய—இரண்டுகுவடென - இரண்டுமலை யென்னும்படி—முலைமரீஇ - முலையினைமருவி—குழற்காடு - குழற்பரப்பை—சுமந்த-சுமந்த—யானைமகள் - தெய்வயானையை—புணர்ந்தோய் - புணர்ந்தோய்;

யானைமகளென் றிந்திரன்மகட்குப் பெயராதலின் அவயவ வுருவகமாம். முலைமரீஇயென்றது-குவடுமரீஇயெனினும் பொருந்தும்; எற்றெனின், யானைமகளென்றதில் யானையாகிய மகளென் றோசையுண்டாதலால் யானையானது மகளானதற்கேற்ப தனக்குரிய குறிஞ்சியாகிய மலையையும, தானுலவுங காட்டையும், முலையாகவுங் குழலாகவும் மருவிச்சுமந்ததென்பார் யானைமகளென்றார்.

செங்கட்குறவா கருங்காட்டுவளர்த்த
பைங்கொடிவள்ளி படர்ந்தபுயமலையோய

செங்கட்குறவர் - சிவந்தகண்ணினையுடைய குறவர்—கருங்காட்டு - கருஙகாட்டில்—வளர்த்த - வளர்ககப்பட்ட—பைங்கொடிவள்ளி - வள்ளியாகிய செவவிக்கொடி—படர்ந்த - பொருந்திய—புயமலையோய - புயமாகிய மலையினையுடையாய்;

கொடியென வுருவகமபண்ணினமையாற் படர்ந்தவென்றார், இது இயைபுருவகம்.

இமயம்பூத்த சுனைமாண்டொட்டி
லறிவிறறங்கி யறுதாய்முலையுண்
டுழன்மதில்சுட்ட தழனகைப்பெருமான்
வணங்கிநின்றேத்தக குருமொழிவைத்தோய்

இமயம்பூத்த - இமயவரையிறபூத்த—மாண் - மாட்சிமையையுடைய—சுனை - சரவணபபொயகையின்கணுண்டாகிய—தொட்டில் - பூவாகிய தொட்டிலில்—அறிவிற்றங்கி - அறிவோடுகூடிப்பொருந்தி—அறுதாய்முலையுண்டு - அருந்ததியொழிந்த வாறுதாய் முலைப்பாலையுண்டு—உழல் - ஓரிடத்திராது திரிதரும்—மதில் - முப்புரத்தை—தழனகை - நகைத்தழலால்—சுட்ட - எரித்த—பெருமான்-பெருமான்—வணங்கிநின்றேத்த - வணங்கிநின்று புகழ—குருமொழிவைத்தோய்-உபதேசம்வைத்தோய்;

தங்கியுண்டுவைத்தோயெனக்கூட்டுக. பூத்தகுளையிடத்து நிகழ்பொருளின் றொழிலிடத்தின்மேனின்ற வாகுபெயர். அது முதலொடு சினைக்கொற்றுமை யுண்மையான் முதலொடுமியைந்தது. ஈச னுமையொடுபுணர்ந் துண்டாகியகருவை யிந்திரனாற் பலகண்டமாகச்சேதித்தலாற கழிந்தகருவை யமராசேனைக்குத் தலைவனெனச் சமாதியினுணர்ந்து அவன்பக்கலி லேற்றுக்கொண்டுபோன முனிவரொழுவரு மிறைவனா கண்டமாககிய கருவை வெளவி யங்கியிற்பெய்து அககருவைக கடவுட் கஙபினையுடைய வருந்ததியொழியக் கார்த்திகையாகிய வறுவருந் தங்கணவாவேண்ட வயின்று சூற்கொண்டு சரவணப்பொய்கை மலரிற்பெற்ற மையான் முலையுண்டென்றா. பதுமத்துப்பாயலெனப் பரிபாடலிற்கூறினமையாற் பூவைத் தொட்டிலாககினார்.

ஓமெனுமெழுத்திற் பிரமம்பேசிய
நான்மறைவிதியை நடுங்குசிறைவைத்துப்
படைப்புமுதன்மாய வான்முதற்கூடித்
தாதையுமிரப்பத் தளையதுவிடுத்தோய்

பிரமம்பேசிய - பிரமமாகப்பேசிய—நான்மறைவிதியை - நான்குமறையினையுடைய பிரமனை—ஓமெனுமெழுத்தில் - ஓமென்னுமெழுத்தினால்—நடுங்குசிறை - அரியசிறையில்—வைத்து- வைத்து—படைப்புமுதன்மாய - படைப்புமுதன் மாய்கையாலே—கூடி - பின்னது பிரமனைககூடும்படி—தாதையும் - சிவனும்—வான்முதல் - மற்றத்தேவர்களும்—இரப்ப - வேண்டிக்கொள்ள—தளையதுவிடுத்தோய் - விலங்குவிடுத்தோய்;

சிறையில்வைத்து விடுத்தோயெனககூட்டுக. வான் - ஆகுபெயர். கூடி-கூடவெனத்திரிக்க. உம்மை-எச்சவும்மை. தளையு தென்புழியதுவென்பது - பகுதிப்பொருள்விகுதி. கூட்டியென்றுபாடமாயிற் கூட்டவெனத்திரிக்க.

கூடஞ்சுமந்த நெடுமுடிநேரி
விண்டடையாது மண்புகப்புதைத்த
குறுமுனிதேற நெடுமறைவிரித்தோய்

கூடஞ்சுமந்த - கூடஞ்சுமந்த—நெடுமுடி - நெடியகுவடுகளையுடைய—நேரி - நேரிமலையானது—விண்டடையாது - ஆகாயவழியினை யடையாது—மண்புக-பூமியிலமிழ்ந்தும்படி—புதைத்த - மறைத்த—குறுமுனி - அகத்தியன்—தேற - தெளிய—நெடுமறை - ஸ்ருதியாகிய மறைப்பொருளை—விரித்தோய் - விரித்தோய்;

கூடம் - மன்றாகச்செய்யப்பட்ட தேவர்கோட்டம். "கூடஞ்செய்சாரற கொடிச்சியென்றேநின்று கூறுவதே,, என்றார் திருக்கோவையினும, மறைபபொருளை மறையென்ற தாகுபெயர்.

ஆறுதிருவெழுத்துங் கூறுநிலைகண்டு
நின்றாட்புகழுநர் கண்ணுட்பொலிந்தோய்

ஆறுதிருவெழுத்தும் - குமாராயநமவென்னு மாறுதிருவெழுத்தும்—கூறுநிலைகண்டு - கூறுநிலையை யறிந்து—நின்றாட்புகழுநர் - நின்றாளை புகழுவாரது—கண்ணுட்பொலிந்தோய்-கண்ணுட் பொலிவுபெற்றோய்;

புகழ்வார் கருதுங்கருத்தின் மிகவிளங்கினேயெனினுமாம் கூறுநிலை மந்திரசாத்திரத்தினறிக.

மணிக்காலறிஞர் பெருங்குடித்தோன்றி
யிறையோன்பொருட்குப் பரணர்முதல்கேட்பப
பெருந்தமிழ்விரித்த வருந்தமிழ்பபுலவனும்
பாய்பாரறிய நீயேயாதலின்

மணிக்காலறிஞர் - இந்தரத்தின மிந்தவிடத்திற்பிறந்ததெ ன் றதனிடமறிந்த மதுரைவணிகரது—பெருங்குடித்தோன்றி- பெருங்குடியிற்பிறந்து—இறையோன்பொருட்கு - இறையோ ன்கூறிய பொருட்கூற்றிற்கு—பரணர்முதல்கேட்ப - பரணர் முதலாகிய கடைச்சங்கத்தார் நாற்பத்தொன்பதினமரும் கீழி ருந்துகேட்ப—பெருந்தமிழ் - பெருந்தமிழாக—பாய்பாரறிய - பரந்த பாரிலுள்ளாரறியும்படி—விரித்த - பொருளவிரித்த—அ ருந்தமிழ்பபுலவனும் - அரியதமிழ்ப்புலவனும்—நீயேயாதலின்- நீயேயாதலான்;

புலவனுமென்னுமும்மை யெண்ணும்மை. வணிகர்பெரு ங்குடியிற் பூரிகிழார்க்கு வுருத்திரசன்மராகத்தோன்றினர். தமி ழினந்தகாலத் தெழுத்துஞ் சொல்லுமன்றிப பொருளின்மையா ற் பாண்டியனுஞ் சங்கத்தாரும் வேண்டிக்கொள்ளச் சொக்க நாதர் அன்பினைந்திணைமுதலாக வறுபதுசூத்திரமாகப பொருள செய்தார். நகீரர் மெய்யுரைகாண வாலவாய்ப்பெருமா னடிக ளுரைசெய்யக கண்ணீர்வார மெய்ம்மயிர்சிலிரபபச் சன்மர் பல கையிலிருந்து பரந்தபாரறியும்படி பெருந்தமிழ்கருக் குறிப்பிற் பொருள் விரித்தமையான் அருந்தமிழ்ப்புலவனென்றார். குறிப பிற்பொருள்செய்தா ரைந்துவயதுடை மூங்கையாயிருத்தலின்.

அறிவுநிலைகூடாச் சின்மொழிகொண்டு
கடவுட்கூற வுலவாவருத்தியுஞ்
சனனப்பீழையுந் தள்ளாக்காமமுந்
தற்படுதுயரமு மடைவுகெட்டிறத்தலுந்
தென்புலக்கோமகன் றீத்தெறுதண்டமு
மெகாடுதுறக்கத் துழல்வருபீழையு
நீளாதிம்பரின் முடித்து
மீளாக்காட்சி தருதியின்றெனவே.

அறிவுகிலேகூடா - அறிவுநிலைபெறாத—சினமொழிகொண்டு - சிலவாயசொற்கொண்டு—கடவுட்கூறு - கடவுளாய நின்னைக்கூறுத—உலவாவருத்தியும் - பொருந்தாத வாசையும்—சனனபீழையும் - பிறவியாகிய துன்பமும்—தள்ளா - ஒருவராலும் நீக்கப்படாத—காமமும் - காமநுகர்ச்சியும்—தறபடு - தன்னாலுண்டாய—துயரமும் - துக்கமும்—அடைவுகெட்டு-முறைகெட்டு—இறத்தலும - அதிலே மிகுத்தலும்—தென்புலக்கோமகன் - இயமராசன்—தீத்தெறு - தீப்போலத் தெறுகின்ற—தண்டமும் - வருத்தமும்—நரகொடுதுறக்கத்து-நரகத்திலுஞ் சுவர்க்கத்திலும்—உழல்வருபீழையும் - சென்றுமீளுந் துன்பமும்—நீளாதிம்பரின் - இம்பரினீட்டியாது—முடித்து - முடிவுசெய்து—இன்றுமீளா - இப்பொழுது சுவர்க்காதிகள்போல மீளாமல்—காட்சி - காணப்பட்டதை—தருதியென - தருவையென்றுகருதி;

பிறவியாகியதுன்பம்-சரீரத்துனபம், பீழை-துன்பம். குற்றமென்று பொருள்கொள்ளின் பிறவிக்கேதுவாகிய குற்றமென்க. குற்றமாவன-அவிச்சை, அகங்காரம், அவா, விழைவு, வெறுப்பென்பன. பிழை-குற்றம், அது பீழையெனவிகாரமாயிற்று. "பீழைதான்பொறுக்கவென்னப் பிறங்கினொன்றுற்போல,, தன்னால்வருந் துன்பம், துக்கத்தினால்வருந் துக்கம், அதுமுற்பிறப்பிற்செய்த வினைச்செயலே. முறைகெட்டிறத்தலாவது-சாதித்தன்மத்தினைவிட்டிறத்தல். காட்சிதருதியென்றதற் குண்மையறிந்தபொருளைப் பொய்யின்றாகத் தெளிதலைத் தருவையெனினுமாம். "மெய்வகைதெரிதன் ஞானம்விளங்கிய பொருள்கடம்மைப் - பொய்வகையின்றித் தேறல்காட்சி,, யென்றார்பிறரும். காட்சி - காணப்பட்டது. இறைவனூற்காட்சி யென்றாற்போல மூற்றும்மைதொக்கது ஒடுவொனுயிற்று.

வெட்சிமலர்சூழ்ந்த நின்னிருகழற்கால்
குழந்தையன்பினேடு சென்னிதலைகொள்ளுதும்

வெட்சிமலர்சூழ்ந்த - வெட்சிமலரணிதற் கிடமாய—நின்னிருகழற்கால் - நின்னிரண்டு கழற்காலையு (மிவ்விலக்கிய மினிதுமுடித்தற்பொருட்டு)—குழந்தையனபினேடு - பேதையன்பினன்—சென்னிதலைகொள்ளுதும் - யாஞ் சென்னியின்கணேற்றுக்கொளளுதும்—என்றவாறு.

வேலோய் பொலிந்தோ யமைத்தோய் மதியோய் புணர்ந்தோய் மலையோய் வைத்தோய் விடுத்தோய் விரித்தோய் பொலிந்தோய் புலவனுநீயேயாதலின் அருத்திமுதலியவற்றை நீளாதுமுடித்துக் காட்சிதருதியென்று நின்னிருகாலையுந் தலைகொள்ளுதுமென வினைமுடிவுசெய்க. (உ)

---

## தமர்நினைவுரைத்து வரைவுகடாதல்.

தமர்நினைவுரைத்து வரைவுகடாதலென்பது - இற்செறிவறிவித்து வரைவுகடாயதோழி அவண்முலை தாங்கமாட்டா திடைவருந்து வதனைக்கண்டு எமரிற செறிப்பாராக நினையாநின்றூர். அயலவருமகட்பேச நினையாநின்றூனெனத் தமர்நினைவுரைத்து வரைவுகடாவாநிற்றல். அதற்குச்செய்யுள்:—

சுற்றுஞ்சடைக்கற்றைச் சிற்றம்பலவற் றெழுதுதொல்சீர், கற்றுமறியல ரிற்சிலம்பாவிடை நைவதுகண், டெற்றுந்திரையின் னமிர்தையினித்தம ரிற்செறிப்பார், மற்றுஞ்சிலபல சீறூர் பகர்பெரு வார்த்தைகளே. கஙச

வில்செறி நுதலியை யிற்செறிவிப்பரொன்
றொளிவேலவற்கு வெளியே யுரைத்தது.

இ-ள். சிலம்ப! - சிலம்பனே—சுற்றும் - சுற்றப்பட்ட—சடைக்கற்றை - சடைத்திரளையுடைய—சிற்றம்பலவன் - சிற்றம்பலவனை—தொழாது - முற்பிறவியிற் றொழாமையான்—கற்றும் - நூல்களைக கற்றுவைத்தும்—தொல்சீர் - அவனது பழையபுகழை—அறியலரில - அறியாதாரைப்போல—இடை - இடையானது—நைவதுகண்டு - மூலை தாங்கவில்லாது வருந்துவதனைக்கண்டு—எற்றுதிரை - எற்றுகின்ற திரையையுடைய கடலிற்பிறந்த—இன்னமிர்தை - இனியவமிர்தத்தையொப்பாளை—இனி - இப்பொழுது—தமா - தம்முடையவர்—இற்செறிப்பார்- இல்லின்கட்செறிப்பார்—மற்றும - அதுவுமன்றி—சீறூர் - சீறூரார—பகா - பகரப்படும்--பெருவார்த்தைகள்-பெரிய வார்த்தைகள்—சிலபல - சிலபலவுள—என்றவாறு.

ஏற்றுந்திரையென்பது - வினையாகிய தன்பொருட்கேற்ற வடையடுத்துநின்றதோ ராகுபெயர். இற்செறிப்பாரென்பது - ஆரீற்றுமுற்றுச்சொல. வினைபெயரென்பாருஞ் செறிப்பரொன்று பாடமோதுவாருமுளர். சிலபலவென்பது-பத்தெட்டுளவென்பதுபோலத துணிவின்மைக்கண் வந்தது. சீறூர்ப்பகரென்பது உம்பாடம். இவற்றிற்கு மெய்ப்பாடும்பயனும, அவை இவற்றுண் மேலைப்பாட்டிற்குறிப்பினுனே செறிப்பறிவுறுத்தாள்.



உ
சிவமயம்.

நூல்.

நேரிசையாசிரியப்பா.

அமுதமுந்தருவும் பணிவரப்படைத்த
வுடலக்கண்ண னுலகுகவாந்துண்ட
களவுடைநெடுஞ்சூர்க் கிளைகளம்விட்டொளித்த
வருணிறைந்தமைந்த கல்வியருளமெனத்
தேக்கியதேனுடனிறூன்மதிகிடக்கு
மெழுமலைபொடித்த கதிரிலைநெடுவேல்
வள்ளிதுணைக்கேள்வன் புள்ளொடுமகிழ்ந்த
கறங்குகாலருவிப் பரங்குன்றுடுத்த
பொன்னகாக்கூடற் சென்னியம்பிறையோன்
பொதியப்பொருப்பன் மதியக்கருத்தினைக
கொங்குதேர்வாழ்க்கைச் செந்தமிழ்கூறிய
பொற்குவைதருமிக் கற்புடனுதவி
யென்னுளங்குடிகொண் டிருமபயனளிக்குங்
கள்ளவிழ்குழல்சேர் கருணையெம்பெருமான்
மலர்ப்பதநீங்கா வுளப்பெருஞ்சிலம்ப
கல்லாக்கயவர்க் கருநூற்கிளைமுறை
சொல்லினர்தோமெனத் துணைமுலைபெருத்தன
பலவுடம்பழிக்கும் பழியூணுணவினர்
தவமெனத்தேய்ந்தது துடியெனுநுசுப்பே
கடவுட்கூறு ருளமெனக்குழலுங்
கொன்றைபுறவகற்றி நின்றவிருள்காட்டின
சுரும்புபடிந்துண்ணுங் கழுநீர்போலக்

கறுத்துச்சிவந்தன கண்ணிணைமலரோ
யீங்கிவைவிற்க சீறூர்பெருந்தம
ரில்லிற்செறிக்குஞ் சொல்லுடன்சின்மொழி
விள்ளுந்தமியிற் கூறின
ருள்ளங்கறுத்துக் கண்சிவந்துற்றதே.

—*—

பகுதி-பயற்குறி  துறை-இற்செறிவறிவித்து வரைவுகடா வியதோழி தலைவி யவயவங்கண் டெமரிற்செறிப்பாராக நினை யாநின்றார், யாவரும் மகட்பேச நினையாநின்றார் எனத் தமர்நினை வுரைத்து வரைவுகடாவல

அமுதமுந்தருவும் பணிவரப்படைத்த
வுடலக்கண்ணனு லகுகவர்ந்துண்ட
களவுடைநெடுஞ்சூர்க் கிளைகளம்விட்டொளித்த
வருணிறைந்தமைந்த கல்வியருளமெனத்
தேக்கியதேனுடனிருண்மதிகிடக்கு
மொழுமலைபொடித்த கதிரிலைநெடுவேல்
வள்ளிதுணைக்கேள்வன் புள்ளுடன்மகிழ்ந்த
கறங்குகாலருவிப் பரங்குன்றுடைத்த
பொன்னகாக்கூடற் சென்னியம்பிறையோன்

(இதனது பதப்பொருள்)

அமுதமுந்தருவும்-அமுதமுங் கற்பகத்தருவும்—பணிவர-முன்றோழ்தலுண்டாகையால்—படைத்த - பின்படைக்கப்பட்ட—உடலக்கண்ணனுன்-உடலினக்கண்ணையுடைய விந்திரனது—உலகு-உலகத்தை—கவர்ந்துண்ட - விரும்பி யழித்தற்கேதுவாகிய—நெடு - மிகுந்த—களவுடை - களவினையுடைய—சூர் - சூருடைய—கிளை - தம்பி—களம்விட்டொளித்த - போர்க்களத்தை

விட்டு மறைந்த—அருணிறைந்தமைந்த - கருணைநிறைந் தொடு ங்குதற்குக் காரணமாகிய—கல்வியர் - கல்வியினையுடையாரது —உளமென - உள்ளமக்கல்வியினாற் றேககியதுபோல—தேக்கி யதேனுடன் - தேககியதேனுடன்—இருண்மதிகிடக்கும்-இருட் டானது மதிபோலககிடககும்—எழுமலை - எழுமலை—பொடித் த-அம்மலைகளைத்துளாக்கிய—கதிரிலை - ஒளிபெற்ற தகட்டினை யுடைத்தாய—நெடுவேல் - நெடிய வேலினையுடைய—வள்ளிது ணை - வள்ளிநாச்சியாருககொப்பாகிய—கேள்வன - கணவன்— புள்ளுடன்மகிழ்ந்த - புள்ளோடுங்கூடி மகிழ்ச்சிபெற்ற—கற ங்குகாலருவி - முழங்காநின்றவருவி காலாநின்ற—பரஙகுன்று டுத்த - திருப்பரங்குன்றஞ்சூழ்ந்த—பொன்னகர்ககூடல் - பொ ன் மாடஙகளையுடைய மதுரையிற் சோந்த—சென்னியம்பிறை யோன் - முடியிலழகிய பிறையையுடையோன்;

உடலக்கண்ணனென்றதில் அகரம்-பணடறிசுட்டு. உண் டலென்பது "உண்டற்குரிய வல்லாபபொருளை யுண்டனபோல க் கூறலும்விதியே,, என்றவிதி தாருகாசுரனைக் கிளையென்றூர் துணையாகவின். விட்டென்பதிற் செய்தெனெச்சங் காரணகாரி யமின்றிவந்தது. அகனமர்ந்து செய்யாளுறையுமென்றூற்போல. தேனையுடைய விருட்டுடன் மதிவேற்றுமை தெரியாது கிடக்கு மெனினுமாம். கிடககுமென்னும் பெயரெச்சம் நிலப்பெயாகொ ண்டது. இது வுவமத்தொகை. கறங்கிவீழாநின்ற வருவியெ ன்று பொருள்கொள்ளின் "நிலத்தலைஇய துப்பெலாநிறைதுளு ம்பு மூரகனே,, யென்றூற்போலக்கொள்க. பிறையோனென்ப தனைப் பெயராக்காது முற்றெச்சமான வினைக்குறிபபாக்கிய பி றையையணிந்தென "முன்னத்தினுணருங் கிளவியுமுளவே,, யென்பதனு னமைக்கினுமாம். கிளைகள்விட்டொளித்தவென்று பாடமாயின். களமென்பது - கள் என்று விகாரப்பட்டதெனக்

கொள்க. இவ்வாறு களமென்றாற்போல அகவற்பாவி லசைமிக் குவருதலுமுண்டு. பணிவரவென்றதற்கு - இந்திரனது சொல் வழியில் நிற்பவெனினுமாம். அவற்குப் பணிந்துநிற்பவெனினு மாம்.

பொதியப்பொருப்பன் மதியக்கருத்தினைக்
கொங்குதேர்வாழ்க்கைச் செந்தமிழ்கூறிப
பொற்குவைதருமிக கற்புடனுதவி
யென்னுளங்குடிகொண் டிரும்பயனளிக்குங்
கள்ளவிழ்குழல்சோ கருணையெம்பெருமான்

பொதியப்பொருப்பன் - பாண்டியன்—அற்புடன் - அன்பு டன்—பொற்குவை - பொற்கிழியை—தருமிகுதவி - தருமி யென்னும் ஆச்சகருக்குக கொடுப்ப—மதியககருத்தினை - அவ ன்சிந்தையினினைத்த கருத்தினை—கொங்குதேர்வாழ்க்கை-கொ ங்குதேர்வாழ்ககையெனனும்—செந்தமிழ்கூறி - செந்தமிழாகக் கூறி—என்னுளங்குடிகொண்டு - என்னுள்ளத்திற்குடிகொண் டு—இரும்பயனளிக்கும் - மிகுந்தபயனைத்தரும—கள்ளவிழ்கு ழல்சேர் - கள்ளவிழுங் குழலினை யுடைய வுமையைச் சோதற கேதுவாகிய—கருணை - கருணையையுடைய—எம்பெருமான் - எம்பெருமான்; (அவனது)

உதவி - உதவ - திரியாதுகிடந்தவாறு பொருள்கொள்ளி னுமாம். இருபயனென்று பாடமாயின் - இம்மை மறுமைப்பய னென்க. குடிகொண்டு சேர்ந்தவென்க.

மலர்ப்பதநீங்கா வுளப்பெருஞ்சிலம்ப

மலாப்பதம் - மலர்போன்றபதத்தை—நீங்கா - நீங்காத— உளம்-உள்ளத்தினையுடைய—பெருஞ்சிலம்ப-பெரியசிலம்பனே;

கல்லாக்கயவர்க் கருநூற்கிளைமறை
சொல்லினர்தோமெனத் துணைமுலைபெருத்தன

கல்லா - கல்லாத—கயவர்க்கு - கீழ்மக்கட்கு—அருநூல் - அரியநூலின்—கிளை - உண்டாகிய—மறை - இரகசியத்தை—சொல்லினர் - பகர்ந்தவர்க்கு—தோமென - குற்றம்பெருந்தாற்போல—துணைமுலை - முலையிரண்டும்—பெருத்தன - பெருத்தன;

தோமெனப் பெருத்தவென்றது - "உசாவினைப்பேசைசங் கவிப்பான் பிழைப்பிறபெருகினவே கோதைக்கொம்பனூர் குய மென்றாற்போலக் கழிபெரும்பரப்பிற கூறினுமியினுமது சிறப பிற்றீராக் குறிபபிற்றுதல் வழக்குண்டாதலினுடம்படபபடும்," என்பதனானறிக. தொழிலுவமைகொள்க. முலை-சாதிப்பெயர். பெருத்தவென்று பாடமாயிற றெழிலொடுமுடிக்க. இனைத்தெனவறிந்த முற்றும்மைவிகாரத்தாற் றொக்கது.

பலவுடம்பழிக்கும் பழியூனுணவினர்
தவமெனத்தேய்ந்தது துடியெனுநுசுப்பே

பலவுடம்பு - பலவுடம்பை—அழிக்கும் - அழித்தலால் வரும்—பழி - பழியினையுடைய—ஊனுணவினர் - ஊனையுண்ணுகின்றவர்களது—தவமென - தவம்தேய்ந்தாற்போல—துடியெனுநுசுப்பு - துடிபோலுமிடை—தேய்ந்தது - தேய்ந்தது;

கடவுட்கூறு ருளமெனக்குழலும்
கொன்றைபுறவகற்றி நின்றவிருள்காட்டின

கொன்றை - கொன்றைக்கனியை—புறவகற்றி - முல்லை நிலத்தகற்றி—கடவுட்கூறார் - கடவுளைக்கூறுதவரது—உளமென - உள்ளமிருண்டாற்போல—குழலும் - குழல்களும்—நின்றவிருள் - நிலைபெற்றவிருளை—காட்டின - காட்டின;

கடவுட்கூறுருளமெனக் குழலிருள்காட்டின வென்றதற்கு - நிறவுவமையொவ்வாவேனு மூவமைக்கணிறத்தைவிட் டறியாமையென்னும் பண்புபற்றிக் கூறினர். இது பண்புவமை. "புறங்குன்றிகண்டனைய ரேனுமகங்குன்றி மூக்கிற்கரியாருடைத்து,, என்பதனானறிக. பணபுகுறிப்பின்றி நிகழுங்குணம் கொள்ளறைபுறவகற்றி தற்குறிபபேறம் காட்டினவெனக் குழல்மயிர்மாத்திரையா யைவகையுமுணாத்தலிற் பனமைகூறினர். கடைகுழன்ற கருங்குழல்கள் வண்ணப்போ தரிச்சித்தென்றார் போல. குழலினும்மை இடக்தவாறுகொள்ளினுமமையும்.

சுரும்புபடிந்துண் ணுங் கழுநீர்போலக்
கறுத்துசசிவந்தன கணணிணைமலரோ

சுருமபுபடிந்துணட - வண்டுபடிந்துண்ட—கழுநீர்போல-கழுநீமலனாப்போல—கண்ணிணைமலா - கண்ணிணைமலாகள்—கறுத்துச்சிவாதன - கறுத்துச்சிவந்தன;

ஈங்கிவைநிற்க சிறார்பெறுந்தம
ரில்லிற்செறிக்குஞ் சொல்லுடன்சின்மொழி
விள்ளுந்தமியிற் கூறின
ருள்ளங்கறுத்துக் கண்சிவந்துருத்தே

இங்கு - இவ்விடத்து—இவைநிற்க - இவைகண்டு—தமியில் - தமியே—உள்ளங்கறுத்து - உள்ளங்கறுத்து—கண்சிவந்து - கண் சிவவாநின்று—உருத்து - கோபித்து—பெறுந்தமர் - இவளைபெற்ற தமராகிய தாய்தந்தைகள்—இல்லிற்செறிக்கும் - இல்லிற்செறிக்கும்—சொல்லுடன் - சொல்லுடன்—கூறினர்-கூறினராதலால் (இற்செறிப்பாரதுவுமன்றி)—சிறார் - சிறாரிலுள்ளாரும்—சின்மொழி - சிலவார்த்தைகள்—விள்ளும் - விள்ளாநின்றார்—எ-று.

சீறூர் சிலவார்த்தைவிள்ளுதல் மகட்பேசாநிற்றல். ஈங்கி வைநிற்கவென்றதற்கு - இப்பெண்ணின்செயலிவ்வித மதுநிற்க வெனினும்பொருந்தும். பெருந்தமரொன்று பாடமாயின் தமரிற் சிறந்த தாய்முதலியோரெனக்கொள்க. இன்னுஞ் சீறூரப்பெரு ந்தமரொன் றெருதொடராக்கி விளைத்தக்க தனியிடத்தில் இல் லிற்செறிக்கும் முடிவானசொல்லுடன் சின்மொழிகூறினரெ னினுமமையும். இவ்வாறுகூறுமிடத்து நெருங்கியசுற்றத்தாரெ ன்றுகொள்க. தாய்தந்தை யிவரினுட்கிடை.

சிலம்ப பெருத்தன தேய்ந்தது காட்டின சிவந்தன இவை நிற்க, தமரில்லிறசெறிகுஞ் சொல்லுடனே கூறினரதனை லிற் செறிப்பார. அதுவன்றிச் சீறூர்சின்மொழி விள்ளுமென வினை முடிவுசெய்க. (௫)

---

## தாயறிவுகூறல்.

தாயறிவுகூறலென்பது - தொழுதிரந்துகூறவும், வேட்கை மிகவாற் பின்னுங் குறியிடைச்சென்றுநிற்ப அககுறிப்பறிந்து நங்கானலிடத்து அனையிரவின்கண் ஒருதேர் வந்ததுண்டாகக் கூடுமெனவுட்கொண்டு அன்னை சிறிதேகண்ணுஞ்சிவந்து என் னையும்பார்த்தாள் இருந்தவாற்றான் இவ்வொழுக்கத்தை யறிந் தாள்போலுமெனத் தோழி தலைமகளுக்குக் கூறுவாள்போன்று சிறைப்புறமாகத் தலைமகனுக்கு வரைவுதோன்றத் தாயறிவுகூ றுநிற்றல். அதற்குச்செய்யுள்:—

விண்ணுஞ்செலவறி யாவெறியார்கழல் வீழ்ச
டைத்தீ, வண்ணன்சிவன்றில்லை மல்லெழிற்கான
லனையிரவி, னண்ணன்மணிநெடுந் தேர்வந்ததுண்
டா மெனச்சிறிது, கண்ணுஞ் சிவந்தன்னை யென்
னையுநோக்கினள் கார்மயிலே. உ௱௬௯

சிறைப்புறத்துச் செம்மல்கேட்
வெறிகமழ்குழற்பாங்கி மெல்லியற் குரைத்தது.

இ-ள். கார்மயிலே - கார்காலத்துமயிலையொப்பாய்—விண்ணும் - விண்ணுளாரானும்—செலவு - (எல்லாபொருளையுங்கடந் தப்பாற்சென்ற) செலவை—அறியா - அறியப்படாத—வெறியார் - நறுநாற்றமார்ந்த—கழல் - கழலிணையும்—தாழ்சடை - தாழ்ந்த சடையிணையுமுடைய—தீவண்ணன் - தீவண்ணனாகிய—சிவன் - சிவனது—தில்லை - தில்லையில்—மல் - வளவிய—எழில் - எழிலையுடைய—கானல் - நெய்தனிலத்தில்—அளாயிரவின் - அளாயிரவின்கண்—மணி - மணிகளையுடைய—அண்ணல் - தலையாயதொரு—நெடுந்தேர் - நெடுந்தேரானது—வந்தது என்டாமெனு - வந்ததுண்டாகக்கூடுமெனவுட்கொண்டு—அன்னை - அன்னையானவள்—சிறிது - சிறிது—கண்ணுஞ்சிவந்து - கண்களுஞ்சிவந்து—என்னையும்நோக்கினள் - என்னையும் பார்த்தனள (இருந்தவாற்றா னிவ்வொழுக்கத்தினை யறிந்தாள்போலும்)—எ-று.

எல்லாப்பொருளையுங் கடந்துநின்றனவாயினும் அன்பர்க் கணியவாய் அவரிட்ட நறுமலரான் வெறிகமழுமென்பது போதரவெறியார் கழலென்றார். மெய்ப்பாடு - பெருமிதம், பயன் - படைத்து மொழியால் வரைவுகடாதல். (உ௫௬)

நேரிசையாசிரியப்பா.

பூமணியானை பொன்னனைவெடுத்துத்
திங்களும்புயலும் பருதியுஞ்சுமந்த
மலைவருங்காட்சிக் குரியவாகலி
னிறையுடைக்கல்வி பெறுமதிமாந்த

ரீனறசெங்கவியெனத் தோன்றிநனிபரந்து
பாரிடையின்ப நீளிடைப்பயக்கும்
பெருநீர்வையை வளைநீக்கூட
லுடலுயிரொன்ன வுறைதருநாயகன்
கடுக்கைமலர்மாற்றி வேப்பலர்சூடி
யைவாய்க்காப்புவிட் டணிபூணணிந்து
விரிசடைமறைத்து மணிமுடிகவித்து
விடைக்கொடிநிறுத்திக் கயறகொடியெடுத்து
வழுதியாகி முழுதுலகளிக்கும்
பேரருளுயகன் சீரருள்போல
மணத்துடன்விரிந்த கைதையங்கானத்
தோடாவென்றிப் பொலம்பூட்குரிசில்
சின்னங்கிடந்த கொடிஞ்சிமான்றே
நொச்சிப்பூவுதிர் நள்ளிருணடுநாள்
விண்ணஞ்சுமந்து தோற்றஞ்செய்தெனத்
தன்கண்போலு மென்கணேக்கிக்
கள்வனைக்காணு முள்ளம்போலச்
செம்மனந்திருகி யுள்ளந்துடிந்துப்
புறன்வழங்காது நெஞ்சொடுகொதித்தனண்
மாறுக்கறபினன்னை
கூறுமதியத் திருநுதற்கொடியே

—*—

பகுதி - வரைவுமுடுக்கம். துறை - தொழுதிரந்துகூறவும் வேட்கைமிகவாற் பின்னுங் குறியிடைச்சென்றுநிற்ப வக்குறிப் பறிந்து தோழி தலைமகட்குக் கூறுவாள்போன்று சிறைப்புறமா கத் தலைமகற்கு வரைவுதோன்றத் தாயறிவுகூறல்.

பூமணியானை பொன்னெனவெடுத்துத்
திங்களும்புயலும் பருதியுஞ்சமந்த
மலைவருங்காட்சிக் குரியவாகலி
னிறையுடைகல்வி பெறுமதிமாந்த
ரீன்றசெங்கவியெனத் தோன்றிநனிபரந்து
பாரிடையின்ப நீளிடைபயக்கும்
பெருநீர்வையை வளைநீர்க்கூட
லுடலுயிரொன்ன வுறைதருநாயகன்

(இதனது பதபொருள்)

நிறையுடை - அறமுதலியவற்று னிறைதலையுடைய—கல்விபெறும் - கல்வியாற்பெற்ற—மதி - அறிவினையுடைய—மாந்தா - பெரியோர்(மங்கலமொழியாய்ப் பூவென மணியென யானையெனப பொன்னென எடுத்து)—ஈன்ற-சொல்லிய—செங்கவியென - செவ்விய கவிபோல—பூமணியானைபொன்னென-பூவும் மணியும் யானையும் பொன்னுமாகிய விவற்றை—எடுத்து-எடுக்கப்பட்டு—திங்களும்புயலும்பருதியும் - திங்களையும் புயலையும் பருதியையும்—சமந்த-அக்கவிபோலப பெற்ற—மலை-மலையினின்றும்—தோன்றி-தோன்றி—நனிபரந்து-மிகவும்பரந்து—வருங்காட்சிக்கு - வருகின்ற காட்சிக்கு—உரியவாகலின் - உரியதாதலான்—நீளிடை - நெடுந்தூரம்—பாரிடை- பாரிடத்தில்—இன்பம்பயக்கும்-இன்பமுண்டாக்குகின்ற—பெருநீர் - பெருக்கினையுடைய புனலையுடைய—வையைவளை - வையைவளைந்த—நீர் - நீர்மையையுடைய—கூடல் - மதுரையானது—உடலென்ன - உடலாக—உயிரொன்ன - தானுயிராக—உறைதரும் - பொருந்துகின்ற—நாயகன் - நாயகன்;

கவிபோலவெடுக்கப்பட்டுத் தோன்றிப் பரந்துவருங்காட்சிக்குரியதாகலின் இன்பமுண்டாக்கும் பெருக்கினையுடையவென

வினைமுடிக்க. செய்தெனெச்சஞ் செயப்படுபொருட்க ணின்றது. வையையுங்கலியும் மலையுங்கலியுஞ் செம்மொழிச்சிலேடையுவமை. மாந்தரென்பது-பெண்ணொழிசொல். அவரிடத்தினின்றும் பிறத்தலினீன்றவென்றார். கூடலின்கண - என்னுடலொடுகூடிய வுயிரென்னவெளினுமாம். இன்னும் மலைவருங்காட்சிக குரியவாதலி னென்றவிடத்துச் சிலேடையணியால் வையையானது மலையினின்றுவருங் காட்சியுடைத்தாதலாலும் கலியும் வரைககாட்சிக் குரித்தாதலாலும் என்றுணாகொண்டு மாந்தர்கலியெனப பாரிடையின்பம்பயக்கும் பெருநீர்வையையெனவாற்றொழுக்காகப் பொருள்கூறினும் பொருந்தும். கலியென்றது - கலிககூட்டத்தாலாகிய காவியம். பெருங்காபபியத்தில் வரைக்காட்சி முதலியனகூறுதல் உரித்தாதலின் மலைவருங்காட்சிக் குரியவாகலினென்றார். ஆறறுக்குங்கலிகளும் பன்மைபொருள்தோன்ற உரியவென்று பனமைமீறுகூறினார்.

> கடுக்கைமலர்மாறறி வேப்பலர்சூடி
> யைவாய்ககாபபுவிட் டணிபூணணிந்து
> விரிசடைமறைத்து மணிமுடிகவித்து
> விடைக்கொடிசிறுத்திக் கயறகொடியெடுத்து
> வழுதியாகி முழுதுலகளிக்கும்
> பேரருளையகன் சீரருள்போல
> மணத்துடன்விரிந்த கைதையங்கானத்து

கடுக்கைமலர்மாற்றி - கொன்றைமலரைச் சூடாது தவிர்ந்து—ஐவாய்க்காப்புவிட்டு - ஐந்து வாயையுடைய வாசுகியென்னும் பாம்பாகிய கங்கணத்தை யணியாது—விரிசடைமறைத்து - விரிந்தசடையினைமறைத்து—விடைக்கொடிசிறுத்தி - விடைககொடியினை யெடாதுசிறுத்தி—வழுதியாகி - பாண்டியனு

கி—வேப்பலர்சூடி - வேப்பலரைச் சூடி—அணிபூணணிந்து-அழகிய பொன்னினு மணியினுஞ்செய்யாநின்ற வாபரணத்தை யணிந்து—மணிமுடிகவித்து - இரத்தினகிரீடத்தைதக கவித்து—கயற்கொடியெடுத்து - கயற்கொடியை வலத்தேயுயர்த்தி—மூழுதுலகளிக்கும் - இவ்வுலகமுழுதுங் காத்தற்குககாரணமாகிய—பேரருளுடையகன் - மிகுந்த வருளினையுடைய நாயகனது—சீரருள்போல - சீரைததந்த வவ்வருளையுடையதுபோல—மணத்துடன்விரிந்த - மணத்தோடுகூடி மலர்ந்த—கைதையங்கானத்து - தாழையையுடையநெய்தனிலத்து;

மாட்டாய மொழிமாற்றிக்கொண்ட வினைவினை - வேரோகொள்ளும்வினைவினையுமாம். சீரருளன்மொழித்தொகை "சீரம்பரத்திற் றிகழ்ந்தொளிதோன்று,, மென்பதனை வினைத்தொகையாகக்கூறினார் திருக்கோவையினும். விரிநதகைதை யொற்றுமையயம்பற்றிச் சினைவினை முதனமேனின்றது.

கூறுமதியத் திருநுதற்கொடியே.

கூறுமதியம் - மதியின் பிளவுபோன்ற—திருநுதற்கொடியே - அழகிய நுதலினையுடைய கொடிபோல்வாய்;

நுதற்கொடிவெளிபபடை "பூண்முலையபிடிக்கவாய்ப்போர் செய்குற்ற,, வென்றுறபோல.

ஓடாவென்றிய பொலம்பூட்குரிசில்
சின்னங்கிடந்த கொடிஞ்சிமான்றேர்
நொச்சிப்பூவுதிர் நள்ளிருண்டோள்
விண்ணஞ்சுமந்து தோற்றஞ்செய்தெனத்
தன்கண்போலு மென்கணேக்கிக்
கள்வரைக்காணு முள்ளம்போலச்
செம்மனர்திருகி யுள்ளந்துடித்துப்

புறன்வழங்காது நெஞ்சொடுகொதித்தனண்
மாறுக்கற்பினன்னை

நொச்சிப்பூவுதிர-நொச்சிப்பூவுதிராநின்ற—ஊர்ளிருள்-இருட்செறிவினையுடைய—நடுநாள-அரையாமத்து—ஒடாவென்றி-கெடாத வென்றியினையும்—பொலம்பூண்-பொன்னாற்செய்த பூணினையுமுடைய—குரிசில்-தலைவனது—விண்ணஞ்சுமாத்து-மேகத்தைச சுமந்துகிடந்த—கொடிஞ்சிமாத்தேர்-கொடிஞ்சியினையுடைய பெரியதேரினது—சின்னங்கோற்றஞ்செய்தென-அடையாளங்கிடந்ததென—மாறுககற்பினன்னை - கெடாத கற்பினையுடைய வன்னை—தன்கண்போலும் - தன் கண்போலகின்ற—என்கண்ணுகளை - என்னைபபார்த்து—கள்வனைக்காணும்- கள்ளனைக்காணபாரது—உள்ளம்போல - உள்ள மாறுபட்டாற்போல—செம்மனம் - கோடாதமனம்—திருகி - மாறுபட்டு—உளாக்துடித்து - மனந்துடித்து—புறன்வழங்காது - இபபேசசு வெளிவிடாது—நெஞ்சொடுகொதித்தனள - நெஞ்சம புழுங்கினளாதலா னிவ்வொழுககத்தினை யறிந்தாள்போலும்—எ-று

சினையொடுமுதற்கொற்றுமை யுண்மையாறகாணுமுள்ளமென்றா. தொழில் வேறறுமைபபடுதலின் மனமுளளநெஞ்சம் பொருட்பினவருங்கே. செமமைமனஞ்செமமனம் - செம்மைமனங்கோடாமை. "செறிவுநிறையுஞ் செம்மையுஞ்செப்பு மறிவுமருமையும் பெண்பாலான,, என்றவிதியா னமைக்குக.

கொடியே நம்மன்னை நெய்தனிலத்து அரையாமத்துத் தலைவன் றேரடையாளங் கிடந்ததென வென்னைப்பார்த்து மாறுபட் டுளளந்துடித்துப புழுங்கினளாதலா னிவ்வொழுககத்தினையறிந்தாள் போலுமென வினைமுடிவுசெய்க. (௪)

## வழியொழுகி வற்புறுத்தல்.

வழியொழுகி வற்புறுத்தலென்பது - தலைமகளது வருத்தங்கண்டதோழி அவளை வழியொழுகி யாற்றுவிக்கவேண்டுமெனவாகலின் ஆற்றாமைக்குக் காரணமாகியவற்றைக் கூறித் தானும் அவளோடு வருத்தமுற்று அதுவடக்க, இம்மலர்ப்பாவையையன்றோட்கு இவ்வேறுபாடுவந்தவா றென்னோவென்று அயலவர் ஐயுறுநிற்பராதலான் நீயாற்றவேண்டுமென்று அவள் வழியொழுகி வற்புறுத்தாநிற்றல். அதற்குச்செய்யுள்:—

மதுமலர்ச்சோலையும் வாய்மையுமன்பு மருவி
வெங்கான், கதுமெனப்போக்கு நிதியினருக்குமு
ன் னிக்கலுழ்ந்தா ளொதுமலர்நோக்கமொர் மூன்
றுடையோன்றில்லைநோக்கலர்போ, லிதுமலர்ப்பா
வைக்கென் னோவந்தவாறென்ப ரேந்திழையே.

சூழிருங் கூந்தலைத்
தோழி தெருட்டியது.

இ-ள். மதுமலர்ச்சோலையும் - (அவளைப் புதுவதுகண்ணுற்ற) மதுமலர்சசோலையையும்—வாய்மையும் - (நின்னிற்பிரியேன பிரியி னாற்றேனென்றுகூறிய வஞ்சினத்தினது) மெய்ம்மையையும்—அன்பு - (வழிமுறைபெருகிய) அன்பையும்—மருவி - (நம்மோடு) மருவிவைத்து—கதுமென - பின்விரைந்து—வெங்கான் - வெங்கானத்து—போக்கும் - போகிய போக்கையும்—நிதியின்-(போய்த்தேடும்) நிதியினது—அருக்கும் - செய்தற்கருமையையும்—முன்னி - நினைத்து—கலுழ்ந்தால் - நீயழுதால்—ஏந்திழையே - ஏந்திழாய்—நொதுமலர் - அயலோர்—நோக்க

மொர்மூன் றுடையோன் - கண்களொருமூன்றையுடைய சிவனா து—தில்லைநோக்கலர்போல் - தில்லையைக் கருதாதார்போல— மலர்பபர்வைக்கு - மலரிற் றிருவன்னாட்கு—வந்தவாறு-இவ்வே றுபாடு வந்தவாறு—என்னோவென்பர் - என்னோவென் றையுறு வர் (அதனால் நீயாற்றுவாயாக)—எ-று.

அன்பு வழிமுறையாற் சுருங்காது கடிதுசுருங்கிற்றென் னுங்கருத்தாற் கதுமெனப்போக்குமென்றாள். அருக்குமென்ற தனால் - நீட்டித்தல் கருதினாளாம். வழியொழுகி யாற்றுவிக்க வேண்டுமெனவாகலின் - ஆற்றாமைக்குக காரணமாகியவற்றை மி குத்துக்கூறினாளாம். இவையிரண்டற் கும்மெய்ப்பாடு இளிவர லைச்சார்ந்தபெருமிதம். பயன்-தலைமகளையாற்றுவித்தல் (உஎ)



நேரிசையாசிரியப்பா.

பகையுடன்கிடந்த நிலைபிரிவழக்கினைப்
பொருத்தலும்பிரித்தலும் பொருபகைகாட்டலு
முட்பகையமைத்தலு முணர்த்துசொற்பொருத்த
மொருதொழிற்கிருபகை தீராதுவளர்த்தலுஞ் [லு
செய்யாவமைச்சுடன் சேராவரச
னடுகரிந்தன்ன காடுகடந்தியங்கி
யிடும்பைகிரப்பினர்க் கீதலினிறந்தோர்க்
கிதழ்கிறைமதுவந் தாமரைதுளித்தென
விழிசொரிநீருடன் பழங்கண்கொண்டா
லுலகியனிறுத்தும் பொருண்மரபொடுங்க
மாறனும்புலவரு மயங்குறுகாலை
முந்துறும்பெருமறை முளைத்தருள்வாக்கா
லன்பினைந்திணையென் றறுபதுசூத்திரங்

கடலமுதெடுத்துக் கரையில்வைத்ததுபோற்
பரப்பின்றமிழ்ச்சுவை திரட்டிமற்றவர்க்குத்
தெளிதரக்கொடுத்த தென்றமிழ்க்கடவு
டழற்கட்டாரக் கின்சுருமவாடையன்
கூடலம்பெரும்பதி கூருர்கிளையென
நிறைநீர்க்கயத்து ளொருதாணின்று
தாமரை தவஞ்செய் தளியுடன்பெற்ற
திருமகட்கடுத்த தென்னெனா
வொருநமைகாண்குவா துகிர்க்கிளைக்கொடியே.

---*---

பகுதி - வரைபொருட்பிரிதல். துறை - தலைமகள் வருத்தங்கண்டதோழி யவளோடொழுகி யாற்றுவிக்கவேண்டுமெனவாகலி ஞாற்றுமைக்குக காரணமாகியவற்றைக்கூறித் தாயினுமவளோ டுவருத்தமுற றனுகிடக்க விலட்கில் வேறுபாடுவந்த தென்னோ வென் றயலவ ளாயுறுநிற்பாரதலா னியாற்றவேணுமென்றவள் வழியொழுகி வற்புறுத்தல்.

உலகியனிறுத்தும் பொருண்மரபொடுங்க
மாறனும்புலவரு மயங்குறுகாலை

(இதனது பதபொருள்)

உலகு - உலகத்தில்—இயல் - இலக்கணமாக—நிறுத்தும்-நிறுத்தும்—பொருண்மரபு - பொருட்கூறு—ஒடுங்க - ஒருபஞ்சத்திலிறத்தலால்—மாறனும்-பாண்டியனும்—புலவரும்-கடைச்சங்கத்தாரும்—மயங்குறுகாலை - (எழுத்துஞ் சொல்லுமுண்டாய்ப் பொருட்கூறின்றி) மயங்குதலுற்றகாலத்து;

உலகியலுமென்னு மெச்சவும்மை தொக்கதாக்கி நாடகவழக்கும் நிறுத்தும் பொருளிலக்கண மெனினுமாம். மொழிந்த

பொருளோடொன்ற வவ்வயின் மொழியாததனையு முட்டின்று முடித்தலென்பதனு ளடக்கவழக்குங் கொள்க. கூதிர்வேனிலெ ன்ற சூத்திரத்திற பெரும்பகைதாங்கும வேலினானு மென்றாற் போல.

முந்துறுப்பெருமறை முளைத்தருள்வாக்கா
லன்பினைந்திணையென் றறுபதுசூத்திரங்
கடலமுதெடுத்துக் கரையில்வைத்ததுபோற
பரப்பின்றமிழ்ச்சுவை திரட்டிமற்றவர்க்குத்
தெளிதரக்கொடுத்த தென்றமிழ்க்கடவுள்

கடலமுது - கடலமுதத்தை—திரட்டியெடுத்து - திரட்டியெடுத்து—கரையில்வைத்ததுபோல் - கரையில்வைத்தாற்போல—முந்துறுப்பெருமறை - எல்லாநூற்கு முந்திய பலமறை—முளைத்தருள்வாக்கால் - தோற்றியவாக்கினால்—பரப்பின்றமிழ்ச்சுவை-பரப்பினையுடைய பொருட்சுவைத் தமிழை—அன்பினைந்திணையென்று - அன்பினைந்திணைமுதலென—அறுபதுசூத்திரம் - அறுபதுசூத்திரமாகத் தொகுத்து—மற்றவர்க்கு - பாண்டியனுக்குங் கடைச்சங்கத்தாருக்கும்—தென்றமிழ் - அத்தென்றமிழை—தெளிதர - தெளிய—கொடுத்த - கொடுத்த—கடவுள் - கடவுள்;

தழற்கட்டரக்கின் சருமவாடையன்
கூடலம்பெரும்பதி கூறுர்கிளையென

தழற்கண் - அக்கினிக்கண்ணையுடைய—தரக்கின் - புலியின்—சருமவாடையன் - தோலாகிய வாடையையுடையவன் (அவனது)—கூடலம்பெரும்பதி - அழகிய கூடலாகிய பெரியபதியினை—கூறுர்கிளையென - கூறுதவராது கிளைபோல;

பகையுடன்கிடந்த நிலைபிரிவழக்கினைப்
பொருத்தலும்பிரித்தலும் பொருபகைகாட்டலு

முட்பகையமைத்தலு முணர்த்துசொற்பொருத்தலு
மொருதொழிற்கிருபகை தீராதுவளர்த்தலுஞ்
செய்யாவமைச்சுடன் சேராவரச
னாடுகரிந்தன்ன காடுகடந்தியங்கி
யிடும்பைபிறப்பினார்க் கீதலினிறந்தோர்க்
கிதழ்நிறைமதுவந் தாமரைதுளித்தென
விழிசொரிநீருடன் பழங்கணைகொண்டால்

இடும்பைபிறப்பினார்க்கு - எனக்குத் துன்பத்தை யுண்டாக்கிய நமக்கு — ஈதலின் - ஈதற்பொருட்டால் — பகையுடன் கிடந்த - (பழஞ்சத்துரு மித்துருவாகானென் றெண்ணாது நெடுங்காலம்) பகையோடு கூடாது — பின்பிரிவழக்கினை - தொன்றுதொட்டுவரும் வழக்கை — பொருத்தலும் - ஒன்றுபடுத்தலும் — பிரிதலும் - (வினைவந்துழிப் பகைவர்க்குத் துணையாயினாரை பிரியாது தம்பாலாயினாரை யவர்பிரிக்கக் கொடையின்சொற்களால்) பேணிக்கொள்ளாமையும் — பொருபகைகாட்டலும் - (வலியுங் காலமு மிடனுமறியாது) பொருதற்கேதுவாகிய பகையையுண்டாக்கிக்கோடலும் — உட்பகையமைத்தலும் - புறப்பகைக்கிடனாகக், கொடுத்து வெல்லுந் துணையு முள்ளாயிருக்கும் பகையையுண்டாக்கலும் — உணர்த்துசொற்பொருத்தலும் - ஆக்கமுங் கேடுஞ் சொல்லால்வருதலாற் பிறருணர்த்துஞ் சொல்லின்பயன்றெரியாது கூட்டிக்கோடலும் — ஒருதொழிற்கிருபகை தீராதுவளர்த்தலும் - ஒருவினைசெய்தற்றொழிலை யிரண்டுபகையாற்றீராது பகையையுண்டாக்கலுமாகிய — செய்யாவமைச்சுடன் - இவற்றைச்செய்யாத வமைச்சனுடன் — சேராவரசன் - பொருந்தாதவரசனது — நாடுகரிந்தன்ன - நாடுகரிந்தாற்போன்ற — காடுகடந்தியங்கி - காட்டிடையிட்டுநடந்து — இறந்தோர்க்கு - போனார்க்கு — இதழ்நிறை - இதழ்நிறைந்த — மது - தேனை — அந்தா

றை-அழகிய தாமரை—துளித்தென - துளித்தாற்போல—விழிசொரிநீருடன் - விழிசொரியாநின்ற நீரோடுகூடி—பழங்கணைகொண்டால் - வருந்தினால்;

நிலைபிரிவழக்கிற்கு ஆதியாய்வரும்பகை நாட்டுதலென்றார் சிந்தாமணியினும், பகைவாபிரிகநத் தான் பேணிக்கொள்ளாமையிற் றன்பிரித்தலாயிற்று, இவை யிரண்டும் அமைசசர்க் கின்றியமையாத குணமின்மை. பொருபகைகாட்டல் வினைத்திட்பமின்மை. உட்பகையமைத்தல் வினைத்தூய்மையின்மை. உணர்த்துசொற்பொருத்தல் சொல்வன்மையின்மை. ஒருதொழிற் கிருபகை தீராதுவளாததல் வினைசெயல்வகையின்மை. தொழிற்கு உருபுமயக்கம். இருபகையாறறீர்த்தல் தம்பகைஞரோடவர்க்குப் பகையாயினாரை யெடுத்துவிட்டுத் தாம்வினை தீர்த்தல். "மோதிமுள்ளொடு முட்புடைகண்டிட" வென்றார் சிந்தாமணியினும். இவற்றைச் செய்யாவெனவே யின்றியமையாதகுணமுடைமையும் வினைத்திட்பமும் வினைத்தூய்மையுஞ் சொல்வன்மையும் வினைசெயல் வகையுஞ்செய்யு மமைசசனென்பது விளங்கிற்று. தூதுமுதலியன புறமண்டலத்துப்போய்ச் செய்தலாதலின் அகமண்டலத்துச்செயதலை யிவவைாதினலுங்கூறினா வள்ளுவனொக, ஒடு வேறுவினையோடு வரைவிடைவைததுப பிரிதல் காடிடையிட்டும் நாடிடையிட்டும் பிரிதலாற் காலநீட்டித்தலின் அதன்போக்கையும் நிதிதேடற்கருமையையும் நினைந்து வருந்திலென்பா ளிறந்தோககெனறுள.

நிலைநீர்க்கயத் தொருதாணின்று
தாமரைதவஞ்செய் தளியுடன்பெற்ற
திருமகட்கடுத்த தென்னென்
றெருளைமதாண்குவர் துகிர்க்கிளைக்கொடியே.

துகிர்க்கிளைக்கொடியே - கிளையினையுடைய பவளக்கொடி போல்வாய்—தாமரை - தாமரையானது—நிறைநீரகக்கயத்துள்- நிறைந்த நீர்மடுவில்—ஒருதாணின்று-ஒருதாளினின்று—தவஞ்செய்து - தவஞ்செய்து—அளியுடன்பெற்ற - அன்புடன்பெற்ற—திருமகட்கு - திருமகளையனையாளுக்கு—அடுத்ததென்னென்று - பொருந்திய வேறுபாடென்னென்று—ஒருமைகாண்குவர் - நொதுமலரொல்லாருங்கூடி யையுறுவர் (அதனை நீயாற்றுவாய்).

திருமகள் குறிப்புவமை. இஃதுவமைக்கண்வந்த வாகுபெயர் தொகையுவமையுமாம்.

கொடியே கூடற்பதியைக் கூறாதவா கிளைபோல நினக்குத் துன்பத்தையுண்டாக்கிய தமாக் கீதற்பொருட்டாற் காடிடையிட்டு நடந்துபோனாக்கு வருந்தினாற் றிருமகட்குப்பொருந்திய வேறுபாடென்னென் றையுறுவரதனை நீயாற்றுவாயென வினைமுடிவுசெய்க. (௫)

---

### பிரிவருமைகூறி வரைவுகடாதல்.

பிரிவருமைகூறி வரைவுகடாதலென்பது - கொய்தமைகூறி வரைவுகடாய தோழி இப்புனத்துப்பயின்ற கிளிகள் தமக்குத் துப்பாகாக் காலத்துந் தினைத்தாளை விடாதிராநின்றன. நாம் போனால் நங்காதலரிவ்விடத்தேவந்துநின்று நம்மைத் தேடுவர் கொல்லோவெனச் சிறைப்புறமாகப் பிரிவருமைகூறி வரைவுகடாவாநிற்றல். அதற்குச்செய்யுள்:—

பரிவுசெய்தாண்டம் பலத்துப்பயில்வோன்பரங்
குன்றின்வா, யருவிசெய்தாழ்புனத் தைவனங்கொ
ய்யவு மிவ்வனத்தே, பிரிவுசெய்தாலரிதேகொள்க

பேயொடு மென்னும்பெற்றி, யிருவிசெய்தாளி னி
ருந்தின்றுகாட்டு மிளங்கிளியே. கசசு

மறைப்புறக் கிளவியிற்
சிறைப்புறத் துரைத்தது.

இ-ள். பரிவுசெய்து - எம்மைப்பரிந்து—ஆண்டு-ஆண்டு—அம்பலத்து - அம்பலத்தினகண—பயில்வோன் - பயிலவானது—பரஙகுன்றின்வாய் - பரங்குன்றினிடத்து—அருவிசெய் - அருவிநீரால் செய்யபபட்ட—தாழ்புனத்து - தாழ்ந்த புனத்தின் கணுண்டாகிய—ஐவனஙகொய்யவும் - மலைநெல்லைக் கொய்யவும்—இவ்வனத்து - இக்காட்டினகண—இருவிசெய்தாளிருந்து-இருவியாகச்செய்யபபட்ட தாளிலேயிருந்து—பேயொடும் - பேயோடாயினும்—செய்தால் - நட்புசெய்தால் —பிரிவு அரிது- பிரிவதரிதாகும—கொளக - இதனை யுள்ளத்துககொளக—என்னும்பெற்றி - என்னுந் தன்மையை—இளங்கிளி - இளங்கிளிகள்—இன்றுகாட்டும் - இபபொழுது காடடாநின்றன—எ-று.

பேயோடாயினும் பிரிவுசெய்தா லாறறுதலரிதெனறுரைப் பினுமமையும். இருவியென்பது - கதிர்கொய்தகட்டை. தாளென்பது - கதிர்கொய்யாத முன்னுஞ் சொல்வதோர்பெயா. இப புனத்துபபயின்ற கிளிகள் தமககுத் துப்பாகாக்காலத்துமிதனை விடாதிராநின்றன. இனி நங்காதலர் நம்மாட் டென்செய்வரொ ன்னுங் கருத்தான் மறைப்புறமாயிற்று. சிறைப்பட வுரைத்த தென்பது பாடமாயின் - சிறைக்கண்வந்து நிற்பவென்றுரைக்க.

## தினைமுதிர்வுரைத்து வரைவுகடாதல்.

தினைமுதிர்வுரைத்து வரைவுகடாதலென்பது - அயலுரையு ரைத்து வரைவுகடாயதோழி இவ்வேங்கை தினைப்புனங்கொய்க

வென்று சோதிடஞ் சொல்லுதலைப்பொருந்தி யெம்மைக் கெடுவித்தது. இனி நமக்கேனல் விளையாட்டிலலையெனச் சிறைப்புறமாகத் தலைமகளோடு கூறுவாள்போன்று தினைமுதிர்வுரைத்து வரைவுகடாவாநிற்றல். அதற்குச் செய்யுள் —

மாதிடங்கொண்டம் பலத்துநின்றோன்வட வா
ன்கயிலைப், போதிடங்கொண்டபொன் வேங்கைதி
னைப்புனங் கொய்கவென்று, தாதிடங் கொண்டு
பொன்வீசித்தன் கள்வாய்சொரியநின்று, சோதிட
ங்கொண்டிதெம் மைக்கெடுவித்தது தூமொழியே.

ஏனல்விளையாட் டினியில்லையென
மானற்றோழி மடந்தைக்குரைத்தது.

இ-ள் தூமொழியே - தூயமொழியையுடையாய்—மாது இடங்கொண்டு - உமாதேவியாரை யிடப்பக்கத்துக்கொண்டு—அம்பலத்துநின்றோன் - (எல்லாருங்காண) அம்பலத்தின்கண் நின்ற (பொருந்தா வொழுக்கத்தையுடையவனது)—வட - வடக்கினக்கணுண்டாகிய—வான் - பெரிய—கயிலை - கைலைமலைக்கணுளதாகிய—போதிடங்கொண்ட - பொருப்பிடங்கொண்ட—பொன்வேங்கை - பொன் (போலு மலரையுடைய) வேங்கை—தினைப்புனம் - தினைப்புனத்தை—கொய்கவென்று - அரிகவென்று—தாது - மகரந்தத்துகளை—இடங்கொண்டு - இடத்தேகொண்டு—பொன்வீசி - பொன் (போலும் மலரை யெல்லார்க்கும்) கொடுத்து—தன்கள் - தனதுதேனை—வாய் - பூத்தவிடத்து—சொரியநின்று - சொரிந்துநின்று—சோதிடங்கொண்டு - சோதிடஞ் சொல்லுதலைப் பொருந்தி—இது - இஃது—எம்மைகெடுவித்தது - எம்மைக்கெடுத்தது இனியென்செய்தும்—எ-று.

போதி-மலை, போதி-இடம், போதிடமென மரீஇயிற்று.

பொன்னைக்கொடுத்துப் பிறர்க்கடிமையாதலைப் பொருந்தித் தானிழிந்தசாதியாதலாற் றனக்குரியகள்ளை வாய்சொரியகின்றெனச் சிலேடைவகையா னிழித்துக் கூறினுளாகவு முணர்க்க. சோதிடங்கொண் டிதெம்மைக் கெடக்கொண்டதென்பது பாடமாயிற் கெடகவொண்ட தென்னுஞ் சொற்கள் ஒருசொன்னீரவாய்க் கெடுத்ததென்னும் பொருள்பட்டு எம்மையெனனுமிரண்டாவதனை முடித்தனவாகவுணர்க்க. மெய்ப்பாடு-அழுகை பயன்-செறிபபறிவுறுத்தல். (கரு௮)

மயிலொடுகூறி வரைவுகடாதல்.

மயிலொடுகூறி வரைவுகடாதலென்பது - பிரிவருமைகூறி வரைவுகடாய தோழி பிரிவாற்றுமையோடு தலைமகளையுங்கொண்டு புனங்காவலேறிப் போகாநின்றுள். கணியார்கினைவு இன்றுமுடிந்தது யாங்கள் போகாநின்றேம், இப்புனத் தொருவர் வந்தால் இங்குநின்றும் போனவர்கள் துணியாதன துணிந்து போனுரென்று அவர்கருச் சொல்லுமினென மயிலோடுகூறி வரைவுகடாவாநிற்றல். அதற்குச்செய்யுள்:—

கணியார்கருத்தின்று முற்றிற்றியாஞ்சென்றுங் கார்ப்புனமே, மணியாரபொழில்காண் மறத்திரகண்டீர்மன்னு மம்பலத்தோ, னணியார்கயிலை மயில்காளயில்வே லொருவர்வந்தாற், றுணியாதனதுணிந் தாரென்னுநீர்மைகள் சொல்லுமினே. கசஅ

நீங்கரும்புனம்விடு நீள்பெருந்துயரம்
பாங்கிபகர்ந்து பருவரலுற்றது.

இ-ள். கணியார் - கணியாரது—கருத்து - கினைவு—இன்றுமுற்றிற்று - இன்று முடிந்தது—யாஞ்சென்றும் - யாங்கள்

போகாமின்றேய்—கார்ப்புனமே - கரியபுனமே—மணிஆர்-மணி களார்ந்த—பொழில்காள் - பொழில்களே—மறந்திர்கண்டீர் - (வேங்கையொடு பயினதீராகலின) நீரெம்மை மறப்பீர்—மன்னும் - நிலைபெற்ற—அம்பலத்தோனை - அம்பலத்தையுடையவனது—அணி ஆர் - அழகார்ந்த—கயிலைமயில்காள் - கைலையினின்றும்வந்த மயில்களே—அயில்வேல்துணைவர் - கூரியவேல்துணையாகத் தமியவருமவர்—வந்தால - நம்மிடைவந்தால்—துணியாதன- அன்புடையார் துணியாதனவற்றை—துணிந்தார் - அவர் துணிந்தார்—என்னுமதீமைகள்-என்னுடைதீமைகளை—சொல்லுமின்- அவர்க்குச்சொல்லுமின்—எ-று.

தீமை - நமதுவியப்பு நீரிவ்வாறுசொன்னால் அவராற்றுவாரென்பது கருத்து. பேரருளினோன் கைலையிலுள்ளீராகலின் நீர் கண்ணோட்ட முடையீரென்பது கருத்து. கார்ப்புனமென்பதற்குக் கார்காலத்துப் பொலியும் புனமெனினுமமையும். துணியாதனவாவன - பிரிதலும் வரையுந்துணையு மாற்றியிருத்தலும் புனமே பொழில்காள் மயில்காள் என்றுகூட்டி நீரெம்மைமறப்பீராயினும் மறவாது சொல்லுமினென் றுரைப்பாருமுளர். இவையாறற்கும மெய்ப்பாடும் பயனும் அவை. (௧௪௫)



நேரிசையாசிரியப்பா.

அண்டமீன் மலித்த கன்னிமுனிவாகத்
திருநுதன்முளைந்த கனறெறுநோக்கினி
லாயிரமணிக்கரத் தமைத்தவான்படையுடன்
சயம்பெறுவீரனைத் தந்தவன்றன்னு
லுள்ளத்தருளுந் தெய்வமும்விடுத்த
விருண்மனத்தக்கன் பெருமகமுண்ணப்

புக்கதேவினர்கள் பொருகடற்படையினை
யாரியவூமன் கனவெனவாக்கிய
கூடற்பெருமான் பொதியப்பொருப்பகத்
தருவியஞ்சார விருவியம்புனத்தினு
மயிலுங்கிளியுங் குருவியும்படிந்து
நன்றி செய்குநாப் பிழைத்தோர்க் குய்விலவென்
குன்றுவாய்மை நின்றுநிலைகாட்டித் [னும்
தங்குவனகண்டும் வலிமனங்கூடி
யேகவுந்துணிந்தன மெம்பெரும்புழுனு
சிறிதுநின்றியம்ப வுழையினநகேண்மினின்
றூற்றெழுமிருகவுட் பெருமதக்கொலைமலைக்
கும்பமூழ்கி யுடற்குளிததோடப்
பிறைமதியன்ன கொடுமரம்வாங்கித
தோகையர்கண்ணெனச் சுடுசரந்துரக்கு
மெம்முடைக்குன்றவர் தம்மனம்புகுதவிப்
புனக்குடிககணியர்த மலர்க்கையேடவிழ்த்து
வரிப்புறவணில்வாற் கருந்தினைவளைகுரல்
கொய்யுங்காலமு நாள்பெறக்குறித்து
நிழலுங்கொடுத்தவரீன்ற
மழலைமகார்க்கும் பொன்னணிதற்கே.



அண்டமீன்றளித்த பொன்னணிதற்கே, பகுதி-பகற்குறி. துறை - கொய்தமைகூறி வரைவுகடாவியதோழி யிப்புனத்துப் பயின்ற மயின்முதலியன தமக்குத் துப்பாகாக்காலத்தினுந் தினைத்தாளை விடாதிராநின்றன. யாம்போறு னங்காதல நீவ்விடத்தேவந்து தேடுவர்கொல்லோவெனச் சிறைபபுறமாகப் பிரிவருமைகூறி வரைவுகடாதல்.

அண்டமீன்றளித்த கன்னிமுனிவாகத்
திருநுதன் முளைத்த கனறெறுநோக்கினி
லாயிரமணிக்கரத் தமைத்தவான்படையுடன்
சயம்பெறுவீரனைத் தந்தவன்றன்னால்

(இதனது பதப்பொருள்.)

அண்டம் - பல்லாயிரகோடி யண்டத்தையும்—ஈன்று - படைத்து—அளித்த - காத்த—கன்னி - உமைக்கு—முனிவாக - கோபமுண்டாகையால்—திருநுதல் - அழகிய நுதலில்—முளைத்த - தோன்றிய—கனல் - கனலாக—தெறு - சுடாநின்ற—நோக்கினில் - கண்ணினால்—ஆயிரம் - அளவிறந்த—வான்படை - பெரியபடை—அமைத்த - அமைத்த—மணிக்கரத்துடன் - அழகிய கையுடன்—சயம்பெறும் - வெற்றிபெறும்—வீரனை - வீரபத்திரனை—தந்து - படைத்து—அவன்றன்னால் - அவனால்;

ஆகவென்னும் வினையெச்சந் தந்தென்னும் பிறவினைகொண்ட தாக்கியவென்னும் பெயரெச்சங்கொண்டது.

உள்ளத்தருளுந் தெய்வமும்விடுத்த
விருண்மனத்தக்கன் பெருமகமுண்ணப்
புக்கதேவினர்கள் பொருகடற்படையினை
யாரியலுமன் கனவெனவாக்கிய
கூடற்பெருமான் பொதியப்பொருப்பகத்
தருவியஞ்சாரல்

உள்ளத்து - உள்ளத்தின்கட்பிறக்கும்—அருளும் - இரக்கமும்—தெய்வமும் - தெய்வமென்னு நினைவும்—விடுத்த - விடுத்தற்குக காரணமான—இருள் - அஞ்ஞானத்தினை யுடைத்தாகிய—மனம் - மனத்தையுடைய—தக்கன் - தக்கனுண்டாக்கிய—

பெருமகம் - பெரியமகத் தவிர்ப்பாகத்தை—உண்ணூ - உண்ண—புக்க - புகுந்த—தேவினர்கள் - பிரமாமுதலானகடவுளர்—பொரு - பொராநின்ற—கடற்படையினை - படைக் கடலினை—ஊமன் - ஊமன்கண்ட—ஆரியகனவென - ஆரியகனவுபோல—அக்கிய - வெளிப்படாதாகிய—கூடற்பெருமான் - மதுரைப் பெருமானது—அருவி - அருவியையுடைய—பொதியப்பொருப் புச்சாரலகத்து - பொதியமலையின் பக்கத்து;

தெய்வமுமென்பது - தந்தம்பொருள்வயிற் றம்மொடு சிவணிய வாகுபெயரிலே யாயபின்னவை யுணர்த்திற்று. "இருந்தாற் கோரோலை தொடுத்தானொருத்தி யுடலந்திற பொருநதாமபொறி' யையென் றதுபோல,, பார்வதி பிரிதற கொங்காமையானுஞ் சிவனைத் தெய்வமென்று நினையாமையானும் அருளுந் தெய்வமும் விடுத்தனென்றார். பயத்தைத் தருதலின் அஞ்ஞானத்தை யிருளென்றார். ஆரிய விகாரம் ஆரியனுடைய ஊடனெனினுமாம்.

இருவியம்புனத்தினு
மயிலுங்கிளியுங் குருவியுமடிந்து
நன்றி, செய்குநர்பயனிழந்தோரென முய்விலவென்னுங்
குன்றுவாய்மை நின்றுநிலைகாட்டித்
தங்குவனங்கண்டுமெ வெறிமலர்கூடி
யேகவுந்துணிந்தன மெய்ம்பெரும்படிறு
சிறிதுமின்றியம்ப வுழையினங்கேண்மினின்
றாதரவெழுமிருகவுட் பெருமதக்கொலைமலைக்
கும்பமூழ்கி யுடற்குளித்தோடப்
பிறைமதியன்ன கோடுமரம்வாங்கித்
தோகையர்கண்ணெனச் சுடுசரந்தூக்கு
மெய்ம்முனைக்குன்றவர் தம்மனம்புகுதவிப்

புனக்குடிக்கணியர்த மலர்க்கையேடவிழ்த்து
வரிப்புறவணில்வாற் கருந்தினைவளைகுரல்
கொய்யுங்காலமு நாள்பெறக்குறித்து
பிழைநுங்கொடுத்தவரீன்ற
மழலைமகார்க்கும் பொன்னணிதற்கே.

உழையினம் - மானினங்காள்—எம் - எம்முடைய—பெரும்படிறு - மிகுதியாகிய குற்றத்தை—இன்றியம்ப - இப்பொழுதுசொல்ல—சிறிதுநின்று-சிறிதுபொழுது நின்று—கேண்மின்-கேட்பீராக—பெருமதம - பெருமதம—ஊற்றெழும-ஊற்றெழாநின்ற—இருகவுள் - இரண்டு கபோலத்தினையுமுடைய—கொலைமலை- கொலையானையின்—கும்பமுழ்கி - மதகத்திலமிழ்ந்தி—உடற்குளித்தோட - உடலூடுருவியோட—மதி - மதிக்கும்—பிறையன்ன - பிறைபோன்ற—கொடுமரமவாங்கி - வில்லைவளைத்து—தோகையார் - தோகைபோல்வார்—கணையென்ன - கண்போல—கடுசரம் - கடுசரத்தை—துரக்கும் - விடுகின்ற—எம்முடை - எம்முடைய—குன்றவாணம - குன்றவருடைய—மனம்புகுந்த - மனமறிய—இப்புனம - இப்புனத்தில்—குடி - சிறந்த—கணியர் - வேங்கையார்—கை - ஒழுங்காக—தமமலரோடவிழ்த்து - தமமலரிதழ்விரித்து—பிழைநுங்கொடுத்து - கிழலையுங்கொடுத்து—அவரீன்ற - அவர்பெற்ற—மழலை - உருத்தெரியாதசொலலையுடைய—மகார்க்கும் - சிறாக்கும—பொன்னணித்ற்கு - பொன்னணிதற்கு—காலமும் - காலமும்—நாள்பெற-தினைகொய்யுநாளைப்பதுபெற—குறித்து - கருதப்பட்டதனால—வரி - வரியினையுடைத்தாய—புறம் - முதுகினையுடைய—அணில் - அணிலினது—வால் - வாலபோல—வளை - வளைந்த—கருந்தினை - கரியதினையின்—குரல் - கதிரினை—கொய்யும் - கொய்யவும்—நன்றிசெய்குநர் - செய்ந்நன்றி—பிழைத்தோர்க்கு - பிழை

த்தார்க்கு—உய்விலவென்னும் - உய்வில்லையென்னும்—குன்று வாய்மை - உண்மைகெடாத—நின்றுநிலை - நிலையைநின்று—கா ட்டி - காட்டாநின்று—புனத்து - புனத்தில்—இருவியினும்-அ றுத்ததாளினும்—மயிலும் - மயிலும்—கிளியும் - கிளியும்—கு ருவியும் - குருவியும்—படிந்து - வீழ்ந்து—தங்குவனகண்டும் - தங்குவனகண்டும்—வலிமனங்கூடி - மனவலியுண்டாய்—ஏக வுந்துணிந்தனம் - செல்லவுந் துணிந்தனம்—எ-று.

முற்றும்மைதொக்கது பிறையாகிய மதியெனினுமாம். நீ ழலுமென்னும்மை சிறப்பும்மை. மகாரகுமென்னும்மை யெச்சவும்மை. பொன்னணிதல் - கலியாணம பண்ணுதல். ஏ காரம் அசை, வேங்கை புட்பிக்குங்காலம்வரையும் நாளென்றார். சிற்றகத்தியத்தினும் காலமுமென்னு மும்மை யெண்ணும்மை. காலம் - வரையுங்காலம் என்பதெனை வொருசொல் வருவிக்க. கொய்யவுமெனனும்மை யெதிர்மறையும்மை. காட்டியென்ப து நிகழ்காலமுணாத்திற்று. இருவியினுங்கண்டு மென்னுமு ம்மை யிறந்ததுதழீஇய வெச்சவும்மை. ஏனையவெண்ணும்மை ஏகவுமென்றதிலும்மை சிறபபும்மை.

பொதியத்துமான்காள் எம்முடையகுற்றத்தை நின்றுகே ட்பீராக எம்முடைய குன்றவாமனமறிய வேங்கையாரிதழ்விரி த்து நிழலையுங்கொடுத்துச் சிறார்க்கும் பொன்னணிதற்குக் கா லமுந் தினைகொய்யுநா ளென்பதுபெறக் கருதப்பட்டதனைற் றி னைக்கதிரினைகொய்யவு முண்மைகாட்டாநின்று புனத்திருவியி னும் மயின்முதலியன தங்குவனகண்டும் ஏகவுந்துணிந்தன மென வினைமுடிவுசெய்க. (௬)

## இளமைகூறி மறுத்தல்.



இளமைகூறி மறுத்தலென்பது - அவளது வடிவுகசஞ்சி மலாந்தறியா வென்றதல்லது மறுத்துக்கூறியவாறன்று. சிறப்பின்மைகூறியவாறெனா உட்கொண்டு சிறப்புடைத்தழை கொண்டுசெல்ல அதுகண்டு குழலும்முலையுமருவியாத குதலைச்சொல்லிக்கு நீசொல்லுகின்றகாரியம் சிறிதுமியைபுடைத்தன்றெனா அவளதிளமைகூறி மறுத்துரையாநிற்றல். அதற்குச்செய்யுள்:-

உருகுதலைச்சென்றவுள்ளத்துமம்பலத்துமொளியே, பெருகுதலைச்சென்று நின்றோன்பெருந்துறைப் பிள்ளைகள்ளார், முருகுதலைச்சென்ற கூழைமுடியா முலைபொடியா, வொருகுதலைச்சின்மழலைக்கென்னோவைய வோதுவதே. கoச

முளையெயிற்றரி வை
விளைவிலளென்ற து,

இ-ள். உருகுதலைச்சென்ற - (அன்பருடைய) வுருகுதலையடைந்த—உள்ளத்தும-உள்ளத்தின்கண்ணும்—அம்பலத்தும் - அம்பலத்தின்கண்ணும் (ஆகிய விரண்டிடத்துமொப்ப)—ஒளி பெருகுதலைச்சென்று - ஒளிபெருகுதலையடைந்து—நின்றோன்-நின்ற சிவனது—பெருந்துறை - பெருந்துறைக்கணுளளவளாகிய—பிள்ளை - இளமைப்பருவத்தையுடைய (வெமதுபெண்ணினது)—கள்ஆர் - தேனூர்ந்த—முருகு - நறுமணம்—தலைச்சென்ற - தம்மிடத்தடைந்த—கூழை - குழல்கள்—முடியா-முடிக்கப்படா—முலை - முலைகள்—பொடியா - தோன்று—ஒரு - ஒரு—குதலை - விளங்காமையொருங்கிய—சில் - சில—மழலைக்கு-

இளஞ்சொல்லுடைய விலட்கு—என்னை - யாதாம்—ஐய-ஐய
னே—ஓதுவது - நீசொல்லுகின்ற விது—ஏ-று.

ஏகாரம்-அசைநிலை, களளாககுழையெனவிலையும் குதலை
மை-விளங்காமை-மழலை-இளஞ்சொல் - சின்மழலைத் திறத்தெ
ன நான்காவது ஏழாவதன்பொருட்கண்வந்ததெனினு மமையு
ம். இவை நான்கற்கும் மெய்ப்பாடும் பயனும் அவை. (௧0௪)



நேரிசையாசிரியப்பா.

இரண்டுடனொன்றாய்க் கரைந்துகண்பட்டாம
லளவியன்மணநிலை பரப்புங்காலந்
தனைகரைகடந்த காமக்கடலுட்
புன்னுனிப்பனியென மன்னுதலின்றிப்
பிரமலர்ந்தவயாவுநோய்நிலையாது
வனைகாய்விட்ட புளியருந்தாது
செவ்வாய்திருந்து வெள்வாய்பயவாது
மனைபுகைபுண்ட கருமண்ணிடந்து
பவளவாயிற் சுவைகாணாது
பொற்குடமுகட்டுக் கருமணியமைத்தெனக்
குங்குமக்கொங்கையுந் தலைக்கண்கறாது
மலரவவிழ்ந்த தாமரைக்கயலென
வரிகொடுமதர்த்த கண்குழியாது
குறிபடுதிங்க ளொருபதும்புகாது
பொன்பெயருடையோன் றன்பெயர்கெடுப்பத்
தூணம்பயந்த மாணமர்குழவிக்
கூரக்கர்கூட்டத் தமர்விளையாட
நெருப்புமிழாழி யீந்தருணிமலன்

கூடன்மாகக ராடவெடுத்த
விரித்ததாமனை குவித்ததாளோன்
பேரருள்விளையச்சீரிலர்போலத்
துலங்கியவமுதங் கலங்கியதென்ன
விதழ்குவித்துப்பணித்த குதலையுந்தெரியாது
முருந்துநிரைத்த திருந்துபற்றேன்றுது
தெய்வங்கொள்ளார் திணிமனமென்ன
விரிதருகூழைபுந் திருமுடிகூடாது
துணைமீன்காட்சியின் விளைகருவென்னப்
பார்வையிற்றெழில்கள் கூாவிழிகொள்ளாது
மறுபுலத்தடுபகை வேந்தடக்கியதென
வடுத்தெழுகொலைமுலை பொடித்தனவென்றே
செம்மகண்மாலை யிம்முறையென்றால்
வழுத்தலும்வருதலுந்தவிர்தி
மொழிக்குறிகூடாச் செவ்வேலோயே.

---*---

இரண்டடலொன்றுய் - செவ்வேலோயே, பகுதி - சேட்ப டை. துறை - தலைவி வடிவுக்கஞ்சி மலர்ந்தறியாதென்று மறுத் துக்கூறியவாற்றை யிது சிறப்பின்மைகூறியவாறெனவுட்கொ ண்டு சிறப்புடைத்தழைகொண்டு செல்வதுகண்டு தலைவி யிள மைத்தன்மைகூறி மறுத்தல்.

மொழிக்குறிகூடாச் செவ்வேலோயே.

(இதனது பதப்பொருள்)

மொழிக்குறி - குறித்தசொல்லும்—கூடா - விளைவினுற் கூடப்படாத—செவ்வேலோய் - சிவந்த வேலினையுடையாய்; சிறப்பும்மை தொக்கது.

பொன்பெயருடையோன் றன்பெயர்கடுப்ப

பொன்பெயருடையோன்-இரணியனெனப் பொன்னினது பெயரினையுடையவன்—தன்பெயர் - நாராயணாயவென்னும் திருநாமத்தை—கடுப்ப - அவன்மகன் சொல்லாதவண்ணம் வெறுத்தலால்; கெடுப்பவென்றும் பாடமுண்டு.

இரண்டுடலொன்றாய்க் கரைந்துகண்படாமல்

இரண்டுடல் - தாய்தந்தையென்பவருடலும்—ஒன்றாய்-முயக்கத்தாலோருடலாய்—கரைந்து-புணர்ச்சியாலுருகி—கண்படாமல் - கணமுதலிய வவயவநுகர்ச்சி யுண்டாகாமல்;

இது முயக்கமுநிலையுங் காட்சியுமின்மை கூறினர். "காதலாற்காமபூமிக கதிரொளியவருமொத்தார், மாதருஞ்சளிறன்னாறு மாசுணமகிழ்ச்சிமன்ற, லாதரம்பெருகுகின்ற வன்பினாலன்னமொத்தார், தீதிலாதிளையபிணைமான் செல்வமேபெரிதுமொத்தார்,, என்னுஞ் சிந்தாமணிப்பாட்டின முயக்கமுநிலையுங் காட்சியுங்கூறி யவற்றிற் குவமைகூறினர். கணமுதலிய வவயவநுகர்ச்சியைக கணணென்றா.

அளவியன்மணநிலை பரப்புங்காலந்
தளைகரைகடந்த காமக்கடலுட்
புன்னுனிப்பனியென மன்னுதலின்றி

அளவியல் - அளவானியன்ற கூட்டமும்—மணநிலை-இன்பநிலையும்—பரப்புங்காலம் - உண்டாக்கும் காலமாகிய—தளை - தடைசெய்யும்—கரைகடந்த - கரையைக் கடந்த—காமக்கடலுள் - காமமாகிய கடலுள்—புன்னுனி-புல்லினது நுனியின்கண் வீழ்ந்த—பனியென - நீரளவென்னும்படி—மன்னுதலின்றி - நிலைபெறுதலில்லாமல்;

அளவியன் மணம் சாதியானமைந்தகூட்டம். "அருணிவடவை யத்தினியென்பவை - தெரியுங்காலை யரிவையர்சாதி - சசனேயிடப னச்சுவனென்று - மகன்மேற்சாதிவகுக்கவும்படுமே,, என்று ரின்பசாரமுடையார். நிலை-அமுதநிற்குநிலை, காலம் நாழிகை மாலை முதலியவை விரிப்பிற்பெருகும்.

பீரமலர்ந்த வயாவுநோய்நிலையாது

பீரமலர்ந்த - பசலைபூத்தற்குக காரணமாகிய—வயாவுநோய்நிலையாது - வயாவுநோயுநிலைபெறாது;

"வயாவென்கிளவி வேட்கைப்பெருக்கம்,, அது கருப்பந்தங்கி வருத்தமுற்று நுகரப்படும் பொருண்மேற்செல்லும் வேட்கை.

வளைகாய்விட்ட புளியருந்தாது

வளைகாய்விட்ட - வளைந்தகாயினைவிட்ட—புளியருந்தாது-புளியினையுமருந்தாது;

சினைமுதலாகிய தன்பொருட்கேற்ற வடையடுத்துநின்றதோ ராகுபெயர். பூங்குமிழ்போல,

செவ்வாய்திரிந்து வெள்வாய்பயவாது

செவ்வாய்திரிந்து - சிவந்தவாயும் வேறுபட்டு—வெள்வாய்பயவாது - வெளுத்தவாயாக வுண்டாகாது;

மனைபுகையுண்ட கருமண்ணிடந்து
பவளவாயிற் சுவைகாணாது

மனை - மனையின்கணுண்டாகிய—புகையுண்ட - புகைபட்டதனால்வந்த—கருமணிடந்து - கரியமண்ணைபபிட்டு—பவளவாயில் - பவளம்போன்ற வாயினால்—சுவைகாணாது - சுவையுங்காணாது;

உண்டகருமண் உண்ட வெச்சில்போன்றது. செம்மை-வாய்க் கியல்பாதலிற் பவளவாயென்றார்.

பொற்குடமுகட்டிக் கருமணியமைத்தெனக்
குங்குமக்கொங்கையுந தலைகுசண்கறுது

பொற்குடம் - பொன்னாற்செய்த குடத்தின்—முகட்டு-உச்சியில்—கருமணி - கரியமணியை—அமைத்தென - அழுத்தினாற் போல—குங்குமம்-செஞ்சாந்தணிந்த—கொங்கையும் - முலையும்—தலை - தன்னிடத்து—கணகறுது - கண்கள்கறுது;

இது விகாரவுவமை.

மலரவவிழ்ந்த தாமரைக்கயலென
வரிகொடுமதர்த்த கணகுழியாது

மலர-மலாதர—அவிழ்நத - விரிந்த—தாமரை - தாமரையிடத்திற்றங்கும்—கயலென - மீன்போல—வரிகொடு-வரிபரந்து—மதர்த்த - களித்த—கண்குழியாது - கணணுங்குழியாமல்;

குறிபடுதிங்க ளொருபதும்புகாது

குறிபடு-பெறுங்காலமென்றுகுறித்தல்பெற்ற—திங்களொருபதும் - மாதம்பத்தும—புகாது - செல்லாமல்;

பெறுமடையாள முண்டாதற்கிடமாகிய பத்துமாதமுஞ் செல்லாமலெனினுமாம். அடையாளம் வயிறுெடுங்கன் முதலியன நோயும் புளியும் வாயுஞ் சுவையுங் கண்ணுமென்னுஞ் சிறப்பும்மைகள் விகாரத்தாற்றெக்கன. கொங்கையும் பத்துமென்னுஞ் சிறப்பும்மைகள் விரிகதுநின்றன.

தாணம்பயந்த மாணமர்குழவிக்
கரக்கர்கூட்டத்தமர்விளையாட
செருப்புமிழாழி யீந்தருணிமலன்

தூணம்பயந்த-தூணாகிய தாய்பெறப்பட்ட—மாணமர் - மாட்சிமைபொருந்திய—குழவிக்கு- நரசிங்கமாகிய குழவிக்கு—அரக்கர்கூட்டத்து - அரக்கர்குழுவுடனே—அமர்விளையாட-போர்செய்துவிளையாட—செருப்புமிழ்-தீயுமிழாநின்ற—ஆழி - சக்ராயுதத்தை—ஈந்தருணிமலன் - கொடுத்தருளாநின்ற நிமலன்;

கண்படாமல் மன்னுதலின்றி நிலையாதருந்தாது பயவாது காணாது கருது குழியாது புகாதென்னு மெதிர்மறை வினையெச்சவடுக்குப் பயந்தவென்னும் பெயரெச்சத்தோடு முடிந்தது. இது குறிப்புருவகம்.

கூடன்மாநக ராடவெடுத்த
விரித்ததாமரை குவித்ததாளோன்

கூடன்மாநகர்-மதுரைமாநகரில்—ஆட - மாறியாடும்படி—விரித்ததாமரை - விரித்த தாமரையை—எடுத்த - தூக்கி—குவித்த-குவித்தாற்போன்ற—தாளோன்-(பொன்னம்பலத்துப் பதித்த வத்) தாளிணையுடையோன்;

இது விகாரவுவமை. குவித்ததாளொற்றுமைநயம்பற்றிவந்தது. அகரம் பண்டறிசுட்டு. எடுத்த விரித்த குவித்த தாமரைத்தாளெனப் பெயரெச்சவடுக்காய்ப் பொருள்கொள்ளின் எடுத்தல்-தூக்குதல், எடுத்தபாதம்-குஞ்சிதபாதம், இஃதைவகைக்காற்றொழிலிற்காண்க. விரித்தல் சொல்லுககீடாக விரித்தல். குவித்தல்-குவிக்கவேண்டுஞ் சொற்களுக்குக குவித்தல். இவையிரண்டுஞ் சிங்களக்காற்றொழில்.

பேரருள்விளையச் சிரிலர்போலத்
துலங்கியவமுதங் கலங்கியதென்ன
விதழ்குவித்துப்பணித்த குதலையுந்தெரியாது

பேரருள்விளை - மிகுந்த வருளினையுண்டாக்கப்பட்ட—அச்சிரிலர்போல - அச்சீரினையுடைய ரல்லாதார்போலவும்—துலங்கியவமுதம் - தெளிந்தபுனலில்—கலங்கியதென்ன - கலங்கிய புனல்போலவும்—இதழ்குவித்து - வாய்குவித்து—பணித்த-சொல்லப்பட்ட—குதலையுந்தெரியாது-சொல்லுருவுந்தெரியாது;

சீரிலர்-தொல்லைச்சிரிலரொன்க. கலங்கியது தொழிற்பெயர். உமமையை மாறுக. குதலைதெரியாதென்றும் பாடமுணடு.

முருந்துநிரைத்த திருந்துபற்றோன்றாது

திருந்து - திருந்திய—முருந்து - இறகின்குருத்து—நிரைத்த - நிரைத்தாறபோன்ற—பறறோன்றாது - பல்லின்கணுண்டாகிய நகைதோன்றாது;

இடத்து நிகழ்பொருளின் றொழிலிடத்தின்மேனின்ற வாகுபெயா.

தெய்வங்கொள்ளார் திணிமனமென்ன
விரிதருகூழையுந திருமுடிகூடாது

தெய்வங்கொளளாா - தெய்வமுண்டென்றுகொள்ளாதவரது—திணிமனமென்ன - திண்ணியமன மொருவழிபபடா தது போல—விரிதருகூழையும் - பரந்தகுழல்—திருமுடிகூடாது - அழகியமுடிபோலக கூடவில்லை;

திணிமனம் - அஞ்ஞானத்திற செறிந்த மனம், மண்டிணிஞாலத்தென்றற்போல. உம்மை-சிறப்பும்மை.

துணைமீன்காட்சியில் விளைகருவென்னப்
பார்வையிற்றொழில்கள் கூர்விழிகொள்ளாது

காட்சியில் - பார்வையினால்—விளைகரு - சினையை விளையாநின்ற—துணைமீனென்ன - இணைமீன்போல—பார்வையில்-பார்

யையினுல்—தொழில்கள் - வினைக்குந் தொழில்களையும்—கூர் விழிகொள்ளாது - கூரியகண்கள் கொள்ளாது;,

சிறப்புமமை தொக்கது.

மறுபுலத்திடுபகை வேந்தடக்கியதென
வடுத்தெழுகொலைமுலை பொடித்தனவன்றே

வேந்து - ஒருவேந்தன்—மறுபுலத்திடுபகை - வேற்றுப்பு லத்து விளைகும்பகையை—அடக்கியதென - காலம்பார்த் துள் ளடககினுற்போல—வடுத்தெழுகொலை - கொலையை வெளிபப டுத்தியெழாநின்ற—முலை - முலை—பொடித்தனவன்றே - தோ ன்றவில்லை;

ஏகார மெதிரமறை, இருநிலமன்னற கின்பமேயென்றுற் போல.

செம்மகண்மாலை யிம்முறையென்றல்
வழுத்தலும்வருதலுநதவிர்தி

செம்மகண்மாலை - ஆதலா லொருவிரகுமறியாத புதியமக ளொழுங்கு—இம்முறையென்றல் - இபபடியென்றல்—வழுத் தலும்-இவள்பொருட்டாற் குறையிரத்தலும்—வருதலும்-வரு தலும்—தவிர்தி - தவிர்வாயாக—எ-று.

செம்மை புதுமை, அது முன்கண்டறியாமை. செந்நீரிளை வாளையென்றுற்போல.

குவித்ததாளோ னருள்விளையாநின்றவச் சிரிலர்போலவுங் கலங்கியதுபோலவும் பணித்தசொற் றெரியவில்லை நகைதோன் றவில்லை முடிகூடவில்லை தொழில்களைக கண்கொள்ளவில்லை முலைதோன்றவில்லை ஆதலா லிவளொழுங்கிப்படியென்றல் இ வள்பொருட்டாற் குறையிரத்தலும் வருதலுந் தவிர்வாயாகவெ ன வினைமுடிவுசெய்க. (எ)

## சுவடுகண்டறிதல்.

சுவடுகண்டறிதலென்பது - சோதிடம்பெற்றுச் செல்லாநின்றவள். இம்முரம்பின்கட்கிடந்த இவை தீவினையேனெடுத்து வளர்த்த மாணிழைசீறடி, உவை அக்கள்வனடியாமெனச் சுவடுகண்டறியாநிற்றல். அதற்குச்செய்யுள்:—

தெள்வன் புனற்சென்னியோனம்பலஞ்சிந்தியா
ரினஞ்சேர், முள்வன்பரன்முரம் பத்தின்முன்செ
ய்வினை யேனெடுத்த, வொள்வன்படைக்கண்ணி
சீறடியிங்கிவையுங்குவையக், கள்வன்பகட்டுரவோ
னடியென்று கருதுவனே. ௨௩௪

சுவடுபடு கடத்துச்
செவிலிகண் டறிந்தது.

இ-ள். தெள் - தெள்ளிய—வன் - பெரிய—புனல்-புனலையுடைத்தாகிய—சென்னியோன் - சென்னியையுடையவனது—அம்பலம் - அம்பலத்தை—சிந்தியார் - கருதாதாரது—இனஞ்சேர் - இனஞ்சேரும்—முள் - முள்ளையும்—வன் - வலிய—பரல் - பரலையுமுடைய—முரம்பத்தில் - இம் முரம்பின்கட்கிடந்த—இங்கிவை - இவற்றை—முன் - முற்காலத்து—செய் - செய்யப்பட்ட—தீவினையேன - தீவினையையுடைய யான்—எடுத்த - எடுத்துவளர்த்த—ஒள் - ஒள்ளிய—வன்-வலிய—படை-படைபோலும்—கண்ணி - கண்ணினையுடையாளுடைய—சீறு - சிறிய—அடி - அடிச்சுவடாம்—(இனி) உங்குவை - உவற்றை—அ-அந்த—கள்வன் - கள்வனாகிய—பகட்டுரவோன் - பகடுபோலும் வலியையுடையானுடைய—அடியென்று - அடிச்சுவடெ

ன்று—கருதுவன் - உய்த்துணராநின்றேன்—எ-று. முரம்பு - பரல் முளமுதலிய நிறைந்தநிலம்.

இங்கிவை - உங்குவையெனபன ஒருசொல். வியர்த்தொத்தல்-பூங்கயிலாயப்பொருப்பன். (௨௯௭)



நேரிசையாசிரியப்பா.

நிணமுயிருண்ட புலவுப்பொருது
தலைபுடலசைத்துச சாணைவாய்துடைத்து
நெய்குளித்தகற்று நெடுவேல்விடலை
பந்தணருகுநீர்க் கருட்கருவிருந்து
கோடாமறைமொழி நீடுபக்காலுங்
கதிருடல்வழிபோய்க் கல்லுறை நின்றோர்
நெருப்புருத்தன்ன செருந்திறல்வரைந்த
வாசகங்கண்டு மகிழ்ந்ததுமிவணே
துணைவிளக்கெரியு நிலைவிழிப்பேழ்வாய்த்
தோகைமண்புடைக்குங் காய்புலிமாய்க்க
வாய்செறித்திட்ட மாக்கடிப்பிதுவே
செடிந்தலைக்காருட விடிக்குரற்கிராதர்
மறைந்துகண்டக்கொலை மகிழ்வுழியிந்நிலை
தவநதிபோகு மருமறைத்தாபதர்
நன்னர்கொளாசி நாட்டியதிவ்வுழை
கறையணற்புயங்க னெரிதழல்விடத்தை
மலைமறையதக மாற்றியவதுபோற்
கொடுமரக்கொலைஞ ராறிடைகவர
வெண்ணுதுகிடைத்த புண்ணெழுசெருநிலைக்

கைவளர்கொழுந்து மெய்பொடியாகவென்
சிற்றிடைப்பெருமுலைப் பொற்றொடிமடந்தைதன்
கவைஇயகற்பினைக் காட்டுமியிதுவே
குரவஞ்சுமந்த குழல்விரித்திருந்து
பாடலம்புனைந்தகற் பதுக்கையிவ்விடனே
யொட்டுவிட்டுலறிய பராரைநெட்டாகக்கோட்
டுதிரபறையெருவை யுணவூன்றட்டி
வளைவாய்க்கரும்பருந் திடைபறித்துண்ணக்
கண்டுநின் றுவந்த காட்சியுமிதுவே
செம்மணிச்சிலம்பு மரகதப்பொருப்புங்
குடுமியந்தழலு மவணிருட்குவையு
முளைவரும்பகனு மதனிடைமேகமுஞ்
சேயிதழ்முளரியுங் காரிதழ்க்குவளையு
மொருழைக்கண்டவுவகையதென்ன
வெவ்வுயிர்நிறைந்த செவ்விகொண்மேனியி
லண்டப்பெருந்திர ளடைவீன்றளித்த
கன்னிகொண்டிருந்த மன்னருட்கடவுண்
மலையுருக்கொண்ட வுடல்வாளரக்கர்
வெள்ளமுஞ்சூரும் புள்ளியற்பொருப்பு
நெடுங்கடற்கிடங்கு மொருங்குயிர்பருகிய
வணிவேற்குமரன் முதனிலைவாழுங்
குன்றுடுத்தோங்கிய கூடலம்பதியோன்
றிடலைதரித்த கோனினர்போல
நெடுஞ்சுரநீங்கத்தங்கா
லடுந்தழன்மாற்றிய காற்குறியிவணே.

நிணமுயிருண்ட-காற்குறியவனே. பகுதி-உடன்போக்கு. துறை - புணர்ந்துடன்வருவானைவினையது வழியாகப்போய் மக ணிறை நிலைமை முதலியகண்டு செவிலி வியந்துரைத்தல்.

நிணமுயிருண்ட புலவுபொருது
தலையுடலசைத்துச் சாணைவாய்துடைத்து
நெய்குளித்தகற்று நெடுவேலவிடலை

(இதனது பதப்பொருள்.)

உயிருண்ட - சத்துருக்களுயிரை யுடலினின்று நீக்கியதனு னே—புலவுநிணம்பொருது - முடைநாறுநத்தோடு நிணத்தை ப்பொருது—தலையுடலசைத்து - உடறறலைவிதிர்த்து—சாணை வாய்துடைத்து - சாணையிற றனவாயைத் துடைத்து—நெய்கு ளித்து - நெய்யின்மூழ்கி—அகற்றும - நீக்கும்—நெடுவேல்-நெ டியவேலினையுடைய—விடலை - விடலை;

இது கருவி கருத்தாவாயிற்று. பொருதகற்றுமென வினை யும். உணடற்குரிய வல்லாப்பொருளை யுண்டெனக் கூறினர். விடலை - பாலைநிலத் தலைமகன. பருவபபெயரனறு-பருவபபெய ராயின். "அத்திறனிறந்த முப்பதின்காறும் விடலைககாகு மிகி னே முதுமகன்,, என்று ஈவிநயனுர.

அந்தணருகுநீர்க் கருட்கருவிருந்து
கோடாமறைமொழி நீடுமக்காணுங்
கதிருடல்வழிபோய்க் கலனுலைநின்றோர்
நெருப்புருத்தனன செருத்திரள்வனாந்த
வாசகங்கண்டு மகிழ்ந்தநுமிவனே

அந்தணர் - வேதியர்-உகுநீர்க்கு-அருகவியங்கொடுக்கு நீரா ல்—அருள் - அருளாகிய—கருவிருந்து - கருக்கொண்டு—கோ டாமறைமொழி - செவ்வியமந்திரமாகிய கதிரை—நீடுகைகாணு

ம் - நெடுங்காலம் பொருந்தவீனும்—கதிருடல்வழிபோய் - கதிராகிய டயிரினுடலைக கிழித்துப்போய்—கல்லுழை-நடுகல்லிடை—நின்றோர் - வீரசொர்கமாகிய போகம்பெற்றுநின்ற வீரர்—நெருப்புருத்தன்ன - அழலுருககொணடாற்போன்ற—செருத்திறல் - கொடிய பூசலினாலுணடாகியவெற்றியை—வரைந்த-எழுதிய—வாசகங்கண்டு - பாசுரங்கணடு—மகிழ்ந்ததும் - மகிழ்ந்தவிடம்—இவண் - இவ்விடம்;

இது ஏகதேசவுருவகம். ஏமப்புணையைச் சுடுமென்றாற்போல, மறைமொழி - மந்திரம், மறைமொழிகாட்டிவிடும் என்றார் வள்ளுவனாரும்; நின்றோரெனச் செயப்படுபொருளை வினைமுதல்போலக் கூறினார். இருளைநீரொன்றும் பாடம். நீக்கு - உருபுமயக்கம், நீடு - நெடுங்காலம், நீடுநினைந்திரங்கல்போல. உம்மை - இசைநிறை.

※ அந்தணரிடந் தருக்கியமேற்றருள் மாறுநிருந்து அவர்க்கு மந்திரசித்தியை யோங்கச்செய்யுங் கதிரொன்றுகூறினும்பொருந்தும். அருள்வாளாகெடாது பயன்படுதலால் கருவிருநதென்றார். சூரியன்மார்பு வாயிலாக வீரசொர்ககஞ்செல்லுதல் மரபு "கோவியரும்வானத் தரம்பையருங்கோடினார், தேவாகளுமாதவருந் தேறினார்-பூவுலகிற, காவாழுங்கையான் கரிககாலச்சோழன்மண்டு, போாவாளுறைவிடுத்தபோது,, என்றதனானுமறிக.

துணைவிளககெரியு நிலைவிழிபபேழ்வாய்த்
தோகைமண்புடைக்குங காய்புலிமாய்கக
வாய்செறித்திட்ட மாககடிப்பிதுவே

துணைவிளக்கு - இரட்டைவிளக்கு—எரியும் - எரிந்தாற்போலக் கனலும்—நிலைவிழி - நிலையினையுடைய விழியினையும்—பேழ்வாய் - பெரியவாயினையும்—மண்புடைக்கும்-விசைத்துநில

த்திலடிக்கும்—தோகை - வாலினையுமுடைய—காய்புலி - சினவிய புலியை—மாய்க்க - மாய்க்கும்படி—வாய்செறித்திட்ட - வாயின்கட் செறித்திட்டதனால்—மாக்கடிப்பிது - வீழ்ந்த மாக்கடிப்பிது;

பொன்றுஞ்சாகத்தினுய் பொருள்செய்யுமே யென்றாற்போலப பெயரொச்சமாறிநின்றது. *ஆனைக்கண்டு வாலையடித்தலும் புலிகளு வாயிற்குத்துதலு மரபு. மாக்கடிப்பு - ஆயுதவிசேடம்.

செடித்தலைக்காருட லிடிக்குரற்கிராதர்
மறைந்துகண்டகொலை மகிழ்வுழியிந்நிலை

செடித்தலை - செடிபோன்ற தலையினையும்—காருடல் - கரியவுடலினையும்—இடிக்குரல் - இடியொலிபோன்ற குரலினையுமுடைய—கிராதர் - வேடர்—மறைந்து - ஒளித்துநின்று—அக்கொலை - அப்புலியைக்கொன்ற கொலையை—கண்டு - பார்த்து—மகிழ்வுழி - மகிழ்ந்தவிடம்—இந்நிலை - இந்தநிலை;

செடி - தூறு, நின்றவிடத்தினை நிலையென்றார்.

தவநதிபோகு மருமறைத்தாபதர்
நன்னர்கொளாசி நாட்டியதிவ்வுழை

தவம் - தவத்தினையுடைய—நதி - புண்ணியதீர்த்தங்களில்—போகும் - செல்லும்—அருமறை - அரிய மறையினையுடைய—தாபதர் - அருந்தவர்—நன்னர்கொள் - நன்மையாகக்கொள்ளாநின்ற—ஆசி - ஆசீர்வாதம்—நாட்டியது - செய்தவிடம்—இவ்வுழை - இவ்விடம்;

நீராடலுந் தவமாதலிற் றவநதியென்றார். அது "நாலிருவழக்கிற் றாபதபக்கமென்பதனு னறிக," நாட்டியது - தொழிற்பெயர்.

கறையணற்புயங்க வெரிதழல்விடத்தை
மலைமறையதக மாற்றியவதுபோற
கொடுமரக்கொலைஞ ராறிடைகவர
வெண்ணாதுகிடைத்த புண்ணெழுசெருநிலைக்
கைவளர்கொழுந்து மெய்பொடியாகவென்
சிற்றிடைப்பெருமுலைப் பொற்றொடிமடந்தைதன்
கவைஇயகற்பினைக் காட்டுழியிதுவே

கறை - கறுப்பையுடைத்தாகிய—அணல் - கீழ்வாய்ப் புறத்தினையுடைய—புயங்கன் - பாம்பினது—எரிதழல் - எரியுந்தழல் கொல்வதுபோலக்கொல்லும்—விடத்தை - விடத்தை—மலைமறை - மலையின்கண் மறைந்த—அதகம் - மருந்து—மாற்றியவதுபோல் - தீர்த்தசெயல்போல—சிற்றிடை - சிறியவிடையினையும்—பெருமுலை - பெரியமுலையினையும்—பொற்றொடி-பொன்னாற்செய்த தொடியினையுமுடைய—என்மடந்தை - என்மடந்தை—தன்கவைஇய - தன்னிடத்துண்டாகிய—கற்பினை - கற்பானது—ஆறிடைகவர - ஆறலைக்கும்படி—எண்ணாதுகிடைத்த - எண்ணாது கிட்டிய—கொடுமரக்கொலைஞர்-மறவர்—புண்ணெழு - புண்ணுண்டாதற்குக் காரணமாகிய—செருநிலை-வில்லாற்பொரும் போர்நிலையிடத்தில்—கைவளர்கொழுந்து - கைவளர்ந்த தலைப்படையினர்—மெய்பொடியாக - மெய் தூளாக—காட்டுழியிதுவே - காட்டுமிட மிவ்விடம்;

கொல்வதுபோலக் கொல்லுத லுயிர்போமளவுஞ் சென்று கொல்லுதல். இது தொழிலுவமம். தழலாகிய விடமென்னினு மாம். நாறழற் சீற்றத்தனென்றுழிப்போல, அதகம் - மருந்து. செயலையதுவெனச் சுட்டிக்கூறினர். மாற்றியவென்னும் பெயரெச்சம் வினைகொண்டது. கல்வகத்திடுதல் கவைஇயவெனத்தி

ரிக் தெச்சமாய்நின்றது "கழுவிளங்காரங் கலைஇயமார்பென் றாற்போலக கற்பினையென்னு மின்னுமையுமசை" எண்ணுதும தியாது புண்ணெழுதொடு மரமெனககூட்டுக. அது புண்டாங் குவைவேல்போலநின்றது. கைபடை வகுப்பு இருவகைக்கறபி னு ளிவள்கற்புக கந்திருவலழககம்போ லொருதலையாய்க் களவி ன்வழியொழுகுங் கற்பாதலி னககற்பினிறந்து பாடுபெயவாமை யிற் கற்புககாட்டியதென்றாள்.

குரவஞ்சுமந்த குழல்விரித்திருந்து
பாடலம்புனைந்தகற் பதுக்கையிவ்விடனே

குரவஞ்சுமந்த - முற்காலத்துக்கேற்ற குரவமலரினைத் தரித்த—குழல்விரித்திருந்து - குழலை விரித்திருந்து—பாடலம்புனைந்த - இக்காலத்துககேற்ற பாதிரிமலரைப புனைந்தவிடம்—கற்பதுக்கையிவ்விடன் - இககற்பாறையிடம்;

காலந்தோறும் வேறுவேறு பூவணிவரென்க. அது நாள்செய்மாலை நகைமுடிப்பெய்பவே - என்பதனானறிக.

ஒட்டுவிட்டுலறிய பராரைநெட்டாக்கோட்
டுதிர்பறையெருவை யுணவூன்றட்டி
வளைவாய்க்கரும்பருந் திடைபறித்துண்ணக்
கண்டுநின்றுவந்த காட்சியுமிதுவே

ஒட்டுவிட்டுலறிய - யானையுரிஞ்சத்தோ லிடப்புண்டுகாய்ந்த—பராரை - பரியவரையினையுடைய-நெட்டாக்கோட்டிடை - நெடிய வாச்சாவினது கோட்டிடையில்—வளைவாய் - வளைந்தவாயினையுடைய—கரும்பருந்து - கரிய பருந்தானது—உதிர்பறை - உதிராநின்ற சிறையினையுடைய—எருவையுணவு - கழுகினுணவாகிய—ஊன்றட்டி - ஊனை யதுநுகராது தவிர்த்து—பறித்துண்ண - பறித்துண்ண—கண்டுநின்று - பார்த்துநின்று—உவந்தகாட்சியுமிது - மகிழ்ந்தவிடமு மிவ்விடம்;

ஒட்டியிருத்தலாற் றேலை யொட்டென்றார். கெட்டாவென்றார் கப்பின்றியொன்று யோங்கிநிற்றலின் வழுவைபுரிஞ்சி வழன்ற தளர்கோடென்றார் சிற்றசத்தியத்தினும். கண்டது சொல்லியகவியைக் காட்சியென்றாற்போலக் கண்டுநின்றவிடத்தைக் காட்சியென்றார் உம்மை இசைநிறை. * ஆ-ஆச்சாமரம்.

செம்மணிச்சிலம்பு மரகதப்பொருப்புங்
குடுமியந்தழலு மவணிருட்குவையு
முளைவரும்பகனு மதனிடைமேகமுஞ்
சேயிதழ்முளரியுங் காரிதழ்க்குவளையு
மோருழைக்கண்ட வுவகையதென்ன
வெவ்வுயிர்நிறைந்த செவ்விகொண்மேனியி
னண்டப்பெருந்திர ளடைவின்றளித்த
கன்னிகொண்டிருந்த மன்னருட்கடவுள்

செம்மணிச்சிலம்பும்-மாணிக்கவரையையும்—மரகதப்பொருப்பும் - மரகதவரையையும்—உவகை-மகிழ்ச்சியால்—ஒருழைக்கண்டதென்ன - ஓரிடத்திற்கண்ட காட்சிபோலவும்-அம்-அழகிய—குடுமி - சிகையினையுடைய—தழலும் - நெருப்பையும்—இருட்குவையும் - இருட்கூட்டத்தையும்—அவண் - மகிழ்ச்சியாலோரிடத்திற்கண்ட காட்சிபோலவும்—முளைவரும்பகனும் - அறியாமை கெடுதற் கேதுவாகிய வாலாதித்தனையும்—அதனிடைமேகமும் - மேகத்தினையும் மகிழ்ச்சியாலோரிடத்திற்கண்ட காட்சிபோலவும்—சேயிதழ்முளரியும் - செவ்விதழினையுடைய தாமரையையும்—காரிதழ்க்குவளையும் - கரிய விதழினையுடைய நீலோற்பலத்தையும் மகிழ்ச்சியாலோரிடத்திற்கண்ட காட்சிபோலவும்—எவ்வுயிர் - எல்லாவுயிர்க்கண்ணும்—நிறைந்த - நிறைந்த—செவ்விகொள் - செவ்விகொண்ட—மேனியில் - திரு

மேனியில்—அண்டப்பெருந்திரள் - பல்லாயிரகோடி யண்டத்தையும்—அலடவு - முறைமுறையே—ஈனறு - படைத்து—அளித்த - காத்த—கன்னி - உமையை—கொணடிருந்த - இடங்கொண்டு வீற்றிருந்த—மன - நிலைபேற்றையுடைத்தாய—அருள் - அருளினையுடைய—கடவுள் - கடவுள்;

இது நிறவுவமைக்கண்வந்த வபூதவுவமை. என்னவுமென்னு மெண்ணுமமை தொக்குநின்றது. அதனை யெங்குங்கூட்டிக்கொள்க. கணடவதுவெனக்கூட்டுக. அது வினைகொண்டது காட்சியாயிறறு எவ்வுயிாககணறு மென்னு முருபு முற்றும்மையுந்தொககன.

மலையுருகங்கொண்ட வுடல்வாளரக்கர்
வெள்ளமுஞ்சூரும் புள்ளியற்பொருபபு
நெடுங்கடற்கிடஙகு மொருங்குயிர்பருகிய
மணிவேற்குமரன் முதனிலைவாழுங்
குன்றுடுத்தோங்கிய கூடலமபதியோன்
முடலைதரித்த கோளினாபோல
நெடுஞ்சுரநீஙகத்தஙகா
லடுநதழன்மாற்றிய காற்குறியவணே.

மலையுருகங்கொண்ட - நீலமலையுருககொண்டாற்போன்ற—உடல் - மெய்யினையும்—வாள் - வாளினையுமுடைய—அரக்கா வெள்ளமும் - அரக்கர்வெள்ளத்தையும்—சூரும் - சூரனையும்—புள்ளியற்பொருப்பும் - கிரவுஞ்ச கிரியையும்—நெடுங்கடற்கிடங்கும் - ஆழமாகிய நெடியகடலினையும்—ஒருங்குயிர்பருகிய-கூடவுயிாைபபருகிய—மணிவேற்குமரன் - அழகியவேலினையுடைய குமரன்—முதனிலைவாழும் - ஆறுதலத்து முதனிலையாக வாழும்—குன்று - திருப்பரங்குன்றம்—உடுத்தோங்கிய - சூழ்ந்து

யர்ந்த—கூடலம்பதியோன் - மதுரையாகிய வழங்கியதிருப்பதிக்கு நாயகன்—தாள - அவனதிருவடியிலே—தலைதரித்த - சென்னி யிற்றரித்தற்குக் காரணமாகிய—கோளினைப்போல - யோகப்பயி ற்சியுடையாரைப்போல—நெடுஞ்சுரங்கடந்த - நெடிய பாலைநிலத் தைக்கடந்துவென்றி—தங்கால - தமமுடைய காலினை—அறைதழ ல்பாறிய - அறைகழலணிந்தீகிய—கார்க்குறியவனே - கார்க்குறி யையுடையவிட மிவ்விடமாதலா லவர்போயின நெறியிதுவே— என்றவாறு.

கொண்டவுடல் ஒற்றுமையாம்பற்றி நின்றது. உடல்கூற வே மலை நிலமலையாயிற்று. பருகியெனபதனை "உண்டற்குரிய வல்லாப்பொருளை யுண்டனபோலக்கூறலுமரபே", என்பதனான் வெவ்வேறு பொருள்கொள்க. அலைவாய-ஆவினன்குடி-ஏரகம- குன்றுகள-சோலைமலை - ஆகிய வைந்திடத்திற்கும் திருப்பரங்கு ன்றம் முதனிலையாதலின் முதனிலையென்றார். தாடலை தரித்தற் குக்காரணமாகிய கோட்பாடியமரு நலியன குறியாகுபெயர்.

நாட்டிடக்கல்லைக்கண்டு சுற்றியதனாலும், புலிபட்டதனாலு ம்; மறைந்தவேடர பலவடிச்சுவட்டினாலும், குருதியகாயினரடி க்கெதிரின்று விலங்கியதாலும், ஆறலைகள்வர்கொடிப்படை தூ ளானதாலும், பாறையிற்சுழித்த பூவினாலன்றி யணியவுதிராத பூவாலும், சிறையுதிர்த்தாலன்றி யடிபெயர்த்துவைத்ததனாலு ம், காலகுறித்தனாலும் செவிலியிடமறிந்தாளென்க.

விடலைமகிழ்ந்தவிட மிவ்விடங் கடிநரவிடமிது மகிழ்ந்த விடமிந்நிலை யாசீர்வாதஞ் செய்தவிட மிவ்விட மெயதூராசக காட்டியவிடமிவ்விடம் பாதிரிமலரைப் புனைந்தவிட மிககறபாறை யிடம் பார்த்து மகிழ்ந்தவிடமிவ்விடங் கார்க்குறியையுடையவிட மிவ்விடமாதலா லவர்போயினநெறி யிதுவென வினைமுடிவு செய்க. (அ)

## நற்றாய் வருந்தல்.

நற்றாய்வருந்தலென்பது - உடன்போனமையைக்கேட்டு உண்மகிழ்வோடுமின்று ஒரேதிலன்பின்னே தன்றோழியைவிட்டு என்னையு முன்னைத்துறந்து சோராதாரமுன்னே ஊர் அலைந்தாற அருஞ்சுரம்போயினாள் இனி யானெங்ஙனமாற்றுவேனென நற்றாய்ப்பிரிவாற்றாது வருந்தாநிற்றல். அதற்குச்செய்யுள்:—

யாழியன்மென்மொழிவன்மனப்பேதையோ
ரேதிலன்பின், றோழியைநீத்தென்னை முன்னைத்துறந்
துதுன்னார்கண்முன்னே, வாழியிம்மூதூர் மறுக
ச்சென்றாளன்று மால்வணங்க, வாழிதந்தானம்ப
லப்பணியாரி னருஞ்சுரமே. உ௩௰

கோடாய்கூ ற
நீடாய் வாடிய து.

இ-ள். யாழ் - யா (ழோசையி னியல்புபோலும்)—இயல் - இயல்புடைய—மென்மொழி - மெல்லியமொழியையும்—வன்மனம் - வலியமனத்தையுமுடைய—பேதை - பேதையானவள்—ஓரேதிலன்பின - ஒருநொதுமலன்பின்னே—தோழியை - தன்றோழியை—நீத்து - விட்டு—என்னை - என்னை—முன்னை-முற்காலத்தே—துறந்து - நீங்கி—இம்மூதூா - இம்மூதூரிலுள்ளார்—மறுக - கலங்க—துன்னாகண்முன்னே - சேராதார்முன்னே—மால் - திருமால்—வணங்க - வணங்குதலான்—அன்று-அன்று—ஆழி - ஆழியை—தந்தான் - கொடுத்தவனது—அம்பலம் - அம்பலத்தை—பணியாரின் - பணியாதாரைப்போல—அரும் - (செல்லுதற்) கரிய—சுரம் - சுரத்தை—சென்றாள்-சென்

(றடைந்)தாள்—எ-று. இனி யெங்ஙனமாற்றுகேன் - என்பது எஞ்சிநின்றது. நொதுமலன்-அயலோன், சேராதார் - பகைவர.

இற்செறிக்கப்பட்டபின்னர்ப் பராமுகத்தளென்பதனை உடன்போனபின்ன ருணர்ந்தாளாதலின் எனனை முன்னேதுறந்தென்றாள். வாழி-அசைநிலை, மெய்ப்பாடும்பயனும அவை. ௨௩

நேரிசையாசிரியப்பா.

பொடித்தரும்பாதசின் முலைகொடிமடந்தையண்
மணிமிளிர்பெருங்கட் கிமைகாப்பென்ன
விழித்துழிவிழித்து மடங்குழியடங்கிப்புந்
தன்னைநின்றளித்த வென்னையுமொருவுக|
பன்மணிக்கலன்க ளுடற்கழகளித்தெனச்
சுற்றுடுத்தோங்கிய வாயமுந்துறக்குக|
பிணிமுகமஞ்ஞை செருமுகத்தேந்திய
மூவிருதிருமுகத் தொருவேலவற்கு
வானுறநிமிர்ந்த மலைத்தலைமுன்றின்
மணவணிமடந்தை வெறியாட்டாளன்
வேன்மகன்குறத்தி மாமதிமுதியோர்
தொண்டகந்துவைப்ப முருகியங்கறங்க
வொருங்குவந்திமையா வருங்கடன்முற்றிய
பின்னாநின்றேற்றகைத் தாயையும்பிழைக்குக|
கருந்தலைச்சாரிகை செவ்வாய்ப்பசுங்கிளி
தூவியந்தோகைவெள் ளோதிமந்தொடருழை
யிவையுடனின்பமு மொருவழியிழக்குக|
சேயிதழில்வத் துடைகாய்ப்பஞ்சினம்
புகைமுரிந்தெழுந்தென விண்ணகத்தலமாக்
குழைபொடிக்கூவையிற் சிறைச்சிறைதீந்து

பருந்துமாந்தையும் பார்ப்புடன்றவழ,
வுடைகவட்டோமை யுயர்சினையிருக்கும்
வளைகட்கூகை மயங்கிவாய்குழற,
வாசையிற்றணியா வழற்பசிதணிக்கக்
காளிமுன்காவல் காட்டிவைத்தேகுங
குழிகட்கரும்பேய் மகவுகண்முகிழப்ப
வேமுடற்சின்னம் வெள்ளிடைதெறிப்ப;
நெடுந்தாட்குற்றிலை வாகைநெற்றொலிப்பத்,
திசைநின்றொழாது தழன்முகந்தேறிச்
சுடலையிற்சூறை யிடையிடையடிக்கும்
பேரழற்கானினு நாடுமென்னுளத்தினு
மொருபாற்பசுங்கொடி நிறைபாட்டயரப்
பாரிடங்குனிப்ப வாடியபெருமான்
வையகத்துருவினர் மலராவறிவினைப்
புலனிரைமறைத்த புணர்ப்பதுபோலக்
குளிர்கொண்டுறையுந் தெளிநீர்வாவியை
வள்ளைசெங்கமலங் கள்ளவிழாம்பற்
பாசடைமறைக்குங் கூடற்பெருமான்—
செந்தாள்விடுத்துறை யந்தர்கடம்மினு,
மூவாத்தனிநிலைக் கிருவருமோருயி
ரிரண்டெனக்கவைத்தநல் லாண்டருடோழியைச்
செருவிழுமிச்சையர் தமதுடல்பெற்ற
வின்புகணைக்கா வியல்பதுபோல
மருங்குபிணைக்கா தொருங்குவிட்டகலப்,
பொருந்தியதெப்படியுள்ள
மருந்தழற்சரத்தி லொருவனன்பெடுத்தே.

பொடித்தரும்பாத வொருவனன்பெடுத்தே. பகுதி-உடன் போக்கு. துறை - உடன்போனமைகேட் டுண்மகிழ்வோடு நின் றேரோதிலன்பின்னேபோரு ளினியா னெங்ஙன மாற்றுவேனெ னப் பிரிவாற்றாது நற்றாய்வருந்தல்.

மணிமிளிர்பெருங்கட் கிமைகாப்பென்ன

(இதனதுபதப்பொருள்.)

இமை - இமையானது—மணிமிளிர்-(விழித்தவிடத்தில் விழித்தும் விழியாதடங்கினவிடத்தி லடங்கியு)மணிவிளங்கும்—பெருங்கட்கு - பெரியகண்ணை—காப்பென்ன - காத்தாற்போல; காப்பு பெயர்ச்சிவிளங்காதுநின்ற தொழிற்பெயர். கண்கட்கு உருபுமயக்கம.

பொடித்தரும்பாதசின் முலைக்கொடிமடந்தையள்
விழித்துழிவிழித்து மடங்குழியடங்கியுந்
தன்னைநின்றளித்த வென்னையுமொருவுக

பொடித்தரும்பாத - தோன்றி வெளிப்படாத—சின்முலைக்கொடி - முலையினையுடைய கொடிபோலுஞ் சிறிய—மடந்தையள் - மடந்தை—விழித்துழிவிழித்தும் - விழித்தவிடத்தில் விழித்தும்—அடங்குழியடங்கியும் - துயின்றவிடத்திற் றுயின்றும்—தனனை - தன்னை—நின்று - நீங்காதுநின்று—அளித்த - காத்த—என்னையும் - என்னையும்—ஒருவுக - நீங்குவாளாக; பொருளமைட யுவமைகருங்கொள்க. உம்மை-சிறப்பும்மை. இது ஒருவயிறபோலியுவமை.

பன்மணிக்கலன்க ளுடற்கழகளித்தெனச்
சுற்றுடுத்தோங்கிய வாயமுந்துறக்குக

உடல் - உடலானது—பன்மணிக்கலன்கள் - (பக்கஞ்சூழ்ந் துமேம்பட்ட)பலமணிகளையுடையஆபரணங்களுக்கு—அழகளி

த்தென - அழகளித்தாற்போலத் தானுநீங்கா தழகளித்தலின்றி—சுற்றுடுத்து - பக்கஞ்சூழ்ந்து—ஓங்கிய - மேம்பட்ட—ஆயமும் - ஆயவெள்ளத்தையும்—துறக்குக - நீங்குவாளாக;

உம்மை-சிறப்பும்மை. உவமை யடையைப்பொருளுக்கும் பொருளடையை யுவமைக்குங்கொள்க. இது உவமைத்தோற்றத்தினவகை.

பிணிமுகமஞ்ஞை செருமுகத்தேந்திய
மூவிருதிருமுகத் தொருவேல்வற்கு
வானுறநிமிர்ந்த மலைத்தலைமுன்றின
மணவணிமடந்தை வெறியாட்டாளன்
வேன்மகனகுறத்தி மாமதிமுதியோர்
தொண்டகந்துவைப்ப முருகியங்கறங்க
வொருங்குவந்திமையா வருங்கடன்முற்றிய
பின்னாகின்றேற்றகைத் தாயையும்பிழைக்குக

பிணிமுகம்-பிணிமுகமென்னும்யானையினையும்—மஞ்ஞை-மயிலினையும—மூவிருதிருமுகத்து - ஆறுமுகத்தினையும்—செருமுகத்தேந்திய - போர்முகத்தெடுத்த—ஒருவேலவற்கு-ஒப்பற்ற வேலினையுமுடைய குமாரனுக்கு—வானுறநிமிர்ந்த - வானளவுமுயர்ந்த—மலைத்தலைமுன்றில் - மலைத்தலையாகிய முற்றத்தின்கண்—மணவணிமடந்தை - மணத்தையணிந்த மடந்தையும்—வெறியாட்டாளன் - தெய்வமேறி யாடுமவனும்—வேன்மகன் - வேலனும்—குறத்தி - கட்டுவிச்சியும்—மாமதிமுதியோர் - மிகுந்தமதியினையுடைய முதுபெண்டிரும்—தொண்டகந்துவைப்ப-முரசுமுழங்க—முருகியங்கறங்க - வெறியாட்டுப்பறை முழங்க—ஒருங்குவந்து - சேரக்கூடி—இமையாவருங்கடன் - மறியறுத்தன்முதலிய சருங்காத பூசை—முற்றியபின்னர் - முடித்த

பின்னர்—நின்றேற்ற - நின்றேற்ற—கைத்தாயையும் - செவிலித்தாயையும்—பிழைக்குக - தப்புவாளாக;

பிணிமுகம் முருகற்குரித்தாகிய யானை. "சேயுயர்பிணிமுகமூர்ந்த,,வென்று பரிபாடலினும், "ஓடாப்பூட்கைபபிணிமுகம் வாழ்த்தி,, யெனறு திருமுருகாற்றுபபடையினுங் கூறினார். பிணிமுகமாகிய மயிலெனினுமாம். "வாணுதருன்முருகு மெய்ந்நிறீஇ,, யென்றார் வெண்பாமாலையினும், பின்னரிற் பெற்றவென்றும்பாடம். உம்மை-சிறப்பும்மை.

கருந்தலைச்சாரிகை செவ்வாய்பபசுங்கிளி
தூவியநதோகைவெள் ளோதிமந்தொடருழை
யிவையுடனினபமு மொருவழியிழககுக

கருந்தலை - கரிய தலையினையுடைய—சாரிகை - நாகணவாய்ப்புள்ளும்—செவ்வாய் - சிவந்த வாயினையுடைய—பசுங்கிளி-பசியகிளியும்—அம் - அழகிய—தூவி-தூவியினையுடைய—தோகை-மயிலும்—வெள்ளோதிமம் - வெள்ளையன்னமும்—உழைமானுமாகிய—இவையுடன்தொடர் - இவற்றுடனுண்டாகிய—இன்பமும்-இன்பமும்—ஒருவழியிழககுக-ஒருவழியிறபபாளாக தொடரின்பமென்க. உம்மை - சிறப்பும்மை, எண்ணும்மைதொக்கன. தூவி-சூட்டு, "தூவிமஞ்ஞைநன் மணம்புகுத்து,, மென்றார் சிந்தாமணியினும்.

சேயிதழிலவத் துடைகாய்ப்பஞ்சினம்
புகைமூரிந்தெழுந்தென விண்ணத்தலமர

சேயிதழ் - சிவந்த பூவினையுடைய—இலவத்து - இலவமரத்தின்கண்—உடைகாய் - உடைந்தகாயினுள்—பஞ்சினம் - பஞ்சியானது—புகைமூரிந்தெழுந்தென - தழலின்கணுண்டாகிய புகையுடைந்தெழுந்தாற்போல—விண்ணத்து - ஆகாசத்தில்—அலமர - சுழல;

குழைபொடிகூவையிற் சிறைசிறைநீந்த
பருந்துமாந்தையும பார்ப்புடன்றவழ

குழைபொடி - இலைகரிந்த—கூவையின்சிறை - கூவையின் பக்கத்தில்—சிறைநீந்த - சிறகுகள்கரிந்த—பருந்தும் - பருந்தும்—ஆர்ந்தையும் - ஆர்ந்தையும்—பாரப்புடன்றவழ - தத்தம் பார்ப்புடன்றவழ;

நீந்தனவெனிற் நீந்தனவாகிய பருந்துமாந்தையு மென்க.

உடைகவட்டோமை யுயாசினையிருக்கும்
வளைகட்கூகை மயங்கிவாய்குழற

உடைகவட்டு - பிளந்த கவட்டினையுடைய—ஓமை - ஓமை மரத்தின்—உயாசினையிருக்கும - உயர்ந்த கோட்டிலிருக்கும்—வளைகட்கூகை - வளைந்த கண்ணினையுடைய கூகையும்—மயங்கி - மனமயங்கி—வாயகுழற - கூப்பிட; உம்மை யிறந்தது தழீஇய வெச்சவும்மை. உயர்சினையென்றும்பாடம்.

ஆசையிற்றணியா வழற்பசிதணிக்கக்
காளிமுன்காவல் காட்டிவைத்தேகுங்
குழிகட்கரும்பேய் மகவுகண்முகிழ்ப்ப
வேமுடற்சின்னம் வெள்ளிடைதெறிப்ப

ஆசையில - ஆசைபோல—தணியா - தணியாத—அழற்பசிதணிக்க - பசியாகிய தழலைதணிக்கும்படி—காளிமுன் - காளிமுன்—காவல்காட்டிவைத்து - காவலாகக் காட்டிவைத்து—ஏகும் - போகின்ற—குழிகண் - குழிந்த கண்ணினையுடைய—கரும்பேய் - கொடிய பேயினுடைய—மகவு - பிள்ளைகள்—கண்முகிழ்ப்ப - கண்ணைமூடும்படி—வேமுடற்சின்னம் - வேகாநின்ற பிணத்தினுடற்சின்னங்கள்—வெள்ளிடைதெறிப்ப - வெளியாமிடத்திற் றெறிப்ப;

நெடுந்தாட்குற்றிலை வாகைநெற்றொலிப்ப.

நெடுந்தாள் - நெடிய தாளினையும்—குற்றிலை-குறிய விலை
யினையுமுடைய—வாகை - வாகையினுடைய—நெற்றொலிப்ப -
நெற்றுகளொலிப்ப; வாகை-காட்டுவாகையெனவழங்கப்படும்.

திசைநின்றெழாது தழன்முகந்தேறிச்
சுடலையிற்சூறை யிடையிடையடிக்கும்
பேரழற்கானினு நாடுமென்னுளத்தினும்
மொருபாற்பசுங்கொடி நிறைபாட்டயரப்
பாரிடங்குனிப்ப வாடியபெருமான்

சுடலையில் - இடுகாட்டில்—சூறை - சுழல்காற்று—திசை
நின்றெழாது - திசைகளினின்றெழாமல்—தழன்முகந்து - அக
்கினியை மொண்டுகொண்டு—ஏறி - உயர்ந்து—இடையிடைய
டிக்கும் - விட்டுவிட்டுச் சுழலும்—பேரழற்கானினும் - பெரிய
வழற்காட்டினும்—நாடும் - தனைக்கருதும்—என்னுளத்தினு
ம் - என்னுள்ளத்தினும்—ஒருபால் - இடப்பாகத்திலிருக்கும்—
பசுங்கொடி - பசியகொடிபோல்வாள்—நிறைபாட்டயர - ஆட
ற்கேற்ற வெண்டுறைப்பாட்டைப் பாட—பாரிடங்குனிப்ப-பூத
ங்களாட—ஆடியபெருமான் - நடித்தபெருமான்;

செயவெனெச்ச வடுக்கடிக்குமென்னும் பெயரெச்சங்கொண்
டது, நிலப்பெயர்கொண்டது. முகந்தெறிப்பவென்றும்பாடம்.

வையகத்துருவினர் மலராவறிவினைப்
புலனிரைமறைத்த புணர்ப்பதுபோலக்
குளிர்கொண்டுறையுந் தெளிநீர்வாவியை
வள்ளைசெங்கமலங் கள்ளவிழாம்பற்
பாசடைமறைக்குங் கூடற்பெருமான்

வையகத்துருவினர் - பூமியிடத்துப்பிறக்குமறிவினையுடை
யார்—மலராவறிவினை - கல்விகேள்விகளின் மலர்ச்சியுறாவின்ற

வறிவினை—புலனினைமறைத்த - பஞ்சவிடயங்கள் வெளிப்படா தமறைத்த—புணர்பபதுபோல - புணர்ச்சிபோல—வாவி-வாவியில்—குளிர்கொண்டு - குளிர்ச்சிகொண்டு—உறையும்-உறையும்—தெளிநீரை - தெளிந்தநீரை—வள்ளை - வள்ளைக் கொடியும—செங்கமலம - சிவந்ததாமரையும்—கள்ளவிழ் - மதுவிரியாநின்ற—ஆம்பல் - ஆம்பலும்—பாசடை - இவற்றின் பசியவிலையும்—மறைக்கும் - தெரியாது மறைக்கும்—கூடற்பெருமான் - கூடலையுடைய பெருமானுடைய;

மலர்-வினைமாத்திரையாய்நின்றது ஆவறிவு - வினைத்தொகை. மறைக்குங்கூடல் - நிலப்பெயர்கொண்டது.

செந்தாள் - எடுத்தே, இது ஒருதொடர்.

செந்தாள்விடுத்துறை யந்தர்கடமமினும்

செந்தாள்விடுத்து - சிவந்த தாளைவிட்டு—உறை - உறையாநின்ற—அந்தர்கடமமினும் - அறிவில்லாதம்மினும்;

இன்-நீக்கம், கள்-அசை, பெருமானுடைய தாள்.

மூவாத்தனிநிலைக் கிருவருமோருயி
ரிரண்டெனக்கவைத்தநல் லாணடருடோழியை

மூவா - கருமத்தி லிருவரு மொருவாக்கொருவர் மூந்தாத—தனிநிலைக்கு - ஒப்பற்ற நிலையால்—இருவரும் - இருவருமிரும்—ஒருயிரிரண்டென - ஒருயிரொன்றும்படி யுடலிரண்டாக—கவைத்த - பெற்றதனுல்வந்த—நல்லாண்டருள் - நல்ல காவல் செய்த—தோழியை - தோழியையும்;

தனிநிலைக்கு உருபுமயக்கம். சிறப்பும்மை தொக்கது. தாழமோருயிராயினும் இற்செறிக்கப்பட்டபின்னர் பராமுகத்தாளாதலின் நற்றாய்முதலியோரை முன்னேதுறந்தமையின் தோழியையும் பின்னேவிட் டகலவென்றாள். உம்மை-சிறப்பும்மை. அரண்டருதோழியையென்றும் பாடம்.

செருவிழுமிச்சையர் தமதுடல்பெற்ற
வின்புகணோக்கா வியல்பதுபோல

செருவிழுமிச்சையா - ரணகளத்திலேறுதற்குக் காரணமா கிய வன்பினா—தமதுடல்பெற்ற - தம்முடைய வுடல்பெற்றத னால்வந்த—இன்புகள - இன்பங்களை—நோக்கா - நோக்காத— இயல்பதுபோல - இயல்புபோல;

ரணகளத்தி லேறுதற்குக் காரணமாகிய வன்பினர் தம் முடைய வுடல்பெற்றதனால்வந்த வின்பங்களைநோக்காத வியல் புபோலவெனக. உடல்பெற்றவின்பம - மக்கண்மெய்தீண்டன் முதலிய வின்பம்.

மருங்குபின்னோக்கா தொருங்குவிட்டு

மருங்குநோக்காது - பக்கம்பாராது—ஒருங்கு - எங்களோ டுகூட—பினவிட்டு - பின்விட்டு;

ஒருவனன்பெடுத்தே.

ஒருவனன்பெடுத்து - ஒரேதிலனன்பை மேற்கொண்டு;

அகலப்
பொருந்தியதெப்படியுள்ள
மருந்தழற்சுரத்தில்

அரும் - செல்தற்கரிய—தழற்சுரத்தில் - தழற்பாலையில்— அகல - செல்ல—உள்ளம்பொருந்தியது-மனம்பொருந்தியது— எப்படி - எப்படி (யினியெங்ஙனமாற்றுவன்)—எ-று.

போலவகலவென வினையும்.

மடந்தையென்னையுநீங்குவாளாக வதுவன்றி யாயத்தையு நீங்குவாளாக வதுவன்றிச் செவிலியையுந் தப்புவாளாக வதுவ ன்றிப் பூவைமுதலிய வாறுடனுண்டாகிய வின்பமு மொருவழி

பிழப்பாளாக வருவன்றித் தோழியையும்விட்டொருவனன்பை மேற்கொண்டு பாலையிறசெலல மனமபொருநதியதெப்படி யினி யெங்ஙனமாற்றுவேனென வினைமுடிவுசெய்க. (௬)

## செலவுநினைந் துரைத்தல்.

செலவுநினைந் துரைத்தலென்பது - வரைவுடம்படாமையிற் றோழி தலைமகளோடு புலந்துகூறககேட்டு அககுறிபபறிந்து இக கலைநரின்க ணீரவந்தவா றென்னோவென்று வினவுவாளைப்பெ ற்றேமாயின, இத்தனமையையுடைத்தாகிய மிககவிருளின்கண் யாமவருமழைச சேறலரிதன்று. சென்றேமாயினும் அவ்வாறு சொல்லுவாரில்லையெனத் தலைமகள் செலவுநினைந்து கூறாநிற் றல. அதற்குச்செய்யுள்:—

வெல்சியினெண்கு வளர்புற்றகழமல் கும்மிருள் வாய்ச், செல்வரிதன் றுமன் சிறறம்பலவரைச் சே ரலாபோற், கொல்கரிசீயங்குறுகாவகைபிடி தானி டைச்செல், கல்லதரொன்வந்த வாறென்பவர்ப்பெ றிற் கார்மயிலே. உ௬௪

பாங்கிநெருங்கப் பணிமொழிமொழிந் து
தேங்கமழ்சிலம்பற்குச் சிறைப்புறக்கிள வி.

இ-ள். கார்மயிலே - கார்காலத்து மயிலையொப்பாய்—சிற் றம்பலவரை - சிற்றமபலவரை—சேரலர்போல் - சேராதாரைப் போலவருந்த—சியம் - சிங்கமானது—கொல்கரியை - கொலைக் கரியை—குறுகாவகை - சென்றணையாத வண்ணம்—பிடி - பெ ண்யானை—தான் - தான்—இடை - இரண்டற்கு மிடையே—

செல் - சென்றுபுகும்—கல் - கற்கள்நிறைந்த—அதர் - வழியில்—வந்தவாறு - நீர்வந்தவாறு—என் - எங்ஙனே—என்பவர்-என்றுசொல்லுவாரை—பெறின் - பெற்றேமாயின்—வல்சியின் - (குரும்பியாகிய) வுணவு (காரணமாக)—எண்கு-கரடி—வளர் - வளர்ந்துயர்ந்த—புற்று - புற்றை—அகழ - அகழாநிற்ப—மிகும் - மிகாநின்ற—இருள்வாய் - இருளின்கண்—செல்வு - அவரிருந்த வழிச்சேறல்—அரிதன்று - அரிதன்று—எ-று. செல்வேமாயினு மவ்வாறு சொல்லுவாரில்லையெனப நெஞ்சிசின்றது.

செல்வரிதென்பது - செல்வழிக்க ணென்பதுபோல மெய்யீற்றுடம்படுமெய். செல்லவென்பது - கடைக்குறைந்து நின்றதெனினு மமையும். மன் - ஒழியிசைக்கண்வந்தது. கல்லதா - கற்கண்ணதா. கல்லதரினென்பது பாடமாயின் வந்தவாறென்னென ஒருசொல் வருவித்துரைக்க. பணிமொழிமொழிந்தெனபதனை மொழியவெனத்திரித்து சிறைப்புறக்கிளவியாயிற்றென வொருசொல் வருவித்துரைக்க. சிறைப்புறக்கிளவி யாயிற்றெனவே - சிறைப்புறமாதல் குறித்தாளல்லளென்பது பெற்றாம். இவையிரண்டற்கும் மெய்ப்பாடு அழுகையைச்சார்ந்த விளிவரல் பயன் அது. (உகூச)

நேரிசையாசிரியப்பா.

உயிர்புகுஞ்சட்டக முழிதொறுமுழிதொறும்
பழவினைபுகுந்த பாடகம்போல
முதிர்புயல்குளிறு மெழுமலைபுக்க
கட்டுடைச்சூருடல் காமங்கொண்டு
பற்றியுட்புகுந்து பசுங்கடல்கண்டு
மாவொடுங்கொன்ற மணிநெடுந்திருவேற்

சேவலங்கொடியோன் காவல்கொண்டிருந்த
குன்றமுடுத்த கூடலம்பதியிறை
தொடாந்துயிர்வவ்விய விடங்கெழுமிடற்றோன்
புன்னரியந்தழைத்த முன்னோர்நாளி
லிருவிரணிமிர்த்துப் புரிவொடுசேர்த்துக்
குழைபுடற்றலைவிரி கைத்திரிகறங்க
வொருவிரற்றெறித்து மைவிரற்குவித்தும்
பெருவாயொருமுகப் படகம்பெருக்கத்
தடாவுடலும்பர்த் தலைபெறுமுழவ
நான்முகந்தட்டி நடுமுகமூரப்ப
வொருவாய்திறந்துட் கடிப்புடல்விசித்த
சல்லரியங்கைத் தலைவிரறருக்கக்
கயந்தலையடியெனக் கயிறமைகைத்திரி
யிருவிரலுயர்த்திச் செருகிலையிரட்ட
விருதலைகுவிந்த நெட்டுடற்றண்ணுமை
யொருமுகந்தாழ்த்தி யிருகடிப்பொலிப்பத்
திருமலவொழுகிய வளையிருபத்தைக்
தங்குயிரண்டிரண் டணைத்துவிளர்நிறீஇ
மும்முகக்கயலுடன் மயிர்க்கயிறுவிசித்த
கல்லவடத்திரள் விரற்றலைகறங்க
மரக்காலன்ன வொருவாய்க்கோதை
முகத்தினுந்தட்ட மூக்கினுந்தாக்க
நாடிருமுனிவாக் காடியபெருமான்
றிருவடிவினவாக் கருவுறைமாக்க
ளைஞ்சினுங்கடந்து நீண்டவல்விரவிற்
செல்வவுமுதியக் தோழிநில்லா

தெம்மெதிர்ப்பின்றி யிருந்தெதிர்ப்பட்டு
மறைவழியொழுகா மன்னவன்வாழும்
பழிநாட்டார்ந்த பாவம்போலச்
சேரமறைந்த கூரிருணடுநா
ளிரிதிற்போந்தனிமொன்றோர்
பெரிதின்வாய்மை வெற்பனிற்பெறுமே.

—*—

உயிர்புகுஞ்சட்டக முழிதொறுமுழிதொறும்
பழவினைபுகுந்த பாடகப்போல
முதிர்புயல்குளிறு மெழுமலைபுக்க
கட்டுடைச்சூருடல் காமங்கொண்டு
பற்றியுட்புகுந்து

(இதனதுபதப்பொருள்.)

உயிர்புகும் - உயிர் பொருந்துதற்கிடமாகிய—சட்டகமுழி தொறுமுழிதொறும் - உடம்பிடந்தோறுமுடம்பிடந்தோறும்— பாடகப்போல - இடைவிடாது காலைப பாடகஞ்சூழ்ந்து கிடந் தாற்போல—பழவினைபுகுந்த - சூழ்ந்துகிடந்த பழவினைகொல் லும் விருப்பங்கொண்டு தொடர்ந்துட்புகுந்தாற்போல—முதிர்- சூன்முதிர்ந்த—புயல் - மேகம்—குளிறும் - முழங்காநின்ற— எழுமலை - ஏழுமலையினும்—புக்க - புகுதற்குக் காரணமாய— கட்டுடை - கட்டினையுடைய—சூருடல் - சூரபன்மா வுடலை— காமங்கொண்டு - கொல்லும்விருப்பங்கொண்டு—பற்றியுட்புகு ந்து - தொடர்ந்துட்புகுந்து;

பழவினைபுகுதற்குக் காரணமாகிய விடத்தினையுடைய நெ ஞ்சம்புகுந்தாற்போல வெளியுவமமாம். பொருளடையை யுவமை க்குங்கொள்க. எழுவகைப்பிறப்பிற் பலவகையுடம்பினைக் கூறு

வார். உழிதொறுமுழிதொறுமென்றார். "பாடகம்போலச்சூழ்ந்த பழவினை" யென்றார் சிந்தாமணியினும். சட்டு - கற்பித்தல், அது சுப்பிரமணியனைக்குச் சத்துருவாய்வருகவென்று கற்பித்தல். அதினைமுசமு மக்கள்வடிவுமாகக் கற்பித்தலுடைய சூரனெனினுமாம். வண்டூதுமென்று மருதக்கலியுள் இரணியக் கேற்ற வொடியாப்பருவத்துச் சூர்கொன்ற வேலோனென்றார்.

பசுங்கடல் கண்டு
மாவொடுங்கொன்ற மணிநெடுந்திருவேற்
சேவலங்கொடியோன்

பசுங்கடலகங்கண்டு - மலைகளின்கண்ணது பசிய கடலிடத்துக் கண்டு—மாவொடுங்கொன்ற - அவன் மறைதற்கிடமாகிய மாவொடுங்கொன்ற—மணி - வீரமணிகட்டிய—நெடும் - நெடிதாகிய—திருவேல் - அழகியவேலினையும்—சேவலங்கொடியோன் - கோழிக்கொடியினையுமுடையோன்;

மாவானதன்றிச் சூருடைமாமுதல் தடிந்தவெனச் சூரனுக் காகக்கூறினார் புறத்தினும். உம்மை - இசைநிறை. என்னவாட்டமுமின்றிச்சென் றெய்தினானொன்றாற்போல - ஒடுவையுமும்மையு மசைநிலையாக்கி மாவாகநிற்கக்கண்டு கொன்றவெனினுமாம். உரன்மாகொன்ற வென்றாற்போல சூரனென்னும்பெயரொப்புமைபற்றிக் கொன்றவென்றார்.

காவல்கொண்டிருந்த
குன்றமுடுத்த கூடலம்பதியிறை
தொடர்ந்துயிர்வவ்விய விடங்கெழுமிடற்றோன்

காவல்கொண்டிருந்த - காப்பாகக்கொண்டு வீற்றிருந்த—குன்றமுடுத்த - திருப்பரங்குன்றஞ்சூழ்ந்த—கூடலம்பதியிறை - அழகிய கூடற்பதியில் வாழும் இறையானவன்—தொடர்ந்துயிர்

வவ்விய-உயிர்களைத்தொடர்ந்து கைக்கொள்ளும்—விடங்கெழு மிடற்றோன் - விடத்தினையுடைய மிடற்றினையுடையோனை;

அம் - சாரியையுமாம். விளைவுபற்றி வெளவியவென விறந் தகாலத்தாற்கூறினார். கெழு - சாரியை, யாழ்கெழுமணிமிடற் றென்றாற்போலவும், வயங்கெழுபுகழோனை வறப்புறுத்தியதென் றாற்போலவும், புரத்திறந்திறந்த சிரங்கெழுகொடியுமவ் வேறொ ன்றாற்போல விடம்பொருந்திய வெனினுமாம். பதியுரையென் றுபாடமாயி னுரைமிடற்றோனெனக் கூட்டுக.

புண்ணியந் தழைத்த முன்னோர் ஞானி
இருவிரனிமிர்த்துப் புரியொடு சேர்த்துக்
குழையுடற் றலைவிரி கைத்திரி கறங்க

முன் - பண்டு—புண்ணியம் - சிவபுண்ணியம்—தழைந் த - தழைத்ததனால்வந்த—ஞானில - பூசகனில—இருவிரல்- பெருமையையுடைத்தாகிய விரலினை—புரியொடுநிமிர்த்து-தொ ழிலொடுநிமிர்த்து—சேர்த்து - சேர்த்தி—குழை - குழையாகின் ற—உடல் - உடலினையும்—தலைவிரி - பரந்ததலையினையுமுடை ய—கைத்திரி - இடக்கை—கறங்க - முழங்காநிற்ப;

முன்னோர்மந்திரி - அது ஒருவரைக்கூறும்பன்மைக்கிளவி. மந்திரிநாளெனவே வியாழநாளாய்ப் பூசமாயிற்று. கையினாற்றி ரித்தலையாற் கைத்திரியென்று இடக்கைக்குப்பெயராயிற்று.

ஒருவிரற்றெறித்து மைவிரற்குவித்தும்
பெருவாயொருமுகப் படகம்பெருக்க

பெருவாய் - பரந்தவாயினையும்—ஒருமுகம் - ஒருமுகத்தி னையுமுடைய—படகம் - படகமென்னும் வாச்சியம்—ஒருவிரற் றெறித்து - தன்னிடத் தொருவிரலைக்கொண்டு தெறித்தலானு

ளும்—ஐவிரற்குவித்தும் - ஐவிரலைக் குவித்ததனாலும்—பெரு க்க - ஓசையைப் பெருக்கப்பண்ண;

தெறித்துங் குவித்துமென்றன வேறுப்பொருட்டாயின.

தடாவுடலும்பாத் தலைபெறுமுழவ
நான்முகநட்டி நமுகமுரப்ப

தடாவுடலும்பா - பெரியவுடலின்மேல்—தலைபெறும் - தலைபெற்ற—முழவம் - முழவமென்னும் வாச்சியம்—நான்முகம் - நான்குமுகமும்—நமுகம் - நமுகமும்—நட்டி - நட்டுதலால்—உரப்ப - ஒலியைப்பண்ணுவிப்ப;

தடாவென உரிச்சொல் ஈறுதிரிந்துநின்றது.

ஒருவாய்திறந்துட் கடிப்புடல்விசித்த
சல்லரியங்கைத் தலைவிரனருக்க

ஒருவாய்திறந்து - ஓரிடத்தைத்திறந்து—உட்கடிப்புடல் விசித்த - குமிழினையுள்ளேகட்டிய வுடலினையுடைய—சல்லரி - சல்லரியென்னும் வாச்சியம்—அங்கை - அங்கையினாலும்—தலை விரல் - நுனிவிரலாலும்—நருக்க - நருக்குதலான முழங்காநிற்ப;

கயந்தலையடியெனக் கயிறமைகைத்திரி
யிருவிரலுயர்த்திச் செருநிலையிரட்ட

கயந்தலையடியென - யானைக்கன்றினடிபோல—கயிறமை - கயிறுபொருந்திய—கைத்திரி - துடியென்னும் வாச்சியம்—இரு விரல் - இருவிரல்—செருநிலை - செருநிலை—உயர்த்தி - கையை யுயர்த்தி—இரட்ட - இரட்டாநிற்ப;

கையினாற்றிரித்தலையாற் கைத்திரியாயிற்று.

இருதலைகுவிந்த நெட்டுடற்றண்ணுமை
யொருமுகந்தாழ்த்தி யிருகடிப்பொலிப்ப

இருதலைகுவித்த - இரண்டுதலையுஞ் சுருங்கிய — கொட்டேல் - கொடியவுடலினையுடைய — தண்ணுமை - தண்ணுமையென்னும் வாச்சியம் — ஒருமுகந்தாழ்த்தி - ஒருமுகத்தினைத் தாழ்த்த — இருகடிப்பொலிப்ப - மற்றொருமுகத்தில் இரண்டுகடிப்பினு லொலிப்பப்பண்ணுகிற;

திருமலொழுகிய வளையிருபத்தைந்
தங்குலியிரண்டிரண் டிணைத்துவிளாசிநீஇ
மும்முகக்கயலுடன் மயிர்க்கயிறுவிசித்த
கல்லவடத்திரள் விரற்றலைகறங்க

திருமலொழுகிய - தாமரைவடிவாக வெழுதிய — வளையிருபத்தைந்து - இருபத்தைந்துவளையில் — அங்குலியிரண்டிரண்டிணைத்து - இரண்டிரண்டு விரலாக வளைத்து — விளாசிநீஇ - நிறுத்தி — மும்முகக்கயலுடன் - மும்முகக்கயலுடன் — மயிர்க்கயிறுவிசித்த - மயிர்க்கயிறுகட்டிய — கல்லவடத்திரள் - கல்லவடத்திரளென்னும் வாச்சியம் — விரற்றலைகறங்க - விரற்றலையி னொன் முழங்க;

மரக்காலன்ன வொருவாய்க்கோதை
முகத்திருந்தட்ட முகவிணுந்தாக்க

மரக்காலன்ன - மரக்கால்போன்ற — ஒருவாய்க்கோதை - ஒருவாய்க்கோதை — முகத்திருந்தட்ட - முகத்திருந்தட்ட — முகவிணுந்தாக்க - முகவிணுந்தாக்க,

காடிருமுனிவர்க் காடியபெருமான்

காடு - அருகாகின்ற — இருமுனிவர்க்கு - பதஞ்சலி வியாக்கிரபாதரென்னு மிருமுனிவர்கட்கு — ஆடியபெருமான் - திருநடனஞ்செய்த பெருமான்;

செயவெனெச்சவடுக்கு ஆடியவென்னும் பெயரெச்சங்கொண்டன. நான்கனுருபு அதற்கு வினையுடைமைப் பாற்பட்டது. பூசநாளிற் றிருநடனஞ்செய்த பெருமானெனக்கூட்டுக.

திருவடிவினவாக கருவுறைமாக்க
ணெஞ்சிறுங்கடந்து நீண்டவல்விரவிற்
றோழி

திருவடிவினவா - திருவடியினை நினையாமையால் வந்த—கருவுறையாககள் - கருவினையுடைய மாக்கள—நெஞ்சினுங்கடந்து - நெஞ்சிருளினுங்கடந்து—நீண்டவல்லிரவில் - நீட்டித்தவலிய விரவின்கட்டதது—தோழி - தோழி;

எம்மெதிரபயின்றி யிருந்தெதிர்ப்பட்டு

எம் - எம்மை—எதிரபயின்றி - எதிர்தலின்றி—இருந்தெதிர்ப்பட்டு - எதிரபடடிருந்து;

அரிதிறபோந்தவிரொன்றோர்
பெரிதின்வாய்மை வெற்பனிறபெறிலே.

அரிதில - நீரரிதாக—போநதவிரொன்று - வந்திரொன்று—பெரிதின் - பெரிதாக—ஓர்.- ஓர்—இன் - இனிய—வாய்மை-வார்த்தை—வெறபனில்-வெறபனால்—பெறிலே- பெற்றேமாயின;

மறைவழிவொழுகா மன்னவன்வாழும்
பதிநாட்டார்ந்த பாவம்போலச்
சேரமறைத்த கூரிருணடுநாள்

மறைவழி - மறையின்வழி—ஒழுகா - ஒழுகாத—மன்னவன் - வேந்தன்—வாழும் - வாழும்—நாட்டு - நாடு—பழியார்த்த - பழியடர்த்ததனால் வந்த—பாவம் - பாவம்—சேரமறைத்த போல—வவ்வழியை மறைத்தாற்போல் வெல்லாப்பொருளையும.

றைத்த—கூரிருணடுநாள் - மிகுந்த விருளையுடைய விடையா மத்தில்;

நில்லாது செல்லவுமுரியம்

நில்லாது - யாம் கணப்பொழுதுந் தரியாது—செல்லவுமுரியம் - செல்லவுமுரியமே—எ-று.

உம்மை-சிறப்பும்மை. (௩0)

---

## அறந்தொடுநிற்றல்.

அறத்தொடுநிற்றலென்பது - அறத்தொடுநிற்பாளாக முன்றேற்றுவாய்செய்து எம்பெருமாற்குப் பழிவருங்கொல்லோவென்னு மையந்தோடுநின்று யாமுன்பொருநாள் கடற்கரையிடத்தே வண்டல்செய்து விளையாடாநின்றேமாக, அந்நேரத்தொருதோன்றல் நும்வண்டன்மனைக்கு யாம விருந்தென்றுவந்துநின்றபொழுது நீயுங்கொய்யச் சிறிதுபுடைபெயர்ந்தாய் அந்நிலைமைக்கட் கீழ்க்காற்றுமிகுதலாற் கரைமேலேறுங்கடல் மேல்வந்துற்றது. உறயான் றோழியோ தோழியோவென்று நின்னை விளித்தேன், அதுகண்டாங்கு அவனருளொடுவந்து தனகையைத்தந்தான, யானு மயக்கத்தாலே யன்னை நினைக்கையென்று தொட்டேன், அவனும் பிறிதொன்றுஞ் சிந்தியாது என்னுயிர் கொண்டுதந்து என்னைக் கரைக்கணுய்த்துப்போயினன். அவ்வாறு என்றுணிறால் நினக்கதனைச்சொல்ல மாட்டிற்றிலனை, இன்றிவ்வாறாயினமையின் இதுகூறினேன். இனி நினக்கடுப்பது செய்வாயாகவெனத் தோழிக்குத் தலைமகள் அறத்தொடுநில்லாநிற்றல். அதற்குச்செய்யுள்:—

வண்டலுற்றேமெங்கண் வந்தொருதோன்றல்
வரிவளையீ, ருண்டலுற்றேமென்று நின்றதொர்

*போழ்துடையான்புலியூர்க், கொண்டலூற்றேறுங்
கடல்வரவெம்முயிர் கொண்டுதந்து, கண்டலூற்
றேர்நின்ற சேரிச்சென்றானோர் கழலவனே. உகூ௰

செய்தவெறியி னெய்துவதறியா து
திறத்தொடித்தோழி கறத்தொடுகின்றது.

இ-ள். வண்டலூற்றேம் - விளையாட்டைப் பொருந்தினேமாகிய—எங்கண் - எம்மிடத்து—ஒருதோன்றல - ஒருதோன்றல்—வரிவளையீர் - வரிவளையை யுடையீர்—உண்டலூற்றேமென்று - (நும்வண்டன்மனைக்கு விருந்தாய் நாம்) உண்ணக்கருதினேமென்றுசொல்லி—வந்து - வந்து—நின்றதோர்போழ்து - நின்றதோர் பொழுதின்கண்—உடையான் - உடையானது—புலியூர் - புலியூர்வரைப்பில்—கொண்டலூற்று - கீழ்காற்றுமிகுதலால்—ஏறும் - கரைமேலேவந்தேறும்—கடல் - கடல்—வர - எம்மேல்வர—(அதன்கணழுந்தாமல்) எம்முயிர்கொண்டு - எம்முயிரைக (கைக) கொண்டு—தந்து - (எமக்குத்) தந்து—ஓர்கழலவன் - அவ்வொருகழலவன்—கண்டலூற்று - கண்டலாகிய (மர)மிகு—ஏர்நின்ற - அழகுநின்ற—சேரி - (அச்) சேரியின்கண்—சென்றான் - சென்றான்—எ-று. இனித் தக்கதுசெய்வாயாகவென்பது எஞ்சிநின்றது.

வண்டலூற்றேமங்கணென்பது பாடமாயின் - அங்கணென்பதனை ஏழாம்வேற்றுமைப் பொருள்படநின்றதோரிடைச் சொல்லாகவுரைக்க. புலியூர்க்கடலென வியையும், தேரிற்சென் *றானென்பது பாடமாயின் - நம்மைக் காண்டல்விரும்பித் தேர்மேலேறிச்சென்றானென்றுரைக்க. தேரினென்பது - கருவிப்பொருட்கண்வந்த வைந்தாமுருபெனினு மமையும்? இதற்குக் காண்டலூற்றென்பது குறுகிநின்றது. தோன்றல் - கழலவன்-

என்றதனால் அவனது பெருமையும், எம்முயிர்கொண்டு தந்தே ன்றதனால் - மெய்ப்புறவுங் கூறினாளாம். மெய்ப்பாடும்-பயனும்- அவை. (உகூ0)

நேரிசையாசிரியப்பா.

தன்னுழைப்பலவுயிர் தனித்தனிபடைத்துப்
பரப்பிக்காட்டலிற் பதுமனாகியு
மவ்வுயிரொவ்வுயி ரனைத்துங்காத்தலிற்
செவ்விகொள்கருமுகிற் செல்வனாகியுங்
கட்டியகளைவரம் புட்புகவழித்து
நீர்தலைநிறுத்தலி னியலனாகியுந்
தருவுடனிருஞ் சங்கமுங்கிடைத்தலி
னிருமுகிலமரர்க் கரசனாகியு
மூன்றழனான்மறை முனிவர்தோய்ந்து
மறைநீர்குருந்தின் மறையோனாகியு
மீனுங்கொடியும் விரிதிரையைந்துந்
தேனுறைதமிழுந் திருவுறைகூடலு
மனத்தலின்மதிக்குல மன்னவனாகியு
நவமணியெடுத்து நற்புலங்காட்டலின்
வளர்குறி மயங்கா வணிகனாகியும்
விளைதருமுழவும் வித்துநாறுந்
தழைதலின்வேளாண் டலைவனாகியும்
விரிதிரைவையந் திருநதிசூழ்ந்த
மதுரையம்பதிநிறை மைம்மலர்க்களத்த
னிலையடிவழுத்தா ரனைத்தொழிலென்னக்
கைதையங்கரைசெய் பொய்தற்பாலையோ

டி நுதிரையெடுக்கப் பொருதிரையெடுத்தும்
பூழிப்போனகம் புதுவுடனுண்டுஞ்
காய்நாட்பிள்ளை தந்துகொடுத்து
முடவுடற்கைதை மடன்முறித்திட்டுங்
கலைவந்துகிரப்பாவைக் கண்ணிகூட்டக்
குவலயத்திருமலர் கொணர்ந்துகொடுத்து
நின்றுனுண்டொருகாலை
யென்றுமித்தொழில் செய்வதுபுகழே.

———*———

தன்னுழைப்பலவுயிர் செய்வதுபுகழே. பகுதி - வரைபொருட்பிரிதல், துறை - அறத்தொடுநிற்றல். *

தன்னுழைப்பலவுயிர் தனித்தனிபடைத்துப்
பரப்பிக்காட்டலிற் பதுமனாகியும்

(இதனதுபதப்பொருள்.)

பலவுயிர் - மீன்முதலிய பலவுயிரினையும்—தனித்தனி - தனித்தனியாக—படைத்து - படைத்து—தன்னுழை - தன்னிடத்தில்—பரப்பிக்காட்டலின் - பரப்பிக்காட்டுதலால்—பதுமனாகியும்-(நால்வகைத்தோற்றத்தேழுவகைப்பிறப்பினையும் வெவ்வேறு தன்னிடத்துண்டாகப் படைத்துக் காட்டும்) பிரமனாகியும்;

நீர் வெவ்வேறுபடைத்தல் - நீர்வாழ்சாதியொழிந்தவுஞ் சலமயமாதலாலதுவின்றியமையாமையினது வெவ்வேறுபடைத்ததாயிற்று. முழங்குமுந்நீரொன்னும் புறப்பாட்டில் "நீரின்றமையா யாக்கைக்கெல்லா முண்டிகொடுத்தா ருயிர்கொடுத்தோரே - யுண்டிமுதற்றே யுணவின்பிண்ட முணவெனப்படுவது நிலத்தொடுநீரே - நீருநிலனும் புணரியோரீண் டுடம்புமுயிரும்

படைத்திசினோரோ,, என்பதனானுமறிக. பிரமன் வெவ்வேறுப் டைத்தல் "ஊாவபதினென்று மொன்பதாமானிடவர்,, என்ப தனானுமறிக. ஆதித்தனொருவனாய்க் கடாதோறும் வெவ்வேறு தோன்றினாற்போல வுயிரொன்றாய்ச் சடங்தோறும் வியாபிகரு மெனபார். மதமறுத்தற்குப் பலவுயிரொன்றாா்.

அவ்வுயிரெவ்வுயி ரனைத்துங்காத்தலிற்
செவ்விகொள்கருமுகிற.செல்வனாகியும்

அவ்வுயிர் - தன்னிடத்திலுண்டான வுயிரனைத்தையும்—எவ்வுயிரனைத்தும் - ஒழிந்தவுயி ரெல்லாவற்றையும்—காத்தலில் - காத்தலில் (பிரமன்படைக்குமுயி ரெவ்வுயிரவ்வுயிரனைத்து ங்காக்கும்)—செவ்விகொள் - செவ்விகொண்ட—கருமுகில் - கரியமேகமபோலும்—செல்வனாகியும் - விட்டுணுவாகியும்;

நீர்காத்தல் - காலமறிந்துதவலும், வரம்புகடவாது நிற்றலும்.

கட்டியகளைவரம் புட்புகவழித்து
நீர்தலைதரித்தலி னிமலனாகியும்

கட்டிய - தான் வரம்பிகந்தோடாது வரம்பாகக்கட்டிய—களைவரம்புட்புகவழித்து - களையழியவழித்து—நீர்தலைதரித்தலின் - நீர் தலைமையாகத்தரித்தலால்—நிமலனாகியும் - (சிருட்டிதிதி யெனவுண்டாக்கிய களைவரம்பினைத் தன்னிடத் தொடுங்கச் சர்வசங்காரப்பண்ணிக் கங்கையைத் தலைமேற்றரித்த) சிவனாகியும்;

தருவுமணியுஞ் சங்கமுங்கிடைத்தலி
னரிமுதிரமரர்க் கரசனாகியும்

தருவும் - சோலையும்—மணியும் - மணிகளும்—சங்கமும் - சங்கங்களும்—கிடைத்தலின் - பெறலால்(கற்பகத்தருவும் நிர்

தாமணியும் சங்கநிதியும்பெற்ற)—அரிமுதிர் - மிகுந்த கண்ணி ணையுடைய—அமரர்க்கரசனுகியும் - இந்திரனுகியும்;

முதிர்தல் - மிகுதல்.

மூன்றழனுன்மறை முனிவர்தோய்ந்து
மறைநீருகுத்தலின் மறையோனுகியும்

மூன்றழல் - (காருகபத்தியம் தென்றிசையங்கி ஆகவநீயம என்னும்)முத்தீயினையும்—நான்மறை - (தைத்திரியம் பௌடிகம் தலவகம சாமவேதமென்னும்) நான்குவேதத்தினையு முடைய—முனிவர்தோய்ந்து - முனிவர்மூழ்கும்படி—மறைநீா - மறையா கின்றநீரை—உகுத்தலின் - கொடுத்தலால்—மறையோனுகியு ம் - (அம்முனிவர்பாலளவளாய்க காயத்திரியா லாதித்தனுக சரு கவியங்கொடுக்கும்) வேதியனுகியும்;

தோய்ந்து - தோய, தோய்ந்து மறைதற்குக் காரணமாகிய நீரொனினுமாம்.

மீனுங்கொடியும் விரிதிணையைந்துந்
தேனுறைதமிழுந் திருவுறைகூடலு
மணத்தலின்மதிககுல மன்னவனுகியும்

மீனும் - மீன்களும்—கொடியும் - கொடிகளும்—விரிதி ணையைந்தும் - (குறிஞ்சிமுதலாக) விரிந்தநிலமைந்தும்—தேனு றை - தேனினுறைந்த—தமிழும் - இரசமும்—திருவுறைகூட லும் - திருமகள்பொருந்திய மதுரையும்—மணத்தலின்-பொரு ந்துதலால்—மதிக்குலமன்னவனுகியும்-(தனக்குரிய கயற்கொடி யும் பிறகொடிகளும் பரந்ததிணையைந்துஞ் செவிக்கினிமைபொ ருந்திய விறையனார்பொருளுந் திருமகள்பொருந்திய மதுரைநக ரும்பெற்ற) பாண்டியனுகியும்;

தேன்-இனிமை, "தேனூறநின் றுதெருண்டாரவைசெப்ப லுற்றே,, னென்றாற்போல. திருவுறையகூடற்குக் கண்டாரால் விரும்பப்படு மழகுபொருந்திய கூடலெனினுமாம்.

நவமணியெடுத்து நற்புலங்காட்டலின்
வளர்குறிமயங்கா வணிகருகியும்

நவமணி - புதுமையாகிய மணிகளை—எடுத்து - (திரையா) லெடுத்து—நற்புலங்காட்டலின் - நல்லவிடங்கடோறுங் காட்டுதலால்—வளர்குறி - (நவமணிகளையெடுத்து அம்மணிகள்பிறக்கு நல்லதானங்களைக்காட்டி) யுண்டாகாநின்ற விலக்கணத்தைச் (சொல்லுதற்கு)—மயங்கா-மயங்காத—வணிகருகியும்-வணிகருகியும்;

நற்புலங்காட்டி யுண்டாகாநின்ற விலக்கணத்தைச்சொல்லுதல் ஈழம்பாரோசிகன்னி கோவைத்துறைகளி லுண்டாகிய விப்பிமுத்தி லீழத்துறையிலிப்பிமுத்த மதியொளிபோன்று நெய்த்திருக்கு மெனச்சொல்லுதல், ஏனையவு மிவ்வாறுகண்டுகொள்க. புலந்தொகுத்தோனே யென்றாற்போல புலமிலக்கணமுமாம், குறிப்படையாளமுமாம்.

விழைதருமுழவும் வித்துநாறுந்
தழைதலின்வேளாண் டலைவருகியும்

விழைதரும் - விரும்பப்படும் (உழவுத்தொழிலும் உழுதபின் வித்துந்தொழிலும் வித்தியபின் பயிர்களுண்டாந்தொழிலுந் தன்றாற்றழைதலின்ால்)—உழவும் - உழவும்—வித்தும் - வித்தும்—நாறும் - நாற்றும்—தழைதலின் - தழையப்பண்ணலும்—வேளாண்டலைவருகியும் - வேளாண்மையையுடைய தலைவருகியும்;

வித்தும் நாறுமென வினைமாத்திரையாய்நின் றும்மைபெற் றது. நாறுதல் தோன்றுதலெனவே முகமும் எதிர்முகமும் கருப்பமும் விளைவும் அடங்கின.

விரிதிரைவையைத் திருநதிசூழ்ந்த
மதுரையம்பதிநிறை மைம்மலர்க்களத்த
னிணையடிவழுத்தா ரணைதொழிலென்ன

விரிதிரை - விரிந்த திரையினையுடைய—வையை - வையை யாகிய—திருநதிசூழ்ந்த - அழகிய நதியுடுத்த—மதுரையம்பதிநி றை - அழகிய மதுரைநகரிற் றங்காநின்ற—மைம்மலர்க்களத்த ன் - குவளைபோன்ற கண்டத்தினையுடையோனது—இணையடி- இரண்டுபாதத்தையும்—வழுத்தார்-வழுத்தாதார்—அணைதொ ழிலென்ன - பொருந்திய தொழிலேபோல;

அம்மசையுமாம். நிறையென்றும்பாடம்.

கைதையங்கரைசெய பொய்தற்பாவையோ
டிருதிரையெடுக்கப் பொருதிரையெடுத்தும்

இருதிரை - நீ பூகசொய்யப பிரிகின்றகாலத்துக் கீழ்காற் றுமிகுதலாற் கரையேறுகின்ற திரையினையுடையகடல்—கைதை யங்கரை - கண்டற்கரைசேர்ந்த—செய்- செயலமைந்த—பொய் தற்பாவையோடு - விளையாட்டுபபாவையுடனே—எடுகக - என் னையெடுகக—பொருதிரை - அக்கடலினின்று—எடுத்தும்-என் னையெடுத்தும்;

போல வெடுக்கவெனவிளையும். இருந்திரைபாடமாயில் இ ருமை-கருமையும் பெருமையுமாம்.

பூழிப்போனகம் புதுவுடனுண்டும்

பூழிப்போனகம்-(நும்வண்டன்மனைக்கு விருந்தென்று) பூ ழ்தியாலமைத்த சிறுசோற்றை—புதுவுடனுண்டும் - புதிதாக ச்சோர வங்கீகரித்தும்;

காமர் கடும்புனலென்னுங் குறிஞ்சிக்கலியில் எல்லாமுட னீங்கவென்றார்.

சாய்தாட்பிள்ளை தந்துகொடுத்தும்

தாள் - தாளினையுடைய—சாய்பிள்ளை - கோரைப்பாவை —தந்துகொடுத்தும் - பண்ணி யெனக்குத்தந்தும்; கொடுத்துமென்ப திடவழுவமைதி.

முடவுடற்கைதை மடனமுறித்திட்டும்

முடவுடல் - வளைந்தவுடலினையுடைய—கைதைமடல்-தாழைமடலை—முறித்திட்டும் - முறித்திடடும்;

கவைந்துகிர்ப்பாவை கண்ணிசூடக
குவலயத்திருமலர் கொணர்ந்துகொடுத்தும்

கவை - கவர்ப்பட்ட—துகிர்ப்பாவை - பவளப்பாவைக்கு —கண்ணிசூட்ட - மாலைசூட்ட—குவலயத்திருமலர் - அழகிய நீலோற்பலமலரை—கொணர்ந்துகொடுத்தும் - கொண்டுவந்து தந்தும்;

*நின்றானுண்டொருகாளை
யெனறலித்தொழில் செய்வதுபுகழே.

நின்றான் - நின்றவன்—உண்டொருகாளையென்றால் - ஒருகாளையுண்டென்றால்—இத்தொழில்செய்வது - இங்ஙனம்வெறியாட்டெடுத்தல்—புகழே - நங்குடிக்குப் புகழல்ல இனியுனக்குத்தக்கது செய்வாயென்க—எ-று.

ஏகாரமெதிர்மறை "எல்லாப்பரிசுளவே,, யென்றாற்போல.

தோழி - எடுத்தும் - உண்டும் - கொடுத்தும் - இட்டும் - கொடுத்தும் - நின்றவனொருகாளை - யுண்டென்றால் - வெறியாட்டெடுத்தல் - நங்குடிக்குப்புகழல்ல வுனக்குத்தக்கது செய்வாயென வினைமுடிவுசெய்க. (௧௧)

## தேர்வரவுகண்டு மகிழ்ந்துகூறல்.

தேர்வரவுகண்டு மகிழ்ந்துகூறலென்பது - புனல்வரவுகே ட்ட தலைமகன் புனலாட்டுவிழவிற்குப் பரத்தையர் சேரிக்கட் செல்லாநிற்ப, இவனைப் புணர்தற்குத்தக்க தவத்தினை முற்கால த்தேசெய்தீர்கள் தேர்வந்ததுதோன்றிற்று, இனிச்சென்று இவ னது தோளிணையைத் தோய்மினெனத் தேர்வரவுகண்டு பரத் தையர் தமமுண்மகிழ்ந்து கூறாநிற்றல். அதற்குச்செய்யுள்:—

சேயேயெனமன்னு தீம்புனலூரன்றிண்டோளி
ணைகட், டோயீர்புணர்தவந் தொன்மைசெய்தீர்சு
டர்கின்றகோலந், தீயேயெனமன்னு சிற்றம்பல
வர்தில் லைநகர்வாய், வீயேயெனவடி யீர்நெடுந்
தேர்வந்து மேவினதே. கூஎ௰

பயின்மணித்தேர்செலப் பரத்தையர்சேரிக்
கயன்மணிக்கண்ணியர் கட்டுரைத்தது.

இ-ள். சுடர்கின்ற - சுடராநின்ற—கோலம் - வடிவு—தீ யேயென - தீயேயென்றுசொல்ல—மன்னு - நிலைபெற்ற—சிற் றம்பலவர் - சிற்றம்பலவரது—தில்லைநகர்வாய் - தில்லைநகரிடத் துள்ளீராகிய—வீயேயென - மலரேயொக்கும்—அடியீர் - அடி யையுடையீர்—நெடுந்தேர் - நெடியதேர்—வந்துமேவினது -(ஈ ண்டு) வந்துமேவிற்று—புணர்தவம் - (இவனைப்) புணர்தற்குத் தவத்தை—தொன்மை - முற்காலத்து—செய்தீர் - செய்தீர்க ள்—சேயேயென - (வடிவு) முருகவேளேயென்று சொல்ல—ம ன்னு - நிலைபெறாநின்ற—தீம்புனலூரன் - இனிய புனலையுடை த்தாகிய ஊரையுடையவனது—திண் - திண்ணிய—தோளிணை கள் - தோளிணைகளை—தோயீர் - (இனி) யணைமின்—எ-று.

ஒன்றற்சொன் றிணையாயிருத்தலின் - இணையெனத் தனித் தனிகூறப்பட்டன இதுவும் ஊடனிமித்தம். `கோலமெனற்பா லது கொலமெனக் குறுகிநின்றது. கயன்மணிக்கண்ணி யென்ப துபாடமாயின் பரத்தையர்சேரிக்கட்டலைமகனது தேர்செல்லத் தலைமகளுணர்ந்துரைத்ததாம் இப்பொருட்கு நெடுந்தேர் நமது சேரிக்கண்வந்து தங்கிற்றென்றுரைக்க. மெய்ப்பாடு உவகைபய ன். தலைமகன்வரவு சேரிபரத்தையர்க்குப்பாங்காயினார் அவர்க் குணர்த்தல். (௩௭௦)

---

நேரிசையாசிரியப்பா.

வடிவிழிச்சிற்றிடைப் பெருமுலைமடவீர்
தொழுமின்வணங்குமின் சூழ்மின்றொடர்மின்
கட்டுதிர்கோதை கடிமலரன்பொடு
முண்டகமுகையின் முலைமுகந்தரிமி
னுருளிற்பூழி யுள்ளுறவாடுமி
னெதிர்மினிறைஞ்சுமி னேத்துமினியங்குமின்
கருப்புரந்துதைந்த கல்லுயர்மணித்தோள்
வாசம்படரு மருத்தினுமுறுமின்
பெருங்கவின்முன்னாட் பேணியவருந்தவங்
கண்ணிடையுளத்திடைக் காண்மின்கருதுமின்
பூவுஞ்சுண்ணமும் புகழ்ந்தெதிரெறிமின்
யாழிற்பரவுமி னீங்கிவையன்றிக்
கலத்துமென்றெழுமின் கண்ணளிகாண்மின்
வெண்சுடர்செஞ்சுட ராகியவிண்ணொடு
புவிபுனலனல்கான் மதிபுலவோனென
முழுதுநிறைந்த முக்கட்பெருமான்

பனிக்கதிர்க்குலவன் பயந்தருள்பாவையைத்
திருப்பெருவதுவை பொருந்தியவந்நாட்
சொன்றிப்பெருமலை நின்றுநனிதொலைத்த
காருடற்சிறுநகைக் குறுந்தாட்பாரிட
மாறஞூதலைந்த நீர்நசையடக்க
மறிதிரைப்பெருநதி வரவழைத்தருளிய
கூடலம்பதியுறை குணப்பெருங்கடவுண்
முண்டகமலர்ந்து முதிராச்சேவடி
தரித்தவுள்ளத் தாமரையூரன்
பொற்றுணர்த்தாமம் புனைந்தொளிர்மணித்தேர்
வீதிவந்துதவ ரலானம்
மேதந்தீர விருமருங்கெழுந்தே.

---*---

வடிவிழிச்சிற்றிடை யிருமருங்கெழுந்தே. பகுதி-பரத்தை யிற்பிரிதல், துறை-தேர்வரவுகண்டு மகிழ்ந்துகூறல்.

வெண்சுடர்செஞ்சுட ராகியவிண்ணொடு
புவிபுனலனல்கான் மதிபுலவோனென
முழுதுநிறைந்த முக்கட்பெருமான்

(இதனதுபதப்பொருள்.)

வெண்சுடர் - எவ்வகைப்பொருளினும் சந்திரனும்—செஞ்சுடர் - ஆதித்தனுமாகிய அவ்விருசுடரும்—ஆகிய - உண்டாகிய—விண்ணொடு - ஆகாசமும்—புவி - பிருதுவியும்—புனல் - நீரும்—அனல்-தீயும்—கால்-காற்றும்—மதிபுலவோனென- மதிக்கு மியமானனும்என்னும்படி—முழுதுநிறைந்த-எங்கும்நிறைந்த—முக்கட்பெருமான் - மூன்றுகண்ணினையுடையபெருமான்)

ஓடு-எண்ணொடு, மதிபுலவோன்-மதிக்கும்புலவோன். மலை கிழவோனேயென்றாற்போல, புலவோனெனவுடம்பொடுபுணர்த்துக்கூறினர். புலவன்றிவுள்ளவன் "நிலநீர்நெருப்புயிர் நீள் விசும்புநிலாப்பகலோன், புலனாயமைந்தனோடெண்வகையாய்ப் புணர்ந்துநின்றான், உலகேழெனத்திசை பத்தெனத்தானொருவனுமே, பலவாகிநின்றவா தோணோக்கமாடாமோ,, எனத் திருவாசகம் பிரபஞ்சசுத்தி திலலையிற்பாடியது. திருத்தோணோக்கத்திலும் அஷ்டமூர்த்தங்கூறினர்.

> பனிக்கதிர்க்குலவன் பயந்தருள்பாவையைத்
> திருப்பெருவதுவை பொருந்தியவந்நாள்

பனிக்கதிர்க்குலவன் - சந்திரவம்சமாகிய மலயத்துவசபாண்டியன்—பயந்தருள் - பெற்ற—பாவையை - அழகிய மும்முலைத் தடாதகையை—திருப்பெருவதுவை - கலியாணமாக—பொருந்தியவந்நாள் - பொருந்தியவந்நாளில்;

புலத்தையுடையவனைப் புலவனென்றாற்போலக் குலத்தையுடையவனைக் குலவனென்றார்.

> சொன்றிப்பெருமலை தின்றுகனிதொலைத்த
> காருடற்சிறுநகைக் குறுந்தாட்பாரிட
> மாற்றுதலந்த நீர்நசையடக்க
> மறிதிரைப்பெருநதி வரவழைத்தருளிய
> கூடலம்பதியுறை குணபெருங்கடவுள்

சொன்றிப்பெருமலை - பெருஞ்சோற்றுமலையை—கனி - மிகவும்—தின்றுதொலைத்த - நுகர்ந்துதொலைத்த—காருடல் - கரியவுடலினையும்—சிறுநகை - சிறியநகையினையும்—குறுந்தாள் குறியதாளினையுமுடைய—பாரிடம் - குண்டோதரன்—ஆற்றுது - தாகமாற்றாது—அலந்த - வருந்துதற்குக் காரணமாகிய—

நீர்நசையடக்க - நீர்வேட்கையடக்க—மறிதிரைப்பெருநதி - மறிந்த திரையினையுடைய வையைப்பெருநதி—வரவழைத்தருளிய - வரும்படியழைத்தாக கிருபைபுண்ணிய—கூடலம்பதியுறை - மதுரைநகரி லுறையாநின்ற—குணப்பெருங்கடவுள் - எண்குணங்களையுடைய வெல்லார்க்குமேலான கடவுள் அவரது;

மலையென்றுரைத்தலிற் றின்றெக்குர், அது இழித்தற்கண்வருதலின் வழுவன்று. "அறுசுவையடிசிலனியினமுதருந்தி னுறுவயிறார வோம்பாதுதின,, றென்றதுபோல அருளியகுணப்பெருங்கடவுள் - கூடலம்பதியுறை கடவுளெனக. குணம்-ராஜஸகுணம், குணத்தினையுடையாகி லெண்குணமெனினுமாம்

முண்டகமலர்த்து முதிராச்சேவடி
தரித்தவுள்ளத் தாமரையூரன்
பொற்றுணர்த்தாமம புனைந்தொளிர்மணித்தேர்
வீதிவந்ததுவரலானம்
பேரந்தீர விருமருங்கெழுந்தே.

முதிரா - அறிவுபெறாத—முண்டகம் - இதயதாமரையையும்—அலர்த்தும் - அறிவுபெறப்பண்ணும்—சேவடி - சிவந்தவடியினை—தரித்த - பெற்ற—உள்ளத்தாமரை - இதயதாமரையையுடைய—ஊரன் - நம்மூரனது—பொன் - பொன்னினாற் செய்த—துணர் - கொத்தினையுடைய—தாமம் - மாலையை—புனைந்தொளிர - புனைந்தசுஞல்விளங்காநின்ற—மணித்தேர் - மணிகளகட்டியதேரானது—வீதி - (புனலாட்டுவிருபபிறுணஞ்)சேரியிடத்து—வந்ததுவரலால் - வந்ததாதலால்—நந்தமேதம் - (இப்பொழுது) நம்மேலுண்டாகிய படிறு—தீர - நீங்க—இருமருங்கு - இரண்டுபக்கமும்—எழுந்து - எழுந்து;

முண்டகமுமென்னுமும்மை சிறப்பும்மை விகாரத்தாற் றொக்கது. முதிராதமுண்டகமு மலர்த்துஞ்சேவடியெனினு

மாம். வந்தது வரலென்பது புகுந்ததுவேயென்றாற்போல நின்றது. இருமருங்குமென்னு முறறும்மை தொக்கது. முன்னும் பின்னு மொழிந் திடமும் வலமும் பக்கமாயிற்று. ஏகாரமீற்றசை.

வடிவிழிச்சிற்றிடைப் பெருமுலைமடவீர்

வடிவிழி - மாவடுபோன்ற விழியினையும்—சிற்றிடை - சிறியவிடையினையும்—பெருமுலை - பெரியமுலையினையுமுடைய—மடவீர் - மடவீர்;

பெருந்தோட்சிறுநுதற் பேரமாகட்பேதைபோல மயங்கி வந்தது. வடி-மாவடு, வடிககண்பரபபி யென்றாற்போல.

தொழுமின்வணங்குமின் சூழ்மின்றொடர்மின்
கட்டுதிர்கோதை சடிமலரான்பொடு
முண்டகமுகையின முலைமுகந்தரிமி
னுருளிற்பூழி யுள்ளுறவாடுமி
னெதிர்மினிறைஞ்சமி னேத்துமினியங்குமின்
கருப்புரந்தோதைதாக கலவுயர்மணித்தோள்
வாசம்படரு மருத்தினுமுறுமின
பெருங்கவின்முன்னை பேணியவருந்தவங்
கண்ணிடையுளததிடை காணமின்கருதுமின்
பூவுஞ்சுண்ணமும் புகழ்நெசதிசொறிமின்
யாழிற்பாவுமி னீஙகிவையனறிக்
கலத்துமென்றெழுமின் கண்ணளிகாண்மின்

தொழுமின் - அத்தேனைக் கையெடுத்துத் தொழுவீரா க—வணங்குமின் - அதுவன்றி யவனைத் தலைவணக்கஞ்செய்வீராக—சூழ்மின் - அத்தேனைப் பிரதக்கிணஞ் செய்வீராக—தொடர்மின் - அதுவன்றி யதனைப்பற்றுவீராக—உருளிற்பூழி

அதுவன்றி யத்தேரின் வண்டியாலெழுந்தபுழுதியை—உள்ளுற
வாடுமின் - மேலெங்கும்பூசுவீராக—கடிமலர்க்கோதை - அதுவ
ன்றி நீர் வாசத்தினையுடைய மலர்மாலையை—அன்பொடு - அன்
பொடு—கட்டுதிர் - முடிப்பீராக—முண்டகம் - அதுவன்றி மு
ண்டகமலரை—முகையின் - முகிழ்போனற—முலைமுகம் - மு
லையிடத்தில்—தரிமின் - தரிப்பீராக—எதிர்மின் - அதுவன்றி
அவனை நீ ரெதிர்கொள்வீராக—இறைஞ்சுமின் - அதுவன்றிய
வனைச் சாஷ்டாங்கமாகச் சேவிப்பீராக—ஏத்துமின - அதுவ
னறியவனைப புகழ்வீராக—இபங்குமின - அதுவன்றியவனிட
த்துச சேல்வீராக—கல்லுயர் - அதுவன்றியவனது மலையினுய
ர்ச்சியினுமுயர்ந்த—மணித்தோள் - மணித்தோளில்—துதைந்
த - செறிந்த—கருப்புரவாசம்படரும் - கருபபுரவாசத்தைக
கொண்டுவரும—மருத்தினும் - காற்றினைநேர்—உறுமின்-பொ
ருந்துவீராக—முன்னாள்-அதுவன்றிமுன்னாள்—பெருங்கவின்-
பெரியவழகானது—பேணிய - இவனிடத்தி லிருக்கவேண்டுமெ
ன்றுவிரும்பிய—அருந்தவம் - அரியதவத்தை—கண்ணிடை - க
ண்ணால்—உளத்திடை - உள்ளகத்திடத்து—காணமின் - காண
பீராக—கருதுமின் - அதுவன்றி நீ வனைநினைப்பீராக—எதிர்-
அதுவன்றியவனெதிரே—புகழ்ந்து - அவனைப்புகழ்ந்து—பூவு
ஞ்சுண்ணமும் - பூவையுஞ் சுண்ணத்தையும்—எறிமின் - எறி
வீராக—யாழிறபரவுமின - அதுவன்றி யவனை யாழிறபாடுவீரா
க—ஈங்கிவையன்றி - இவ்விடத்திற கூறியவிவையன்றி—கலந்
துமென்றெழுமின் - அவனைக்கூடுவேமென்றெழுவீராக—கண்
ணளி - அதுவன்றியவனைக் கூடியவன்கிருபையை—காண்மின்-
காண்பீராக—எ-று.

அன்றியென்பதனை யெங்குங்கூட்டி அதுவென வொருசொ
ல்வருவிக்க. "தேமலரங்கட் டிருவேபுகுத்த - மாமலர்க்கோதை

மணுளன்புகுதுக,, என்றாற்போலத் தனித்தனி முற்றும்மையு மாம். தலைவன் புதுப்புனலாட்டுவிழவிற்குப் பரத்தையர் சேரி யிற்செல்ல வவரிவ்வணங்கூறியதூஉந் தலைவி யூடுதற்குநிமித்தமா ம். இது பரத்தையர்க்குப் பாங்காயினா கூறியது.

மடவீர் - நம்மூரன்றேர் - நம்வீதியில்வந்ததால் - இப்பொ ழுது - நம்மேலுண்டாகிய படிறுநீங்க - இரண்டுபக்கமு மெழு ந்து - இவ்வினைஞ்செய்வீராகவென வினைமுடிவுசெய்க. (கஉ)

---

கல்விநலங்கூறல்.

கல்விநலங் கூறலென்பது - வரைந்துகொண்ட பின்னர் ஓதற்குப் பிரியலுறுகின்ற தலைமகன் தலைமகளுக்குப் பிரிவுணர் த்துவானாக மிகவுங் கற்றுணர்ந்தோர் நன்மைக் கெல்லையில்லா ததன்மையராவரெனத் தோழிக்குக் கல்விநலங்கூறுவித்தல். அ தற்குச்செய்யுள்:—

சீரளவில்லாத் திகழ்தருகல்விச்செம் பொன்வ
ரையின், ஞரளவில்லாவளவுசென்றாம் பலத்துணி
ன்ற, வோரளவில்லா வொருவனிருங்கழ லுன்னி
னர்போ, லேரளவில்லா வளவினராகுவ ரேந்தி
ழையே. ௩௯

கல்விக்ககல்வர் செல்வத்தவரென ச்
செறிகுழற்பாங்கிக் கறிவுறிவித்த து.

இ-ள். ஏந்திழை - ஏந்திழாய்—சீர் - நன்மைக்கு—அளவி ல்லா - எல்லையில்லாத—திகழ்தரு -. விளங்கும்—கல்வி - கல்வி யாகிய—செம்பொன்வரையின் - மேருக்குன்றத்தினது—ஆர்-

மிக்க—அளவில்லா - அளவில்லாத—அளவு - எல்லையை—செ ன்ற - அடைந்தவர்கள்—அம்பலத்துநின்ற - அம்பலத்தின்க ண்ணின்ற—ஓரளவில்லா - ஓரளவையுமில்லாத—ஒருவன்-ஒப் பில்லாதானுடைய—இருங்கழல் - பெரியதிருவடிகளை—முன் னினாபோல் - (அறிந்து) நினைந்தவனைபோல்—ஏர் - நன்மைக் கு—அளவில்லா - எல்லையில்லாத—அளவினராகுவர் - தன்மை யராவர்—எ-று.

செம்பொன்வரை யென்றான், தூய்மையும் பெருமையுங் கலங்காமையு முடைமையால், கறறதின்மேலுங் கறக நினைகி ன்றுறைதலான் ஆரளவில்லா வளவுசென்று சொன்றான். ஆரள வு-காதமும் புகையு முதலாயின அளவு, ஓரளவென்பது - காட் சியும் அனுமானமு முதலாயின வளவு, இது குறிப்பெச்சம். செல்வத்தவர் - இல்வாழ்க்கைச் செல்வத்தவர். அறிவறிவித்த து - அறியப்படுவதனை யறிவித்தது. பாஙகி யறிவறிவித்ததெ ன்பது பாடமாயின - தலைமகனது குறிப்பைக்கண்டு தோழி தலைமகட்குக குறிபபினறக்கூறினாளாக வுரைக்க. மெய்ப்பாடு - பெருமிதம் - பயன் பிரிவுணர்த்தல். (௯0அ)

---

நேரிசையாசிரியப்பா.

நிலையினிற்சலியா நிலைமையானும்
பலவுலகெடுத்த வொருதிறத்தானு
நிறையும்பொறையும் பெறுநிலையானும்
தேவர்மூவருங் காவலானுஞ்
தமனியப்பராரைச் சைலமாகியு
மளக்கவென்றமையாப் பரப்பினதானு
மமுதமுந்திருவு முதவுதலானும்

பலதுறைமுகத்தொடு பயிலுதலானு
முள்ளுடைக்கோட்டு முனையெறிசுறவ
மதிர்வளை தடியு மளக்கராகியு
நிறையுளங்கருதி நிகழ்பவைநிகழ்பவை
தருதலின்வானத் தருவைந்தாகியு
மறைவெளிப்படுத்தலிற் கலைமகளிருத்தலி
னகமலர்வாழ்த்தலிற் பிரமனாகியு
முயிர்பரிந்தளித்தலிற் புலமிசைபோக்கலிற்
படிமுழுதளந்த நெடியோனாகியு
மிறுதியிற்சலியா திருத்தலானு
மறுமைதந்துதவு மிருமையானும்
பெண்ணிடங்கலந்த புண்ணியனாகியு
மருள்வழிகாட்டலி னிருவிழியாகியுங்
கொள்ளுநர்கொள்ளக் குறையாதாதலி
னிறையுளநீங்கா துறையருளாகியு
மவைமுதலாகி யிருவினைகெடுக்கும்
புண்ணியக்கல்வி யுண்ணிகழ்மாக்கள்
பரிபுரக்கம்பலை யிருசெவியுண்ணும்
குடக்கோச்சேரன் கிடைத்திது காண்கென
மதிமலிபுரிசைத் திருமுகங்கூறி
யன்புறுத்தரித்த வின்பிசைப்பாணன்
பெறநிதிகொடுக்கென வுறவிடுத்தருளிய
மாதவர்வழுத்துங் கூடற்கிறைவ
னிருசரண் பெறுநர்போலப்
பெருமதிநீடுவர் சிறுமதிநுதலே.

---

நிலையினிற்சலியா நிறுமதிறுதலே. பகுதி - ஒதற்பிரிவு, துறை - கல்விநலங்கூறல்.

நிலையினிற்சலியா நிலைமையானும்
பலவுலகெடுத்த வொருதிறத்தானு
நிறையும்பொறையும் பெறுநிலையானுந்
தேவர்மூவருங் காவலானுந்
தமனியப்பராரைச் சைலமாகியும்

(இதனதுபதப்பொருள்.)

நிலையினின் - புருடார்த்தமாகிய (தன்மார்த்த காமங்களி) னெறியினின்றும்—சலியா - அசையாத—நிலைமையானும்- நிலைமையினாலும—பலவுலகு - உலகம்பலவும்—எடுத்த - கைக்கொண்ட—ஒருதிறத்தானும் - ஒப்பறறகூறுபாட்டானும்—நிறையும் - அறிவும்—பொறையும் - பொறுதியும்—பெறும் - உண்டாகும்—நிலையானும - நிலைமையானும்—தேவர்மூவரும் - பிரமாவிட்டுணு உருத்திரனென்னு முத்தேவரும்—காவலானும் - காவலாயிருத்தலானும்—பராரை - (நின்றநிலையிற் றளங்காத நிலைமையும் பலவுலகுககு மாதாரமாகு மொப்பற்ற கூறுபாடும் இவ்வளவகல முயரமென்பதும் பலபொருளையுந் தாங்கலும் பெற்றநிலைமையும் மூவர்க்கு மிருப்பிடமாதலு முடைத்தாய) பரியவரையினை யுடைய—தமனியச்சைலமாகியும்-மகமேருவாகியும்;

இன்-நீககம், இனைத்தெனவறிந்த வும்மைதொக்கது. பலவுலகையுடைய பூமியைப் பலவுலகென்றார். "மாயோன்மெய்கா ற்றையுலகமுஞ் - சேயோன்மெய்மை வரையுலகமு,. மென்றார் தொல்காப்பியனாரும், "மூவேழுலக,,மென்று பரிபாடலினுங்கூறினர். இது ஏதுவுஞ் சிலேடையு மருவகமும்பெற்ற சங்கீரணம் ஏனையவுமன்ன.

அளக்கவென்றமையாப் பரப்பினதானு
மமுதமூர்ந்திருவு முதவுதலானும்
பலதுறைமுகத்தொடு பயிலுதலானு
முள்ளுடைக்கோட்டு முனையெறிசுறவ
மதிர்வளைதடியு மளக்கராகியும்

அளக்கவென்று - இவ்வளவு பொருளுளவென்று—அமையா - ஆராயப்படாத—பரப்பினதானும் - விரிவானும்—அமுதமூர்ந்திருவும் - அமுதமூர்ந்திருவு(மென்று மங்கலமொழி)—உதவுதலானும் - தருதலானும்—பலதுறை - பலபொருண்மார்க்கமும்—முகத்தொடு - தன்னிடத்தில்—பயிலுதலானும - பயிலுதலானும்—முள்ளுடை - (ஒருவராலுமளக்கப்படாத பரப்பினையும் அமுதத்தினையுந் திருமகளையுந் தருதலும் ஏற்றுமதி யிறக்குமதியுடைய பலதுறையிடத்தோடு பொருந்துதலு முடைத்தாகிய இருமருங்கு) முள்ளினையுடைய—கோடு - கோட்டினுல்—முனையெறி - பகையைவெல்லாநின்ற—சுறவம் - சுறவம்—அதிர் - முழங்காநின்ற—வளை - சங்கத்தை—தடியும் - வெல்லுதற்கிடமாகிய—அளக்கராகியும் - கடலாகியும் ;

பரப்பினதென்பது-பகுதிப்பொருள் விகுதி. தடியுங்கடல் இடத்து நிகழ்பொருளின் றொழிலிடத்திலே நின்றது. "மிஞிறார்க்குங்காஞ்சி"யென்றார் பாலைக்கலியினும்.

நிறையுளங்கருதி நிகழ்பவைநிகழ்பவை
தருதலின்வானத் தருவைந்தாகியும்

நிறையுளம் - நிறைந்தவரவருள்ளத்தில்—நிகழ்பவை - எப்பொருள் நிகழ்ந்தவை—நிகழ்பவை - அப்பொருள்களை யவரவர்[illegible]க்குத்தக்கதாய்—கருதி - கருதி—தருதலின் - கொடுத்தலினும்—[illegible]னத்தருவைந்தாகியும் - அவரவருள்ளங்குறைபடா

ம்ற்கருதி யவாறுள்ளத்தினிகழ்ந்தபொருளெப்பொருளப்பொரு ள்களைக் கொடுக்கும் வானத்தின்கணுள்ள வைந்தருவாகியும்;

ஐந்தருவாவன - சந்தானம், தேவதாரம், கற்பகதரு, மந் தாரம், பாரிஜாதமென்பன.

மறைவெளிப்படுத்தலிற் கலைகளிருத்தலி
னகமலர்வாழ்தலிற் பிரமனாகியும்

மறைவெளிப்படுத்தலின் - இரகசியப்பொருளைவெளிப்படு த்தலானும்—கலைகளிருத்தலின் - சரச்சுவதி குடியாகவிருத் தலானும்—அகமலர்வாழ்தலின் - இதயகமலத்திற்றங்குதலானு ம்—பிரமனாகியும் - (வேதத்தைவெளிப்படுத்துச சரச்சுவதியோ டொருந்தித் தாமரையிடத்திலிருக்கும்) பிரமனாகியும்;

உயிர்பரிந்தளித்தலிற் புலமிசைபோக்கலிற்
படிமுழுதளந்த நெடியோனாகியும்

உயிர் - உயிர்கள்—பரிந்து - விரும்பவேண்டிய பொருள்க ளை—அளித்தலின் - கொடுத்தலானும்—புலமிசைபோக்கலின்- அவரவர்க் கடங்காதறிவை மேற்போக்கலானும்—படிமுழுது- (உயிர்களை விரும்பிக் காத்தலு மறிவுக்கு மேலாகக் காணப்ப டுதலுமுடைய) உலகமுழுதும்—அளந்த - அளந்த—நெடியோ னாகியும் - திருமாலாகியும்;

முற்றும்மை தொக்கது.

இறுதியிற்சலியா திருத்தலானு
மறுமைதந்துதவு மிருமையானும்
பெண்ணிடங்கலந்தபுண்ணியனாகியும்

இறுதியில் - கற்பவிறுதியில்—சலியாது - அசைவின்றி— இருத்தலானும் - இருத்தலானும்—மறுமை - ஆறங்கத்தை

யும்—தர்து - தன்னிடத்துண்டாககி—உதவும் - எல்லாருமறி யவுதவும்—இருமையானும் - பெருமையானும்—பெண்ணிடங் கலந்த - (எல்லாத்தேவரு மொடுங்குங் காலவிறுதியிலேகமாய சைவின்றியிருத்தலுந் தொழுத விம்மையிற் சீவன்முத்தராய ம றுமைப்பயன் றந்துதவும் பெருமையுமுடைய) பார்வதியை யிட ப்பாகத்தில்வைத்த—புண்ணியனாகியும் - சிவனாகியும்;

ஆறு - அறுமையாயீண்டெண்ணின்மேனின்றது. "இரு மைவகைதெரிந் தீண்டறம்பூண்டார்," "தெரிமாண்டமிழ்மும் மைத் தென்னன்பொருப்பிலென்புழிபோல," அது ஆற்றியந்த ணரென்றுறபோல, வளையறைக்குணப் பண்புடைப்பொருண் மேனின்ற வாகுபெய ரங்கத்தையுணர்த்தலின், ஆறங்கமாவன- மந்திரம், வியாகரணம், நிகண்டு, சந்தோபிசிதி, நிருத்தம், சோ திடமென்பன,

அருள்வழிகாட்டலி னிருவிழியாகியும்

அருள்வழி-(கற்றதனால் தொடர்புபற்றாது இயல்பாக வெ ல்லாவுயிர்கண்மேலுஞ்செல்வதாகிய)கருணையை—காட்டலின்- கொடுத்ததனால்—இருவிழியாகியும் - (வீட்டுநெறிகாட்டலாலரு ட்பார்வையைக்காட்டு) மிருவிழியாகியும்;

அருளினல்வழிகாட்டல் - அருள்கொடுத்து வழிகாட்டலா யிற்று. அருளாவீட்டு நெறியைககாட்டல "அருளிலார்க்கவ்வுல கமில்லை," யென்பதனானறிக.

கொள்ளுநர்கொள்ளக் குறையாதாதலி
னிறையுளநீங்கா துறையருளாகியும்

கொள்ளுநர் - கற்பார்—கொள்ள - கற்றதனால்—குறை யாது - குறையாது—நிறை - அறிவுபொருந்திய—உளம் - உள் ளத்தைவிட்டு—நீங்காததாதலின் - பிரியாமலுண்டாதலால்— உறையுமருளாகியும்-(ஒன்றொன்றொவ்வாத சமயநெறியிலுள்ளா

சொல்லாரு மளவைகளானு ராய்ந்துகொள்ள வேறுபடாம லறிவி னையுடைய வுள்ளத்தை நீங்கா) துறையு மருளாகியும்;

அருட்காயின் - யாவருமென வொருசொல்வருவிகக. "பல் லாற்றுறநேரினு மஃதே துணை,,யென்பதனு னரு சொல்லாச்சம யத்தாாக்கு மொக்குமெனக.

அவைமுதலாகி யிருவினைகெடுக்கும்
புண்ணியக்கல்வி யுண்ணிகழ்மாகசள்

அவை-(நல்லவை நிறையவையென்னு மிரண்டு)சபைக்கு—முதலாகி - முதன்மையாகி—இருவினைகெடுகக்கும் - நல்வினை தீ வினைகளைக்கெடுக்கும்—புண்ணியககல்வி - தருமமுதலாகிய கல்விகளை—உண்ணிகழ்மாசகள் - கருதாநின்ற படாககள ;

ஆகியும்நிகழ் கல்வியெனககூட்டுக. புண்ணியககல்வியென வே - குறையவையுந் தீயவையுமொழிந்தன. நல்லவை—வெண்பா - "புகழுந்தருமநெறிநின்றோர்பொய்காம, மிகழுஞ்சினஞ்செ ற்ற மில்லோர்-நிகழ்கலைக, ளெல்லாமுணர்ந்தோ ரிருந்தவிடம ன்றோ, நல்லாரவைக்குநலம்,, என்பதனுனறிக. நிறையவை—வெண்பா - "நலனடக்கஞ்செம்மை நடுவுநிலைநான்குங, குலனொ ன்றிவையுடையோர் கோதில்-புலனில்லோர், சென்றுமொழிந்த னவுங் கேட்டோர்செறிந்தவிட, மன்றோநிறைந்த வவை,, என் பதனுனறிக.

சிறுமதிநுதலே.

சிறுமதிநுதலே - சிறியமதிபோலு நுதலினையுடையாய்;

பரிபுரக்கம்பலை யிருசெவியுண்ணும்
குடக்கோச்சேரன் கிடைத்திதுகாண்கென
மதிமலிபுரிசைத் திருமுகங்கூறி
யன்புருத்தரித்த வின்பிசைப்பாணன்
பெறநிதிகொடுக்கென் வுறவிடுத்தருளிய

மாதவர்வழுத்துங் கூடற்கிறைவ
னிருசரண்பெறுகுநர்போலப்
பெருமதிநீடுவர்

பரிபுரக்கம்பலை - அம்பலத்திலாடுங் காற்சிலம்போசை
யை—இருசெவியுண்ணும் - இருசெவியிற் பொருந்துதற்கேது
வாகிய—குடக்கோச்சேரன் - குடதிசைக்கோவாகிய சேரமா
ன்—மதிமலிபுரிசை - மதிமலிபுரிசையென் றடியெடுத்துப்பா
டி—திருமுகம் - இவ் வோலையை—கிடைத்திதுகாண்கெனக்கூ
றி - பெற்றுக் காண்பானாக வென்று கூறி—அன்புருத்தரித்
த - அன்புதானே யொருவடிவாகப்பெற்ற—இன்பிசைப்பாண
ன் - இனிய விசையினையுடைய பாணன்—நிதிபெறக்கொடுக்கெ
ன - நிதிபெறக்கொடுப்பானாகவென்று—உறவிடுத்தருளிய-பொ
ருந்த விடுத்தருளிய—மாதவர்வழுத்தும் - மிகுந்த தவத்தையு
டையோர் வணங்கும்—கூடற்கிறைவன்-கூடற்குமுதல்வன்—
இருசரண்பெறுகுநர்போல - பெரியசரணத்தைப் பெற்றார்போ
ல—பெருமதிநீடுவர் - மிகுந்த கல்வியறிவிற் களவில்லாத தன்
மையராவர்—எ-று.

உண்ணுமென்ப துண்டற்குரிய வல்லாப்பொருளையென்ப
தனுற்கொள்க. குடக்கோ-திசைநிலைக்கிளவி.

சிறுமதிநுதலே - கல்விமாக்கள் - இறையவன்சரணம் பெ
றுகுநர்போலப் பெருமதிநீடுவரென வினைமுடிவுசெய்க.

இது விதலையாப்புப் பொருள்கொள வமைந்தபின்னர்த் த
லைமகட்கோதற் பிரிவுணர்த்துவானாகக் கல்வியுடைய மாக்களி
றைவன் சரணம்பெற்றாற்போல நீடுவரெனத் தோழிக் கறிவித்
தாளென்க. (கஅ)

## முன்னிகழ்வுணாத் தூடறீர்த்தல்.

முன்னிகழ்வுணாத் தூடறீர்த்தலென்பது - கலவியிடத்தூடாநின்ற தலைமகளுக்கு யாங்கொடியநெறியைச்சென்று சிறிய வூரின்கண் மனையகட்பள்ளியின் இச்செறிந்த மெல்லியமுலைகள் என்மார்பிடைவந் தடர்க்கத்தங்கிய சிறியதுயிற்குமாறுகண்டிலம், அதனைநீ யுள்ளியுமறிதியோவென முன்னிகழ்வுணர்த்துத் தலைமகன் அவளை யூடறீராநிற்றல். அதற்குச்செய்யுள்:—

ஆறூர்சடைமுடி யம்பலத்தண்டரண் டம்பெ
றினு, மாறூர்மழவிடை யாய்கண்டிலம்வண் கதிர்
வெதுப்பு, நீறூர்கொடுநெறி சென்றிச்செறிமென்
முலைநெருங்கச், சீறூர்மனையத னிற்றங்குகங்குற்
சிறுதுயிலே. ருகூஅ

முன்னிகழ்ந்தது நன்னுதற்குணர்த் து
மன்னுபுனலூரன் மகிழ்வுற்ற து.

இ-ள். ஊர்-தவழாநின்ற—மழவிடையாய் - இளையவேற்றையுடையாய்—ஆறூர் - ஆறுபரந்த—சடைமுடி - சடைமுடியையுடைய—அம்பலத்து - அம்பலத்தின்(கணுளராகிய)—அண்டரது - தேவரது—அண்டம் - அண்ட (முழுதையும்)—பெறினும் - (யாம்) பெறினும்—வண்கதிர் - (ஞாயிற்றினுடைய) வலியகதிர்கள்—வெதுப்பு - வெதுப்பிய—நீறூர் - நீறுபரந்த—கொடுநெறிசென்று - கொடியநெறியைச்சென்று—இ - இந்த—செறி-நெருங்கிய—மென்முலை - மெல்லியமுலைகள்—நெருங்க- (எம்முடைய மார்பினிடைவந்) தடர—சீறூர்-(நெறியாற்) சிறிய வூரின்கண்—மனையதனில் - மனையென்னுமிருகத்தின் றேலினு

லாய(படுக்கையில்)—தங்கு - தங்கிய—கங்குல் - இரவில்—சிறு துயில் - சிறியதுயிற்கு—மாறுகண்டிலம் - மாற்றங்கண்டிலம் (அதனை நீயுள்ளியுமறிதியோ)—எ-று.

ஆனடா தண்டமுழுதும் பெறுதலால்வரு மின்பமும் அத்துயிலான்வந்த வின்பத்திற்கு மாறல்லவென்றவாறு இளவேறுபுதலவனா தமகுத்தக்க பள்ளியுமிடமு மின்மையிற சிறுதுயிலென்றான், துயிலும் பொழுதிற்றுயிலாப்பொழுது பெரிதாகலின் அவ்வாறு கூறினானெனினுமமையும். துயிற்கென்னுநான்கனுருபு விகாரவகையாற் றொகுகின்றது. முன்னிகழ்ந்தது கூறுவானாய் உண்ணின்ற சிவப்பாற்றுவித்தது. ஞெமுங்கவென்பதூஉம் மாவதளென்பதூஉம் பாடம். மெய்ப்பாடு உவகை, பயன் தலைமகளை மகிழ்வித்தல். (௩௬௮)



நேரிசையாசிரியப்பா.

குரவமலர்ந்த குவையிருட்குழலி
யிருவேமொருகா லெரியதரிறந்து
விரிதலைத்தோன்முலை வெள்வாயெயிற்றியர்க்
கரும்புதுவிருந்தெனப் பொருந்திமற்றவர்தரு
மிடியுந்துய்த்துச் சுரைக்குடமெடுத்து
நீணிலைக்கூவற் றெளிபுனலுண்டும்
பழம்புற்குரம்பை யிடப்புக்கிருந்து
முடங்கதளுறுத்த முகிணகையெய்தியு
முடனுடன்பயந்த கடலொலியேற்று
நடைமலையெயிற்றி னிடைதலைவைத்து
முயர்ந்தவின்பதற்கின் றுவமமுண்டெனின்
முலைமுன்றணந்த சிறுநுதற்றிருவினை

யருமறைவிதிக்கத் திருமணம்புணர்ந்து
மதிக்குலம்வாய்ந்த மன்னவனாகி
மேதினிபுரக்கும் விதியுடைநன்று
ணடுவூர்நகர்செய் தடுபவந்துடைக்கு
மருட்குறிநிறுத்தி யருச்சனைசெய்த
தேவநாயகன் கூடல்வாழிறைவன்
முண்டகமலர்த்தி முருகவிழிருதா
ளுறைகுரருண்ணுமின்ப
மறையலன்றிமற் றொன்றுமடாதே.

—*—

குரவமலர்ந்தமற் றொன்றுமடாதே. பகுதி - பரத்தையிற்
பிரிவு, துறை - முன்னிகழ்வுரைத் தூடறீர்த்தல். ❋

குரவமலர்ந்த குவையிருட்குழலி

(இதனதுபதப்பொருள்.)

குரவமலர்ந்த - குரவமலராவிரிந்த—குவையிருள் - இருட்
கூட்டம்போலும்—குழலி - குழலினையுடையாய்;

இல்பொருளுவமை, அபூதமெனினுமமையும்; மலர்ந்தகுழ
லெனினுமாம்.

இருவேமொருகா லெரியதரிறந்து
விரிதலைத்தோன்முலை வெள்வாயெயிற்றியர்க்
கரும்புதுவிருந்தெனப பொருந்தி

இருவேம்-நாமிருவரும்—ஒருகால்- ஒருதரம்—எரியதரிற
ந்து - எரியினையுடையசுரத்திற்போய்—விரிதலை - விரிந்ததலை
யினையும்—தோன்முலை - நான்றமுலையினையும்—வெள்வாய் -
வெள்ளியவாயினையுமுடைய—எயிற்றியர்க்கு - பாலைநிலமகளி

ர்க்கு—அரும்-கிடையாத—புதுவிருந்தென - புதியவிருந்தென்னும்படி—பொருந்தி - பொருந்தி;

மற்றவொன்பதனைப பிணகூட்டுக.

பழமபுற்குரம்பை யிடமபுக்கிருந்தும்

பழமபுற்குரம்பையிடம் - பழையபுல்லால் வேய்ந்த வவர்சிற்றிலிடத்து—புக்கிருந்தும - புகுந்திருந்தும்;

மறறவர்தரு
முடங்கதளுறுத்த முகிணைகையெய்தியு
மிடியுந்துயந்து

முடங்கதளுறுத்த - சுருட்டிவைத்த தோலைவிரிப்ப—முகிணகையெய்தியும் - அதற்குககுறுநகைவிளைத்தும்—மற்றவர்தரும் - அவரிடும்—இடியுந்துய்த்து - தினைமாவினை நுகர்ந்தும்;

மற்று-அசை, உம்மை-மாறுக.

சுனைக்குடமெடுத்து
நிணிலைக்கூவற் றெளிபுன லுண்டும்

நிணிலைக்கூவல் - ஆழ்ந்தநிலையினையுடைய கிணற்றில்—தெளிபுனல் - தெளிந்தநீரை—சுனைகுடம் - சுனைக்காயாலமைத்த குடத்தில்—எடுத்துண்டும் - எடுத்தருந்தியும;

சுனை-ஆகுபெயர்.

உடனுடன்பயந்த கடலொலியேற்றும்
நடைமலையெயிற்றி னிடைதலைவைத்தும்

கடல் - கடலானது—உடனுடன் - உடனுடனே—பயந்த - தந்த—ஒலியேற்றும் - ஓசையைக் கேட்டும்—நடைமலை - யானையின்—எயிற்றினிடை - மருப்பின்கண்—தலைவைத்தும் - தலையினைவைத்தும்;

கடவொலியென்று பாடங்கூறி யானையொலியென்று பொருள்கூறுவதுமுண்டு. ஒல்லியென்பதனை யொலியெனவிகாரமாக்கி ஏற்றுமென்பதனை ஏறுமென்று பாடமோதில் யானை நீருணணும் துறையிற்பொருந்தி யதனைப பெற்றவுடனே வெட்டு மருபபிடத்துத் தலையைவைத்துமெனக.

உயர்ந்தவின்பதற்கின் றுவமமுண்டெனின்

உயாந்தவின்பதறகு - சிறப்பாகிய வவ்வின்பத்திற்கு—இன்றுவமம் - வேறுவமையுமில்லை—உணடெனில் - ஒன்றுண்டென்று விசாரிக்கின்;

உம்மை-சிறப்பு, தொகுத்தனறது.

முலைமூன் றணந்த சிறுநுதறிருவினை
யருமறைவிதிக்கத் திருமணம்புணாந்து
மதிக்குலம்வாய்த்த மன்னவனுகி
மேதினிபுரககும விதியுடைநன்னாள்

மதிககுலம்வாயத்த - சந்திர வம்சத்தினின்றுந் தப்பாது பெற்ற—மன்னவனுகி - பாண்டியனுகி—முலைமூன்றணநத - மூன்றுகபபொருந்திய முலையினையும்—சிறுநுதல் - சிறியநுதலினையுமுடைய—திருவினை - திருவினை—அருமறைவிதிக்க - பிரமன்சடங்கியற்ற—திருமணம்புணர்ந்து - திருககலியாணஞ்செய்து—மேதினிபுரக்கும் - உலகையாளும்—விதியுடைநன்னாள் - விதியினையுடையநல்லநாளில்;

திருமுமமுலைத்தடாதகை - மூன்றணந்தமுலை, பொன்றுஞ்சாகத்தினைய் பொருள்செய்யுமே யென்றாற்போலநின்றது. அணந்ததிருவென சிலபெயர்கொண்ட தெனினுமாம். மதிககுலம்வாய்த்த மன்னவனுகி யென்பதனை வடமொழியார் தாதுரூபியருபகமென்பர். இதனைத் தொல்காப்பியனர் சொல்லும்பொரு

ரு முடனுராய்தலின் உருவகவுவமையென்பர். இதற்குப் பாண்டியனைப்போன்றெனப் பொருளாக்குக. "ஆய்ந்தகுருகுலமாமாழ்கடலினுண்முளைத்த வறச்செங்கோலாய சதிரினைவேந்தர் பெருமானைச்சச்சந்தனைமந்திரி மாஞகமுடன் விழுங்கிற்றன்றே," என்றாற்போல இது கிழக்கிடு பொருணிலைகளாக முதலொடுமுதல்வந்த மெய்யுவமம்.

நடுவூர்நகர்செய் தடியவர்துடைக்கு
மருட்குறிநிறுத்தி யருச்சனைசெய்த
தேவநாயகனை கூடல்வாழிறைவனை
முண்டகமலர்த்தி முருகவிழிருதா
ளுறைகுநருண்ணுமின்ப
மறையலன்றிமற் றொன்றுமடாதே.

நடுவூர் - மதுரையூர்நடுவில்—நகர்செய்து - ஆலயஞ்செய்து—அடியவர்துடைக்கும் - பத்தரடுத்த பிறவியைக் கெடுக்கும்—அருட்குறிநிறுத்தி - தன்கருணையைத் தேவென்னுங் குறியாக நிறுத்தி—அருச்சனைசெய்த - ஆராதனைசெய்த—தேவநாயகன் - தேவர்நாயகன்—கூடல்வாழிறைவன் - மதுரையிலுறையாநின்றதலைவன்—முருகவிழ் - முருகுவிரியும்—இருதாள் - இருதாளாகிய—முண்டகம் - தாமரையால்—மலர்த்தி - இதயதாமரையைமலர்த்தி—உறைகுநர் - பொருந்தினர்—உண்ணுமின்பம் - பெறுமின்பமே—அறையலன்றி - உவமையென்று சொல்லுதலன்றி—மற்றொன்றுமடாது - வேறொன்றுமுவமைபெறாது அதனைநீகருதியுமறியாயென்க—எ-று.

முருகவிழ்தாளெனவே - தாமரையாயுருவகஞ்செய்தார். மலர்த்தியெனவே - பிறவினையாயிற்று, உண்ணுமின்பம் - உண்ணற்குரிய வல்லாப்பொருளை யென்பதனுண்மைக்க. "தோலை

முண்டு துறக்கப்பட்,,டென்றாற்போல ஏகாரத்தைப்பிரித் தின்ன்பமெய்யெனக்கூட்டுக. தேற்றேகாரம்படப் புணர்த்துச்சொன்னமையா னிது நியமவுவமையாயிற்று.

குழலி - போய் - பொருந்தி - இருந்தும் - எய்தியும் - துய்த்தும் - உண்டும் - ஏற்றும் - வைத்தும் - உயாநதவின்பத்திற்கு ஒன்றுவமமுண்டெனில்-இருதாளுறைகுநர் -உண்ணுமின்பமே யுவமையென்று சொல்லுதலன்றி வேறுபெறாது, அதனை நீகருதியுமறியாயென வினைமுடிவுசெய்க. (கசு)

---

## நிலவுவெளிப்பட வருந்தல்.

நிலவுவெளிப்பட வருந்தல்என்பது - இரக்கங்கூறி வரைவுகடாயதோழி பிற்றைஞான்று அவ னிரவுக்குறியிடை வந்துநிற்ப நிலவுவெளிபபட்டாற் சென் றெதிர்ப்படமாட்டாமற் றாங்கள் வருந்தாநின்றமை சிறைப்புறமாக மதியொடுபுலந்து கூறாநிற்றல். அதற்குச்செய்யுள்.—

நாகந்தொழவெழி லம்பலநண்ணி நடநவில்வோ
னாகமி துமதி யேமதியேநவில் வேற்கையெங்க
ணாகம்வரவெதிர்நாங்கொள்ளுநள்ளிருள்வாய்நறவார்
நாகமலிபொழில் வாயெழில்வாய்ந்தநின் னயகமே.

தனிவேலவற்குத் தந்தளர்வறியப்
பனிமதிவிளக்கம் பாங்கிபகர்ந்தது.

இ-ள். நவில் - பயிலப்பட்ட—வேல்-வேலையேந்திய—கை-கையையுடைய—எங்கள்நாகம் - எங்கள்யானை—வர - வர—நாம் - நாங்கள்—எதிர்கொள்ளும் - எதிர்கொள்ளும்—நள்ளிருள்

வாய் - செறிந்தவிருளிடத்து (அவ்விருளைச்சிதைத்து)—நறவா ர் - தேனார்ந்த—நாகமலி - நாக (மலர்) மலிந்த—பொழில்வாய் - பொழிலிடத்து (நின்று)—எழிலவாய்த்த - (நீ செய்கின்ற) அழகுவாய்த்த—நின்நாயகம் - நினது முதன்மை—மதியே - திங்காள்—மதியே - நினக்கறிவே—நாகநதொழ - (பதஞ்சலியாகிய) நாகந்தொழ—எழிலம்பலநண்ணி - எழிலையுடைய வம்பலத்தை நண்ணி—நடம்நவில்வோன் - கூத்தைப பயில்வானது—நாகமி து - மலைகாணிஃது—எ-று. இதனைக் கடைப்பிடிபபாயாகவெ ன்ப தெஞ்சிநின்றது.

நாகத்தான்விழுங்கப்படுநீ - நாகந்தொழ வமபலத்து நடம் பயில்வோனது மலைகட்புகுந்து விளங்கி வீற்றிருந்ததல. நினக்கு நன்றிபயவாதென்பது கருத்து. அறிவெனபது - ஈண்டறிந்து செய்யப்படுங் காரியத்தை தனிநாயகமென்பதுஉம பாடம். மெய்ப்பாடு - வெகுளி - பயன் - இடையீடறிவித்தல். (௩௯)

நேரிசையாசிரியப்பா.

நண்ணியபாதி பெண்ணினர்க்கமுத
மடுமடைப்பள்ளியி னடுவவதரித்துந்
திருவடிவெட்டினு ளொருவடிவாகியு
முக்கணிலருட்கண் முறைபெறமுயங்கியும்
படியிதுவென்ற வடிமுடிகண்டும்
புண்ணியநீறெனப் பொலிகதிர்காற்றியு
நின்றனைபெருமதி நிற்றொழுதேற்கு
நன்னரிற்செய்குவ நன்றியொன்றுளதா
லாயிரந்தழற்கரத் திருட்பகைமண்டிலத்
தோரொருபனிக்கலை யொடுங்கிநின்றனைதனிற்

கொலைநுதியெயிறென்றிருபிறைமுளைத்த
புகர்முகப்புழைக்கையொருவிசைதடிந்து
மருப்பிதழ்க்குவளையென்றடுகண்மலர்ந்த
நெடுஞ்சுனைபுதையப்புகுந்தெடுத்தளித்துஞ்
செறிபிறப்பிறப்பென விருவகைதிரியு
நெடுங்கயிற்றூசல் பரிந்துகலுழ்காலை
முன்னையிற்புனைந்து முகமனளித்துந்
தந்தவெங்குரிசி றனிவந்தெமது
கண்ணெனக்கிடைத்தெங் கண்ணெதிர்நடுநாட்
சமயக்கணக்கர் மதிவழிகூறா
துலகியல்கூறிப் பொருளிதுவென்ற
வள்ளுவன்றனக்கு வளர்கவிப்புலவர்முன்
முதற்கவிபாடிய முக்கட்பெருமான்
மாதுடன்றோன்றிக் கூடலுணிறைந்தோன்
றன்னைநின்றுணர்ந்து தாமுமொன்றின்றி
யடங்கினர்போல நீயு
மொடுங்கநின்றமைதி யிங்கிலையறிந்தே.

———*———

நண்ணியபாதி யிங்கிலையறிந்தே. பகுதி - இரவுக்குறி, து
றை-மதியொடுபுலந்துகூறல்.

கொலைநுதியெயிறென் றிருபிறைமுளைத்த
புகர்முகப்புழைக்கை யொருவிசைதடிந்தும்
(இதனது பதப்பொருள்.)

கொலை - கொலையினையும்—நுதி - கூர்மையினையுமுடை
ய—எயிறென்று - மருப்பென்று—இருபிறைமுளைத்த - இரண்
டுபிறை முளைத்தாற்போன்ற—புகர்முகம் - புகர் முகத்தினையு

டைய யானை(வந்தெதிர்ந்தவந்நாள்)—ஒருவிசை - ஒருதரம்—பு ழைக்கை - அதன்றுளையையுடையகையை—தடிந்தும் - வெட்டியும்;

உவமையொடுபொருட் கொற்றுமைபற்றி முதலொடு மியைந்த பெயரெச்சம் சிலபெயர்கொண்டது.

மதுவிதழ்க்குவளையென் றடுகண்மலர்ந்த
நெடுஞ்சுனைபுதையப் புகுந்தெடுத்தளித்தும்

மதுவிதழ் - அதுவன்றித் தேனையுடைத்தாய விதழினையுடைய—குவளையென்று - குவளையென்று—அடு - எல்லாரையுமடாநின்ற—கண்மலர்ந்த - கண்மலர்ந்தாற்போன்ற—நெடுஞ்சுனை - நெடியசுனையிடத்தில்—புதைய - அமிழ்ந்த—புகுந்து-அதனுட்புகுந்து—எடுத்தளித்தும் - எடுத்தளித்தும்;

கண்மலர்ந்தசுனை சிலப்பெயர்கொண்டது. இயன்றென்று பாடமாயின் - மருபபியன் றிருபிறைபோன் முளைத்தவென்றுங் குவளைமலரியன் றடுத்த கண்போல மலர்ந்தவென்றும் பொருளுரைக்க. கண்மலர்ந்தவென்றதற் கிடம்பரந்தவெனினுமாம்.

செறிபிறப்பிறப்பென விருவகைதிரியு
நெடுங்கயிற்றூசல் பரிந்துகலுழ்காலை
முன்னையிற்புனைந்து முகமனளித்தும்

செறி - புவனந்தோறும் பொருந்தும்—பிறப்பிறப்பென - பிறவிப் போக்குவரவுபோல—இருவகைதிரியும்-போக்கு வரவென்று மிரண்டுகூறுபாடாகத் திரியும்—நெடுங்கயிற்றூசல் - நெடியகயிற்றூசல்—பரிந்து - வடமற்றதனால்—கலுழ்காலை - அழுங்காலத்து—முன்னையிற்புனைந்து- முன்போலச்செய்து—முகமனளித்தும் - நல்வார்த்தை சொல்லியும்;

தொழிலுவமமாதலின் உவமைக்குந் தொழில்கொள்க.

தந்தவெங்குரிசி றனிவந்தெமது
கண்ணெனக்கிடைத்தெங் கண்ணெதிர்நடுநாள்

தந்த - உயிர்தந்த—வெம் - விருப்பத்தினையுடைய—குரிசில் - குரிசிலானவன்—தனிவந்து - தானொருவனுமாகவந்து—எமதுகண்ணெனக்கிடைத்து - எங்கண்போலப் பொருந்தி—எங்கண்ணெதிர்நடுநாள்-எங்கண்ணிற்காணு மிடையாமத்தில்;

எம்முடைய குரிசிலென்றுமாம்.

பெருமதி

பெருமதி - உயர்ச்சியினையுடையமதியே;

அது இகழ்ச்சிக்குறிப்பு.

நண்ணியபாதி பெண்ணினாக்கமுத
மடைப்பள்ளியி னவதரித்தும்

நண்ணியபாதி - பாதியாகப்பொருந்திய—பெண்ணினர்க்கு - பெண்ணைவடிவாகவுடையவர்க்கு—அமுதமும் - விடமாகிய வமுதமுண்டாக்கும்—மடைப்பள்ளியின் - கடலாகிய திருமடைப்பள்ளியினுப்பணில்—அவதரித்தும்-தோன்றியும்;

இது குறிப்புருவகம், மாட்டேறெலா வுருவகமுமிது.

திருவடிவெட்டினு ளொருவடிவாகியும்

திருவடிவெட்டினுள் - அட்டமூர்த்தமாகும் வடிவில்—ஒருவடிவாகியும் - ஒருவடிவமாகியும்;

அஷ்டமூர்த்தம் முன்கூறிய கவியுட்காணக.

முக்கணிலருட்கண் முறைபெறமுயங்கியும்

முக்கணில் - மூன்றுதிருநயனத்தில்—அருட்கண் - அருட்கண்ணாக—முறைபெறமுயங்கியும்-(ஆதித்தன் சந்திரன் அக்கினியென்று) முறைபெறப்பொருந்தியும்;

இடப்புறஞ் சத்திக்கூறுதலி னிடக்கண்ணை யருட்கணென்றார்.

படியிதுவென்று வடிமுடிகண்டும

படியிதுவென்று - இதுபசையென்றுமல்—அடிமுடிகண்டும் - அடியோடுமுடியைக்கண்டும்;

இதுவென்பதனைத் தனித்தனிகூட்டுக.

புண்ணியநீறெனப் பொலிகதிர்காற்றியும்

புண்ணியநீறென - எண்ணறு நல்வினையுண்டாக்குந்திருநீறுபோல—பொலிகதிர்காற்றியும - மிகுந்த கிரணங்களைக்கக்கியும;

காற்றியுமென்பது - பகல்கான்றெழுதரு பலகதிர்ப்பருதி போலநின்றது.

நின்றனை

நின்றனை - நின்றநீ;

சிறந்தொழுதேற்கு
நன்னரிற்செய்குறு நன்றியொன்றுளதால்

சிறந்தொழுதேற்கும - பிறையானகாலத்து நின்னைத் தொழுதுபெறும—நன்னரில் - நன்மையால்—செய்குறும் - உனக்குச்செய்யும்—நன்றியொன்றுளது - நன்மையொன்றுளது (அஃதேதெனில்);

ஆல் - அசை.

ஆயிரந்தழற்கரத் திருட்பகைமண்டிலத்
தோரொருபனிக்கலை யொடுங்கிநின்றடைதலில்

பனி - குளிர்ச்சியினையுடைய—ஓரொருகலை - (கலை பதினாறில்) ஒவ்வொருகலையாக—ஒடுங்கி-(அக்கினிமுதலாகப் பதினைந்

து தேவருமுண்ணா)வொடுங்கி—நின்று-மற்றொருகலையோடுநின் று—ஆயிரந்தழற்கரத்து - ஆயிரங் கிரணக்கினியையுடைய— இருட்பகையண்டிலத்து - ஆதித்தமண்டலத்து—அடைதலில்- அடைதலால் ;

மண்டலத்தென்றும் பாடம்.

சமயக்கணக்கர் மதிவழிகூறா
துலகியல்கூறிய பொருளிதுவென்ற
வள்ளுவன் றனக்கு வளர்கவிப்புலவர்முன்
முதற்கவிபாடிய முக்கட்பெருமான்
மாதுடன்றோன்றிக் கூடலுணிறைந்தோன்
றன்னைநின்றுணர்ந்து தாமுமொன்றின்றி
யடங்கினர்போலநீயும்
மொடுங்கிநின்றமைதி யிந்நிலையறிந்தே.

வளர்கவிப்புலவர்முன் - சங்கத்தார் நாற்பத்தொன்பதின் மர்முன்—சமயக்கணக்கர் - அறுவகைச்சமயவாதியர்—மதிவழி- கருத்தின்வழி——கூறாது - கூறாது—உலகியல்கூறி - உலக நடைகூறி—பொருளிதுவென்ற - பொருளாகவிதுவே பொரு ளென்றுகூறிய—வள்ளுவன்றனக்கு-திருவள்ளுவன்றனக்கு— முதற்கவிபாடிய - வள்ளுவமாலையின முதற்கவியைச்சொன்ன —முக்கட்பெருமான் - மூன்றுகண்ணினையுடையபெருமான்— கூடலுள - மதுரையுள்—மாதுடன்றோன்றி - அங்கயற்கண் ணம்மையுடன்றோன்றி—நிறைந்தோன் - பூரண கலையாயிருந் தோன்—தன்னை - அவன்றன்னை—நின்றுணர்ந்து - நெடுங்கால மனவிட்டறிந்து—தாமுமொன்றின்றி - இருவகைப்பற்றுமின் றி—அடங்கினர்போல - அமைந்த பெரியோரைப்போல—நீயும்- நீயும்—ஒடுங்கி-வேற்றுமையின்றியொடுங்கி—இந்நிலைமை

(இஃது இறைவன்கூடலாதலி னிங்ஙனங்கூறிய) நிலைமைகளையறிந்
து—நின்றமைதி - நின்றமைவாயாக வென்பதாகலா னியமை
வாயாக—எ-று.

அசரீரிவாக்குஞ் சரசோதியும் பாடியதன்றி, "என்றம்பு
ணராதியாணர்நாட்செல்வினு,,மென்று சங்கசசாரக்குமுன மு
தன்மையாகப் பாடினமையின் முதற்கவியென்றார். பொருளா
வன - அறமும் பொருளு மின்பமும் வீடுமவற்றுள் வீடு நூலா
ற்கூறப்படாமையின மூன்றுமேகூறினா இதுவென் றொருமை
யாற்சுட்டியது. ஒழுக்கம் வழக்கு தண்டமென்ற மூன்றனு
ளொழுக்கமொன்றுமே கூறுங் கருத்தினானும் பலநிதியி லரசன்
காவலநடாத்துமுறைமை கூறுங் கருத்தினானும் பல்சுவையி லி
ன்பசுவையொன்றுமே கூறுங் கருத்தினானுமென்க., நீயுமென்
னுமும்மை யெச்சவும்மை, எனப்பதென வொருசொல்வருவிக்க.
இருநிலையறிதலாவது - பெண்ணினொனவே, ஏகாதசகலையை
யுண்டது பாடபதியுஞ் சதுர்த்தசகலையை யுண்டது சிவனு
மென்றறிதல். மடையப்பளிப்பினடு வவதரித்தெனவே சதுர்த்
தகலையையுண்ட தத்றகிலைறவனுகிய வருணனென்றறிதல். இ
ருவடிவெட்டினு ளொருவடிவாகி யெனவே - பிரதமகலையை
யுண்ட தக்கினியென்றுந் துதியகலையையுண்ட தாகித்தனெ
ன்றும் தசமகலையையுண்டது வாயுவென்றும, அறிதல் முக்க
ணி லருட்கண்ணெனவே பக்கயுமுறவு முண்டென்றறிதல்,
அடியறிகுவையெனவே நவமகலையையுண்ட மறலியை யுதைத்
ததென்றறிதல், முடியறிகுவையெனவே-நெரித்துச்சூடினமை
யும் பாம்புமுண்டாகு நிலையறிதல், நீறெனப்பொலிகதிர்காற்றி
யெனவே - நாளாக்குவனென்றறிதல், மாதுடன்றோன்றியென
வீட்டுமெனுவஇத்துப பயங்கரந்தோன்ற நிறைந்தோனடங்கின
மையின்) இவையெனவே திரிதியகலையையுண்டது விச்சுவதேவரென்

றும், பஞ்சமகலையையுண்டது வஷட்காரமென்றும், சஷ்டகலையையுண்டது பூசிக்கும் வாசவனென்றும்,சத்தமகலையையுண்டது முனிவனென்றும, அஷ்டமகலையையுண்டது ஏகபாதவசமென்றும், துவாதசக்லையையுண்டது பிதாகனென்றும், திரயோதசகலையையுண்டது குபேரனென்றும், பூரணைக்கலையையுண்டது பிரமாவென்றும் அறிதல். இவை நுகாசசியும வருத்தலுங்குறித்துக கூறினள்

மதியே - நீசெய்புன்மைகரு - நாங்கள்செய்யுநன்மை-இக்கடவுளிருக்குங்கூடல் - இஃதாதலானும் - நீறுபோலத்தூளாக்குதற கறுபோல வொளியைககாட்டுதலானு மமைதியென்பதாதலா னீயு மமைவாயாகவென வினைமுடிவுசெய்க.

நிலவுவெளிபபட வதனோ டிரககஙகூறி வரைவுகடாவிய தோழி தலைவன சிறைப்புறத்தானகப புலந்துகூறினமையின் வெகுளிவிலககெனனு மலங்காரமாயிற்று. (௧௫)

---

## வ ர வெ டு த் து ரை த் த ல்.

வரவெடுத்துரைத்தலென்பது - தலைமகன் முகிலொடுவாராநிற்பக்கண்ட தோழி வணஙகுவாராக வுடம்பட்டவர்கொடுத்ததிறையையும்,வணங்காது மாறுபட்டவரடையாளஙகளையும் தமது தேருக்கு முன்னுககொணடு வீரமுரசார்ப்ப ஆலியாநின்ற மாவினோடும் வந்தனுகின்றார். இனி நமகசொருகுறையில்லையெனத் தலைமகளுககு அவன் வரவெடுத்துக கூறுநிற்றல். அதற்குச்செய்யுள:—

**மணிவார்குழையெழி லோன்றில்லைச்சிற்றம் பல மமைய, மணிவார்குழன்மட மாதேபெடைக்.**

மன்னர்முன்னுப், பணிவார்திறையும் பகைத்தவ
ர்சின்னமுங் கொண்டுவண்டே, ரணிவார்முரசி
ெெடாலிக்குமாவோ டணுகினரோ. ௩௦

வினைமுற்றிய வேந்தன்வர வு
புனையிழைத்தோழி பொற்றொடிக்குரைத்தது.

இ-ள். பணி - பணியாகிய—வார் - நீண்ட—குழை-குழை யானுண்டாகிய—எழிலோன் - அழகையுடையவனது—தில்லைச்சிற்றம்பலம் - தில்லைசிற்றம்பலத்தை—அனைய - ஒக்கும்—மணி - (நீல) மணிபோலும்—வார் - நீண்ட—குழல் - குழலையுடைய—மடமாதே-மடப்பத்தையுடைய மாதே—பொலிக-பொலிக—நம்மன்னா - நம்முடைய மன்னா—பணிவார் - வந்து வணங்குவாராக (வுடம்பட்டவர்கொடுத்த)—திறையும் - திறையையும்—பகைத்தவா - (பணியாது) மாறுபட்டவரது—சின்னமும் - அடையாளங்களையும—வணடோ - (தமது) வண்டேர்க்கு—முன்னுக்கொணடு - முன்னுகக்கொண்டு—அணி - அணியப்பட்ட—வார் - வாரையுடைய—முரசிெடு - வீரமுரசினேடும்—ஆலிகுமாவொடு - ஆலியாநிற்கு மாவினேடும்—அணுகினா் - வந்தணுகினா்—எ-று.

வணடேரொடென்பதனைத் தொகுக்கும்வழித் தொகுத்துக்கூறினுரெனினுமமையும். இபபொருடகு முனனுகவந்து பணிதாரொன்றுனாகக. மெய்பபாடு-உவகை, பயன - தலைமகளையகிழ்வித்தல். (௧௩௩)



நேரிசையாசிரியப்பா.

சலியாப்பராரைத் தமனியப்பொருப்பெனு
மொரு...ல்சுமந்த விண்படர்பந்தரின்
...துவகித்து
...சை முகிற்றுகில்விரித்துப்

பொற்சிலைவளைத்து வாயில்போக்கிச்
சுருப்பணிபிணைத்த கடுக்கையம்பொலந்தார்
பிணைபிணைநாற்றி நெடுங்காய்மயிரமைத்
தூசையிலலவிட் டுறைப்புயறெறிந்துப்
போற்றுறுதிருவ நாற்றிசைபொலிய
மரகதத்தண்டிற் றோன்றிவிளக்கெடுப்பக்
குடக்கியரிழுக்கிய வளைசிதறியபோற்
கிடந்தனவாம்பி பரந்தனமறைப்பப்
பிடவலர்பரப்பிப் பூவைப்பூவிட்
டுறவிணைநட்டுக் கிளவியப்பெய்த
முகின்முழவதிர வேழிசைமுகக்கு
முல்லைபாழொடு சுருதிவண்டலம்பக்
களவலர்சூடிப் புறவுபாட்டெடுப்பப்
பசுந்தழைபரப்பிக் கணமயிலால
முல்லையந்திருமகள் கோபவாய்மலர்ந்து
நன்மணமெடுத்து நாளமைத்தழைக்க
வரிவளைமுன்கை வரவரவிறப்பப்
போனநந்தனிநமர் புள்ளியன்மான்றேர்
கடுவிசைதுரந்த கான்யாற்றொருவழி
னெள்ளினருட்க வள்ளினமடக்கிமுன்
றோன்றினராகவி னீயேமடமகண்
முன்னொருகாலத் தடுகொலைக்கணைந்த
முகிலுருப்பெறுமோர் கொடுமரக்கிராத
னருமறைத்தாபத னமைத்திடுசெம்மலர்
செருப்புடைத்தாளால் விருப்புடன்றள்ளி , வில்ல
வாயெனுங்குடத்தில் வரம்பறவெடுத்தனம்.

வமுதங்கடத்தள்ளு மணிநீராட்டிப்
பின்னல்விட்டமைத்த தன்றலைமயிரிணைத்
தருமலர்விண்புக மணிமுடிநிறைத்து
வெள்வாய்குதட்டிய விழுதுடைக்கருந்தடி
வைத்தமையாமுன் மகிழ்ந்துணவுண்டவன்
மிச்சிலுக்கின்னு மிச்சைசெய்பெருமான்
கூடலின்றேத்தினர் குலக்கிளைபோலத்
துணைப்பெறுகோதையு மாரமும்புனைக
புதையிருடிரக்கும் வெயின்மணித்திருவுந்
தண்ணம்பிறையுந் தலைபெறநிறுத்துக
விறையிருந்துதவா நிரைவளைக்குலனும்
பெருஞ்சூடகமு மொருங்குபெற்றணிக
நட்டுட்பகையினருட்குடிபோல
வுறவுசெய்தொன்று நகைதருமுளத்தையுங்
கொலையினர்நெஞ்சங் கூண்டவல்லிருளெனு
மைம்பாற்குழலையு மணிநிலைகூட்டுக
விருந்துகொண்டுண்ணும் பெருந்தவர்போல
நீங்காத்திருவுடை நலனும்
பாங்கிற்கூட்டுக வின்பத்திற்பொலிந்தே.

---

சலியாப்பராரையின்பத்திற்பொலிந்தே. பகுதி-வேந்தற்குற்றுழிப்பிரிதல், துறை - வரவெடுத்துரைத்தல்.

சலியாப்பராரைத் தமனியப்பொருப்பெனு
மொருகால்சுமந்த விண்படர்பந்தரின்

(இதனதுபதப்பொருள்.)

சலியா - அசையாத—பராரை - பரியவரையினையுடைய—பொருப்பெனும் - மகமேருவாகிய—ஒருகால் - ஒருகா

லானது—சுமந்த - சுமந்த—விண் - விண்ணாகிய—படர் - பரந்த—பந்தரின் - பந்தரிடத்து ;

பொருப்பென்னுங்கால் - குணமென்னுங் குன்றுபோல நின்றது.

மூடியநாற்றிசை முகிற்றுகில்விரித்து

மூடியநாற்றிசை - நான்குதிக்கும்பொருந்த—முகிற்றுகில் விரித்து - முகிலாகியபடாதலைவிரித்து ;

பொற்சிலைவளைத்து வாயில்போக்கி

பொற்சிலை - அழகியவிந்திரதனுசை—வளைத்து வளைத்து—வாயில்போக்கி - வாயிலாக்கி ;

சுருப்பணிநிரைத்த கடுக்கையம்பொலந்தார
நிரைநிரைநாற்றி

சுருப்பணி - வண்டாயநீலமணியணியை—நிரைத்த - நிரைத்த—கடுக்கையம்பொலந்தார - அழகிய கொன்றைப் பூவாகிய பொனமாலையை—நிரைநிரைநாற்றி - அணியணியாகத்தூக்கி ;

நெடுங்காய்மயிரமைத்து

நெடுங்காய் - கொன்றையினது நெடிய காயாகிய—மயிரமைத்து - கவரியைத்தூக்கி ;

ஊதையிலலகிட் டுறைப்புயறெளித்து

ஊதையில் - காற்றாகியசிலதியால்—அலகிட்டு-விளக்கி—புயல் - புயலாகியசிலதியால்—உறைதெளித்து - நீர்தெளித்து

இது மாட்டேறேலாதுவந்த வுருவகம்.

போற்றுறுதிருவ நாற்றிசைபொலிய
மரகதத்தண்டிற் றேன்றிவிளக்கெடுப்ப

நாற்றிசை - நாற்றிசையும்—போற்றுறு - போற்றுதலுற்ற—திருவம்பொலிய - செல்வம்பொலிய—மரகதம் - மரகதநிறம்போலு நிறத்தினையுடைத்தாய—தண்டின் - தண்டினையுடைய—தோன்றி - காந்தளாகியபெண—விளககெடுபப - பூவாகிய விளக்கையேந்த ;

இது மாட்டேறேலா வுருவகம்.

உறவிணைநட்புக கிளைவியப்பெய்த
முகின்முழவதிர வேழிசைமுககரு
முல்லையாழொடு சுருதிவண்டலமப
புறவுபாட்டெடுப்ப

உறவு - பகைநரம்பின்றியுறவாநரம்பும்—இணை - இணையாநரம்பும்—நட்பு - நட்பாநரம்புமு—கிளை - கிளையாநரயபும்—வியபபெயத - அதிசயம்பெற—ஏழிசைமுககரும் - இசையேழும் பொருந்தும்—முல்லையாழொடு - முல்லையாழிசைகரு—சுருதி-சுருதியாக—வண்டலம்ப-வண்டுகண்முழங்கிப் (பாணர்சாதியாகி)—புறவுபாட்டெடுப்ப - முல்லைப்பாட்டெடுப்ப—முகில் - முகிலாகிய—முழவதிர - முழவமதிர ;

"ஏழாநரம்பினை நாலுநட்பாகு மைந்துகிளையாறு மூனறும பகையே,, என்று ரிசைமரபுடையார். ஏழிசையாவன - "சங்கு குயின்மயி லானைபுரவி செங்காலன்னங்காடை யிவற்றோசை,, யென்பதனுணறிக.

பசுந்தழைபரப்பிக் கணமயிலால

பசுந்தழை - பசியபீலியினை—பரப்பி - பரப்பி—கணமயிலால - கூட்டங்கொண்ட மயிலாகியகணிகையராட;

களவலர்சூடி

[illegible]ர்சூடி - தான் களவமலரைச்சூடி ;

குடத்தியரிழுக்கிய வளைசிதறியபோற்
கிடந்தனவாம்பி பரந்தனமறைபபப்
பிடவலாபரபபிப பூவைப்பூவிட்டு

குடத்தியர் - இடைச்சியர்—இழுக்கிய - இழுக்க—அளைசி
தறியபோல் - சிதறியதயிாபோல—கிடநதனவாம்பி - கிடந்தன
வாகிய காளாஞகிய துகில்—பரந்தனமறைபப - தன்னுடலை ம
றைப்ப—பிடவலர்பரபபி - பின்பிடவம்பூவைபபரபபி—பூவைப்
பூவிட்டு - காயாம்பூவைச்சிதறி ;

முலலையந்திருமகள் கோபவாயமலர்ந்து
நன்மணமெடுத்து நாளமைத்தழைகக

முல்லையந்திருமகள - முல்லைநிலமாகியவழகியதிருமகள்—
கோபம - இந்திரகோபம்—வாய்மலர்ந்து - வாயாகமலர்ந்து—
நன்மணமெடுத்து - நல்லகலியாண முணடாக—நாளமைத்த
ழைக்க - நாளிட்டழைகக ;

வரிவளைமுன்கை வரவரவிறப்பப்
போனநநதனிநமர் புள்ளியன்மான்றேர்
கடுவிசைதுரந்த கான்யாறறொலியி
னெள்ளினருட்க வள்ளினம்படகிமுன்
றோன்றினராகலின

முன்கை - முன்கையில்—வரிவளை - வரிவளையை—வரவ
ர - இடுந்தோறுமிடுநதோறும்—இறப்ப - கழல—போன - பிரிந்
த—நந்தனிநமர் - ஒபபறறநம்முடையதலைவர்—ஒலியின் - ஒலி
யினையுடைய—கான்யாற்று - கான்யாற்றின்—கடுவிசை - கடி
யவிசையை—துரந்த - முடுக்கிய—புள்ளியல் - புட்பேரலலை
தீண்டாத செலவினையுடைய—மான்றேர் - குதிரைகணம்.

ட தேர்க்குமுன்னுக—எள்ளினா - இகழ்ந்தமருவாா—உட்க - அஞ்ச—வள்ளினம் - பணிவார்கொடுத்த வளவிய வினங்களை—மடக்கி - கொண்டு—முன்றோன்றினராகலின் - நம்மெதிர் தோன்றினராதலா னமக்கொருகுறையில்லை;

முடுச்கியதேரென்க, கடியவேகத்தைத்துரந்த வொலியினை யுடைய கான்யாற்றினைபோல முடுகியிகழ்ந்தவரெனினுமாம். "கடுவரைநீரிற கடுத்துவரககணை,, மென்றார் வெண்பாமாலையினும், புள்ளியன்மான்றேர் புட்போலநிலந்தீண்டாது செல்லாநின்ற குதிரையெனினுமாம். "புளளியற்கலிமா வுடைமையான,, வென்றார் தொல்காப்பியத்தினும்.

நீயேமடமகள்

நீயேமடமகள் - மடப்பத்தினையுடைய மகளோநீ; ஏகாரமீற்றசை.

முன்னொருகாலத் தடுகொலைக்கணைந்த
முகிலுருபபெறுமோர கொடுமரககிராதன்

முன்னொருகாலத்து - பண்டொருகாலத்திலே—அடுகொலைக்கு - அடாநின்றகொலைதொழிலுக்கு—அணைந்த - பொருந்திய—முகிலுருபபெறும் - மேகநிறம்போலு நிறம்பெற்ற—ஓர கொடுமரம் - ஒபபறறவில்லினையுடைய—கிராதன் - கண்ணப்பனென்னும் வேடன்;

அருமறைத்தாபத னமைத்திடுசெம்மலர்
செருப்புடைத்தாளால் விருப்புடனதள்ளி
வாயெனுங்குடத்தில் வரம்பறவெடுத்த
வமுதங்கடத்தள்ளு மணிநீராட்டி

அருமறை - அரிய மறையினையுடைய—தாபதன் - சிவகோ[illegible] அமைத்திடுசெம்மலர் - சாத்திய சிவந்தமலரை—விரு

ப்புடன்- விருப்பமுடன்—செருப்புடைத்தாளால் - செருபபிட்டகாலால்—தள்ளி - தள்ளி—வாயெனுங்குடத்தில் - வாயாகிய குடத்தில்—வரம்பறவெடுத்த - அளவறவெடுத்த—அமுதம் - அமுதத்தினுல்—கடத்தள்ளுமணிநீராட்டி - மணிகுடத்தினிறைந்த நீராலாட்டினுற்போலத் திருமஞ்சனஞ்செய்து;

கடற்றள்ளுமென்று பாடமாயின் கடலிடத்துசசெலுத்துநீர்போலவென்க.

பின்னல்விட்டமைத்த தன்றலைமலரிணைத்
திருமலர்விண்புக மணிமுடிநிறைத்து

பின்னல்விட்டு - கட்டினபின்னலையவிழ்த்து—அமைத்த தன்றலைமலர் - தனதுதலையினிடத்தமைத்த பூவினை—தருமலர் - கற்பகத்தருவின்மலர்—இணை - ஒவ்வாறு—விண்புக - விண்ணிடத்துச்செல்லும்படி—மணிமுடிநிறைத்து - மணிமுடியிடத்திற்சாத்தி;

விண்புகு-தற்குறிப்பேற்றம்.

வெள்வாய்குதட்டிய விழுதுடைக்கருந்தடி
வைத்தனமையாமுன் மகிழ்ந்துணவுண்டவன
மிச்சிலுக்கின்னு மிச்சைசெய்பெருமான்
கூடனின்றேத்தினர் குலக்கிளிபோல

வெள்வாய்குதட்டிய - வெள்ளியவாயிற்றின்றுபார்த்த—விழுதுடைக்கருந்தடி - நிணமுடைக்கருந்தசையை—வைத்தமையாமுன் - திருமுன்வைத்துப்பூசனைசெய்யுமுன்—மகிழ்ந்துணவுண்டு - மகிழ்ந்ததணையமுதாகவுண்டு—அவனமிசசிலுக்கு - அவனெச்சிலுக்கு—இன்னும் - முன்போல விப்பொழுதும்—இச்சைசெய்பெருமான் - விருப்பஞ்செய்யும்பெருமா

கூடல் - மதுரையை—நின்று - நெறிநின்று—ஏத்தினா - புகழ்ந் தவாது—குலக்கிளைபோல - குடிமையினையுடைய வுறவுபோல;

உம்மை - சிறப்பும்மை, எச்சவும்மையுமாம்.

துணர்ப்பெறுகோதையு மாரமும்புனைக

துணர்ப்பெறு - பூங்கொத்தாற்கட்டப்பட்ட—கோதையும் - மாலையும்—ஆரமும் - முத்தமாலையும்—புனைக - புனைவாயாக ;

புதையிருடுரக்கும வெயின்மணித்திருவுந்
தண்ணம்பிறையுந் தலைபெறநிறுத்துக

புதையிருள் - செறிந்தவிருளை—துரக்கும் - கெடுக்கும்—வெயின்மணித்திருவும் - ஒளியினையுடைய மாணிக்கத்திருவென்னும்பணியும்—தண்ணம்பிறையும் - குளிர்ச்சியினையுடையபிறையென்னும்பணியும்—தலைபெறநிறுத்துக - தலையினிடத்துப் பெறும்படிநிறுத்துவாயாக,

தண்ணம்பிறை குருநிககோட்டு - குஞ்சரநகரம்போனின்றது.

இறையிருந்தவா நிரைவளைக்குலனும்
பெருஞ்சூடகமு மொருங்குபெற்றணிக

இறையிருந்தவா - கையிலணியவணியககழலுமளவினையுடைய—நிரைவளைக்குலனும் - நிரையான வளைக்கூட்டமும்—பெருஞ்சூடகமும் - தோள்வளையும—ஒருங்குபெற்றணிக - கூடப்பெற்றணிவாயாக,

பெருஞ்சூடகமெனவே தோள்வளையாயிற்று.

நட்டுப்பகையின ருட்குடிபோல
வுறவுசெய்தொன்று நகைதருமுளத்தையுங்
கொலையினர்நெஞ்சங் கூண்டவல்லிருளொ
[illegible] ற்பாற்குழலையு மணிநிலைக்கூட்டுக

நட்டேட்பகையினர் - நட்புக்கொண்டுபிறருடபகையினையு டையார்—உட்குடிபோல - குடியுறவுபெறு மகிழ்ச்சிசெய்யப் பெறுததுபோல—உறவுசெய்தொன்று - உறவுபெறுமகிழ்ச்சி செய்யப்பெறுது—நகைதருமுளத்தையும் - வருந்துமனத்தையு ம்—கொலையினாரெஞ்சம் - கொலைசெய்வார்மனத்தில்—கூண் டவல்லிருளெனும்-செறிந்தவறியாமையாகியவிருளென்னும்— ஐம்பாற்குழலையும் - ஐந்துபகுதியினையுடையகுழலையும்—அணி நிலைகூட்டுக - அணிநிலைகூட்டுவாயாக;

ஐம்பான்முடியுங் கொண்டையுங்குழலும் வம்பார்கணிச் சியும் வார்மயிர்ச்சுருளுமென்பதனு லைம்பாலறிக. அணிநிலைகூ ட்டுகவென்பதனை மனத்துககாயின் விடாதுபொருந்தி நிலையினி றுத்துகவெனவும், குழற்காயி னலங்கரித்து முடிக்கவெனவுங் கொள்க.

விருந்துகொண்டுண்ணும் பெருந்தவர்போல
நீங்காத்திருவுடை நலனும
பாங்கிற்கூட்டுக வின்பத்திற்பொலிந்தே.

விருந்துகொண்டு - இருவகைவிருந்தினையும் புறத்திற் கொண்டு—உண்ணும் - உண்ணும்—பெருந்தவர்போல - பெ ரியதவத்தினையுடையார்—நீங்காத்திருவுடைநலனும் - நீங்காத செல்வத்தினையுடையநலத்தையும்—இன்பத்திறபொலிந்தே -இ ன்பத்தினுற் பொலிவுபெறும்படி—பாங்கிற்கூட்டுக - தம்மிடத் திற்பெற்றூர்போலப் பெறுவாயாக—எ-று.

தலைமகன் முகிலொடுவரக்கண்ட தோழி தலைமகண்மகிழ வவன்வரவு கூறினள். இவைபுறுவகமு மாட்டேறெலாவுருவக மூங் குறிப்புவமையும் பண்புவமையுந் தொழிலுவமையுஞ் சிலே டையுந் தற்குறிப்பேற்றமு நிரனிறையும்வந்த சங்கீரணம்.

விண்ணுகிய பந்தரின் விரித்துப்போகஇ னாற்றியமைத் தல கிட்டுத் தெளிதது விளகதெடுபபபயரபபிவிட்டுற வியபபெய்தப் பாடடுெபபவதிர மயிலாடசசூடி மறைபபப பரப்பிசசிதறி மு லலேமகளழைககப பிரிநதவா தோகசுமுனனுக மருவாாஞசபப ணிவாா கொடுததவறறைக் கொ்ணடு நமமெதிாதோனறினராத லானமகசொரு குறையிலலே நீகூடனினறேததிஞா கிலேபோலப புனைக நிறுதகுகவணிகூட்டுக பாஙகிறகூட்டுகவென வினைமுடி வுசெய்க

விரிச்துாற்றி யெனறுறபோலவன, "வேய்தந்தவெண முக்தஞசிநதுபைங காாவலாமீனபரபபி,, யெனறுறபோலவும், "தூவிமஞ்ஞை நன்மணம்புகுத்துங் துமபிகொம்பரோ,, வென் றுறபோலவுங கொளக. (௪௫)

---

அழுங்குதாய்க்குரைத்தல்.

அழுங்குதாய்ககுரைத்தலென்பது - உலகியல்புகூறவும் மீ ளாதுநின்று தாளெடுத்து வளாத்தமைசொல்லிக கவலாநின்ற செவிலியை முன்னிலேப புறமொழியாக இவாதாம இல்லின்க ணெடுத்து வளாததவர்போலும், அவாபோய்த் தம்மை யிருவ ரையுங் கூட்டுவித்த தெய்வபபதியாகிய தில்லையிடத்துப பழன ங்களைச் சென்றணேவரெனத் தம்முட் கூறுவாாபோனறு கூறி மீட்டுககொண்டு போகாநிறறல். அதறகுச்செய்யுள்:—

ஆண்டிலெடுத்தவ ராமிவர்தாமவ ரல்குவர்போ
யத், தீண்டிலெடுத்தவர் தீவினைதீர்ப்பவன் றில்லை
யின்வாய்த், தூண்டிலெடுத்த வராறெங்கொடெற்
[illegible] பழம்விழுந்து, பாண்டிலெடுத்த பஃறுமலைகி
[illegible] பழனங்களே. உருசுகூ

செழும்பணை யணைந்த மை
அழுங்குதாய்க் குரைத்த து.

இ-ள். இவர்தாம் - இவர்தாம்—ஆண்டு - அவ்விடத்து—இல் - இல்லினகண—எடுத்தவராம் - எடுத்து வளர்த்தவர்போ லும—தீண்டில - (யாவராயினும்) தம்மையணுகில்—எடுத்து - அவர் நரகத்தழுந்தாம லெடுத்து—அவர் தீவினைதீர்ப்பவன்-அவ ரது தீவினையைத் தீர்ப்பவனது—தில்லையினவாய் - தில்லையின் கண்—தூண்டிலெடுத்த - தூண்டிலை விழுங்கிய—வரால்-வரா லானது—தெங்கொடெற்ற - தெங்கொடுமோத—பழம் - அத ன்பழம்—விழாது - விழுந்து—பாணடில் - கிணணடபோலும் பூககளை—எடுதத - உயாததிய—பஃறுமனை - பலவாகிய தாம னையை—கீழும - கிழிககும—பழனங்கள் - பழனஙகளை—அவ ர்போய் - அவாசென்று—அல்குவா-சோவர்—எ-று. இனியோ ரிடரில்லையெனப தெஞ்சிசின்றது.

தில்லையின்வாய்ப் பழனங்களெனவியையும். ஆண்டிலெடு த்தவரா மிவர்தாமென்று தமமுட்கூறிப் பின் செவிலிக்குக்கூறி ஞராகவுரைக்க, இவ்வாறுபகராது செவிலிகேட்ப முழுவதூஉந் தம்முட்கூறிஞராக வுரைப்பினுமமையும். தூண்டிலானெடுக்க ப்பட்டவராலெனினு மமையும். இவ்வமூன்றற்கும் மெய்ப்பாடு பெருமிதம், பயன் - செவிலிக குலகியல்புகூறி அவளை மீளவித் தல். இல்லாவளைதொட்டு இதுகாறும்வரப பாலைததிணைகூறிய வாறறிக. (உசக)



நேரிசையாசிரியப்பா.

**கல்லுயர்வரைத்தோட் செம்மனக்குரிசிலுங்**
**கல்லாத்தவறுளம் புல்லியகுழலு**

மிம்மனை விறைபுகுந் தெழின்மணம்புணரக்
கோளொடுகுறித்து வரும்வழிகூறிய
மறைவாய்ப்பார்ப்பான் மகனும்பழுதிலன்
சோதிடக்கலைமக டோற்றம்போலச
சொரிவெள்ளலகரும் பழுதில்வாய்மைய
ருடன்றுடுகுறியின் வரும்வழிகுறித்த
மூதறிபெண்டிருந் தீதிலரென்ப
பெருந்திரட்கண்ணுட் பேசகுவின்றோர்ந்து
வாய்சசொற்கேட்டனன் மதியரும்பெரிய
ராய்மலர்தெரிந்திட் டுவான்பலிதூவித்
தெய்வம்பராய மெய்யருந்திருவினர்
கருஙகொடியடம்புங் கண்டலுஞ்சூழ்ந்த
பனைக்குடிப்பரதவர் கலத்தொடுமறியச்
சுரிமுகச்செவ்வாய்ச் சூல்வளைதெறிப்பக்
கழுக்கடையன்ன கூரவாய்ப்பெருங்கட்
பனைகிடந்தன்ன வுடன்முதறுணிய
வாருயிர்கவருங் காருடற்செங்கட்
கூற்றமுருத்தெழுந்த கொள்கைபோல
நெட்டுடற்பேழ்வாய்ப் பெருஞ்சுறவுதடியும்
வளைவிளைகிடந்த திரையுவர்புகுந்து
நெடுஞ்சடைக்கிடந்த குறுமபிறைக்கொழுந்துங்
கருமுகில்வெளுத்த திருமிடற்றிருளு
நுதன்மதிகிழித்த தழலவிர்நோக்குமு
மறைத்தொருசிறுகுடிப் பரதவனாகிப்
பொன்றலைப்புணர்வலை கொடுங்கரமாக்கி
நெடுங்கடல்கலக்கு மொருமீன்படுத்த

நிறையருந்தியக னுறைதருங்கூடல்
வணங்காரினமென மாழ்கிக
குணங்குடிபோயவித தாயுளந்தவறே. கஎ

———*———

கல்லுயா உளந்தவறே. பகுதி - உடனபோககு, துறை - அழுங்குதாயககுரைத்தல்

கருங்கொடியடம்புங் கண்டலுஞ்சூழந்த
பனைக்குடிபபரதவா கலததொடேறியச
சரிமுகசசெவவாய்ச் சூலவளைதெறிபபக
கழுககடையனன கூாவாய்பபெருங்கட
பனைகிடநதனன வுடனமுதறுணிய

(இதனதுபதபபொருள.)

கருங்கொடி - கரிய கொடியினையுடைய—அடம்பும் - அடம்பும—கண்டலும் - கண்டலும—சூழ்நத - சூழதறகிடமாகிய—பனைகுடி - பனைகுடியினையுடைய—பரதவா - பரதவா—கலததொடேறிய - கலததோடேடிய—சரிமுகம் - சரிந்த முகத்தினையும—செவவாய - சிவநதவாயினையும—சூல்வளை - கருவினையுமுடைய சங்கங்கள்—தெறிப்ப - தெறித்துவிழ—கழுககடையன்ன - கழுவினது நுனிபோன்ற—கூாவாய - கூரியவாயினையும—பெருஙகண் - பெரியகணணினையுமுடைய—பனைகிடந்தன்ன - பனைகிடந்தாற்போன்ற—உடன்முதறுணிய - உடலினையுடைய மீன்முதலானவை துணிபட;

உடலாகுபெயர். குரவாயென்று பாடமாயிற் கழுக்கடைபோன்ற குரம்பாளையிடத்திற் கள்ளையுடைய பெருமடலையென்று பொருள்கூறுக. குரம்பாளையைக் குரமென்றுரோன்க. அது விகாரம்.

ஆருயிர்கவரும் காருடற்செங்கட்
கூற்றமுருத்தெழுந்த கொள்கைபோல
நெட்டுடற்பேழ்வாய்ப் பெருஞ்சுறவுதடியும்

காருடல் - கரிய வுடலினையும்—செங்கண்-சிவந்தகண்ணை யுமுடைய—கூற்றம் - யமனானவன்—உருத்தெழுந்த - கோபித்தெழுதற்குக் காரணமாகிய—ஆருயிர் - உடலினின்றும்பெறுதற்கரிய வுயிர்களை—கவருங்கொள்கைபோல - கைக்கொள்ளுங் கொள்கைபோல—நெட்டுடல் - நெடியவுடலினையும்—பேழ்வாய் - பெரிய வாயினையுமுடைய—பெருஞ்சுறவு - பெரியசுறவினை—தடியும் - தடிந்து;

முற்றெச்சமாய்நின்றது, நெடுங்கடல்கலக்கு மொருமீனை யென்க.

வளைகிளைகிடந்த திளையுவர்புகுந்து
நெடுஞ்சடைக்கிடந்த குறும்பிறைக்கொழுந்துங்
கருமுகில்வெளுத்த திருமிடற்றிருளு
நுதன்மதிக்கிழித்த வழலவிர்நோக்கமு
மறைத்தொருசிறுகுடிப் பரதவனாகிப
பொன்றலைப்புணர்வலை கொடுங்கரமாக்கி
நெடுங்கடல்கலக்கு மொருமீன்

நெடுங்கடல் - நெடிய கடலினை—கலக்கும்-கலக்கும்—ஒருமீன் - ஒருமீனை—வளைகிளைகிடந்த - வளைகளினையாகக் கிடந்தாற்போன்ற—திளையுவர்புகுந்து - திளையினையுடைய கடலிற் புகுந்து—நெடுஞ்சடைக்கிடந்த-நெடியசடையிற்கிடந்த—குறும்பிறைக்கொழுந்தும் - குறிய பிறைக்கொழுந்தும்—கருமுகில்-கரியமுகில்—வெளுத்த - வெளிறுபடுதற்குக் காரணமாகிய—திருமிடற்றிருளும் - திருமிடற்றின்கண்ணுண்டாகிய விருளும்—

நுதன்மதிகிழித்த - மதிபோலு நுதலிடத்துக் கிழிக்கப்பட்ட— அழலவிர்நோக்கமும் - அக்கினியாகவிளங்குங் கண்ணினையும்— மறைத்து - மறைத்து—ஒருசிறுகுடிப்பரதவனுகி - ஒரு சிறுகுடியின்கணுண்டாகிய பரதவனுகி—பொன் - பொன்னாற்செய்த மணிகளா—தலைப்புணர் - தலையின்கணுடைய—வலை - வலையை—கொடுங்கரமாக்கி - கொடுங்கையிலவைத்து வீசி;

பொன்-ஆகுபெயர்.

படுத்த
சிறையருளுயக னுலறதருகூடல்
வணங்காரினமெனமாழ்கிக்
குணங்குடிபோய்வித தாயுளந்தவறே.

படுத்த - அகபபடுதற்குக் காரணமாகிய—சிறை - அறிவும்—அருள் - அருளுமுடைய—நாயகனுறைதரு - நாயகன வாழாநின்ற—கூடல் - கூடனகரை—வணஙகாரினமென - வணங்காதா கூட்டமென—மாழ்கி - மயங்கி—குணங்குடிபோய்வித்த - தன்குணம்போல விருவனையுங குடிபோகப்பணணிய—ஆய் - ஆய்போலும்—உளம் - இவளுள்ளமும்—தவறே - தவறுபட்டதாயிற்று;

போய்வித்தவாய் விகாரம். புகழ்புரிந் தில்லிலோர்க்கில்லை யென்றாற்போல. போலுமென வொருசொல்வருவிகக. போக்கியதுகாரணமாக வாக்கம் வருவிகக்பபட்டது.

கல்லுயர்வரைத்தோட் செம்மனக்குரிசிலுங்
கல்லாத்தவறுளம் புல்லியகுழலு
மிம்மனைசிறைபுகுந் தெழின்மணம்புணரக
கோளொடுகுறித்து வருவழிகூறிய
மறைவாய்ப்பார்ப்பான் மகனும்பழுதிலன்

கல்லுயர் - கல்லினுல்வளரும்—வரைத்தோள் - மலைபோன்றதோளினையும்—செம்மனம் - நடுவுநிலைமையையுடைய மனத்தினையுமுடைய—குரிசிலும் - தலைவனும்—கல்லா - கல்லாமையினுல்வந்த—தவறுளம் - தவறினையுடையா ருள்ளம்—புல்லிய குழலும் - பொருந்தினுற்போன்ற குழலினையுடையாளும்—இமமனை - இவள்சொன்ன மனையின்கண்—நிறைபுகுந்து - தோற்றப்பொலிவு நிறையப்புகுந்து—எழின்மணம்புணர - அழகிய கல்யாணம்பண்ண—வரும்வழி - வரும்வழி—கோளொடுகுறித்து - வியாழநோககினையுஞ் சரக்கோளினையுங் கருதி—கூறிய - சொன்ன—மறைவாய் - வேதத்தையோதிய—பார்ப்பான்மகனும் - பாரப்பாருகிய மகனும்—பழுதிலன் - பயனுள்ளவனுக;

கல்லுலம்-கற்சுண்ணமென்றுற்போல. மலைதோட்கடை· தவறுங்குழலு மாகுபெயர். புல்லியகுழல் "குணந்தான்வெளிப்பட்ட கொவ்வைச்செவ்வாயிக் கொடியிடை,,யென்றுற்போன்றது. நிறைபுகுந்தென்பது "அறுகானிறைமலர்,, போல விகாரம். ஒடு-உருபுமயக்கம். குற்றமிலனெனினுமாம், முற்றெச்சமாய்நின்றது, மேல்வருவனவுமன்ன.

சோதிடக்கலைமக டோற்றம்போலச்
சொரிவெள்ளலகரும் பழுதில்வாய்மையர்

சோதிடக்கலைமகள் - மணம்புணரக் கோளைகுறித்துவரும்வழிகூறிய கணிதச்சாத்திரத்தினைக் கொடுக்கு மகள்—தோறம்போல - தோற்றரவுபோல—சொரி - சொரிந்த—வெள்ளலகரும் - வெள்ளலகினையுடையவரும்—பழுதிலவாய்மையர் - பயனுள்ள வாய்மையினையுடையார்;

* மணம்புணரக் கோளொடுகுறித்துவரும் வழியென்பதனையிதற்குங்கூட்டுக.

உடன்றெடுகுறியின் வரும்வழிகுறித்த
மூதறிபெண்டிருந் தீதிலரென்ப

உடன்றெடுகுறியின - உடலினைத்தொடுந் தூதலக்கணத்தி னால்—வருமவழிகுறித்த - மணம்புணர வரும்வழிகருதிய—மூதறிபெண்டிரும் - முதுமையறிந்தபெண்டிரும்—தீதிலர்என்ப- நன்மையுடையராக;

என்பவென்பதை "கன்னிகொண்டிழிந்ததென்பவே,, யென்றாற்போல, இது விளந்தவல்லவன்னபிறவும் விளந்தவற்றிய லானுணர்ந்தனர்கொளலே என்னும் புறநடையானமைக்க.

பெருந்திரட்கண்ணுட் பேச்சுநின்றோர்ந்து
வாய்ச்சொற்கேட்டநன் மதியரும்பெரியர்

பெருந்திரட்கண்ணுள் - மிகுந்த வினக்கூட்டத்திடத்துநின்று—பேச்சுநின்றோர்ந்து - அவர் தம்மிற்கூறும்பேச்சின்கருத்தைவிசாரித்து—வாய்ச்சொற்கேட்ட - மணம்புணரவரும்வழி நற்சொல்லாகக்கேட்ட—நன்மதியரும் - நல்லபுத்தியினையுடையவரும்—பெரியர் - சிறுமையிலராக;

வாய்ச்சொல் "குடக்கணீர்கொண்டுவா வென்றாள்குனிவிற் றடக்கையாய்வென்றிதரு,, மென்றாற்போல்வன.

ஆய்மலர்தெரிந்திட்டு வான்பலிதூவித்
தெய்வம்பராய மெய்யருந்திருவினர்

மெய்யரும் - உண்மையினையுடைய அவ்விருவரும்போய்—மலர்தெரிந்திட்டு - மலராயாய்ந் தருச்சித்து—வான்பலிதூவி - மிகுந்த தெய்வவுணவினைக் கொடுத்து—தெய்வம்பராய-தம்மைக்கூட்டுவித்த தெய்வத்தைப் பரவுதற்குக் காரணமாகிய—திருவினர் - நல்வினையுடையராயினா ரினியோரிடரில்லை—எ-று.

இருவரையும்போகப்பண்ணிய தாய்போலு மிவளுள்ளமுந் தவறுபட்டதாயிற்று. மணம்புணரவரும் வழிகுறித்த பாரபா ன்முதலியோரு மித்தன்மையராக வவ்விருவரும்போய் நல்வினை யுடையராயினரென வினைமுடிவுசெய்க. (கஎ)

---

## வெறிவிலக்கல்.

வெறிவிலக்கலென்பது - தலைமகளை யையர்தீர்த்து வெறிக் களத்தேசென்று வேலவனைநோக்கி புனலிடைவீழ்ந்து கெடப் புக வந்தெடுத்துய்த்த கதிர்த்தோணிறக, இந்நோய்தீர்த்தற்குப பிறிதோ ருபாயத்தைக்கருது நின்னைபபோல இவ்வுலகத்தின்க ண் அறிவுடையாரில்லையென மேலறத்தொடுநிறபாளாகத் தோ ழி வெறிவிலக்காநிற்றல். அதறகுச்செய்யுள்:—

விதியுடையாருண்க வேரிவிலக்கல மம்பலத்துப்
பதியுடையான்பரங் குன்றினிற்பாய்புனல் யாமொழுகக்
கதியுடையான்கதிர்த் தோணிற்கவேறு கருதுநின்னின்
மதியுடையார்தெய்வமேயில்லைகொல்லினி வையகத்தே.

அறத்தொடுநின்ற திறத்தினிற்பாங் கி
வெறிவிலக்கிப் பிறிதுரைத்த து.

இ-ள். விதியுடையார் - (இவ்வெறியாட்டுவிழவின் வேரியு ண்ண) விதியுடையவர்—வேரியுண்க - வேரியுண்ணவமையும்— விலக்கலம் - யாமதனைவிலக்கேம்—(அதுகிடக்க) அம்பலத்து-அ ம்பலமாகிய—பதியுடையான் - இருப்பிடத்தை யுடையானது— பரங்குன்றினில் - பரங்குன்றினிடத்து—பாய் - பரந்த—புன ல் - புனலோடே—யாமொழுக - யாமொழுகக்கண்டு—கதியுடை

யான் - (எடுத்தற்பொருட்டு ஆண்டு) வரவையுடையவனுயவனு டைய—சதிரத்தோள் - ஒளியையுடைய தோள்கள்—நிற்க-நிற் க—வேறுகருதும் - இந்நோய்தீரத்தற்கு வேறோருபாயத்தைக்க ருதும்—மின்னின - மின்னைபோல—மதியுடையாா- அறிவுடை யாா—தெய்வமே - தெய்வமே—வையகத்து - இவ்வுலகத்தில்— இனி - இபபோது—இல்லைகொல் - இல்லைபோலும்—எ-று.

இவவாறுகூறவே, நீகூறியதென்னென்றுகேட்ப அறத்தொ டுநிற்பாளாவது பயன் அம்பலத்தென அத்துச்சாரியை யல்வழி க்கண்வந்தது. ஓரிடத்தா ஞெதுக்கப்படார்மையிற பதியுடையவ னென்று சொல்லபபடாதவன் - அம்பலத்தின்கண்வந்து பதியு டையஞயிஞ னென்பதுபட வுரைபபினுமமையும். பரங்குன்றி னென்பதற்குப் பாலன்புகுந் திபபரிசினி னிற்பித்தவென்றதற் குரைத்ததுரைக்க. ஒழுகவென்னும விணையெச்சம் கதியையுடை யானென்னு மாக்கத்தை யுட்கொண்ட விணைக்குறிப்புப் பெய ரோடுமுடியும். கதி - ஆண்டுச்சென்ற செலவு கதிர்த்தோணி ற்கவென்பதற்கு எடுத்தற்பொருட்டு அவன்றோள்வந்து நிற்க வென்று பொருளுரைத்து அவ்வெச்சத்திற்கு முடிபாக்கினு ம மையும். மதியுடையா ரில்லைசொல்லென்பது குறிப்புநிலை. அற த்தொடுநின்றதிறத்தினில்-அறத்தொடுநின்ற தன்மைத்தாக. பி றிது புனலிடையவன்வந் துதவினவுதவி, மெய்ப்பாடு-பெருமித த்தைச்சார்ந்தநகை, பயன்-குறிபபினுல வெறிவிலக்குதல். உகஉ

நேரிசையாசிரியப்பா.

உழைநின் றீரும் பிழையறிந்தீரும்
பழங்குறிகண்ட நெடுங்கண்மாதரு
மொன்றுகிளக்க நின்றிவைகேண்மி

ஞெருப்பாற்பசுங்கொடி திருநுதல்பொடித்த
குறுவெயர்ப்பொழுக்கெனப் பிறையமுதெடுக்கப்
படிறர்சொல்லெனக் கடுநெஞ்சிறைப்ப
வண்டப்பொற்சுவர் கொண்டவழுக்கை
யிறைத்துக்கழுவுவ தென்னக்கங்கைத்
துறைகொளாயிர முகமுஞ்சுழல
வப்பெருங்கங்கை கக்கியதிரையெனக்
கொக்கின் றூவ லப்புறமாக
மாணிக்கத்தின் வளைத்தசுவரெனப்
பாணிக்குட்பெய் செந்தழல்பரப்பத்
தன்றூற்படைத்த பொன்னணியண்ட
மெண்டிக்களந்து கொண்டனவென்னப்
புரிந்தசெஞ்சடை நிமிர்ந்துசுழல
மேருவின்முடிசூழ் சூரியராகத்
தயங்கியமூன் றுகண் ணெங்கணுமாகக்
கூடன்மாநக ராடியவமுதை
யுண்டுகளித்த தொண்டர்களென்ன
விம்மதுவுண்ண வும்மையினுடையோர்
முருகுநாறப் பருகுதல்செய்க
வேலனும்வெறிக்கள னேறுதலாக
வணங்காட்டுமுதியோண் முறங்கொணெல்லெடு
பிணிதரவிசித்த முருகியந்துவைக்க [க்கப்
வையவியழலொடு செய்யிடம்புகைக்க
வின்னும்பலதொழிற் கிங்கிலைநின்று
மாறுபாடு கூறுதலிலனே
யீங்கிவைநிற்க யாங்களவ்வருவியி

லொழுகப்புக்குத் தழுவியெடுத்து
மொருமதிமுறித்தாண் டிருகவுட்செருகிய
வேந்துகோட்டும்பல் பூம்புனமெம்முயி
ரழிக்கப்புகுந்த கடைக்கொளுளி
னெடுங்கைவேலா லடுந்தொழில்செய்தும்
பெறுமுயிர்தந்து மருவியளித்த
பொன்னெடுங்குன்ற மன்னியதோளன்
செவ்வேதந்தமை துயரிருப்பக
கூறுபெயரொடு வேறுபெயரிட்டு
மறியுயிருண்ணக் குறுகிவந்திருந்த
தெயவங்கற்ற வறிவை
யுய்யக்கூறிலோர் நெஞ்சிடம்பொறுதே. கஅ

———*———

உழைநின்றீரும் நெஞ்சிடம்பொறுதே. பகுதி-வரைபொரு ட்பிரிதல், துறை-வெறிவிலக்கல். *.

ஒருபாற்பசுங்கொடி திருநுதல்பொடித்த
குறுவெயாபபொழுககெனப பிறையமுதெடுக்க

(இதனதுபதப்பொருள்.)

பிறையமுது - பிறையின்கணுண்டாகியவமுதம்—ஒருபால் - இடப்பக்கத்திலிருக்கும்—பசுங்கொடி - பசியகொடியினைப் போல்வாள்—திருநுதல் - அழகிய நுதலில்—பொடித்த - தோன்றிய—குறுவெயாபபொழுக்கென - குறியவியர்வை யொழுக்காக—எடுக்க - எடுக்க;

குறியவேர்வை யொழுக்குப்போலச்சூடிய பிறையினின்றும் அமுதமுண்டாக வெனினுமாம். பசிங்கொடி யன்மொழித் தொகை, அது குறிப்புவமை. பாவையாளையென்றற்போல.

படிறர்சொல்லெனக் கடுநெஞ்சிறைப்ப

படிறர் - பொய்சொல்வார்—சொல்லென - சொல்லில்விடஞ்சிந்துதல்போல—நெஞ்சு - கண்டத்தில்—கடுவிறைப்ப - நஞ்சஞ்சிந்த;

இது கோறற்றொழிலாற றொழிலுவமை, கடுவினையுடைய விடமிடற்றெனக. நஞ்சம் விளங்கியவிடத்துச் சிந்தவெனினுமாம். கடியென்னு முரிச்சொற்றிரிந்துநின்றது. பெயரெச்சமாகிய வினைத்தொகையாயிற்று.

அண்டப்பொற்சுவர் கொண்டவழுககை
யிறைத்துக்கழுவுவ தென்னகங்கைத்
துறைகொளாயிர முகமுஞ்சுழல

கங்கைத்துறைகொள் - கங்கையினதுறைகொண்ட—ஆயிரமுகமும் - ஆயிரமுகமும்—அணடப்பொறசுவா - அணடத்தினது பொற்சுவரில—கொண்ட - பொருந்திய—அழுககையிறைத்துக்கழுவுவதென்ன - அழுககைக்கழுவுநீராக—சுழல-சுற்ற;

கழுவுவது தொழிற்பெயர். கழுவுநீர் சுற்றியதுபோலச் சுற்றவெனினுமாம். உமமை-முற்றும்மை.

அபபெருங்கங்கை ககஙியதிரையெனக்
கொக்கின்றூவ லபபுறமாக

கொக்கின் றூவல் - கொக்கினிறகு—அப்பெருங்கங்கை-அந்தப்பெரியகங்கையினிடத்தில்—கக்கியதிரையென - எறியுந்திரையாக—அப்புறமாக - அந்தக் கங்கையிடத்திற்சேர;

அப்பெருங்கங்கை கழுவுநீரானகங்கை. அகரம்-பண்டறிசுட்டுமாம். அபபெருங்கங்கை யிடத்தெறிந்ததிரை அவ்விடத்தானாற்போலக் கொக்கினிற கக்கங்கையிருந்தவிடத்தாக வெனி

னுமாம். அபபுறஞ்சடையினிடம் - அப்புறவாகவென்று பாட மாயின் அப்பினுறும்படியாகவென்க.

மாணிக்கத்தின் வளைத்தசுவரெனப்
பாணிக்குட்பெய் செந்தழல்பரபப

பாணிக்குட்பெய் - கையிடத்திற்கொண்ட—செந்தழல் - சிவந்தவககினி—மாணிககத்தின் - மாணிககத்தைதககொண்டு— வளைத்த - வளைத்த—சுவரென - கோட்டையாக—பரப்ப - ஒளி யைப்பரப்ப ;

கோட்டைபோலச் செந்தழல்பரப்பவெனினுமாம். மாணி ககத்தாலென்ப துருபினும் பொருளினு மெய்தமொழி யொன் றனிலைககளத் தொன்றுசென்றதுபோற் சுண்ணத்தால்விளகக விப்பப் பொங்கியவெனஞ்றபோல.

தன்றொற்படைத்த பொன்னணியண்ட
மெண்டிக்களந்து கொண்டனவென்னப
புரிந்தசெஞ்சடை நிமிர்ந்துசுழல

தன்றொற்படைத்த - தன்றாற்செய்யப்பட்ட—பொன்னணி யண்டம் - அழகிய பொன்னாகிய அணடத்தை—புரிந்த - திரித் தால்போல—செஞ்சடை - சிவந்தசடைகள்—எண்டிக்களந்து கொணடனவென்ன - எட்டுத்திககு மளந்துக்கொண்டனவா க—நிமிர்ந்துசுழல - பரந்துசுழல ;

கொண்டனவென்பது தொழிற்பெயர். பதிகொண்டு பரந் தனபோன்றுளவா லென்றாற்போல புரிந்தசெஞ்சடை யென்பு ழியுவமையொடு பொருட் கொற்றுமையுண்மையா னுவமவினை பொருளொடுமியைந்தது. திரியாததனைத் திரித்ததுபோலக்கூற லின் வேற்றுருவம விலக்கணமாம். ஊட்டியன்னவொண்டளிர் ச்செயலை யென்றாற்போல. குறித்தோன்கூற்றந் தெரித்துமொ

ழிளவியென்ற விதியன்று விரும்பப்பட்ட செஞ்சடையெனினு மாம். கொண்டனவென்ன வென்பதனைக் கொண்டாற்போல வெனினுமாம். கோனிரைத்தனபோற் கொழுந்தாரைக ளென ருற்போல.

மேருவின்முடிசூழ் சூரியராகத்
தயங்கியமூன்றுகண் ணெங்கணுமாக

எங்கணும் - எத்திசையும்—தயங்கிய - விளங்குகின்ற — மூன்றுகண் - மூன்றுநயனமும்—மேருவின்முடிசூழ் - மேருவி ன்முடியைச்சுற்றிய—சூரியராக - சூரியராக ;

முற்றும்மையொன்று தொக்கொன்று விரிந்ததுபோல வெ ங்கணுமாகவெனினுமாம்.

கூடன்மாநக ராடியவமுதை
யுண்டுகளித்த தொண்டர்களென்ன

கூடன்மாநகர் - மதுரையாகிய பெரியநகரிடத்தில்—ஆடி ய - பவுரிகொண்டாடிய—அமுதை - சொக்கநாதராகிய வமுத த்தை—உண்டுகளித்த - மனமாகிய வாயினு லுண்டுகளித்த— தொண்டர்களென்ன - அன்பர்போல ;

ஏகதேசவுருவகம். “காலையரும்பிப் பகலெல்லாம்போதாகி மாலைமலருமிந்நோய்,, என்றாற்போலச் செயவெனெச்சவடுக்கு ஆடியவென்னும் பெயரெச்சத்தோடுமுடிந்தது.

உழைநின் றீரும் பிழையறிந் தீரும்
பழங்குறிகண்ட நெடுங்கண்மாதரு
மொன்றுகிளக்க நின்றிவைகேண்மின்

உழைநின்றீரும்-உழையாகநின்றீரும்—பிழையறிந்தீரும் - இதனுலிதுவந்ததென்றறிந்த நீரும்—பழங்குறிகண்ட-இன்னூர்

க்கிப்படி யிதனால்வந்ததென்று முன்போன குறியறிந்த—நெடு ங்கண்மாதரும் - நீண்டகண்களையுடையமாதரும்—ஒன்றுகிளக்க - யாதொருகாரியஞ்சொல்ல—இவைநின்றுகேண்மின் - அதனை மகிழ்ந்து நின்றுகேட்பீராக ;

உழையினார் - ஏவல்செய்வார், நெடுங்கண்மாதர் - தூரதிருட்டியறிந்த மாதர், தொண்டர்களென்ன மகிழ்ந்துநின்று கேண்மினென்க.

இம்மதுவுண்ண வும்மையினுடையோர்
முருகுநாறப பருகுதல்செயக

இம்மது - வெறியாடுங்களத்திலிங்ஙனமிருந்தமதுவினை— உண்ணவும்மையினுடையோர் - போனசென்னத்திலுண்ணவிதியுடையார்—முருகுநாற - வாசங்கமழும்படி—பருகுதல்செய்க - உண்ணவமையும் ;

முருகுநாற முருகன்வெளிப்பட வெனினுமாம். உண்டுகளித்ததொண்டர்க்குப பரமானந்தமன்றி மதுவுண்டார்போல மயக்கமின்மையிற் கேட்பார்மகிழ்ச்சி பொருளாயிற்று.

வேலனும்வெறிக்கள னேறுதலாக

வேலனும் - அதுவன்றிவெறியாட்டாளனும்—வெறிக்களன் - வெறியாடுங்களத்தில்—ஏறுதலாக - செல்லவமையும் ;

உம்மை-இசைநிறை. தேனும்வழங்கு - பைந்தார்விசையை சிறுவன் றேங்கொளென்றற்போல நும் வெறிக்களனுமாம். வெறிக்களமென்பதனை முன்னும்பின்னுங் கூட்டுக.

அணங்காட்டுமுதியோண் முறங்கொணெல்லெடுக்க

அணங்காட்டுமுதியோள்-அதுவன்றி கட்டுவித்தி—முறங்கொணெல்லெடுக்க - இவள்பெற்றநோய் முருகனால்வந்ததென்று சுளகிலிட்ட நெல்லையெடுத்துக் குறிசொல்லியதினாலே;

எடுக்கவென்ப தெடுத்துச்சொல்லுதலெனத் தன்காரியந் தோன்றநின்றது. அது விறற்சேய்கடவு மயிலிதன்றேகொடி வாரணங்காண்கவன்சூர்தடிந்த வயிலிதன்றே. நெல்லிற்றே ன்றுமவன் வடிவேயென்பதனுனறிக

பிணிதரவிசித்த முருகியந்துவைக்க

பிணிதர-இறுகுதல்பெற—விசித்த-கட்டிய—முருகியந்து வைக்க - வெறியாட்டுப்பறை முழங்கவமையும் ;

ஐயவியழலொடு செய்யிடம்புகைக்க

ஐயவி-அதுவன்றி வெண்சிறுகடுகினை—அழலொடு-அழலோ டுகூட்டி—செய்யிடம் - குங்கிலியமுதலிய புகைசெய்யுமிடத் து—புகைக்க - புகைக்கவமையும் ;

ஐயவிசிந்தி நிறைபுகைத்தென்றூர் வெண்பாமாலையினும்.

இன்னும்பலதொழிற் கிங்ஙிலைநின்று
மாறுபாடு கூறுதலிலனே
யீங்கிவைநிற்க

இன்னும் - இங்ஙனஞ்சொன்னவையன்றிப்பின்னும்—பல் தொழிற்கு - செய்யும்பலதொழிற்கு—இங்ஙிலைநின்று - யானிவ் வண்ணநின்று—மாறுபாடுகூடுதலிலன் - விரோதஞ்சொல்லுத லில்லையாதலால்—ஈங்கிவைநிற்க - இங்ஙனஞ்சொன்னவையொ ழிய ;

யாங்களவ்வருவியி
லொழுகப்புக்குத் தழுவியெடுத்தும்

யாங்களவ்வருவியில்-யாங்களெப்போதுமாடு மலைச்சாரலா ற்றில்—ஒழுக - அமிழ்ந்த—புக்கு - உட்புகுந்து—தழுவியெடு த்தும் - கட்டியெடுத்ததனுலும் ;

அகரம்-பண்டறிசுட்டு.

ஒருமதிமுறித்தாண் டிருகவுட்செருகிய
வேந்துகோட்டும்பல் பூம்புனமெம்முயி
ரழிக்கபபுகுந்த கடைக்கொண்ணளி
னெடுங்கைவேலா லடுந்தொழில்செய்தும்

பூம்புனம் - யாங்கள்காக்கும் பூம்புனத்திற்புகுந்த—ஒருமதிமுறித்து - ஒருமதியையிருபிளவாககி—இருகவுட்செருகிய-இருகவுளினுஞ் செரிகின்றுபோன்ற—ஏந்துகோட்டும்பல் - உயர்ந்தகோட்டினையுடையயானை—எம்முயிரழிக்கப்புகுந்த - எம்முயிரைக கொல்லும்படி கிட்டிய—கடைக்கொண்ணளில் - இறுதிநாளில்—ஆண்டு-அவ்விடத்து—நெடுங்கைவேலால்-கையின்கண்ணிருந்த நெடியவேலால்—அடுந்தொழில்செயதும் - அதனைக்கொன்றதனுலும் ;

இருகவுளுமென்னு முற்றும்மை விகாரத்தாற் றொக்கது. செருகியகோடு - வடித்தானவகிரகண்ணி போன்றது.

பெறுமுயிரிரண்டு மருவியளித்த
பொன்னெடுங்குன்ற மன்னியதோளன்
செவ்வே தந்தமை துயரிருப்ப

பெறுமுயிரிரண்டும் - யாம் பெறுமுயிரிரண்டையும்—மருவியளித்த - மருவிக்காத்துக் கிருபைபண்ணின—பொன்னெடுங்குன்றம் - மகமேரு—மன்னிய-நிலைபெற்றாற்போல நிலைபெற்ற—தோளன் - தோளினையுடையான்—செவ்வே - நேரே—தந்தமை - தந்தமையாநின்ற—துயரிருப்ப - துயருண்டாயிருப்ப;

பெறுமுயிர்கறங்கு நூல்போலநின்றது.

கூறுபெயரொடு வேறுபெயரிட்டு
மறியுயிருண்ணுக குறுகிவந்திருந்த
தெய்வங்கற்றவறிகவ
யுய்யக்கூறிலோர் நெஞ்சிடம்பொருதே.

கூறுபெயரொடு - தாய்தந்தையரிட்ட பேரோடே—வேறு பெயரிட்டு - பேய்கொண்டாளென்றுவேறுபெயரிட்டு—மறியுயி ருண்ண-இக்கிடாயி னுயிரையுண்ணும்படி—குறுகிவந்திருந்த - அணுகிவந்திருந்து—தெய்வங்கறறவறிவை-(இசநோய் தீர்கரும்) தெய்வங்கற்ற வறிவை—உய்யககூறில்-(இவள்) பிழைகக்கும்படி கூறில்—ஓர்நெஞ்சிடம்பொருது-ஒருநெஞ்சிடம்பொருது-எ-று.

தெய்வங்கற்றவறிவை யுய்யக்கூறி னெஞ்சிடம்பொருதெ ன்பது குறிப்புரிலே. அறந்தொடுநின்ற தன்மைத்தாக இவ்வா றுகூறக்கேட்டார்க கறத்தொடுநிற்பது பயன் மெய்பபாடு பெ ருமிதஞ்சார்ந்த நகை, பயன் குறிப்பினுல் வெறிவிலககுதல், தொண்டர்கள்போலக கேட்பீராக.

விதியுடையார் மதுவுண்ணவமையு மதுவன்றி வேலன் வெ றியாடவமையு மதுவன்றி கட்டுவித்திக் குறிசொல்லுதலினுலே வெறியாட்டுப் பறைமுழங்க வமையு மதுவன்றி வெண்சிறுகடு கினைப் புகைக்கவமையு மிவையன்றிப் பின்னுஞ் செய்யுந்தொழி ற்கு விரோதஞ்சொல்லுதலில்லை யிவைகிடக்க, எடுத்ததனுலு ங் கொன்றதனுலுந் தோளினையுடையான்றந்த துயரிருப்ப மறி யுயிருண்ணத் தெய்வங்கற்ற வறிவைககூறி லொருநெஞ்சிடம் பொருதென வினைமுடிவுசெய்க. (கஎ)

---

## உலகியல்புரைத்தல்.

உலகியல்புரைத்தலென்பது - மீளக்கூறவும் மீளாது கவ லாநின்ற செவிலிக்குச் சந்தனமு முத்துஞ் சங்கும் தாம்பிறந்த விடங்கட்கு யாதும பயன்படாது, தம்மைவிரும்பி யணிவாரிட த்தேசென்று பயன்படாநிற்கும். அதுபோல மகளிருந் தாம்பிற

ந்தவிடத்துப் பயன்படாா நீ கவலவேண்டாவென உலகியல்பு கூறுநிற்றல். அதற்குச்செய்யுள்:—

சுரும்பிவர்சந்துந் தொடுகடன்முத்தும்வெண்
சங்குமெங்கும், விரும்பினர்பாற்சென்று மெய்க்க
ணியாம்வியன் கங்கையென்னும், பெரும்புனல்சூ
டும் பிரான்சிவன்சிற்றம்பலமனைய, கரும்பனமெ
ன்மொழியாரு மந்நீாமையா காணுநர்க்கே. உசஅ

செவிலியது கவலைதீ　　　　ா
மன்னியவுலகியன் முன்னியுரைத்த　　து.

இ-ள். சுரும்பு - (நறுநாற்றத்தாற்) சுரும்பு—இவர் - சென்று (பரகரும்)—சந்து - சந்தனமும்—தொடு - தொடகப்பட்ட—கடல் - கடலிற் (பிறந்த)—முத்தும் - முத்தமும்—வெண் சங்கும - வெணசங்கும்—எங்கும் - எத்தேயத்தும்—(தாம்பிறந்தவிடஙகட்கு யாதும் பயனபடாது) விரும்பினர்பால்-(தம்மை) விரும்பியணிவாரிடததே—சென்று - சென்று—மெய்ககு-அவர் மெய்க்கு—அணியாம் - அணியாகாநிற்கும்—வியன்-அகன்ற—கங்கையென்னும் - கங்கையென்னுநின்ற—பெரும்புனல் - பெரும்புனலை—சூடும்பிரான் - சூடுகின்றபிரான—சிவன் - சிவன்—சிற்றம்பலம் - (அவனது) சிற்றம்பலத்தை—அனைய - ஒக்கும்—கரும்பன - கருமபுபோலும்—மெல் - மெல்லிய—மொழியாரும் - மொழியினையுடைய மகளிரும்—காணுநர்க்கு - ஆராய்வாரகரு—அந்நீாமையர் - அத்தன்மையா—எ-று. நீ கவலவேணடா வென்பது தெஞ்சிநின்றது.

சங்கு - மணியாயும் வளையாயும் அணியாம். எங்குமணியா மென் வினையும். சிற்றம்பலத்துமன்னுங் கரும்பனமென்மொ

பூழியானென்பது பாடமாயின் - சிற்றம்பலத்தையுடைய தில்லையி
னுளதாங் கரும்புபோலு மென்மொழியை யுடையானென் று
ரைக்க. (உசஅ)

---

நேரிசையாசிரியப்பா.

பழமைநீண்ட குன்றக்குடியினள்
வருந்தாதுவளர்த்துங் குடங்கைதுயிற்றிய
மானின்குழவியொடு கெடவரல்வருத்திய
பந்துபயிற்றியும் பொன்கழங்குந்தவும்
பாவைசூட்டவும் பூவைகேட்கவு
முடைமைசெய்த மடமையள்யானென்
றெம்மெதிர்கூறிய விம்மொழிதனக்குப்
பெருமைநோக்கிற் சிறுமையதுண்டே
செறிதிரைப்பாற்கடல் வயிறுநொந்தீன்ற
செம்மகள்கரியோற் கறுதிபோக
மகவினின்பங் கடல்சென்றிலவா
லன்றியும்விடிமீன் முளைத்ததாளம்
வவ்வினரிடத்து மவ்வழியான
திரைக்கடல்குடித்த கரத்தமாமுனிக்குந்
திங்கள்வாழ்குலந் தங்குவேந்தற்கு
மமுதவூற்றெழுந்துநெஞ்சங்களிக்குந்
தமிழெனுங்கடலைக் காணிகொடுத்த
பொதியப்பொருப்பு நெடுமுதுகுவருந்திப்
பெற்றுவளர்த்த கற்புடையார
மணியுமாமகிழ்நர் பதியுறைபுகுந்தா
லுண்டோசென்றது கண்டதுரைத்த

பள்ளிக்கணக்க ருள்ளம்பெற்ற
புறமார்கல்வி யறமாமகளைக்
கொண்டுவாழுநர்க் கண்டருகிடத்து
மவர்மனவன்னை கவரக்கண்டிலம்
பெருஞ்சேற்றுக்கழனி கரும்புபெறுகாலைக்
கொள்வோர்க்கன்றி யவ்வயல்சாயா
பூம்பணை திரிந்து பொதியவிழ்முளரியிற்
காம்புபொதிநறவம் விளரியோடருந்திக்
கந்தித்தண்டலை வந்துவீற்றிருந்து
கடிமலர்ப்பொழிலிற் சிறிதுகண்படுத்து
மயக்கநிறைகாமத் தியக்கங்கொண்டு
நின்றநாரணன் பரந்தமார்பிற்
கலவாக்குங்கும நிலவியதென்னக்
கார்வான்றந்த பேர்கொள்செக்கரில்
வீதிவாய்த்தென்றன் மெல்லென்றியங்கு
மூதூர்க்கூடல் வந்தருண்முக்கணன்
காமனையயனை நாமக்காலனைக்
கண்ணுலுகிரான் மலர்கொள்காலாற்
சுட்டுங்கொய்து முதைத்துந்தணித்த
விட்டொளிர்மாணிக்க மலையினொருபா
லடங்கப்படர்ந்த பசுங்கொடியதனை
வளர்த்தசேண்மலை யுளத்துயர்கொண்டு
தொடர்ந்ததுமிலைகீழ் நடந்துசொற்கிடக்கப்
பாலைக்கிழத்தி திருமுன்னூட்டிய
சூலத்தலையிற் றொடர்ந்துசிகைபடர்ந்து
விடுதழலுச்சம் படுகதிர்தாக்கப்,

பாடல்சால்பச்சைக் கோடகக்காற்றை
மையில்காட்சிக் கொய்யுளைசிறப்ப
வயிற்றிலிருந்து வாயுமுளைத்தென்ன
விருகான்முகனிற் கருகாத்துரந்து
படுமழனீக்கக் குடகடற்குளிக்கு
நாவாய்க்குறியாத் தீவாய்பாலையிற்
றம்மிலின்பஞ் சூளுடன்கூடி
யொன்றிவிளைந்து சென்றுட்குடைந்து
பொன்பதிநீங்கி யுண்பதுமடங்கி
முழங்கப்பெருங்குரல் கூஉய்ப்
பழங்கணெய்தியது பேதைமையறிவே. கஅ

---*---

பழமைநீண்ட பேதைமையறிவே. பகுதி - உடன்போககு, துறை-உலகியல்புணாத்தல்.

செறிதிரைப்பாற்கடல் வயிறுநொந்தீன்ற
செம்மகள்கரியோற் கறுதிபோக
மகவினின்பங் கடல்சென்றிலவால்

(இதனதுபதப்பொருள்)

செறிதிரை - செறிந்ததிரையினையுடைய—பாற்கடல்- திருப்பாற்கடலாகியதாய்—வயிறுநொந்து - வயிறுநொந்து—ஈன்ற- பெற்ற—செம்மகள்-செய்யதிருமகளாகிய மகளை—கரியோறகு- கரியநிறத்தையுடைய விட்டுணுவாகியகொழுநற்கு—அறுதிபோக - பாரியாக—மகவினின்பம் - அம்மகவால்வரு மின்பங்கள்—கடல்சென்றிலவால் - கடலாகிய வத்தாயிடத்திற் சென்றன வில்லை ;

இது குறிப்புருவகம், ஆல்-அசை.

அன்றியும்விடிமீன் முளைத்ததாளம்
வவ்வினரிடத்து மவ்வழியான

அன்றியும் - அதுவன்றியும்—விடிமீன் - விடிதற்குக்காரணமானசுக்கிரன்—முளைத்த - உதித்தாற்போலத்தோன்றிய—தாளம் - முத்தமும—வவ்வினரிடத்தும் - விரும்பினர்க் கறுதியாக—அவ்வழியான - அதனால்வருமின்பங்களுந் திருமகளின்பம்போலக் கடலிறசென்றனவில்லை;

முளைத்ததாளம், "குணந்தான்வெளிப்பட்ட கொவ்வைச் செவ்வாயிக கொடியிடை,, யென்றாற்போன்றது. உம்மையிசைநிறை. "மெழுகிறாற் புனைந்தபாவை வெய்துயிர்த் தாங்குமோவா,, என்றாற்போல, இது குறிப்புருவகம். கடலுயாய்த்தாளமசவாதலின் "இடுககண்கால்கொன்றிட வீழுமடுத்தூன்று நல்லாளிலாதகுடி,, போல.

திரைக்கடல்குடித்த காத்தமாமுனிக்குந்
திங்கள்வாழ்குலந் தங்குவேந்தற்கு
மமுதவூற்றெழுந்து நெஞ்சங்களிகருந்
தமிழெனுங்கடலைக் காணிகொடுத்த
பொதியப்பொருபபு நெடுமுதுகுவருந்திப்
பெற்றுவளர்த்த கற்புடையாா
மணியுமாமகிழ்நா் பதியுறைபுகுந்தா
லுண்டோசென்றது

திரைக்கடல் - திரையையுடைய கடலை—குடித்தகாத்த-நுகர்வதற்குக் காரணமாகிய கையினையுடைய—மாமுனிக்கும்-அகத்தியர்க்கும்—திங்கள்வாழ் - சந்திரனல்வாழும்—குலந்தங்கும்-வம்சத்திற்பிறந்த—வேந்தற்கும் -. பாண்டியனுக்கும்—நெஞ்சம்-நெஞ்சத்தில்—அமுதவூற்றெழுந்து - அமுதவூற்றெழுந்து—

களிகரும் - களித்தற்குக்காரணமாகிய—தமிழெனுங்கடலை - தமிழாகியகடலை—காணிகொடுத்த - உரிமையாகக்கொடுத்த—பொதியப்பொருப்பு-பொதியப்பொருப்பாகியதாய்—பெற்று-பெற்று—நெடுமுதுகுவருந்த - நெடியமுதுகுவருந்தி—வளர்த்த-வளர்த்த—கற்புடையாரம் - கல்லைபபுடைத்தெழாநின்ற சந்தனமாகுமகவானது—அணியும்-பூசும்—மாமகிழ்நர் - பெருமைபொருந்தியதலைவர்—பதியுறைபுகுந்தால்-உறைபதியிலுறைந்தால்—உண்டோசென்றது - அதன்பக்கத்திற் சென்றதில்லை ;

இது குறிப்புருவகம். கல் - சுட்டுபெபயர். புடை - பக்கம். ஓகார மெதிர்மறை.

கண்டதுரைத்த
பள்ளிக்கணகக ருள்ளம்பெற்ற
புறமார்கல்வி யறமாமகளைக்
கொண்டுவாழுநர்க் கண்டருகிடத்து
மவர்மனவன்னை கவரக்கண்டிலம்

கண்டதுரைத்த - கண்டபொருளினையுரைத்த—பள்ளிக்கணக்கர் - உபாத்தியாயர்—உள்ளம்பெற்ற - உள்ளமாகிய தாய் பெற்ற—புறமார் - புறத்தினிறைந்த—கல்வியறமாமகளை-அறக்கல்வியாகிய மாமகளை—கொண்டுவாழுநரிடத்து-கொண்டுவாழ்வாரிடத்து—கண்டருகு-தனக்கருகாகக் கண்டும்—அவர்மனவன்னை - அவர்மனமாகியதாய்—கவரக்கண்டிலம் - கைக்கொள்ளக்கண்டேமில்லை;

அன்னையென்பதனை மூன்னுங்கூட்டுக. மனவன்னை சுட்டுப்பெயர். உள்ளது-பகுதிப்பொருள்விகுதி. "வறியார்க்கொன்றீவதே யீகைமற்றெல்லாங் குறியெதிர்ப்பைநீரதுடைத்,, தென்றாற்போல. இது முற்றுருவகம், கண்டுமென்னுமும்மை சிறப்பும்மை.

பெருஞ்சேற்றுககழனி கரும்புபெறுகாலே
கொள்வோாக்கன்றி யவ்வயல்சாயா

பெறுஞ்சேறறு - பெறுஞ்சேற்றினையுடைய—கழனி - கழ னியாகிய தாய்—கரும்புபெறுகாலே - கரும்பாகியமகவைப்பெறு ங்காலத்து—கொள்வோர்ககன்றி - கொள்வோககல்லாமல்— அவ்வயல்சாயா - அவ்வயலாகிய தாயதனைத் தன்பாடசோசதுக கொள்ளாது;

இது குறிபபுருவகம.

பூம்பணைதிரிந்து பொதியவிழ்முளரியிற
காம்புபொதிநறவம விளரியோடருநதிக
கநதித்தண்டலே வந்துவீற்றிருநது
கடிமலர்ப்பொழிலிற் சிறிதுகண்படுத்து
மயககஙிறைகாமத் தியக்கஙகொண்டு
நின்றநாரணன் பரநதமார்பிற்
கலவாக்குங்கும நிலவியதென்னக
கார்வான்றந்த பேர்கொள்செக்கரில்
வீதிவாய்த்தென்றன் மெல்லென்றியங்கு
மூதூர்க்கூடல் வந்தருண்முககணன்

தென்றல்-தென்றலானது—பூம்பணைதிரிந்து-பொலிவினை யுடைய வாவியிடத்திற் சஞ்சரித்து—பொதியவிழ்முளரியில்-மு கையவிழ்ந்த தாமரையில்—காம்புபொதி- அடியினைமறைத்த— நறவும் - தேனை—விளரியோடருந்தி - பாடும் வண்டொடருந்தி —கந்தித்தண்டலே - கமுகஞ்சோலேயில்—வந்துவீற்றிருந்து - வந்துவீற்றிருந்து—கடிமலர்பபொழிலில் - வாசத்தினையுடைய மலர்ச்சோலேயில்—சிறிதுகண்படுத்து - சிறிதுகாலம்பொருந்தி —மயக்கஙிறைகாமத்து-மயககஙிறைந்தற்குக்காரணமாகிய விருப்

பத்தால்—இயக்கமுங்கொண்டு - அசைநடைகொண்டுகிடந்தது மிருந்ததுமன்றி—நின்றநாரணன் - நின்றதிருமால்—பரந்தமார் பில் - அகன்றமார்பில்—கலவாக்குங்குமம்-கூட்டிலாச்செஞ்சாந் து—நிலவியதென்ன - தங்கியதுபோல—கார்வான்றந்த - கரிய மேகஞ் செய்யசிறங்கொடுத்த—பேர்கொளசெக்கரில் - செவ்வந் தியென்னும் பேர்கொண்டகாலத்தில்—மெல்லென்று - மந்தமாக—வீதிவாய் - வீதியில்—இயங்கும் - உலாவுதற்கிடமாகிய—மூதூர்க்கூடல் - மதுரைமூதூரில்—வந்தருண்முக்கணன் - வந்தருளு முக்கண்ணினையுடையவன் ;

விளரி - ஆகுபெயர். விள்ளரி-விளரியென விகாரமாக்கித் தழுவும்வண்டெனப்பொருளுரைப்பினும் அமையும். ஓடு-வேறு வினையோடு, பெயர்-பேறெனமருவிற்று. "பெறறபேர்விண்டலர்கோதைதகு விசையையென்பவே,,யென்றாற்போல. இயங்கு மூதூர் - இடத்துநிகழ்பொருளின் றொழிலிடத்தின்மே லேறி னறது.

காமனையயனை நாமககாலனைக்
கண்ணுலுகிரான் மலர்கொள்காலாற்
சுட்டுங்கொய்து முதைத்துந்தணித்த
விட்டொளிர்மாணிகக மலையிரெருபா
லடங்கப்படர்ந்த பசுங்கொடியதனை
வளர்த்தசேண்மலை யுளத்துயர்கொண்டு
தொடர்நததுமிலை

காமனை - காமனை—கண்ணுல் - கண்ணுல்—சுட்டும் - சுட் டும்—அயனை - பிரமன் சிரத்தினை—உகிரால் - நகத்தால்—கொய்தும் - கொய்தும்—நாமக்காலனை - அச்சத்தினையுடையகாலனை —மலர்கொள்காலால்-மலர்களைகொண்ட காலால்—உதைத்து

ம் - உதைத்தும்—தணித்த - அவரவர்மதங்களைத்தணித்த—விட்டொளிர - விட்டுவிளங்காநின்ற—மாணிக்கமலையின் - மாணிக்கமலைபோல்வான்—ஒருபால் - ஒப்பற்றவிடப்பக்கத்தில்—அடங்கப்படர்ந்த - அடங்கச்சென்ற—பசுங்கொடியனை - பசுங்கொடிபோல்வாளை—வளர்த்தசேண்மலை - வளர்த்தவிமயமலையாகியதாய்—உளத்துயாகொண்டு - உளத்திற்றுன்பங்கொண்டு—தொடர்ந்ததுமிலை - அவளைத் தொடாந்ததில்லை ;

இது முறைநிரனிறையு மேகதேசவுருவகமுமாம். "கூற்றுவனைமன்மதனையரககர்கோவைக் கூனிலவைககுஞ்சரத்தை யிஞ்சிமூன்றை, யேற்றுலகின்புறவுருவ மாளத்தோள்க ளிறவெறிப்பவிமயப்பெண் வெருவவேவக, காற்றெழிலா னயனத்தால் விரலாற்கற்றைக் கதிர்முடியாற்கரதலத்தாற கணையாற்பின்னு, மூற்றழியவுதைத்துருத்து நெரித்துச்சூடி யுரித்தெரித்தோனெவனவனெம்முடையகோவே,, என்றாற்போல, நாமென்னு முரிச்சொ லீறுதிரிநதுநின்றது. மலர்கொள்கால் - அர்ச்சிககு மலர் கொண்டகால், மலரையடிமைப படுத்துங்காலெனினுமாம். மாணிக்கமலை-பசுங்கொடி குறிபபுவமை. பாவையானைபோல. இன் சாரியை.

கீழ்நடந்தசொற்கிடக்க

கீழ்நடநதசொற்கிடக்க - ஆதலால் கீழ்நடந்தசொல்லிபபடிவார்த்தையாயிருக்க ;

ஒன்றுமுதலாக் கீழ்க்கொண்டு மேலுணர்தலினென்றார் பிறரும்.

பழமைநீண்ட குன்றக்குடியினள்
வருந்தாதுவளர்த்தும்

குன்றம் - குன்றத்தின்கண்—பழமைநீண்ட - ஒருவராலுமறியப்படாத பழமையாகிய—குடியினள் - குடியினையுடையவ

ளை—வருநதாது - பணிமுதலியவற்றான் வருந்தாமல்—வளர்த்தும் - யானெடுத்துவளர்த்தும்;

"கற்றேன்றிமண்டோன்றாக காலத்தேதோன்றிய குடி,,"
யென்பார், பழமைமீண்ட குன்றக்குடியினனென்றார்.

குடங்கைதுயிற்றியும்

குடங்கைதுயிற்றியும் - கணடியில்வதறிந்து குடங்கையிடத்திற் றுயிலப்பண்ணியும் ;

மானின்குழவியொடு கெடவரல்வருத்தியும்

மானின்குழவியொடு - அழுவதறிந்து மானின் குழவியுடனே—கெடவரல்வருத்தியும - விளையாடடுண்டாக்கியும ;

பந்துபயிற்றியும்

பந்துபயிற்றியும் - பந்தாடுதலைக் கறபித்தும் ;
பந்து - ஆகுபெயர்.

பொன்கழங்குந்தவும்
பாவைசூட்டவும் பூவைகேட்கவும்

பொன்கழங்குந்தவும் - பொன்னாற்செய்த கழங்கினையாடவும்—பாவைசூட்டவும் - வண்டலம்பாவையைப புனையவும்—பூவைகேட்கவும் - நாகணவாய்ப்புள்ளின் வார்த்தைகேட்கவும் ;
பூவை யாகுபெயர். குழல் யாழ்போல.

உடைமைசெய்த மடமையள்யானென்
றெமமெதிர்கூறிய விம்மொழிதனககுப்
பெருமைநோக்கிற் சிறுமைய துண்டே

உடைமைசெய்த-உடைமையாகச் செய்த—மடமையள்யானென்று - மடமையையுடையேன் யானென்று—எம்மெதிர்கூறிய-எம்முன்னேசொல்லிய—இம்மொழிதனக்கு-இந்த வார்த்தை

க்கு—பெருமைநோக்கில் - பெருமைவிசாரிக்கில்—சிறுமையது ண்டு - அதற்குச் சிறுமையுமுண்டு அஃதேதெனில் ;

ஏகாரமீற்றசை, எச்சவும்மை தொக்கது.

பாலைக்கிழத்தி திருமுன்னூட்டிய
சூலத்தலையிற் றொடாந்துசிகைபடர்ந்து
விடுதழலுச்சம் படுகதிர்தாக்க

பாலைக்கிழத்தி - பத்திரகாளி—திருமுன்னூட்டிய - திருமுன்னூட்டிய—சூலத்தலையில்-சூலத்தினுச்சியினின்றும்—தொடர்ந்து - உண்டாகிய—சிகைபடாநது - தீகொழுந்து தொடர்ந்துபோய்—உச்சம்படு - வானத்தினுச்சியிறபட்ட—கதிர்தாக்க - ஆதித்தன்மெய்யிற் றாககுதலால் ;

இன்னிக்கம்.

பாடல்சால்பச்சைக் கோடகக்காற்றை
மையில்காட்சிக் கொய்யுளைசிறப
வயிற்றிலிருந்து வாயுமுளைத்தென்ன
விருகான்முகனிற் கருகாத்தூங்கு
படுமழனிகக

படுமழனிக்க - உண்டாம் வெபபம்நீக்க—மையில்-குற்றமில்லாத—பாடல்சால - உணாவுச்சாலவுதலமைநத—பசசைக கோடகக்காற்றை - பசிய குதிரையாகிய காற்றினை—காட்சிக் கொய்யுளைசிறப - தலையாட்ட மயிர்சிலிர்த்துசிறப—இருகால் - இரண்டுகால்கள்—வயிற்றிலிருந்து- வயிற்றின்கண்ணிருந்து—வாயுமுளைத்தென்ன - வாயினிடத்திற் றேன்றினாற்போல—முகனிற்கருகா - முகத்துககருகாகச்செல்ல—தூங்கு-முடுக்கி;

கோடகக்காற் றவயவியுருவகம். வாய்முளைத்தென்ன-இல்பொருளுவமை.

குடகடற்குளிக்கு
நாவாய்க்குறியாத் தீவாய்பாலையில்

குடகடற்குளிக்கும்-மேற்கடலிற் குளித்தற்குக்காரணமாகிய—தீவாய் - தழலின துண்மையை—நாவாய்குறியா - நாவினையுடைய வாயாலுஞ் சொல்லப்படாத—பாலையில் - பாலையிடத்தில் ;

சிறப்பும்மையு முருபுந் தொக்கது. வாயுண்மைகுறியாவென்பது-காரணங் காரியமாய்நின்றது. கருதுதலுஞ் செப்தலோடொத்தலின்.

தம்மிலின்பஞ் சூளுடன்கூடி
யொன்றிவிளைந்து சென்றுட்குடைந்து
பொன்பதிநீங்கி யுண்பதுமடங்கி
முழங்கபெருங்குரல் கூஉய்ப்
பழங்கணெய்தியது பேதைமையறிவே

தம்மிலின்பம் - தம்முளின்பம்—சூளுடன் - கற்புநிலைதவறுது—கூடி - கைவந்து—ஒன்றி - பொருந்தி—விளைந்து - முற்றியது காரணமாக—சென்றுட்கு - போனவளால்—பொன்பதி நீங்கி - அழகிய பதியைவிட்டு—உடைந்து - வருந்தி—உண்பது மடங்கி - புசிப்புமின்றி—முழங்க - திசையெங்கு முழங்க—பெருங்குரல்கூஉய் - வாய்விட்டாற்றி—பழங்கணெய்தியது - மெலிதற்குக்காரணமாகிய—பேதைமையறிவே-பேதைமையால் வந்தவறிவே—எ-று.

சென்றுட்கென்ப துருபுமயக்கம். பதிநீங்கியென்பது-பதியைநீங்கினுள் பதியினீங்கினுளென்க. "தொகையாய்மயங்கியன் னபிறவுந் தொன்னெறிபிழையா,,தென்பதனுல் உருபினும்பொருளினுமெய்தமொழி யொன்றனிலைக்களத் தொன்றுசென்றது.

உண்பதுமென்னும்உம்மை சிறப்பும்மை. கூவியென்பது-கூஉயெனத்திரிந்தது. எய்தியபேதைமை - நிலம்பூத்த மரம்போன்றது. பேதைமையறியாமை - பேதைமையாலுண்டானவறிவு. இப்பாலேயில்வரநினைத்த நினைவு. ஏகாரந்தேற்றம்.

இவ்வாறு கீழ்நடந்த சொற்கிடக்க வெம்முன்னுடைமை செய்த மடமையள் யானென்றுகூறியவார்த்தைகக்குப் பெருமை நோக்கிற் சிறுமையுமுண்டஃதேதெனில் - பாலையிற்றலைவனுடன் சென்றவளால் வருந்துதற்குக் காரணமாகிய பேதைமையால்வந்தவறிவென வினைமுடிவுசெய்க. (கஅ)

---

## மகிழ்ந்துரைத்தல்.

மகிழ்ந்துரைத்தலென்பது- மணமுரசொலிகேட்ட தோழி சிலம்பன்றந்த பெறுதற்கரிய தழைகளை வாடாமல்வைத்து அத்தழையே பற்றுக்கோடாக ஆற்றியிருந்தாளெனத் தலைமகளைத் தன்னுள்ளே மகிழ்ந்துகூறுகிற்றல். அதற்குச்செய்யுள்:—

இருந்துதி யென்வயிற் கொண்டவன் யானெப்
பொழுதுமுன்னு, மருந்து திசைமுகன் மாற்கரி
யோன்றில்லை வாழ்த்தினர்போ, லிருந்துதிவண்ட
ன வாலெரிமுன்வலஞ் செய்திடப்பா, லருந்துதி
காணு மளவுஞ்சிலம்ப னருந்தழையே. ருா

மன்னியகடியிற் பொன்னனாறுங்கோதை யை
நன்னுதற்றோழி தன்னின்மகிழ்ந்த து.

இ-ள். சிலம்பன் - சிலம்பன்றந்த—அரும் - பெறுதற்கரிய —தழை - தழைகள்—(இப்பொழுது) எரிமுன்வலஞ்செய்து - முன் தீயைவலங்கொண்டு—இடப்பால் - (பின் வசிட்ட) னிடப்

பக்கத்துத் (தோன்றும்)—அருந்துதி - அருந்ததியை—காணும
ளவும் - காணுமளவும்—இருந்துதி - (அன்பர் துதிப்ப வவர்வயி
ற்றூன்கொள்ளும்) பெருந்துதியை—என்வயிற்கொண்டவன் -
என்வயி (னுண்டாக்கிக்) கொண்டவன்—யான் - யான்—எப்
பொழுதுமுன்னுமருந்து - எப்பொழுதுமுனனும் (வண்ணஞ்
சுவையுடைத்தாயதோர்) மருந்து—(இவ்வாறெனக்கெளியனுயி
னும்) திசைமுகன்மாற்கு - திசைமுகனுக்கும் மாறகும்—அரி
யோன் - அரியோனது—தில்லை - தில்லையை—வாழ்த்தினர்போ
ல் - வாழ்த்தினரைப்போல—இருந்து - வாடாதிருந்து—திவண்
டன - விளங்கின—எ-று. திசைமுகன்மாற்கரியோனென்றது-
பிரமன் மாற்கரியோனென்று நிகண்டாதிகளிற்கூறிய சிவநாம
மாயிற்று.

என்றது - தழைகளை வாடாமல்வைத்து அத்தழையேபற்
றுககோடாக ஆற்றியிருந்தாளெனத் தலைமகளை மகிழ்ந்துகூறிய
வாறு. திவண்டனவென்பதற்கு - வாடாதிருந்து இவளைத்தீண்
டியின்புறுத்தினவென் றுரைப்பினுமமையும். தழைவாடாதிரு
ந்தனவென்றது - முன்னர்த்தான் அவன்றந்த தழையையேற்ற
முகூர்த்தத்தைக் கொண்டாடியவாறு. மெய்ப்பாடு - உவகை.
பயன் - மகிழ்தல். வேயினமென்றேளென்னு மதுதொட்டு இ
துகாறும்வர இப்பாட்டுப் பத்தொன்பதும் அறத்தொடுநிலையி
னையும், அதன்பின்னர் வரைதலையு நுதலினவென்பது. (௩00)

நேரிசையாசிரியப்பா.

குங்குமக்கோட்டல ருணங்கலர்கடுக்கும்
பங்குடைச்செங்காற் பாட்டளியரிபிடர்க்
குருவிற்றேய்ந்த வரிகெழுமரகதங்
கல்லெனக்கிடப்பச் சொல்லியமேனித்

திருநெடுமாலுக்கொருவிசைபுரிந்து
சோதிவளாபாக மீந்தருணித்தன்
முனிவரோமுற வெள்ளியம்பொதுவின்
மனமுங்கண்ணுங் கனியக்குனிக்கும்
புதியநாயகன் பழமறைத்தலைவன்
கைஞ்ஞின்றவன்செங் கால்கண்டனர்போல்
விளக்கமுமபுதுமையு மளப்பில்காட்சியும்
வேறுபெடுதருக் கூறுவதுநீக்கமு
மறிவோர்காணுங் குறியாயிருந்தன
விருந்திண்போர்வைப் பிணிவிசிமுரச
முன்னமெள்ளினர் நெஞ்சுகெடததுவைப்ப
மணங்கொள்பேரணிபெருங்கவின்மறைத்தெல்
றெழுமதிகுறைத்த முழுமதிக்கருங்கயல்
வண்டுமருவி யுண்டுகளியாது
மற்றதுபூத்த பொற்றிதழ்தாமரை
யிரண்டுமுகிழ்செய்து நெஞ்சுறப்பெருகும்
வற்றுமேனி வெள்ளத்துண்மறிய
நுனித்தலையந்தணர் கதழெரிவளர்த்துச்
சிவந்தவாய்தோறும் வெண்பொரிசிதறச்
செம்மாந்துமணந்த வளியகூரெரி.
மும்முறைசுழன்று தாயருண்மகிழ
வில்லுறைகல்லின் வெண்மலர்பரப்பி
யிலவலர்வாட்டிய செங்கால்பிடித்துக்
களிதூங்குளத்தொடு மெல்லெனச்சேர்த்தி
யிரண்டுபெயர்காத்த தோலாக்கற்பு
முகனுறக்காணுங் கரியோர்போல

இரண்டுமுகிழ்செய்து நெஞ்சுறப்பெருகும்
வற்றாமேனிவெள்ளத் துணமறிய

மணங்கொள்பேரணி-கலியாணவணியாகியபாசடை—பெருங்கவின்மறைத்ததென்று - எல்லாவற்றினுஞ்சிறந்த வழகான வெள்ளத்தை மறைத்ததென்று—வண்டு - முலைக்கண்ணாகிய வண்டு—மருவி - பொருந்தி—உண்டு - தேனுகாந்து—களியாது - களியாமல்—மற்றது - அவ்வண்டு—திகழ்-திகழாநின்ற—இரண்டு - முலையாகியவிரண்டு—பொற்றாமரை - பொற்றாமரை—முகிழ்செய்து - அரும்பி—பூத்த - பூத்த—நெஞ்சுற - நெஞ்சாகியவாவியில்—வற்றாபபெருகும - குறையாதுபெருகும்—மேனி - நிறமாகிய—வெள்ளத்துள - வெள்ளத்துள்—எழுமதி-விண்ணிலெழுநதமதியை—குறைத்த - பிறையாககிய—முழுமதி - முகமாகிய முழுமதியிடத்துணடாகிய—கருஙகயல் - விழியாகிய கரியகயல்கள்—மறிய - மறிய ;

மேனி வெள்ளத்தின் மறியவெனவே கவினையும் வெள்ளமாக ரூபகம்பண்ணினா. வண்டு தாமரை நெஞ்சுறவெனவே-முதலைக்கூறச் சினையறி கிளவியாயிற்று. "தாமச்செபபிணை முகட்டுத்தண்கதிர்விடு நீலமாமணிதாபித்தனைபோன் மனம்பருகு கருங்கணணவென்றதனைச் சினையிறகூறு முதலறிகிளவி,, யென்றாற்போல, எழுமதிகுறைதத முழுமதி குறிப்பினால்வந்த வுவமையுருவகம். இவையெல்லா மாட்டேறெலாவுருவகம். "அஞ்சவருதானை யமனொன்னுநீளவயலில், வெஞ்சினம்வித்திப்புகழ் விளக்குஞ் - செஞ்சுடாவேற், பைங்கட்பனைத்தாட் பகட்டுழவனல்கலா, லெங்கட்கடையாவிடர்,, என்றார் வெண்பாமாலையினும். அது "மாட்டேறின்றி வருதலுமுரித்தே கூட்டியாளுங் குறிபபினானே,, என்பதனானறிக.

நுனித்தலையந்தணர் கதழெரிவளர்த்துச
சிவந்தவாய்தோறும் வெண்பொரிசிதற

நுனித்தலை - குடிமித்தலையையுடைய—அந்தணர் - வேதியர்—கதழெரி - வேகத்தையுடையவக்கினியை—வளர்த்து - வளர்த்து—சிவந்தவாய்தோறும் - சிவந்தவிடங்தோறும்—வெண்பொரிசிதற - வெள்ளைபபொரியைச்சிந்த ;

நுனியையுடைய குடுமியை நுனியென்றதாகுபெயர். கூர்த்தலையுடைய வந்தணரொன்று பொருளுணாக்கி லைகாரமசை. "கோணைக்களிற்றுக் கொடித்தேரிவுளி,, யென்முறபோல. சிதறி - சிதற.

செம்மாந்துமணந்த வளியகூரெரி
மும்முறைசுழன்று தாயருண்மகிழ

செம்மாந்து - அகமலர்ந்து—மணந்த - கூடுதற்குக்காரணமாகிய—அளிய - கிருபைமிகுதிபோல்—கூரெரி - மிகுந்தவோமாக்கினியை—தாயருண்மகிழ - தாயருண மகிழும்படி—மூமமுறைசுழன்று - மூன்றுமுறைசுற்றி;

அகரம் - அசை, "ஆளியமொய்மப னிருந்தவப்பூம்பொழில்,, எனறுபோல.

இல்லுறைகல்லின் வெண்மலர்பரப்பி
யிலவலர்வாட்டிய செங்கால்பிடித்துக்
களிதூங்குளத்தொடு மெல்லெனச்சேர்த்தி

இல்லுறைகல்லின் - அம்மியில்—வெண்மலர்பரப்பி-வெள்ளைப்பூவைப்பரபப—இலவலாவாட்டிய - இலவம்பூவைவருத்திய—செங்கால்பிடித்து - சிவந்தகாலைப்பிடித்து—களிதூங்குளத்தொடும் - களிப்புச்செறிந்த வுள்ளத்தோடும்—மெல்லெனச்சேர்த்தி - பையவைத்து;

இல்லுறைநல்-அம்மி, பரப்பி-பரப்ப, ஞெமி - உடனிகழ்ச்சி. மெல்லெனவென்பது "பஞ்சிகொண்டூட்டினும் பையெனப்பை யென வஞ்சிப்பின்வாங்குமடி,, என்றாற்போலநின்றது.

இரண்டுபெயர்காத்த தோலாக்கற்பு
முகனுறக்காணுங் கரியோர்போல
விடப்பானிறுத்திப் பக்கஞ்சூழ
வடமீன்காட்டி

. தோலா-தோலாத—இரண்டுபெயர் - இருவரும்—காத்த-காத்ததனுல்வந்த—கற்பு - கற்பினை—முகனுறககாணும் - பொருந்தக்காணும்—கரியோர்போல - சான்றாயினார்போல—இடப்பானிறுத்தி-தலைவியிடப்பாகந் தனக்குவலமாகநிறுத்தி—பக்கஞ்சூழ - சுற்றத்தார் சூழும்படி—வடமீன்காட்டி - அருந்ததியை ககாட்டி;

எண்ணும்மை தொக்கது. காத்தகற்பு-உண்டவெச்சில்போலநின்றது. தலைவன் கந்தருவவழக்கம்போலப் பிரியாது வரைந்தமையானுந் தலைவி பிறர்வரைவுக்கஞ்சி யறத்தொடுநிற்றலானும் இருவருங்காத்ததனுல் வந்தகற்பென்றார். இது விபரீதவுவமை. உவமையாய்வருவதனைப் பொருளாக்கிப் பொருளை யுவமையாக்குதலின் களவின்வழிவந்தகற்புங் களவின்வழிவாராக் கற்புந் தம்மிடத்திற் பொருந்தக்காணுஞ் சான்றாயினார்போல வடமீன்காட்டி யெனினுமாம். களவின்வழிவந்தகற்புக் கந்திருவர்கற்பு, களவின்வழிவாராக்கற்பு உலகக்கற்பு, இது உலகக் கற்பன்மையானுங் கந்தருவவழக்கமொத்தமையானுங் கரியோர் போலவென்றார்.

விளககணியெடுத்துக்
குலவாழ்த்துவிம்ம மணவணாபபககாற
கட்புலங்கொண்ட விப்பணியளவும்

விளக்கணியெடுத்து-ஆயிரம் பெருந்திரியெடுத்து—குலவாழ்த்துவிம்ம - குலத்தோர்வாழ்த்தும் வாழ்த்தொலிபெருக-மணவணிப்பக்கம் - திருமங்கிலியத்தைப பூட்டும்பகுதி—இக்கட்புலங்கொண்ட - இக்கண்ணிடங்கொண்ட—பணியளவும் - அமைதிமட்டும்;

'பக்கம் - பகுதி, பகுதிக்கிளவியைப் பக்கச்சொல்லென்றார் தொல்காப்பியனாரும்.

குங்குமக்கோட்டல ருணங்கல்கடுக்கும்
பங்குடைச்செங்காற் பாட்டளியரிபிடாக
குருவிற்றோய்ந்த வரிகெழுமரகதங்
கல்லெனகிடப்பச் சொல்லியமேனித்
திருநெடுமாலுக் கொருவிசைபுரிந்து
சோதிவளர்பாக மீந்தருணித்தன்

குங்குமக்கோட்டு - குங்குமமரத்தினது கொம்பில்—உணங்கல் - வாடுதலையுடைய—அலர்கடுக்கும் - பூவைப்போலும்—பங்குடைச்செங்கால்-வளைவினையுடையசெய்யகாலினையும்—பாட்டளி - பாட்டினையுமுடையவண்டினது—அரிபிடர் - அரிந்தாற்போலும் பிடரில்—குருவிற்றோய்ந்த - நிறமுமொளியும்பொருந்திய—அரிகெழுமரகதம் - மரகதமலையானது—கல்லெனக்கிடப்ப - கல்லென்றுசொல்லும்படிகிடப்ப—சொல்லியமேனி-சொன்ன திருமேனியினையுடைய—திருநெடுமாலுக்கு - விட்டுணுவுக்கு—ஒருவிசைபுரிந்து - ஒருதரம் விரும்பி—சோதிவளர் - சோதியாகவளராநின்ற—பாகமீந்தருணித்தன் - வலப்பாகத்தைக்கொடுத்த நித்தன்;

உணங்கல்கடுக்கும் பங்குடைச்செங்கால் தொழிலும்பண்பும் பற்றியவுவமை. அரிபிடர் - வடுத்தான்வகிர்கண்ணிபோன்

றது. எண்ணும்மை தொக்கது. மரகதங் கல்லெனக்கிடப்பச் சொல்லியமேனி, "கொடியார்கொடுமை யுரைகருந்தொடியொ டு தொல்கவின்வாடியதோ,,ளென்றாற்போலுங் குறிப்புச்சொல் தன்சோதிவளர்ந்த பக்கமதுவாதலின் வலமாயிற்று.

முனிவரோமுற வெள்ளியம்பொதுவின்
மனமுங்கண்ணுங் கனியக்குனிக்கும்
புதியநாயகன் பழமறைத்தலைவன்
கைஞ்ஞின்றவன்செங் கால்கண்டனர்போல்

முனிவர்-பதஞ்சலி முதலோர்—மனமுங்கண்ணுங்கனிய-மனமுங்கண்ணுங்கனியும்படி—ஏமுற -விரும்ப—வெள்ளியம் பொதுவில் - வெள்ளியம்பலத்தில்—குனிக்கும்-நடிக்கும்—புதி யநாயகன்-புதுமையையுடையமுதல்வன்—பழமறைத்தலைவன்-பழையவேதத்துக்கு முதன்மையானவன்—கைஞ்ஞின்றவன்-ஒழுக்கத்தினின்றவன்—செங்கால்கண்டனர்போல் - சிவந்தபாத த்தைக்கண்டவர் தமகருத்தாமேயுவமையாயினாற்போல;

விளக்கமும்புதுமையு·மளப்பில்காட்சியும்
வேறெப்படுத்துக் கூறுவதுநீக்கமு
மறிவோர்காணுங் குறியாயிருந்தன

விளக்கமும் - காந்தியினாலும்—புதுமையும் - (காணுந்தோறும்) புதுமையினாலும்—அளப்பில்காட்சியும் - எண்ணப்படாத காட்சியாலும்—(தமக்குத்தாமே யொப்பாய்) வேறெப்படுத் துக் கூறுவதுநீக்கமும் - வேறொப்பிலாமைக்கும்—அறிவோர் காணும் - பெரியோர்காணும்—குறியாயிருந்தன - இலக்காயிரு ந்தன—எ-று.

விளக்கத்தாலும் புதுமையாலும் காட்சியாலு மென்பன வுருபுதொடர்ந் தடுக்கிய வேற்றுமைக்கிளவி. "ஒருசொன்ன

டைய பொருள்சென்மருங்கே,, என்றவிதியான் "வரிமணித்தூ தையும் பாவையும் என்முற்போன்றன. இது ஏதுவோடுகூடிய பொதுநீங்குவமை. பொருளடையை யுவமைக்கும் வருவிக்க.

இத்தன்முகள் மங்கிலியத்தைப்பூட்டும்பகுதி கண்ணிற்கா ணுமளவும் வேறுப்பிலாமைகளும் பெரியோர்காணு மிலக்காயி ருந்தனவென வினைமுடிவுசெய்க.

தமைகள் வாடாதுவைத்தது பற்றுக்கோடாக வாற்றி னளென வேறறமுகிழ்த்தத்தைப் பாங்கிகொண்டாடி மகிழ்ந் தாள். (கக)

---

## பிறைதொழுகென்றல்.

பிறைதொழுகென்றலென்பது - பிறையைக்காட்டித்தான் றொழுதுநின்று, நீயும இதனைத் தொழுவாயாகவெனத் தோழி தலைமகளதுபுணர்ச்சிநினைவறியாநிற்றல். அதற்குச்செய்யுள்:—

மைவார்கருங்கண்ணி செங்கரங்கூப்புமறந்தும
ற்றப், பொய்வானவரிற் புகாதுதன்பொற்கழற் கே
யடியே, னுய்வான்புகவொளிர் தில்லைநின்றோன்சு
டைமேலொத்துச், செய்வானடைந்த பசுங்கதிர்
வெள்ளைச் சிறுபிறைக்கே. கூள

பிறைதொழுகென்று பேதைமாத னா
நறுநுதற்பாங்கி நாணநாட்டிய து.

இ-ள். மறந்தும் - மறந்தும்—பொய்-பொய்மையையுடை ய—மற்றவானவரில் - அவ்வானவரிடத்து—புகாது - புகாம ல்—தன் - தனது—பொற்கழற்கே - பொன்னாலியன்றகழலை யுடைய திருவடிகளிலே—அடியேன் - அடியேன்—உய்வான்-உ

ப்பவேண்டி—புகவொளிர - புகவிளங்கும்—தில்லைநின்றோன் - தில்லைக்கட் கட்புலனுயநின்றவனுடைய—சடைமேலது- சடைக்கண்ணதாகிய (பிறையை)—ஒத்து - ஒத்து—செய்வானடைந்த - செக்காவானையடைந்த—பசுங்கதிர் - செவ்விக்கதிரையுடைய—வெள்ளை - வெள்ளையாகிய—சிறுபிறைக்கு - சிறியபிறைக்கு—மை - மையையுடைய—வார் - நெடிய—கருங்கண்ணி - கரியகண்ணினையுடையாய்—செங்கரம் - நினது செய்ய கைகளை—கூப்பு - கூப்புவாயாக—எ-று.

மறந்துமென்பது - ஈண்டு அறியாதுமென்னும் பொருட்டாய்நின்றது. மறறு - அசைநிலை. மறைறயென்பது பாடமாயின் அல்லாத பொய்வானவொனறுணாக்க. இனமல்லராயினும் இனமாக உலகத்தாரால் கூறப்படுதலின அவவாறுகூறினா. "மூவரொன்றே யெம்பிரானெனுமெண்ணி,, எனபதாஉம் அககருத்தேபற்றிவந்தது. பிறர்கூறும்பெருமை அவாககினமையிற பொய்வானவொன்றுா. எனககுப பொறியுணாவல்ல தின்மையிற கண்கவரும திருமேனிகாட்டி எனனைவசித்தானென்னுங் கருத்தான் உய்வாளபுகத்தில்லை நின்றோனென்றுா. சடை - செக்கர் வானத்திற்குவமை. (சுஎ)



நேரிசையாசிரியப்பா.

நெடுவளியுயிர்த்து மழைமதமொழுக்கி
யெழுமலைவிழுமலை புடைமணியாக
மீன்புகர்நிறைந்த வான்குஞ்சரமுகம்
வால்பெறமுளைத்த கூன்கோடானும்
பேசநீண்ட பஞ்சீனிலையிய
வானக்கடலிற் றோணியதானுங்

கொழுநர்க்கூடுங் காமவுததியைக்
கரைவிடவுகையு நாவாயானுங்
கள்ளமர்கோதைய வெள்ளணிவிழவி
லெங்கணைக்கிழவன் காட்சிபுண்மகிழ
விழைந்துவளைத்த கருப்புவில்லானு
நெடியோன்முதலாந் தேவர்கூடி
வாங்கிக்கடைந்த தேமபடுகடலி
னமுதுடன்றோன்றிய வுரிமையானு
நின்றிருநுதலை யொளிவிசும்புடலி
லாடிநிழற்காட்டிய பீடதுவானும்
கரையறவணியு மானக்கலனுட்
டலைபெறவிருந்த நிலைபுகழானு
மண்ணகமனைந்துநிறைந்தபல்லுயிர்கட்
காயாவமுத மீகுதலானும்
பாற்கடலுறங்கு மாயவன்போலத்
தவளமாடத் தகன்முதுகுபற்றி
நெடுங்கார்கிடந்து படுமபுனல்பிழியுங்
கூடல்வீற்றிருந்த நாடகக்கடவுள்
பொறசுடர்விரித்த கொத்தலர்கொன்றையுந்
தாளியுமறுகும் வாலுழைஎருக்கமுங்
கரந்தையும்வன்னியு மிடைந்தசெஞ்சடையி
லிரண்டைஞ்ஞூறு திரண்டமுகமெடுத்து
மட்புலனகழ்ந்து திக்குநிலைமயக்கிப்
புரியாக்கதமோ டொருபாலடங்குங்
கங்கையிற்படிந்த பொங்குதவத்தானு
மந்நெடுவேணியிற் கண்ணியெனவிருந்து

தூற்றுமறுவொழிந்த வேற்றத்தானு
மணிவான்பெற்ற விப்பிறையைப்
பணிவாய்புரிந்து தாமரைமகளே.

—*—

நெடுவெளியுயிர்த்து தாமரைமகளே. பகுதி-நாணநாட்டம், துறை-பிறைதொழுகென்றல்.

தாமரைமகளே.

(இதனதுபதபொருள)

தாமரைமகளே - பதுமினியானவளே;

திருமகளைப்போல்வாயெனக் குறிப்புவமையாகவினு மமை யும். மங்கலமாயபோழ்தின் முகமலர்ச்சியுடைத்தாய் எல்லாரு நன்குமதிக்கப்படுந தன்மையுமுடைத்தாய் விளங்குந தாமரை யைப்போலு மகளேயெனினுமமையும். இது தொழிலுவமை.

நெடுவெளியுயிர்த்து மழைமதமொழுக்கி
எழுமலைவிழுமலை புடைமணியாக
மீன்புகர்நிறைந்த வான்குஞ்சரமுகம்
வால்பெறமுளைத்த கூனகோடானும

(பிறையானது) எழுமலை-உதயகிரி—விழுமலை - அத்தமன கிரி(யிரண்டும்)—புடைமணியாக - புடைமணியாக—நெடுவெளி-நெடுவெளியாகியவுயிர்ப்பினை—உயிர்த்து - உயிர்த்து—மழை-ம ழையாகிய—மதமொழுக்கி - மதத்தினைவிட்டு—மீன் - மீனுகி ய—புகர்நிறைந்த - புகர்நிறைந்த—வான் - ஆகாயமாகிய—கு ஞ்சரமுகம் - யானைமுகத்தில்—வால்பெற - தூய்மைபெற— முளைத்த - தோன்றிய—கூன்கோடானும்-கூன்கோடாயினும்;

கூன்-வளைவு; பெயர்க்கடையாயிற்று. உளாயிடத்தியலுமு டனிலைமறித லென்பதனுற் றேன்றவேண்டி வளைந்தகோடெ

னினுமாம். வியனிலையுருவகம் "ஒன்றினங்கம்பலவிறையு முரு பிற்றுமுருபியாது மவயவியுமுணாபபது,, வியனிலையென்றமை யின் ஆகவுயிாத்தெனப் பிறவினைகொண்டது. நிறைந்தவென் னும்பெயரெசசம் நிலப்பெயர்கொண்டது. ஆயினுமென்பது-ஆ னுமெனக் குறைந்துநின்றது. ஒன்றுனுாதீச்சொலென்றுற் போல. இது மேல்வருவனவற்றிற்கு மொகரும்.

பேசநீண்ட பன்மீனிலைஇய
வானக்கடலிற் றேணியதானும்

(அது) பேசநீண்ட - சொல்லத்தொலையாத—பன்மீனிலை இய - பலமீன்கணிலைபெற்ற—வானக்கடலில் - வானுகியகடலி னின்றும்—தோணியதானும் - (இருளாகிய பாசியைநீத் துலக த்தை விளக்கமாகியகரையிலேற்றுந்) தோணிபதாயினும்;

"வானக்கடலிற்றேணி யேமப்புணையைச சுடுமென்றுற்போ லு மேகதேசவுருவகம் பன்மீனிரண்டிற்குஞ் சிலேடை,

கொழுநாக்கூடுங் காமவுததியைக்
கரைவிடவுகையு நாவாயானும்

(அது) கொழுநர்க்கூடும் - தலைவரோடுகூடுதற்குக்காரணமா கிய—காமவுததியைவிட - காமமாகிய கடலைநீங்க—கரையுகையு நாவாயானும் - (இன்பமாகிய) கரையிற்செலுத்துஞ் சம்பானு யினும்;

இது வியனிலையுருவகம்.

கள்ளமர்கோதையர் வெள்ளணிவிழவி
லைங்கணைக்கிழவன் காட்சியுண்மகிழ
விமைக்குவளைக்க காரப்பவில்லானும்

(அது) ஐங்கணைக்கிழவன் - பஞ்சபாணத்தையுடைய மன்மத ன்—கள்ளமர்கோதையர் - மதுப்பொருந்தியகோதையினையுடை

யார்—வெள்ளணிவிழவில் - பிறந்தநாள் விழவில்—உண்மகிழ விழைத்து - உள்ளமகிழும்படி செயது—வளைத்த - வளைத்த—கருபபுவில்காடசியானும - கருபபுவில்போலக் காணபபட்டதா யினும் ;

வெள்ளணிநாள் - பிறந்தநாள், வெள்ளணிநாளை வெள்ளணியென்ருர. "கரும்பகடுஞ் செம்பொன்னும் வெள்ளணிநாட் பெறுவொன்ரு வெணபாமாலையினும்.

நெடியோன்முதலாந் தேவாகூடி
வாங்கிக்கடைந்த தேம்படுகடலி
னமுதுடன்ருேன்றிய வுரிமையானும்

நெடியோன்முதலாம - விட்டுணுமுதலாகிய—தேவாகூடி - தேவர்களெல்லாங்கூடி—வாங்கிககடைந்த - வலித்துககடைந்த—தேம்படுகடலின்- பாற்கடலில்—அமுதுடன்ருேன்றிய - அமுதமாகபபிறந்த—உரிமையானும் - உரிமையினுனும;

தேம்படுகடல்-பாறகடல், பாலைத தேமெனறதாகுபெயர்.

நின்றிருநுதலை யொளிவிசும்புடலி
லாடிநிழற்காட்டிய பீடதுவானும்

நின்றிருநுதலையொளி-நின் றிருநுதலொளியை—ஆடி. - கண்ணுடி—நிழறகாட்டிய - நிழலைத் தன்னிடத்திறகாட்டினுற்போல—விசும்புடலில் - விசும்பு தன்னிடத்தில்—காட்டியபீடதுவானும்-காட்டிய பெருமையானும் ;

எடுத்துககாட்டுவமை. பீடதென்புழி அதுவென்பது பகுதிப்பொருளவிகுதி.

கரையறவணியு மானக்கலனுட்
டலைபெறவிருந்த நிலைபுகழானும்

களையறவணியும் - எல்லையின்றியணியும்—மானககலனு ள் - பெருந்தன்மையையுடைய வாபரணங்களில்—தலைபெறவி ருநத - தலையின்கணுண்டாம்படியிருந்த—சிலைபுகழானும்-சிலை யைப் புகழப்படுதலானும ;

மானங கொண்டாட்டமுமாம். "மானவேலவன்மடமாமி சையானு மேறுவனென வுரைத்ததென்றறபோல. புகழானு மெனபது - உடைதுஞ்சுவேிறறே னென்றற்போன்றது.

> மண்ணகமனைத்து நிறைந்தபல்லுயிாகட்
> காயாவமுத மீகுதலானும்

மண்ணகமனைத்தும் - பூமியனைத்தும்—நிறைந்தபல்லுயிர் கட்கு - நிறைந்தபலவுயிாகட்கு—ஆயா - விசாரித்து—அமுதமீ குதலானும் - அமுதத்தைக் கொடுத்தலானும்;

அனைத்துமெனனுமும்மை முற்றும்மை.

> பாற்கடலுறங்கு மாயவன்போலத்
> தவளமாடத் தகன்முதுகுபற்றி
> நெடுங்காாகிடந்து படும்புனல்பிழியுங்
> கூடல்வீற்றிருநத நாடககடவுள்

பாறகடல் - திருப்பாற்கடலில்—உறங்கும் - கண்டுயிலும்—மாயவன்போல - விட்டுணு கிடந்தாற்போல—தவளமாடத்து - சுதையழுத்தியமாடத்து—அகன்முதுகுபற்றி - அகன்றவிடத்தைபபற்றி—நெடுங்கார்கிடந்து - மிகுந்தமேகங்கிடந்து—படும்புனல்பிழியும் - உண்டாம்புனலைச்சொரியும்—கூடல்வீற்றிருந்த - மதுரையில் வீற்றிருந்த—நாடகக்கடவுள் - நாடகத்தையுடைய கடவுள் ;

கிடநததற்குக் கிடந்தது தொழிலுவமை, மற்றது பண்புவமை. முதலொடு சினைகொற்றுமை யுண்மையானுறங்குமெ

ன்னும் பெயரெச்சத்திற்கு மாயவனென்பது வினைமுதற்பெய ராய்நின்றது. "தெறுங்கண்ணிவந்தசிற்றம்பலவனென்றாற்போ லக் கண்ணென வொருசொல்வருவிக்க. பிழியுங்கூடல் - நிலப் பெயர்கொண்டது. நாடகமென்றது-கதைதழுவிவருங்கூத்தை யன்று கூத்தென்னும்பொதுமையை நாடகம் நாடப்பட்ட வகக் கூத்தெனினுமாம். அகக்கூத்தாவது-தேசி வடுகு சிங்களம் சா த்துவிதமுதலிய மூன்றுகுணமும்பற்றியாடுதலி னகமாக்கமா யிற்று. "அகத்தொழிற்சுவையா னகமெனப்படுமே. "தேசிவ டுகுடனே சிங்களமென்றேதினார், பேசிலிவை பிஞ்ஞகன்முன் னாடியவா-மோசையா, மொத்துடனேபாணி யுடனேயிசையுட னே, வைத்துமுதலாய்வந்திறும்,, என்றாராகலின்.

பொற்சுடர்விரித்த கொத்தலர்கொன்றையுந்
தாளியுமறுகும் வாலுழையெருக்கமுங்
கரந்தையும்வன்னியு மிடைந்தசெஞ்சடையி
லிரண்டைஞ்ஞூறு திரண்டமுகமெடுத்து
மட்புலனகழ்ந்து திக்குநிலைமயக்கி
புரியாக்கதமோ டொருபாலடங்குங்
கங்கையிற்படிந்த பொங்குதவத்தானும்

இரண்டைஞ்ஞூறுதிரண்ட-ஆயிரமாகக்கூடிய—முகமெடுத் து-முகமெடுத்து—மட்புலனகழ்ந்து-மண்ணினிடத்தை யகழ்ந் து—திக்குநிலைமயக்கி - திக்குநிலைகளை மயக்கி—புரியாக்கதமொ டு-(ஒருகாலமும்) விளையாதகோபத்துடனே—சுடர் - ஒளியினை யுடைய—பொற்கொத்து - பொற்கொத்தை—விரித்த - விரித் தாற்போன்ற—கொத்தலர் - கொத்தலர்ந்த—கொன்றையும்- கொன்றைமாலையும்—தாளியுமறுகும் - தாளியுமறுகும்—வாலு ழையெருக்கமும்-வாலிய விதழினையுடைய வெருக்கமாலையும்—

காரனையும் - காரன்மாலையும்—வன்னியும்-வன்னிமாலையும்—மிடைந்த - செறிந்த—செஞ்சடையில் - செஞ்சடையில்—ஒருபாலடங்கும் - ஒருபாலடங்கும்—கங்கையிறபடிந்த - கங்கையிலாடுதற்குககாரணமாகிய—பொங்குதவத்தானும் - மிகுந்ததவத்தினானும ;

முறறும்மை தொக்கது விரித்தகொத்து-வடுத்தான்வகிர்கண்ணிபோன்றது. மிடைந்தசென்னி நிலபெயாகொண்டது. செஞ்சடை-பெயாநிலைகளிவி. அது பெயர்நிலைகளிவியி னுருனவுமென்பதனுனறிக.

அங்கெடுவேணியிற கண்ணியெனவிருநது
தூறறுமறுவொழிநத வேறறத்தானும

அங்கெடுவேணியில் - அக(கங்கையமைந்த)நீண்டசடையில்—கணணியெனவிருநது -சூடும்பூவர்கவிருந்து—தூற்றும் - (உலகந)தூற்றுதற்குக(காரணமாகிய)—மறுவொழிநத - மறுவொழிந்ததனலவநத—எற்றத்தானும் - ஏறறத்தானும் ;

மதியைக கண்ணியாகக்கூறினு. "செழுநீரமதிக்கண்ணிச் சிற்றம்பலவனே கொய்ம்மலாககோனறை மாலைகளுளிர்மதிக் கணணியாக,,வெனறுற்போல. தூறறுமறுநிலம்-பூத்தமரமபோனறது. ஒழிந்தவேற்றம் - உண்டவெச்சில்போன்றது

அணிவான்பெற்றவிப் பிறையைப
பணிவாய்புரிந்து

அணிவான்பெற்ற - அழகியவானையிடமாகபபெற்ற—இபபிறையை - இப்பிறையை—புரிந்து - விரும்பி—பணிவாய்-பணிவாயாக—எ-று.

தாமரைமகளே, இபபிறையானது கோடாயினுந் தோணியாயினு நாவாயாயினும் விறபோலக காணப்படுவ தாயினுங

தொழுதற் கமையாதெனினு முரிமையினாலும் பெருமையினாலும் புகழப்படுதலினாலு மீகுதலானுந் தவத்தினாலு மேற்றத்தினாலும பணிவாயென வினைமுடிவுசெய்க. (உ0)

---

## ஆற்றாமைகூறல.

ஆற்றாமைகூறலென்பது - தலைமகளது வருத்தங்கணட தோழி, காதலர் கானகத்தையுடைய சுரத்தைபபோய்ப பொருட்டேட நினையாநின்றாரென்று யான்சொல்லுமளவில், அவளது முலையுங் கண்ணும பொனனும் முத்துநதாராநின்றன, இனிநீ சேட்சென்று தேடும்பொருள் யாதோவெனத தோழி தலைமகனுக்கு அவளது பிரிவாற்றாமைகூறாநிறறல். அதற்குச்செய்யுள்:

வானக்கடிமதிற் றில்லையெங்கூத்தனை யேத்தல
ர்போற், கானககடஞ்செல்வர் காதலரென்னக்கதி
ர்முலைகண், மானக்கனகந் தருமலர்க்கண்கண்முத்
தம்வளர்க்குந், தேனக்கதாராமன்ன னென்னேயினி
னிச்சென்று தேர்பொருளே. கஉரு

ஏழை யழுங்க த்
தோழிசொல்லிய து.

இ-ள். வானம் - முகில்களையுடையதாகிய—கடி - காவலையுடைய—மதில்-மதிலாற்சூழப்பட்ட—தில்லை-தில்லையில்—எங்கூத்தனையேத்தலாபோல்-எங்கூத்தனையேத்தாதவர்போல—காதலர்-காதலர்—கானக்கடஞ்செல்வரென்ன-கானகத்தையுடைய சுரத்தைச் செல்வரொன்றுசொல்ல—கதிர்முலைகள் - ஒளியையுடையமுலைகள்—மானம்-கொண்டாடப்படும்—கனகம்- பொன்னை—தரும்-தாராநின்றன—மலர்க்கண்கள் - மலர்போலுங்கண்

கள்—முத்தம்-முத்தத்தை—வளர்க்கும்-பெருக வுண்டாக்காநி ன்றன—(அதனான்) தேனக்க - தேனொடு மலர்ந்த—தார்மன்ன ன் - தாரையுடையமன்னன்—இனிச்சென்றுதேர்பொருள் என் னோ - இனிச்சேட்சென்று தேடும்பொருள் யாது—எ-று.

மானமென்றது - அளவை, அளவையென்பது - பிரமாண ம். மாறறுணிப்பொருளென்றுரைப்பினு மமையும். மன்னனெ ன்பது - ஈண்டு முன்னிலைக்கண்வந்தது. இயல்புவிளியென்பா ருமுளர். மெய்ப்பாடு - இளிவரலைச்சார்ந்த பெருமிதம். பயன்- அது. (௯௯௫)

---

நேரிசையாசிரியப்பா.

பொருப்புமலிதோளினு நெருப்புமிழ்வேலினுஞ்
செந்திருமகளைச் சயங்கொண்மங்கையை
வற்றாக்காதலிற் கொண்டமதியன்றிக்
களவலர்தூற்றுந் தளவுகொடிநடுங்க
வேயுளம்பட்டுப் பூவைகண்கறுக்கத்
தண்டாமயல்கொடு வண்டுபரந்தரற்றக்
காலங்கருதித் தோன்றிகைகுலைப்பத்
துன்புபசப்பூருங் கண்ணிழறன்னைத்
திருமலரொடுத்துக் கொன்றைகாட்ட
விறைவளையில்லா நென்பனிநிலைக்கக்
கோடல்வளைந்த வள்ளலருகுப்பக்
கண்டுளிதுளிக்குஞ் சாயாப்பையுளைக்
கூறுபடநாடி யாசையொடுமயங்கிக்
கருவிளைமலர்நீ ரருகுமின்றுகுப்பப்
பேரழல்வாடை யாருயிர்தடவ

விளைக்குங்கால முளைந்தகாலை
யன்புற்றூரு நண்புநடுநிலையுந்
தலையாவறிவு முடையோய்நீயே
யெழுந்துகாட்டிப் பாடுசெய்கதிர்போற்
றோன்றிநில்லா நிலைப்பொருள்செய்ய
மருங்கிற்பாதி தருந்துகில்புனைந்தும்
விளைவயலொடுங்கு முதிர்நெல்லுணவினுங்
காமமில்வீழுநர்க கின்பமெனவறிந்துந்
தண்மதிகடுஞ்சுடா வெவ்வழல்கண்வைந
தளவாப்பாத மண்பரப்பாகந
தனிநெடுவிசும்பு திருவுடலாக
விருந்திசைப்போகருப் பெருந்தோளாக
வழுவறுதிருமறை யோசைகளனைத்து
மொழிதரநிகழும வார்த்தையாக
வுண்ணிறைந்துழலும் பாடிரண்டுயிர்ப்புப்
பகலிரவொடுங்கா விடுவளியாக
வடுபடைப்பூழியன் கடுமுரண்பற்றி
யிட்டவெவநகொடுஞ் சிறைப்பட்டகார்க்குலந்
தளையொடுநிறைநீர் விடுவனபோலப்
புரசையொடுபாச மறவுடனிமிர்ந்து
கூடமுங்குந்துஞ் சேறுநின்றலைப்ப
மூன்றுமதநெடும் புனல்கான்றுமயலுவட்டி
யேழுயாகரித்திரள் கதமொடுபிளிறும்
பெருநகர்க்கூட லுறைதருகடவுளை
நிறையப்பேசாக் குறையினர்போலவுங்
கல்லாமனனினுஞ் செல்லுதிபெரும

விளைமையுமின்பமும் வளனுங்காட்சியும்
பின்புறநேடின முன்பவையன்றி,
நுனித்தமேனித் திருவினட்கடைத்த
வினைதரு மடைவினல்லது
புனையக்காணேன் சொல்லாயினவே. உக

—*—

பொருப்புமலிதோளினும் சொல்லாயினவே. பகுதி - பொருள்வயிற்பிரிதல், துறை-ஆற்றருமைகூறல்.

பொருப்புமலிதோளினு நெருப்புமிழ்வேலினுஞ்
செந்திருமகளைச் சயங்கோண் மங்கையை
வறுகாதலிற கொண்டமதியன்றி

(இதனதுபதப்பொருள்.)

பொருப்பு-மலையினதுயர்ச்சியினும்—மலி-மிகுந்த—தோளினும் - தோளின்கணணும்—நெருப்புமிழ்- அக்கினியைக்ககககாநின்ற - வேலினும்-வேலின்கணணும்—வறுககாதலில்-தணியாதகாதலால்—செந்திருமகளை - சிவந்ததிருமகளையும்—சயங்கொண்மங்கையை - வீரமகளையும்—கொண்டமதியன்றி - கொண்டதனுல்வந்தமதியன்றி;

பொருப்பாகுபெயர். நீககபபொருட்கண்வரு மின்னுஞ் சிறப்பும்மையுந் தொக்கது. இன்னிரண்டுஞ் சாரியை. ஏழாமுருபுவிரிகக.

அன்புஞ்சூளு நண்புநடுநிலையுந்
தடையாவறிவு முடையோய்நீயே

அன்பும்-(எல்லாவுயிர்கண்மேலுஞ்செல்லுமருள்விளககுமபயனும்இல்லறமினிதுநடத்தற்பயனுந்தரு)மன்பும்—சூளும்-நின்னிற்பிரியேனென்ற்றலாணையும்—நண்பும்-காதலுடைமையும்—நடு

நிலையும் - (பகைநொதுமனண்பென்னு மூன்றினு மறத்தின்வழு, வா) தொப்பமிற்கு நிலைமையும்—தடையாவறிவும்-கல்விகேள்வி களிற்றடைபடாவறிவும்—உடையோய்நீயே - உடையை நீயா தலால்;

தடைபடாவறிவு உண்மையறிவு, கல்வியறிவு அறமுதலி யநூல்களைக் கற்றவறிவு, கேள்வியறிவு அந்நூற்பொருளைக் கற் றறிந்தார்கூறக் கேட்டவறிவு.

மருங்கிற்பாதி தருந்துகில்புனைந்தும்
விளைவயலொடுங்கு முதிர்நெல்லுணவினுந்
தம்மில்வீழுநர்க் கின்பமென் றறிந்தும்

மருங்கிற்பாதிதரும் - மருங்குலிற் பாதி வெளிகாட்டும்—துகில்புனைந்தும்-துகிலையுடுத்தும்—விளைவயலொடுங்கும்- விளை ந்தொடுங்கும்வயலில்—உதிர்நெல் -உதிர்ந்தநெல்லாலுண்டாகிய—உணவினும் - உணவினாலும்—தம்மில்வீழுநர்க்கு-தம்மிலொ ழுக்கத்தைவிரும்பினவர்க்கு—இன்பமென்றறிந்தும் - இன்பமெ ன்றறிந்தும்;

நீயேயென்னு மேகாரத்தைப்பிரித்து விரும்பினர்கேயெ னத் தேற்றேகாரமாகக்கூட்டுக. உம்மை யெச்சவும்மை. மற்ற து கையாற்பொத்தினமை தோன்றிற்று.

இளமையுமின்பமும்.வளனுங்காட்சியும்
பின்புறநேடின முன்பவையன்றி

நேடினமுன்பவையன்றி - பண்டு தேடினபொருளன்றி—இளமையுமின்பமும் - இளமையுமின்பமும்—வளனும்-பெற்ற செல்வமும்—காட்சியும் - காட்சியும்—பின்புற - பிற்பட;

எழுந்துகாட்டிப் பாடுசெய்கதிர்போற்
றேன்றிநில்லா நிலைப்பொருள்செய்ய

எழுந்து - காலையிலெழுந்து—காட்டி-தன் கிரணங்காட்டி—பாடுசெய்கதிர்போல்-மாலையிற்படு மாதித்தனைப்போல—தோன்றிநில்லா - உண்டாய் நில்லாத—நிலைபொருள்செய்ய-பொருளைத்தேட;

தண்மதிகடுஞ்சுடர் வெவ்வழல்கண்வைத்
தளவாப்பாத மண்பரப்பாகத்
தனிநெடுவிசும்பு திருவுடலாக
விருந்திசைப்போக்குப் பெருந்தோளாக
வழுவறுதிருமறை யோசைகளனைத்து
மொழிதரநிகழும் வார்த்தையாக
வுண்ணிறைந்துழலும் பாடிரண்டுயிர்பபுப்
பகலிரவொடுங்கா விடுவளியாக

தண்மதி - குளிர்ந்தமதியினையும்—கடுஞ்சுடர்-கடியசுடரினையுடையவாதித்தனையும்—வெவ்வழல் - வெவ்வியவழலினையும்—கண்வைத்து - கண்ணாகப்பெற்று—மண்பரப்பு - பூமிப்பரப்பு—அளவா - எவராலுமளக்கப்படாத—பாதமாக - திருவடியாக—தனிநெடுவிசும்பு - ஒப்பற்றநெடியவாகாசம்—திருவுடலாக - திருவடிவாக—இருந்திசைப்போக்கு - பெருமையினையுடையதிசைப்பரபபு—பெருந்தோளாக - பெரியதோளாக—வழுவறுதிருமறை - குற்றமற்ற வழங்கியவேதத்தின்—ஓசைகளனைத்தும்-சுரங்களனைத்தும்—மொழிதரநிகழும் - சொல்லநிகழும்—வார்த்தையாக - வார்த்தையாக—பகலிரவொடுங்கா - பகலுமிரவு மொடுங்காது—விடுவளி-விடுமுயிர்ப்பு—உண்ணிறைந்து - உள்ளேநிறைந்து—உழலும் - போக்குவரவுசெய்யும்—பாடிரண்டுயிர்ப்பாக - இரண்டுபக்கத் துயிர்ப்பாக;

அடுபடைப்பூழியன் கடுமுரண்பற்றி
யிட்டவெங்கொடுஞ்சிறைப் பட்டகார்க்குலங்

தளையொடுசிறைநீர் விடுவனபோலப்
புரசையொடுபாச மறவுடனிமிர்ந்து
கூடமுங்கநதுஞ் சேறுநின் றலைப்ப
மூன்றுமதநெடும்புனல் கான்றுமயலுவட் டி
யேழுயாகரித்திரள் கதமொடுபிளிறும்
பெருநகர்க்கூட லுறைதருகடவுளை

அடுபடை - சத்துருக்களைக்கொல்லும் படையினையுடைய—பூழியன்-பாண்டியன்—கடுமுரண்பற்றி - இந்திரன்விலகக்கியகொடிய மாறுபாடடைபபற்றி—இட்டவெங்கொடுஞ்சிறை - செயற வெவ்விதாய கொடியசிறையில்—பட்டகாரக்குலம் - அகப்பட்ட மேகத்திரளானது—தளையொடு-விலங்குடனே—சிறைநீர்-மிகுந்த புனலை—விடுவனபோல - சொரிவனபோல—ஏழுயர்கரித்திரள்-ஏழுமுழமுயர்ந்த யானைத்திரளானது—புரசையொடு-கழுத்திலிடுகயிறும்—பாசம்-பாசககயிறும்—அற-அறம்படி—உடனிமிர்ந்து - உடனிமிர்ந்து—கூடமுங்கந்தும்-தாஞ் சேரிடமுந்தறியும்—சேறுநின்று - சேறுபட்டு—அலைபப - சேர்ந்தோரை யலைப்ப—மூன்றுமதநெடும்புனல் - மும்மதமாகிய மிகுந்தபுனலை—கான்று - விட்டு—மயலுவடடி - மயக்கமிகுந்து—கதமொடுபிளிறும் - கோபத்தான்முழங்கும்—பெருநகர்க்கூடல் - கூடலாகிய பெரியநகரில்—உறைதருகடவுளை - பொருந்துங்கடவுளை;

தளையொடுவென்ற ஒடு வேறுவினையொடு, புரசையொடுவென்ற தெண்ணொடு, முரசொடுவெரிவளை முழங்கியார்த்தனவென்றற்போல. ஏழென்பதாகுபெயர், யானைக்குத் தன்னிலக்கண மேழுமுழவுயரமாதலி னேழுயர்கரித்திரளென்றார். கதமொடுவென்னு மொடுவேற்றுமையிற்று. ஆகவுறைதருங்கடவுளென வினையும்.

நிறையப்பேசாக் குறையினார்போலவும்
கல்லாமனனினுஞ் செல்லுதிபெரும

நிறையபபேசா - முற்றுந்துதியாததனுல்வந்த—குறையின ர்போலவும்-குறையுடையார் போலவும்—கல்லாமனனினும்-ஒரு வழிப்படக்கல்லாத கயவர்மனத்தைப்போலவும்—செல்லுதிபெ ரும - குறையுடையையா யொருவழிப்படாது சுரத்திற்செல்லு கின்றனை;

ளவலாதூற்றத் தளவுகொடிநடுங்க

களவலாதூற்ற - களவலரைச் சொரியாநிற்ப—தளவுகொ டிநடுங்க - முல்லைக்கொடியசைய;

நடுங்கவென்னுஞ் சினைவினை முதன்மேனின்றது.

வேயுளம்பட்டுப் பூவைகண்கறுக்க

வேயுளம்பட்டுபபூவைகண்கறுக்க - காயாப்பூத்துத் தன்னி டங்கறுப்ப;

வேய்தல் - மலர்தல், அது வேயுளாயிற்று. செயதல்-விளை தல்-பாய்த்தல்-செய்யுள் விளையுள் பாய்த்துளானாற்போல மலை யிடுேனார் முல்லைமலர்வேய்ந்து வாய்ந்தவென்றார் சிற்றகத்தியத்தி னும். காயாமலரைச் சூடுதல்போன்று கண்கறுப்பவெனினுமா ம். வீறுசாலென்னும் பாலைக்கலியில் மரமெல்லா மலர்வேயவெ ன்றாற்போல. அம் அசை.

தண்டாமயல்கொடு வண்டுபரந்தரற்ற

வண்டு - வண்டுகள்—தண்டாமயல்கொடு-நீங்காத விருப் பங்கொண்டு—பரந்தரற்ற - எங்கும்பரந்துபாட;

காலங்கருதித் தோன்றிகைகுலைப்ப

தோன்றி - தோன்றியானது—காலங்கருதி - காலத்தைக் கருதி—கைகுலைப்ப - கைவிரிந்தாற்போலமலர;

வட்கமைந்த காரியங்களைச்சொல்ல வறியேனென வினைமுடிவு செய்க.

எழுந்துகாட்டிப் பாடுசெய்கதிரோற் றோன்றியென்பது - நாளதுசின்மை கடைநாளிதுவென் றறிந்தாருமில்லை யென்றாற் போலவும், உண்டோவுளரா ளென்றாற்போலவும், காலையிலுதித்தவாதித்தன் மாலையின்மறைந்தானென்றாரோ லெல்லாருமிறப் பொன்றமையி னுளதுசின்மையா யாயிற்று. புறந்தந்திருளிரியப் பொன்னேமியுய்த்துச், சிறந்தவொளிவளாகருந் தேரோன் - மறைந்தாற், புறவாழிசூழ்ந்த புவனத்தேதோன்றி, யிறவாது வாழ்கின்றார்யார். என்றார்பிறரும், இளமையுங்காமமும் பிற்பட வென்ப திளமையதருமை இளமையுங்காமமு நின்பாலில்லா வென்றாற்போல, தடையாவறிவுமுடையோயென்பது - தாளாண்பக்கம் அறிவினான்முயலுதலின் உரனுடையுள்ளத்தை யென்றாற்போல, நில்லாநிலைப்பொருள் செய்யவென்பது - தகுதியதமைதி தேடும்பொருண்முறைமையிற் றேடவேண்டுதலினது பாணிக்குமென்றலின் சென்றோர்முகப்பப் பொருளுங்கிடவா வென்றாற்போல, மருங்கிற்பாதி தருந்துகில்புனைந்து என்ப தின்மையதிழிவு. ஏரோகைதம்முட் டழீஇயோரோகையொன்றன் கூறுடையுடுப்பவரோயாயினு மென்றாற்போல, நேடினமுன் பவை,யன்றாலென்ப துடைமையதுயாச்சி - இளமையுங்காமமுமோராங்குபெற்றா வளமைவிளை தககதுண்டோ வென்றாற்போல, செல்லுதிபெருமவென்ப தன்பினதகலம் பிரிந்துறைந்தன்பு பெருத்தல்வேண்டா முதிர்நெல்லுணவினுந் தய்மில்வீழ்நாற் கின்பமென்றலின் பிரிநதிறைகூழாதிலைய வென்றாற்போலவும், சிறுகனிகீழ்த்துஞ்சி யொபபினுமஞ்சகறு நுதலீத்துப் பொருள்வயிற் செல்வோ,யென்றாற்போலவுமாம். துன்புபசப்பூருங் கண்ணிழறனலைத் திருமலரொடுத்துக் கொண்மைறகாட்டவென்பது - இ

றைவனை யில்லாதென்பனாயிலைக்கக் கோடல்வளைந்த வள்ளலருகு பபவென்பதும், கண்டுளிதுளிக்குஞ் சாயாப்பையுளைக் கூறுபட நாடி யாசையொடுமயங்கிக் கருவிளைமலர்ந ரருகுமின்றுகுப்பவெ ன்பதும், பேரழல்வாடை யாருயிர்தடவவென்பதும், அகற்சிய தருமை என்றேளெழுதிய தொய்யிலும்யாழின் மைந்துடை மார்பிற் சுணங்குமினைத்துக் காணென்றற்போலவும், இடைமு லைக்கோதை குழையமுயங்கு முறைநாள்கழிந லுரிமைக்காண டை யென்றற்போலவும், இதுமிகழ்ந்தது கூறியிலையலுந் தினை யே யென்றமையான் முன்னொருகாற் றலைவன்கூறக்கேட்டுத் தோழி யதனையுட்கொண்டுகூறினள். நாளதுசின்மைமுதலியவ ற்றிற்குக் கூறியவுதாரணங் கலித்தொகையிற் பாலைத்திணையி ற்காண்க. ஒன்றாத்தமரினும் பருவத்துஞ்சாரத்து மென்னுமகத் திணைச்சூத்திரத்தில் நாளதுசின்மையு மிளமையதருமையுந் தா ளாண்பக்கமுந் தகுதியதமைதியு மின்மையதிழிவு முடைமைய துயர்ச்சியு மன்பினதகலமு மகற்சியதருமையுமென்றார் தொல் காப்பியனார். (உக)

---

## தன்னுட்கையாறெய் திடுகிளவி.

தன்னுட்கையா றெய்திடுகிளவியென்பது - தலைமகனைக்கா ணலுற்றுவருந்தாநின்ற தலைமகள், இக்கண்டல் சான்றாகக்கொ ண்டு இப்புன்னையிடத்துக் கலந்தகள்வனா இவ்விடத்து வரக்க ண்டிலையோ துணையில்லாதேற்கு ஒருசொல் லருளா யென்று தன்னுட்கையாற்றை மதியொடுகூறி வினவாநிற்றல். அதற்குச் செய்யுள்:—

விண்டலையாவர்க்கும் வேந்தர்வேண்டில்லைமெ
ல் லிங்கழிசூழ், கண்டலையேகரி யாக்கன்னிப்புன்

மெய்யுறத்தணந்த பொய்யினரின்று
நெடுமலைபெற்ற வொருமகள்காண,
நான்முகவிதியே தாளந்தாக்க,
வந்தநான்முகனை யுந்திபூத்தோன்
விசித்துமிறைபாசத் திடக்கைவிசிப்ப,
மூன்றுபுரத்தொன்றி லரசுடைவாணன்
மேருக்கிளைத்த தோளாயிரத்தொடு
மெழுடல்கிளர்ந்த திரள்கலியடங்க
முகம்வேறிசைக்குங் குடமுழவிரட்டப்,
புட்காற்றும்புரு மணக்கந்திருவர்
நான்மறைப்பயனு மேழிசையமைத்துச்
சருக்கரைக்குன்றிற் றேன்மழைநான்றென
வேழ்முனிவர்க டாழுமாதவ
ரன்பினருள்ளமொ டென்புகரைந்துருக,
விரநான்கமைத்த வணிகுரல்வீங்காது
நான்மறைதுள்ளும் வாய்பிளவாது
காட்டியுள்ளுணர்த்து நோக்கமாடாது
பிதிர்கனன்மணிசூழ் முடிநடுக்காது
வயிறுகுழிவாங்கி யழுமுகங்காட்டாது,
நாசிகாகுளி வெடிகுரல்வெள்ளை
பேசாக்கீழிசை யொருபுறமொட்ட
நெட்டுயிர்ப்பெறித லெறிந்துநின்றிரட்ட
லோசையிழைத்தல் கழிபோக்கென்னப்
பேசுறுகுற்ற மாசொடுமாற்றி,
வண்டின்குரியுங் கஞ்சநாதமுஞ்
சிரல்வாணிலையுங் கழையிலைவீழ்வது

மருவியோசையு முழவின்முழக்கமும்
வலம்புரிச்சத்தமும் வெருகின்புணர்ச்சியு
மின்னுமென்றிசைப்பப் பனணியவிதியொடு
மந்தரமத்திமை தாரமிவைமூன்றிற்
றுள்ளறூங்க றெள்ளிதின்மெலிதல்
கூடியகான வன்பொடுபரவப்
பூதந்துள்ளப் பேய்கைமறிப்ப
வெஙகுளவுயிரு மின்பநிறைந்தாட
நாடகவிதியோ டாடியபெருமான்
மதுரைமாநகாச் செழியனுக்குக்
கதிர்முடிகவித்த விறைவன்மாமணிக்
காறலைக்கொள்ளாக் கையினாபோல
நீஙகினாபோக்கு மீங்குழிவருவதுங்
கண்டதுகூறுதியாயி
னெண்டகப்போற்றிநின் கால்வணங்குதுமே. உஉ

---*---

நீர்நிலைநின்று நின்றுளவணங்குதுமே. பகுதி-இரவிற்குறி, துறை - தன்னுட்கையாறெய்திடுகிளவி. *

நீர்நிலைநின்று கால்கறுத்தெழுந்து
திக்குநிலைபடாந்த முகிற்பாசடையும்

(இதனது பதப்பொருள்)

நீர்நிலை - கடலினிடத்து—நின்று - இடையறாதுண்டுநின்று—கால்கறுத்தெழுந்து - இடங்கறுத்துயாந்து--திககுநிலைபடர்ந்த - திசைகளைநிலையாகச்சென்ற--முகிற்பாசடையும - மேகமாகிய பசியவிலையையும்;

நிலைநீர்கடலது பின்மொழிநிலையாய் நீர்நிலையாயிற்று. அடை கனைபோல நீர்நிலைநின்றென்பது வானினறுலகம் வழங்கியென் ருற்போன்றது.

இடையிலடையுகளு மீனுமீனும்

இடையிடையுகளும் - இடையிலேயிடையிலேபெயரும்— மீனுமீனும - நாணமீனுகிய மீனையும் ;

செம்முகிற்பழநுரை வெண்முகிற்புதுநுரை

யெஙகுஞ்சிதறிப பொங்கியெழுவனபபும

செம்முகில்-சிவந்த மேகமாகிய—பழநுரை - பழைய நுரை யையும—வெண்முகில் - வெள்ளைமேகமாகிய—புதுநுரை - புதி ய நுரையையும்—எங்குஞ்சிதறி - தன்னிடமெங்குஞ்சிதறி—பொ ங்கியெழுவனப்பும் - மிகுந்தெழாநின்ற வழகினையும் ;

வினைமுதலல்லாத கருவிமுதலாயின வவவினை முதல்வினை க்குச் செய்விப்பனவாமாதலாற் சிதறியெனச செய்விபபதாகக கூறினர். "வேயதந்தவெண்முத்தஞ் சிந்துபைங்கார்வரை மீன் பரப்பிச் - சேய்தந்தவானக மானுஞ்சிலம்ப,,வென்ருற்போல.

பலதலைவைத்து முடியாதுபாயு

மெங்குமுகம்வைத்த கங்கைக்காலும

பலதலைவைத்துமுடியாது - ஓரிடததிறசென் றமையாதுப லதலைவைத்து—எங்கும்பாயுமுகம்வைத்த - எங்கும்பாகருமுக ம்வைத்த—கங்கைக்காலும் - கங்கையாகியகாலையும் ;

கொண்டுகுளிர்பரந்த மங்குல்வாவிககுள்

கொண்டு - தன்னிடத்திற்பெற்று—குளிர்பரந்த - குளிர்ச் சிமிகுந்த—மங்குல்வாவிக்குள் - ஆகாசமாகியவாவிக்குள் ;

உருபு தொடாநதடுக்கிக்கொண்டென்னும் வினையெச்சத் தோடுமுடிந்தது.

முயலெனும்வண்டுண வமுதநறவொழுக்கி

முயலெனும்வண்டு - முயலாகியவண்டு—உண - உண்ணும்படி—அமுதநறவொழுக்கி - அமுதமாகிய தேனைச்சிந்தி ;

"பிறையதுவளரத்தானும் வளர்ந்துடன்பெருகிப் பின்னுட் குறைபடு மதியர்தேயக் குறுமுயறேய்வதேபோ" லென்றாற்போல முயற்கூறினார். மான்முழுதுந்தாங்கிவரு மதியமெனமானைச் சொல்லுவாருமுளர்.

தேவாமங்கையர் மலர்முகம்பழித்துக்
குறையாப்பாண்டில வெண்மையின்மலர்ந்த
மதித்தாமரையே

தேவாமங்கையர் - தெய்வமாதர்கள்—மலர்முகம்பழித்து - மலர் போலுமுகத்தைப்பழித்து—குறையாப்பாண்டில் - வட்டங்குறையாத—வெண்மையின்மலர்ந்த - வெள்ளியதாகவிரிந்த—மதித்தாமரையே - மதியாகிய வெண்டாமரையே ;

தாமரைக்குமுகத்திற்கு மொத்தபண்பு செம்மையும் வடிவும் பொலிவும் முகத்திற்குமதிக்குமொத்தபண்பு. கட்கினிமையுஞ் சுத்தத்தினமிக்குப்பொலிதலு மிவ்வாறொத்தபண்பு. வேறுபடுதலான உவமைக்குவமை யிலலெனமொழியவென்னுங் குற்றமாகாதென்க. "கொழுந்தாரகைமுகைக் கொண்டலம்பாசடை விண்மடுவி, லெழுந்தாமதிக்கமலம்மெழிறந்தென விப்பிறப்பி, லழுந்தாவகையென்னை யாண்டவன்சிற்றம் பலமனையாய், செழுந்தாதவிழ்பொழி லாயத்தசோகந்திருத்தகவே" என்றாற்போல, உவமைக்குவமை "வெண்டிங்கள்போன்றிலங்கு வெண்சங்கு விண்டனைய வண்டிலங்குதாழை வளர்கோ" டென்றாற்போல்வன. இது விபரீதவுவமையோடுகூடிய வினைபுருவகமாகலி னுவமையுருவகம்.

மயங்கியவொருவே

னின்பாற்கேட்கு மளிமொழியொன்றுள

நின்பால் மயங்கியவொருவேன் - நின்பால்வருந்தியவொரு த்தியாகிய யான்—கேட்குமளிமொழியொன்றுள - கேட்கும வார்த்தையொன்றுளது அஃதேதெனில் ;

ஆல்-அசை.

நாளிழைத்திருக்குஞ் செயிர்கொளற்றத்து

மெய்யுறத்தணந்த பொய்யினர்

தம்முடைநெஞ்சமும்

நாளிழைத்திருக்கும் - அல்லகுறிப்படாதுவருநாளையுண் டாகவிருந்ததனுல்வரும்—செயிர்கொள - குற்றம்பொருந்திய —அற்றத்து - வேளையில்—மெய்யுறத்தணந்த- உண்மையா கவந்தது போல வந்துபிரிந்த—பொய்யினர் - பொய்ச்சூளினை யுடையார்—தம்முடைநெஞ்சமும் - தமமுடையமநமும் ;

இருந்ததனுல்வருங் குற்றம் நாய்துஞ்சாமைமுதலியன.

மீனுணவுள்ளி யிருந்தவெணகுருகெனச்

சோறுநறைகான்ற கைதையமலரும்

மீனுணவுள்ளியிருந்த - மீனுகியவுணவைக்கருதிப்பார்த்தி ருந்த—வெண்குருகென - வெளளைகருருகுபோல—சோறுநறை கான்ற - சோறுநறையைக்கககிய—கைதையமலரும் - தாழைம லரும் ;

பலதலையரககா பேரணிபோல

மருங்குகூண்டெழுந்து கருங்காய்நெருங்கி

விளைகட்சுமந்த தலைவிரிபெண்ணையும்

பலதலை - பலவாகியதலையினையுடைய—அரக்கர் - அரக்கர் படைகசு வகுத்த—பேரணிபோல - பேரணிபோல—மருங்கு -

பக்கத்தில்—சூண்டெழுந்து - திரண்டெழுந்து—கருங்காய்நெருங்கி-கரியகாய்மிடைந்து—விளைகட்சுமந்த - விளையுங்கள்ளைத்தரித்த—தலைவிரிபெண்ணையும் - தலைவிரிந்தபனையும்;

பொருளடையை யுவமைக்குங்கொள்க.

அன்னத்திரளும் பெருங்கரியாக

அன்னத்திரளும் - அன்னககூட்டமும்—பெருங்கரியாக-மிகுஞ்சான்றாக;

மீன்பாய்ந்துமறிகக்த் திரையிடைமயங்கிச்
சூல்வயிறுளைந்து வளைகிடந்துமுரலும்
புன்னையம்பொதும்பரின்

திரையிடை - திரையிடத்து—மீன்பாய்ந்துமறிக்க - மீன்கள்குதித்துத்தடுக்க—வளை - சங்குகள்—மயங்கி - மதிமயங்கி—சூல் - கருவோடுபொருந்திய—வயிறுளைந்து - வயிறுநொந்துகிடந்து—முரலும் - முழங்கும்—புன்னையம்பொதும்பரில் - புன்னையினிளமரக்காவில்;

அம் சாரியை, அழகுமாம். பொதும்பர் பகுதிப்பொருள்விகுதி.

சொல்லாவின்பமு முயிருறத்தந்து

உயிருற - உயிர்பெறும்படி—சொல்லாவின்பமும் - இப்படியிருக்குமென்று சொல்லப்படாத வின்பமும்—தந்து - தந்து, உம்மை - எச்சவும்மை, துன்பமுந்தருதலின்.

நெடுமலைபெற்ற வொருமகள்காண

நெடுமலைபெற்ற - ஒருகத்தினுமழியாத விமயவரையுயிர்த்த—ஒருமகள்காண - ஒப்பற்ற பார்வதிகாண;

பெரியமலையெனினுமாம்.

நான்முகன்விதியே தாளந்தாக்க

நான்முகன் - நான்குமுகத்தினையுடையபிரமன்—விதியே-சொன்னவிதிப்படியே—தாளந்தாக்க - தாளமடிக்க ;

விதியேதாளந்தாக்கல்- காலமானக்கிரியைமுதலிய பிறழாது கூத்துக்கேற்க வொக்கவடித்தல். ஏகாரந் தேற்றம்.

அந்தநான்முகனை யுந்திபூத்தோன்
விசித்துமிறைபாசத் திடக்கைவிசைப்ப

அந்தநான்முகனை - விதிப்படியேயொக்கவடிக்கும்பிரமனை—உந்திபூத்தோன் - திருவுந்தியிற்படைத்தவன்—பாசத்து - கயிற்றினால்—விசித்தும் - பிணித்தும்—இறையிடக்கையிசைப்ப - இடக்கையினால் இடக்கையென்னு முதற்கருவியின் ஒருமுகத்திற் பலகிரியைவிளைப்ப ;

விசித்துமென்னுமும்மை சிறப்பும்மை, இறை ஆகுபெயர். இசைத்தலொருமுகத்திற் பலகிரியைவிளைத்தல் கட்டிவளையாநின்ற கயிற்றினையுடைய விடக்கையெனினுமாம். மிறைவளைவு-விண்ணிடமன்னர்கொள்ள மிறைக்கொளிதிருத்தினனே என்றதுபோல.

மூன்றுபுரத்தொன்றி லரசுடைவாணன்
மேருக்கிளைத்த தோளாயிரத்தொடு
மெழுகடல்கிளர்ந்த திரள்கலியடங்க
முகம்வேறிசைக்குங் குடமுழவிரட்ட

மூன்றுபுரத்தொன்றில் - மூன்றுபுரத்தொருபுரத்தின்கண்—அரசுடைவாணன் - அரசுசெய்யும்வாணன்—எழுகடல்கிளர்ந்த - சத்தசாகரத்தினின்றும பெருகிய—திரள்கலியடங்க-ஆரவாரத்தின்கூட்ட மடங்கும்படி—முகம்வேறிசைக்கும்-ஐந்துமுகமும் வெவ்வேறோசையாகவிசைக்கும்—குடமுழவு - குடமுழ

வாகிய முதற்கருவியினை—மேருக்கிளைத்ததோளாயிரத்தொடு-மகமேரு கப்புவிட்டாற்போன்ற வாயிரங்கைகளாலும்—இரட்ட - கொட்ட ;

நீககபபொருட்கண்வரு மின்னுருபு தொக்கது. ஒடு-உருபு மயககம். முற்றும்மை தொககது.

ஏழுமுனிவர்க டாழுமாதவ
ரனபினருள்ளமொ டென்புகரைந்துருக

ஏழுமுனிவர்கள் - சத்தவிருடிகளும்—தாழுமாதவர் - வணங்குமனபினையுடைய பதஞ்சலிமுனிவர்—அனபினர் - அன்பினையுடையராய்—உள்ளமோடென்புகரைந்துருக - உள்ளமு மெலும்பு மொன்றாய்க்கரைந்துருகும்படி ;

ஒடு - எண்ணொடு.

புடகாறறும்புரு மணத்கந்திருவர்

புட்காற்றும்புரு - புள்ளின்கால்போலுங் காலினையுடைய தும்புருவும்—மணககந்திருவர்-மணத்தினையுடையகந்திருவரும்

புள்-ஆகுபெயர். மணம் - களவிற்புணர்ந்து வரைந்துகொள்ளுதலுங் கொள்ளாமையுமாகிய மணம்.

நாசிகாகுளி வெடிகுரல்வெள்ளை
பேசாக்கீழிசை யொருபுறமொட்ட
னெட்டுயிர்ப்பெறித லெறிந்துநின்றிரட்ட
லோசையிழைத்தல் கழிபோக்கென்னப்
பேசுறுகுற்ற மசைவொடுமாற்றி

நாசி - நாசிப்பாட்டும்—காகுளி - காகுளிப்பாட்டும்—வெடிகுரல் - வெள்ளோசையும்—பேசாக்கீழிசை - கீழிசையும்—ஒருபுறமொட்டல்- ஒருபுறமொட்டலும்—நெட்டுயிர்ப்பெறிதல் -

நெட்டுயிர்ப்பெறிந்தாற்போல—எறிந்துநின்றிரட்டல் - எறிந்து நின்றிரட்டலும்—ஓசையிழைத்தல் - ஓசையிழைத்தலும்—கழி போக்கென்ன - கழிபோக்குமென்று—பேசுறுகுற்றம் - சொல்ல பபட்டகுற்றமும்—அசைவொடுமாற்றி - சோம்பும்விட்டு,

நாசிப்பாட் டொருதானத்தேபாட வொருதானத்தேங்ழுவு வது. தானம் - நெஞ்சுமுதலியன. காகுளிபேய் கத்திறுற்போற் பாடுவது. வெடிகுரல் - வெள்ளைவெடித்த குரலாகிய நிறமில் லாவெள்ளோசை, நிறம் "மாத்திரைகளொன்பானுந் தானங்க ளெட்டானு, மேத்துங்கிரியையொன் றீரைந்தும் - கோத்துட், பதின்மூன்றெழுத்தாற் றெழிலேர்தும்பண்ணின், மதியோர்களே ந்துநிறமாம்," என்பதனுனறிக. கீழிசைநிறமுந் தானமுங்குறை யுங் கட்டையிசை, ஒருபுறமோட்டல் பாடுநிறத்தை யொதுக்கி ப்பாடுதல், நெட்டுயிர்ப்பெறித லெறிந்துநின்றிரட்டல், ஒருப ண்ணைப்பாட வேறொருபண்ணிலே விலங்கிநின்றிரட்டல், ஓசை யிழைத்தல், காகங்கத்திறுறபோற்பாடுவது கழிபோக்கு ஒரோ சையான தன்மைநீங்கிப் பலவோசையாய்வருதல். அசைவு-மடி. "பெருக்குரல்கட்டை நழுவல்விலங்க, லொருக்கியொதுக்கம் பு ணைத்தல்-விருப்பிலாக், காகுளிகாக சுரமென்னுமிவ்வெட்டு, மா காவெனச்சொன்ன ராய்ந்து," என்று றிசைமரபுடையார்.

நான்மறைப்பயனு மேழிசை

நான்மறைப்பயனும் - நான்குவேதத்தின் பயனுகிய—ஏழி சை - சத்தசுரத்தினையும்.

முற்றும்மை - தொக்கது. அமைத்தென்பதைப் பின்னே கூட்டுக.

வண்டின்றுரியுங் கஞ்சநாதமுஞ்
கிரல்வாணிலையுங் கழையிலைவீழ்வது

மருவியோசையு முழவின்முழக்கமும்
வலம்புரிச்சத்தமும் வெருகின்புணர்ச்சியு
மின்னுமென்றிசைப்பப் பன்னியவிதியொடு

வண்டின்ஞாரியும் - வண்டினது முழக்கமும்—கஞ்சநாதமும் - கஞ்சக்கருவியினொலியும்—வலம்புரிச்சத்தமும் - வலம்புரிச்சங்கின் முழககமும்—சிரல் - மீனெறிபறவையும் —வானிலையும்-வானம்பாடியுமசிற்குரிலையும்—கழையியலவீழ்வதும - மூங்கிலினிலைவிழுகின்றதொழிலும்—அருவியோசையும் - அருவியிரைசையும்—முழவின்முழக்கமும் - குடமுழவின்முழக்கமும்—வெருகின்புணர்ச்சியும் - வெருகின்புணர்ச்சியினெழுமோசையும்போலும்—இன்னுமென்றிசைப்பப் பன்னியவிதியொடு - உத்தமமான விசையும் பாடும் பாட்டுந்தொழிற் கிரியையும்பொருந்தியவிதியுடனே பின்னுமுண்டென்று கருதும்படி;

உத்தமமானவிசை குயிலோசையும் வண்டினாதமும் வலம்புரிச்சத்தமுமெனக. "தூய்யமொழிமென்குயிலுஞ் சோலைவரிவண்டினமும், வையமுழங்கும் வலம்புரியுங்-கையைவத்துத், தும்புருவுநாரதரும் பாடியமூவோசையென, நம்புநீர்நால் வேதத்துள்,, என்றாரிசைமரபுடையார். பாடுந்தொழிற் கிரியையாவன "சிச்சிலிபூனை குடமுழக்கஞ்செம்மைத்தா, முச்சிமலைநீர்விழுக்கா டொண்பருந்து - பச்சைசிற, வேயினிலைவீழ்ச்சியுடன் வெங்கானிழற்பறவை, யேயுங்காலோசை யியம்பு,, என்பதனைறி க. இசையுந்தொழிலும் பகுத்தறியக்கிடத்தலி னுய்த்துணர்சிணாரினா. இன்னுமென்றதனால் வானம்பாடி பருந்துமுதலியன கொள்க. வெருகின்புணர்ச்சி யன்மொழித்தொகை யுறுமுதலைக்குறித்தலின், பன்னுதல் பன்னௌ வினைமாத்திரையாய் நின்றது. இயலுதல் பொருந்துதல், என்று என உண்டென வொருசொல்வருவிக்க.

அமைத்து

மந்தரமத்திமை தாரமிவைமூன்றின்

மந்தரம் - படுத்தல்—மத்திமை - சமன்—தாரம் - எடுத்தலாகிய—இவைமூன்றினமைத்து - இவைமூன்றினிலடக்கி,

"நீடவுங்குறுகவு நிவப்பவுந்தாக்கிப பாடியபுலவ,,ரென்றா வெண்பாமாலையினும.

சருககணாகுன்றிற் றேன்மழைநான்றென

சருககணாக்குன்றில் - சருககணாமலையில்—தேனமழைநான்றென - தேன்மழைவீழ்ந்தாறபோல,

துள்ளறூங்க றெளளிதின்மெலிதல்

கூடியகானம்

துள்ளல் - துள்ளப்படுதலும—தூங்கல் - தூஙகபபடுதலும்—தெள்ளிதின்மெலிதல் - தெளளிதாகமெலிககபபடுதலும—கூடியகானம் - பொருந்தியவிசைபபாட்டை;

விரனுன்கமைத்த வணிகுரல்வீங்காது

நான்மறைதுள்ளும் வாயபிளவாது

காட்டியுள்ளுணாதது நோககமாடாது

பிதிர்கனன்மணி சூழ்முடிஅடுக்காது

வயிறுகுழிவாங்கி யழுமுகங்காட்டாது

விரனுன்கணியமைத்த-நான்குவிர லணியாகவமைக்கபபட்ட—குரல்வீங்காது - மிடறு வீங்காது—நான்மறைதுள்ளும் - நான்குவேதமுந்தொனிககும்—வாய்பிளவாது - வாய்பிளவாது—காட்டியுள்ளுணர்த்தும்- உள்ளக்கருத்தினைவெளியிற்காட்டியறிவிககும்—நோக்கமாடாது - கண்ணிமையாடாது—பிதிர்கனல் - சிதறியதழல்போலும்—மணிசூழ் - மணிசூழபபட்ட—மு

டிக்கொங்காது - முடியிணையணிந்ததலையசையாது—வயிறுகுழிவா
ஙகி - வயிறெக்கி—அழுமுகங்காட்டாது - அழுதாற்போலு மு
கங்காட்டாமல் ,

இனைத்தெனவறிந்தவும்மை தொக்கது. உள்ளுநோக்கமும்
ஆகுபெயர். மணிசூழ்முடி யன்மொழித்தொகை. அழுமுகம்-
ஒற்றுமைநயம்பற்றி யுவமவினை பொருண்மேனின்றது. "கண்
ணிமையாகண்டங் துடியாகொடிறசையா, பண்ணளவும் வாய்
தோன்று பற்றெரியா - வெண்ணிலிவை, கள்ளார்நறுந்தெரியற்
கைதவனேகநிருவ, ருள்ளாளபபாடலுரை,, உளளாளப பாட்
டுப்பாடுங்கா லிடைபிஙகலையை யியககமறுததுச் சுழிமுனையிலி
யக்கமாக்கிபபாடுவர். "உள்ளாளம்விந்து வுடனாதமொலியுருட்
டுத், தள்ளாதனுகடுதத ரன்படுததன் - மௌளக, கருதி
நவிதல் கம்பித்தல்குடில, மொருபதினமே லொனறென்றுரை,,
என்றாரிசைமரபுடையார். இப பதினொருவகையினுலு முள்ளா
ளப்பாடடுபபாடுவர்.

அன்பொடுபரவ

அன்பொடுபரவ - அன்புடனேபாட;

சருககளைககுன்றிற நேன்மழைபெய்து ரசிபபித்தாற்போ
லாகிபபிககப பாடவெளபது பயவுவமை.

பூதந்துள்ளப் பேய்கைமறிபப
வெங்குளவுயிரு மினபங்றைந்தாட
நாடகவிதியோ டாடியபெருமான்
மதுரைமாநகாச செழியனுக்க
கதிர்முடிகவித்த விறைவன்மாமணிக
காறலைக்கொ[illegible]க் கையினாபோல
நீங்கினர்

பூதந்துள்ள - பூதகணங்கடுள்ள—பேய்கைமறிபப - பேய் கொண்டாட—இன்பநிறைந்து - இன்பமிகுந்து—எங்குளவுயிரும் - எவ்விடத்துமுளவாகியவுயிர்களும்—ஆட - ஆட—நாடகவிதியோடு-நாடகத்துக்குள்ள விதியோடுகூடி—ஆடியபெருமான்-திருநடனஞ்செய்தபெருமான்—மதுரைமாநகர் - மதுரைமாநகரில்—செழியனுகி-பாண்டியனுகி—கதிர்முடிகவித்தவிறைவன்-சடைமுதலிய கரந்தொளியிணையுடைய முடிபுனைந்தவிறைவன்—மாமணிக்கால் - மாணிக்கத்தாளை—தலைகொள்ளாகைகையினர் போல - பொருந்தாதகையினர்பிரிந்தாற்போல—நீங்கினர் - அரியோர்பிறரில்லையென்று இடபோதுபிரிந்தனர்;

உம்மைமாறுக, முடிகவித்தவிறைவ னரசனெடுத்த தேவகுலம்போன்றது. நாளுற்றத்திங்களூர் நல்லணிநீகெனொன்றா சிந்தாமணியினும். தலைகொள்ளாகைகையினா - பொருந்தாதலைவந்த சிறுமையிணையுடையாா கை. கைவாய்க்கால் கைக்குடைபோலநின்றது.

இன்னுங்காணுக காட்சிகொண்டிருந்த

இன்னுங்காணுககாட்சிகொண்டிருந்த - யானவற்றைக் காணும்படிக கவையிப்போது காணவிருநதன வாதலால்;

உம்மை - சிறப்பும்மை.

போக்குமீங்குழி வருவதுங்
கண்டதுகூறுதியாயி
னெண்டகப்போற்றிநின் கால்வணங்குதுமே.

போககும் - அவர்பிரிவும்—ஈங்குழி - இவ்விடத்து—வருவதும் - கருதி வருவதும்—கண்டு - விசாரித்து—அது - அதனை—கூறுதியாயின் - சொல்லுதியாயின்—நின்கால் - நின்பாதத்தை—எண்டக-நின்கருத்துக்கேற்கும்படி—போற்றி - பாதுகாத்து—வணங்குதும் - வணங்காநின்றேம்—எ - று.

உள்ளிகருதி வணங்குதுமென்பது காலமயக்கு.

மதித்தாமனையே நின்பாற்கேட்கும்வார்த்தை யொன்றுளது ஃ தேநெஞ்னிற் பொய்ச்சூளுரைததார் நெஞ்சமுந் தாழைமலரும் பனையு மன்னகக்கூட்டமுஞ் சான்றாக விளமரககாவி லின்பமுந் தந்து கரியோர் பிறரில்லையென்று பிரிந்தனரின்னுமவை காட்சி கொண்டிருந்தன வாதலா லவா பிரிவும் வருவதும் விசாரித்து அதனைக் கூறுதியாயி னின்பாதத்தை வணங்குதுமென வினைமுடிவுசெய்க. (உஉ)

---

## வேறுபடுத்துக்கூறல்.

வேறுபடுத்துககூறலென்பது - பிறைதொழாது தலைசாய்த்துநாணி நிலங்கிளையாநிற்பக கண்டு, பின்னும இவள்வழியேயொழுகி இதனையறிவோமென உட்கொண்டு, நீபோய்ச் சுனையாடிவாவென்ன, அவளும் அதறகிசைந்துபோய் அவளோடுதலைப்பெய்துவர, அக்குறியுறிந்து அவளை வரையணங்காகபபுனைந்து வேறுபடுத்துக் கூறாநிற்றல். அதற்குச்செய்யுள்:—

அக்கின்றவாமணி சேர்கண்ட னம்பலவன்மல
யத், திக்குன்றவாணர்கொழுந்திச் செழுந்தண்புன
முடையா, ளக்குன்றவா றமாந்தாடச்சென்றாளங்க
மவ்வவையே, யொக்கின்றவாறண்ணங்கே யிணங்கா
குமுனக்கவளே. கூஅ

வேய்வளைத்தோளியை வேறுபாடுத ண்
டாய்வளைத்தோழி யணங்கென்ற து.

இ-ள். அக்கின் - அக்காகிய—தவாமணி - நல்லமணி—சேர் - பொருந்திய—கண்டன் - மிடற்றையுடையவன்—அம்பலவ

ன் - அம்பலவன்—(அவனது) மலயத்து-மலயத்தின்கணுளராகி ய—இக்குன்றவாணர் - இக்குன்றவாணருடைய—கொழுந்து- மகளாகிய—செழும் - வளவிய—இத்தண்புனமுடையாள் - இத்தண்புனங்காவலுடையவள்—அக்குன்றவாறு - அக்குன்றத்தின்கணுண்டாகியவாற்றை—அமர்ந்து - மேவி—ஆடச்சென்றாள் - ஆடப்போயினாள்—அஙகம் - நின்னுறுப்புக்கள்—அவ்வவையே - அவளுறுப்புககளாகியவவற்றையே—ஒககின்றவாறு- ஒக்கின்றபடி—அணங்கே - என்னணங்கே—உனக்கு - நினக்கு—அவளிணங்காகும் - அவளிணங்காகும்—எ-று. அதனுலவளைககண்டு போவாயாகவென்பதெஞ்சிநின்றது.

இன் - அல்வழிச்சாரியை. மலயத்திற்குன்றமென்று இயைபயாருமுள். (௯௮)

நேரிசையாசிரியபா.

கண்டகாட்சி சேணின்குறியோ
வென்னுழிநிலையா வுள்ளத்தின்மதியோ
சூர்ப்பசையுலகிற் றோன்றினர்க்கழகு
விதிக்குமடங்கா வென்பனவிதியோ
வென்னுடைக்கண்ணு முயிருமாகி
யுண்ணிகழின்ப முள்ளாளொருத்தி
மலைக்குஞ்சரத்தின் கடகக்குழியாகி
நெடுமலைவிழித்த கண்ணேயாகி
யம்மலைத்திருநுதற் கழியாதமைத்த
வெள்ளைகொள்சிந்துர நல்லணியாகித
தூரநடந்த தாளெய்ப்பாறி
யழுதொடுகிடக்கு நிறைமதிப்பக்க
மொருபாற்கிடந்த துணைமதியாகி
யருவிவீசப்ப றவைகுடிபோகி

விண்டுநறவொழுக்கும் பாண்டிலிருலா-
யிளமைநீங்காது காவல்கொளமுதம்
வளையரமாதர் சூழுவுடனருந்த
வாக்கியிடப்பதித்த வள்ளமுமாகி -
யிடைவளிபோகாது நெருங்குழலைகொடிச்சியர்
சிறுமுகங்காணு மாடியாகிச்-
சிறந்தனவொருசுனை யிம்மலையாட
வளவாக்காதல்கை மிக்கணைந்தன
ளவளேநீயா யென்கண்குறித்த
தெருமாறந்த வறிவுநிலைகிடக்கச்
சிறிதுநின் குறுவெயர் பெறுமணங்காறி
யொருகணனிலைக்க மருவுதியாயி
னிந்நிலைபெயர வுன்னுமக்கணத்திற்
றாண்டாவிளக்கி னீண்டவளுதவு
மவ்வுழியுறவு மெய்பெறக்கலந்தின்
றொருகடலிரண்டு திருப்பயந்தாங்கு
வளைத்தநெடுங்கார்ப் புனத்திருவீரு
மணிநிறையூச லணிபெறவுகைத்துங்
கருங்காற்கவணிடைச் செம்மணிவைத்துப்
பெருந்தேனிறாலொடுகுறிவிழவெறிந்தும்
வெண்டுகிலுடங்கிப் பொன்கொழித்திழியு
மருவியேற்று முழைமலைகூஉயும்
பெருஞ்சுனைவிழித்த நீலங்கொய்துங்
கொடுமரம்பற்றி நெட்டிதண்பொலிந்து
தினைக்குரலறையுங் கிளிக்கணங்கடிதிர்
வெள்ளியிரும்பு பொன்னெனப்பெற்ற
மூன்றுபுரம்வேவத் திருநகைவிளையாட்
டொருநாட்கண்ட பெருமானிறைவன்
மாதுடனென்றி யென்மனம்புகுந்து

பேணுவுள்ளங் காணுதுநடந்து
கொலைகளவென்னும் பழுமரம்பிடுங்கிப்
பவச்சுவரிடித்துப் புதுக்கக்கட்டி
யன்புகொடுமேய்ந்த நெஞ்சமண்டபத்துப்
பாங்குடன்காணத் தோன்றியுண்ணின்று
பன்மலர்ச்சோலை விம்மியபெருமல
ரிமையோர்புரத்தை நிறைமணங்காட்டுங்
கூடலம்பதியகம் பீடுபெறவிருந்தோ
னிருதாள்பெற்றவர் பெருந்திருப்போல
மருவியபண்ணை யின்பமொடுவிளைநலஞ்
சொல்லுடனமராதீங்கு
வில்லுடன்பகைத்த செந்திருநுதலே. ௨௫

---*---

கண்டகாட்சி செந்திருநுதலே. பகுதி - நாணநாட்டம், துறை - வேறுபடுத்துக்கூறல். *

வில்லுடன்பகைத்த செந்திருநுதலே.

(இதனது பதப்பொருள்.)

வில்லுடன்பகைத்த - வில்லுடனே மாறுபட்ட—செம்-காணுந்தோறும்புதுமையாகிய—திருநுதலே - அழகிய நுதலினையுடையாய்;

உடன்பொறிவரிவரா லினமிரியப் புக்குடனென்றாற்போன்றது. திலதத்தினையுடைய வழகிய நுதலெனிற் செம்மை யாகுபெயர். வில்லுடன்பகைத்த நுதலினையுடைய செய்ய திருமகளை யொப்பாயெனினுமாம்.

என்னுடைக்கண்ணுறு முயிருமாகி
யுண்ணிகழின்ப முள்ளாளொருத்தி

என்னுடைக்கண்ணும - என்னுடைய கண்ணும்—உயிருமாகி - உயிருமாகி—உணணிகழின்பம் - உள்ளத்தினிகழு மினபத்தையும்—உளளாளொருத்தி - உடையாளொருத்தி;

என்னுடைககண் ணின்னுடைநீர்மையு மென்றற்போன்றது - என்கண்ணுமுயிருமாகி யின்பத்தையுமுடையாளொன்றுள் விரும்பும்பொரு ளெல்லாவற்றினுஞ் சிறந்தமையானுந் தனவளென்னும் வேறறுமை யின்மையானும் அது உயிரு மாலு மடனுமெனறிவை செயிர்தீர்சிறப்பி னல்வர்க்கு முரியவென்பதனு னறிக.

அளவாககாதல் கைமிககு

அளவா - அளவுபடுத்தபபடாத—காதல்கைமிககு - காமங்கையிகந்தவழியுளளநிகழ்ந்து,

மலைககுஞ்சரத்தின கடக்குழியாகி

மலைக்குஞ்சரத்தின - மலையாகிய யானைககு—கடககுழியாகி - மதமபடுகுழியுமாகி;

அத்துமின்னுஞ்சாரியை.

நெடுமலைவிழித்த கண்ணேயாகி

நெடுமலை - நெடியமலையாகிய புருடன்—விழித்தகண்ணேயாகி - விழிக்கபபட்ட கண்ணுமாகி;

மலை-மாட்டே நேலாதுவநதது, வனாவிழித்துபபார்த்தாற் போன்ற கண்ணுமாகியெனினுமாம். ஏகார மீற்றசை.

அம்மலைத்திருநுதற் கழியாதமைத்த
வெள்ளைகொளசிந்தூர நல்லணியாகி

அமமலை - அம்மலையாகிய—திருநுதற்கு - திருவினதுநுதலினகண்—அழியாதமைத்த - ஒருகாலமுமழியாதிட்ட—வெள்

ஙொகொள் - வெண்மைகொண்ட—நல்லணி - நல்லணியாகிய—சிந்தூரமாகி - சிந்தூரமுமாகி ;

நுதற் குருபுமயக்கம்.

தூரநடந்த தாளெய்ப்பாறி
யமுதொடுகிடக்கு நிறைமதிப்பக்க
மொருபாற்கிடந்த துணைமதியாகி

தூரநடந்த - தூரத்தினின்றும்வந்த—தாளெய்ப்பாறி - தாளிளைப்பாறுகின்று—அமுதொடுகிடக்கும் - அமுதத்தோடுபொருந்திக் கிடக்கும்—நிறைமதிப்பக்கம் - பக்கநிறைந்த மதியின்—ஒருபாற்றுணைகிடந்த - ஒருபாகத்திற் றுணையாகக்கிடந்த—மதியாகி - மதியுமாகி;

பக்கம்நிறைந்தமதி உவாமதி, எய்ப்பாறிக்கிடக்குமென்பது "அகலிருவிசும்பிற் பாயிருள்பருகிப பகல்கான்,, றென்றாற்போன்றது. ஆறி - ஆற எனினுமாம்.

அருவிவீசப் பறவைகுடிபோகி
விண்டுநறவொழுக்கும் பாண்டிலிறாலாய்

பறவை - பொருந்தியவண்டுகள்—குடிபோகி - விட்டுநீங்க—விண்டு-விணடு—அருவிவீச - அருவிபோலச்சிந்தும்படி—நறவொழுக்கும் - தேனைச்சிந்தும்—பாண்டிலிறாலாய் - வட்டமாகியதென்கூடுமாகி;

பறவை வண்டு, தாதுண்பறவை பேதுறலஞ்சி யென்றாற்போல, போகி-போக, விண்டென்பது - செய்வதன்றொழிற்கு மேதுவாக்கிச் செய்விப்பதன்றொழிற்குமாம். "காய்மாண்டதெங்கின் பழம்வீழக்கமுகினெற்றிப், பூமாண்டதீந்தேன் றொடைகீறிவருக்கைபோழ்ந்து, தேமாங்கனிசிதறி வாழைப்பழங்கள்சிந்து,,மென்றாற்போல.

இளமைநீங்காது காவல்கொளமுதம்
வரையரமாதர் குழுவுடனருந்த
வாகவிடம்பதித்த வள்ளமுமாகி

வரையரமாதர் - வரையரயகளிர்—இளமைநீங்காது -தம்மி ளமைபோகாது—குழுவுடன் - கூட்டத்துடன்—காவல்கொள்- காக்கும்—அமுதம் - அமுதத்தை—அருந்த - உண்ணும்படி— ஆக்கி - உண்டாக்கி—இடம்பதித்த - அவ்விடத்துப்பதித்த—வ ள்ளமுமாகி - கிண்ணமுமாகி,

உண்ணும்படி யமுதத்தைவார்த்துபபதித்த வள்ளமெனி னுமாம்.

இடைவளிபோகாது நெருங்குழலைக்கொடிச்சியர்
சிறுமுகங்காணு மாடியாகி

இடைவளிபோகாது - இடையிற்காற்றும்புகாது—நெருங் குழலை - நெருங்கியமுலையினையுடைய—கொடிச்சியர் - குறத் தியர்தம்—சிறுமுகங்காணும் - சிறியமுகத்தினழகைப்பார்க்கும் ஆடியாகி - கண்ணாடியுமாகி,

சிறப்பும்மை தொகக்கது. முகம் ஆகுபெயர். எண்ணும்மை தொககன.

சிறந்தனவொருசுனை யிம்மலையாட
வணைந்தனள்

இம்மலை - இம்மலையிடத்து—சிறந்தனவொருசுனை - சிறந் தவொருசுனையில்—ஆடவணைந்தனள் - நீராடச்சென்றனள்;

செய்தெனெச்சவடுக்குச் சிறந்தவென்னும் பெயரெச்சங் கொண்டது. உவமைக்குக்கூறியன உருவகத்திற்கு வாவுமென் றமையான் சுனை பலபொருளுருவகமாயிற்று.

கண்டகாட்சி சேணின்குறியோ
வென்னுழிநிலையா வுள்ளாத்தினமதியோ
சூர்ப்பகையுலகிற றோன்றினர்க்கழகு
விதிகருமடங்கா வென்பனவிதியோ

சேணின் - நினைத்தூரத்தில்—கண்டகாட்சிக்குறியோ - காணப்படும்பொருளாகக்கண்டவடையாளத்தினாலோ— என்னுள்ளத்துழி - என்னுள்ளத்திடத்தில்—நிலையாமதியோ - நிலைநில்லாதபுத்தியினாலோ—சூர்ப்பகையுலகிற்றோன்றினர்க்கு - குறிஞ்சிநிலத்திற பிறந்தார்க்கு—அழகுவிதிகருமடங்கா - விதிக்குமழகுவேறுபடாது—என்பனவிதியோ - என்றுசொல்லப்படுவதாகிய விதியினாலோ,

சேயோன்மேயமைவரையுலகமுமென்றமையாற் குறிஞ்சிநிலத்தைச் சூர்ப்பகையுலகென்றார். ஆனுருபுமூன்றற்கும் விரிக்க, ஓகாரமூன்றுமையமின்னதென்று துணியாதுகூறினமையின் வரையணங்காக வேறுபடுத்திக் கூறினமையால் விதிக்குமழகுமடங்காதென்றார். விதிவிதித்தலென வினைமேனின்ற வினைப்பெயரன்றி விதியென வினைமாத்திரையுணர்த்திநின்று விதிக்குமென வுருபேற்றுநின்றது. ஓகாரத்தை யெதிர்மறையாக்கிக் கூறினுமாம்.

அவளோநீயா யென்கண்குறித்த
செருமராறந்த வறிவுநிலைகிடக்க

அவளோநீயாய் - நீதானேயவளாக—என்கண்குறித்த - என்கண்குறித்ததனால்வந்த—செருமரல - தடுமாற்றத்தை—நிலைதந்த - நிலையாகத்தந்த—அறிவுகிடக்க - அறிவுகிடக்க;

ஆய்-ஆக. நீயவளாகவென்றதற்கு நின்னையவளாகவென்க. "பொங்கனையானன்ன பண்பனைக்கண்டிப் பரிசுணர்த்தா"லென்று

ற்போலத் திரிந்ததன் றிரிபதுவாய் நின்றது. குறிததறிதறகுக கண்டுணையா தற்சிறப்புநோக்கி யுயிரதுணர்வு கண்மேலேற்றப் பட்டது. "குறிப்பிற்குறிப்புணரா வாயினுறுப்பினு ளென்னபய த்தவோகண்,, என்றாற்போல.

சிறிதுநின்குறுவெயர் பெறுமணங்காறி
யொருகணநிலைக்கவு மருவுதியாயின
ஈங்கு

குறுவெயர்பெறும்-குறுவெயர்பெறுதற்குக் காரணமாய்— நின்-நினது—சிறிதணங்காறி-வருத்தஞ் சிறிதுதீர்ந்து—ஈங்கு- ஈங்கு—ஒருகணம்-ஒரு கணப்பொழுது—நிலைககவும்-நிலைபெற வும்—மருவுதியாயின் - பொருந்துவையாயின்,

கணபபொழுது - "ஆகக்வுதயத் தலரம்புயமாத, லெற் குவளையாதலித ழேட்டிற்கு - நிற்குமதி, லூசிமுனைதெறித்த லோரிதழிற்செல்கால, மாசில்கணமாய்வ்ரும்,, இதனானறிக. நி லைக்கவென்ப தெதிகாலமுணர்த்து மெச்சம். உம்மை யையம். துணியாமைககண வருதலின முரித்தேந்தாரிஞய்நீ முனியினு மென்றறபோல ஒருகணபபொழுது நிலைபெறச் சேர்வையாயி னென்று பொருளுளாககி லும்மையசை. ஈங்குத்தன்மையுணா த்துதல் "செலவினும்வரவினுந் தரவினுங்கொடையினு,,மென் னுஞ் சூத்திரத்திற்காண்க. "கண்ணுள்ளா நுங்காதலரொழிக கா மமீங்கென் வென்றற்போலத் தன்மையுணர்ததிற்று.

இங்நிலைபெயர வுன்னுமக்கணத்திற்
றூண்டாவிளககி னீண்டவளுதவும்

இங்நிலை - இங்ஙனநினறநிலையினின்று—பெயர - நீங்க— உன்னுமககணத்தில் - கருதுமப்பொழுதில்—ஈண்டு - இவ்விட

த்து—தூண்டாவிளக்கின் - தூண்டாவிளக்கினைப்போல—அவ ளுதவும் - அவள்வருவள்,

தூண்டாவிளக்கு - மணிவிளக்கு.

அவ்வுழியுறவு மெய்பெறக்கலந்தின்
றொருகடலிரண்டு திருப்பயந்தாங்கு
வளைத்தநெடுங்கார்ப் புனத்திருவீரு
மணிநிறையூச லணிபெறவுகைத்தும்

அவ்வுழி - அவள்வந்தவிடத்து—இருவீரும் - இரண்டுபே ரும்—மெய்பெற - உண்மைபெறும்படி—உறவுகலந்து-உறவா டி—இன்று - இப்பொழுது—இரண்டுதிரு - இரண்டுதிருவினை ஒருகடல் - ஒருபாற்கடல்—பயந்தாங்கு-பெற்றாற்போல—வளை த்த - வளைக்கப்பட்ட—நெடுங்கார்ப்புனத்து-நெடியதாகிய கரிய புனத்தில்—அணிபெற - அழகுபெறும்படி—மணிநிறை - முத் தமணிகளழுத்திய—ஊசலுகைத்தும் - ஊசலாடுதலானும்;

பாற்கடலென் றுவமைகூறுதலான் மணியூசன்முத்தமணி யூசலாயிற்று.

கருங்காற்கவணிடைச் செம்மணிவைத்துப்
பெருந்தேனிறாலொடு குறிவிழவெறிந்தும்

பெருந்தேனொடு - மிகுந்ததேனுடனே—இறால் - தேன்கூ டாகிய—குறிவிழ - இலக்குவிழும்படி—கருங்கால்-மயிராலமை த்தகாலினையுடைய—கவணிடை-கவணிடத்து—செம்மணிவை த்து - மாணிக்கத்தைவைத்து—எறிந்தும் - எறிந்ததனாலும்;

ஒடுவுருபை மாறுக. இலக்காகவிழும்படி தேனையுடைய வி றூட்டின்கண்ணெறிந்ததனாலு மெனினுமாம். ஒடு - உருபுமயக் கம். இறந்தகாலங்காட்டுஞ் செய்தெனெச்சங் காரியப்பொருட் டணின்றது.

வெண்டுகிலுடங்கிப் பொன்கொழித்திழியு
மருவியேற்றும்

வெண்டுகில் - வெள்ளைத்துகில்போல—நுடங்கி - அசைந்து—பொன்கொழித்து - பொன்னைக்கொழித்து—இழியும் - வீழும்—அருவியேற்றும் - அருவியிற்றோய்ந்ததனாலும் ;

இது தொழிலும்பண்பும்பற்றிய வுவமை, விரவியும்வருஉ மரபினவென் றவிதியான.

முழைமலைகூஉயும்

முழைமலை -முழையினையுடையமலைக்கெதிர்—கூயும்-கூவுதலானும் ;

இகரவீறு திரிந்துநின்றது.

பெருஞ்சுனைவிழித்த நீலங்கொய்தும்

பெருஞ்சுனை - பெரியசுனையினிடத்து—விழித்த - மலர்ந்த—நீலங்கொய்தும் - நீலமலரைக்கொய்ததனாலும் ;

விழித்தநீலமென வுரியபொருளன்றி யொப்புடைப்பொருண்மேல் வினைபுணர்ந்தமையாற் சமாதியென்னு மலங்காரம், நீலம் ஆகுபெயர்.

கொடுமாபோற்றி நெட்டிதண்பொலிந்து

கொடு - கொடிய—மா - மிருகங்களால்வருமேதத்தை—போற்றி - பாதுகாக்கவேண்டி—நெடிதண் - நெடியபரணில்—பொலிந்தும் - பொலிவுபெற்றதினாலும் ;

கொடுமாப்போற்றியென்பதி னிரண்டுரும்பும் பொருளுமொப்ப விரிந்திரண்டு மயங்கியவாறுகாண்க. 'உம்படைக்கிளவிக்கையுமாலும் தாம்பிரிவிலவே தொகைவருங்காலே'யென்பதனானறிக. 'கொடுமரம்பற்றி'யென்று பாடமாயிற் பழுவினைப்பற்றியென்க.

அது இடையிடையிற்கொடுத்த மரமாதலிற் கொடுமரமென்றூர் பொன்னாற்செய்த குடத்தினைப் பொன்னென்றாற்போல்வதோ ராகுபெயர்.

தினைகுரலறையுங் கிளிக்கணங்கடிந்தும்

தினைக்குரல் - கதிரினையுடைய தினையிடத்தில்—அறையும்- கூப்பிடும்—கிளிகணம் - கிளிக்கூட்டத்தை—கடிந்தும் - ஓட்டுதலானும்;

தினைகுரல் பின்மொழிநிலையல்.

வெள்ளியிரும்பு பொன்னெனப்பெற்ற
மூன்றுபுரம்வேவத் திருநகைவிளையாட்
டொருநாட்கண்ட பெருமானிறைவன்

ஒருநாள் - ஒருநாள்—திருநகை - அழகியநகையால்—வெள்ளி - வெள்ளியும்—இரும்பு - இரும்பும்—பொன் - பொன்னும—எனப்பெற்ற - என்றுசொல்லும்படிபோபெறற—மூன்றுபுரம் - மூன்றுபுரமும்—வேவ - வேம்படி—விளையாட்டுக்கண்ட- விளையாட்டுக்கண்ட—பெருமானிறைவன் - பெருமானாகிய விறைவன்,

எண்ணும்மை தொகக்து. இனைத்தெனவறிந்தவும்மை விகாரத்தாறறொக்கது, வெறுததவென்றும்பாடம்.

மாதுடனென்றி யென்மனம்புகுந்து
பேணவுள்ளங் காணுதுநடந்து

பேணு - தன்னைவிரும்பாத—உள்ளம் - உள்ளமானது— காணுதுநடந்து - காணுதுசென்று—என்மனம் - என்னுள்ளத்தில்—மாதுடனென்றி - அங்கயற்கண்ணம்மையோடுபொருந்தி —புகுந்து - புகுந்தொழுகி;

மனஞ் சுட்டுபெயர். ஒன்றி-ஒன்ற.

கொலைகளவென்னும பழுமரமபிடுங்கி

கொலை - கொலையும—களவென்னும் - களவுமாகிய—ப
ழுமரமபிடுஙகி - பழுமரங்களைத்தள்ளி;

புலாலுணணுங கூடாவொழுககமும் வெகுளுதலு மின்
னுசெய்தலு மவாவுமோவெனின - கொலையுங்களவுமே கூறினு
ராயினு மொழியாதநனை முட்டின்றி முடித்தலென்னுமுத்தி ப
றறிககொளக. கூறிரவேனிலென்ற சூத்திரத்தில பெருமபகை
தாங்கும வேலினுனுமெனறு கூறியொழிநத வாயுதமுங்கொண்
டதா "சுவையொளியூறோசை நாறறமென்றைந்தின் வகைதெரி
வான்கடடேயுலகு,,என்றகுறளிலுடம்படுபுணாததலகூறினுரா
தலா னுத்திவகையுஞ்செய்புடகுங கொளளககிடந்தன. எல்லா
வுயிாகருந் தொன்றுதொட்டுவருதலிற் பழமரமென்றும பாடம.

பவச்சுவரிடித்துப புதுககககட்டி
யன்புகொடுமேயநத நெஞ்சமணடபத்துப
பாங்குடன்காணத் தோனறியுண்ணினறு

பவசசுவா-பிறவியாகியசுவரினை—இடித்து-இடித்துக்(கொல்
லாமைமுதலியமரங்களைநாடடிப பிறவாமையாகியசுவணாவைத்
து)—புதுககககட்டி-புதிதாககககட்டி—அன்புகொடுமேய்ந்த - அ
ருளாகிய(பொற்றகடு) கொணடுவேய்ந்த—நெஞ்சமண்டபத்து-
இருதய(தாமரையாகிய) மண்டபத்து—உண்ணின்று - உண்ணி
னறு—பாங்குடன்காணத்தோனறி - யான் பக்கமெல்லாங்காண
வெளிப்படடு;

மரங்களென்பன வாகுபெயராதலி னவை காலுத்திரம் போ
திகைமுதலியன வடஙகின. அருத்தாபத்தியானுங் கட்டிபோ
ன்றதனுனும் பிறவாமையாகிய சுவணாவைத்துக் கொல்லாமை
முதலிய மரஙகளாற கட்டியென ரூபகம் வருவிக்கப்படடது.

இதுபலமறுதலையன்று மரங்களைத் தனித்தனி கொள்ளக்கிடத்தலின், இதுஅவயவியை யுருவகஞ்செய்யாது அவயவங்களை யுருவகஞ்செய்தமையான் அவயவவுருவகம். அன்புமாட்டே றேலாதுவந்தமையின் வியனிலையுருவகமாகாது அவயவிமாட்டேறேலாதுவந்தமையின் அன்பினூர்ந்தவருளையன்பென்றதும் நெஞ்சிலிருந்ததாமரையை நெஞ்சென்றதும் ஆகுபெயர். சிவன்முத்தனுமுன் காணுதொழுகிச் சிவன்முத்தனுனபின் இதயதாமரையுணின்று வெளிபபட்டமை விளஙகிறறு.

பன்மலர்ச்சோலை விம்மியபெருமல
ரிமையோர்புரத்தை நிறைமணங்காட்டுங்
கூடலம்பதியகம் வீடுபெறவிருந்தோ
னிருதாள்பெற்றவர் பெருந்திருப்போல

பன்மலாச்சோலை-பலவாகியமலாசசோலையில்—விம்மியபெருமலர்-மலாந்தநறியமலர்கள்—இமையோாபுரத்தை-தேவருலகின்கண்—நிறைமணங்காட்டும்-நிறைந்தவாசத்தையுமுண்டாக்குதற்கிடமாகிய—கூடலம்பதியகம்-கூடலாகியபதியினதிடம், வீடுபெறவிருந்தோன்-சிவகதியாக விருந்தவன்—இருதாள்பெற்றவர்-இரண்டுபாதத்தையுமடைந்தவர்—பெருந்திருப்போல-பெற்றபெருஞ்செல்வ(மின்பமெயாடுநன்மையைவிளைத்தாற்)போல;

பொன்மலர்ச்சோலையெனிற் கற்பகத்தருவெனக. விம்முதல் சங்கம்விம்முசித்திலங் கொங்குவிம்முகோதையென்றாற்போலநின்றது. புரத்தை யுருபுமயக்கம். இந்திரன் சாபந்தீர்தற் கர்ச்சித்தமலர். காட்டுங்கூடல் நிலப்பெயர்கொண்டது. நஞ்சமுதாகுங் கண்டனென்றாற்போல, இந்திரனர்ச்சித்தமலர்களிமையோர்புரத்தை மண்ணிடத்திற்காட்டுங்கூடலெனினுமாம். பன்மலவொன்றுபாடமாயினமையினிமையோர்புர மணமாகக்காட்டுங்கூடலென்க. அத்துமையுஞ்சாரியை, வீடுபெறவிருந்தோனென்றும்பாடம்

ம்ருவியபண்ணை யின்பமொடுவிளைநலஞ்
சொலலுடனமராது

மருவியபண்ணை - மருவியவிளையாட்டு—இன்பமொடு-இன்பமோடு—விளை - உண்டாகும்—நலம - நன்மையெல்லாம்—சொல்லுடனமராது - சொலலுதறகமையாது—எ-று.

செய்தெனெச்ச வடுககுகளை காரணகாரியப பொருட்டாய் விளைநலமெனபதனோடு முடிநதது.

நுதலினையுடையாய காட்சியினானே புத்தியினானே விதியினானே நின்னை யெனக்குரிழியாககருதியவறிவுகிடைகக ஈங்குமருவுவையாயி னவள்வருவள வந்தாலிருவீருமுறவாடி யூசலாடன முதலிய தொழில்விளைத்தலான் மனையிலிருந்தவன் சரணடைந்தார் பெறறசெலவமினபமொடு நனமைவிளைத்தாற்போல வினபமோடுண்டாகு நனமையெல்லாஞ் சொல்லுதற கமையாதென விளைமுடிவுசெய்க. (உ௩)

---

## காமமிக்ககழிபடர்கிளவி.

காமமிக்ககழிபடர்கிளவி யென்பது - தலைமகனைக காணலுற்றுவருநதாநின்ற தலைமகள், தனதுவேட்கைமிகவாற்கேளாதனவற்றைகேட்பனவாக விளித்து, நீங்கள் என்னை ஏதுற்றழிகின்றுயென்று ஒருகால்வினவுகின்றிலீர் இதுவோ நுங்காதன்மையென அவற்றொடுபுலந்து கூறுநிற்றல். அதற்குச்செய்யுள்:

மாதுற்றமேனிவளையுற்ற வில்லிதில்லைநகர்சூழ்
போதுற்றபூம்பொழில்காள்கழிகாளெழிற் புள்ளினங்காள்,
ஏதுற்றழிதியென்னீர்மன்னுமீர்ந்துறை
வர்க்கிவளோ,தீதுற்றதென்னுக்கென்னீ ரிதுவோ
நன்மை செப்புமினே. கஎ௪

தாமமிக்க தாழ்குழலே ௬௰
காமமிக்க கழிபடாகிளவி.

இ-ள். மாதுற்றமேனி - மாதுபொருந்தியமேனியையுடைய—வரையுறவில்லி - வரையாகியமிக்கவில்லையுடையவனது—தில்லைநகர்சூழ - தில்லைநகரைச்சூழ்ந்த—போதுற்ற - போது பொருந்திய—பூம்பொழில்காள-மலரினையுடைய பொழில்காள—கழிகாள் - (அப்பொழிலைச்சூழ்ந்த) கழிகாள்—எழிற்புள்ளினங்காள் - (அக்கழிகளிற்பயிலு) மெழிலையுடையபுள்ளினங்காள்;—ஏதுற்றழிதியென்னீர் - (என்னைநீங்கள்) யாதனையுற்றழிகின்றாயென்றொருகாற்கூறுகின்றிலீர்—மன்னுமீர்ந்துறைவற்கு - குளிர்ந்ததுறைவற்கு—இவளோ - இவள்—தீதுற்றதென்னுங்கொன்னீர் - தீதுற்றதென்று கூறுகின்றிலீர்—இதுவோ-இதுவோ—நன்மை - நம்மோடுநுங்காதன்மை—செப்புமின்-செப்புமின—எ-று.

மாதுற்றமேனியென்பது ஆகுபெயராயமேனியையுடையான் மேனின்றதெனினுமமையும், வரையுறவில்லியென்பதற்கு வரைத்தன்மையைப்பொருந்திய விலலையுடையானெனினுமமையும். வரைததன்மையைப்பொருந்துதல-வரையாயிருத்தல். போது-பேரரும்பு. மன்னுமென்பதூஉம் இவளோவெனனுமோகாரமும் அசைநிலை. மன்னுந்தீதுற்றதெனக்கூட்டி மிகுதிக்கண்வந்ததென்பாருமுளா. இதுவோநன்மையென்பதற்குத் தில்லையைச்சூழ்ந்தவிடத் துள்ளீராகலின் உமக்குண்டாகிய சிறப்புடைமை யிதுவோவெனினுமமையும். அழுதியென்பதூஉம் பாடம். ஏழையது கிளவியெனவியையும் (௧௭௪)

நேரிசையாசிரியப்பா.

வானவர்க்கிறைவ னிலங்கிடைகொண்டு
திருவுடனிறைவிழி யாயிரத்திரளு
மிமையாதுவிழித்த தோற்றம்போலக்
கஞ்சககொள்ளை யிடையறமலர்ந்து
மணஞ்சூழ்கிடந்த நீள்கருங்கழியே
கருங்கழிகொடுக்கும் வெள்ளிறவருந்தக்
கைபாராதிருக்கு மடப்பெடைக்குருகே
பெடைக்குருகணங்கின்விடுத்தவெண்சினையொடு
காவலடைகிடக்குங் கைதையம்பொழிலே
வெம்மையொடுகூடியுந் தண்மைபொருந்திய
முலகவிருடுரக்குஞ் செஞ்சுடர்வெண்சுடர்
காலங்கோடா முறைமுறைதோற்ற
மணிநிரைகுயிற்றிய மண்டபமாகிப்
பொறைமாண்டுயிர்க்குந் தாயாமண்மகள்
களையாதுடுக்கும் பைந்துகிலாகி
வேனிற்கிழவன் பேரணிமகிழ
முழக்காதுதழங்கு மாமுரசாகி
நெடியோன்றுயிலா தறிவொடுதுயிலப்
பாயற்கமைந்த பள்ளியறையாகிச்
சலபதியாய்ந்து சேமநிலைவைத்த
முத்துமணிகிடக்குஞ் செறியிருளரங்காய்ப்
புலவுடற்பரதவர் தங்குடிமையாம்ப
நாளுமவிளைக்கும் பெருவயலாகிக்
கலமெனுநெடுந்தேர் தொலையாதோட
வளப்பறப்பரந்த வீதியதாகிச்
சுறவவேந்து நெடும்படைசெய்ய
முழக்கமொடுவளைத்த வமர்க்களமாகி
மகரத்தெய்வ நாணிறைந்துறைய

மணிவிளக்குநிறைந்த வாலயமாகி
நீர்நெய்வார்த்துச் சகரரமைத்த
தீவளர்வட்டக் குண்டமாகி
யெண்டிகழ்பகுவா யினமணிப்பாந்தட்
டண்டினின்றெரியுந் தகளியதாகிப்
பஞ்சவனிறைந்த வன்புடன்வேண்ட
மாறிக்குனித்த நீறணிபெருமாற்
கமுதபோனகங் கதுமெனவுதவு
மடுந்தீமாறா மடைப்பள்ளியாகி
யின்னும்பலவாய் மன்னுங்கடலே
நுங்களின்பம் பெருந்துணையென்றூற்
றண்ணந்துறைவற் கின்றிவளொருத்தி
நெருப்புறுமெழுகி னுள்ளம்வாடியு
மருவிதூங்கக் கண்ணீர்கொண்டு
மரவின்வாயரியிற் பலவுநினைந்து
நிலையாச்சூளி னிலையாநெஞ்சுங்
கொண்டனளென்னென வென்முகநாடி
யுற்றவாய்மை சற்றுந்தருகிலீ
ரன்றெனினும்மி லொன்றுபட்டொருகா
லிவளோதுயரம் பெறுவதென்னென்று
வினவாதிருக்குங் கேண்மை
மனநனுடிற் சொல்லினுங்கொடிதே. உ௯



வானவர்க்கிறைவன்; சொல்லினுங்கொடிதே. பகுதி - இரவிற்குறி, துறை - காமமிக்ககழிபடர்கிளவி.

வானவர்க்கிறைவ னிலங்கிடைகொண்டு
திருவுடனிறைவிழி யாயிரத்திரளு
மிமையாதுவிழித்த தோற்றம்போலக்

கஞ்சகொள்ளை யிடையறமலாநது
மணஞ்சூழ்கிடந்த நீள்கருங்கழியே
(இதனது பதப்பொருள்.)

வானவர்கிறைவன் - இந்திரன்—நிலங்கிடைகொண்டு - மண்ணிற்கிடந்து—திருவுடல் - அழகியவுடலில்—நிறைவிழியாயிரத்திரளும் - நிறைந்ததிரளாகியவாயிரங்கண்ணும்—இமையாதுவிழித்ததோற்றம்போல் - குவியாதுவிழித்ததோற்றம்போல—கஞ்சக்கொள்ளை - தாமரைத்திரள்—இடையறமலர்ந்து - மூகையின்றிமலாநது—மணஞ்சூழ்கிடந்த - மணஞ்சூழ்தல்பெற்ற—நீள்கருங்கழியே - நீண்ட கரியகழியே ;

இது எதிர்நிரைநிரையுவமை. இனித்தெனவறிந்த வும்மை மாறுக. மலர்ந்தென்னுஞ் செய்தெனெச்சஞ் செயப்படுபொருள் "கோணிலைதிரிநதுநாழி குறைபட" வென்றாற்போல. சினையொடு முதற் கொற்றுமையுண்மையாற் சினை வினைமுதலொடு மியைந்ததெனினுமாம்.

கருங்கழிகொடுக்கும் வெள்ளிறவருந்தக்
கைபாாத்திருககு மடப்பெடைக்குருகே

கருங்கழிகொடுக்கும் - கரியகழிகொடுக்கும்—வெள்ளிற - வெள்ளியவிறுமீனை—அருந்த - நுகர—கைபார்த்திருககும் - அதன் சிறுமைபார்த்திருக்கும்—மடப்பெடைக்குருகே - மடப்பத்தினையுடைய பெடையாகியகுருகே ;

கை யிடமுமாம். கழியிலுற்பத்தியாதலா லது கொடுத்தலாயிற்று. கருங்கழியாகிய வள்ளியோன்றிணையாகிய கையிலுலருந்தக்கொடுக்கும் வெள்ளிறவாகிய பொருளினைப்பெறப் பார்த்திருக்கு மிரவலனாகிய குருகேயெனக் குறிப்புருவகமாக்கினு மமையும். "இடுக்கண்கால்கொன்றிட வீழுமடுத்தூன்று நல்லா

னில்லாதகுடி,,யென்றாற்போல. இறு - இறவாயிற்று. குறிய தனி றுதிச் சினைகெட்டவென்றதனால்.

பெடைகுருகணங்கின் விடுத்தவெண்சினையொடு
காவலடைகிடக்குங் கைதையம்பொழிலே

பெடைக்குருகு - பெடையாகியகுருகு—அணங்கின் - மெய்வருத்தத்தின்—விடுத்த - ஈன்ற—வெண்சினையொடு - வெள்ளியமுட்டையோடு—காவல் - காவலாக—அடைகிடக்கும் - இறைபெறுதலைகிடத்தற்கிடமாகிய—கைதையம்பொழிலே - தாழைச்சோலையே;

ஒடு - ஒருவினையொடு, அது மெய்வருத்தபபட்டுப் பெற்றமையா னுயர்வின்வழித்தாயிற்று. குருகடைகிடக்குஞ் சோலையிடத்து நிகழ்பொருளின றொழிலிடத்தேறிநின்றது. ஒருகுழையொருவனென்னுங்கவியில் மிஞிறார்க்குங்காஞ்சி யென்றாற்போல சினைக்குக் காவலாகக்கிடககுமென வுருபுமயக்கமுமாம். அம் - அசை.

வெம்மையொடுகூடியுந் தண்மைபொருந்தியு
முலகவிருடுரக்குஞ் செஞ்சுடர்வெண்சுடர்
காலங்கோடா முறைமுறைதோறற
மணிநிரைகுயிற்றிய மண்டபமாகி

வெம்மையொடுகூடியும் - வெப்பத்துடனே பொருந்தியும்—தண்மைபொருந்தியும் - குளிர்ச்சியுடனேபொருந்தியும்—உலகவிருடுரக்கும் - உலகத்தின்கண் ணுண்டாகிய விருளைகெடுக்கும்—செஞ்சுடர் - ஆதித்தனும்—வெண்சுடர் - சந்திரனும்—காலங்கோடா - பகலிரவென்னுங்காலத்தில்கோடாது—முறைமுறைதோற்ற - முறைமுறையாக வுதிக்கும்படி—மணிநிரைகுயிற்றிய - மணிகளை நிறையாகக் குயிற்றினாற்போன்ற—மண்டபமாகி-மண்டபமாகியும்;

ஒடுவைப் பின்னுங்கூட்டுக. செறுவார்க்குஞ்செய்யா விட லென்றற்போலக் கொடாதென்பது கோடாதெனவிகாரங் கோடாவென்னும் வினையெச்சந் தோற்றவென்பதனோடுமுடிந்தது.

பொறைமாண்டுயிர்க்குந் தாயாமண்மகள்
களையாதுடுக்கும் பைந்துகிலாகி

பொறை - இருவகைத்தோற்றத்தின்பொறுதி—மாண்டு-மாட்சிமைப்பட்டு—உயிர்க்கும் - பெறும்—தாயாம்-தாயாகிய—மண்மகள் - மண்மகள்—களையாது - ஒருபோதுநீங்காது—உடுக்கும் - உடுக்கும்—பைந்துகிலாகி - பசியதுகிலாகியும் ;

வேனிற்கிழவன் பேரணிமகிழ
முழக்காதுதழங்கு மாமுரசாகி

வேனிற்கிழவன் - மன்மதன—பேரணி-படைககுவகுத்த பேரணி—மகிழ - மகிழும்படி—முழக்காது - ஒருவராலு முழக்கபபடாது—தழங்கும - முழங்கும்—மாமுரசாகி - பெரிய முரசாகியும் ;

நெடியோனறுயிலா தறிவொடு துயிலப
பாயறகமைந்த பள்ளியறையாகி

நெடியோன் - திருமால்—துயிலாது - மயக்கத்தோடு துயிலாது—அறிவொடு துயில - இயோகநித்திரைபண்ண—பாயற்கமைந்த - சேடனுகிய பாயற்குப்பொருந்திய—பள்ளியறையாகி-திருப்பள்ளியறையாகியும ;

துயிலவாகியெனவியையும், துயிலுமப்பாயற்கெனின் அகரம் பண்டறிசுட்டு, விட்டுணுப பிராட்டிமுதலியோா துயிலாதிருக்கத் தான்றுயிலும் பாயற்கென்க. செய்யாமற்செய்த வுதவிபோன்றது.

சலபதியாய்ந்து சேமநிலைவைத்த
முத்துமணிகிடக்குஞ் செறியிருளரங்காய்

சேமநிலை - காவனிலையாக—சலபதி - வருணன—ஆய்ந்து-ஆராய்ந்து—வைத்த - வைத்தாற்போன்ற—முத்துமணிகிடக்கும் - முத்துமணிகள்கிடத்தற்கிடமாகிய—செறியிருள் - இருளசெறிந்த—அரங்காய் - அறையாகியும ;

உவமையொடு பொருட்கொற்றுமை புண்மையாறு மவவினை பொருளொடுமியைந்தது. வருணன் புனற்காரசனுதலி னவன சேமநிலையாகவைக்கப்பட்ட முத்துமணிகளெனினுமாம.

புலவுடற்பரதவா தங்குடியோமப
நாளுமவிளைக்கும பெருவயலாகி

புலவு - புலாலுற்றத்தையுடைத்தாய—உடல் - உடலினையுடைய—பரதவர் - செய்தனிலமாகக ளாகியவுழவா— தங்குடியோம்ப - தங்குடியைப்பாதுகாக்கும்படி—நாளுடவிளைக்கும்-மீன்முதலியபயிர்களை நாடோறும் விளையப்பண்ணும—பெருவயலாகி - பெரியவயலாகியும் ;

புலவு - ஆகுபெயா.

கலமெனுநெடுந்தேர் தொலையாதோட
வளப்பறப்பரந்த வீதியதாகி

கலமெனும் - மரக்கலமாகிய—நெடுந்தேர் - பெரியதோ—தொலையாதோட - இடைவிடாமலோட—அளப்பற - ஒருவராலுமளக்கப்படாது—பரந்த - பரந்த—வீதியதாகி - தெருவீதியாகியும் ;

ஓடப்பரந்தவென வினையும்.

சுறவவேந்து நெடும்படைசெய்ய
முழுக்கமொடுவளைத்த வமாக்களமாகி

சுறவவேந்து - சுறவமாகியவரசன்—மெடுப்படைசெய்ய-மிகுந்தபோர் செய்யும்படி—முழக்கமொடு - ஆரவாரத்துடனே—வளைந்த - பூமியைவளைக்கப்பட்ட—அமர்க்களமாகி - போர்க்களமாகியும்;

ஒடு-உடனிகழ்ச்சி, வளைந்தவமர்க்களம - சுறக்கப்படு மாசிரியன்போன்றது

மகரத்தெய்வ நாணிலைநந்துறைய
மணிவிளக்குநிறைந்த வாலயமாகி

மகரத்தெய்வம - மகரமாகியதெய்வம்—நாணிலைநந்துறைய - நெடுங்காலம்பொருந்தும்படி—மணிவிளக்குநிறைந்த - மணியாகியவிளக்கு நிறைந்தவிடமாகிய—ஆலயமாகி - கோயிலாகியும்,

நீர்நெய்வார்த்துச் சகரரமைத்த
தீவளாவட்டக் குண்டமாகி

நீர்நெய்வார்த்து - நீராகியநெய்யைவார்த்து—சகரரமைத்த - சகரரமைக்கப்பட்ட—தீவளா - வடவாமுகாக்கினியாகிய நெருப்புவளாவிடமாகிய—வட்டக்குண்டமாகி - ஓமகுண்டமாகியும்;

சகரர் தோண்டவுண்டாதலி னதனை வார்த்தாராகக் கூறினார். அமைக்கப்பட்ட குண்டமெனவினையும்.

எண்டிகழ்பகுவாயினமணிப்பாந்தட
டண்டினெரியுந் தகளியதாகி

எண்டிகழ் - ஆயிரமென்னுமெண்ணால் விளங்காநின்ற—பகுவாய் - பெரியவாயினையும்—இனமணி - இனமணிசகூட்டினையுமுடைய—பாந்தள - பாந்தளாகிய—தண்டினெரியு

ம் - தண்டின்மேற்கூரியதாகிய தீபரின்றெரிதற்கிடமாகிய—தக ளியதாகி - தகளியாகியும் ;

விளங்குதல் - கலைகளான் மேம்படுதல். இலங்குநூல்கற றோரோடேனையவ ரென்றாற்போல, மணியையுடைய சூட்டினை மணியென்றதுபெயராகு. மணியையுமிழும்பாந்தளென வுருபும பொருளுந் தொகைதெனினுமாம. படைக்கைபோல அதுவென்ப து பகுதிப்பொருள்விகுதி மணி-ஆகுபெயா. ஆதித்தனாகியதீப மென மாட்டேறேலாதுவந்தது.

பஞ்சவனிறைந்த வன்புடன்வேண்ட
மாறிக்குனித்த நீறணிபெருமாற
கமுதபோனகங் கதுமெனவுதவு
மடுநீமாறு மடைபபளளியாகி

நிறைந்தவன்புடன்-அன்பெல்லாநிறைதற்கிடமாகிய—பஞ் சவன் - பாண்டியன—வேண்ட - விரும்ப—மாறிக்குனித்த-மா றியாடிய—நீறணிபெருமாறகு - நீறணிந்தபெருமானுக்கு—அ முதபோனகம்-அமுதமாகிய போனகத்தை—கதுமெனவுதவும்- விரையக்கொடுக்கும்—அடுநீமாறு - வடவையாகியவடபமுதீ மாறாத—மடைப்பள்ளியாகி - திருமடைப்பள்ளியாகியும் ,

அமுதமானபோனகம் - நஞ்சு.

இன்னும்பலவாய் மன்னுங்கடலே

இன்னும் - இங்ஙனஞ்சொன்னவை யன்றிப்பின்னும்—பல வாய் - பலவிதமாய்—மன்னுங்கடலே-நிலைபெறுங்கடலே;

இன்னும் - பின்னும், "அருவனைமார்பிற்சென்ற தறிந்தி னோகமின்னு,, மென்றாற்போல, கடற்குப் பலபொருளையுமு வகம்பண்ணினமையாற் பலபொருளுருவகம்.

தண்ணந்துறைவற் கின்றிவளொருத்தி
நெருப்புறுமெழுகி னுள்ளம்வாடியும்

இன்று - இப்பொழுது—(என்முகநாடி - என்முகம்பார்த்து)—இவளொருத்தி - இவளொருத்தி—தண்ணந்துறைவற்கு-குளிர்ச்சியினையுடைத்தாய துறையினையுடையாற்கு—நெருப்புறுமெழுகின்-நெருப்பிலுற்ற மெழுகுபோல—உள்ளம்வாடியும்-உள்ளமுருகியும் ;

தண்ணந்துறைவன்விகாரம், நான்கனுருபு காதற்கண்வந்தது.

அருவிதூங்கக் கண்ணீர்கொண்டும்

அருவிதூங்க-அருவியொழுகினாற்போலவொழுகும்படி—கண்ணீர்கொண்டும் - கண்ணீர்கொண்டும் ;

தொழிலுக்குத் தொழிலுவமங்கொள்க.

அரவின்வாயரியிற் பலவுநினைந்து

அரவின்வாய் - பாம்பின்வாயினகப்பட்ட—அரியின் - தேரை(பலவுநினைந்தாற்)போல—பலவுநினைந்தும்-எல்லாநினைந்தும்;

நிலையாச்சூளி னிலையாநெஞ்சங்
கொண்டனளென்னென (வெனமுகநாடி)
யுற்றவாய்மை சற்றுந்தருகிலீர்

நிலையா-நிலையாத—சூளின் - வருவேனென்றசூள்போல—நிலையா - அன்பர்நிறுத்த நிலைநில்லாத—நெஞ்சம்-நெஞ்சம்—கொண்டனளென்னென - எனபெற்றனளென்று—உற்றவாய்மை - உற்றவாய்மை—சற்றுந்தருகிலீர் - சிறிதாயினுந்தருகின்றிலீர் ;

என்முகம்நாடியென்பதனை முன்னேகூட்டுக. நெஞ்சமென்னுமும்மை யெச்சவும்மை. சற்றுமென்னும் வினையெச்சந்த

ருகின்றிலீரொன்னு மெதிர்மறையிற் றருதலோடுமுடிந்தது. அறியச்சிறிதுமாவியன் றன்னமென ஞெகிகின்வாய் திறவாவிடிலென்றாற்போல.

அன்றெனினுநம்மி லொன்றுபட்டொருகா
லிவளோ துயரம பெறுவதென்னென்று
வினவாதிருக்குங் கேண்மை
மனனுடிற் சொல்லினுங்கொடிதே.

அன்றெனின் - இதுவல்லாவிடின்—நம்மிலொன்றுபட்டொருகால் - நம்மிலொன்றுபட்டொருதரம—இவளோ - இவளோ—துயரம்பெறுவதென்னென்று - துன்பப்படுவதென்னென்று—வினவாதிருக்கும் - கேளாதிருக்கும்—கேண்மை - உறவாந்தன்மையை—மனனுடில்-மனத்தினினைக்கினும—சொல்லினும் - நாவாற்சொல்லினும்—கொடிதே - கொடிதெனவறிகின்றிலீராதலால்;

என்றறிகின்றிலீரென வொருசொல்வருவிக்க. ஏ-இரக்கக் குறிப்பு அசையுமாம். ஏகார மீற்றசை. நாடினென்ப ரவ்வவ் தொழிலுக்கேற்பின்றது நாடினுமென்னு மெண்ணும்மை தொக்கது தன்மைசுட்டலு முரித்தென்றாற்போல, இனனீக்கம். உம்மை - சிறப்பும்மை.

நுங்களின்பம் பெருந்துணையென்பால்

நுங்களின்பம - நுங்கள்காதன்மை—என்பால் - என்மாட்டு—பெருந்துணை - பெருந்துணையாம—எ-று.

பெருந்துணையென்ப திகழ்ச்சிக்குறிப்பு, அதனாற் புலந்தமைதோன்றிற்று. இன்பமென்று காரணத்தைக் காரியமாக வுபசரித்தார் நும்மாலெனக்குவரு மின்பமெனினுமாம.

கழியே குருகே கைதையே கடலே யிவணொருத்தி துறைவற்குருகியுஞ் சோர்ந்தும் நினைந்தும் நிலைபெறுநெஞ்சமெனகொண்டனளென் றுற்றவாய்மை சிறிதாயினுந் தருகின்றிலீ ரதுவன்றி நீங்களொன்றுபட்டுக் கேளாதிருக்கு முறவாந்தன்மையை நினைக்கினுஞ் சொல்லினுங் கொடிதென் றறிகின்றிலீ ராதலானுங்கள்காதன்மை பெருந்துணையாமென வினைமுடிவுசெய்க.

கழியே யாயிரங்கணணுடைய விந்திரன்போலுந்தோற்றத்தினையுடைய நீயறியாததொன்றில்லை யென்னளவு மறிகின்றிலையெனவுங் குருகேநீ யிரவலனாயினநீ யிரத்தலறிவை யென்னிரவறிகின்றிலையெனவுங் கைதையேநீ குருகுகட்காதாரமாவை யெனக்காதாரமாகின்றிலையெனவுங் கடலேநீ யிருசுடர்க்கு மிடங்கொடுத்தனை யெனக்கிடங்கொடுத்திலை, பூமகட்காடையா யபிமானங்காத்தனை யெனக்குக்காத்திலை, மன்மதன்பேரணிபெண்களாதலாற் பெண்கட்கெல்லா நீதுன்பஞ்செய்திலை யெனக்குத்துன்பஞ்செய்தனை, பள்ளியறையாய் விட்டுணுவின் றுயிலறிந்தனை யானறுயிலாததறிந்திலை, வருணன்வைத்த முத்துமணிகட்கறையாய நீங்காதுகாத்தனை யெனக்கு நீங்காதுகாத்திலை, பரதர்க்குவயலா யுணவாக்கினை யெனக்குணவாக்கிலை, தேரோடவீதியானநீ யவாசெல்ல விடங்கொடுத்தனை யெனக்கு வீதியாயிடங்கொடுத்திலை, அமர்க்களமானநீ பொரப்படுவை தலைவரோடு பொரப்பட்டிலை, ஆலயமானநீ சேவிக்கப்படுவை யென்னாற்சேவிக்கப்பட்டிலை, ஓமகுண்டமானநீ யடுத்தார்க்குப் பலன்கொடுப்பை யான் பலன்பெற்றிலன், விளக்கெரியுந்தகளியானநீ யெங்கும் விளங்கப்பண்ணுவை யான் விளங்கப்பண்ணிலை, மடைப்பள்ளியானநீ பெண்களிட்ட வழுக்காகுவை யெனக்கப்படியாயிலையெனவுஞ் சொல்லெச்சமுங் குறிப்பெச்சமுங் கொள்ளக்கிடந்தன, ஆயிரங்கண்ணும்விழித்துத் தெய்வேந்திரன்கிடந்தாற்

போல் மலர்விரிந்துகிடந்தனே யெல்லாமுனக்குத் தெரியுமென வக்கூற்றுச்செய்யுஞ் செய்யுட் சிதைவின்மையிற் கூற்றெச்சமாம். என்னளவுமுனக்கொன்றுந் தெரிந்ததில்லையென்பது குறிப்பிற்கிடந்தமையிற் குறிப்பெச்சம். "செங்களம்படக்கொன் றவுணர்த்தேய்த்த,, வென்னும்பாட்டி லிரண்டுங்காண்க. "சொல்லியநன்மையில்லாச் சுணங்கனிவ்வுடம்புநீங்கி,,யென்னும் பாட்டிற் கூரிரும்பிரதங்குதத வெல்லையில்செம்பொனுகு மெரிநிறம் பெற்றதன்றே, இதுவுமத்தன்மைத்தென் றது சொல்லெச்சமென்றார். "படைமலாநெடுங்கண்ணு,, ளென்றபாட்டில் அல்குன் மிடைமணி மேகலைநோற்றயானே நோலாதேனென்பது குறிப்பெச்சமென்றார். சொல்லொடுங்குறிப்பொடு முடிவுகொளியற்கை புல்லியகிளவி யெச்சமாகுமென்பது விதி. இது நோயுமின் பமுமென்னுஞ் சூத்திரத்தி லமுகைபற்றிச் செய்யாமரபிற் றொழிற்படுத்தடக்கியது. (உ௫)

---

## இடமணித்துக்கூறிவற்புறுத்தல்.

இடமணித்துக்கூறி வற்புறுத்தலென்பது - அருட்குணமுளைத்து வற்புறுத்தவும் ஆற்றுமைநீங்காத தலைமகட்கு, நம்மூரிடத்திற்கு எம்மூரிடம் இத்தன்மைத்தெனத் தன்னூரினணிமைகூறிவற்புறுத்தாநிற்றல். அதற்குச்செய்யுள்—

வருங்குன் றயொன் றுரித்தோன் றில்லையம்பலவ
ன்மலயத், திருங்குன் றவாணரிளங்கொடியேயிட
ரெய்தலெம்மூர்ப், பருங்குன் றமாளிகைநுண்களப
த்தொளிபாயநும்மூர்க், கருங்குன் றம்வெண்ணிற
க்கஞ்சுகமேய்க்குங் கனங்குழையே. கரு

மடவரலே வற்புறுத் தி
இடமணித்தென் றவனியம்பிய து.

இ-ள். வருங்குன றமொன று - இயங்குமலையொன்றை— உரித்தோன் -உரித்தவன்—தில்லையம்பலவன் - தில்லையம்பலத்தையுடையான்—மலயத்து - அவனதுபொதியின்மலையிடத்து —இருங்குன்றவாணா - பெரியகுன்றத்தின்கண் வாழ்வாருடைய —இளங்கொடியே - மகளே—இடரெய்தல் - வருத்தத்தைவி டு—கனகுழை - கனங்குழாய்—எம்மூர் - எம்மூரிடத்து—ப ருங்குன்றம் - பெரியகுன்றம்போலும்—மாளிகை - மாளிகைக ளின்—நுண்களபத்து - நுண்ணிதாகியசாந்தின்—ஒளிபாய - ஒளிபரந்து—நும்மூர்க்கருங்குன்றம் - நும்மூர்க்கணுண்டாகிய கரியகுன்றம்—வெண்ணிறம் - வெள்ளைநிறத்தையுடைய—கஞ் சுகம் - சட்டையிட்டதனோடு—ஏய்க்கும் - ஒக்கும்—எ-று.

கருங்குன்ற வெணணிறமென்பது பாடமாயின், நுண்கள பத்தொளிபரப்ப அவ்வொளி நும்மூர்க் கருங்குன்றத்திற்கிட்ட வெணணிறககஞ்சுகத்தோடொக்குமென்றுரைகக.எண்டுரைத்த வாற்றல், தலைமகன்மிககோ ளுதலவேணடும், வேண்டவே ஒப பு எனனை பொருநதுமாறெனின், "மிககோளுயினுங் கடிவரை யின்றே,, என்பதோத்தாகலிற் பொருந்துமெனக. வற்புறுத்தி- வலியுறுத்தி. இடமணித்தென்றலே வற்புறுத்தலாக வுரைபபி னுமமையும். மெய்ப்பாடு - பெருமிதம், பயன் - இடமணித்தெ ன்று வற்புறுத்தல். (கரு)

நேரிசையாசிரியப்பா.

பொருப்புவளன்வேண்டி மழைக்கண்டிறப்பக்
குருகுபெயர்க்குன்றத் துடல்பகவெறிந்த
நெடுவேற்கடவுண் மயிற்கொடிமுன்றிற்

பெருங்கிளைகூண்டு வெட்சிமலர்பரப்பி
யிருணறவளாய செந்தினைவெள்ளிடி
தேக்கிலைவிரித்து நாற்றிசைவைத்து
மனவணிமுதியோள் வளையணங்கயர்ந்து
மூன்றுகாலமுந் தோன்றக்கூற
வேலன்சுழன்று குறுமறியறுப்பக்
கருவிநுனிகொ ணெறியிலையீந்தின்
முற்றியபெருநற வெண்ணுடன்குடித்து
நெட்டிலையரம்பைக் குறுங்காய்மானு
முளியந்தறித்த கணைகொள்வாய்த்திரிக
லொப்புடைத்தாய வட்டவாய்த்தொண்டகங்
கோறலைபனிப்ப வானுள்விடுபெருங்குரல்
வீயாதுதுவைக்குங் கடன்மலைநாடர்
வருந்தியின்றெடுத்த செந்திருமடமக
ளொருவுகவுள்ளத்துப் பெருகியநடுக்க
மெம்மூர்ச்சேணு நும்மூர்குன்றமும்
பெருந்தவர்குழுவு மருங்கதியிருப்பும
பொதியமுங்களிப்ப விரிதருதென்றலுங்
கனைகடல்குடித்த முனிவனுந்தமிழு
மேருவுமூவர்க் கோதியபுரமு
முலகமீன்றளித்த வுமையுமாவறனுந்
தேவர்க்கரசனுங் காவற்றருவும்
வழுவாவிதியு மெழுதாமறையுஞ்
செங்கோல்வேந்துந் தங்கியகுடியுந்
தவஞ்சூழ்மயமுங் கமஞ்சூன்மழையு
மெல்லையிலீங்கிவை சொல்லியவன்றிக்
கண்ணன்கரமும் வெண்ணெயும்போலப்
பாசடைபுதைத்த நெட்டாற்றேரிப்

பூத்தலர்விரித்த சேப்படுதாமரை
யுள்வளையுறங்கும் வள்வாய்க்கூட
னிறைந்துறைமுக்கட் பெருந்திறலடிக
ளடியவர்க்கெவ்வள வதுவாங் !
கொடி புரைநுசுப்பிற் பெருமுலையோளே. உ௬

---

பொருப்புவளன்வேண்டி பெருமுலையோளே. பகுதி-இய
ற்கைப்புணர்ச்சி, துறை-இடமணித்துக்கூறிவற்புறுத்தல்.

பொருப்புவளன்வேண்டி மழைக்கண்டிறப்ப
(இதனது பதப்பொருள்.)

பொருப்பு - மலையில்—மழைக்கண்டிறப்ப - மழைபெய்பு
ம்படி;

சேயோன்மேய்மை வரையுலகமுமென்று பொருட்கூற்றிற்
கூறியதற்கு மழைவளந்தருவிக்கு முருகனென்றார். கண்டிறத்
தல்-மழைபெய்தல்.

குருகுபெயர்க்குன்றத் துடல்பகவெறிந்த
நெடுவேற்கடவுள்

வளன்வேண்டி - மழைவளத்தைவிரும்பி—குருகுபெயர் -
கிரவுஞ்சமென்னும் குருகின்பெயரையுடைய—குன்றத்து-குன்
றத்தினது—உடல்பக-வடிவம்பிளக்க—எறிந்த - எறிந்த—நெ
டுவேல் - நெடியவேலினையுடைய—கடவுள - கடவுட்கு;

கடவுள் தெய்வமென்னும் பொருட்டாய் அஃறிணைமுடிவு
கொள்ளு முயர்திணையாய்நின்றது. நாவலந்தீவில் வடகூற்றிற
கிரவுஞ்சமென்னும்மலையைக் குருகுப்பெயர்க் குன்றமென்றார்.
ஈண்டு குருகென்றதன்றிலே, அதற்கு வடமொழிப்பெயரதுவா
கலின் "நாவலந்தண்பொழிலா யிடைக்குருகோடு பெயர்பெற்ற

மால்வரையுடைத்,, தென்றூர் பரிபாடலினும். "குருகுபெயரிய குன்றெறிந்தானு,, மெனறூர வெண்பாமாலையினும். குருகுபெயா வரகுகதிர்போனின்றது. "ஒற்றிடைமிகாமொழியுமாருள வெத்திறத்தில்லை வல்லெழுத்துமிகலே" என்பதுவிதி.

மயிற்கொடிமுன்றிற
பெருநகிளைகூண்டு

மயில் - மயிலையும்—கொடி - கொடியினையுமுடைய—முன்றில் - முற்றத்தில்—பெருநகிளை - மிகுந்தகிளைகள்—கூண்டு - திரண்டு;

வெட்சிமலாபரப்பி
யிறுனறவளாய செந்தினைவெள்ளிடி
தேக்கிலைவிரித்து நாறறிசைவைத்து

நாறறிசை - நாறறிசையினும்—தேகிலைவிரித்து - தேகிலையைவிரித்து—வெட்சிமலராளாய - வெட்சிப்பூவோடுகலந்த—செந்தினை - சிவந்ததினையரிசியை—பரப்பி - பரப்பி—இறுனறவளாய - இறுட்டுதேனோடு கலந்த—வெள்ளிடி - வெள்ளியதினைமாவை—வைத்து - வைத்து;

நாற்றிசையினுமென்று மினைத்தெனவறிந்தவும்மை தொக்கது. அதனோடு மயஙகறகண்வநத வொடுவென்னுருபிரணடிடத்துந்தொககது. அளாயவென்பதனை மலரோடுங்கூட்டுக.

மனவணிமுதியோள் வரையணங்கயாந்து
மூன்றுகாலமுந் தோன்றக்கூற

மனவணி - சஙகுமணியணியும்—முதியோள் - முதுபெண்டிர்—வரையணங்கயர்ந்து-வரைசெல்விறநெயவ முணடாகச்செய்து—மூன்றுகாலமும் - மூன்றுகாலத்துநிகழ்வனவும்—தோன்றககூற - வெளிப்படக்கூற;

வணர்-ஆகுபெயர், முதியோளா-கட்டுவிச்சி.

வேலன்சுழனறு குறுமறியறுப்ப

வேலன் - வெறியாட்டாளன்—சுழன்று - சுற்றி—குறும றி - குறியவாட்டுமறியினை—அறுக்க - அறுப்ப;

முருகனை நனைககடையாளமாககொண்டு திரிதலின் வேல னென்றார். "வெறியறிசிறப்பின் வெவ்வாய்வேல,, னென்றார் புறத்திணையினும்

கருவி நுனிகொ ணெறியிலையீந்தின்
முற்றியபெருநற வெண்ணுடனகுடித்து

கருவி நுனிகொள் - படைக்கலத்தினுனிபோல நுனிகொண்ட—நெறியிலையீந்தின - நெறித்தவிலையினையுடைய—ஈந்தின் - ஈந்தில்—முற்றிய - விளைந்த—பெருநறவு - மிகுந்தநறவெல்லாம்—எண்ணுடன்குடித்து - கருததாகவருந்தி;

நெடடிலையாம்பைக குறுங்காய்மானு
முளியாநறித்த கணைகொள்வாய்த்திரிக
லொபபுடைத்தாய வட்டவாய்த்தெண்டகங்
கோறலைபணிபப வான்விடுபெருங்குரல்
வீயாதுதுவைக்கும் கடன்மலைநாடா

நெட்டிலை - நெடியவிலையினையுடைய—ஆரம்பை - வாழையினது—குறுங்காய்போனும் - குறியகாயைப்போலும்—முளியாநறித்த - முளியாலொபபமிட்ட—கணைகொள்வாய்-திரட்சிகொணடவாயினையுடைய—திரிகலொபபுடைத்தாய-திரிகைபோன்ற—வட்டவாய் - வட்டவாயினையுடைய—தொணடகம் - குறிஞ்சிபபறையை—கோல் - கடிபபால்—தலைபணிபப - அதனிடத்தடித்தலால்—வான்விடு- வானளவுஞ்செல்லும்—பெருங்குரல்- மிகுந்தவோசை—வீயாது - கெடாது—துவைக்கும் - முழங்குதற்கு—கடன்-காரணமாகிய (தெய்வத்திற்குச்செய்யுஞ் சிறப்பினையுடைய)—மலைநாடா - மலைநாடா;

அம் - சாரியை. தறித்த தறிந்தவிகாரம், பனிப்பவென்பது காரணகாரியப் பொருட்கண்வந்த விறந்தகாலம். துலைக்குங்கடன் நிலம்பூத்த மரம்போன்றது. கடவுட்குக் கிளைகள் கூண்டு பரப்பிவைத்துக்கூற வறுக்கவருந்தி யடித்தலான் முழங்குங்கடன்மலைநாடனென்க.

வருந்தியின்றெடுத்த செந்திருமடமகள்

வருந்தியின்றெடுத்த - தவம்பண்ணிப்பெற்றெடுக்கப்பட்ட—செந்திரு - செந்திருவினைப்போலும்—மடமகள் - மடப்பத்தினையுடைய மகளே;

கடல்கடைந்து வருந்திபெற்றெடுத்த திருவெனினுமமையும்.

ஒருவுகவுள்ளத்துப பெருகியகவகம்

உள்ளத்து - உள்ளத்தின்கண்—பெருகியகவகம் - மிருத்துன்பத்தை—ஒருவுக - விட்டுநீங்குக;

கொடிபுரை நுசுபயிற் பெருமுலையோளே.

கொடிபுரை - கொடிபோலும்—நுசுப்பின் - இடையினையும்—பெருமுலையோளே - பெரியமுலையினையுமுடையாய்;

எம்மூர் நும்மூர்க்குன்றமும்
பெருந்தவர்குழுவு மருங்கதிபிருப்பும்

எம்மூர் - எம்முடைய வூர்க்கும்—நும்மூர்க்குன்றமும் - நும்முடையவூர்க குன்றத்திற்கும்—(எல்லை யெவ்வளவெனில்)—பெருந்தவர்குழுவும் - அரிய தவத்தினை யுடையார்க்கும்—அருங்கதிபிருப்பும் - வீட்டிருப்பிற்கும்—(எல்லையெவ்வளவு- எல்லை யெவ்வளவோ—அளவாம் - அவ்வளவெல்லையாம்—அது வன்றி)

அதுவென்பது எல்லையைச்சுட்டிற்று.

பொதியமுங்களிப்ப விரிதருதென்றலும்

பொதியமும் - பொதியமலைக்கும்—களிப்ப - எல்லாருமகிழும்படி—விரிதரு - பரவாநின்ற—தென்றலும் - தென்றற்கும்—(எல்லையெவ்வளவு - எல்லையெவ்வளவோ—அதுவாம் - அவ்வளவெல்லையாம்—அதுவன்றி)

கனைகடல்குடித்த முனிவனுந்தமிழும்

கனைகடல் - முழங்காநின்ற கடலினை—குடித்த - நுகர்ந்த—முனிவனும் - அகத்தியற்கும்—தமிழும் - தமிழிற்கும்—(எல்லையெவ்வளவு - எல்லையெவ்வளவோ—அதுவாம் - அவ்வளவெல்லையாம்—அதுவன்றி)

மேருவுமூவர்க் கோதியபுரமும்

மேருவும் - மேருவிற்கும்—மூவர்க்கு - பிரமாமுதலியமூவர்க்கும்—ஓதிய-சொன்ன—புரமும்-கோயிற்கும்—(எல்லையெவ்வளவு - எல்லையெவ்வளவோ—அதுவாம் - அவ்வளவெல்லையாம்—அதுவன்றி)

உலகமீன்றளித்த வுமையுமாவறனும்

உலகம் - பதினாலுலகத்தையும்—ஈன்றளித்த-படைத்துக்காத்த—உமையும் - உமைக்கும்—மாவறனும்-பெரிய வறத்திற்கும்—(எல்லையெவ்வளவு - எல்லையெவ்வளவோ—அதுவாம் - அவ்வளவெல்லையாம்—அதுவன்றி)

மாவறம் - முப்பத்திரண்டறமாம்.

தேவர்க்கரசனுங் காவற்றருவும்

தேவர்க்கரசனும் - தேவேந்திரனுக்கும்—காவல் - அவன் காவலையுடைய—தருவும் - கற்பகத்தருவிற்கும்—(எல்லையெவ்வளவு - எல்லையெவ்வளவோ—அதுவாம் - அவ்வளவெல்லையாம்—அதுவன்றி)

வழுவாவிதியு மெழுதாமறையும்

வழுவாவிதியும் - படைப்புமுறையிற்றப்பாத பிரமாவுக்கும்—எழுதாமறையும - எழுதப்படாத வேதத்திறகும்—(எல்லையெவ்வளவு - எல்லையெவ்வளவோ—அதுவாம் - அவ்வளவெல்லையாம்—அதுவன்றி)

செங்கோல்வேந்துந் தங்கியகுடியும்

செங்கோல்வேந்தும் - செவ்வியகோல்போலு முறைமையினையுடைய வேந்தனுக்கும்—தங்கிய - அவன்செங்கோற்கீழ்தங்கிய—குடியும் - குடிக்கும்—(எல்லையெவ்வளவு - எல்லையெவ்வளவோ—அதுவாம் - அவ்வளவெல்லையாம்—அதுவன்றி)

செவ்வியகோல்போலு முறைமையைச் செஙகோலென்றார்.

தவஞ்சூழிமயமுங் கமஞ்சூன்மழையும்

தவஞ்சூழ் - தவத்தோர்சூழ்ந்த—இமயமும் - இமயமலைக்கும்—கமஞ்சூழ் - நிறைந்த சூலினையுடைய—மழையும் - மேகத்திற்கும்—(எல்லையெவ்வளவு - எல்லையெவ்வளவோ—அது வாம் - அவ்வளவெல்லையாம்—அதுவன்றி)

இல்லென்பதனைச் சேணுகூட்டி யிங்கிவைசொல்லிய வன்றியெனப் பின்னுனாக்க.

கண்ணன்காமும் வெண்ணெயும்போலப
பாசடைபுதைத்த நெட்டாற்றேரிப
பூத்தலாவிரித்த சேப்படுதாமணா
யுள்வளையுறங்கும் வள்வாய்ககூட
னிறைந்துறைமுக்கட் பெருந்திறலடிக
ளடியவர்க் கெவ்வளவதுவாம் - எல்லை

கண்ணன்கரமும்-விட்டுணுவின் கையும்—வெண்ணெயும் போல = அதனிலிருந்த வெண்ணெயுமபோல—பாசடை - பசிய

**விலை—புதைத்த** - மறைத்த—கெட்டாற்று - கெடிய வொழுங் **கினையுடைய—ஏரி** - வாவியினகண்—**பூத்தலர்விரிகத** - பூத்தித ழ்விரித்த—சேப்படு - செம்மையடுத்த—வளவாய் - வள்ளம போன்ற வாயினையுடைய—தாமரை - தாமரையுள்—வலையுறங கும் - **சங்கங்கிடகதுறங்கும்**—கூடல் - மதுரையில்—நிறைந்து லற - பூரணகலையா யுறையும்—முககண்-முககணணினையும்— பெருந்திறல் - பெருந்திறலினையுமுடைய—அடிகள் - அடிகட் கும்—அடியவர்கரு - அடியவாகரும்—எவ்வளவெல்லை - எவ்வ ளவெல்லையோ—அதுவாம் - அவ்வளவெல்லையாம;

அடிகட்குமென வுருபுமும்மையுந் தொக்கது. அடியாகரு மென வும்மைவிரிகக.

ஈங்கிவை சொல்லியவன்றி-சேணில

இங்கிவைசொல்லியவனறி - இங்ஙனஞ் சொல்லப்படட வி னதயனறி—சேணில் - தூரமிலலை—எ-று

மகளே நடுகக ஈமாருவுக பெருமுலையையுடையா யெம்மூர் கரு நும்மூாக்குனறிறகு மெல்லையிவையனறி தூரமில்லையென வினைமுடிவுசெயக.  (௬௫)

---

நின்குறை நீயேசென்றுரையென்றல்,

நீயேகூறென்றுமறுத்தலென்பது - இவள் இவ்விடத்துநிலை மையை மறையாது எனககுரைபபாளாயது என்கட்கிடந்த பரி விஞனன்றே இத்துணைப பரிவுடையாள எனககிது முடியாமை யில்லையெனத் தலைவன்உட்கொண்டுபோய்ப் பிற்றைஞான்றுசெ ல்ல, தோழி யான் குற்றேவன்மகளாகலிற்றுணிந்துசொல்லமா ட்டுகின்றிலேன் இனி நீயே சென்று நின்குறையுள்ளது சொல் லெனத் தானுடம்படாது மறுத்துக கூறாநிற்றல். அதற்குச் செய்யுள்:—

அந்தியின்வாயெழி லம்பலத்தெம்பா னம்பொ
ன்வெற்பிற், பந்தியின்வாய்ப்பலவின்சுளைபைந்தே
னொடுங்கடுவன், மந்தியின்வாய்க்கொடுத் தோம்பு
ஞ்சிலம்ப மனங்கனிய, முந்தியின்வாய்மொழிநீ
யேமொழிசென்றம் மொய்குழற்கே. ௬௬

அஞ்சுதும்பெரும பஞ்சின்மெல்லடியை ந்
கூறுவநீயே கூறுகென்ற து.

இ-ள். அந்தியின்வாய்-அந்தியின்கணுண்டாகிய—எழில் - (செவ்வா) னெழிலையுடைய—அம்பலத்து - அம்பலத்தின்கணு ளாகிய—எம் - எம்முடைய—பரன் - (எல்லாபபொருட்கும்) அப்பலாயவனது—அம்-அழகிய—பொன்வெற்பில் - பொன்னை யுடைய வெற்பிடத்து—பந்தியின்வாய் - பந்தியாகிய நிரையின் கண்—பைந்தேனொடும் - செவ்வித்தேனோடும்—பலவின்சுளை - பலாச்சுளையை—கடுவன் - கடுவன்—மந்தியின்வாய் - மந்தியின் வாயின்—கொடுத்து - அருந்தக்கொடுத்து—ஓம்பும் - பாதுகா க்கும்—சிலம்ப - சிலம்பையுடையாய்—மனங்கனிய - (அவள்) மனநெகிழ—முந்தி - விரைந்து—இன் - இவ்வினிய—வாய்மொ ழி - வாய்மொழிகளை—அம்மொய்குழற்கு - அம் மொய்த்தகுழ லையுடையாட்கு—நீயே - நீயே—சென்று - சென்று—மொழி - சொல்லுவாயாக—எ-று. (௬௬)

எல்லாப்பொருளையுங் கடந்தானாயினும் எமக்கணியனென் னுங்கருத்தான் எம்பரனென்றார். வெற்பிற் சிலம்பவெனவியை யும், பந்தி பலாநிரை யென்பாருமுளர். சிலம்பென்றது-வெற்பி னொருபக்கத்துளதாகிய சிறுகுவட்டை. வாய்மொழி - மொழி யென்னுந் துணையாய்நின்றது. மனங்கனியுமென்பதூஉம், நின் வாய்மொழியென்பதூஉம் பாடம். மந்தி உயிர்வாழ்வதற்குக் கா

ரணமாகியவற்றைக் கடவேன் தானேகொடுத்து மனமகிழ்வித்தாற்போல அவள் உயிர்வாழ்வதற்குக்காரணமாகிய வினவார்த்தைகளை நீயேகூறி அவளை மனமகிழ்விப்பாயாகவென உள்ளுறையுவமங் கண்டுகொள்க. மெய்ப்பாடும் பயனும அவை. (கக)

நேரிசையாசிரியப்பா.

வேற்றுப்பிடிபுணர்ந்து தீராப்புலவி
சுற்றமொடுதீாகக வுய்ததகாதலிற்
கருங்கைவெண்கோட்டுச் சிறுகட்பெருங்களி
றுளத்துநின்றளிக்குந் திருத்தகுமருநூல்
பள்ளிக்கணக்கா பாற்பட்டாங்குக
குறிஞ்சிப்பெருந்தே னிறலொடுசிதைத்து
மென்னடைப்பிடிக்குக கைபிடிதததுதவி
யடிக்கடிவணங்குஞ் சாரனுட
வந்தணரிருக்கை யகல்வோாசூழ்ந்தென
நன்னயங்கிடந்த பொன்னகர்மூடிப்
புலைசெயதுடன்று நிலைநிலைதேய்க்குந்
தள்ளாமொய்ம்பினுள்ளுடைந்தொருகால்
வேதியன்முதலா வமரருமரசனும்
போதுதாயிரப்பப் புணராமயக்க
நாரணனடித்தவெழுவாயத்தருக்கத்
தறிவுநிலைபோகி யருசசனைவிடுதத
வெள்ளமுரணரக்கர் கள்ளமதின்மூன்று
மடுக்குநிலைசுமந்த வலித்தடப்பொன்மலை
கடுமுரண்குடிக்கு நெடுவிறகூட்டி
யாயிரந்தீவா யரவுநாண்கொளுவி
மாதவனங்கி வளிகுதையெழுநனை
செஞ்சரமபேருரு ளருக்கனமதியாகத்

தேர்வளைவைய மாகத்திருத்திச்
சென்னிமலேயீன்ற கன்னிவிற்பிடிப்ப
வொருகான்முன்வைத் திருகால்வளைப்ப
வளைதத்வில்வட்டங் கிடைத்ததுகண்டு
சிறுநகைகொண்ட வொருபெருந்தீயி
னேழுயர்வானம் பூழிபடக்கருக்கி
யருச்சனைவிடாதங் கொருப்படுமூவரி
லிருவரைக்காவன் மருவுதலீந்து
மற்றொருவற்கு வைத்தநடமறிந்து
குடமுழவிசைப்பப் பெறுமருணல்கி
யொருநாளருச்சனை புரிநாடலர்க்கு
மரும்பெறலுளதாம் பெரும்பதங்காட்டி
யெரியிடைமாயந்த கனல்விழியரக்கர்க்
குலவாப்பொன்னுல கடைதரவைத்த
சுந்தரக்கடவுள் கந்தரக்கறையோன்
மாமியாடப் புண்ணியமழைத்த
காமருகூடற் கிறைவன்கழலிணை
களிப்புறடையடியர்க்கு வெளிப்பட்டென்ன
வொருநீதானே மருவுதல்கிடைத்துக்
கள்ளமும்வெளியு முள்ளமுறையனைத்தும்
விரித்துக்கூறிப் பொருத்தமுங்காண்டி
யியாமாந்தா பொருடேய்ந்தெனன
நுண்ணிடைசுமந்தாற்று து
கண்ணியசுணங்கின் பெருமுலேயவட்கே. உஎ

---

வற்றுபபிடிபுணர்ந்து பெருமுலேயவட்கே. பகுதி-தேட்
துறை - நின்குறைநீயேசென்றுரையென்றல்.

வேற்றுப்பிடிபுணர்ந்து தீராப்புலவி
சுற்றமொடுதீர்க்க வுய்த்தகாதலிற

கருங்கைவெண்கோட்டுச் சிறுகட்பெருங்களி
றுளத்துநின்றளிக்குந் திருத்தகுமருநூல்
பள்ளிக்கணக்கர் பாற்பட்டாங்குக்
குறிஞ்சிப்பெருந்தே னிருலொடுசிதைத்து
மென்னடைப்பிடிக்குக் கைபிடித்துதவி
யடிக்கடிவணங்குஞ் சாரனாட

(இதனது பதப்பொருள்.)

கருங்கை - கரியகையினையும்—வெண்கோட்டு - வெள்ளிய கோட்டினையும்—சிறுகண் - சிறியகண்ணினையுமுடைய—பெருங்களிறு - பெரியயானையானது—வேற்றுப்பிடி - தானையாற்பிடியை—புணர்ந்து - புணர்ந்ததினாலே—தீராப்புலவி - தீராதபுலவியை—சுற்றமொடுதீரக்க - தன்சுற்றமொடுதீர்க்கும்படி—உய்த்தகாதலில் - தன்னிடத்திற்செலுத்தியகாதலினாலே—பள்ளிக்கணக்கர்பால் - பள்ளியோதுவிப்பாரிடத்து—உளத்துநின்று - உள்ளத்திலிடைவிடாதுநின்று—அளிக்கும் - கொடுத்ததற்குக் காரணமாகிய—திருத்தகும் - சிறப்புத்தகும்—அருநூல் - அரியநூல்—பட்டாங்கு - சிதைவுபட்டாற்போல—குறிஞ்சி - குறிஞ்சிநிலத்துண்டாகிய—இருலொடுசிதைத்து - இரட்டைபழித்து—மென்னடை-மெதுவென்ற நடையினையுடைய—பிடிக்கு-பிடிக்கு—பெருந்தேன் - மிகுந்ததேனை—கைபிடித்து - அதன் கையைப்பிடித்து—உதவி - கொடுத்து—அடிக்கடிவணங்கும் - அடிக்கடி வணங்குதற்கிடமாகிய—சாரல் - மலைப்பக்கத்தினையுடைய—நாட - நாடனே ;

யானையானது பிடியின்வெறுப்புத்தீர்த் ததற்குயிர்வாழ்வி ருட்டைச்சிதைத்துத் தேனைக்கொடுத்து மனநெகிழும்படி யடிக்கடி வேண்டிக்கொண்டாற்போல வவளுயிர்வாழும்படி மனத்

துயர்நீக்கி யவண்மனநெகிழும்படி நின்குறைகளை நீயேகூறி வேண்டிகொள்வாயென வுள்ளுறையுவமங்கொள்க. "கிழவோட்குவமமீரிடத்துரித்தே,,என்னுஞ்சூத்திரத்திற்சிறுபான்மைகுறிஞ்சிமுதலியவற்றிற்கு மூவமப்பொலிவுங்கொள்க. "வென்றலிற்குறிஞ்சியி லுவமப்பொலிவு கொண்டார்பள்ளி யோதுவிப்பாரிடத் தரியநூல்சிதைவு பட்டாற்போல,, வென்ற வேலையுவமங்குறிஞ்சிப் பெருந்தேனிறாலோடு சிதைக்குமென்ற வுள்ளுறையுவமத்தைத்தருகின்ற கருப்பொருட்குச் சிறப்புகொடுத்துநின்றது. இது உடனுறையுவமஞ்சுட்டு நகை சிறப்பென்க. "கெடலருமரபி னுள்ளுறையைந்தே,யென்ற சூத்திரத்திறபபென்ற வுள்ளுறைபுணர்ந்தவென்று பாடமாயி னுண்ட வெச்சில்போலக்கொள்க. சுற்றமொடு என்ற ஒடு ஒருவினையொடு உபகாரப்படுதலின் - இறலொடு என்ற ஒடு உருபுமயக்கம்.

பேருருளருக்கன் மதியாகத்
தேர்வளைவைய மாகத்திருத்தி

அருக்கன்மதி - ஆதித்தனுஞ்சந்திரனும்—பேருருளாக-பெரியவண்டியாக—வையவளை - பூமியெல்லை—தேராகததிருத்தி - தேராகபபண்ணி ;

மாதவனங்கி வளிகுதையெழுநுனை
செஞ்சரம்

வளிகுதை - வாயுகுதையாக—அங்கி - அக்கினி—எழுநுனை - தோன்றுமுனையாக—மாதவன் - விட்டுணு—செஞ்சரம்-சிவந்தவம்பாக;

இது எதிர்நிரனிறை, இதனை மயக்கநிரனிறையுமென்பர்.

சென்னிமலையீன்ற கன்னிவிற்பிடிப்ப

சென்னி - உச்சியினையுடைய—மலையீன்ற - இமயமலைபெற்றதனால்வந்த—கன்னி - பார்வதி—விற்பிடிப்ப - வில்லைப்பிடிக்கும்படி ;

சிவனுக் கிடப்பாகங் கன்னியாதலிற் கன்னிவிற்பிடிப்ப வென்றார்.

அடுக்குநிலைசுமந்த வலித்தடப்பொன்மலை
கடுமுரண்குடிக்கு நெடுவிற்கூட்டி
யாயிரந்தீவா யரவுநாண்கொளுவி

அடுக்குநிலை - அடுக்காகியவுலகத்தை—சுமந்த - பரித்த—வலி - வலியையும்—தடம் - பெருமையுமுடைய—பொன்மலை-மகமேருவை—கடுமுரண் - கடியபகையை—குடிக்கும் - கெடுக்கும்—நெடுவிற்கூட்டி - நெடியவில்லாகத் திருத்தி—ஆயிரந்தீவாய் - விடத்தையுடைத்தாய வாயிரம்வாயினையுடைய—அரவு நாண்கொளுவி-பாம்பு நாணகவேறறி;

"உணடற்குரிய வல்லாப்பொருளை யுண்டனபோலக் கூறலுமரபே,,யென்றமையாற் குடிக்குமென்றார். "நீநஞ்சுநச்சுநாகத்தினாழற்சிற்றத்த,,னென்றாறபோல.

ஒருகான்முன்வைத் திருகால்வளைப்ப
வளைத்தவில்வட்டங் கிடைத்ததுகண்டு
சிறுநகைகொண்ட வொருபெருந்தீயின்

ஒருகான்முன்வைத்து - ஒருகாலைமுன்னேவைத்து—இருகால் - இருகாலை—வளைப்ப - வளைக்கும்படி—வளைத்த - வளைக்கப்பட்ட—வில்வட்டம்-வில்வட்டம்—கிடைத்ததுகண்டு - பெற்றதொழில்களைக்கண்டு—சிறுநகைகொண்ட - புன்மூரல் செய்ததனால்வந்த—ஒருபெருந்தீயின் - ஒப்பற்றபெருநெருப்பில்;

ஒருகான்முன்வைத்தெனவே - ஒருகால்வளைத்தமை தோன்றிற்றதனல் ஆலிடநிலையும் பிரத்தியாலீடமு மடங்கின. இரட்டுறமொழிதலா லொருகான்முன்போல்வைத்தென்னவேயொருகால்வளைந்தமை தோன்றிற்றதனுற் பைசாசநிலையடங்கிற்று. ஒருபொருளிருசொற்பிரிவில் வரையாரென் றமையா னமைக்க. "குழல்வளர்முல்லையிற் கோவலர்தம்மொடு,, என்றாற்போலவும், "பாடுதும்பாவைபோற் பே,,யென்றாற்போலவும், இருகால் வளைப்பவெனவே மண்டிலநிலையடங்கிறறு. "நிலையோராநால்வகைநிலைபைசாச மாலிடமண்டிலம் பிரத்தியாலீடம் ஒருகானிலைநின் றொருகான்முடக்கும் பரியாயமெனப் பைசாசநிலையே,, வலக்கான்மண்டலித் திடககான்முந்துறு மதற்பெயராலிடநிலையதாகும், இருகான்மண்டலித் திடுதன்மண்டிலநிலை வலக்கான் முந்துற றிடக்கான்மண்டலிப பிற்பிரத்தியாலிட மெனபபெயராகும், இவற்றுணறிக. வில்லினெருகாலை முன்னேயூன்றி யதனிருகாலும் வளைத்ததனுலவ் வில்வட்டமாசப்பெற்ற தொழில் களையெனினுமாம். வட்டமிடமுமாம் மற்றநாடு வட்டமாகவென்றாற்போல, வில்லிடத்துக்கற்ற தொழில்களைப் பார்த்தெனினுமாம்.

அந்தணரிருகைகை யகல்வோர்சூழ்ந்தென
நன்னயங்கிடந்த பொன்னகர்மூடிப்
புலைசெய்துடன்று நிலைநிலைதேய்ககுந்
தள்ளாமொய்ம்பின்

அந்தணரிருக்கை - பெரியோராசிரமத்தில்—அகல்வோர்சூழ்ந்தென - கீழ்மக்கள்சூழ்ந்து தீட்டுச்செய்தாற்போல—நன்னயங்கிடந்த - மிகவுநன்மையாகக்கிடந்த—பொன்னகர்மூடி - தெய்வலோகமுற்றும்—புலைசெய்து - தீட்டுச்செய்து—உடன்று -

கோபித்து—நிலைநிலைதேய்க்கும்-அடிக்கடிகெடுக்கும்—தள்ளா-ஒருவராலுநீக்கபபடாத—மொய்ம்பின் - வலியினால்;

சூழ்ந்ததெனவிகாரம் பரபபுகவிடந்தெனவென்றாற்போல.

எழுவாய் கள்ளமதின்மூன்றும்

எழுவாய் - ஓரிடத்திராதெழுதல்பெற்ற—கள்ளமதின்மூன்றும் - கள்ளத்தையுடைய முப்புரமும்,

எழுவாயிரண்டும் வினைமாத்திரையாய் நின்றன.

பூழிபடக்கருக்கி

பூழிபடக்கருக்கி - தூள்படவெரித்து;

இது பாண்டரங்ககூத்தென்க. என்னை "எரியினொருவன் விரிசடைககடவுள் திரிபுரமெரித்தல் காரணமாக வரிசிலைவளைத்துவாளிமுன்கோத்துத்தேரோயரங்கமாக-வாடியகூத்தேபாண்டரங்கம்மே,, என்றாராகலின.

உள்ளுடைந்தொருகால்
வேதியன்முதலா வமரருமரசனும்
போதுதுாயிரபபப் புணராமயகக
நாரணனடித்த தருககத்
தறிவுநிலைபோகி யருச்சனைவிடுத்த
வெள்ளமுரணரக்கர்

வேதியன்முதலா - பிரமாமுதலான—அமரரும் - தேவர்களும்—அரசனும் - தேவேந்திரனும்—ஒருகால் - ஒருமுறை—உள்ளுடைந்து - உள்ளம்வருந்தி—போதுதூய் - மலரைச்சிந்தி—இரப்ப - வேண்டிக்கொள்ள—நாரணன் - விட்டுணுவானவன்—புணராமயக்கம் - முன்னின்றநிலையிற்பொருந்தாதுமயக்கும்படி—நடித்த-நடிப்புச்செய்த—தருக்கத்து - உலோகாயதசம

யத் தருக்கத்தினலே—அறிவுநிலைபோகி-அறிவுநிலைகெட்டு—அ ருச்சனைவிடுத்த - சிவவழிபாடுதவிர்ந்த—முரண - பகையினையு டைய—அரக்கர் - அரக்கர்—வெள்ளம - வெள்ளத்துள ;

புணராதென்பது குறைநிற்றுநின்றது.

அருச்சனைவிடாதங் கொருப்படுமூவரில

அங்கு - நாரணன் விளையாட்டின லவ்விடத்து—அருச்ச னைவிடாது - சிவார்ச்சனையை விடாது——ஒருப்படுமூவரில - ஒருவழிப்படுமூவர்களுள்;

இருவரைக்காவன் மருவுதலீந்து
மற்றொருவற்கு வைத்தநடமறிந்து
குடமுழவிசைப்பப் பெறுமருணல்கி
யொருநாளருச்சனை புரிநாடலர்க்கு
மரும்பெறலுளதாம் பெரும்பதங்காட்டி
யெரியிடைமாய்ந்த கனலவிழியரக்கர்க
குலவாப்பொன்னுல கடைதரவைத்த
சுந்தரக்கடவுள்

இருவரை - வாணசுரனெழிந்த விருவர்க்கு—காவன்மருவு தலீந்து - வாயில் காவற்றெழிலபெறுதலைச்செய்து—மற்றொரு வற்கு - மற்றொருவனுகியவாணனுக்கு—வைத்த - தான்மெய் யிற்காட்டியகோப்புமுதலியவற்றையுடைய—நடமறிந்து-நடத் தின்சதியறிந்து—குடமுழவிசைப்ப - குடமுழவைக்கொட்ட— பெறும் - பெறுதற்குக்காரணமாகிய—அருணல்கி - கிருபையளி த்து—ஒருநாள் - ஒருநாளில்—அருச்சனை - அருச்சனை—புரி- செய்ய—நாடலர்க்கும் - விரும்புதலில்லாதவர்க்கும்—அரும்பெ றல் - பெறுதற்கரிய—பெரும்பதமுளதாம் - பெரும்பதமுண் டாமென்பது—காட்டி - காட்டவேண்டி—எரியிடைமாய்ந்த-

புன்னகைத்தீயாலிறத்தற்குக் காரணமான—கனல் - கனலினை யுடைத்தாய—விழி - விழியினையுடைய—அரக்கர்க்கு - அரக்கர் கடகு—உலவா - கெடாத—பொன்னுலகு - சுவர்க்கம்—அடைத ரவைத்த-பெறவைதத—சுந்தரக்கடவுள் - நன்மையினையுடைய கடவுள்;

மற்றவை, வைத்த தொழிற்பெயர், நடம் ஆகுபெயர், பெறுமருள் காரணகாரியங் கருவிககணடங்கும், நாடலாக்குமென்னுமும்மை சிறப்பும்மை, என்பதென வொருசொல் வருவிகக. காட்டி - காடட, எரிநகைத்தீ - மாய்நத கனல்விழியரக்கர் காரணகாரியமன்றி முதறபெயா சொணடதுமாம். கனல்விழியரக்கர் - முனசொனன சிவாாசசனைவிடட வரககா, கனல்விழியரக் கரொனறா முன்கோபித்துமாய்தலின்.

> கநதரககறையோன்
> மாமியாடடப புணரியழைத்த
> காமருகூடற கிறைவன்கழலிணை
> களிபபுடையடியாககு வெளிபபட்டென்ன

கந்தரக்கறையோன - மிடறறுக கறுபபையுடையோன்—மாமியாட - மாமியாகியமேனைநீராட—புணரியழைத்த - கடலினையழைத்த—காமரு - அழகுமருவிய—கூடற்கிறைவன்-மதுரைக்கிறைவன்—களிபபுடையடியாாககு-மேல்வைத்தவுளளகக் களிப்பினையுடையவடியாாககு—கழலிணை-அவன்கழலிணைகள்—வெளிபபட்டென்ன - வெளிபபடடாறபோல;

கறை-கறுப்பு, காரொன்னவாறுங் கறைமிடற்றென்றாற்போல. "கந்தரக்கறையோன்சினையொடுமுதற் கொற்றுமையுண்மையாற் செவிசெஞ்சேவலுங் கூ[illegible]யு,,மென்றாற்போன்றது. காமர்மருவும் - காமருவென விகாரம். காமருபூங்கோதாயென்றாசிற்றகத்தியத்தினும்.

ஈயாமாந்தர் பொருடேய்ந்தென்ன
நுண்ணிடைசுமந்தாற்றுது
கண்ணியசுணங்கின் பெருமுலை.

ஈயாமாந்தர்-கொடாத லோபிகள்—பொருடேய்ந்தென்ன-பொருடேய்ந்தாற்போலத்தேய்ந்ததென்னும்—நுண்ணிடை-நுண்ணியவிடையானது—சுமந்தாற்றுது-தானசுமந்தாற்றுது—கண்ணிய-கருதுதற்குக் காரணமாகிய—சுணங்கின் - சுணங்கினையுடைய—பெருமுலை-பெரிய முலையினையுடையாளை;

தேய்ந்தென்னவென்பது விகாரம். செயப்படுபொருள் வினைமுதல்போனின்றது இல்வாழ்வானென்பானென்றாற்போல, கண்ணியமுலை தன்வினையன்றிப பிறவினையெனினென்றென வொருசொல்வருவிக்க.

மருவுதல்கிடைத்து

மருவுதல்கிடைத்து - கிட்டுதல்பெற்று;

ஒருநீதானே

ஒருநீதானே - (யாங்குறறேவன்மகளாதலிற்சொல்லமாட்டோ) மொப்பற்ற நீதானே;

ஏகாரம் பிரிநிலை.

அவட்கு
கள்ளமும்வெளியு முள்ளமுறையனைத்தும்
விரித்துக்கூறிய பொருத்தமுங்காண்டி

அவட்கு - அவட்கு—உள்ளமுறை - நின்னுள்ளத்திற்பொருந்திய—கள்ளமும்வெளியும் - பொய்யு மெய்யுமாகிய—அனைத்தும் - எல்லாம்—விரித்துக்கூறி - மனநெகிழவிரித்துச்சொல்லி—பொருத்தமுங்காண்டி - உடன்படுவதுங காண்பாயாக—எ-று.

உள்ளமுறை - உளளபடியெனினுமாம். யான்சொன்ன பொயயுமெய்யுங் கருதுமபடி யவட்கு நின்மனத்திற் கிடையெல் லாமுறையாக விரித்துக்கூறியெனினுமாம்.

சாரனுட வன்பர்க்கிறைவன் கழலிணைகள் வெளிப்பட்டா றபோல பெருமுலையாணினை மருவுதல்பெற்று நீராளே யவ ட்குப பொயயுமெய்யுஞ்சொல்லி யுடன்படுவதுங் காணபாயாக வென வினைமுடிவுசெய்க. (உஎ)

---

## இ ர வு க் கு றி வே ண் ட ல்.

இரவுககுறிவேண்டலென்பது - பதிநோகவிவருந்தாநின்ற தலைமகன், இறறையிரவிற்கியானுஙகள சீறூர்ககுவிருந்து என் னையேற்றுககொளவாயாகவெனத தோழியையிரவுககுறி வேண டாநிறறல். அதறகுசசெய்யுள:—

மருந்துநம்மல்லற் பிறவிப்பிணிக்கம் பலத்தமிர்தா
யிருந்தனாகுன்றினின் றேங்குமருவிசென் றோர்திகழப்
பொருந்தினமேகம் புதைந்திருணேகும புனையிறும்பின்
விருந்தினன்யானுங்கள் சீறூரதனுககு வெள்வளையே.

நளளிருடகுறியை வளளணிஇனை ந து
வீங்குமென்முலைப் பாஙகிககுரைத்த து.

இ-ள். வெள்வளையே - வெளவளையையுடையாய்—நம்மல் லற்பிறவிப்பிணிககு - நம்முடைய வல்லலைச்செய்யும் பிறவியாகி ய பிணிக்கு—மருந்தும் - (அருந்து) மருந்தாய் (வைத்தும்)—அ ம்பலத்து - அம்பலத்தின்கண்—அமிர்தாயிருந்தனர்-(சுவையா) னமிர்தமுமாயிருந்தவரது—குன்றினின்று - குன்றின்கணின் று—ஏங்கும் - ஒலிக்கும்—அருவி - அருவிகள—சென்று-பாய்

ந்து—ஏர்திகழ - அழகுவிளங்கும்வண்ணம்—மேகம் - மேகங்க ள்—பொருந்தின - வந்துபொருந்தின (அதனால்)—புதைந்து - அம்மேகத்தின்கட் புதைந்து—இருளேங்கும் - இருள்செறியும்— புனையிறும்பின்-செய்காட்டையுடைய—உங்கள்சீறூரதனுகரு - நுமதுசிறூரதற்கு—விருந்தினன்யான்-யான்விருந்தினன்-எ-று. என்னையேற்றுக்கொள்வாயாக என்பது எஞ்சிநின்றது.

மேகம்வந்து பொருந்தின வென்றதனால், தன்னூர்க்குப போதலருமை கூறுவான்போன்று இரவுக்குறி மாட்சிமைப் படு மென்றானும். இருளேங்கும் புனையிறும்பென்றதனால், யாவருங் காணாராகலி னுண்டுவந்து நிற்கின்றேனென்றானும் மாலைவிருந் தினனா மாறறுதலறனன்றென்பது தோன்றவிருந்தினனென்றா ன். குன்றினினறேங்கு மருவியோர்திகழச் சென்றுபொருந்தின மேகமென்க. அருவியோர்பெற மேகம்பொருந்தினவூர் நினனூரா கலான் என்னினைபபற்று யானுமோபெற நின்னைவந்துசோ்ந்தே னென்பது போதரும். மெய்ப்பாடு - பெருமிதம். பயன் - இர வுக்குறிநேர்வித்தல். (கசஅ)

நேரிசையாசிரியப்பா.

வள்ளியோரீதல் வரைபாதுபோல
வெண்டிசைக்கருவிருந் தினமழைகான்றது
வெண்ணகைக்கருங்குழற் செந்தளிர்ச்சீறடி
மங்கையருளமெனக் கங்குலும்பரந்தது
தெய்வங்கருதாப் பொய்யினர்க்குரைத்த
நல்வழிமானப் புல்வழிபுரண்டது
காலமுடியக் கணக்கின்படியே
மறலிவிடுக்க வந்ததூதுவ
ருயிர்தொறும்வளைந்தென வுயிர்சுமந்துழலும்

புகர்மலையியங்கா வகையரிசூழ்ந்தன,
வெள்ளுடற்பேழ்வாய்த் தழல்விழிமடங்க
லுரிவைமூடிக் கரித்தோல்விரித்துப்
புள்ளிபரந்த வள்ளுகிர்த்தரக்கி
னதள்பிறக்கிட்டு குதிபாய்நவ்வியின்
சருமமுடுத்துக் கரும்பாம்புகட்டி
முன்புகுவிதியி னென்புகுரல்பூண்டு
கருமாவெயிறு திருமார்புதூக்கி
வையகத்துயிர்கள் வழக்கறல்கருதித்
தொய்யிலாடுங் கடனுடைக்கன்னிய
ரண்ணுந்தவனமுலைச் சுண்ணமுமளறு
மெழிலிவான்சுழலப் பிளிறுகுரற்பகட்டினந்
துறைநீராடப் பரந்தகார்மதமும்
பொய்கையுங்கிடங்குஞ் செய்யினும்புகுந்து
சிஞ்சையிடங்களைப் பைஞ்சிலைச்சேலை
யுடற்புலவுமாற்றும் படத்திரைவையை
நிறைநீர்வளைக்கும் புகழ்நீர்க்கூடல்
வெள்ளியம்பொதுவிற் கள்ளவிழ்குழலொடு
மின்படம்புரியுந் தேவநாயக
னருவியுடற்கயிறுஞ் சுனைமதகமுழயும
பெருந்தேன்செவியுங் கருந்தேன்றொடர்ச்சியு
மோவாப்பெருமலைக் குஞ்சரமணக்க
வளர்தருமுங்க டொல்குடிச்சீறூர்க்
கண்ணியவிருந்தினனாகி
நண்ணுவன்சிறுநுதற் பெருவிழியோளே. உஅ

—*—

வள்ளியோரீதல் பெருவிழியோளே. பகுதி - இரவிற்குறி, துறை - இரவுக்குறிவேண்டல்.

சிறுநுதற் பெருவிழியோளே.

(இதனது பதப்பொருள்.)

சிறுநுதல் - சிறிய நுதலினையும்—பெருவிழியோளே-பெரிய விழியினையுமுடையாய்;

வள்ளியோரீதல் வரையாதுபோல
வென்டிசைசுகருவிருந் தினமழைகான்றது

வள்ளியோர - வள்ளியோர்—வரையாதீதல்போல - வரையாது கொடுப்பதுபோல—இனம் - கூட்டமாகிய—மழை - மழையானது—கருவிருந்து - சூற்கொண்டு—எண்டிசை - எட்டுத்திக்கின்கண்ணும்—கான்றது - காலாநின்றது;

செய்யுளாதலி னும்மைதொகக்து. கான்றது - காலமயக்கம் மடையடைத்தனையதம் மாக்களீட்டமே யென்றாற்போல.

வெண்ணகைக்கருங்குழற் செந்தளிர்ச்சிறடி
மங்கையருளமெனக் கங்குலும்பரந்தது

கங்குலும் - கங்குலானது—வெண்ணகை - வெள்ளியநகையினையும்—கருங்குழல் - கரியகுழலினையும்—செந்தளிர - சிவந்ததளிரபோன்ற—சிறடி-சிறியவடிகளையுமுடைய—மங்கையருளமென - பெண்களுள்ளம்போல்—பரந்தது-இருண்டுபரந்தது;

இது பண்புவமை. "அகங்குன்றிகண்டனைய ரோனுமுகங் குன்றி மூகதிற்கரியா,,ரென்றாற்போல. உம்மை-இசைநிறை.

தெய்வங்கருதாப் பொய்யினர்க்குரைத்த
நல்வழிமானப் புல்வழிபுரண்டது

தெய்வங்கருதா - தெய்வமுண்டென் றுகருதாத—பொய்யினர்க்கு - படிற்றுள்ளத்தார்க்கு—உரைத்த - சொன்ன—நல்வ

ழிமான - நல்லொழுக்கந்தெரியாது தடுமாறியதுபோல—புல்வ ழிபுரண்டது - புலலால் வழிதெரியாது தடுமாறியதென்க;

காலமுடியக் கணக்கினபடியே
மறலிவிடுக்க வந்ததூதுவ
ருயிர்தொறுமவளைநதென வுயிர்சுமந்துழலும்
புகாமலையியங்கா வகையரிசூழ்ந்தன

மறலி - காலனாவன்—கணக்கினபடியே - உயிர்கட்குவி தித்தவிதிப்படியே—காலமுடிய - காலககடவுளிறக்குமபடி—விடுக்கவந்த - விடவந்த—தூதுவர் - தூதுவா—உயிர்தொறும் - அவ்வுயிர்தோறும்—வளைநதென - வளைந்து வளைந்தாறபோல—உழலும் - தேடித்திரியும்—அரி - சிஙகங்கள்—உயிர்சுமந்து - உயிரினைச் சுமந்து—புகாமலை - புகரினையுடைய யானைகள்—இயங்காவகை-சஞ்சரியாதபடி—சூழ்ந்தன-சுற்றி நின்றனவென்க;

காலமென்றது - காலககடவுளை, அது காலமூலக முயிரோ யென்றதனானறிக. கணககு - அவரவாககு விதித்தநாளின்றொ கை விடுக்க. ஏவ - வளைந்ததுவிகாரம். புகர்மலையெனவே யா னையாயிறறு. தாமச்செபபினை - முகடடெனாறுற்போல. யா னை சிங்கமென்பனசாதியொருமை. உழலுதல் - தேடித்திரிதல். வாடலுழுழையென்னு மகப்பாட்டிற்பேதுற் றலந்தனே னுழல் வேன்கொல்லோவென்றார். சுமந்தியங்காவென விளையும்.

வெள்ளுடற்பேழ்வாய்த் தழல்விழிமடங்க
லுரிவைமூடிக் கரிததோல்விரித்து

வெள்ளுடல் - வெள்ளை யுடலினையும்—பேழ்வாய்-பெரிய வாயினையும்—தழல்விழி - தழல்போலும்விழியினையுமுடைய—மடங்கலுரிவை - சிங்கத்தோலையும்—கரிததோல் - யானைத்தோ லையும்—விரித்துமூடி - விரித்துப்போர்த்தென்க;

"அண்ணன்மடங்கலதளம்பலவ,,னென்றார் கோவையினும்.

புள்ளிபரந்த வள்ளுகிர்த்தரக்கி
னதள்பிறக்கிட்டு குதிபாயநவ்வியின்
சருமமுடுத்து

வள்ளுகிர் - கூரியவுகிரினையுடைய—தரக்கின் - புலியினது—புள்ளிபரந்த - புள்ளிவிரிந்த—அதள் - தோலையும்—பிறக்கிட்டு - பிறகுகாட்டிக்கிடந்து—குதிபாய் - தாவும்—நவ்வியின் - மானின்—சருமமுடுத்து - தோலையுமுடுத்தென்க;

பிறக்கு - பிறகு.

கரும்பாம்புகட்டி
முன்புகுவிதியினென்புகுரல்பூண்டு
கருமாவெயிறுதிருமார்புதூக்கி

கருமபாம்பு - கரியபாம்பினை—கட்டி - கங்கணமுதலாகக் கட்டி—முன்புகுவிதியின் - ஆதிபபிரமாவின்—என்பு - எலும்பினை—குரல்பூண்டு - கழுத்திலணிந்து—கருமாவெயிறு - பன்றிக்கொம்பினை—திருமார்புதூக்கி - திருமார்பிற்றூக்கி;

வையகத்துயிர்வழக்கறல்கருதித்
தொய்யிலாடுங்கடனுடைக்கன்னிய
ரண்ணுந்தவனமுலைச்சுண்ணமுமளறும்

கன்னியர் - கன்னியர் நதித்துறைபி னீராடுதலால்— ...... கத்து - பூமியின்கண ணுண்டாகிய—உயிர் - உயிர்கள்—வழக்கறல்கருதி - சஞ்சாரமின்மைகருதி—தொய்யிலாடும் - தொய்யிலெழுதும்—கடனுடை - முறைமையினையுடைய—அண்ணுந்த - இறுமாந்த—வனமுலை - அழகியமுலையிலணிந்த—சுண்ணமுமளறும் - சுண்ணமுங் குங்குமக்குழம்பும்;

∴ வழக்கு - சஞ்சாரம், ஆள்வழக்கறற அரத்திடையென்றாற் போல, தொய்யில் பத்திக்கிற்று.

எழிலிவான்சுழலப்பிளிறுகுரற்பகட்டினந்
துறைநீராடப்பரந்தகார்மதமும்

எழிலிவான்சுழல - கார்காலத்துமேகம்வானிற்றழைத்தத ஞல்—பிளிறு - மாறென்றுகருதி முழங்கா நின்ற—குரல் - குர லினையுடைய—பகட்டினம் - யானைத்திரள்—துறைநீராட - நதி த்துறையின மூழ்கலால்—பரந்தகார்மதமும் - பரந்தகரியமத மும்;

நீராடவெனபதனைக் கன்னியாநீராடவெனவுங் கூட்டுக. ஏழிலியாகுபெயரார்காலம கடன்முகந்தென்னு மகபபாட்டிலி ன்குரலெழிலியாமே கொய்தகைமுல்லையென்றார். சுழல-தழை க்க, சுழறகலவமேல்விரித்த தோகையென்றார் பிறரும். வானி டத்து மேகஞ்சுறறவெனப பின்மொழிநிலையலாகநினுமாம்.

பொய்கையுங்கிடங்குஞ்செய்யினுமபுகுந்து

பொய்கையும் - வாவியினிடத்தும்—கிடங்கும் - அகழிட த்தும்—செய்யினும் - வயலினிடத்தும்—புகுந்து - சென்று, உம்மை யெண்ணினுருபு தொகல்வாயா ரென்றமையா னுருபுதொக்கது.

சிஞ்சையிடங்கணைபபைஞ்சிலைச்சேலை
யுடற்புலவுமாற்றும்படத்திரைவையை
நிறைநீர்விளைக்குமபுகழ்நீர்க்கூடல்
வெள்ளியம்பொதுவில்

சிஞ்சையிடங்கணை-முழக்கத்தினையுடையமுதலைக்கும்—பை ஞ்சிலைச்சேலை - சிவந்தவாலையுடையகெண்டைகளும்—உடற்பு லவுமாற்றும் - உடலின்கண்ணுண்டாகியபுலானாற்றத்தைத்தீர் த்தற்குக்காரணமான—படம் - வெள்ளைப்படத்தைவிரித்தாற் போன்ற—திரை - திரையினையுடைத்தாய—நிறைநீர் - நிறைந்

நீரினையுடைய—வையைவளைக்கும்- வையைசுற்றும்—புகழ்சீர்
புகழ்சீர்மையையுடைய—கூடல் - மதுரை—வெள்ளியம்பொது
வில் - வெள்ளியம்பலத்தில்,

படர்திரையென்று பாடமாயிற் பரந்ததிரையென்க. புகுந்
தூடாற்றுதற்குக் காரணமாகிய நீரையுடைய வையையென்க.

கள்ளவிழ்குழலொடு
மின்படம்புரியுந்தேவநாயகன

கள்ளவிழ்-தேன்பொழியுமாலைபொருந்திய — குழலொடும்
குழலினையுடையவுமையோடுங்கூடி—இன்ப - நவரசத்தால்வரு
மின்பத்தினையுடைய—நடம்புரியும - நடனஞ்செய்த—தேவ
நாயகன் - தேவர்களுக்கு முதன்மையானவன்,

வாலெயிறூறிய நீரென்றதுபோல விடத்துநிகழ்பொருளி
ன் றொழிலிடத்தின்மே லேற்றப்பட்டது. அவிழ்குழலன்மொ
ழித்தொகை. அவிழ்தல - சொரிதல், கள்ளவிழுதார்வென்றி
க கழல்வெய்யோ யென்றா-வெண்பாமாலையினுய, மாலையென
வருவிக்கப்பட்டது, கள்ளவிழ்குழலவிழ்தல - சினைவினையாற்
பட்டு முதல்வினையாயிற்றெனினுமாம். அதற்கு மலர்சினைபோ
லக் குழற்கின்றி யமையாமையிற் சினைப்பாற்பட்டதெனக. மல
ர்சூழ்ந்திருங்கிப் புரள்வனவேயென்றதுபோல - உமையொரு
பாகமாதலினவளொடுங்கூடியெனவும்மை யெண்ணும்மை, இ
ன்பநடம் அகக்கூத்து, அத்தனரீசுரமாமென்க, உம்மையிழிவுசி
றப்பாக்கிற் காளியொடுங் கணங்களுக்கின்பமாகிய கூத்தைச்செ
ய்தவனென்க, உம்மையசையுமாம் - பார்ப்பதிக்கு மின்பத்தி
னல்வரு நடத்தையுண்டாக்கிய தெய்வநாயக னெனினுமாம்,
உம்மை - யெச்சவும்மை, தனக்கும் நடத்தையுண்டாக்கின் கு
ழலொடிருபுமயகம் - இன்பத்தினல்வரு நடமாவது இமைய ப

ருப்பதத்திற் சிவனோடுகூடுதற்பொருட டனேககோடிகாலந் தவம்பண்ணிக காணுதியோகத்திற்பார்த்துக கூடும்படியாடிய விலாசியம், அதறகுச சித்திரகுணடலியென றுபெயராயிற்று.

அருவியுடறகயிறுஞ்சுனைமதககுழியும்
பெருநதேன்செவியுங்கருநதேனறொடர்ச்சியு
மோவாபபெருமலைககுஞ்சரமணகக
வளநதருமுஙகடோலகுடிச்சீறூராக
கணணியவிருந்தினனாகிநணணுவன் .

அருவியுடற்கயிறும் - அருவியாகியபுரோசைக்கயிறும்—சுனைமதககுழியும - சுனையாகியமதககுழியும்—பெருந்தேன்செவியும் - பெருகியதேன்கூடாகியசெவியும்—கருந்தேன்றொடர்ச்சியும் - வண்டினொழுங்காகியசங்கிலியும்—ஓவா - நீங்காத—பெருமலைககுஞ்சரம் - பெரியமலையாகிய யானையின்கண்—மணகக வளந்தரும் - பொருந்த வளங்கொடுக்கும்—உங்கடோல்குடி - உங்கள் பழையகுடியினையுடைய—சீறூர் - சீறூர்ககு—கண்ணியவிருந்தினனாகி - பொருந்தியவிருந்தினனாகி—நண்ணுவன்-யான்பொருந்துவேனென்னையேற்றுககொண்மின்—எ-று.

இன்மலைழகானற தென்றதனாற் போதலருமை கூறுவான் போன்றிரவுககுறி மாட்சிமைபபடுமென்றும், கங்குல்பரந்ததெனறதனா லொருவருங்காணார் குறிவந்துநிற்கின்றன னென்றும் வழிதெரியாதென்றதனா லாண்டுவர வேண்டுமென்றுஞ் சிங்கஞ்சூழ்ந்தனவென்றதனா லஞ்சுவான்போன்றுகொலைககுடன்படுதலருளன்றென்றும், இரவுவந்தவிருந்தினை மாறறலறனன்றென்பது தோன்றவிருந்தினனென்றுங் கூறினாளும்,[1] வளந்தருமுங்க டோல்குடிச்சீறூரொன்றமையான் யானும் வளம்பெறநின்னை வந்துசேர்ந்தே னென்பதுபோதரும் தருமென்பது செலவினும் வரவினுமென்னுஞ் சூத்திரவிதி.

பெரியவிழியினையுடையா யெண்டிசையினு மழைகான்றது கங்குல்பரந்தது புற்புரணடைந்து சிங்கஞ்சூழ்ந்தனவாதலா னுயக ன்வளாயிலுங்கள பழையகுடியினையுடைய சீறூர்க்குவிருந்தின னாகி யான்பொருந்துவனேறறுகவென்மினென வினைமுடிவு செய்க. (௨௮)

---

## நகரணிமை கூறல்.

நகரணிமைகூறலென்பது-இருவருந்தம்முளின்புற்றுச்செ ல்லாநின்றமைகண்டு, இனிசசிறிது நெறிசென்று அக்குன்றத் தைத்தாண்டிநடந்தால் நும்பதியாகிய நகாவிளங்கித் தோன்றுகிறகும் அத்துணையுங்கடிதுசெல்வீராமினென எதிர்வருவார் அவா நகர ணிமை கூறுநிற்றல். அதற்குச்செய்யுள்:—

மின்றங்கிடையொடுநீவியன்றில்லைச்சிற்றம்பலவா
குன்றங்கடந்துசென்றுனின்றுதோன்றுங் குருஉக்கமலந்
துன்றங்கிடங்குந்துறைதுறைவள்ளை வெள்ளைநகையார்
சென்றங்கடைதடமும்புடைசூழ்தருசேணகரோ. உஉக

வண்டமர் குழலியொ ௫
கண்டவ ருரைத்த து

இ-ள். மின்றங்கிடையொடு-மின்போலு மிடையையுடையா ளோடு—நீ-நீ—அகன்றில்லை-அகன்ற தில்லையில்—சிற்றம்பலவ ர்-சிற்றம்பலத்தையுடையாரது—குன்றங்கடந்து- குன்றத்தை க்கடந்து—சென்றால்-அப்பாற் சிறிதுநெறியைச்சென்றால்—கு ருஉக்கமலம்-நிறத்தையுடைய தாமரைப்பூ—துன்று - நெருங்கி ய—அங்கிடங்கும் - அழகியகிடங்கும்—வள்ளை - வள்ளைப்பாட

லைப்பாடும்—வெள்ளைநகையார் - வெள்ளை முறுவலையுடையமக
ளிர—துறைதுறை - துறைதொறுந்துறைதொறும்—சென்று-
சென்று—அங்கு - அவ்விடத்து—அடைதடமும் - சேரும்பொ
ய்கைகளும்—புடைசூழ்தரு - பக்கத்துச்சூழ்ந்த—சேணகர்-அ
த்தில்லையாகிய வுயர்ந்தநகர்—நின்றுதோன்றும் - இடையறாது
தோன்றும் அத்துணையுங் கடிதுசெல்வாயாக—எ-று.

குழலியொடுகண்டவர்-குழலியொடு-தலைமகளைக்கண்டவ
ர், மெய்ப்பாடு-பெருமிதம், பயன் இடமணித்தென்றல். (உஉக)

நேரிசையாசிரியப்பா.

புயற்காப்பாசடையெண்படப்படர்ந்த
வெள்ளப்பெருநதிகொள்ளைமுகம்வைத்து
நீடநிறைபாயும்வானவாவிக்கு
ளொருசெந்தாமரைநடுமலர்ந்தென்ன,
மூவடிவழக்கிற்கோரடிமண்கொண்
டொருதாள்விண்ணத்திருமைபெறநீட்டிய
கருங்கடல்வண்ணன்செங்கருங்கரத் ·
தொன்றுலிருமலையன்றேந்தியதென,
வுந்தியொழுக்கேந்தியவனமுலையாட்டியும்
வளைபொருமருமத்தொருதிறனீயு
முழைவாயரக்கர்பாடுகிடந்தொத்த
நிறைகிடைப்பொற்றைவளைகடந்திறந்தா,
னெரிதழற்குஞ்சிப்பொறிவிழிப்பிறழெயிற்
றிருளுடலந்தகன்மருள்கொளவுதைத்த
மூவாத்திருப்பதத்தொருதனிப்பெருமா
னெண்ணிற்பெருதவண்டப்பெருந்திர
ளிடைவுடைவின்றுநிறைநுதற்கனிவியொடு
மளவுர்க்கற்பமளிவைத்துநிலைஇய!

பாசடைநெடுங்காடுகாணிகொணீர்நாய்
வானவினிறத்தநெட்டுடல்வாளைப்
பேழ்வாயொளிப்பமேவட்டுவப்பெயரளி
யிடையுறழ்நுசுப்பிற்குரவைவாயக்கடைசியர்
களைகூடுந்தொழில்விடுத்துழவுசெறுமண்டப்
பண்காலுழவாபகடுபிடர்பூண்ட
முடப்புதுநாஞ்சிலள்ளல்புகநிறுத்திச்
சூடுநிலையுயர்த்துங்கடுங்குலையேறப்
பைங்குவளைதுய்க்குஞ்செங்கட்கவரி
நாகொடுவெருண்டுகழைக்கரும்புழக்க
வமுதவாய்மொழிச்சியர்நச்சுவிழிபோல
வளங்குழைகிழிப்பக்கடுங்கயல்பாயுந்
தண்ணம்பழனஞ்சூழ்ந்த
தண்ணிவர்கூடற்பெருவளம்பதியே. உ௬

——*——

புயற்காரபாசடை பெருவளமபதியே. பகுதி-உடனபோக்கு, துறை-நகரணிமைகூறல். *

புயறகாரபாசடையெணபடப்படர்ந்த
வெள்ளப்பெருநதிகொள்ளைமுகம்வைத்து
நிறைபாயும்வானவாவிகருள்

(இதனதுபதபொருள்.)

எணபடப்படர்ந்த - உலகங்கருதுதலுண்டாகபபரந்த— புயற்கார் - நீரினையுண்டமேகமாகிய—பாசடை - பசியவிலையினையும்—நீட - காலநீட்டிப்ப—கொள்ளைமுகம்வைத்து - ஆயிரமுகம்வைத்து—நிறைபாயும் - பெருகப்பாயும்—வெள்ளப்பெருநதி - கங்கையாகியநீரினையுமுடைய—வானவாவிக்குள் - ஆகாசமாகியவாவிக்குள்,

என் வினைமாத்திரையாய்நின்றது. புயல்நீர்சோராபுயன்மு கிறலைவிலங்கி யென்றாற்போல, நிறையவென்பது நிறைமியென விகாரம், அறுகானிறை யலைம்பானிறை யணிந்தேனென்றாற் போல, இது வியனிலையுருவகம். ஒன்றினங்கம் பலவற்றையுரு ருபித்து முருபியாதுமவையவியு முரைத்தமையின்.

ஒருசெந்தாமரைநடுமலர்ந்தென்ன
மூவடிவழக்கிற்கோரடிமண்கொண்
டொருதாள்விண்ணத்திருமைபெறநீட்டிய
கருங்கடல்வண்ணன்செங்கருங்கரத்
தொன்றாலிருமலையன்றேந்தியதென

நடு - நடுவே—ஒருசெந்தாமரை - ஒருசெந்தாமரை—மலர்ந்தென்ன - மலர்ந்தாற்போல—மூவடிவழக்கிற்கு - மாவலிபான்மூவடிமண்கேட்டோரடிமண்பெறும்வழக்கிற்காக—ஓரடி-ஒருதாளால்—மண்கொண்டு - மண்ணையளந்து—இருமைபெற-பெருமைபெற—ஒருதாள் - ஒருசிபாதத்தை—விண்ணத்து-விண்ணிடத்தில்—நீட்டிய-நீட்டிய—கருங்கடல்வண்ணன் -கரியகடல்போலுநிறத்தினையுடையான்—செங்கரும்-சிவந்தகரிய—கரத்தொன்றால்-கையொன்றினால்—இருமலையன்றேந்தியதென்ன - கோவர்த்தனகிரியேந்தியநாளொன்றன்றி இரண்டுமலையைத்தாங்கியதுபோல;

மலர்ந்தாற்போலத் தாணீட்டியதுதொழிலுவமம், ஒருகையி லிரண்டுமலையேந்தியதற்புதம், அத்து - அல்வழிச்சாரியை, அது பகுதிப்பொருள்விகுதி, செங்கருங்கரமெனவே யகங்கை சிவப்பாதல்கூறினர்.

உத்தியொழுக்கேந்தியவளைமுலையாட்டியும்
வளைபொருமருமத்தொருதிறனியும

உந்தி - கொப்பூழினின்று—ஒழுக்கேந்திய- எழுந்தமயிரொழுக்கின்மேற்றங்கிய—வனமுலையாட்டியும்- அழகியமுலையினையுடையாளும்—வரைபொரும் - மலையகன்றாற்போலுமகன்ற—மருமத்து - மார்பினையும்—ஒரு - ஒப்பற்ற—திறன் - வெற்றியினையுமுடைய—நீயும் - நீயும்;

ஒழுக்கமாகுபெயா.

முழைவாயரக்கர்பாடுகிடந்தொத்த
நிறைகிடைப்பொற்றைவரைகடந்திறந்தால்

முழைவாய்- மலைமுழைபோலும்பெரியவாயினையுடைய—அரக்கர் - அரக்கர்—பாடுகிடந்தொத்த- உடல்கிடந்தாற்போன்ற—நிறைகிடைப்பொற்றை - நிறையாகியசிறுமலைக்கிடைக்கையினையுடைய—வரைகடந்திறந்தால் - மலையைக்கடந்தப்பாற்சென்றால்;

பட்டதுபாடு - அதுவுடலாயிற்று, வழக்கினிற்பாடெடுக்குவென்றார் கிடந்ததுவிகாரம், வழியிடத்தரக்கர்கிடந்தா லனையபொற்றையெனினுமாம்; பாடுடமயி லந்தோகையென்றாற் போல.

எரிதழற்குஞ்சிப்பொறிவிழிப்பிறழெயிற்
றிருளுடலந்தகன்மருள்கொளவுதைத்த
மூவாத்திருப்பதத்தொருதனிப்பெருமான்

எரிதழல் - எரியாநின்றதழல்போன்ற —குஞ்சி - மயிரினையும்—பொறிவிழி- அழற்பொறியினையுடையகண்ணினையும்—பிறழெயிறு - நிரையொவ்வாவெயிற்றினையும்—இருளுடல்-இருண்டவுடலினையுமுடைய—அந்தகன் - யமனும்—மருள்கொள- மருட்சிகொள்ளும்படி—உதைத்த - உதைத்த—மூவா - அளவு

காணப்படாத—திருப்பதத்து - திருவடியினையுடைய—ஒரு- ஒப்பற்ற—தனிப்பெருமான் - ஏகநாயகன்;

உதைத்தவடியென வியையும் - மருள்வினைமாத்திரை சிறப்பும்மைதொககது, காலவறுதியானமையின் மருள்கொளவென ஞர், மூவாத்திருவடி மூவாமுதலா வுலகமென்றற்போலக் கொளக.

எண்ணிற்பெறுதவண்டப்பெருந்திர
ளடைவடைவின்றளிப்பிறைநுதற்கன்னியொடு
மளவாக்கற்பமளிவைத்துநிலீஇய

எணணில் - எண்ணில்—பெறுத - அளவுபடாத—அண்டப்பெருந்திரள் - பெரியவண்டக்கூட்டத்தை—அடைவு - முறைமுறையாக—ஈன்றளித்த - படைத்த—பிறைநுதல்- பிறைபோலுநுதலினையுடைய—கன்னியொடும் - உமையோடும்—அளவா- ஒருவராலுமளவுபடுத்தப்படாத—கற்பம்-கற்பகாலம்—அளிவைத்து-இங்கிரிலுறையவேண்டுமென்னுங்கிருபைவைத்து—நிலீஇய - நிலைபெறற;

பாசடைநெடுங்காடுகாணிகொணீர்நாய்
வானவினிறத்தநெட்டுடல்வாளைப்
பேழ்வாயொளிப்ப

பாசடைநெடுங்காடு - அளவிறந்தபசியவடைத்திரள்—காணிகொள் - காணியாகக்கொண்ட—நீர்நாய்- நீர்நாயானது—வானவில்- இந்திரதிருவில்—நிறத்த - நிறத்தையுடைத்தாய—நெட்டுடல் - நெடியவுடலினையுடைய—வாளை - வாளைமீன்களினது—பேழ்வாய் - பெரியவாயில்—ஒளிப்ப - புக;

வேட்டுவப்பெயரளி
யிடையுறழ்நுசுப்பிற்குரவைவாய்க்கடைசியர்
களைகடுந்தொழில்விடுத்துழவுசெறுமண்ட

வேட்டுவப்பெயர் - வேட்டுவர்—அளியிடையுறழ்- அளியிடைபோலும்—நுசுப்பின் - நுசுப்பினையும்—குரவைவாய் - குரவையிடும்வாயினையுமுடைய—கடைசியர் - உழத்தியர்—களைகடும் - களைகளையும—தொழில்விடுத்து - தொழிலைவிட்டு—உழவுசெறு - உழவினையுடையவயலில்—மண்ட-நெருங்க;

கட்டுதல் - களைதல், கடுந்தொழிலெனவிகாரம். கடியென்னுமுரிச்சொல்லீறுதிரிந்ததாககி வளைதற்பொருளாக்கினுமமையும்.

பண்காலுழவர்பகடுபிடர்பூண்ட
முடப்புதுநாஞ்சிலள்ளல்புகநிறுத்திச்
சூடுநிலையுயர்த்துங்கடுங்குலையேற

பண்காலுழவர்-பண்ணினைப்பாடப்பட்டவுழவரானவர்—பகடு - பகடானது—பிடரிற்பூண்ட—தன்பிடரிற்சுமந்த—முடபபுதுநாஞ்சில்-வளைவினையுடைய புதியகலப்பைகளை—அள்ளல்புகநிறுத்தி - சேற்றிலமுந்தநிறுத்தி—சூடுநிறையுயர்த்தும்-அரியைப்போராகவுயர்த்தும்—கடுங்குலையேற - சிறப்பினையுடையசெய்கரையிலேற;

பண்காலுழவர் - பண்ணெழுத்தியல் படப்பரப்பியிட்டன தன்வய லுழவரொன்றுற்போல் பண்மருதப்பண் - உழவர்நிறுத்தியென்வினையும், பகடது பிடரியெனவினுமமையும், சூடு-[illegible]; அரியைநிலையாகவுயர்த்தவென்னவே போராயிற்று. கடுங்குலை யுரிச்சொலீறு திரிந்துநின்றது.

பைங்குவளை துய்க்குஞ்செங்கட்கவரி
நாகொடுவெருண்டுகழைக்கருமபுழக்க

பைங்குவளை-பசியகுவளைமலரை—துய்க்கும்-அருந்தும்—செங்கட்கவரிநாகொடு - சிவந்த கண்ணினையுடைய இளைய வெருமையோடுமுதியவெருமை—வெருண்டு - பயந்து—கழைக்கரும்புழக்க - கழையாகியகரும்பினையுழக்க,

சொல்லியமரபினிளமைதானே சொல்லுங்காலை யலையல திலவே, யென்றசூத்திரத்திற் சொல்லுங்காலையென்றதனு லுரு பேண்மையேயன்றி யிளமையு முணர்த்திற்று, எருமைநல்லான் கருநாகு பொரூஉமென்ருற்போல இளையவெருமையெனவே யதற்கு மறுதலையாகிய முதியவெருமையும் வருவிககப்பட்டது.

அமுதவாய்மொழிச்சியர்நச்சுவிழிபோல
நெடுங்குழைகிழிப்பக்கடுங்கயல்பாயும்

அமுதவாய்மொழிச்சியர் - அமுதம்போலும்வாய்மொழியினையுடையார்—நச்சுவிழிபோல - விடம்போலும்விழியானவை—குழைகிழிப்ப - குழையைக்கிழிக்கப்பாய்ந்தாற்போல—நெடும் - நெடிதாகிய பசியவிலைகளைக்கிழிக்கும்படி—கடுங்கயல்பாயும் - மிகுந்தகயல்கள்பாயும்;

அமுதமொழிவிரவிவந்த வுவமை, நஞ்சிற்கும்விழிக்குமொத்தபண்பு.குறாரம் விழிக்குங் கயற்குமொத்த பண்புதடுமாற்றமாதலா லுவமைக்குவமையன்று நஞ்சுவிழிககடையெனினுமாம் செந்தொத்தலர்ந்த செழுந்தாமரையன்ன வாட்கண்போல, குழைகிழிப்ப வெனபதுசிலேடை, செயவெனெச்ச வடுகருப்பாயுமென்னும் பிறவினைகொண்டது, கடுங்கயலுரிச்சொல்லு திரிந்தது.

தண்ணம்பழனஞ்சூழ்ந்த
கண்ணிவர்கூடற்பெருவளம்பதியே.

தண்ணம்பழனஞ்சூழ்ந்த- குளிர்ச்சியினையுடையவயல்கள் வளைந்த—கண்ணிவர்- நோக்கினோர்கண்கள்விரும்பப்பட்ட—பெருவளம் - பெருவளத்தினையுடைய—கூடற்பதி - கூடலாகிய பதிதோன்றும்—(அத்துணையுங்கடிதிற்செல்வீராகவென்க)-எ-று.

தோன்றுங்கடிதிற் செல்வீராகவென்பது வருவிக்கப்பட்டது. தண்பழனம்-விகாரம், சூழ்தற்கிடமாகிய பதியெனவுஞ் சூழ்தற்குக்காரணமாகிய பெருவளமெனவுமாம், கண்ணிவர்பெருவளம், உறைபதிசெய் குன்றுபோலநின்றது. கண்விரும்புதற்குக் காரணமாகிய வளமெனினுங் கண்விரும்புதற் கிடமாகிய கூடலெனினுமாம், இவர் தலேறுதலுமாம்.

முலையூட்டியுகியு மிம்மலையைக்கடந்தப்பாற்சென்றுலொருதனிப்பெருமானுடைமையொடுசிலைபெற்றகூடற்பதிதோன்றுமத்துணையுங்கடிதிற்செல்வீராகவென வினைமுடிவுசெய்க. (உக)

---

## அறியாள்போன்று நினைவுகேட்டல்.



அறியாள்போன்று நினைவுகேட்டலென்பது - தலைமகனது மகிழ்ச்சிகண்டு இவன்வாடாமற் றழை வாங்குவேனென உட்கொண்டு,என்னுடையதோழிமார்பலர் அவருள்நின்கருத்துளவாகண்ணதோவெனத் தோழி தானறியாள்போன்று அவனினைவு கேளாநிற்றல். அதற்குச்செய்யுள்:—

விண்ணிறந்தார்நிலம்விண்டவரொன்றுமிக்காரிருவர்
கண்ணிறந்தார்தில்லையம்பலத்தார்கழுக்குன்றினின்று

தண்ணறுந்தாதிவர்சந்தனச்சோலைப்பந்தாடுகின்ற
ரெண்ணிறந்தாரவர்யார்கண்ணதோமன்னநின்னருளே.

வேந்தன்சொன்ன மாந்தளிர்மேனியை
வெறியார்கோதை யறியேனென்றது.

இ-ள். விண்ணிறந்தார் - விண்ணைக்கடந்தவர்—நிலம்விண்டவர் - நிலத்தைபிளந்தவர்—என்று - என்றுசொல்லப்படும்—மிககாரிருவர் - பெரியோரிருவருடைய—கண்ணிறந்தார் - கண்ணைகடந்தார்—தில்லையம்பலத்தார் - தில்லையம்பலத்தின்கண்ணூர்—கழுககுன்றினின்று - அவராதுகழுக்குன்றின்கணின்று—தண்ணறும் - தண்ணிதாகியநறிய—தாதிவர் - தாதுபரந்த—சந்தனச்சோலை - சந்தனச்சோலையிடத்து—பந்தாடுகின்றார் - பந்தாடுகின்றார்—எண்ணிறந்தார் - இறபபப்பலர்—மன்ன - மன்னனே—நின்னருள்-நினதருள்—அவர்- அவருளள—யார்கண்ணதோ - யார்கண்ணதோகூறுவாயாக—எ-று.

விண்டவவொன்பதற்கு முன்னுரைத்ததுரைக்க. அன்னோர்க்கு அரியராயினும் எம்மனோர்க்கு எளியரொன்னுங் கருத்தால் தில்லையம்பலத்தாரொன்றார். சோலைக்கணின்றென்று கூட்டினுமமையும். எண்ணிறந்தார்பல ரொன்பதூஉம்பாடம். மெய்ப்பாடு மருட்கையைச்சார்ந்த பெருமிதம். நும்மாற் கருதப்படுவோளை அறியேனென்றுளாக என்குறை இன்னுள்கண்ணதென அறிவித்தால் இவள் முடிக்குமெனநினைந்து ஆற்றுவானுமென்பது - பயன். (௧0௭)

நேரிசையாசிரியப்பா.

பற்றலர்த்தெறுதலுமுவந்தோர்ப்பரித்தலும்
வெஞ்சுடர்தண்மதியெனப்புகழ்நிறீஇய
நெட்டிலைக்குறும்புகர்க்குருதிவேலவ
வேதியன்பண்டைக்கமாலவன்காக்கப்
பெறுததோர்திருவுருத்தாண்பெரிதுசிறுத்தி

யமுதயில்வாழ்க்கைத்தேவர்கோனிழிச்சிய
மதமலையிருநான்குபிடர்சுமந்தோங்கிச்
செம்பொன்மணிகுயிற்றியசிகரக்கோயிலு
ளமையாத்தண்ணளியுமையுடனிறைந்த
வாலவாயுறைதருமூலகாரணன்
கருவிவானமடிக்கடிபொழியுங்
கூடஞ்சூழ்ந்தநெடுமுடிப்பொதியத்துக்
கண்ணுழையாதுகாட்சியொடுதோற்றிய
வெறிவீச்சந்தினிரையிடையெறிந்து
மற்றதுவேலிகொளவளைத்துவளரோன
னெடுங்காற்குற்றுழியிதணுழைகாத்துந்
தேவர்கோமான்சிறையரிபுண்ணினுக்
காற்றுதுபெருமுழைவாய்விட்டுக்கலுழ்ந்தெனக்
கமஞ்சூற்கொண்மூமுதுகுடியிருந்து
வானுட்கமுரற்றுமலைச்சுனைகுடைந்தும்
பிரசமும்வண்டுமிரவிதெறுமணியும்
வயிரமும்பொன்னுநிரைநிரைகொழித்துத்
துகினன்றுநுடங்குமருவியேற்று
மறுவறுசெம்மணிகாற்கவணிறுத்தி
நிறைமதிகிடக்குமிருல்விழவெறிந்து
மெதிர்சொற்கேட்பக்கால்புகத்திகைத்த
நெருக்குபொழிற்புக்குநெடுமலைகூயு
நுசுப்பின்பகைக்குநூபுரமாற்றப்
பைங்காடுநகைத்தவெண்மலர்கொய்து
மனத்தொடுகண்ணுமடிக்கடிகொடுபோஞ்
செம்பொன்செய்தவரிப்பந்துதுரந்து
மினையபன்னெறிப்பண்ணையியங்கு
மளவாக்கன்னியரிவரு
ளுளமாம்வேட்கையளின்னளென்றுரையே. ௩௰

பற்றலர்த்தெறுதலும் என்னவென்றுணாயே. பகுதி-சேட்படை, துறை - அறியாள்போன்று நினைவுகேட்டல்.

பற்றலர்த்தெறுதலுமுவந்தோரப்பரித்தலும்
வெஞ்சுடர்தண்மதியெனப்புகழ்நிறீஇய
நெட்டிலைக்குறும்புகர்க்குருதிவேலவ

(இதனதுபதப்பொருள்.)

பற்றலர் - சத்துருக்களை—தெறுதலும்வெஞ்சுடர் - தெறும்படியாதித்தனைக்காய்தலும்—உவந்தோர் - மித்துருக்களை—பரித்தலுந்தண்மதியென-காக்கும்படி சந்திரனைக்குளிர்தலும்போல—புகழ்நிறீஇய-புகழைநிறுத்திய—நெட்டிலை - நெடியசகட்டிலையும்—குறும் - குறிய—புகர்க்குருதி - குருதிப்பொறியினையுமுடைய—வேலவ - வேலினையுடையாய்;

எண்ணும்மைதொக்கது. இது நிரனிறையுவமை தெறுதலும்பரித்தலுமென்னுமும்மீற்றுவினையெச்சம்-வினையெஞ்சுகிளவியும் வேறுபல்குறிய வென்பதனாற்கொள்க. நனவிற் புணர்ச்சி நடக்கலுமாங்கே காண்டலுமியைவதோவென்றாற்போல தெறுதலானும் பரித்தலானுமெனினுமாம், நிறீஇயவேலவ வெனவியையும்.

வேதியன்படைக்கமாலவன்காக்கப்
பெருந்தேர்திருவுருத்தான்பெரிதுநிறுத்தி
யமுதயிலவாழ்க்கைத்தேவர்கோனிழிச்சிய
மதமலையிருநான்குபிடர்சுமந்தோங்கிச்
செம்பொன்மணிகுயிற்றியசேகரக்கோயிலு
ளமையாத்தண்ணளியுமையுடனிறைந்த
வாலவாயுறைதருமலக்கொழுஞ்சுடர்

ஆலவாய் - தான்பொருந்துமாலவாயென்னுந்திருப்பதியில்—அமுதயில்வாழ்க்கை- அமுதமுண்ணும்வாழ்க்கையினையுடைய—தேவர்கோன் - தேவேந்திரன்—மதமலை - அயிராபதமுதலிய—இருநான்கு - யானையெட்டும்—பிடர்சுமந்து - தம்பிடரிற்சுமந்து—ஓங்கி - ஓங்கும்படி—வேதியன்படைக்க - பிரமாபடைக்கவும்—மாலவன்காக்க- விட்டுணுகாக்கவும்—பெருந்தகோர்திரு - பெருந்தகோரழகிய—உருத்தான்பெரிது- உருவினைப்பெரிதாக—நிறுத்தி- நிறுத்தி—இழுச்சிய-இறகிய—செம்பொன்- செம்பொன்னும்—மணி-மணியும்—குயிற்றிய-அழுத்திய—சேகரம் - முடியினையுடைய—கோயிலுள்- கோயிலுள—அமையா- அடங்கி—தண்ணளி - கிருபையினையுடைய—உமையுடன் - அங்கயற்கண்ணம்மைவசமாக—நிறைந்த-பொலிவுபெற்ற—மூலம் - முதன்மையாகிய—கொழுஞ்சுடர் - வளவியசோதியானவன்;

இருநான்குமென்னு முற்றும்மைதொக்கது, எண்ணும்மைதொக்கது. காக்கப் படைக்கவென்னுஞ் செயவெனெச்சம் பெருந்தென்னுமெதிர்மறையுட் பெறுதலோடுமுடிந்தது, தான் அசை - ஓங்கநிறுத்தி யிழிச்சியகோயிலெனவியையும், ஆகவெனவொருசொல்வருவிக்க, உடனுகைவைம்பொறியு மென்றூர் கேமசரியி லம்பத்தினும், உடலோடுகூடிநிறைந்த வெனினுமாம்.

கருவிவானமடிக்கடிபொழியுங்
கூடஞ்சூழ்ந்தநெடுமுடிப்பொதியத்து

அடிக்கடி - அடிக்கடி—கருவி - மின்னுமிடியுமுதலியகூட்டத்தினையுடைய—வானம் - மேகம்—பொழியும் - பொழிதற்கிடமாகிய—கூடஞ்சூழ்ந்த - கூடஞ்சூழ்ந்த—நெடுமுடி - நெடியமுடியினையுடைய—பொதியத்து - பொதியமலையிடத்து,

கருவி - தொகுதி, கூடம் - மன்றுகச்சூழப்பட்டதோர் தே வகோட்டம், கூடஞ்செய்சார லென்றறபோல.

> கண்ணுழையாதுகாட்சிகொளத்தோற்றிய
> வெறிவீச்சந்தினிரையிடையெறிந்து
> மற்றதுவேலிகொளவளைத்துவளரேன
> னெடுங்காற்குற்றுழியிதணுழைகாத்தும்

கணணுழையாது - தன்னிடத்திலொருவருஞ்செல்லப்படாது—காட்சிகொள - புறத்திற்காணுதல்கொள்ள—தோற்றிய - தோற்றிய—வெறி- வாசத்தினையுடைத்தாகிய--வீ-பூவினையுடைய—சந்தினிரை- சந்தநிரையை—இடையெறிந்து-புனத்திடையில்வெட்டி—மற்றது - வெற்றுமரத்தினை—வேலிகொளவளைத்து - வேலியாகவளைத்ததனால்—வளரா- வளராநின்ற—ஏனல்-தினையினை—நெடுங்கால் - நெடியகாலினையும—குற்றுழி - சிறியவிடத்தினையுமுடைய—இதணுழை - பரணிடத்திருந்து—காத்தும் - காத்தும்;

கணணென்பது - கண்ணகன்ஞாலம்போன்றது, முழுதுஞ்செல்லாமையின கண்ணனைத்துநுழையாதெனினுமாம். உம்மை சிறபபும்மை, மறறுவினைமாறறு. வளைந்தென்னு முதல்வினை பிறமுதல்வினையோடு முடிந்து காரணகாரியப பொருட்டாய் நின்றது. இருந்தென வொருசொல்வருவிக்க.

> தேவர்கோமான்சிறையரிபுண்ணணினுக்
> காற்றுதுபெருமுழைவாய்விட்டுக்கலுழ்ந்தெனக்
> கமஞ்சூறகொண்மூமுழுதுகுடியிருந்து
> வானுட்கமுரற்றுமலைச்சுனைகுடைந்தும்

தேவர்கோமான் - இந்திரன்—சிறையரி - முன்சிறையரிந்ததனால்வந்த—புண்ணணினுககு - புண்ணேவுககு—ஆறறுது-ஆ

ற்றது—பெருமுழை - பெரியமுழையாகிய—வாய்விட்டு - வா
யினைப்பிளந்து—கலுழ்ந்தென - அழுதாற்போல—கமஞ்சூல்-நி
றைந்தசூலினையுடைய—கொண்மூ - மேகமானது—முதுகுகுடி
யிருந்து - தன்புறத்திரகுடியாகவிருந்து—வானுட்க - தேவர்க
ளுமுட்கும்படி—முரற்றும் - முழங்கும்—மலைச்சுனை - மலையி
னிடத்திறசுனையை—குடைநதும் - குடைந்தாடியும்,

அரிபுண் உண்டவெச்சில்போன்றது - புண்ணும்வானுமா
குபெயர், கலுழ்ந்தது விகாரம், அழுதாறபோல முழங்குமென்
பது, அன்னபோலென்னு மவைமுதலாகிய சொனனிலை விளங்
குந் தோற்றமுமுடைத்தேயென்பதனுல்வந்ததற்குறிபபேறறம்
வினைமுதலல்லாத கருவிமுதலாயின வவ்வினை முதல்வினைக்கு
ச்செய்விபபனவா மாதலான முரற்றுமெனச் செய்விபப தாகக்
கூறினுர், வேய்தந்த வெண்முத்தஞசிந்து பைங்கார்வனமீன் ப
ரப்பியென்றாற்போல.

பிரசமும்வண்டுமிரவிதெறுமணியும்
வயிரமும்பொன்னுநிரைநிரைகொழித்துத்
துகினுன்றுநுடங்குமருவியேற்றும

பிரசமுமவண்டும் - தேனையும்வண்டையும்—இரவிதெறு
மணியும் - மாணிக்கத்தையும்—வயிரமும் - வயிரத்தையும்—
பொன்னும் - பொன்னையும்—நிரைநிரை - பத்திபத்தியாக—கொ
ழித்து - கொழித்து—துகில் - பலநிறத்துகிலானது—நான்று
தாழ்ந்தாற்போல—நுடங்கும் - வீழ்ந்தசையும்—அருவியேற்
றும் - அருவியாடியும்,

இரவிதெறு மணியெனவே சாதுரங்கமென்னும் வருண
தையுடைய மாணிக்கமென்பதுவிளங்கிற்று ஆதித்தனுக்கு மன
க்குமொளிபற்றிய மணிக்குந்துகிற்கு நிறம்பற்றிய முவமைமகூ

வினுவமைக் குவமையன்று துகிலென்பது பலசிறத்துகிலுக்கும் பொதுப்பெயா - நான்றெனனுமுவமவினை யொற்றுமை நயத் தாற்பொருளின் ருெழினமேனிறது, இது தொழிலுசிறமும் பற்றியவுவமம் - விரவியும் வருஉமரபினவென்ப வென்பது விதி கொழித்து வீழ்ந்தசையுமெனவினையும், உமைமவிரிந்திரண்டா முருபுதொகதது தூதையும் பாவையும் விளையாட வென்றுற் போல.

மறுவறுசெம்மணிகாற்கவணிறுத்தி
நிறைமதிகிடக்குமிருல்விழவெறிந்தும்

மறுவறு - குற்றமற்ற—செம்மணி - மாணிக்கத்தை—கா ற்கவணிறுத்தி - காலினையுடையகவணில்வைத்து—நிறைமதிகி டக்கும் - பூரணசசந்திரன்கிடநதாற்போலககிடக்கும்—இருல் விழ - இருட்டுவிழுமபடி—எறிந்தும் - அதனையெறிந்தும்;

குற்றமாவன திட்டையேறுசிவந்த விகாயமுதலியன மதி கிடககுமிருல் வடுத்தான் வகிர்கண்ணி போன்ற தெனினுமாம.

எதிர்சொற்கேட்பககால்புகத்திகைத்த
நெருக்குபொழிற்புககுநெடுமலைகூயும்

எதிர்சொற்கேட்ப-கூவியசொல்லெதிர்கேட்ப—நெடுமலை-நெ டியமலை—கூயும் - எதிர்கூவியும்—கால்புகத்திகைத்த - எடுத் தடிவைக்கப்படாத—நெருக்குபொழில் - நெருங்கியசோலையில் —புக்கும் - புகுநதும்,

காலானது புகத்திகைத்தவெனவே எடுத்தடிவைக்கப்படா தாயிற்று; உயிரினதுதொழிலைத் துணையாகிய காலின்மேலேற் றப்பட்டது, காற்றுஞ் செல்லப்படாதவெனினுமாம். உம்மை-சிறப்பு.

நுசுபபின்பகைக்குநூபுரமாற்றப
பைங்காடுநினைத்தவெண்மலர்கொய்தும்

எண்மலர் - எண்ணப்பட்டமலர்கள்—நுசுப்பின்பகைக்கு நுசுப்போடுபகைத்தற்கு—பைங்காடு- பசியசோலை—நினைத்த- நினைத்தவம்மலர்களை—நூபுரமாற்ற - கிணகிணிகளாற்றும்ப டி—கொய்தும் - கொய்தும்;

இன்னுருபுமயககம் பகை வினைமாத்திரையாய் நின்றருபே ற்றது காடுதிரளபைங்காடு அன்மொழித்தொகை நினைந்ததொ ழிற்பெயர் மலர்சூடுதல் இடைக்குபபகையாதலிற் பகைத்தற்கு க்கொய்துமென்றார் சிலம்பரற்றக கொய்தெனவேநடந்து கொ ய்தமைவிளங்கிற்று.

மனத்தொடுகண்ணுமடிக்கடிகொடுபோஞ்
செம்பொன்செய்தவரிப்பந்துதூங்கும்

அடிக்கடி - அடிக்குந்தோறுமடிக்கடி—மனத்தொடுகண்ணு ம் - மநமுங்கண்ணும—கொடுபோம் - கூடகொணடுசெல்லு ம்—செம்பொன்செய்த - சிவந்தபொன்னாற்செய்த—வரி - வரி யினையுடை—பந்துதூங்கும் - பந்தாடுதலைமுயன்றும்,

ஒடு எண்ணொடு.

இனையபன்னெறிப்பண்ணையெங்கு
மளவாக்கன்னியரவர்க்கு
ளுளமாம்வேட்கையளின்னளென்றுணாயே.

இனைய - இத்தன்மையவாகிய—பன்னெறி-பலமுறைமை களையுடைய—பண்ணையெங்கும் - புன்முதலியவிடங்கடோறும் —அளவா- அளவுபடுத்தப்படாத—கன்னியர் - கன்னியர்—அ வர்க்குள்- அவர்க்குள்—உளமாம்-நின்னுள்ளத்திலுண்டாம்—

வேட்கையள் - வேட்கையையுடையவள்—இன்னளென்று- இத்தன்மையளென்று—உரை - சொல்லுவாயாக—எ-று.

அளவாக்கன்னியரெனவே பலராயினர் வினையெச்ச வடுக்காகிய வென்பதனோடுமுடிந்தது.

வேலவ சோதியானவன் பொதியத்திடத்துக்காத்துங்குடைந்துமேற்று மெறிந்துங்கூவியும் புகுந்துங்கொய்துமுயன்றுமித்தன்மையவாகிய பலமுறைமைகளையுடையவிடந்தோறுமளவாக்கன்னியாபல ரவாக்குணின னுள்ளத்திலுண்டாம் வேட்கையினையுடையாள இன்னளென்றுநீசொல்லெனவினைமுடிவுசெய்க.௩0

---

சுடரோடிரத்தல்.

சுடரோடிரத்தலென்பது - கிளிமொழிகேட்டிரங்காநின்றவள் பெற்றவெனனோடு தன்கிளியிருந்துவருந்த இதனையுந்துறந்து அறிவுமுதிர்ந்து அழற்கடன்சென்றுண்முகத்தை நின்கதிர்களான்வாட்டாது தாமரைமலர்போல மலர்த்துவாயாகவெனச் சுடரோடிரந்து கூறுநிற்றல். அதற்குச்செய்யுள்:—

பெற்றேனொடுங்கிள்ளைவாடமுதுக்குறைப்பெற்றிமிக்கு
நற்றேன்மொழியழறகானடந்தாண்முகநானனுகப்
[illegible]ன்பிறவிபெறுமற்செய்தோன்றில்லைத்தேன்பிற
ங்கு;[illegible]ளமலர்த்திரந்தேன்சுடர்வானவனே.

வெஞ்சுரந்தணிக்கெனச் செஞ்சுடரவற்　　கு
வேய்மர்தோளி தாயர்பராய　　௩௧.

இ-ள். சுடர்வானவனே - சுடராகியவானவனே—பெற்றேனொடும் - பெற்றவென்னோடும்—கிள்ளைவாட - தன்கிளியிருந்

துவருந்த இதனையுந்துறந்து—முதுககுறை- அறிவுமுதிர்ந்த—
பெற்றிமிககு - இயல்புமிககு—நற்றேன்மொழி- நல்லதேன்போ
லு மொழியையுடையாள்—அழற்கானடந்தாள் - அழலையுடை
ய காட்டின்கணடந்தவளது—முகம் - முகத்தைநின் வெங்கதிர்
களான்வாட்டாது—நானணுகபபெற்றேன் - ஒருவாற்றுற்றன்
னையணுகப் பெற்றேனாகிய யான்—பிறவிபெறுமற்செய்தோன்-
பின்பிறவியைப் பெறுதவண்ணஞ்செய்தவனது—தில்லை - தில்
லையில்—தேன்பிறங்கும் - மதுமிகுந்த—மறறேன்மலரின்- வள
வியவண்டையுடைய தாமரைமலர்போல—மலர்த்து - மலர்த்து
வாயாக—இரந்தேன் - நின்னையானிரந்தேன்—எ-று.

பெற்றேனொடுமென்பது எண்ணொடுவுமாம் தணிக்கவென்னு மிறுதியகரங்குறைந்துநின்றது மெய்ப்பாடும்பயனும் அவை. (௨௩௨)



நேரிசையாசிரியப்பா.

ஈன்றவென்னுளமுந்தோன்றமொழிபயின்ற
வளைவாய்க்கிள்ளையும்வரிப்புனைபந்தும்,
பூவையுங்கோங்கின்பொன்னலர்சூட்டிய
பாவையுமானுந்தருள்பவருரு
நெடுந்திசைநடக்கும்பொருணிறைகலத்தினைப்
பெருவளிமலக்கச்செயன்மறுமறந்தருகுத்
சேரமறுகமுதுக்குறைவுறுத்தி
யெரிதெறுங்கொடுஞ்சுரத்திறந்தனளாக
நதிக்கடத்தறுகட்புகர்க்கொலைமறுத்த
கல்விபமதனைக்கரும்புகொளவைத்த
வாலவாயமர்ந்தநீலநிறைகண்டன்
மதிதிரைப்பரவைப்புடைவயிறுகுழமபத

துலக்குமலையொருநாட்கலக்குவபோல
வழூஉவயுகிருழக்குமேந்துகோட்டும்ப
லுரிவைமூடியொளியினைமறைத்துத்
தனைபடுமறுக்கந்தடைந்தனபோல)
விண்ணுறவிரித்தகருமுகிற்படாங்கொடு
மண்ணகமுருகக்கனற்றுமழன்மேனியை,
யெடுத்துமூடியெறிதிரைப்பழனத்துப்
பனிச்சிறுமைகொள்ளாமுள்ளனைமுளரி
வண்டொடுமலர்ந்தவண்ணம்போலக்
கண்ணுமாமுங்களிவரமலர்த்துதி/
மலர்தலையுலகத்திருளெறிவிளக்கு,
மன்னுயிர்விழிக்கக்கண்ணியகண்ணு
மறையுகுநீர்க்குக்கருவுங்கரியும்,
வடிவமெட்டினுண்மகிழ்ந்தவொன்றுந்,
சேண்குளமலர்ந்தசெந்தாமரையுஞ்,
சோற்றுக்கடன்கழிக்கப்போற்றுயிர்கழிக்கு
மாசைச்செருநர்க்கடைந்துசெல்வழியு,
மருளும்பொருளுமாகித்
திருவுலகளிக்கும்பரிதிவானவனே. ௩௪

---

என்றவென்னுளமு பரிதிவானவனே. பகுதி - உடன்போக்கு, துறை - சுடரோடிரங்குகூறல். *

மலர்தலையுலகத்திருளெறிவிளக்கும்

(இதனதுபதப்பொருள்.)

மலர்தலையுலகத்து-பரந்தவிடத்தையுடையபூமியின்கண்ணுண்டாகிய—இருளெறி - இருளைநீக்கும்—விளக்கும் - விளக்குமாகி,

மன்னுயிர்விழிக்கக்கண்ணியகண்ணும்

மன் - இவ்வுலகத்துநிலைபெற்ற—உயிர்விழிக்க—உயிர்கள் விழிக்கும்படி—கண்ணியகண்ணும் - கருதவேண்டியகண்ணு மாகி,

கண்ணிய கண்ணுமாகி யென்றதற்குக் கருதப்பட்ட கண் ணுமாகியெனினுமாம், உளாயிடத்தியலு முடனிலை யறிதலென் பதனாற் கண்ணியவென்பது வினையெச்சமும் பெயரெச்சமுங் கொள்ளக்கிடந்தது, எல்லாபபொருளும் விளக்குதற்குக் கருவி யாதலி னுதித்தனைக்கண்ணென்றார். எண்ணென்ப வேனையெழு த்தென்ப விவ்விரண்டுங் கண்ணென்ப வாழுமுயிர்க் கென்றாற் போல,

மறையுருநீர்க்குக்கருவுங்கிரியும்

மறையுருநீர்க்கு - மறையோரர்க்கியங்கொடுத்தற்குக்காரண மாயநீர்க்கு—கருவும் - கருவுமாகி—க்ரியும் - எல்லாப்பொரு ட்குஞ்சான்றுமாகி,

மறையாகுபெயர் தன்கிரணங்களான் மழையைப்பெய்வித் தலிற் கருவென்றார்.

சேண்குளமலர்ந்தசெந்தாமரையும்

சேண் - ஆகாசமாகிய—குளம் - வாவியில்—மலர்ந்த-பொ ருந்தும்படிமலர்ந்த—செந்தாமரையும் - செந்தாமரையமாகி,

சே ணாகுபெயர்.

சோற்றுக்கடன்கழிக்கப்போற்றுயிர்கழிக்கு
மாசைச்செருநர்க்கடைந்துசெல்வழியும்

சோற்றுக்கடன்கழிக்க - பகைவர்வேற்றுப்புலத்தைநமக்கு த்தருகவென்றுகொடுத்தசோற்றுத்திரளையைவாங்கிய கடன்றீர

—போற்றுயிர் - போற்றுகின்றவுயிரை—கழிக்கும்-அமர்க்களத்தினீக்கும்—ஆசைச்செருநர்கரு - ஆசைபொருந்தியவீரர்கரு—அடைந்துசெல்வழியும் - வீரசொறகமடையச்செல்லாநின்றவழியுமாகி,

சோறுகுபெயா - சோற்றுக் கடனுருபும் பொருளுந்தெர்க்கது, திருந்தார் தம்முனைதருகுவ ரிவரெனபபெருஞ்சோறுடவர்பெறு முறைவகுத்தனறென்றுர், வெண்பாமாலையினும், கதிபெறுவார்க்குத் தன் மண்டலத்தூடு செல்லவீட்டீங்கொடுத்தலான் வழியாகியுமென்றுர், அடைந்து அடைய வீரசொர்க்க மெனஒரு சொல்வருவிக்க.

அருளும்பொருளுமாகித்
திருவுலகளிககுமபரிதிவானவனே.

அருளும் - எவ்வுயிாககண்ணுந்தொடர்பின்றியியல்பாற்செல்லுங்கருணையுமாகி—பொருளுமாகி - இவையொழிந்தவெல்லாபபொருளுமாகி - திருவுலகளிக்கும் - உலகத்தினையளிக்கும்—பரிதிவானவனே - பரிதியாகியவானவனே,

விளக்காய்ச் சிறப்பினைகதொடுத்தலானுங் கண்ணுயெல்லாப் பொருளுந் தெரியபப ண்ணுதலானுங் கருவாயெல்லாப் பொருளையுமுண் டாக்குதலானுஞ் சான்றுயவரவர் செய்த நல்வினை தீவினை தவறு துண்மையாய் நிற்றலானுந் தாமனாயாய்க் கண்டோர்க்குவகையும் விருப்பமு முண்டாக்குதலானும் வழியாய்க் கதியிற்செலுத்தலானு மருளும்பொருளுமா யிடுக்கண்டீர்த்தலானு மளிக்குமென்றுர் இது - பலபொரு ளுருவகம் ஆகியெனபதனை யெங்குங்கூட்டுக.

தெருள்பவ்ருரு.
கெடுந்திசைகடக்கும்பொருணிறைகலத்தினைப்
பெருவளிமலக்கச்செயன்மறுமறந்தாங்கு

தெருள்பவர் - திசையறிந்துசெலுத்துவார்—உளரும்-செலுத்தும்—நெடுந்திசைநடக்கும்- திசைபிழைக்கும்—பொருணிறைகலத்தினை - பொருணிறைந்தசம்பானை—பெருவளி - பெருங்காற்று—மலக்க- மலக்குதலால்—செயன்மறுமறந்தாங்கு-செயன்மறந்துமறுகினாற்போல,

தெருள்பவர் மறுகினாற்போல வெனவினையும். புயல்சொரிந்தாங்கென்பதும் பாடம்.

> ஈன்றவென்னுளமுந்தோன்றுமொழிபயின்ற
> வளைவாய்க்கிள்ளையும்வரிப்புனைபந்தும்
> பூவையுநகோங்கின்பொன்னலர்சூட்டிய
> பாவையுமானும்
> சேரமறுக

ஈன்றவென்னுளமும் - பெற்றவென்னுளமும்—தோன்றும் - கேட்டார்க்குவெளிப்படும்—மொழிபயின்ற - வார்த்தையைக்கற்ற -வளைவாய்கிள்ளையும் - வளைந்தவாயினையுடையகிளியும்—பூவையும் - நாகணவாய்ப்புள்ளும்—மானும் - மானும்—வரிப்புனைபந்தும் - பாம்புரிபோலக்குத்தியேறிட்டவரியினையுடையபந்தும்—கோங்கின் - கோங்கினது—பொன்னலர் - பொன்போலுமலரை—சூட்டியபாவையும் - சூட்டியபாவையும்—சேரமறுக - கூடவருந்தும்படி,

பந்தும் பாவையுமறுகவென மிகுதிபற்றிக்கூறினர்.

> முதுக்குறைவுறுத்தி
> யெரிதெறுங்கொடுஞ்சுரத்திறந்தனளாக

முதுக்குறை- தான்பெற்றபேரறிவினை—உறுத்தி - எல்லாருமறியும்படிபண்ணி—எரிதெறும் - நெருப்புச் சுடுதற்கிடமா

கும்—கொடுஞ்சுரத்து - கொடியபாலையில்—இறந்தனளாக-செ
ன்றனளாக,

ஆகவாகவென்பதென்னு மாவயின்மூன்றும் பிரிவிலசைநி
லை யென்பதனு னிறந்தனளாகவென்பது செயவெ னெச்சமூற்
றுய்த்திரிவுழி யாகவென்னுமிடைச்சொல்வந் ததன்பொருளுண
ர்த்திப பிரிவிலசைநிலையாய்ச்செய்கவெ னெச்சமாய்நின்றது, இ
னைதலாஞ்னாகி சொல்விற்பாணிநின்றனளாக வென்றாற்போல.

நதிக்கடத்தறுகட்புகர்க்கொலைமறுத்த
கல்லிபமதனைக்கரும்புகொளவைத்த
வாலவாயமர்ந்த நீலநிறைகண்டன்
வடிவமெட்டினுள்மகிழ்ந்தவொன்றும்

ஆலவாய் - ஆலவாயென்னும்பதியில்—நதி- நதிபோலவொ
ழுகும்—கடம் - மதத்தினையும்—தறுகண் - தறுகண்மையினையு
ப்—புகர் - புகரினையும்—கொலைமறுத்த - கொலைத்தொழிலை
யுநீத்த—கல்லிபமதனை - கல்யானையானது—கரும்புகொளவை
த்த - யானைபோலக்கரும்புதின்னும்படிவைத்த—நீலநிறைகண்
டன் - கருமைநிறைந்தகண்டன்—அமர்ந்த - பொருந்திய—வ
டிவமெட்டினுள் - வடிவமெட்டில்—மகிழ்ந்தவொன்றும் - எ
ல்லாருமகிழ்தற்கிடமாகியவொருவடிவமுமாகி,

அன்னும்ஐயுமசை அது வென்பதியானைச் சாதியைச்சுட்டி
நிறு யானையது வந்ததென்றாற்போல வினைக்கொருங் கியன்ற
தெனக் கொள்ளினதுவழக்கிற் கெனமறுக்க, இக்கருத்துக் கல்
லார் மணிப்பூணென்னுஞ் சிந்தாமணிப் பதிகத்திற்காண்க. வடி
வமெட்டாவன பஞ்சபூதமுமிருசுடரு மியமானனும்-உம்மை யா
க்க வும்மை- ஆகியென வருவிக்கப்பட்டது.

உழுவையுகிருழக்குமேந்துகோட்டும்ப
லுரிவைமூடியொளியினைமறைத்துத்
தரைபடுமறுக்கந்தடைந்தனபோல
விண்ணுறவிரித்தகருமுகிற்படாங்கொடு

உழுவையுகிர் - அவன்புலியுகிரால்—உழக்கும் - உழக்குத
ற்கிடமாகிய—ஏந்துகோட்டு - உயர்ந்தகோட்டினையுடைய—உ
ம்பலுரிவைமூடி - யானையினதுதோலைபபோர்த்து—ஒளியினைம
றைத்து - சுடரினைமறைத்ததினால்—தரைபடு- பூமியின்கணுளு
ண்டாகிய—மறுககம் - மறுக்கங்கள்—தடைந்தனபோல -ஒரு
டைபட்டனபோல—விண்ணுற - விண்ணாகிய வடிவத்திற்பொ
ருந்துதலால்—விரித்தகருமுகிற்படாங்கொடு- அவ்வடிவிற்போ
ர்த்த துகிலாகிய மேகத்தினன் மூடப்பட் டொளிமறைந்தவன்
வடிவமாய பூமியின்கணுண்டாகிய மறுக்கங்களைத் தடுத்து,

சமஞ்செய்து சீராக்குங் கோல்போ லமைந்தொரு பாற்
கோடாமை சான்றோர்க்கணியென்றாற்போல வுவமையடையை
ப் பொருட்குங்கொள்க.

மறிதிரைப்பரவைப்புடைவயிறுகுழம்பக்
துலக்குமலையொருநாட்கலக்குவபோல
மண்ணகமுருகக்கனற்றுமழன்மேனியை

மறிதிரையொருநாள் - அவனொருநாண் மறியுந்திரையையு
டைய—பரவைபுடைவயிறு - கடலினிடம்—குழம்ப - குழம்பு
ம்படி—துலக்குமலை - விளங்காநின்றமலையினால்—கலக்குவபோ
ல - தேவர் பயன்கொள்ளக் கலக்கியதுபோலப் புனலாகியவடி
வத்தினால்—மண்ணகமுருக - அம்மண்ணாகியவடிவமுருகும்ப
டி—கனற்றும் - கனலப்பண்ணும்—அழன்மேனியை - அழலா
கியவடிவை யுடையரீ,

கலக்குவதுபோலக் கனற்றுமழ லெனவினையும் உருகவெ ன்வே புனல்வருவிக்கப்பட்டது, இது பய னுவமத்தின்பகுதி எ ன்னைக். கலக்கியதினு லுண்டாமமுதமுங் கனற்றுதலாலுண்டா கிய புனலுமொக்கும் எனத்தொழின்முகத்தாற் கூறினுரேனும் மாரியன்ன வண்கையென்றற்போல மழைத்தொழி லாகிய பெ. யலர்ப்பயந்த பொருளிடையிட்டுப்போ யுவமங்கொள்ளாதுதோ ற்றும் பொருளிரண்டு மொத்தமையிற் றெழிலுவமம் மெனப்ப டாது கொள்வார்க்குப்பயமொத்தலா லேயவுவமத்தின் வகையா யிற்று. வானின்றுலகம் வழங்கிவருதலாற் ருனமிழ்தமென் று ணர்ப்பாற்று, என்றமையாற புனலேயுமமுதமென்ருா-வினையெ ஞ்சகிளவியும் வேறுபல குறியவென்றதனுன் முன்னிலைக்குறிப் பு முற்றுப பெயரொச்சக்குறிப் பாயிற்று எவ்வயிற்பெயரும் வெ ளிபபடத்தோன்றி யவ்வியனிலையல் செவ்விதென்ப வென்பதனு ற்றேன்ரு வெழுவாய்வருவிககப்பட்டது.

எடுத்துமூடியெறிதிரைப்பழனத்துப்
பனிச்சிறுமைகொள்ளாமுளளணைமுளரி
வண்டொடுமலர்ந்தவண்ணப்போலக்
கண்ணுமகமுங்களிவரமலர்த்துதி

எடுத்துமூடிஎறிதிரை-திரைதள்ளிமறியாநின்றநீர்—பழனத் து-அப்பழனத்து—பனிச்சிறுமைகொள்ளா -பனியால்வாடாது —முள்ளணை-முளளையணையிலேயுடைய—முளரி- தாமரையான து—வண்டொடுமலர்ந்த-வண்டிருக்கயலாநத—வண்ணம்போ ல - தன்மைபோல—கண்ணுமகமுங்களிவர- அவள்கண்ணுமு கமுங்களிபெறும்படி—மலர்த்துதி - நின்கதிர்களால்வாட்டாது மலர்த்துவாயாக—எ-று.

எடுத்து உயர்ந்தெனினுமாம், கொள்ளாதென்பது குறை ந்துநின்றது, ஒடு - வேறுவினையொடு நில்லாங்கென்னு மருதக் கலியுள் முகந்தானே காட்டிக்கொடுக்கும் குறிப்பென்று மனத்தை முகமென்றமையால் இவர்முகத்தை மனமென்றார் மனத்தினுணர்ந்ததை முகங்காட்டலி னொற்றுமைபற்றித் துணியாத ற் சிறப்புநோக்கி யுயிர்க்களிபமைகண்ணினு முகத்தினு மேற்ற ப்பட்டது, மனத்தாமரையை மலர்த்துதியெனி னுவமைக் கொவ்வாமையுணர்க.

வானவனே மறுகினூற்போல மறுகச்சென்றனளாகலமூலா கிய வடிவையுடையநீ அவண்முகத்தைவாட்டாது மலர்த்துவா யாகவென வினைமுடிவுசெய்க. பின்னுறுதிபயபயினுங்கொடுமை யு மருமையும்பற்றிவாட்டாது மலர்த்துதியென்றாள். (௩௧)

## இன்னலெய்தல்.

இன்னலெய்தலென்பது- வெறியாடுதற்குத் தாயர்வேலனை யழைப்பக் கேட்டதலைமகள், இருவாற்றானும் நமக்குயிர்வாழு நெறியில்லையெனத் தன்னுள்ளேகூறி, இன்னலெய்தாநிற்றல். அதற்குச்செய்யுள்:—

அயர்ந்தும்வெறிமறியாவிசெகுத்தும்விளர்ப்பயலார்
பெயர்ந்துமொழியாவிடினென்னைபேசுவபோர்ந்திருவ
ருயர்ந்தும்பணிந்துமுணராதைம்பலமுன்னலரிற்
றுயர்ந்தும்பிறிதிலொழியினென்னதுந் துறைவனுக்கே.

ஆடியவெறியிற் கூடுவதறியா து
நன்னாறுங்கோதை யின்னலெய்திய து.

இ-ள். அயர்ந்தும்வெறி - வெறியைவிரும்பியாடியும்— மறி - மறியினது—ஆவிசெகுத்தும் - ஆவியைக்கெடுத்தும்—

பெயர்ந்தும் - பின்னும்—விளர்ப்பொழியாவிடின் - இறவேறு பாடொழியா தாயின்—அயலாரென்னைபேசுவ - அயலார்கூறு வனவென்னும்—பிறிதின் - வெறியாட்டாகியபிறிதினால்—ஒழி யின் - இவ்விளர்ப்பொழியுமாயின் துயரமுற்றும்—அத்துறை வனுக்குநாமென்னுதும் இருவாற்றானு முயிர்வாழ்தலரிது - யா ன்றலைவன் யானறலைவனென்று தம்முண்மாறுபட்ட இருவர் பிரமனுமாலுமாகியவிருவர்—போந்து - அரமிலைமையினின்றும் பெயர்ந்து தழற்பிழம்பாகிய தன்வடிவை யறியலுற்று—உயர்ந் தும் - ஆகாயத்தின் மேற்சென் றுயர்ந்தும்—பணிந்தும் - நிலத் தின்கீழ்ப புகுத்தாழ்ந்தும்—உணரானது - அறியப்படாதவ னது—அம்பலம் - அம்பலத்தை—உன்னலரில் - நினையாதாரை ப்போல—துயர்ந்தும் - துயரமுற்றும்—எ-று.

மறியறுத்தற்கு முன்னுரைத்ததுரைக்க. பெயர்ந்துமென மெலிந்தின்றது. உணரானென்றது செயப்படு பொருட்கண் வந்தது. தன்னைபபிரிதல் துன்பமாய் இன்றியமையாதயாம் இத் தன்மையமாகவும், அளிகின்றிலனென வுட்கொண்டு, அவனை நாமுன்னநெருங்க முயங்கு மன்பராமாறெல்லாம் இன்றென்னு மென்னுங் கருத்தால், என்னுதுமென்றாள். பிறிதுமொழியினெ ன்பது பாடமாயின், வெறியினற்றணியாதாதலின் இந்நோய்பி றிதென்று பிறர்மொழியினென்றுரைக்க. மெய்ப்பாடு - அசசத் தைச்சார்ந்த மருட்கை-பயன்- தலைமகள் தனனெஞ்சொடுசொ ல்லியாற்றுதல. (உஅஎ)

நேரிசையாசிரியப்பா.

வள்ளுறைநழித்துத்துளக்குவேன்மகனு
மன்புமயிற்கழுத்தும்மலையடியு
நெறப்டித்துறைகருங்குறிபிரேறு

கடுங்கனுருற்றபழங்கணன்னையரு
மயராவெறியிற்றண்டாவருநோ
யீயா துண்ணுநர்நெடும்பழிபோலப்
போகாக்காலைப்புணர்க்குவவென்னும்
நான்கெயிற்றெருத்தற் பிடர்ப்பொலிவணாப்பகை
யறுகால்குளிக்கும் துத்தொடையேந்த
முட்டாட்செம்மலர்நான்முகத்தொருவ
னெண்ணிநெய்யிறைத் துமணவழ்லோம்பப்
புவியளந் துண்டதிருநெடுமாலோ
னிருகரமடுக்கிப்பெறுநீர்வார்ப்ப
வொற்றையாழியன்முயலுடற்றண்சுட
ரண்டம்விளர்ப்பப்பெருவிளக்கெடுப்ப
வளவாப்புலன்கொள்விஞ்சையரொண்மரும்
வள்ளையிற்கருவியிற்பெரும்புகழ்விளைப்ப
முனிவர்செங்கரஞ்சென்னியாக்க
வுருப்பசிமுதலோர்முன்வாழ்த்தெடுப்ப
மும்முலையொருத்தியைமணந்துலகாண்ட
கூடற்கிறைவனிருதாளிருத்துங்
கவையாவென்றிநெஞ்சினர்நோக்கப்
பிறவியுங்குற்றமும்பிரிந்தனபோலப்
பிரமுநோயுமாறில்
வாரித்துறைவற்கென்றும்மே. ௩௨



வள்ளுறைகழித்துயா மென்றும்மே. பகுதி - வரைபொ ருட்பிரிதல், துறை - வெறிக்கின்னலெய்தல்.

தண்டாவருநோ
யீயா துண்ணுநர்நெடும்பழிபோல

(இதனது பதப்பொருள்.)

ஈயாதுண்ணுநர் - வழங்காதுண்பார்க்கு—நெடும்பழிபோல் - அதனால்வரும்பழிநீங்காததுபோல—தண்டாவருநோய் - நீங்காதுவருநோய்;

வள்ளுறைகழித்துத்துளக்குவேன்மகனும்

வள்ளுறைகழித்து - வலியவுறையினீக்கி—துளக்கு - திரியாநின்ற—வேனமகன் - வேலன்;

உமமையை யயர்தலோடுகூட்டுக.

அயராம்வெறியில்

அயராவெறியின் - வெறியாடியும்;

இன்னசை சில்லரிச்சிலம்பின் வள்வார் சிறுபறைபோல அயராவென்பது கல்லாக்களிப்பர் தலையாயரொன்பதுபோன்றது,உம்மைசிறபபு எச்சவும்மையுமாம், மறிசெகுத்துமென வருதலின்.

போகாக்காலை

போகாக்காலை - அதனாற்றீராதபோது;

அன்புமயிற்கழுத்தும்மலையடியு
நெறபிடித்துரைகருங்குறியிரெரு
நடுங்கஞருறறபழங்கணன்னையரும்

நெற்பிடித்து - பரப்பியநெல்லினை மூன்றிரண்டொன்று படபிடித்து—அன்பும் - முருகணங்கினவேலிது—மயிற்கழுத்தும் - கழுத்தினையுடைய மயிலிது—மலையடியும் - கோழிககொடியிது—உரைக்கும் - தோன்றுகின்றனவென்றுசொல்லும்—குறியிரெரும் - கட்டுவித்தி குறியினாற் றெய்வத்தினுயதென்றறிதலால்—நடுங்கு - அவருநடுங்குதற்குக் காரணமாகிய—அஞருற்ற - துன்பத்தினால்வந்த—பழங்கணன்னையரும் - மெலிவினையுடையதாயரும;

குறிக் கிலக்கணம் ரென்மூன்று மிரண்டுமொன்றும் படு கை. அஃதாவது - அன்புங்கொடியுமயிலுங் குயிலிதன்றேயென் னலாஞ் சொல்லிகூறன் சிமிற்றம்பலத்தானியலிதன்றே யென் னலாகா விறைவிற்ற சேய்கடவு மயிலிதன்றே கொடிவாரணங் காண்க வண்சூர்தடிந்த வயிலிதன்றேயிதன்றே றெல்லிற்றேன் று மவன்வடிவே யென்னும்பாட்டிற பேராசிரியர் குறிகலிலக்க ணமகூறுதற் கணுவகைகயை வேலென்றாற்போல வன்பென்றது வேலாயிற்று போரசெய்யாநின்ற வடியினையுடைய கோழியை ம லையடியென்ற ரன்மொழித்தொகை மயிற்கழுத்துப் பின்மொ ழிநிலையல் - மயிற்கழுத்துத் தோன்றியதெனினுமாம். உம்மை யெச்சவும்மை.

புணர்க்குவவென்னும்

புணர்கருவ - இங்ஙனஞ் சொல்லப்படுவன — என்னும் - என்னும்;

போகாக்காலை யென்னுமெனவினையயும்.

நான்கெயிற்றொருத்தற்பிடர்பபொலிவளைப்பகை
யறுகால்குளிகருமதுத்தொடையேந்த

நான்கெயிற்று - நான்குமருப்பினையுடைய — ஒருத்தல் - அ யிராபதத்தின் — பிடாப்பொலி - பிடரிற்பொலியும் — வளைப்ப கை - தேவேந்திரன் — அறுகால் - வண்டுகள் — குளிகரும் - மூடு தற்கிடமாகிய — மதுத்தொடை - மதுவினையுடைய மாலையினை — ஏந்த - ஏந்த;

வளைகருப் பகையாதலி னிந்திரனை வளைப்பகை யென்றார்- பனிப்பகை சூர்பபகை யென்றாற்போல.

முட்டாட்செம்மலர்கான்முகத்தொருவ
னெண்ணிசெய்யிறைத்துமணவழலோம்ப

முட்டாள் - முள்ளைத்தாளின்கணுடைய—செம்மலர் - சிவந்ததாமரையிலிருக்கும்—நான்முகத்தொருவன் - நான்கு திருமுகங்களையுடைய பிரமன—எண்ணி - விதிப்படி விசாரித்து—செய்யிறைத்து - செய்யினைவார்த்து—மணவழலோம்ப - மணவேளவித் தீயினைவளாகக;

தேவரன்றித் தெய்வமானிடராதலி னெண்ணி யென்றார்.

புவியளந்துண்டதிருநெடுமாலோ
னிருகரமடுக்கிப்பெறுநீர்வார்ப்ப

புவியளந்து - பூமியையளந்து—உண்ட - பின்னுகர்ந்த—திருநெடுமாலோன் - விட்டுணு—இருகரமடுக்கி - இருகையுங்கூட்டி—பெறுநீர்வார்ப்ப - உதகக்கிரியைபண்ண;

பெறுதற்கிடமாகியநீர் பெறுநீர்.

ஒற்றையாழியன்முயலுடற்றண்சுட
ரண்டம்விளர்ப்பப்பெருவிளக்கெடுப்ப

அண்டம்விளர்ப்ப - அண்டமெங்கும் விளங்கும்படி—ஒற்றையாழியன் - ஒற்றைவண்டியினையுடையவாதித்தனும்—முயலுடல் - உடலின் முயலினையுடைய—தணசுடர்- சந்திரனும்—பெருவிளக்கெடுப்ப - பெருவிளக்கேந்த;

பின்னோர் தனியாழி வெங்கதிரோன்றென்றார் பிறரும்.

அள்வாப்புலன்கொள்விஞ்சையரொண்மரும்
வள்ளையிறகருவியிறபெருமபுகழ்விளப்ப

விஞ்சையரொண்மரும் - விஞ்சையரொண்மரும்—அளவா - எட்டுத்தானங்களினு மந்தரத்தானங்களுக்குச் சொன்னவளவாக—புலன்கொள்-தொழில்கொள்ளும்படி போர்த்த—வள்ளையில் - தோலினையு மழகினையுமுடைய—கருவியில் - யாழின்—பெரும்புகழ்விளப்ப - மிக்கபுகழைவாசிப்ப;

புலன் சாதியொருமை யும்மையுமுருபுந்தொக்கன, புலன்க ளெனவே தானமெட்டாயிற்று. அவை நெஞ்சமுதலியனஇடை பிங்கலை யியக்கமறுத்து மூலாதாரமுதற் பிரமரந்தரமளவு மிய க்கமாக்கி நடுவேதொழில்கொள்ளப் பாடுதனமரபு-வள்-தோல்-விளக்கழலுருவினவிசி யுறுபச்சையென்றார் பாணற்றினும் கரு வியாழ்முனிவர்.

முனிவர்செங்கரஞ்சென்னியாக்க

முனிவர்- முனிவர்கள்—செங்கரஞ்சென்னியாக்க - சென் னியில் செய்யகரத்தைக்கூபப;

ஆக்கவெனவே கூப்ப வென்றாயிற்று.

உருப்பசிமுதலோர்முன்வாழ்த்தெடுபப

உருப்பசிமுதலோர்-உருப்பசிமுதலாகியபஞ்சவேசையர்—முன்வாழ்த்தெடுப்ப - பழையவாழ்த்தினைச்சொல்ல;

மும்முலையொருத்தியைமணந்துலகாண்ட
கூடற்கிறைவனிருதாளிருத்துங்
கவையாவென்றிநெஞ்சினர்

மும்முலையொருத்தியை - மூன்று முலையினையுடைய தடா தகையை—மணந்து - கல்யாணம்பண்ணி—உலகாண்ட - உல கினைப் புரந்த—கூடற்கிறைவன் - மதுரைக்கிறைவனுடைய—இருதாள்-இரண்டுபாதங்களையும், இருத்துங்கவையா-வேறுபடா திருத்துதற்கிடமாகிய—வென்றிநெஞ்சினர் - வென் றியினையுடைய நெஞ்சினர்;

கவைத்தலிருகூறுபடுதல், கவையாதென்பதுவிகாரம், வெ ன்றி புலன்களின்வழி மனத்தைவிடாமை.

நோக்கப்
பிறவியுங்குற்றமும்பிரிந்தனபோலப்

பிரமுநோயுமாறில்
வாரித்துறைவற்கென்னுதும்மே.

நோக்க - கருதிநோக்க —பிறவியும் - பிறவியும்—குற்றமும் - பிறந்ததனுல்வந்தகுற்றமும்—பிரிந்தனபோல - நீங்கினுற்போல—பீரமும் - பசலையும்—நோயும் - பசலை முதிர்ந்ததனுல் வந்த துன்பமும்—மாறில் - நீங்குமாயின்—வாரித்துறைவற்கு- கடற்றுறைவற்கு—என்னுதும் - யாமென்னுவேம் இருவாற்ருனு முயிர்வாழ்த லரிதென்க—எ-று.

நோய்-துன்பம்-நோயுமின்பமு மிருவகை நிலையினென்ருற்போல பீரமுதிர்நோய் பசப்புறுபருவரல்போல போன்றது சுட்டாய்நின்றது. உம்மை சிறப்பும்மை,எவனென்னும்வினுபெயர் என்னென்ரு மீண்டின்மை குறித்துநின்றது, பிரிதற்கரிய யாம் வருந்தவுமிரங்கிலனெனககருதி முன்கூடியவன்பெல்லா மின்றென்னுமென் னுங் கருத்தானென்னுது மென்ருள்.

வேலன்வெறியாடியும் நோய்நீங்காதாயி னன்னையர்புணர்ப்பது மென்னும். அந்நோய்நீங்கிற் கடற்றுறைவர்க் கியாமென்னுவே மிவ்விருவாற்ருனு முயிர்வாழ்த லரிதென வினைமுடிவு செய்க. ஏகாரம் ஈற்றசை. (ருஉ)

---

## நெஞ்சொடுநோதல்.

நெஞ்சொடுநோதலென்பது - மீளநினைந்த தலைமகன், பின்னும் பொருண்மேற்செல்லாநின்ற வுள்ளத்தனுய்நின்று மீளமாட்டாது, இவ்விருண்டனுள் இப்பொழுது நீயேதுக்குப் போகமுயல்கின்ருயெனத் தன்னெஞ்சொடுநொந்து கூருநிற்றல். அதற்குச்செய்யுள்:—

பொன்னணியீட்டிய வோட்டருநெஞ்சமிப் பொங்கு
வெங்கா,னின்னணிநிற்குமிதென்னென்பதேயிமையோ
ரிறைஞ்சு, மன்னணிதில்லை வளநகரன்னவன் னந்நடை
யாண்; மின்னணிநுண்ணிடைக் கோபொருட்கோநீ வி
னைகின்றதே. ௩௪௨

வல்லழற்கடத்து மெல்லியலேகினர்ந் து
வெஞ்சுடர்வேலோனெஞ்சொடுநொந்த து.

இ-ள். பொன்னணி - பொற்றிரளை—ஈட்டிய - ஈட்டுவக
ன்—ஓட்டரு - ஓட்டந்தரும்—நெஞ்சம் - நெஞ்சமே—நீவினை
கின்றது - இப்பொழுது நீவினைகின்றது—இமையோர் - இமை
யோர்—இறைஞ்சும் - சென்றுவணங்கும்—மன் - மன்னனது
—அணி - அழகிய—தில்லை - தில்லையாகிய—வளநகரன்ன - வ
ளநகரையொக்கும்—அன்னந்நடையாள்- அன்னத்தினடைபோ
லு நடையையுடையாளது—மின் - மின்போலும்—நுண்ணி
டைக்கோ - நுண்ணியவிடைக்கோ—பொருட்கோ - ஈடுத்துக
கொண்டபொருட்கோ விரண்டிற்கு மல்லவோ—இப்பொங்கு-
இவ்வழற்பொங்கு—வெங்கானில் - வெங்கானத்தை—நண்ணி-
சேர்ந்து—நிற்கும் - போவதும்மீள்வதுஞ்செய்யாதுநிற்கின்ற
—இது - இஃது—என்னென்பது - யாதென்றுசொல்லப்படுவ
து—எ-று.

நண்ணியென்பது நணியெனவிடைக்குறைந்துநின்றது. அ
ணியென்றுபிரித்து வெங்கானின்க ணணித்தாக நிற்பதென்று
ரைப்பினு மமையும். இமையோரிறைஞ்சுந் தில்லைவள நகரென
வியையும். (௩௪௨)



நேரிசையாசிரியப்பா.

பொருள்செயலருத்தியிலெண்வழிதடைந்து
நாற்றிசைநடக்குமணங்கினைவெய்வித்
தலைதருதட்டைக்கரும்புறமலைமடல்
கடற்றிரையுகளுங்குறுங்கயன்மானுங்
கடுங்கான்றள்ளித்தடைதருநெஞ்சநு
கயிலைத்தென்பாற்கானகந்தனித்த
தேவர்நெஞ்சுடைக்குந்தாமனாயேனின்
மணக்கோறுரந்தகுணக்கோமதனைத்
இருக்குளமூலைத்தகட்டாமணாகொடு
தென்கீழதிசையோனுக்கிய,தனிமுதற்
றிருமாமதுரையெனுந்திருப்பொற்றொடி
யென்னுயிரடைத்தபொன்முலைசசெபயி
னளவமரின்பங்கருதியோவன்றிப்
புறன்பயன்கொடுக்கும்பொருட்கோவாழி
வளர்முலையின்பெனின்மறிததுநோக்குமதி
பெருமபொருளின்பெனிற்பெரிதுதடையின்றே
யாதினைக்கருதியதொன்றை
யோதல்வேண்டுமவாழியபெரிதே. ௩௩

—*—

பொருள்செயலருத்தியி வாழியபெரிதே. பகுதி - பொருள்வயிற்பிரிதல, துறை - நெஞ்சொடுநோதல்.

பொருளசெயலருத்தியில்
அலைதரு
கடுங்கான்றள்ளி

(இதனதுபதப்பொருள்)

பொருள்செயல் - பொருளைத் தேடுதலையுடைய—அருத்தியில் - ஆசையினால—அலைதரும் - என்னை யலைத்தலைச்செயயும்—கடுங்கான்றளளி - கடியகானிடத்திற் செலுத்தி;

எண்வழிதடைந்து

எண்வழிதடைந்து - அணங்கினை எண்ணுதுபண்ணி;

எண்ணும்வழியைத் தடைபடுத்தியதெண்ணுது பண்ணிய தென்க.

நாற்றிசைநடக்குமணங்கினவையவத்
தட்டைக்கரும்புறமலைமடல்
கடற்றிரையுகளுங்குறுங்கயன்மானும்
அருத்தியில்
எண்வழிதடைதருநெஞ்சம்
வாழிய

நாற்றிசைநடக்கும் - பார்க்கும்பொழுது நான்குதிசையினும் வெளிப்படும்—தட்டைக்கரும்புற - கரும்புறழுங்கிலும்—மலை - அழகியமலையும்—மடல் - பூவிதழும்—கடற்றிரை - திரைக்கடலில்—உகளும் - திரியும்—குறுங்கயல்மானும் - குறியகயலும்போலும்—அணங்கினவையவத்து - கரும்பெழுதிய தோளும் அழகியமுலையும் வாயும் கண்ணுமாகிய வணங்கினுடைய வவையவத்தால்வரும்—அருத்தியில் - ஆசையில்—எண்வழிதடைதரும் - பொருளீட்டுதலையெண்ணுதுபண்ணும்—நெஞ்சம் - நெஞ்சமே—வாழிய - நீவாழ்வாயாக;

அருத்தியிலெண் வழியென்றதை யவையவத்திற்குங் கூட்டுக உவமை ஆய தூவியனமென வணியயிற் பேடையெனத் தூதுணும்புறவெனத் துதைந்த நின்னெழினலமென்றாற் போலக் கொள்க.

கயிலைத்தென்பாற்கானகந்தனித்த
தேவர்கெஞ்சடைக்குந்தாமரையேவின்
மணகோறூரந்தகுணக்கோமதனை

கைலைத்தென்பால் - கைலைமலைக்குத் தெற்காம்—கானக ம் - காட்டிடத்தில்—தனித்த - தேவியைவிட்டுப் பிரிந்த— தேவர்நெஞ்சு - தேவர்மநத்தை—உடைக்கும் - உடைத்தற்குக் காரணமாகிய—தாமரையேவின்- தாமரையம்பையேவினாற்போ ல—மணக்கோலூரந்த - சிலதாமரை யம்பையேவுதற் கேதுவாய் —குணம் - குணததினையுடைய—கோமதனை - கோவாகிய மன் மதனை;

மணக்கோலென்றமையின் மலராயிற்று. தூரந்தகுணம்-ஏ வுதலான வந்தசிலையொலியெனினுமாம்.

திருநகருள் முளைத்தகட்டாமரைகொடு
தென்கிழத்திசையோனுக்கியதனிமுதற்
றிருமாமதுரையெனுந்திருபபொற்றொடி.

திருக்குளம் - அழகிய நெற்றியில்—முளைத்த - தோன் றிய—கட்டாமரைகொடு - கண்ணாகிய தாமரையைக்கொண்டு— தென்கிழ்த்திசையோன்ஆக்கிய - நெருபபாக்கிய—தனிமுதல் - ஒப்பற்றமுதலானவன்—திருமா - அழகினையும் பெருமையினை யுமுடைய—மதுரையெனும - மதுரை போலும்—திருபபொற் றொடி - அழகினையுஞ் செல்வத்தினையுமுடைய பொற்றொடி;

சிறபபுநிலைக்களனுக வுவமைவாநதது.

என்னுயிரடைத்தபொன்முலைச்செப்பி
னளவமரின்பங்கருதியோவன்றிப்
புறன்பயன்கொடுக்கும்பொருட்டோ

என்னுயிர் - என்னுயிராகிய—அடைத்தபொன் - பொன் னையடைத்த—முலை - முலையாகிய—செப்பினளவமர் - செப்பி னளவமர்ந்த—இன்பங்கருதியோ - இன்பத்தைக்கருதியோ—

அன்றி - அதுவன்றி—புறன்பயன் - பின்பயனை—கொடுக்கும்- கொடுக்கும்—பொருட்கோ - பொருளைக்கருதியோ;

கருதியென்பதனைப் பொருளைக் கருதியோவெனவுங் கூட்டுக. பொருட்கென்ப துருபுமயக்கம் அளவமர்தல்- அல்குல்போல வளர்கின்றதென்றற்போலநின்றது.

ஆழி
வளர்முலையின்பெனின்மறித்துநோக்குமதி
பெரும்பொருளின்பெனிற்பிறிதுதடையின்றே
யாதினைகருதியதொன்றை
யோதல்வேண்டுமபெரிதே.

ஆழிவளர் - தடைபட்டதியாதினால் இவற்றுள் வட்டமாக வெழாநின்ற—முலையின்பெனில் - முலையால்வரு மின்பத்தினானெனில்— மறித்துநோக்கு - திரும்பிச் செல்வாயாக—பெரும் - அதுவன்றிமிகுந்த—பொருளின்பெனில் - பொருளால்வரு மின்பத்தினெனில்—பிறிதுதடையின்றே - அதற்கு வேறுதடையிலையாதலால்—யாதினைகருதியதொன்றை - நீகருதியதை—ஓதல்வேண்டும்பெரிது - பெரிதாகச்சொல்வாய்—எ-று.

மதி முன்னிலையசைச்சொல் யாதினையென்பதுருபுமயக்கம்.

பொருளாசையாற் காணிற்றள்ளி யணங்கினை யெண்ணாது பண்ணி யவயவத்தாசையாற் பொருளீட்டுதலை யெண்ணாது பண்ணுநெஞ்சமே வாழ்வாயாக வின்பத்தைக் கருதியோ பொருளைக்கருதியோ தடைபட்டதியாதனு லிவற்றுளின்பத்தினாலெனின் மீள்வாயாக பொருளானெனிற் செல்வாயாக வாதலா லிவற்றுட் கருதிய தொன்றைச் சொல்வாயாகவென வினைமுடிவு செய்க.

இதுபோயு மின்பமுமென்னும் பொருளியற் சூத்திரத்துமு ப்புடையதுபோ லுணர்வுடையதுபோல மறுத்துரைப் பதுபோ னெஞ்சொடுபுணர்த்து மென்பதனு லுணர்வுடையது போலவு முறுப்புடையதுபோலவு மறுத்துரைபபது போலவுங்கூறினர். அணங்கினையெண்ணுது பணணிபபொரு ளீட்டுதலை யெண்ணு துபவனுறு நெஞ்சேயென்றமையா னுணர்வுடையது போலவுங் கூறிச் செல்வாயாக மீள்வாயாகவென் றமையா னுறுபபுடைய துபோலவுஞ் செல்வாயாகவென் றமையான் மறுத்துரைபபது போலவுங்கொளக. (௯௯)

---

## வே ழ ம் வி னு த ல்.

வேழம்வினுதலென்பது - குறைகூறத் துணியாநின்றவன் என்குறையின்னதென்று இவளுக்கு வெளிப்படக்கூறுவே னுயி ன் இவள் மறுக்கவுங்கூடுமென உட்கொண்டு, என்குறை இன் னதென்று இவடானே யுணருமளவும கரந்தமொழியாற் சில சொல்லிப் பின்குறையுறுவதே காரியமென, வேட்டை கருதிச் சென்றுனுக அவ்விருவருழைச்சென்றுநின்று, தன்காதறேன்ற இவ்விடத்தொரு மதயானைவரக் கணடீரோவென் வேழம் வினு வாநிற்றல். அதற்குச்செய்யுள் —

இருங்களியாயின்றியானிறுமாப்பவின்பம்பணிவோர்
மருங்களியாவனலாடவல்லோன்றில்லையான்மலையீங்
கொருங்களியார்ப்பவுமிழ்மும்மதத்திரு கோட்டொருநீ
ள், கருங்களியார்மத யானையுண்டோவரக் கண்டதுவே.

ஏழையரிருவரு மிருந்தசெவ்வியு ள்
வேழம்வினுஅய் வெற்பன்சென்ற து.

இ-ள். பணிவோர்மருங்கு - அடியவரிடத்தே யவரோடுகூ டி—இருங்களியா - பெரிய களிப்பையுடை யேனாய்—இன்றியா னிறுமாப்ப - யானின்றிறுமாக்கும்வண்ணம்—இன்பம் - இன்ப த்தை—அளியா - எனக்களித்து—அனலாடவல்லோன் - தீயா டவல்லோன்—தில்லையான் - தில்லையான்—மலையில் - அவனது மலையின்—ஈங்கு - இவ்விடத்து—ஒருங்களியார்ப்ப - அளிக ளொருங்கார்ப்ப—உமிழ் - உமிழப்படாநின்ற—மும்மதத்து - மூன்றுமதத்தையும்—இருகோட்டு-இரண்டுகோட்டையுமுடை ய—நீள் - நீண்ட—கரும் - கரிய—களியார் - களியார்ந்த—ஒரு மதயானை - ஒருமதயானை—வர - வராநிற்ப—கண்டுண்டோ - கண்டதுண்டோ உரைமின்—எ-று.

மருங்கிறுமாப்பவெனக் கூடிற்று. அனலாடவென்பது அ னலோடாடவெனவிரியும். ஆர்ப்ப வரவெனககூட்டுக. ஆர்ப்பவு மிழுமெனினுமமையும். நீட்சி- விலங்குணடாகிய நெடுமை களி உள்ளச்செருக்கு மதயானை-மதமிடையறுதயானை. (௫௨)

நேரிசையாசிரியப்பா.

தன்னுடலன்றிப்பிறிதுண்கனையிருள்
பகல்வலிக்கொதுங்கியதோற்றம்போலப்
பெருநிலவுகான்றநீறுகெழுபரப்பி
லண்டநாடவர்க்காருயிர்கொடுத்த
கண்டக்கறையோன்கண்டருநுதலோன்
முன்னொருநாளிறைப்படையுடன்று
செழியனடைத்தசென்னிபாட
வெள்ளருங்கருணையினள்ளிருணடுநா
ளவனெனத்தோன்றியருஞ்சிறைவிடுத்த
முன்னவன்கூடன்மூதூரன்ன

வெண்ணகைச்செவ்வாய்க்கருங்குழன்மகளிர்
செம்மணிகிடந்தநும்பசும்புனத்துழையால்
வாய்சொரிமழைமதத்தழைசெவிப்புழைக்கைக்
குழிகட்பரூஉத்தாட்கூர்ங்கோட்டொருத்தல்
சினைதழைவிளைத்தபழுமரமென்ன
வறுகாற்கணமும்பறவையுங்கணையு
மேகமும்பிடியுந்தொடர
வேகியதுண்டேற்கூறுவிர்புரிந்தே. ௩௪

---*---

தன்னுடலன்றி கூறுதிர்புரிந்தே. பகுதி - மதியுடம்படுத்த்ல், துறை - வேழம்வினுதல். *

தன்னுடலன்றிபபிறிதுண்கனையிருள்
பகல்வலிகொதுங்கியதோற்றம்போலப்
பெருநிலவுகான்றநீறுசெழுபரபபி
லண்டநாடவர்ககாருயிர்கொடுத்த
கண்டக்கறையோன்கண்டருநுதலோன்

(இதனதுபதப்பொருள்.)

தன்னுடலன்றி - ஆதித்தன்றன்னுடலையன்றி—நீறுசெழு பரபபில் - நிலபபரப்பில்—பெருநிலவுகான்ற - மிகுந்த நிலவை க்கான்ற—பிறிதுண் - பிறிதுடலை மறையாநின்ற—கனையிருள் - செறிந்தவிருளானது—பகல்வலிக்கு - ஆதித்தன் வலிக்கா ற்ருது—ஒதுங்கியதோற்றம்போல - அவனிடத் தொதுங்கிய தோற்றம்போல—அண்டநாடவர்க்கு - தேவர்கட்கு—ஆருயிர் - அவர்களாறபெறுதற்கரிய வுயிரை—கொடுத்த - கொடுத்தலை ல்வந்த—கண்டக்கறையோன் - கண்டத்திற்றேன்றுங் கறுப் பையுடையோனும்—கண்டருநுதலோன - கண்ணையுண்டாககி ய நுதலினையுடையோன்,

இது இல்பொருளுவமை - ஆதித்தனுக்குப் பிறிது மதிபிறி தாகுபெயர் - உண்டற்குரிய வல்லாப்பொருளை யுண்டனபோலக்கூறலு மரபேயாமென் றமையாற் பிறிதுண்கனையிருளென்றார் வாயவன்காக்கையுங் கூகையுங்கூடியென்றாற்போலக் கண்டகக றையோனென்பது நவம்பற்றி மயங்கிவந்தது.

முன்னொருநாளினாற்படையுடன்று
செழியனடைத்தசென்னிபாட
வெள்ளருங்கருணையினள்ளிருணடுநா
ளவனெனத்தோன்றியருஞ்சிறைவிடுத்த
முன்னவன்கூடன்மூதூரன்ன
வெண்ணகைச்செவ்வாய்க்கருங்குழன்மகளிர்

செழியன்-பாண்டியன்—நாற்படை - சதுரங்கசேனையால்—உடன்று-போர்செய்து—அடைத்த-முன்காவலிடப்பட்ட—சென்னி - சோழன்—பாட - பாட—முன்னொருநாளில் நள்ளிருணடுநாள்-ஒருநாட்செறிந்த விருளினையுடையயாமத்தில்—அவனெனத்தோன்றி-பிறராயிராமற் பாண்டியனெனததோன்றி—எள்ளருங்கருணையின் - இகழ்தற்கரியகருணையினால்—அருஞ்சிறைவிடுத்த - விடப்படாத சிறையினைவிட்ட—முன்னவன் - எல்லாப்பொருட்கு முன்னானவன்—கூடன் - மதுரையாகிய—மூதூரன்ன - முதியவூர்போன்ற சிறப்பினையுடைய—வெண்ணகை - வெள்ளியநகையினையும்—செவ்வாய் - சிவந்த வாயினையும்—கருங்குழல் - கரிய குழலினையுமுடைய—மகளிர் - மகளிர்,

நாற்படை - ஆற்றியந்தண ரென்றாற்போல. நான்கு குணத்தினையுடைய படையெனினுமாம். அது - மறமானமாண்ட வழிச்செலவுதேற்ற மெனநான்கேமம் படையென்பதனு னறிக. நாற்படை - கூலிபடை-துணைப்படை- நாட்டுப்படை - காட்டுப்

படை யெனினு மாம. உடன்றடைத்தவென்பது அகனமர்ந்து செய்யாளுறையுமென்றுறபோலநின்றது. அடைத்த வென்னும் பெயரெச்சஞ் செயபபடுபொருள்கொண்டது - மகளிரண்மை விளி.

செம்மணிகிடந்தநம்பசும்புனத்துலறி
வாய்சொரிமழைமதத்தழைசெவிபபுழைக்கைக்
குழிகட்பருஉத்தாட்கூன்கோட்டொருத்தல்
சினைதழைவிளைத்தபழுமரமென்ன
வறுகாற்கணமும்பறவையுங்கணையு
மேகமும்பிடியுநதொடர
வேகியதுண்டேற்கூறுதிர்புரிநதே.

சொரிமழை - மழைபோலச் சொரியாநின்ற—மதம் - மதத்தினையும்—தழைசெவி - தழைத்தசெவியினையும்—புழைக்கை- துளையுடைக்கையினையும்—குழிகட் - குழிநதகண் ணினையும்—பருஉத்தாட் - பெரியகாலினையும்—கூன்கோட்டு - வளைந்தகோட்டினையுமுடைய—ஒருத்தல - யானையானது—அறுகாற் கணமும் - வண்டின்கூட்டமும்—பறவையும் - பறவைகளு மித்ததைத்தொடர்ந்தாற்போலத் தொடரவும்—கணையும் - என்னம்பும்—மேகமும் - மேகமும்—பிடியும்தொடர் - பிடிதொடர்ந்தாற் போல்—தழைவிளைத்த - இலைதழைத்த—சினை - கோட்டினையுடைய—பழுமரமென்ன - பழுமரம்பின்றொடரவும்—உலறிவாய் - வாய்விட்டலறி—செம்மணிகிடந்த - சிவந்தமாணிக்கங்கள் கிடந்த—நம்பசும்புனத்து - நம்முடைய பசிய புனத்திடத்து—ஏகியதுண்டோ - வந்ததுண்டோ—புரிந்து-விரும்பி—கூறுதிர்-சொல்வீராக—எ-று.

பழுமரம் பெயராய்நின்றது. எனவென்பதனைப் பின்னுங் கூட்டி யும்மையிரண்டுமொழுக.

மகளீர் யானையானது - நும்புனத்திடத்து வந்ததுண்டோ விரும்பிச்சொல்வீரொன வினைமுடிவுசெய்க. (௩௪)

---

உலகின்மேல்வைத்துரைத்தல்.

உலகின்மேல்வைத்துரைத்தலென்பது - ஆற்றுமைகூறி அதுவழியாகநின்று ஆடவர் தம்முள்ளமாகிய மீன்மகளிரது கண் வலைப்பட்டால் அதனைப்பெறுதற்கு வேறுபாயமில்லாதவிடத்து மடலூர்ந்தும் அதனைப்பெறுவரொன உலகின்மேல்வைத்துக் கூறுநிற்றல். அதற்குச்செய்யுள்:—

காய்சினவேலன்னமின்னியல்கண்ணின்வலைகலந்து
வீசினபோதுள்ளமீனிழந்தார்வியன்றென்புலியூ
ரீசனுசாந்துமெருக்குமணிந்தோர்கிழிபிடித்துப்
பாய்சினமாவெனவேறுவர்சீறூர்ப்பனைமடலே. (௭௪)

புலவேலண்ணல் புனைமடலேற்
றுலகின்மேல்வைத் துய்த்துரைத்தது.

இ-ள். காய்சின - காய்சினத்தையுடைய—வேலன்ன-வேல்போலும்—மின்னியல் - ஒளியியலும்—கண்ணின் - கண்ணாகிய—வலைகலந்து - வலையை மகளிர்கலந்து—வீசினபோது - வீசினபோது—உள்ளமீனிழந்தார் - அவ்வலைப்படுதலான் உள்ளமாகிய மீனையிழந்தவர்கள்—வியன் - பெரிய—தென்புலியூர் - தென்புலியூர்க்கு னுளாகிய—ஈசன - ஈசனுடைய—சாந்தும்-நீற்றையும்—எருக்கும் - எருக்கம்பூவையும்—அணிந்து - அணிந்து—ஓர்கிழிபிடித்து - ஒருகிழியைக் கையிற்பிடித்து—பாய்சின -

பாயவல்ல சினத்தையுடைய—மாவென் - மாவென—பனைமடல் - பனைமடலை—சீறூர் - சீறூர்க்கண்—ஏறுவர் - ஏறுவர்—தம்முள்ளம்பெறுதற்கு வேறுபாயமில்லாதவிடத்து—எ-று.

மின்னியல்வேலென்று கூட்டினுமமையும். இன்-அல்வழிச்சாரியை, கண்ணென் வலையென்பதூஉம் பாடம், மகளிரென ஒருசொல்வருவியாது கருவி கருத்தாவாகஉரைப்பினுமமையும். உளமிழந்தவர் உள்ளம்பெறுமளவும் தம்வயமன்றி மடலின் வயத்தராய்நிற்றலால் கருவி கருத்தாவாகக்கொள்க. சார்ந்தும் எருக்குமென இரண்டாகலின் ஈசனவெனப் பன்மையுருபுகொடுத்தார். பாய்சின மென்புழிச்சினம் - உள்ளமிகுதி, உய்த்துரைத்தது-குறிப்பாலுரைத்தது. (௭௪)

---

நேரிசையாசிரியப்பா.

இருளொடுதாரகையிரண்டினைமயக்கிக்
குழலெனமலரெனமயல்வரச்சுமந்து
வில்லினைக்குனித்துக்கணையினைவாங்குப
புருவங்கண்ணெனவுயிர்விடப்பயிற்றி
மலையினைத்தாங்கியமுதினைக்கடைந்து
முலையெனச்சொல்லெனவரவரவைத்து
மெய்யினைப்பரப்பிப்பொய்யினைக்காட்டி
யல்குலிடையெனநெஞ்சுழலக்கொடுத்து
முண்டகமலர்த்திமாந்தளிர்சூடி
யடியெனவுடலெனவலமாகிநீஇ
சூரிவீழ்ந்தநெறிச்சடைமுனிவர்
சருக்கங்காட்டுமருமறைசொல்லி
யுள்ளங்கறுத்துக்கண்சிவந்திட்ட
மந்திரத்தழற்குழிதொடுவயிறுவருந்தி

முன்பினின்றபேழ்வாய்ப்புலியினைக்
கைதைமுட்செறித்தகூரெயிற்றரவினைக்
காருடல்பெற்றதீவிழிக்குறளினை
யுரிசெய்துடுத்துச்செங்கரந்தரித்துச்
செம்மலர்பழித்ததாட்கீழ்க்கிடத்தி
யருணடம்புரிந்ததேவர்நாயக
னொருநாண்மூன்றுபுரந்தீக்கொளுவப்
பொன்மலைபிடுங்கிக்கார்முகமென்ன
வளைத்தஞான்றுநெடுவிண்டடையக்
கால்கொடுத்தன்னகந்திகணிமிர்ந்து
நெருக்குபொழிற்கூடலன்னசெம்மாளிர்
கண்ணெனுந்தெய்வக்காட்சியுட்பட்டோர்
வெண்பொடியெருக்கமென்புபனைகிழியினைப்
பூசியணிந்துபூண்டுபரிகடவிக
கரத்ததாக்கியன்னோ
வருத்திமீட்பர்நிலைவல்லோரோ. ௩௫

—*—

இருளொடுதாரகை நிலைவல்லோரோ. பகுதி - மடல், துறை - உலகின்மேல்வைத்துரைத்தல்.

இருளொடுதாரகையிரண்டினைமயக்கிக
குழலெனமலரெனமயல்வரசுமந்து

(இதனதுபதப்பொருள்.)

மயல்வர - எல்லாருமயங்குமபடி—இருளொடுதாரகை- இருளுந்தாரகையுமாகிய—இரண்டினைமயக்கி - இரண்டினையுமயக்கி—குழலென - குழலெனவும்—மலரென - மலரெனவும்—சுமந்து - சுமந்து;

இது உண்மையுவமை, ஒடு எண்ணொடுவெண்ணும்மைதொக்கது.

வில்லினைக்குனித்துக்கணையினைவாங்கிப்
புருவங்கண்ணெனவுயிர்விடப்பயிற்றி

உயிர்விட - நோக்கினருயிர்விடும்படி—வில்லினைக்குனித்து - வில்லினைவளைத்து—கணையினைவாங்கி - கணையையேற்று—புருவங்கண்ணென - புருவமெனவுங்கண்ணெனவும்—பயிற்றி- பயிலப்பண்ணி;

மலையினைத்தாங்கியமுதினைக்கடைந்து
முலையெனச்சொல்லெனவரவரவைத்து

முலையெனவர-முலையென்றுசொல்லவரும்படி—மலையினைத்தாங்கி - மலையினைத்தாங்கி—சொல்லெனவர- சொல்லென்று சொல்லவரும்படி—அமுதினைக்கடைந்து—அமுதினைக் கடைந்துவைத்து;

மெய்யினைப்பரப்பிப்பொய்யினைக்காட்டி
யல்குலிடையெனநெஞ்சுழலக்கொடுத்து

அல்குலென - அல்குலுண்டென்னும்படி—மெய்யினைப்பரப்பி - உண்மையைக்காட்டி—இடையென - இடையில்லையென்னும்படி—பொய்யினைக்காட்டி - பொய்யினைக் காட்டி—நெஞ்சுழலக்கொடுத்து - நோக்கினர் நெஞ்சுதடுமாறப்பண்ணி,

உண்டில்லையெனவிருக்க, அல்குலுண்மையி னுண்மையைப்பரப்பி யிடையென்றுஞ் சட்புலனா காமையிற் பொய்யினைக்காட்டியென்றுங் கூறினர்.

முண்டகமலர்த்திமாந்தளிர்முடி
யடியெனவுடலெனவலமரநீஇ

அடியென - அடியென்னும்படி—முண்டகமலர்த்தி - தாமரையைமலரப்பண்ணி—உடலென - மேனியென்னும்படி—

மாந்தளிர்மூடி - மாந்தளிரைப்போர்த்து—அலம்ரச்தீஇ - நோக்கின லமரப்பண்ணி;

இவையெல்லாம் விகாரம்பண்ணி யுருவகமாக்கலின் விகாரவுருவகமாம்.

> மூரிவீழ்ந்தநெறிச்சடைமுனிவர்
> சருக்கங்காட்டுமருமறைசொல்லி
> யுள்ளங்கறுத்துக்கண்சிவந்திட்ட
> மந்திரத்தழற்குழிதொடுவயிறுவருந்தி
> முன்பினின்றபேழ்வாய்ப்புலியினைக்
> கைதைமுட்செறித்தகூரெயிற்றரவினைக்
> காருடல்பெற்றதீவிழிக்குறளினை
> யுரிசெய்துடுத்துச்செங்கரந்தரித்துச்
> செம்மலர்பழித்ததாட்கீழ்க்கிடத்தி
> யருணடம்புரிந்ததேவர்நாயகன்

மூரிவீழ்ந்த - முதன்மையாகவீழ்ந்த—நெறிச்சடை - நெறித்தலையுடைய சடையினையுடைய—முனிவர் - தாருகவனத்திருடிகள்—கண்சிவந்து - கண்சிவப்ப—உள்ளங்கறுத்து - உள்ளம்வெகுண்டு—தழற்குழிதொட்டு - ஓமகுண்டந்தோண்டி - —சருக்கங்காட்டும் - அதனிடத்துச் சருக்கங்காட்டும்—அருமறைசொல்லியிட்ட - அரியவேதமந்திரத்தைச்சொல்லியிட்ட—வயிறுவருந்திமுன்பினின்ற - ஓமத்தீயி லுண்டாக்குதலரிய—பேழ்வாய் - பல்வலியோடுகூடியின்றபெரியவாயினையுடைய—புலியினை - புலியினை—உரிசெய்துடுத்து - உரித்துடுத்து—கைதைமுட்செறித்த - தாழைமுள்ளினைச் செறித்தாற்போன்ற—கூரெயிற்றரவினை - கூரியபல்லினையுடைய பாம்பினை—செங்கரந் தரித்து - செய்யகரத்திலணிந்து—காருடல்பெற்ற - கரிய வுடலினையுடைய—தீவிழி - நெருப்புமிழ்ந்த விழியினையுமுடைய—குறளி

னை - முயல்கனை—செம்மலர்ப்பழித்த - செந்தாமரையைப்பழித்த—தாட்கீழ்க்கிடத்தி - திருவடிக்கீழேகிடத்தி—அருள் - எல்லார்க்கும் கிருபை பண்ணுகின்ற—நடம்புரிந்த - திருநடஞ்செய்த—தெய்வநாயகன் - தேவர்நாயகன்;

அருணடம் அருளுதற்குக் காரணமாகிய நடம் பஞ்சாக்கரமே திருக்கூத்தாதலின் வயிறுநடு கடல்வண்ணன் பண்டொருநாட்கடல் வயிறு கலக்கினையென்றார். சிலப்பதி காரத்தினும் எண்ணும்மைதொக்கது இது பெயாவினை கிரனிலை.

ஒருநாண்மூன்றுபுரந்தீக்கொளுவப்
பொன்மலைபிடுங்கிக்கார்முகமென்ன
வளைத்தன்றுநெடுவிண்டடையக்
கால்கொடுத்தன்னகந்திகணிமிர்ந்து
நெருக்குபொழிற்கூடலன்னசெம்மகளிர்
கண்ணெனுந்தெய்வக்காட்சியுட்பட்டோர்

மூன்றுபுரம் - மூன்றுபுரமும்—ஒருநாள் - ஒருநாளையில்—தீக்கொளுவ - தீப்பற்ற—பொன்மலைபிடுங்கி - மகமேருவைப்பிடுங்கி—கார்முகமென்னவளைத்த - வில்லெனவளைத்த—ஞான்று - அன்று—நெடுவிண்டடைய - நெடியவாகாசம் வீழாதுதடைபடும்படி—கால்கொடுத்தன்ன - காலாகக்கொடுத்தாற்போல—கந்திகணிமிர்ந்து- கமுகுகளுயர்ந்து—நெருக்கு - நெருங்குகின்ற—பொழில் - சோலைசூழ்தற்கிடமாகிய—கூடலன்ன - மதுரைபோன்ற—செம்மகளிர் - அழகினையுடையபெண்களுடைய—கண்ணெனும் - கண்ணாகிய—தெய்வம்-தெய்வத்தினது—காட்சியுட்பட்டோர் - தோற்றத்திலகப்பட்டோர்;

இம்மையுகமென்னு மகத்திற்காட்சியை அழகென்றமையா லழகி லகப்பட்டெனினுமாம். தெய்வம், சூரரமகளிர் அவர்கள் தங்களைவழிபட் டணைந்தாரை வருத்தாமையு மணையாதார்

ளை வருத்துதலு முடைமையிற்கண்ணெனும் தெய்வமென்றார் இனைத்தெனவறிந்த வும்மைதொக்கது நெருங்குதல் - நெருக்கு தல்விகாரம், ஓரசை அரிநிலைபெறுதென்னு மகப்பாட்டிற் றோ ற்றத்தைக் காட்சியென்றமையாற் காட்சி தோற்றமாயிற்று.

நிலைவல்லோரே.

நிலைவல்லோர் - நிறைற்குமாட்டாதார்;

உள்ளம்பெறுமளவுந் தம்வயமன்றி மடல்வயத்தராய் நிற் றற்கு வல்லமையுடையோரெனப் பொருள்கூறிற் செய்யுளாய் மறையாகாது வழக்காய் உடன்பா டுணர்த்திற்று வேண்டுமெனெ ன்றுசொன்ஞன் வில்லவலானென்றாற்போல.

வெண்பொடியெருக்கமென்புபனைகிழியினைப
பூசியணிந்துபூண்டுபரிகடவிக
கரத்ததாக்கியன்றோ
வருத்திமீட்பர்

வெண்பொடிபூசி - உள்ளம்பெறுதற்குவேறுபாயமில்லாத விடத்து திருநீற்றைப்பூசி—எருக்கணிந்து-எருக்கம்பூவையணி ந்து—என்புபூண்டு - எலும்பினைப் பூண்டு—பனைபரிகடவி- பரி யென்ப பனைமடலைச்செலுத்தி—கிழியினைக்கரத்ததாக்கி - கிழி யைக்கையிற்பிடித்து—அந்நோவருத்தி - அவளைப்பெறவேண்டு மென்னும் வருத்தமுடையவுள்ளத்தை—மீட்பர் - தன்வயமா க்குவர்;

அருத்தியாகுபெயர்.

மகளிர்காட்சியுள் லகப்பட்டு நிற்றற்குமாட்டாதார் பூசிய ணிந்து பூண்டு கடவியாக்கி யந்நோவையுடைய வுள்ளத்தை மீ ட்பரென வினைமுடிவுசெய்க. (௬௫)

## அல்லகுறியறிவித்தல்.

அல்லகுறி யறிவித்தலென்பது - குறியல்லாத குறியெதிர்ப்பட்டு மீண்டமை, பிற்றைஞான்று தலைமகன் சிறைப்புறத்து வந்துநிற்ப, தோழி தலைமகளுக்குக் கூறுவாள்போன்று, அன்னத்தின்மேல்வைத்து அறிவியாநிற்றல். அதற்குச்செய்யுள்:—

மின்னங்கலருஞ்சடைமுடியோன்வியன்றில்லையன்னா
யென்னங்கலமரலெய்தியதோவெழின்முத்தந்தொத்திப்
பொன்னங்கலர்புன்னைச்சேக்கையின்வாய்ப்புலம்புற்று
முற்று, மன்னம்புலருமளவுந்துயிலாதழுங்கினவே. ()

வல்லியன்னவ ளல்லகுறிப் பா
டறைபுனற்றுறைவற்குச்சிறைப்புறத்துணர்த்தது.

இ-ள். மின்னங்கலரும் - ஒளியவ்விடத்துவிரியும்—சடைமுடியோன் - சடையானியன்ற முடியை யுடையவனது—வியன்றில்லையன்னாய் - அகன்ற தில்லையை யொப்பாய்—எழில் - எழிலையுடைய—முத்தந்தொத்தி - அரும்பாகிய முத்தந்தொத்தி—பொன்னங்கலர்புன்னை - அவ்விடத்துத் தாதாகிய பொன்மலரும் புன்னைக்கணுண்டாகிய—சேக்கையின்வாய் - தன்சேக்கையிடத்து—அன்னமுற்றும் - அன்னமெல்லாம்—புலம்புற்று - துன்புற்று—புலருமளவும் - புலருயளவும்—துயிலாது - துயிலாது—அழுங்கின - ஆரவாரித்தன—அங்கெய்தியது - அவ்விடத்தெய்தியதாகிய—அலமரல் - அலமரல்—என் - என்னும் அறிகின்றிலேன்—எ-று.

மின்னங்கலருமென்பதற்கு மின்னவ்விடத்தலர்ந்தாற்போலுஞ் சடையெனினுமமையும். என்னங்கலமர லெய்தியதோவென்பதற்கு என்ன வலமரலாண் டெய்திற்றோவென்று கூட்டியு

ணைப்பினுமமையும், இப்பொருட்கு என்னவென்பது கடைக்கு றைந்துநின்றது. முத்தந்தொத்துதலும் பொன்மலர்தலுமாகிய உருப்பின்றெழில் முதன்மேலேறிநின்றன. சேக்கையின்வாய முங்கினவெனவினையயும். நெடும்பொழுது துயின்றில வென்பாள் புலருமளவுமென்றாள். பிற்றைஞான்று பகற்குறி வந்துசிற்ப க் கூறிஞளெனினுமமையும். அழுங்கல் - இரக்கமெனினுமமை யும். அறைப்புனல் - அறைதலையுடையபுனல். மெய்ப்பாடு - அழுகை. பயன் - அல்லகுறிப்பட்டமை தலைமகற் குணர்த்துதல். இனித்திணைசெய்தல். (௯௭௫.)

---

நேரிசையாசிரியப்பா.

வற்றியநரம்பினெடுங்குரற்பேழ்வாய்க்
குழிவிழிப்பிறழ்பற்றெற்றறகருங்காற்
றுளிப்போந்தின்றருமயிர்ப்பெருந்தலை
விண்புடைத்தப்புறம்விளங்குடற் கணங்கினங்
கானம்பாடிச்சுற்றிநின்றுடச்,
சுழல்விழிச்சிறுநகைக்குடவயிற்றிருகுழைச்
சங்கக்குறுந்தாட்பாரிடங்குனிப்பத்
தேவர்கண்பனிப்பமுனிவர்வாய்குழறக்
கல்லவடத்திரண்மணிவாய்த்தண்ணுமை
மொந்தைகல்லலசுதுத்திரிபேங்கக்
கட்செவிசுழலத்தாழ்சடைநெறிப்ப
விதழிதாதுதிர்ப்பப்பிறையமுதுகுக்க
வெள்ளியம்பலத்துட்டுள்ளியபெருமான்
கூடன்மாநகரன்னபொற்கொடி
யிரவிக்கண்ணியுவைகறைதாறு
மலமாலென்னைகொலறிந்திலம்யாமே
வெண்முத்தரும்பிப்பசும்பொன்மலர்ந்து

கடைந்தசெம்பவளத்தொத்துடன்காட்டு
மிரும்புகவைத்தன்னகருங்கோட்டுப்புன்னைச்
சினைமுகமேந்தியவிணாகொள்வாய்க் குடம்பையி
னைக்காப்புளினம்வெண்மையிடமறைக்குஞ்
சிறைவிரிதூவிச்செங்காலன்னங்
குறும்பார்ப்பணைக்குமபெடையொடுவெரீஇச்
சேவலுமினமுழ்குழுங்
காவின்மாறித்துயிலழுங்குதற்கே. ௩.௬

—*—

வற்றியகாம்பு துயிலழுங்குநகர்க்கே. பகுதி - இரவிற்குறி, துறை-அல்லகுறியறிவித்தல

வற்றியகாமபினெடுங்குரற்பேழ்வாய்க்
குழிவிழிபிறழ்பற்றெற்றற்கருங்காற்
றாளிபபோநதின்றருமயிரப்பெருந்தலை
விண்புடைத்தப்புறமவிளங்குடற்குணங்கினங்
கானம்பாடிச்சுற்றிநின்றாட

(இதனதுபதப்பொருள்.)

நெடுங்குரல் - மிகுந்த சத்தத்தினையும்—பேழ்வாய் - பெரியவாயினையும்—குழிவிழி - குழிந்த கண்ணினையும்—பிறழ்பல்-நிரையொவ்வாப்பல்லினையும—வற்றியகாம்பின் - வற்றியகாம்பினையும்—தெற்றற்கருங்கால் - தெற்றுதலையுடைய கரியகாலினையும்—தாளிப்போந்தின்-பனைத்தலைவிரித்தாற்போல—சருமயிர-விரிந்தமயிரினையுடைய—பெருந்தலை - பெரியதலையினையும்—விண்புடைத்தப்புறம் - விண்ணின்றும் புறம்புடைத்து—விளங்குடல்—விளங்காநின்ற வுடலினையுமுடைய—குணங்கினம்-பேய்கள்—கானம்பாடி - கானத்தைப்பாடி—சுற்றிநின்றாட - சூழ்ந்துநின்றாட,

எண்ணும்மை தொகக்குடைய வென்பதனோடு முடிந்தது. கருமைபெருமையுமாம், "தாளிபபனை- பணைவிசேடம், போந்தின் றரு மயிரொழிலுவமம் புடைத்து தட்டியெனினுமாம். கான மிசைபபாட்டன்று

சுழல்விழிச்சிறுநகைகுடவயிற்றிருகுழைச்
சங்கக்குறுந்தாட்பாரிடங்குனிப்ப

சுழல்விழி - சுழன்றகணணினையும்—சிறுநகை - சிறியந கையினையும்—குடவயிற்று - குடமபோன்ற வயிற்றினையும்— இருகுழைச்சங்கம - இரணடு சஙகக்குழையினையும்—குறுந்தா ள் - குறியதாளினையுமுடைய—பாரிடங்குனிபப - பூதமாட; குழைச்சங்கம் - பினமொழித்தொகை.

தேவர்கணபனிபப

தேவர் - தேவாகளெல்லாரும—கண்பனிபப - ஆநநதமாகி க கண்ணீர்செரிய.

கண்ணுருபெயர், பனிபபவெனச் சினைவினை முதலோடுமு டிந்தது குடமொழுகு மென்றற்போல நின்றதன்று.

முனிவர்வாயகுழற

முனிவா - இருடிகளெல்லாம்—வாய்குழற - வாய்குழற, குழறலெனச் சினைவினைமுதலோடு முடிந்தது.

கல்லவடத்திரணமணிவாய்த்தண்ணுமை
மொந்தைகல்லலசுதத்திரியேங்க

கல்லவடத்திரள் - கல்லவடத்திரளென்னும் வாச்சியமு ம்—மணிவாய் - அழகிய வாயினையுடைய—தண்ணுமை - தண் ணுமையென்னும் வாச்சியமும்—மொந்தை - ஒருகட்பறையா கியமொந்தையென்னும் வாச்சியமும்—கல்லலகு - கல்லலகெ

ன்னும் வாச்சியமும்—துத்திரி - துத்திரியென்னும் வாச்சியமு
ம்—ஏங்க - முழங்க,

ஏங்தவெனககருவி - கருத்தாவாய்நின்றது. ஏங்கொலி நீர்
ஞாலமென்றா பிறரும.

கடசெவிசுழலத்தாழ்சடைநெறிபப
விதழிதாதுதிாபபபிறையமுதுகுகக
வெள்ளியம்பலத்துட்டுளளியபெருமான்
கூடன்மாநகரன்னபொறகொடி

கட்செவிசுழல - புனைந்தபாம்புசுற்ற—இதழிதாது - கொ
ன்றைமலர் தாதினை—உதிாபப - உதிர்ப்ப—பிறையமுதுகுக்க-
பிறை யமுதினைத்துளிபப—தாழ் - இவைதங்கிய—சடைநெறி
பப - சடையானதுமிறுமபடி—வெள்ளியமபலத்துள் - வெள
ளியம்பலத்தில்—துள்ளிய - மாறியாடிய—பெருமான் - பெரு
மானுறையும்—கூடன்மாநகரன்ன - கூடன்மாநகாப் பொலிவு
போன்ற—பொற்கொடி - பொலிவினையுடையாய்;

கட்செவி - பொறகொடி யுன்மொழித்தொகை. சுழல வுதி
ர்ப்ப வுகுப்ப நெறிபபவென்பன குளிநிறையமழை பெய்ததுபோ
ல நின்றன.

குழுங்காவின்

குழுங்காவில் - நாஞ்சூழ்ந்து விளையாடுதற்கிடமாய காவி
டத்தில்,

எக்கர்ப்புளினம்வெண்மையிடமறைகக்குந்
சிறைவிரிதூவிச்செங்காலன்னம்
குறும்பார்ப்பணைக்கும்பெடையொடுவெரீஇச்
சேவலுமினமும்

எக்கர் - இடுமணலாகிய—புளினம் - மணற்குன்றின்—
வெண்மையிடமறைக்கும் - நிறம்தெரியாதுமறைக்கும்—சிறை-

[illegible]றகினையும்—விரிதூவி - விரிந்த சூட்டினையும்—செங்கால்-செவ்விய காலினையுமுடைய—அன்னச்சேவலும் - அன்னச்சேவலும்—இனமும் - அதனினமும்—குறும்பார்ப்பணக்கும் - குறிய பார்ப்பினையணைகரும்—பெடையொடு - பெடையொடு—வெரீஇ - வெருவி,

ஒடுவொருவினை - எண்ணெடுவுமாம்.

இரவிக்கண்ணியவைகறைகாறும்

இரவிக்கண்ணிய - ஆதித்தனுதிக்கும்—வைகறைகாறும் - விடியற்காலமளவும்,

இரவியாகுபெயர், கங்குல்வைகிய வறுதியாதலின் வைகறையென்றார்.

வெண்முத்தரும்பிப்பசும்பொன்மலர்ந்து
கடைந்தசெம்பவளத்தொத்துடன்காட்டு
மிரும்புகவைத்தன்னகருங்கோட்டுப்புன்னைச்
சினைமுகமேந்தியவிணர்கொளவாய்கருடம்பையின்

வெண்முத்தரும்பி - அரும்பாகிய வெண்முத்தரும்பி—[illegible]ம்பொன்மலர்ந்து - தாதாகிய பசியபொன்மலர்ந்து—கடை[illegible]கொத்தாகிய வொப்பமிட்ட—செம்பவளத் தொத்துட[illegible]ம் - செம்பவளக் கொத்தெல்லாங் காட்டும்—இரும்புக[illegible] - இரும்புகவை பட்டாற்போன்ற—கருங்கோட்டு-[illegible]கோட்டினையுடைய—புனனை - புன்னையினது—சினைமுக[illegible]த்தில்—ஏந்திய - வாயாவெடுத்த—இணர்கொள[illegible]குடம்பையின் - மலராற் சேக்கையாகக்கொண்ட கூட்டி[illegible];

[illegible]ரும்புதலும்மலர்தலும் காட்டுதலுமாகிய வுறுப்பின்றொ[illegible]ன்மேலேற்றினன ஒப்பமிட்ட பவளமும் பொன்னு

முத்துடனரும்பி யலர்ந்தாற்போன்ற பூங்கொத்தினைக் காட்டு தற்கிடமாகிய வெளினுமாம. அது மலர்ந்ததென்பது புகழ்புரி நதில்லிலோரக இல்லையென்றாற்போல மலர்ந்தென விகாரமாய்க் குணந்தான் வெளிப்பட்ட கொவ்வைச்செவ்வாயிக் கொடியிடை யென்றாற்போலநின்றது. முத்தோடு பொன்பவளமழுத்த மூடப்புன்னைக்கிழென்றார். சிற்றகத்தியத்தினும் காவிற்கூட டுகேிய கவவிக்கொண் டிருந்தனவென்று சிந்தாமணியிற் கூறிய வதனு லன்னம்பூவாற் கூடெடுத்தல்பெற்றும்.

மாறித்துயிலழுங்குதற்கே.

மாறித்துயிலழுங்குதற்கு - துயில்கொள்ளா தாரவாரித்த ற்கு;

ஏகாரம் ஈற்றசை. அழுங்கலிரக்கமுமாம்.

அலமரலென்னைகொலறிகிலம்யாமே

அலமரல் - அவ்விடத்தெய்திய வலமரல்—என்னைகொல்—என்னும்—அறிந்திலம்யாமே- யாமறிகின்றிலம்—எ-று.

கொல் அசை.

பொறகொடிசூழுங் காவிலன்னமு மினமும்பெண்டைனேர் வெருவிய புலருமளவுங் கூட டிற் றுயில்கொள்ளா தாரவாரித்த றகவ்விடத் தெய்திய வலமரலென்னை மறிகின்றிலமென வினை முடிவுசெய்க. புலருமளவுமென்றது பிற்றைஞான்று பகற்குறி வந்துநிற்பக் கூறினுளெனினுமாம். (௩௪)

---

## நலம்புனைந் துரைத்தல்.

நலம்புனைந் துரைத்தலென்பது - கிளவிவேட்டு வருந்தக்கண்ட தலைமகள் மூரன்முறுவல்செய்ய, தலைமகன் அதுபெற்றுச் சொல்லாடாமையா லுண்டாகிய வருத்தநீங்கி, நுமதகன்ற மருதநிலத்துக் குறிஞ்சிநிலத்து இவள்வாய்போல நாறும் ஆம்பற்பூக்க ளுளவோவென அந்நிலத்துவண்டோடு வினவாநிற்றல். அதற்குச்செய்யுள்.—

கூம்பலங்கைத்தலத்தன்பரொன்பூடுருகக்குனிக்கும்
பாம்பலங்காரப்பரன்றில்லையம்பலம்பாடலரிற்
றேம்பலஞ்சிற்றிடையீங்கிவடீங்கனிவாய்கமழு
மாம்பலம்போதுளவோவளிகாணும்மகன்பணையே. ௧௧

பொங்கிழையைப புணர்நலம்புகழ் ந்
தங்கதிர்வேலோ னயாவுநீங்கிய து.

இ-ள். அளிகாள் - வண்டுகாள்—நும்மகன்பணை - நுமதகன்றமருதநிலத்து—கூம்பலங்கைத்தலத்து - கூம்புங் கைத்தலங்களையுடைய—அன்பர் - அன்பரது—என்பூடுருக - என்புமுள்ளுருக—குனிக்கும் - கூத்தாடாநின்ற—பாம்பலங்கார - பாம்பாகியவணியையுடைய—பரன் - பரமனது—தில்லையம்பலம் - தில்லையம்பலத்தை—பாடலரில் - பாடாதாரைப்போல—தேம்பலஞ்சிற்றிடை - தேம்புஞ் சிறியவிடையையுடைய—இவள்-இவளது—தீங்கனிவாய் - இனியதாகிய கனித்த வாய்போல—கமழும் - நாறும்—ஆம்பலம்போதுளவோ - ஆம்பற்பூக்களுளவோ சொல்லுமின்—எ-று.

[illegible]லும் அம்மும் அல்வழிச்சாரியை, பாம்பலங்காரம் [illegible] மெ[illegible]ன்றது. ஈங்கிவளென்பது ஒருசொல். கனிவாய் - கனி

போலும் வாயெனினுமமையும்.புனைநலமென்றது புனையப்பட்ட வியற்கைநலத்தை அயர்வுநீங்கியது. சொல்லாடாமையி னுண்டாகிய வருத்தநீங்கியது. மெய்ப்பாடு - உவகை-பயன் - நயப்புணர்த்துதல். இயற்கை யன்பினானும் அவள் குணங்களாற் றோன்றிய செயற்கை யன்பினானும் கடாவப்பட்டு நின்ற தலைமகன் தனதன்புமிகுதியை யுணர்த்துதல் நயப்புணர்த்துத லென்பது. (கக)

நேரிசையாசிரியப்பா.

அருடருங்கேள்வியமையத்தேக்கப்
பற்பலவாசான்பாங்குசெல்பவர்போன்
மூன்றுவகையடுத்ததேன்றருகொழுமலர்
கொழுதிப்பாடுங்குணச்சுரும்பினங்கா
ளுளத்துவேறடக்கிமுகமன்கூறாது
வேட்கையினீயிர்வீழ்நாட்பூவினத்துட்
காருடற்பிறையெயிற்றரக்கனைக்கொன்று
வச்சிரத்தடக்கைவரைப்பகைசுமந்த
பழவுடற்காட்டுந்தீராப்பெரும்பழி
பனிமலைபயந்தமாதுடன்றீர்த்தருள்
பெம்மான்வாழும்பெருநகர்க்கூட
லொப்புறுபொற்றொடிச்சிற்றிடைமடந்தைதன்
கொலையினருள்ளமுங்குறைகொளவிருண்டு
நானநீவிநாண்மலர்மிலைந்து
கூடியுண்ணுங்குணத்தினர்கிளைபோ
னீழுச்செறிந்துநெய்த்துடல்குளிர்ந்து
கருங்குழற்பெருமணம்போல
வொருங்குமுண்டோபேசுவிரெமக்கே. கூஎ

---

அருட்டருங்கேள்வி பேசவிராமகசே. பகுதி-இயற்கை, துறைநலப்புனைந்துரைத்தல்.

அருட்டருங்கேள்வியமையத்தேக்கப்
பற்பலவாசான்பாங்குசெல்பவர்போன
மூன்றுவகையடுத்ததேன்றருகொழுமலர்
கொழுதிபபாடுங்குணச்சுரும்பினங்காள்

(இதனதுபதபபொருள்.)

அருட்டரும் - கற்றவறிவன்றி யருளேவிளைகரும்—கேள்வி-கேள்வியாலுயவறிவினை—அமையத்தேக்க - நிறைத்தடங்கும்படி—பற்பலவாசான் - பலபலவாசாரியன்—பாங்கு- இடத்து—செல்பவர்போல் - சென்று கேட்கின்றவர்போல—மூன்றுவகையடுத்ததேன்றரு - உண்டதேனன்றிப் பலமலர்தருந்தேனையுண்டமையும்படி கோட்டுப்பூ கொடிபபூ நீரப்பூவென்னு மூன்றுவகையாகவடுத்த—கொழுமலர் - கொழுவியமலர்களை—கொழுதிப்பாடும் - கோதிப்பாடாநிற்கும்—குணம் - குணத்தினையுடைய—சுரும்பினங்காள் - வண்டினங்காள்;

உண்டதேனுக்குக் கற்றவறி வுவமையது வருவிக்கப்பட்டது மலர்த்தேனுக்குவமை கேள்வியாலுயவறிவு-கேள்வியாகுபெயர் மூவகைப்பூவிற்கும் பலவாசிரியனுவமை தேககியமைவரவென்பதனைப பொருட்குங்கொள்க. செல்பவரெனக் காரியமாகக் கூறினர், மயக்கத்தா னெதிர்காலச்சொன் னிகழ்கால முணர்த்திற்று. நடைப்பாடலம புனைவார் நினைவாரொன்றாற்போல ஆசிரியனென்ப தொருமை பன்மைமயக்கம் கேட்கின்றார் - மகிழ்ச்சியெய்தினாற்போலப்பாடும் வண்டு மகிழ்ச்சியெய்துமெனத் தொழிலுவமங் கொள்ளக்கிடந்தது இணைருழ்த்துநாளு மலரினையர் கற் றுணரவிரித் துனையாதாரொன்றாற்போல.

உளத்துவேறடக்கிமுகமன்கூறாது
வேட்கையினீயிர்வீழ்நாட்பூவினத்துள்

உளத்துவேறடக்கி - ஒருநிலத்துவண்டாயினும் மநத்தினடு வாகக் கண்டிருக்க—வேட்கையின் - வேட்கையாக—முகமன் கூறாது - முகமன்சொல்லாது—நீயிர்வீழ் - நீங்கள்சேரத்தங்கும்—நாட்பூவினத்துள் - நாண்மலர்க்கூட்டத்துள்;

இதனுனில மொன்றுதல் பெற்றும்.

காருடற்பிறையெயிற்றரக்கனைக்கொன்று
வச்சிரத்தடக்கைவரைபபகைசுமந்த
பழவுருக்காட்டுந்தீராபபெருமபழி

காருடல் - கரியவுடலினையும்—பிறையெயிற்று - பிறைபோன்ற வெயிற்றினையுமுடைய—அரக்கனை - அரக்கனை—கொன்று - கொன்றதினுல்—வச்சிரம - வச்சிராயுதத்தை யுடைத்தாய—தடக்கை - தடக்கையினையுடைய—வரைபபகை - இந்திரன்—சுமந்த - சுமந்தும்—பழவுரு - பழைய வடிவினை—காட்டும் - காட்டுதற்குககாரணமாகிய—தீராபபெரும்பழி - தீராதபெரும்பழியினை;

பழவுருககாட்டுதல் - சொல்லபபட்ட வடிவத்தைக்காட்டுதல் தீராப்பழி யொருகாலத்தினுந்தீராத பிரமகத்தி வீரகத்தியாதலிற பெரும்பழியென்றுர் உம்மை-சிறப்பும்மை.

பனிமலையந்தமாதுடன்றீர்த்தருள்
பெம்மானவாழுமடெருகர்க்கூட
லொபபுறுபொற்றெடிச்சிற்றிடைமடந்தைதன்
தொலையினருள்ளமுங்குறைகொளவிருண்டு
நான்கிவிநாண்மலர்பிலைந்து
கூடியுண்ணுமுங்குணத்தினாகிளைபோ

நீடிச்செறிந்துநெய்த்துடல்குளிர்ந்த
கருங்குழற்பெருமணம்போல
வொருங்குமுண்டோபேசுவிரெமக்கே.

பனிமலேயயாந்த - இமயவனைபெற்ற—மாதுடன் - உமையு டன்கூடி—தீர்த்தருள் - தீர்த்தருள்செய்யாநின்ற—பெம்மான் வாழும் - பெம்மான்வாழாநிற்கும—பெருநகர் - பெரியநகராகி ய—கூடலொப்புறு - மதுரையைப்போலும்—சிற்றிடை - சிற் றிடையினேயும்—பொற்றொடி - பொன்னுற்செய்ததொடியினே யுமுடைய—மடந்தைதன் - மடந்தைதனது—கொலேயினருள் ளமும் - கொலேசெய்வாருள்ளமும்—குறைகொள - குறைய— இருண்டு - இருண்டு—நானநீவி - புழுகினைப்பூசப்பட்டு—நா ண்மலர் - காலத்துக்கேற்றமலர்களே—மிலேந்து - அணிந்து— கூடியுண்ணும் - இருவகைவிருந்தி னரையுங்கூட்டி நுகர்தற்கு க்காரணமாகிய—குணத்தினர் - குணத்தினேயுடையார்—கிளே போனீடி - கிளேநீண்டாற்போனீண்டு—செறிந்து-செறிந்து— நெய்த்துடல்குளிர்ந்த - நெய்த்துடல் குளிர்ச்சி பெற்ற—கருங் குழல் - கரியகுழலில்—பெருமணம்போல - மிகுந்த வாசம்போ ல—ஒருங்குமுண்டேல் - மணக்கும் பூக்களுண்டாயின்—பேசு விரெமக்கு - நீங்களெமக்குச் சொல்வீராக—எ-று.

இருவகையன்பினுனுஞ் சொல்லப்பட்டுநின்ற தலேமகனவ ன் பெருநாணின ளாதலினன்பு மிகுதியை யுவகையினுல் வண் டொடு கூறினனென்க. இது நோயு மின்பமுமென்னுஞ் சூத்தி ரத்தா னமுகைபற்றிக் கூறியதன்று வண்டுந் தும்பியும் நான்க றிவினவே பிறவுமுளவே யக்கிளேப்பிறப்பேயென்னுஞ் சூத்திர த்தி னுன்கறிவன்றி யையறிவுகூறிற் றிலரேனும் வாராததனுல் வத்து முடித்தலென்னு முத்தியாற் பிற்கூறிய மாவுமாக்களு மையறிவென்பவென்னுஞ் சூத்திரத்திற் செவியறிவுங் கூறினர்

ஆதலின் முன்னிலையாக்கினார்-மங்கைநல்லவர் கண்ணுமனமும் பொன்போன்றெங்குமோடி யிடாறுஞ்சுரும்புகாள் வண்டுகான் மகிழ்தே னினங்காண்மது வுண்டுதேக்கிடு மொண்மினிநீட்டங் காளென்றாற்போல.

சுரும்பினங்காண் முகமன்கூறாது நீங்கள்சேரத்தங்கு நாட் பூவினுண் மடந்தைதன் குழற்பெருமணம்போல வுண்டே லெ மக்குப் பேசவீரொன வினைமுடிவுசெய்க. (௩௭)

---

நாணிழந்து வருந்தல்.

நாணிழந்துவருந்தலென்பது - உடன்கொண்டுபோகைக் குக் காரணங்கேட்ட தலைமகள், ஒருநாளுமென்னைவிட்டுநீங்கா து என்னுடனேவளர்ந்த பொலிவுடைத்தாகிய நாண் கற்பினை திர்சிற்கமாட்டாது தன்னைவிட்டுநீங்காத என்னைக்கழிவதாக ம களிர் எழுபிறப்பின்கண்ணுங் குடியிற்பிறவா தொழிகவெனத் தானதற்குப் பிரிவாற்றாமையான் வருந்தாநிற்றல். அதற்குச்

மற்பாய்விடையோன்மகிழ்புலியூரொன் றெனும்வளர்ந்த
பொற்பார்திருநாண்பொருப்பர்விருப்புப் புகுந்துநுந்தக்
கற்பார்கடுங்கால்கலக்கிப்பறித்தெறியக்கழிக
விற்பாற்பிறவற்கவேழையர்வாழியெழுமையுமே. ௨0௮

கற்புநாணினு முற்சிறந்தமையி ற்
சேணெறிசெல்ல வாணுதறுணிந்த து.

இ-ள். மல் - வளத்தையுடைய—பாய் - பாயும்—விடை யோன் - விடையையுடையவன்—மகிழ் - விரும்பும்—புலியூர்- புலியூரில்—என்றெனும் - என்றேனுந்தோன்றி—வளர்ந்த - எ

காமான்றரித்த - கையின்மானைத்தரித்த—பெருமான்-பெருமான்—இறைவன் - இரணியவன்மன்—பொன் - செல்வத்தினை—பழித்து - வெறுத்து—எடுத்த - உயர்ந்த—இன்புறு-இன்பம்பெறுதற்குக்காரணமாகிய—திருவடி - திருவடியை—உளம் விழுங்காத - உள்ளத்தடக்காத—களவினர்போல - கூடாவொழுக்கத்தாரை நீக்குதல்போல,

பெருமானது திருவடியெனவியையும் இறைவனதடியென்னிற்பொன்னைப்போன் றுயர்ந்தவடியென்க.

என்னுயிரொடும்வளர்ந்தபெருநாண்டறியினை
வெற்பன்காதற்காலுலைவேலையின்

என்னுயிரோடும் - என்னுயிரோடுகூடி—வளர்ந்த - வளரவந்த—பெருநாண் - பெரியநாணாகிய—தறியினை - தூணினை—வெற்பன் - தலைவன்மேல்—காதல் - யான்வைத்தகாதலாகிய—காலுலை - காற்றுலைக்கும்—வேலையில் - பொழுதில்,

வலியுடைக்கற்பினெடுவளிசுழற்றிக்
கட்புலங்காணாதுகாட்டைகெடவுந்தலின்

வலியுடை - அந்நாணினும் வலியுடைய—கற்பின் - கற்பாகிய—நெடுவளி - பெருங்காற்று—சுழற்றி - சுற்றி—கட்புலங்காணாது - மிகவுமென்னிடத்திற்காணாது—காட்டை - காட்டையென்னுங்காலத்தில்—கெட - கெடும்படி—உந்தலின் - புறத்துத்தள்ளுதலால்,

கட்புலம் - மீமிசைபோன்றது. கணமெட்டுக்கொண்டது இலவம் - இலவமெட்டுக்கொண்டது காட்டையென்க.

என்போலிங்கிலைநின்றவர்படைக்கும்
பேறுங்கொழிக

என்போல் - என்னைப்போல — இற்கிலேசின்றவர் - நாணழி யுகிலேயுணின்றவர் — படைக்கும்பேறு - படைத்ததனுல்வரும் பி றவியிடத்துய்ய — ஆங்கொழிக- ஐயோகுடியிற் பிறத்தலொழிக; படைக்கும்பேறெனவே பிறவியாயிற்று.

பெருநாண்கற்பின
ரெற்பேறுடையராயிற்
கற்பிற்றோன்றுக்கடனுருகவே.

பெருநாண்கற்பினரொற்பேறுடையராயில் - என்னைப்பெற் றவர்பெருநாணேடுகூடிய கற்பினையுடையராயில் — கற்பிற்றோ ன்று - கற்பிறத்தலையுடையகுடியிற்பிறந்த — கடனுருகவே - மு றைமையையுடையராக; கற்பினெதிர்சிற்கமாட்டாத நாண்பிரிய வதற்காற்றுமையான் வருந்தாசின்றுள் — எ-று.

களவினைாீக்குதல்போல நாணுகியதூணினைக் காதலாகி யகாற்றுலேக்கும் போதிற்கற்பாகிய காறறுத்தள்ளுதலா னென் னைப்போன்றவர் பிறவியிடத்தையோ வையோகுடியிற்பிறத்த லொழிகவென்னைப் பெற்றவருடையராயிற் குடியிற்பிறந்தமு றைமையையுடையராகுகவென வினைமுடிவுசெய்க. (நடஅ)

---

தோழியியற்பழித்துரைத்தல்.

தோழியியற்பழித்தலென்பது - பாணன்வரவுரைத்த தோ ழி, இவள்வருந்த அயலாரிடத்து நல்குதலால் எம்முடையவன் எல் இன்றுதக் கிருந்திலனெனத் தலைமகனை யியற்பழித்துக் கூ றிற்றல். அதற்குச்செய்யுள்:—

திக்கினிலங்குதிண்டோளிறைதில்லைச்சிற்றம்பலத்துக்
கொக்கினிறகதணிந்துநின்றுடிதென்கூடலன்ன

வக்கின்னகையிவளையவயல்வயினல்குதலாற்
றக்கின்றிருந்திலனின்றசெவ்வேலெந்தனிவள்ளலே.

தலைமகனைத் தகவிலனென ச்
சிலைநுதற்பாங்கி தீங்குசெப்பிய து.

இ-ள். திக்கின் - திககின்கண்—இலங்கு - விளங்காநின்ற—திண்டோள் - திண்ணியதோள்களையுடைய—இறை - இறைவன்—தில்லைச்சிற்றம்பலத்து - தில்லையிற் சிற்றம்பலத்தின்கண்—கொக்கிணிறகணிந்து - கொககினிறகதனையணிந்து—நின்றுருடி - நின்றுடுவோன்—தென்கூடலன்ன - அவனது தெற்கின்கணுண்டாகிய கூடலையொக்கும்—அக்கு - அக்குமணிபோலும்—இன்னகையிவள் - இனியநகையையுடைய விவள்—நைய - வருந்த—அயல்வயின் - அயலாரிடத்து—நல்குதலால் - நல்குதலால்—நின்ற - எல்லாரானு மறியபபட்டுநின்ற—செவ்வேல் - செவ்வேலையுடைய—எம் - எம்முடைய—தனிவள்ளல்-ஒப்பில்லாதவள்ளல்—தக்கின்றிருந்திலன் - இன்று தககிருந்திலன்-எ-று.

அயல்வயினென்பதறகுப பொருணசை யுள்ளத்தராகலிற் காமத்திற் கயலென்றுரைபபினுமமையும். தலைமகனது தகவின்மை யென்பதூஉம்பாடம். (௩௭௬)

---

நேரிசையாசிரியபபா.

வடமீன்கற்பினெம்பீடுகெழுமடந்தை,
பெருங்கடன்முகந்துவயிறுநிறைநெடுங்கார்
விண்டிரிந்துமுழங்கிவீழாதாகக்
கருவொடும்வாடும்பைங்கூழ்போலக்,
கற்புநாண்மூடிப்பழுங்கண்கொள்ள
வுயர்மரமுளைததவூரிபோல
வோருடல்செய்துமறுமனங்காட்டு

மாணிழைமகளிர்வயினல்குதலாற்
கருமுகிற்கணிகிறத்தழற்கட்பிறையெயிற்
றரிதருகுட்டியாயபன்னிரண்டினைச்
செங்கோன்முளையிட்டருணீரதேக்கிக்
கொலைகளவென்னும்படர்களைகட்டுத்
திக்குப்படராணைவேலிகோலித்
தருமப்பெரும்பயிருலகுபெறவிளைக்கு
நாற்படைவன்னியராக்கியபெருமான்
முள்ளுடைப்பேழ்வாய்ச்செங்கண்வராலினம்
வளைவாய்த்தூண்டிற்கருங்கயிறுபரிந்து
குவளைபாசடைமுண்டகமுழக்கி
நெடுங்கால்பாய்ந்துபடுத்தவொண்டொழிற்
சுருங்கைவழியடைக்கும்பெருநகழிப்பழனக்
கூடற்கிறைவனிருதாள்விடுத்த
பொய்யினாசெய்யும்புல்லமபோலப்
பேராவாய்மையூரன்
றூரொடுமயங்கிப்பெருமையுமிலனே. ௫௯

—*—

வடமீன்கற்பின் பெருமையுமிலனே. பகுதி - பரத்தையிற் பிரிவு, துறை - தோழியியற்பழித்துரைத்தல்.

வடமீன்கற்பினெம்பீடுகெழுமடந்தை
பெருங்கடன்முகந்துவயிறுநிறைநெடுங்கார்
விண்டிரிந்துமுழங்கிவீழாதாகக்
கருவொடும்வாடும்பைங்கூழ்போலக்
கற்புநாண்முடிப்பழங்கண்கொள்ள

(இதனதுபதபொருள்.)

பெருங்கடல் - பெரிதாகியசமுத்திரத்தை—முகந்து - முகத்தற்குக்காரணமாகிய—வயிறுநிறை - வயிறுநிறைந்த—நெடு

ங்கார் - நெடியமேகம்—விண்டிரிந்து - விண்ணிற்சஞ்சரித்து—முழங்கி - முழங்கி—வீழாதாக - பெய்யாதிருக்க—கருவொடு-கருவோடுகூடி—வாடும் - வாடும்—பைங்கூழ்போல - பயிர்போல—வடமீன் - அருந்ததியின்—கற்பின் - கற்பினையுடைய—எம் -எமது—பீடுகெழு-பெருமைபொருந்திய—மடந்தை - மடந்தையானவள்—கற்புநாண்மூடி - பெருமிதம்பொருந்தியகற்புநாணுமேலிடாதெனை—பழங்கண்கொள்ள - மடந்தைமெலிய;

கற்புநாணுமே லிடின்வருந்துதலின்மையி னடக்கங் கூறினார். பெய்யாதுவாடினாற்போல மேலிடாது மெலியவென் றவமையிற் றொழிலுவமம்.

பேராவாய்மையூரன்
றாரொடுமயங்கி

பேராவாய்மையூரன்—மெய்மைதவறுதலூரன்—தாரோடுமயங்கி-இன்பத்தளவுடனேமயங்கி;

* பேராவாய்மை பிறிதோருயிர்க்குத் தீங்குசிறிதும் பயவாத சொன்னிலை - இது - இகழ்ச்சிக்குறிப்பு. ஒடு- உடனிகழ்ச்சி.

உயர்மரமுளைத்தவூரிபோல
வோருடல்செய்துமறுமனங்காட்டு
மாணிழைமகளிர்வயினல்குதலாற்

உயர்மரம் - உயர்ந்தமரத்தில்—முளைத்த-ஒன்றுபட்டதினை வேறுகாட்டித்தோன்றிய—ஊரிபோல-ஊரிபோல(கல்லுருவிபோல)—ஒருடல்செய்து - கூடினுருடன் வேறுபடாதொன்றுபட்டு—மறுமனங்காட்டும் - வேறுமனம்வைக்கும்—மாணிழை-மாட்சிமையுடைத்தாயவிழையினையுடைய—மகளிர்வயின் - பரத்தையரிடத்து—நல்குதலால் - அருள்செய்தலால்;

மரமுயர்ச்சியானு மெல்லாப்பொருட்கு நிழலானும்டைந்த பொருளைத் தாங்குதலானுந் தலைவற்குவமைஉளரியொன்றுபட்டுத் தன்னை வேறுகாட்டுதலாற் பரத்தையர்க்குவமை.

கருமுகிற்கணிநிறத்தழற்கட்பிறையெயிற்
றரிதருகுட்டியாயபன்னிரண்டினை

கருமுகிற்கு - கரியமுகிலினிறம்போல— அணிநிறம்-நிறைந்தநிறத்தினையும்— தழற்கண் - தழல்போலுங்கண்ணினையும்— பிறையெயிற்று - பிறைவளைந்தாற்போலவளைந்தகொம்பினையுமுடைத்தாய— அரிதருகுட்டியாய - பன்றியின்குட்டியாகிய— பன்னிரண்டினை - பன்னிரண்டாயகுட்டியினையும்;

முற்றும்மைதொக்கது.

செங்கோன்முளையிட்டருணீர்தேக்கிக
கொலைகளவென்னும்படர்களைகட்டுத்
திக்குப்படராணைவேலிகோலித்
தருமப்பெரும்பயிருலகுபெறவிளைக்கு
நாற்படைவன்னியராகியபெருமான்

செங்கோல் - செங்கோல்போலச்செவ்வியமுறைமையாகிய—முளையிட்டு - முளையினைவித்தி— அருணீர்தேக்கி - அருளாகியநீரைநிறைத்து—கொலைகளவென்னும் - கொலையுங்களவுமாகிய—படர்களைகட்டு - மிகுந்தகளையைப்பறித்து—திக்குப்படராணை - திக்கெங்குஞ்செல்லுமாக்கினையாகிய—வேலிகோலி - வேலியையிட்டு—தருமப்பெரும்பயிர் - தருமமாகியபெரும்பயிரினை உலகுபெறவிளைக்கும் - உலகமாகியசெய்யிற்பயன்பெறவிளையப்பண்ணும்—நாற்படை - நாற்படையினையுடைய—வன்னியராக்கிய - வன்னியராக்கிய—பெருமான் - பெருமான்;

உருவகம் அவயவியையவாளாதுகூறி யவயவத்தையுருவகஞ்செ ய்தமையின் செங்கோலென வுவமையின்பெயர் பொருண்மேனி ன்றது பன்னிரண்டனையும் வன்னியராககிய வெனவியையும.

முள்ளுடைப்பேழ்வாய்ச்செங்கண்வராலினம்
வளைவாய்த்தூண்டிற்சருங்கயிறுபரிந்து
குவளைப்பாசடைமுண்டகமுழக்கி
நெடுங்கால்பாய்ந்துபடுத்தவொண்டொழிற்
சுருங்கைவழியடைக்கும்பெருங்கழிபபழனக்
கூடற்கிறைவனிருதாள்விடுத்த
பொய்யினர்செய்யும்புல்லமபோல

முள்ளுடை - முள்ளினையுடைய—பேழ்வாய் - பெரியவா யினையும்—செங்கண் - சிவந்தகண்ணினையுமுடைய—வராலின ம் - வராலினமானவை—வளைவாய் - வளைந்தவாயினையுடைய— தூண்டில் - தூண்டிலிலிட்ட—சருங்கயிறு - பெரியகயிற்றினை —பரிந்து - அறுத்து—குவளை - குவளையினது—பாசடை - பசி யவிலையினையும்—முண்டகம் - தாமரையையும்—உழக்கி - உழ க்கி—நெடுங்கால் - நெடியவாய்க்கால்களில்—பாய்ந்து - குதித் து—படுத்த - நீர்பாயவுண்டாக்கிய—ஒண்டொழில்- தொழிலி னையுடைய—சுருங்கைவழி - மதகினதுவழியை—அடைக்கும்- நீர்பாயாதுமறித்தற்கிடமாகிய—பெருங்கழி - மிகுந்தசிறப்பினை யுடைய—பழனம் - மருதநிலஞ்சூழ்ந்த—கூடற்கு - மதுரைக் கு—இறைவன் - இறைவனானவன்—இருதாள்- இருதாளில்— விடுத்த-பறறுவிட்டதனால் வந்த—பொய்யினர்செய்யும்-கீழ்மை க்குணஞ்செய்யும்பொய்யினாககு—புல்லமபோல - பெருமையி ல்லாததுபோல;

பெருமையுமிலனே.

பெருமையுமிலனே-பெருமையுமிலனாயினான்—எ-று.

பெருமை - புழியும்பாவமுமஞ்சுதல. (௩௩)

## பொழுதுகண்டுமயங்கல்.

பொழுதுகண்டுமயங்கலென்பது - சுடரொடுபுலம்பாநின்றவள், கதிரவன்மறைந்தான், காப்பவர்சேயர், அதன்மேலிவ்விடத்து மீனுண்டவன்னங்களுமபோய்த் தஞ்சேக்கைகளையடைந்தன இனியானுற்று மாறென்னோவென மாலைப்பொழுதுகண்டு மயங்காநிறறல். அதற்குச்செய்யுள்:—

பகலோன்கரந்தனன்காப்பவர்சேயர்பற்றற்றவர்க்குப்
புகலோன்புகுநர்க்குப்போக்கரியோனெவரும்புகலத்[வா
தகலோன்பயிறில்லைப்பைம்பொழிற்சேக்கைகளுக்கின
லகலோங்கிருங்கழிவாய்க்கொழுமீனுண்டவன்னங்களே

"மயறருமாலை வருவதுகண்டு
கயறருகண்ணி கவலையுற்றது."

இ-ள். பகலோன் கதிரவன்—கரந்தனன் - மறைந்தான்—காபபவாசேயா் - இம்மாலைக்காலத்து வருந்துன்பத்தைக் காக்குமவர் சேயராயிருநதார்—அதுவேயுமன்றி - அகலோங்கிருங்கழிவாய் இவவகலோங்கிருங கழியிடத்து—கொழுமீனுண்ட - கொழுமீனையுண்ட—அன்னங்கள - அன்னங்கடாமும்—பற்றற்றவர்கருப் - புலன்களிற் பற்றற்றவர்க்கு—புகலோன் - புகலிடமாயுள்ளான்—புகுநர்க்கு - தன்கட் புகுவார்க்கு—போக்கரியோன் - பின்போதரவரியவன்—எவரும்புகல - எல்லாருமேத்த—தகலோன் - தகுதலையுடையவன்—பயில்-அவன்பயிலும்—தில்லை - தில்லைவனாப்பில்—பைம்பொழில்-பைம்பொழில்களினுளவாகிய—சேக்கைகளுக்கினவால் - இவ்விடத்தைவிட்டுத் தஞ்சேக்கைகளைநோக்கின இனியென்செய்வேன்—எ-று.

ஓங்குதல் - ஓதமெறி நீருயர்தல். கொழுமீனென்பது ஓர் சாதி.  (௧௮௮)

நேரிசையாசிரியப்பா.

கோடியகோலினன்செருமுகம்போலக்
கனைகதிர்திருகிக்கல்சேர்ந்துமுறைபுகப்
பதினெண்கிளவியூர்துஞ்சியபோற்
புட்குலம்பொய்கைவாய்தாழ்க்கொள்ள
வேள்சரத்துடைந்குநர்கோலநோக்கி
யிருண்மகள்கொண்டகுறுநகைபோல
முல்லையுமௌவலுமுருகுயிர்த்தவிழத்
தணந்தோருளத்திற்காமத்தீப்புக
மணந்தோர்நெஞ்சத்தமுதநீர்விட
வன்றில்புற்சேக்கைபுக்கலகுபெடையணைய
வந்தணரருமறையருங்கிடையடங்க
முதுகனிமூலமுனிக்கணமறுப்பக்
கலவையும்பூவுந்தோண்முடிகமழ
விரிவலைநுளையர்நெய்தலேந்தித்
துத்தங்கைக்கிளையளவையின்விளைப்ப
நீரரமகளிர்செவ்வாய்காட்டிப்
பசுந்தாட்சேக்கொளாம்பன்மலரத்
தோளுமிசையுங்கூறிடுங்கலையு
மருட்டிருவெழுத்தும்பொருட்டிருமறையும்
விரும்பியகுணமுமருந்திருவுருவு
முதலெண்கிளவியும்விதமுடனிரையே
யெட்டுமேழுஞ்சொற்றனவாறு
மைந்துநான்குமணிதருமூன்றும்
மஞ்சலியிரண்டுஞ்சொல்லருமொன்று
மாருயிர்வாழ்வருள்வரமிறுத்திய
போருட்கூடற்பெரும்பதினிறைந்த
முக்கட்கடவுண்முதல்வனைவணங்கார்
தொக்கதீப்பெருவினைசூழ்ந்தனபோலவுந்

துறவாலறனுற்பெறலின்மாந்தர்
வின்னாவறிவினுள்ளமுமென்னவுஞ்.
செக்கர்த்தீயொடுபுக்கன்மாலை
யென்னுயிர்வளைந்ததோற்றம்போல
நாற்படைவேந்தன்பாசறை
யோர்க்குமுளையோமனத்திறனோதுகவே. ௪0

——*——

கோடியகோலினன் திறனோதுகவே. பகுதி - ஒருவழித்த ணத்தல், துறை - பொழுதுகண்டிமயங்கல்.

கோடியகோலினன்செருமுகம்போல

(இதனதுபதபொருள்.)

கோடிய - மாறுபட்ட—கோலினன் - கோலினையுடையவனாகியவரசன்—செருமுகம்போல - போர்க்களத்தில்வீழ்ந்தது போல;

கனைகதிர்திருகிக்கல்சேர்ந்துமுறைபுக

கனை - நெருங்கிய—கதிர் - கிரணங்களையுடையசூரியன்—திருகி - மாறுபட்டு—கல்சேர்ந்து- அத்தமயகிரியைச்சோர்ந்து—முறைபுக - முறையேபுகவும்;

பதினெண்கிளவியூர்துஞ்சியபோற்
புட்குலம்பொய்கைவாய்தாழ்க்கொள்ள

பதினெண்கிளவி- பதினெண்பாடைச்சொற்களும்—ஊர்- ஊரிடத்து— துஞ்சியபோல்-அடங்கியனபோல—புட்குலம்-பல பறவைத்திரள்கள்—பொய்கைவாய் - பொய்கையினிடத்து—, தாட்கொள - துயிலுதலாகிய முயற்சியைக்கொள்ளவும்(தாழ்க் கொள்ளவென்வும் பாடமுளது. தங்காநிற்கவும்)

வேள்சரத்துடைகுநர்கோலநோக்கி
யிருண்மகள்கொண்டகுறுநகைபோல
முல்லையுமௌவலுமுருகுயிர்த்தவிழ

வேள்சரத்து-மன்மதபாணங்களினால்—உடைகுநர் - தளர்பவர்களாகிய மாதர்களது—கோலம் - அழகை(வேடத்தை)—நோக்கி-பார்த்து—இருண்மகள்- இருளாகியபெண்—கொண்ட தான்கொண்ட—குறுநகைபோல-இளநகைபோல—முல்லையும்-முல்லையரும்பும்—மௌவலும் - வனமல்லிகையரும்பும்—முருகுயிர்த்து - மணம்வீசி—அவிழ - மலரவும்;

தணந்தோருளத்திற்காமத்தீப்புக
மணந்தோர்நெஞ்சத்தமுதநீர்விட

தணந்தோர்-தலைவனைபிரிந்த மாதர்களது—உளத்தில்-மனத்தில்—காமத்தீ - காமமாகியநெருப்பு—புக - நுழையவும்—மணந்தோர் - தலைவனைக்கூடியமாதர்களது—நெஞ்சத்து-மனத்தில்—அமுதநீர்விட - இனியநீர்மைசுரக்கவும்;

அன்றில்புற்சேக்கைபுக்கலகுபெடையணைய

அன்றில் - அன்றிற்பறவைகள்—புற்சேக்கைபுக்கு-பனைமரத்திற்கட்டிய கூட்டிற்புகுந்து—அலகுபெடை-மூக்கினையுடையதத்தம்பெடைகளை—அணைய - தழுவியுறங்கவும்;

அந்தணரருமறையருங்கிடையடங்க
முதிர்கனிமூலமுனிக்கணமறுப்ப

அந்தணர் - அந்தணாளர்க்குரிய—அருமறை-எழுதற்கரிய வேதங்கள்—அருங்கிடையடங்க - அரியகிடையினிடத் தடங்கவும்—முதிர்கனிமூலம்-கனிந்தபழங்களையுங் கிழங்குகளையும்—முனிக்கணம் - முனிவர்கூட்டங்கள்—மறுப்ப - அகாலமென்று மறுக்கவும்;

கலவையும் பூவுந் தோண்முடி கமழ
விரிவலை நுளையர் நெய்தலேந்தித்
துத்தங் கைக்கிளை யளவையின் விளைப்ப

கலவையும்பூவும் - சந்தனக்குழம்பும் மலர்மாலைகளும்—தோண்முடிகமழ - தோளினுமுடியினும் பரிமளிக்க—விரிவலை- விரிந்த வலையினையுடைய—நுளையர் - நெய்தனிலமாக்கள்—நெய்தலேந்தி - நெய்தற்பறையைக் கையிற்றாங்கி—துத்தம் - துத்தமென்னுமொலியையும்—கைக்கிளை - கைக்கிளையென்னுமொலியையும்—அளவையின் - நூலளவைபெற—விளைப்ப - எழுப்பவும்;

நீரரமகளிர் செவ்வாய் காட்டிப்
பசுந்தாட் சேக்கொள் ளாம்பன் மலர

நீரரமகளிர் - நீரரமகளிரது—செவ்வாய்காட்டி - சிவந்த வாய்போற்காட்டி—பசுந்தாள - பசியதாளினையும்—சேக்கொள் - சிவந்தநிறத்தையுங்கொண்டிருக்கின்ற—ஆம்பல்-செவ்வல்லியரும்புகள—மலர - விரியவும்,

தோறுமிசையுங்கூறிடுங்கலையு
மருட்டிருவெழுத்தும்பொருட்டிருமறையும்
விரும்பியகுணமுமருந்திருவுருவு
முதலெண்கிளவியும்விதமுடனிரையே
யெட்டுமேழுஞ்சொற்றனவாறு
மைந்துநான்குமணிதருமூன்று
மஞ்சலிலிரண்டுஞ்சொல்லருமொன்று
மாருயிர்வாழவருள்வரநிறுத்திய
பேரருட்கூடற்பெரும்பதிநிறைந்த

முக்கட்கடவுண் முதல்வனை வணங்கார்
தொக்கதீப்பெருவினை சூழ்ந்தனபோலவும்

தோளும் - தோள்களும்—இசையும் - இசைகளும்—கூறி டுங்கலையும் - சொல்லாநின்றசாத்திரங்களும்—அருட்டிருவெழுத்தும் - அருளாகிய வழகுள வக்கரங்களும்—பொருட்டிருமறையும் - பொருளையுடைய சிறப்புள்ள வேதங்களும்—விரும்பியகுணமும் - யாவரும்விரும்பிய குணங்களும்—அருந்திருவுருவும்—கிடைத்தற்கரிய அழகாகியவடிவும்—முதலெண்கிளவியும்- இவைமுதலாகிய வெட்டுச்சொற்களும் (முன்னெழுத்தாக வெண்ணுஞ்சொல்லும்)—விதமுடனினையே - பகுப்பானமுறையே முதலில்—எட்டும்-எட்டாகவும்—ஏழும்-ஏழாகவும்—சொற்றனவாறும்—சொல்லின ஆறாகவும்—ஐந்தும்-ஐந்தாகவும்—நான்கு - நான்காகவும்—அணிதரு மூன்றும் - அணிமைதருகின்ற மூன்றாகவும்—துஞ்சலிலிரண்டும் - கெடாத விரண்டாகவும்—சொல்லருமொன்றும் - சொல்லுதற்கரிய வொன்றாகவும்—ஆருயிர்வாழ - அரிய வுயிர்ப்பரப்புகளுடலோடு வாழ்ந்திருப்ப—அருளவரநிறுத்திய - அருள்வருமாறு நிலைபெறச்செய்த—பேரருள - மிகுந்தகிருபையுள்ள—கூடற்பெரும்பதி - கூடலென்னும் பெரியநகரத்தில்—நிறைந்த - நிறைந்திருக்கின்ற—முக்கட்கடவுள் - திரிநேத்திரத்தையுடைய சோமசுந்தரக்கடவுளாகிய—முதல்வனை - தலைவனை—வணங்கார்-தொழாதவரை—தொக்கதீப்பெருவினை - கூடிய கொடியபெருவினைகள்—சூழ்ந்தனபோலவும் - மூடிக்கொண்டாற்போலவும்,

துறவாலறனாற்பெறலின்மாந்தர்
விள்ளாவழிவினுள்ளமுமென்னவும்

துறவால் - துறவினாலும்—அறனால் - இல்லறத்தினாலும் —பெறலின்மாந்தர் - பயனைப்பெறாத மனிதர்களது—விள்ளா

வறிவின் - புடைபெயர்ச்சியில்லாத வறிவும்—உள்ளமுமென்ன வும் - விளக்கமில்லாத மனமும்போலவும்,

செக்கர்த்தீயொடுபுக்கநன்மாலை

செக்கர்த்தீயொடு - செவ்வானமாகிய வக்கினியோடு—புக்கநன்மாலை - வந்தமிக்க மாலைக்காலமே,

என்னுயிர்வளைந்ததோற்றம்போல
நாற்படைவேந்தன்பாசறை
யோர்க்குமுளையோமனத்திறனோதுகவே.

என்னுயிர்வளைந்த - என்னுயிரைச்சூழ்ந்தகாட்சியைப்போல—நாற்படைவேந்தன் - நால்வகைச் சேனைகளையுடைய வரசனையும்—பாசறையோர்க்கும் - அவன் பாசறையிலுள்ளோரையும்—உளையோ - சூழ்ந்துகொண்டனையோ—மனத்திறன் - உன் மனக் கூறுபாட்டை—ஓதுக - சொல்லக்கடவை—எ-று.

இடை - வேதமோதுமிடம்.
பாசறையோர்க்கென்பது - உருபுமயக்கம்.

செக்கர்த்தீயொடு புக்கநன்மாலையே - என்னுயிர்வளைந்த தோற்றம்போல நாற்படைவேந்தன் பாசறையோர்க்கு முளையோ மனத்திறனோதுகவென வினைமுடிவுசெய்க. (௪0)

---

## ஆ டி ட த் து ய் த் த ல்.

ஆடிடத்துய்த்தலென்பது - அணிமைகூறி யகலாநின்றவள், இனி நீமுற்பட்டுவிளையாடு யான்இங்ஙனம்போய் அங்ஙனம் வாராநின்றேனென அவளை ஆடிடத்துச் செலுத்தாநிற்றல். அதற்குச்செய்யுள்.—

தெளிவளர்வான்சிலை செங்கனிவெண்முத்தந் திங்களின்
வாய்ந், தளிவளர்வல்லியன்னாய்முன்னியாடுபின்யானள
வா, வொளிவளர்தில்லையொருவன்கயிலை யுகுபெருந்தே
ன், றுளிவளர்சாரற்கரந்துங்ஙனேவந்துதோன்றுவனே.()

வன்புறையின் வற்புறுத் தி
அன்புறுமொழியை யருககன்ற து.

இ-ள். வளர் - காணிமிர்ந்த—வான்சிலை - பெரியசிலைகளு
ம்—செங்கனி - சிவந்த கொவ்வைககனி யும்—வெண்முத்தம் -
வெள்ளியமுத்தங்களும்—திங்களின்வாய்ந்து - ஒருதிங்களின்
கண்ணேவாய்ப்ப—அளிவளர் - அளிகள் தங்கும்—வல்லியன்
னாய் - வல்லியையொபபாய்—தெளி - யான்சொன்னவற்றைத்
தெளிவாயாக—முன்னியாடு - இனிமுறபட்டு விளையாடுவாயா
க—ஒளிவளர் - ஒளிவளராநின்ற—தில்லை - தில்லைக்கணுளானு
கிய—அளவா - அளக்கப்படாத—ஒருவன்-ஒருவனது—கயிலை-
கைலையிடத்து—உகு - உகாநின்ற—பெருந்தேனறுளி - பெருந்
தேன்றுளிகள்—வளர்சாரல் - பெருகுஞ்சாரற் பொதும்பரில்
—கரந்து - ஒளித்து—பின்யான் - யான்பின்றும்—உங்ஙனே
வந்து - உவ்விடத்தே வந்து—தோன்றுவன் - தோன்றுவே
ன்—எ-று.

* தெளிவளர்வான்சிலையென்பதற்கு ஒளிவளருஞ்சிலையென்று
ரைப்பினுமமையும். திங்களை வல்லிககுவமையாகக் கொள்க. வா
ய்ந்தென்பது வாய்ப்பவென்பதன் றிரிபாகலின், அளிவளரென்
னும் பிறவினைகொண்டது. சாரலென்பது - ஆகுபெயர். வன்பு
றையின் - வற்புறுத்துஞ்சொற்களால். மெய்ப்பாடு அது பயன்-
இடங்குறித்துவற்புறுத்தல். ([illegible])

நேரிசையாசிரியப்பா.

முன்னியாடுகமுன்னியாடுக
குமுதமும்வள்ளையுநீலமுங்குமிழூந்
தாமரையொன்றிற்றடைந்துவளாசெய்த
முளரிநிறைசெம்மகண்முன்னியாடுக
நிற்பெறுதவத்திணைமுற்றியயானும்
பலகுறிபெற்றிவ்வுலகுயிரளித்த
பஞ்சின்மெல்லடிப்பார்வைகூருகிக்
கருங்குருவிக்குக்கண்ணருள்கொடுத்த
வெண்டிருநீற்றுச்செக்கர்மேனியன்
கிடையிற்றுபதாதொடைமறைமுழக்கும்
பொங்காக்கிடந்தகூற்கார்க்குளிறலும்
வல்லிமையப்பரியும்பகடுவிடுகுரலும்
யாணாக்கொடிஞ்சிநெடுந்தேரிசைப்பு
மொன்றியமுழங்கலின் றநிலைபெருகி
மாதிரக்களிற்றிணைச்செவிடுறக்கொடுக்கும்
புண்ணியக்கூடலுண்ணிறைபெருமான்
றிருவடிசுமந்தவருளினாபோலக்
கருந்தேனுடைத்துச்செம்மணிசிதறிப்
பாகற்கோட்டிற்படாகறிவணக்கிக
கல்லென்றிழிந்துகொல்லையிற்பரக்குங்
கறங்கிசையருவியஞ்சாரற்
புறம்புதோன்றிநின்கண்ணுருவனே. ௯௧

முன்னியாடுக கண்ணுருவனே. பகுதி - இயற்கைபபுணா ச்சி, துறை - ஆடிடத்துய்த்தல். *

முன்னியாடுகமுன்னியாடுக

(இதனதுபதபபொருள்.)

முன்னி - தோழிகளுடன் முற்பட்டு—ஆடுக - விளையாட்டக்கடவாய்—முன்னியாடுக -

குமுதமும்வள்ளையுநீலமுங்குமிழுந்
தாமரையொன்றிற்றடைந்துவளர்செய்த
முளரிநிறைசெம்மகள்

குமுதமும் - குமுதமலரும்—வள்ளையும் - வள்ளைக்கொடியும்—நீலமும் - நீலோற்பலமலரும்—குமிழும் - குமிழமலரும்—தாமரையொன்றில் - ஒரு தாமரைமலரில்—தடைந்து - அடங்கி—வளர்செய்த - வளர்தலைசெய்த—முளரிநிறை - தாமரைமலரின்கண் அழகுநிறைந்த—செம்மகள் - இலக்குமிபோல்வாய்;

முன்னியாடுக

முன்னியாடுக - நெருநல்விளையாட்டைக்கருதி விளையாடக்கடவாய்;

பலகுறிபெற்றிவ்வுலகுயிரளித்த
பஞ்சின்மெல்லடிப்பாவைகூறுகிக்
கருங்குருவிக்குக்கண்ணருள்கொடுத்த
வெண்டிருநீற்றுச்செக்கர்மேனியன்
இடையிற்றுபதர்தொடைமறைமுழுகரும்
பொங்கர்க்கிடந்தசூற்கார்க்குளிறலும்
வல்லியைப்பரியும்பகடுவிடுகுரலும்
யாணர்க்கொடிஞ்சிநெடுங்தேரிசைப்பு
மொன்றியமுழங்கின்றநிலைபெருகி
மாதிரக்களிற்றிணைச்செவிடுறக்கொடுக்கும்
புண்ணியக்கூடலுண்ணிறைபெருமான்
திருவடிசமந்தவருளினர்போல

பலகுறிபெற்று - பலவகைத்தோற்றத்தைப்பெற்ற—இவ்வுலகு - இவ்வுலகத்தின்கண்—உயிர் - ஆன்மகோடிகளை—அளித்த - ஈன்றருளிய—பஞ்சின் - பஞ்சினும்—மெல்லடி - மென்

மையாகிய திருவடிகளையுடைய—பாவை-பாவைபோலும் உமை—கூறுகி - ஒருபாகமாகி—கருங்குருவிக்கு - பாரத்துவாசமென்னும் கருங்குருவிக்கு—கண்ணருள் - தனதுகண்ணருளை—கொடுத்த - கொடுத்துப்பாதுகாத்த—வெண்டிருநீற்று - வெள்ளிய திருநீறுள்ள—செக்கர்மேனியன் - செவ்வானம்போன்ற திருமேனியையுடையவனாகிய—கிடையிற்றுபதர் - முனிவர்தம் திருக்கூட்டத்திலேயோதும்—தொடை - தொடையோடுங்கூடிய—மறைமுழக்கும் - வேதவொலியும்—பொங்கர் - சோலையின்மீது—கிடந்த - இருந்த—சூற்கார் - சூலையுடைய மேகங்களின்—குளிறலும் - ஒலியும்—வல்லியை - கால்விலங்கை—பரியும் - அறுத்தற்குக் காரணமான—பகடுவிடுகுரலும் - யானைகள் வெளிப்படுத்துகின்றவொலியும்—யாணர் - அழகுபொருந்திய—கொடிஞ்சி - மொட்டினையுடைய—நெடும் - நெடுமையாகிய—தேரிசைப்பும் - தேரினதொலியும்—ஒன்றி - கூடி—அழுங்க - ஒலி

றும் பெருகி—மாதிரக்களிற்றினை-திசையானைகளை—செவிடுறக்கொடுக்கும் - செவிடுபடுத்துகின்ற—புண்ணியக்கூடலுள் - புண்ணியத்தைத் தராநின்ற மதுரையினிடத்து—இறைபெருமான் - பெருமையோடெழுந்தருளியுள்ள சோமசுந்தரப்பெருமானது—திருவடி - திருவடிகளை—சுமந்த - மநத்தின்கட் டாங்கிய—அருளினர்போல - அருளாளர்போல;

நிற்பெறுதவத்தினைமுற்றியயானும்

நிற்பெறுதவத்தினை - நின்னையடையுந் தவத்தை—முற்றியயானும் - நிறைவேற்றியயானும்;

கருங்கேதனுடைத்துச்செம்மணிசிதறிப்
பர்சுக்கோட்டிற்படர்கறிவண்க்கிக்

கல்லென்றிழிந்துகொல்லையிற்பரக்குங்
கறங்கிசையருவியஞ்சாரற்
புறம்புதோன்றிநின்கண்ணாகுவனே.

கரும் - பெரிய—தேன் - இறாட்டை—உடைத்து - கிழித்து—செம்மணி - சிவந்த மாணிக்கங்களை—சிதறி - பலவிடங்களினுஞ்சிதறி—பாகற்கோட்டில் - பலாவினது கிளைகளில்—படர்கறி - படர்ந்த மிளகுக்கொடிகளை—வணக்கி - வளைத்து—கல்லென்றிழிந்து - கல்லென்னு மொலியினிழிந்து—கொல்லையில் - புனங்களில்—பரக்கும் - பரவுகின்ற—கறங்கிசை - மிகுந்தவொலியுள்ள—அருவி - அருவிநீரினையுடைய—அஞ்சாரல் - அழகிய மலைச்சாரலின்—புறம்புதோன்றி-புறத்திற்சென்று—நின்கண்ணாகுவன - உன்னிடத்து வருவேனாக—எ-று.

முளரிநிறை செம்மகள் புண்ணியக்கூட லுண்ணிறைபெருமான் றிருவடிசுமந்த வருளினர்போல நிற்பெறுதவத்தினை முற்றியயானுங் கறங்கிசையருவி யஞ்சாரல் புறம்புதோன்றிநின் கண்ணாகுவனென வினைமுடிவுசெய்க. (௪௧)

---

## விரதியரை வினாவல்.

விரதியரைவினாவலென்பது - குரவொடுவருந்திச் செல்லாநின்றவள், பத்தியர்போல ஒருபித்தி தன்பின்னேவர ஒருபெருந்தகை முன்னேசெல்லக் கண்டீரோவென விரதியரை வினாவாநிற்றல். அதற்குச்செய்யுள்.—

சுத்தியபொக்கணத்தென்பணிகட்டங்கஞ்சூழ்சடைவெ
பொத்தியகோலத்தினீர்புலியூரம்பலவர்க்குற்ற [ண்
பத்தியர்போலப்பனித்திறுமாந்தபயோதரத்தோர்
பித்திதற்பின்வரமுன்வருமோவொர்பெருந்தகையே. ()

வழிவருகின்ற மாவிரதிய ௨௱
மொழிமின்களென்று முன்னிமொழிந்த து.

இ-ள். சுத்திய - சுததியையுடைத்தாகிய—பொக்கணத்து- பொக்கணத்தையும்—என்பு - என்பாகிய—அணி - அணியையும்—கட்டங்கம் - கட்டங்கமென்னும் படைக்கலத்தையும்—சூழ்சடை - சூழ்ந்த சடையினையும்—வெண்பொத்தியகோலத்தினீர் - மெய்ம்முழுதுமூடிய வெண்கோலத்தையுமுடையீர்—புலியூர் - புலியூாகக ணுண்டாகிய—அம்பலவாக்குற்ற பத்தியர் போல-அம்பலததையுடையவர்கண் மிககபத்தியையுடையாரைப் போல—பணைத்திறுமாந்த-பெருத்திறுமாந்த—பயோதரத்தோர்பித்தி- மூலகளையுடையாளொருபேதை—தற்பின்வர - தனக்குப்பின்வர—ஓர்பெருந்தகை- ஒருபெருந்தகை—முன்வருமோ- முன்னேவருமோ? உரைமின்—எ-று.

சுத்தி - பிறர்கருத் திருநீறுகொடுத்தற்கு இப்பிவடிவாகத் தலையோட்டா னமைக்கப படுவதொன்று. என்பணியென்புழி இயல்பும், கட்டங்கமென்புழித் திரிபும்-விகாரவகையாற் கொள்க. கடங்கமென்பது - மழு. இது கட்டங்கமெனநின்றது. வெண்கோலம்-நீறணிந்தகோலம்-பத்தியாககுபணைத்தல்-உள்ளத்துநிகழும் இன்புறவால் மேனிக்கண் வருமொளியும். ஓடுங்காமையும், இறுமாததல் - தாழாதவுள்ளத்தராய்ச் செம்மாத்தல். மூலக்குபபணைத்தல் - பெருத்தல். இறுமாத்தல்-ஏந்துதல்-வெண்பத்திய கோலத்தி னீறென்றபாடத்திற்கு வெண்ணீற்றுற்பத்திபடவிட்ட முண்டத்தையுடைய கோலமென்றுரைக்க. ௨௬௨

தன்செலவின்றூட்கு விரதியரோடுரைத்தல்.

நேரிசையாசிரியப்பா.

நிலவுபகல்கான்றபுண்ணணியவருட்பொடி
இருவினைதூரந்ததிருவுடன்மூழ்கி

நடுவுடல்வரிந்தகொடிக்காய்ப்பத்தர்
சுத்தியமர்கீறுடன்றோள்வலன்பூண்டு
முடங்குவீழன்னவேணிமுடிகட்டி
யிருநான்குகுற்றமடியறக்காய்ந்திவ்
வாறெதிர்ப்பட்டவருந்தவத்திருவினிர்
தணியாக்கொடுஞ்சுரந்தருந்தழறாவிப்
பொன்னுடற்றேவரொக்கலொடுமயங்கிக்
கொண்மூப்பஃறிரைப்புணலுடன்றாழ்த்திப்
பொதுளியதருவினுட்புகுந்திமையாது
மருந்துபகுத்துண்டுவல்லுயிர்தாங்கும்
வட்டைவந்தனையெனவழங்குமொழிநிற்க
தாய்காறாழ்ந்தனளாயம்வினவினள்
பாங்கியைப்புல்லினளயலுஞ்சொற்றனண்
மக்கட்பறவைபரிந்துளமாழ்கினள்
பாடலம்புதுத்தாக்கானைப்பின்னென்றாற்
றள்ளாவிதியிற்செல்குநளென்று
தழல்விழிப்பேழ்வாய்த்தரக்கின்றுளிமுலை
பைங்கட்புல்வாய்பாலுணக்கண்ட
வருணிறைபெருமானிருணிறைமிடற்றோன்
மங்குனிறைபூத்தமணியுடுக்கணமெனப்
புன்னையம்பொதும்பர்ப்பூநிறைகூடனும்
பொன்னடிவருந்தியுங்கூடி
யன்னையர்க்குதவல்வேண்டுமிக்குறியே. ௬௨

———*———

நிலவுபகல்கான்ற வேண்டுமிக்குறியே. பகுதி - உடன்போக்கு, துறை - விரதியரோடுணாத்தல். *

நிலவுபகல்கான்றபுண்ணியவருட்பொடி
இருவினைதுரந்ததிருவுடன்மூழ்கி

நடுவுடல்வரிந்தகொடிக்காய்ப்பத்தர்
சத்தியமர்நீறுடன்றோள்வலன்பூண்டு
முடங்குவீழன்னவேணிமுடிகட்டி
யிருநான்குகுற்றமடியறக்காய்ந்திவ்
வாறெதிர்பபட்டவருந்தவத்திருவினிர

(இதனதுபதப்பொருள்.)

நிலவுபகல் - சந்திரசூரியரதொளியை—கான்ற - வீசாநின்ற—புண்ணிய - தூய்மையான—அருட்பொடி - அருளே கவசமாக அணியத்தக்கதிருநீற்றினால்—இருவினை - நல்வினை தீவினைகளை—துரந்த - ஒட்டிய—திருவுடல் - திருமேனியானது—மூழ்கி - மூழ்கப்பெற்று—நடுவுடல்வரிந்த - உடலினடுவிற்கட்டிய—கொடிக்காய் - கொடியிற்காய்க்குஞ்சுரைக்காயாகிய—பத்தர் - கமண்டலம்—சத்தியமர்நீறுடன் - பரிசுத்தியுள்ளநீற்றுப்பையொடு—தோள்வலன்பூண்டு - வலத்தோளின்மாட்டி—முடங்குவீழன்ன - முடங்கியவிழுதுபோன்ற—வேணி - சடையை—முடிகட்டி - முடியாகமுடித்து—இருநான்குகுற்றம்-ஞானாவரணியமாதியெட்டுக்குற்றங்களையும்—அடியறக்காய்ந்து-முதலறகெடுத்து—இவ்வாறெதிர்ப்பட்ட - இவ்வழியிலெதிர்ப்பட்ட—அருந்தவத்திருவினிர் - செய்தற்கரியதவச்செல்வத்தையுடையீர்;

தணியாக்கொடுஞ்சுரந்தருந்தழறுவிப்
பொன்னுடற்றேவரொக்கலொடுமயங்கிக்
கொண்மூப்பஃறிரைப்புனலுடன்றூழ்த்திப்
பொதுளியதருவினுட்புகுந்திமையாது
மருந்துபகுத்துண்டுவல்லுயிர்தாங்கும்
வட்டைவர்தனையெனவழங்குமொழிநிற்க

தணியா - வெப்பந்தணியாத—கொடுஞ்சுரம் - கொடியவெப்பாலைநிலமானது—தரும் - தராநின்ற—தழல் - அக்கினியானது—தாவி - மேலெழுந்துபோய்—பொன்னுடல் - பொன்னிறமானவுடலையுடைய—தேவர் - தேவர்கள்—ஒக்கலொடு - தத்தஞ்சுற்றமுடனே—மயங்கி - அவ்வுட்டணத்தான்மயக்குற்று—கொண்மூ - மேகங்களை—பஃறிரை - பல அலைகளையுடைய—புனலுடன்சூழ்த்தி - ஆகாயகங்கையுடன் றம்முலகின்கீழிருத்தி—பொதுளிய-நன்றாகத் தளிர்த்த—தருவினுட்-கற்பகச்சோலையுள்—புகுந்து-நுழைந்து—இமையாது - கண்களிமையாமல்—மருந்து - அமிர்தத்தை—பகுத்துண்டு- தம்முட்பகுத்துண்டு—வல்லுயிர் - தமதுவலியவுயிரை—தாங்கும் - தாங்கும்படியுள்ள—வட்டை - பாலைவழியில்—வந்தனையென - நீவந்தாயென்று—வழங்குமொழிநிற்க - நீயிரொன்னையுபசரிக்கின்ற முகமனுரையொழிக;

பாடலம்புதுத்தார்க்காளைபின்றொன்றூற்
றள்ளாவிதியிற்செல்குநளொன்று

பாடலம்புதுத்தார் - புதுமையான பாதிரிமலர் மாலையையணிந்த—காளைபின் - காளைப்பருவத்தையுடையவனோடு—ஒன்றூல் - எவ்வகையுபாயத்தினாலும்—தள்ளாவிதியில்-நீக்கக்கூடாதவூழ்காரணமாக—செல்குநள் - செல்லுந்தலைவியானவள்;

தாய்காறாழ்ந்தனளாயம்வினவினள்
பாங்கியைப்புல்லினளயலுஞ்சொற்றனளண்
மக்கட்பறவைபரிந்துரைமாழ்கினள்

தாய்காறாழ்ந்தனள் - தாயினதுபாதங்களை வணங்கினளென்றும்—ஆயம்வினவினள் - தன்னாயத்திலுள்ளாரை யுசாவின

ளென்றும்—பாங்கியைப்புல்லினள் - தோழியைத்தழுவினளெ ன்றும்—அயலுஞ்சொற்றனள் - மற்றையோருக்குமுபசாரஞ் சொல்லினளென்றும்—மக்கட்பறவை - கிள்ளைமுதலியபறவை களையுன்னி—பூரிந்துளமாழ்கினள் - இரங்கி யுள்ளமயங்கின ளென்றும;

தழல்விழிப்பேழ்வாய்த்தரக்கின்றுளிமுலை
பைங்கட்புல்வாய்பாலுணக்கண்ட
வருணிறைபெருமானிருணிறைமிடற்றோன்
மங்குனிறைபூத்தமணியுடுக்கணமெனப்
புன்னையம்பொதும்பர்ப்பூநிறைகூடலும்
பொன்னடிவருந்தியுங்கூடி

தழல்விழி - கனல்கின்ற விழியினையும்—பேழ்வாய் - பெரி யவாயினையுமுடைய—தரக்கின் - புலியினது—துளிமுலை- பால் துளிக்கும் முலையின்கண்—பைங்கண் - பசிய கண்களையுடைய —புல்வாய் - மான்கன்று—பாலுணக்கண்ட - பாலுண்ணும்ப டி யரசியல்செய்தருளிய—அருணிறைபெருமான் - அருணிறை ந்த எம்பெருமான்—இருணிறைமிடற்றோன் - இருண்மலிந்தக ண்டத்தினையுடையோனது—மங்குனிறைபூத்த-ஆகாயம் நிறை வாகத்தோன்றிய—மணியுடுக்கணமென - அழகுள்ள தாராக ணம்போல—புன்னையம்பொதும்பர் - புன்னைச்சோலைகளில்— பூநிறை - மலர்கள்நிறைந்த—கூடல் - மதுரையில்—நும்பொன் னடி - அழகிய நுமதுதிருவடி—வருந்தியும் - வருத்தப்பட்டா யினும்—கூடி - போய்ச்சேர்ந்து;

அன்னையர்க்குதவல்வேண்டுமிக்குறியே.

அன்னையர்க்கு - அன்னன்னைமார்களுக்கு—இக்குறியே- இ க்குறிகளை—உதவல்வேண்டும்-சொல்லல்வேண்டும்-எ-று.

அருந்தவத்திருவினிர் வட்டைவந்தனேயெனா வழங்குமொ ழிசிறக்க காளேயின்ஞென்ருத் தள்ளாவிதியிற் செல்குநளென வும் தாழ்ந்தனள் - வினவினள் - புல்லினள் - சொற்றனள்-மா ழ்கினளென்றும் அன்னேயர்க் கிகுறி யுதவல்வேண்டுமென வி னேமுடிவுசெய்க. (சுஉ)

---

அவயவங்கூறல்.

அவயவங்கூறலென்பது - இன்னும் அவனே யிவள் அறிந்தி லள் அறிந்தாளாயிற் றழைவாங்குவாளென உட்கொண்டு நின் று, என்ஞற் கருதப்பட்டாளுக்கு அவயவம் இவையெனத் தோ ழிக்குத் தலைமகன் அவளுடைய அவயவங்கூருநிற்றல். அதற்கு ச்செய்யுள்:—

குவவினகொங்கைகுரும்பைகுழல்கொன்றை கொவ் வைசெவ்வாய், கவவினவாணகை வெண்முத்தங்கண்ம லர்செங்கழுநீர், தவவினை தீர்ப்பவன் றழ்பொழிற்சிற்ற ம்பலமனையாட், குவவினநாண்மதிபோன்றெளிர்கின்ற தொளிமுகமே. ௧௦அ

அவயவ மவளு க்
கிவையிவை யென்ற து.

இ-ள். தவவினை தீர்ப்பவன் - விரதங்களான் வருந்தாமற்ற வத்தொழிலைநீக்கி அன்பர்க்கின்புறுநெறியருளியவனது—தாழ் பொழில் - தாழ்ந்த பொழிலை யுடைய—சிற்றம்பலமனையாட்கு- சிற்றம் பலத்தை யொப்பாட்கு—குவவின - குவிந்த—கொங் கை - கொங்கைகள்—குரும்பை - குரும்பையை யொக்கும்—கு ழல் - குழல்—கொன்றை - கொன்றைப்பழத்தை யொக்கும்— செவ்வாய் - செய்யவாய்—கொவ்வை - கொவ்வைக்கனியையொ

க்கும்—கவவின - அதனகத்திடப்பட்ட—வாணகை - வாணகை—வெண்முத்தம் - வெண்முத்தை யொக்கும்—கண்மலர் - கண்மலர்கள்—செங்கழுநீர் - செங்கழுநீரையொக்கும்—ஒளிமுகம் - ஒளிமுகம்—உவவின - உவாவின்கணுளதாகிய—நாண்மதிபோன்று - செவ்விமதிபோன்று—ஒளிரா கின்றது - ஒளிராநின்றது—எ-று. (௧௦௮)

---

நேரிசையாசிரியப்பா.

வீதிகுத்தியகுறுந்தாட்பாரிடம்
விண்டலையுடைத்துப்பிறைவாய்வைப்பக்
குணங்கினந்துள்ளக்கூளியுங்கொட்ப
மத்தியந்தணன்வாஞ்சொலிவிடுப்பத்
தில்லைகண்டபுலிக்கான்முனிவனுந்
தூயைகைவிடப்பதஞ்சலியாகிய
வாயிரம்பணுடவியருந்தவத்தொருவனுங்
கண்ணுல்வாங்கிநெஞ்சறைநிறைப்பத்
திருநடநவின்றவுலகுயிர்ப்பெருமான்
கடன்மாக்கொன்றதீப்படர்நெடுவே
லுருளிணர்க்கடம்பினெடுந்தார்க்கண்ணிய
னரிமகள்விரும்பிப்பாகஞ்செய்து
களியுடனிறைந்தவொருபரங்குன்றமும்
பொன்னங்தோகையுமணியரிச்சிலம்பு
நிரைத்தலைச்சுடிகைநெருப்புமிழாரமும்
வண்டுகிளைமூரற்றியபாசிலைத்துளவு
மரகதமூடற்றியவடிவொடுமயங்க
மரக்காலாடியரக்கர்க்கொன்ற
கவைத்தலைமணிவேற்பிறைத்தலைக்கண்ணி
வடபாற்புரிந்தபலிமனைக்கோட்டமுஞ்

குடகங்தோள்வளைகிடந்துவில்வீச
யாவர்தம்பகையும்யாவையிற்பகையும்
வளனிற்காத்துவருவனவருளு
மூழியுங்கணமெனவுயர்மகன்பள்ளியு
மூவாமதிகிடக்குங்குண்டுகடல்கலக்கி
மருந்துகைக்கொண்டுவானவர்க்கூட்டிய
பாகப்பக்கநெடியோனுறையுந்
தும்பியுண்ணுத்தொங்கற்றேவர்
மக்களொடுநெருங்கியவீதிப்புறமு
மதுநிறைபிலிற்றியபூவொடுநெருங்கிச்
சூரரக்கன்னியருடல்பணிசெய்யுங்
கடைக்கான்மடியும்பொங்கர்ப்பக்கமு
மூடியாடுநர்த்திரையொடுபிணங்கித்
தோழியிற்றீர்க்கும்வையைத்துழனியு
மளவாவூழிமெய்யொடுசூழ்ந்து
நின்றுநின்றோங்கிநிலையறம்பெருக்கு
மாணுப்பெரும்புகழருணகர்க்கூடற்
பெண்ணுடல்பெற்றசென்னியம்பிறையோன்
பொற்றகடுபரப்பியகருமணிநிரையென
வண்டுந்தேனுமருள்கிளைமுரற்றி
யுடைந்துமிழ்நறவுண் டுறங்குதார்க்கொன்றையன்
றிருவடிபுகழுநர்செல்வம்போலு
மண்ணுந்தெடுத்தவணியுறுவனமுலை
யவன்கழல்சொல்லுநரருவினைமாறு
மலைமுலைப்பகையடமாழ்குறுநுசுப்பு
மற்றவனசைத்தமாசுணம்பரப்பி
யமைத்ததுகடுக்குமணிப்பாம்புல்கு
லாங்கவன்றரித்தகலைமான்கடுக்கு
மிருகுழைகிழிக்குமரிமதர்மலர்க்கண்

புகர்முகப்புழைக்கைதுயிறருகனவின்
முடங்குளைகண்டபெருந்துயர்போல
வுயிரினுநுணித்தவவ்வவ்வுருக்கொடு
பொன்மலைபனிப்பினும்பனியா
வென்னுயிர்வாட்டியதொடியிளங்கொடிக்கே. ௨௩

—*—

வீதிகுத்திய தொடியிளங்கொடிக்கே. பகுதி-சேட்படை, துறை - அவயவங்கூறல்.

புகர்முகப்புழைக்கைதுயிறருகனவின்
முடங்குளைகண்டபெருந்துயர்போல
வுயிரினுநுணித்தவவ்வவ்வுருகொடு
பொன்மலைபனிப்பினும்பனியா
வென்னுயிர்வாட்டியதொடியிளங்கொடிக்கே.

(இதனதுபதப்பொருள்.)

உயிரினுநுணித்த - மிகவும் நுட்பமான உயிரினும் அருமையதாகிய—அவ்வவ்வுருக்கொடு - அந்தந்தவவயவத்தைக்கொண்டு—பொன்மலை - மாமேருவானது—பனிப்பினும் - நடுங்கினும்—பனியா - நடுங்குறாத—என்னுயிர் - எனதுயிரை—புகர்முகம் - புள்ளிதங்கிய முகத்தினையும்—புழைக்கை - துளையுள்ள கையினையுமுடைய யானையினது—துயிறருகனவில் - நித்திரையிலுண்டாகுங் கனவிலே—முடங்குளைகண்ட - சிங்கத்தைக்கண்ட—பெருந்துயர்போல-மிக்க துன்பம்போல—வாட்டிய-துன்பப்படுத்திய—தொடி - வளையலணிந்த—இளங்கொடிக்கு-இளங்கொடிபோன்ற தலைவிக்கு;

வீதிகுத்தியகுறுந்தாட்பாரிடம்
விண்டலையுடைத்துப்பிறைவாய்வைப்பக்
குணங்கினர்த்துள்ளக்கூளியுங்கொட்ப

மத்தியந்தணன்வரஞ்சொலிவிடுப்பத்
தில்லைகண்டபுலிக்கான்முனிவனுங்
குழையைகைவிடப்பதஞ்சலியாகிய
வாயிரம்பணாடவியருந்தவத்தொருவனுங்
கண்ணால்வாங்கிநெஞ்சறைநிறைப்பத்
திருநடநவின்றவுலகுயிர்பபெருமான்

வீதிகுத்திய - ஒடியாடுதல்புரிந்த—குறுந்தாட்பாரிடம் - குறுமையாகிய கால்களையுடைய பூதங்கள—விண்டலையுடைத்து - விண்ணிடத்தைக் கிழித்து—பிறைவாய்வைப்ப - ஆங்குள்ளபிறையை வாயின்கண்வையாநிற்பவும்—குணங்கினந்துள்ள- பைசாசங்கடுள்ளாநிறபவும்—கூளியுங்கொட்ப - பேய்களுந்திரிந்தாடாநிறபவும்—மத்தியந்தணன் - மத்தியந்தணனென்னு முனிவரன்—வரஞ்சொலிவிடுபப - வரம்பெறுமாறு சொல்லியனுப்புதலும்—தில்லைகண்ட-தில்லையென்னுந் தலத்தைக்கண்ட—புலிக்கான்முனிவனும் - வியாக்கிரபாதமுனிவனும்—குழையை விட-அனகுழையென்னும் பாம்பினி தனதுகையிலிருந்து தனையில்விட்டதால்—பதஞ்சலியாகிய - பதஞ்சலிமுனிவனாகிய—ஆயிரம்பணாடவி-ஆயிரம்படமிணையுள்ள—அருந்தவத்தொருவனும் - தவத்தால் அரிய வொருவனும்—கண்ணால்வாங்கி - கண்களாற்பெற்று—நெஞ்சறை - மனமாகியவீட்டில்—நிறைப்ப - நிறைக்காநிற்கவும்—திருநடநவின்ற - முத்தித்திருவை யளித்தற்குரிய நடனஞ்செய்த—உலகுயிர்ப்பெருமான் - உலகிற்குயிராகநின்ற பிரானனவனும்;

கடன்மாக்கொன்றதீப்படர்நெடுவே
லுருளிணர்க்கடம்பினெடுந்தார்க்கண்ணிய
ளரிமகள்விரும்பிப்பாகஞ்செய்து
ளியுடனின்றுதவொருபரங்குன்றமும்

கடன்மாக்கொன்ற - கடலிடத்தே மூளைத்துநின்ற மாமர மாகிய சூரபற்பனைத் தடிந்த—தீப்படர்நெடுவேல் - தீத்தவழா நின்ற நெடிய வேலாயுதத்தையுடைய—உருளிணர்க்கடம்பினெ டுந்தார்க்கண்ணியன் - தேருருள்போலுங் கடப்பங்கொத்துக்க ளாகிய பெரிய மலர்மாலையையுடையவன்—அரிமகள் - இந்திர ன்மகளாகிய தெய்வயானை நாச்சியாரை—விரும்பி - விரும்பி— பாகஞ்செய்து - பராசரன்புத்திரனைப் பரிபாகமுற்றுவித்து— களியுடன் - களிபபோடு—நிறைந்த - நிலைநந்துள்ள—ஒருபரங் குன்றமும் - ஒப்பற்ற திருப்பரங்குன்றமும்;

பொன்னங்தோகையுமணியரிச்சிலம்பு
நிரைத்தலைசசுடிகைநெருப்புமிழாரமும்
வண்டுகிளைமுரறறியபாசிலைத்துளவு
மரகதமுடற்றியவடிவொடுமயங்க
உவாமதிகிடக்குங்குண்டுகடல்கலக்கி
மருந்துகைக்கொண்டுவானவர்க்கூட்டிய
பாகப்பக்கநெடியோனுறையுளும்

பொன்னங்தோகையும் - பீதாம்பரமும்—மணியரிச்சிலம் பும் - மணிப்பரல்களையுடைய சிலம்பும்—நிரைத்தலைச்சுடிகை - நிரையான தலைச்சுடிகையுள்ள—நெருப்புமிழாரமும் - நெருப் புப்போலும் ஒளிவெளிப்படுகின்ற கௌத்துவாபரணமும்—வ ண்டுகிளைமுரற்றிய - வண்டுகள் இசைபாடுகின்ற—பாசிலைத்து ளவும் - பச்சிலையாகிய துழாயமாலையும்—மரகதமுடற்றிய-மர கதமணிநிறத்தை மாழ்கப்பண்ணின—வடிவொடு - திருமேனி யிடத்து—மயங்க - தலை மயங்கும்படி—உவாமதிகிடக்கும் - நி றைமதியிருத்தற்கிடமாகிய —குண்டுகடல் - ஆழமானகடலை— கலக்கி - மந்தரமத்தாற் கலக்கி—மருந்துகைக்கொண்டு - அமு

தந்தைக் கையிலேந்தி—வானவர்க்கூட்டிய - தேவலா யுண்பித்த—பாகப்பக்க - பரமேச்சுரனது ஒருபாகத்திலுள்ள—நெடியோன் - திருமால் வீற்றிருக்கின்ற—உறையுளும் - கோயிலும்;

மரக்காலாடியரக்கர்க்கொன்ற
கவைத்தலைமணிவேற்பிறைத்தலைக்கன்னி
வடபாற்பரிந்தபலிமணகோட்டமும்

மரக்காலாடி - மரக்கால் என்னும் தனது ஆடல்புரிந்து—அரக்கர்க்கொன்ற - அரக்கரை வீழ்த்தின—பிறைத்தலை-பிறைத்தலைபோலும்—கவைத்தலை - கவராகிய தலையுள்ள—மணிவேல் - வலிய சூலமேந்திய—கன்னி - துர்க்கையானவள்—வடபால் - வடக்கின்கண்—பரிந்த - விரும்பிய—பலிமணம் - ஊன்மணங்கொண்ட—கோட்டமும் - ஆலயமும்;

சூடகந்தோள்வளைகிடந்துவில்வீச
யாவர்தம்பகையும்யாவையிற்பகையும்
வளனிற்காத்துவருவனவருளூ
மூழியுங்கணமெனவுயர்மகன்பள்ளியும்

சூடகம் - கங்கணமும்—தோள்வளை - தோள்வளையும்—கிடந்து - இருந்து—வில்வீச - ஒளிபெருகாநிற்ப—யாவர்தம்பகையும் - யாவரது பகைமையையும்—யாவையிற்பகையும் - யாதொன்றனது பகைமையையும்—வளனிற்காத்து - ஒழியும்படி தனதுவளத்தால் பாதுகாத்து—வருவனவருளும் - வருகின்ற நன்மைகளைத் தந்தருள்கின்ற—ஊழியும் - ஊழிக்காலமும்—கணமென - ஓர்கணப்போதாக—உயர்மகன்பள்ளியும் - வளர்கின்ற வடுகக்கடவுளது ஆலயமும்;

தும்பியுண்ணூத்தொங்கற்றேவர்
மக்களொடுநெருங்கியவீதிப்புறமும்

தும்பியுண்ணா - வண்டுகளாலுண்ணப்படாத—தொங்கற்றேவர்-பொன்னரிமாலைகளையுடைய தேவர்களும்—மக்களொடு - மனிதர்களும்—நெருங்கிய - நெருங்கி யுலாவுகின்ற—வீதிப்புறமும் - வீதியினிடங்களும்;

மதுநிறைபிலிற்றியபூவொடுநெருங்கிச்
சூரரக்கன்னியருடல்பணிசெய்யுங்
கடைக்கான்மடியும்பொங்கர்ப்பக்கமும்

மதுநிறைபிலிற்றிய - நிறைந்தமதுவைத் துளிக்கின்ற—பூவொடுநெருங்கி - மலர்களொடுநெருக்குற்று—சூரரக்கன்னியர் - சூரரமகளிர்கள்—உடல்பணிசெய்யும் - தமதுடலை நடுங்குதல்செய்கின்ற—கடைக்கான்மடியும் - ஊழிக்காற்று நடைபடுகின்ற—பொங்காப்பக்கமும் - சோலைப்பக்கங்களும்;

ஊடியாடுநர்த்திரையொடுபிணங்கித்
தோழியிற்றீர்க்கும்வையைததுழனியும்

ஊடியாடுநர் - தந்தந் தலைவரோடூடி நீராடுமகளிரை—திரையொடு - அலைகளாகியகைகளையக்கொண்டு—பிணங்கி - பின்னி—தோழியில் - தோழியைபபோல—தீர்கும் - அவ்வூடலைத் தீர்க்காநின்ற—வையைத்துழனியும்-வையைநதியினொலியும்;

அளவாவூழிமெய்யொடுசூழ்ந்து
நின்றுநின்றோங்கிநிலையறம்பெருக்கு
மாறாப்பெரும்புகழருணகர்க்கூடல்

அளவாவூழி - அளவுபடுத்தொணாதவுகாந்தத்திலும்—மெய்யொடுசூழ்ந்து - மெய்ம்மையாற்சூழப்பெற்று—நின்றுநின்று—ஊன்றுநிலைபெற்று—ஓங்கி - உயர்ந்து—நிலையறம்பெருக்கும் - கேடிலாத தருமத்தைவளர்க்காநின்ற—ஆறாபெரும்புகழ்-நீங்

காத மிக்கபுகழையுடைய—அருணகர்க்கூடல் - சத்திபீடங்களு யர்வாகிய கூடன்மாநகரத்தே;

பெண்ணுடல்பெற்றசென்னியம்பிறையோன்
பொற்றகடுபரப்பியகருமணிகிளையென
வண்டுநறுந்தேனுமருள்கிளைமுரற்றி
யுடைந்துமிழ்நறவுண்டுறங்குதார்க்கொன்றையன்

பெண்ணுடல்பெற்ற - பெண்ணைத் தன்னுடற் பாதியிற் கொண்ட—சென்னியம்பிறையோன் - முடியிற் பிறையைத்தரி த்தவனும்—பொற்றகடுபரப்பிய - பொற்றகட்டின்மேற்பரப்பி ய—கருமணிகிளையென - நீலமணியினொழுங்கென்றுசொல்ல— வண்டுந்தேனும் - ஆண்வண்டுகளும் பெணவண்டுகளும்—மரு ள்கிளைமுரற்றி - மருளப்படும் இசையைப் பாடி—உடைந்துமி ழ் - மலர்தலா லுமிழாநின்ற—நறவுண்டு-தேனையுண்டு—உறங் கு - தங்காநின்ற—தார்க்கொன்றையன் - கொன்றைமாலையை யுடையவனுமாகிய சோமசுந்தரக்கடவுளது;

திருவடிபுகழுநர்செல்வம்போலு
மண்ணுந்தெடுத்தவணியுறுவனமுலை

திருவடிபுகழுநர்-ஸ்ரீபாதத்தைப் புகழ்வோரது—செல்வம் போலும் - செல்வம் வளர்வதுபோலும் வளராநிற்கும்—அண் ணுந்தெடுத்த-மேலோங்கித் தலைநிமிர்ந்த—அணியுறுவனமுலை- ஆபரணங்கள் முற்றிய அழகுள்ள முலைகளானவை;

அவன்கழல்சொல்லுநரருவினைமானு
மலைமுலைப்பகையடமாழ்குறுநுசுப்பு

மலைமுலைப்பகையட - மலைபோன்ற முலைப்பகைவருத்துத லால்—மாழ்குறுநுசுப்பு - நல்குதலைப் பொருந்திய இடையான

து—அவன்கழல் - அக்கடவுள் திருவடியை—சொல்லுநா - பாடுகின்றவாது—அருவினையாலும் - தேய்தற்கரியவினை தேய்வதுபோன்றிருக்கும்;

மற்றவனசைத்தமாசுணம்பரப்பி
யமைத்ததுகடுக்குமணிப்பாம்பல்குல்

மணிப்பாம்பல்குல - மணிமுற்றிய பாம்பின்படமாகிய வல்குலானது—மற்றவனசைத்த - அச்சோமசுந்தரமூர்த்தி அரையிற்கட்டின—மாசுணம்பரப்பியமைத்ததுகடுக்கும் - பாம்பானது படத்தைவிரித்ததையொக்கும்;

இருகுழைகிழிக்குமரிமதர்மலர்க்கண்
ணங்கவன்றரித்தகலைமான்கடுக்கும்

இருகுழைகிழிக்கும் - இரண்டுதோடையுங் கிழித்துருவுகின்ற—அரிமதர்மலர்க்கண் - செவ்வரிபரந்த மதர்த்த மலர்க்கண்களானவை—ஆங்கவன்றரித்த - அப்பெருமான் கையின்கணேந்திய—கலைமான்கடுக்கும் - கலைமானையொத்திருக்கும்—எ-று.

என்னுயிர்வாட்டிய தொடியிளங்கொடிக்கு அண்ணந்தெடுத்த வணியுறுவனமுலை தார்க்கொன்றையன் றிருவடிபுகழுநர் செல்வம்போலு மாழ்குறநுசுப்பு, அவன்கழல்சொல்லுந ரருவினையாலும் அணிப்பாம்பல்குல் மற்றவனசைத்த மாசுணம்பரப்பி யமைத்ததுகடுக்கும் அரிமதர்மலர்க்கண் ணங்கவன்றரித்த கலைமான்கடுக்குமென வினைமுடிவுசெய்க. (௪௩)

## வன்புறையெதிரழிந்திரங்கல்.

வன்புறையெதிரழிந் திரங்கலென்பது - வழியொழுகி வற்புறுத்தின தோழியோடு, தலைமகன்வரைவு நீடுதலாற் றமக்கோர் பற்றுக கோடின்றிவருந்துந் திருவினை யுடையாளாகக அவன்வரைவுமிகவுமினிது யானுற்றேனெனத் தலைமகள் வன்புறை யெதிரழிந்திரங்காநிற்றல். அதற்குச்செய்யுள்.—

வந்தாய்பவளையில்லாமயின்முட்டையிளையமந்தி, பந்தாடிரும்பொழிற்பல்வரைநாடன்பண்போவினிதே, கொந்தார்நறுங்கொன்றைக்கூத்தன்றெனறில்லைதொழார்குழுப்போற், சிந்தாகுலமுற்றுப்பறறினறினையுந்திருவினர்க்கே. ௨௭௯

வன்கறைவேலோன் வரைவுநீ ட
வன்புறையழிந்தவண மனமழுங்கிய து

இ-ள். கொந்தார் - கொந்தார்ந்த—நறுங்கொன்றை - நறிய கொன்றையை யணிந்த—கூத்தன் - கூத்தனது—தென்றில்லை - தெறகின்கணுண்டாகிய தில்லையை—தொழார்குழுப்போல் - வணங்காதாரது திரள்போல—சிந்தாகுலமுற்று - மனககலக்கத்தையுற்று—பறறினறி - தமககோர்பற்றுக்கோடின்றி—னையும் - வருந்தும்—திருவினர்க்கு - திருவினையுடையவர்க்கு—வந்தாய்பவளையில்லா - சென்றுறாய வளையுடைத் தல்லாத—மயின்முட்டை - மயிலின்முட்டையை—இளையமந்தி - இளையமந்தி—பந்தாடு - பந்தாடி விளையாடும்—இரும்பொழில் - பெரிய பொழிலையுடைய—பல்வரைநாடன் - பலவாகிய வரைகளையுடைய நாட்டையுடையவனது—பண்போ - இயல்போ—இனிது-இனிது—எ-று. (௨௭௯)

கூடற்பெருமான்பொன்பிறழ்திருவடி
நெஞ்சிருத்தாதவஞ்சகர்போலச்
சலியாச்சார்புகிலையறநீங்கி
யரந்தையுற்றுநீடவின்றிரங்கு
முருந்தெயிற்றிளம்பிறைக்கோலந்
திருந்தியதிருநுதற்றுகிரிளங்கொடிக்கே. ௪௪

---*---

என்றசெஞ்சூழல் துகிரிளங்கொடிக்கே. பகுதி - வரைபொருட்பிரிதல், துறை - வன்புறையெதிரழிந்திரங்கல்.

வெடிவாற்பைங்கட்குறுநரியினத்தினை
யேழிடந்தோன்றியினனூற்கியைந்து
வீதிபோகியவாலுளைப்புரவி
யாக்கியவிஞ்சைப்பிறைமுடியந்தணன்

(இதனதுபதபபொருள்)

வெடிவால் - வெடித்த வாலினையும்—பைங்கண் - பசியகண்களையுமுடைய—குறுநரியினத்தினை - குறுமையான நரித்திரளை—ஏழிடந்தோன்றி - ஏழிடமுயர்ந்து—இனனூற்கியைந்து-சூரியன்சொல்லிய அசுவ விலக்கண நூற்குப் பொருந்தி—வீதிபோகிய - மதுராபுரிவீதியிற் செல்லுமாறு—வாலுளைப்புரவியாக்கிய - வெள்ளிய பிடரிமயிருள்ள குதிரைகளாகிய—விஞ்சைப்பிறைமுடியந்தணன் - மந்திரம்வல்ல பிறையை முடியின்கட்டரித்த அந்தணனாகிய;

இருநூலெனவும் பாடமுண்டு.

கொண்டோர்க்கேகுங்குறியுடைநன்று
ளன்னையரில்லத்தணிமடமங்கையா
கண்டனகருங்காட்டிபோல
வெலன்பேசியறிசெகுத்தோம்பிய

காலங்கோடாவளைவளர்பண்டம்
வருவனவாரிவண்டினந்தொடரக
கட்கயல்விழித்துப்பூத்துகின்மூடிக
குறத்தியர்குடத்தியர்வழிவிடநடந்து
கருங்கான்மள்ளருழவசேடியர்
கிளைகிளைவணங்கிமதகெதிர்கொள்ள

அன்னையரில்லத்து - தாய்வீட்டின் கண்ணிருக்கின்ற—அணிமடமங்கையர - அணிகளால் மடப்பமுளளமாதர்கள்—கொண்டோறகேகும் - தம்மைமணந்த நாயகன்வீட்டிற்குச் செல்லும்—குறியுண்டநன்னாள் - குறித்தலையுடைய நல்லநாளில்—கண்டனகவரும் - தாம் கண்டனவாகிய பொருள்களை யெல்லாங்கவர்ந்துசெல்லுகின்ற—காட்சிபோல- தோற்றத்தைப்போல—வேலன்பேசி-(மழைபெய்தலைக்குறித்து)வெறியாட்டாளன்றுதித்து—மறிசெகுத்து - ஆடுபலியிட்டு—ஓம்பிய-பூசித்த—காலங்கோடா-காலமாறுபடாத—வரைவளர்பண்டம்-மலையில் வளர்வனவாகிய பொருள்களுள்—வருவனவாரி - வருவனவற்றை வாரிக்கொண்டு—வண்டினந்தொடர - வண்டினங்கள்பின்றொடர—கட்கயல்விழித்து - கயல்களாகிய கண்களைவிழித்து—பூத்துகின்மூடி - மலர்களாகிய ஆடையால்மேனிமூடி—குறத்தியர்-குறப்பெண்களும்—குடத்தியர் - இடைப்பெண்களும்—வழிவிடநடந்து - வழிவிடாநிற்பநடந்து—கருங்கான்மள்ளர் - கரியகாலையுடைய வுழவர்களும்—உழவச்சேடியர் - உழத்தியராகியசேடிகளும்—கிளைகிளைவணங்கி - முறைமுறையாகவணங்கி—மதகெதிர்கொள்ள - மதகின்கண்ணெதிர்கொள்ள;

தண்ணடைக்கணவற்பண்புடன்புணரும்
வையமாமாதுமணந்துடன்சூழ்ந்த

கூடற்பெருமான்பொன்பிறழ்திருவடி
நெஞ்சிருத்தாதவஞ்சகர்போல

தண்ணடை - தண்ணிய நீரொழுக்கமுள்ள—கணவன் - (கடலாகிய) கணவனை—பண்புடன்புணரும்-(கற்பினாக்குரிய) வண்ணத்துடன்புணர்கின்ற—வையைமாமாது - வையையென்னும் பெரியபெண்ணானவள் - மணத்துடன்சூழ்ந்த-மணத்தோடுசூழப்பெற்ற—கூடற்பெருமான் - மதுரையிலெழுந்தருளிய பெருமானது—பொன்பிறழ்திருவடி - பொன்னை மாறுபடுத்துகின்றதிருவடியை—நெஞ்சிருத்தாத - மனத்தின்கணிருத்தாத—வஞ்சகர்போல - வஞ்சகரைப்போல;

சலியாசசார்புநிலையறநீங்கி
யரந்தையுற்றுநீடின்றிரங்கு
முருந்தெயிற்றிளம்பிறைகோலந்
திருந்தியதிருநுதற்றுகிரிளங்கொடிக்கே

சலியாச்சார்பு - ஒருகாலுஞ் சலித்தலில்லாத ஆதரவு - நிலையறநீங்கி - நிலைகெடச்சென்று—அரந்தையுற்று - துன்பங்கொண்டு—நீடின்றிரங்கும் - ஒழிவறநின்று வருந்துகின்ற—முருந்தெயிற்று - முருந்தைப்போன்ற பற்களையும்—இளம்பிறை - இளம்பிறைபோன்ற—கோலந்திருந்திய - தலையணிதிருந்தியுள்ள—திருநுதல் - அழகுள்ள நெற்றியினையுமுடைய—துகிரிளங்கொடிக்கு - இளமையான பவளக்கொடிபோன்ற தலைவிக்கு;

ஈன்றசெஞ்சூழற்கவர்வழிபிழைத்த
வெறிவிழிப்பிணாமருடபாமான்கன்றினை
மென்னடைக்குழைசெவிப்பெருவெறுங்கரும்பிடி

ஈன்றசெஞ்சூழல் - தான்பெற்ற அடர்ந்தகுழலினின்றும்—கவர்வழிபிழைத்த - கிளைவழியில்தப்பிய—வெறிவிழி - வெறித்

தவிழியினையும்—பிணர்மருப்பு - சருச்சரையுள்ள கொம்பினையு
முடைய—ஆமான்கன்றினை - காட்டுப் பசுவின்கன்றை—மென்
னடை - மெல்லியநடையினையும்—குழைசெவி - குழைகின்ற
செவியினையும்—பெறு - பெறுதலில்லாத—வெறுங்கரும்பிடி-
வெறுமையான கரிய பெண்யானை;

கணிப்பணைக்கவட்டுமணற்சுனைப்புறத்துந்
தழைக்குறமங்கையரைவனந்துவைக்கு
மூறற்குழிநிரைத்தகல்லறைப்பரப்பு
மானிடமாக்களரக்கிகைப்பட்டென
நாச்சுவைமடிக்குமுணவுதவாது
வைத்துவைத்தெடுக்குஞ்சாரனுடன்

கணிப்பணைக்கவட்டும் - வேங்கையின் பருமையான கிளைக்
கவட்டிலும்—மணற்சுனைப்புறத்தும் - மணலையுடைய சுனையி
னிடத்தும்—தழைக்குறமங்கையர் - தழைகளையுடுக்குங் குறமா
தர்கள்—ஐவனந்துவைக்கும் - மலைநெல்லையிடிக்கின்ற—ஊறற்
குழிநிரைத்த - ஊற்குழிகணெருங்கிய—கல்லறைப்பரப்பும்-
குகைகளின்பரப்பினும்—மானிடமாக்கள் - மானிடராகியமனி
தர்கள்—அரக்கிகைப்பட்டென - அரக்கிகையி லகப்பட்டாற்
போல—நாச்சுவைமடிக்கும் - நாவை சுவையறிய மடித்து—உ
ண - உண்ணுதற்கு—உதவாது - உதவாமையால்—வைத்து
வைத்து - வைத்துவைத்து—எடுக்கும் - கையாலெடுத்தற்கிட
மாகிய—சாரனுடன் - மலைச்சாரலையுடைய நாட்டையுடைய
தலைவனது;

அறிவும்பொறையும்பொருளறிகல்வியு
மொழுக்கமுங்குலனுமழுக்கறுதவமு
மினிமையுமன்புமீண்டவுநன்றே

அறிவும்-அறிவும்—பொறையும்-பிழைபொறுத்தலையும்—பொருளறிகல்வியும் - உண்மைப்பொருளையறியுங் கல்வியும்—ஒழுக்கமும் - நல்லொழுக்கமும்—குலனும் - நற்குலமும்—அழுக்கறுதவமும் - அழுக்கற்றதவமும்—இனிமையும் - இன்சொலும்—புண்பும் - குணமும்—ஈண்டவும் - மிகவும்—நன்றே- நன்றாயிருக்கின்றன—எ-று.

நரிகளைப்பரிகளாக்கிய கூடற்பெருமான் திருவடியையிருத்தாத வஞ்சகாபோல சாரனுடன்றுகிரிளங்கொடிக்கு அறிவுபொறைமுதலியன மிகவும்நன்றெனை வினைமுடிவுசெய்க. (௯௪)

---

## அன்னமோடழிதல்.

அன்னமோடழிதலென்பது - பங்கயத்தை நோக்கிப் பரிவுறுகின்றவள், உலகமெல்லாந்துயிலாநின்ற விந்நிலைமைக்கண்ணும் யான் றுயிலாமைக்குக்காரணமாகிய என் வருத்தத்தைச் சென்று அவர்க்குசசொல்லாது தான் றன்சேவலைபபொருந்திக் கவற்சியின்றித் துயிலாநின்றதென அன்னத்தோடழிந்துகூறுகிற்றல். அதற்குச்செய்யுள.—

மூவறழீஇயவருண்முதலோன்றில்லைச் செல்வன்முந்நீர்
நாவறழீஇயவிந்நாணிலந்துஞ்சுநயந்தவின்பச் [சொங்
சேவறழீஇச்சென்று தான்றுஞ்சும்யான்றுயி லாச்செயி
காவறழீஇயவர்கோதாதளியகளியன்னமே. (௧௯௧)

இன்னகையவ ளிரவருதுய ர
மன்னத்தோ டழிந்துரைத்த து.

இ-ள். மூவறழீஇய - மூவலைப்பொருந்திய—அருண்முதலோன்-அருளையுடையமுதல்வன்—தில்லைச்செல்வன்- தில்லைநக

ளுள்ளாகிய செல்லல்—முந்நீர்நாவறழீஇய - அவனுடைய கட லாற் சூழப்பட்ட நாவலைப்பொருந்திய—இந்நானிலந்துஞ்சம - இந்நானிலமுழுதுந் துஞ்சாநின்றது—யான்றுயிலாசசெயிர - இ பபொழுதினும் யான் றுயிலாமைககுக காரணமாகிய வருத்தத தை—எங்காவறழீஇயவர்ககு - எமது காவலைப பொருநதினவர் ககு—ஓதாது - உரையாதே—அளிய - அளித்தாகிய—களியன் னம் - களியன்னம்—சென்று - இவ்விடத்து நின்றும்போய்—ந யந்தவின்பம் - தான்நயந்தவின் பத்தைச்செய்யும்—சேவறழீஇ- சேவலைத்தழுவி—தானலுஞ்சும் - ஒருகவற்சியின்றித் தான்றுயி லாநின்றது இனியிது கூறுவாராயாவா—எ-று (கசுக)

நேரிசையாசிரியபபா

கவைத்துகிர்வடவையிற்றிரட்சிகைபரப்பி
யணைபெறபபிணித்தகற்குளிமாகக
ளுள்ளந்தீக்குமுவாக்கடலுடுத்த
நாவலந்தண்பொழிலின்புடன்றுயில
வுலகறவிழுங்கியநளளென்கங்கு
றுயிலாக்கேளுடனுயிரினைதேரு
நெட்டுடற்பேழவாய்க்கழுதுமுறஙகப
பிள்ளையுமபெடையும்பறைவரத்தழீஇச்
சுற்றமுஞ்சூழ்ந்துகுருகுகண்படுப்பக்
கிழருமபணைத்தமுள்ளரைமுளரி
யிதழ்க்கதவடைத்துமலரகண்டுயில
விரிசினைபொதுளியபாசிலையொடுக்கிப்
பூவொடும்வண்டொடும்பொஙகருமுறஙகப
பான்முகக்களவின்குறுஙகாய்பபசினா
புட்காற்பாட்டினாககுறையுள்கொடுதக
யயிாக்குறைகருவிதுணைககுழையிலைப்ப

வரிந்தவிந்தனச்சுணைமமதியரவிதழ்
பகன்றுகட்டவிழ்ந்தசேகரத்திருத்தி
வீதிபுங்கவலையுமிகவளம்புகன்று
பொழுதுகண்மறைந்ததீவாய்ச்செக்கர்
தணந்தோருள்ளத்துள்ளுறப்புகுந்தபின்
காருடல்காட்டிக்கண்டகண்புதைய
அல்லெனுமங்கைமெல்லெனப்பார்க்க
முரன்றெழுகானமுயன்றுவாதியைந்த
வடபுலவிஞ்சையன்வைகிடத்தகன்கடைத்
தென்றிசைப்பாணனடிமையானெனப்
போகாவிறகுடன்றலைக்கடைபொருந்தி
யுந்தித்தோற்றமோசைநின்றொடுங்கப்
பாலையிலெழுப்பியமரிசைபயிற்றித்
தூங்கலுந்துள்ளலுஞ்சுண்டிநின்றெழுதலுந்
தாரியிறகாட்டித்தருஞ்சாதாரி
யுலகுயிருள்ளமுமொன்றுபட்டொடுங்க
விசைவிதிபாடியிசைப்பகைதுரந்த
கூடற்கிறையோன்றாள்விடுத்தோனென
என்கண்டுஞ்சாநீர்மை
முன்கண்டோதாதவர்க்குநங்குருகே. ௪௫

---*---

கவைத்துகிரவடவை யவர்க்குநங்குருகே பகுதி - ஒருவழித்தணத்தல், துறை - அன்னமோடழிதல்

கவைத்துகிரவடவையிற்றிரடசிகைபரபபி
யணைபெறபபிணித்தகற்குளிமாக்க
ளுள்ளநதிககுழுவர்ககடலுடுத்த
நாவலந்தண்பொழிலின்புடன்றுயில

(இதனது பதப்பொருள்)

கலை - கிளைகளாகிய—துகிர்-பவளக்கொடிகள்—வடவை யில - வடவாமுகாக்கினியைப்போல—திரட்சினைபரப்பி - திரட் சியுள்ளனவாய பக்கங்களிற்பரப்பி—அனைபெறப்பிணித்த-அ னையிற கயிறுபெறக் கட்டிய—கற்குளிமாக்கள - முத்துமுதலி ய மணிகளைக் குளித்தெடுக்கு மாந்தர்களது—உள்ளந்தீக்கும் - உள்ளத்தை யெரிக்கின்ற—உவர்க்கடலுடுத்த - உப்புக்கடல் சூழ்ந்த—நாவலந்தண்பொழில - தட்பமான நாவலந்தீவிலுள ளோர்—இன்புடன்றுயில - இன்புடனே கண்ணுறங்காநிற்பவும்;

உலகறவிழுங்கியநள்ளென்கங்கு
றுயிலாக்கேளுடனுயிரினைதேரு
நெடுடலிற்பேழ்வாய்க்கழுதுமுறங்க

உலகறவிழுங்கிய-உலகத்தை முழுதும்விழுங்கிய—நள்ளெ ன்கங்குல் - நடுராத்திரியில்—துயிலாக்கேளுடன் - உறங்குதலி ல்லாத சுற்றத்தோடு—உயிரினைதேரும் - உயிர்களாகிய இரை யைத்தேடுகின்ற—நெடுடல் - நெடியவுடலினையும்—பேழ்வா ய் - பெரியவாயினையுமுடைய—கழுதுமுறங்க - பேய்க்கணங்க ளுந் தூங்காநிற்பவும்;

பிள்ளையும்பெடையும்பறைவரத்தழீஇச்
சுற்றமுஞ்சூழ்ந்துகுருகுகண்படுப்ப

பிள்ளையும் - தங் குஞ்சுகளையும்—பெடையும் - பெடையை யும்—பறைவரத்தழீஇ - இறகினுள்ளேதழுவி—சுற்றமுஞ்சூழ ந்து - தஞ் சுற்றத்தோடுஞ்சூழ்ந்து—குருகு - குருகினங்கள— கண்படுப்ப - கண்ணுறங்காநிற்பவும்;

கீழுரும்பணைத்தமுள்ளரைமுளரி
யிதழகத்தடைத்துமலர்க்கண்டுயில

கீழரும்பணைத்த - கீழேயரும்புகளையணைத்த—முள்ளமுளரி - முள்ளைத்தாமரைகள—இதழ்ச்சகதவடைத்து - இதழ்களாகிய கதவங்களை மூடிக்கொண்டு—மலர்க்கண்டுயில - மலர்களாகிய கண்ணுறங்காநிற்பவும்;

விரிசினைபொதுளியபாசிலையொடுக்கிப
பூவொடும்வண்டொடும்பொங்கருமுறங்க

விரிசினைபொதுளிய - விரிந்தகிளைகளிற்றளிர்த்த—பாசிலையொடுக்கி - பசிய இலைகளை யொடுக்கிக்கொண்டு—பூவொடும்வண்டொடும் - மலர்களோடும் வண்டுகளோடும்—பொங்கருமுறங்க - சோலைகளுந் துயிலாநிற்பவும்;

பானமுகக்களவினகுறுங்காயப்பசசினை
புட்காற்பாட்டினாக்குறைறயுளகொடுத்த
மயிர்க்குறைறகருவித்துணைக்குழையலைப்ப

புட்காற்பாட்டினாக்கு - புள்ளின் காலகளையுடைய தும்புருநாரதராகிய யாழ்வலவர் பாடலுக்கு—உறையுள்கொடுத்த-உறையுளாகக்கொடுத்த—பானமுகம - பாலைத் தன்னிடத்திலுள்ள—களவின் - களவினது—குறுங்காயப்பச்சினை - குறியகாயுடன்பொருந்திய பச்சிலைக்கொத்துகள—மயிர்க்குறைறகருவி - மயிரைக்குறைக்கின்ற கத்திரிகைபோன்ற—துணைக்குழை - இரணடுகாதிலும்—அலைப்ப - அசையாநிற்ப;

வரிந்தவிந்தனச்சுமைமதியரவிதழ்
யகன்றுகட்டவிழ்ந்தசேகரத்திருத்தி

வரிந்த - கட்டப்பட்ட—இந்தனச்சுமை- விறகுகட்டை—மதியரவிதழ் - திங்களும் பாம்புங்கொன்றையும்—அகன்று - நீங்கி—கட்டவிழ்ந்த - கட்டுநீங்கிய—சேகரத்திருத்தி-முடிமேல வைத்து;

வீதியுங்கவலையுமிகவளம்படுகன்று
பொழுதுகண்மறைந்ததீவாய்ச்செக்கர்
தணந்தோருள்ளத்துள்ளுறப்புகுந்தபின்
காருடல்காட்டிக்கண்டகண்புதைய
அல்லெனுமங்கைமெல்லெனப்பாரக்க

வீதியுங்கவலையும் - வீதிகளினுஞ் சந்துகளினும்—மிகவளம்படுகன்று - அதிகவிலைபகர்ந்து—பொழுதுகண்மறைந்த - சூரியன்கண்ணினின்றுமறைந்த—தீவாய்ச்செக்கர் - தீயையொத்தசெவ்வானமானது—தணந்தோருள்ளத்துள் - பிரிந்தோருள்ளத்துள்ளே—உறப்புகுந்தபின் - உருவி நுழைந்தபின்னர்—காருடல்காட்டி - கரியவுடலை யாவருக்குங்காட்டி—கண்டகண்புதைய - கண்டகண்கள் தன்னிற்புதையுமாறு—அல்லெனுமங்கை - இருளென்னும் பெண்ணும்—மெல்லெனப்பாரக்க - மெல்லப் பாராநிற்கவும்;

மூன்றெழுகானமுயன்றுவாதியைந்த
வடபுலவிஞைசயனைவைகிடத்தகன்கடைத்
தென்றிசைப்பாணனடிமையானெனப்
போகாவிரகுடன்றலைக்கட்பொருந்தி

மூன்றெழுகானம் - சத்தித்தெழாநின்ற விசைநூலில்—முயன்று - முயற்சியுள்ளவனாகி—வாதியைந்த - வாதுசெய்யவிசைந்த—வடபுலவிஞைசயன - வடதேயத்தினின்றும்வந்த ஏமநாதனென்னும்பாணன்—வைகிடத்தகன்கடை - தங்கியிருக்கும்வீட்டின்கண் பெரியவாய்தலில்—தென்றிசைப்பாணன் - தென்மதுரையிலுள்ள பாணபத்திரனது—அடிமையானென - அடிமையானவனென்றுரைத்து—போகாவிரகுடன் - விலைபோ

காத விறகோடு—தலைக்கடைபொருந்தி - தலைக்கடையி னிரு ந்து;

உந்தித்தோற்றமோசைநின்றெடுங்கப
பாலையிலெழுப்பியமரிசைபயிற்றித்
தூங்கலுந்துள்ளலுஞ்சுண்டிநின்றெழுதலுந்
தாரியிற்காட்டித்தருஞ்சாதாரி
யுலகுயிருள்ளமுமொன்றுபட்டொடுங்க
விசைவிதிபாடியிசைப்பகைதுரந்த
கூடற்கிறைறயோன்றாள்விடுத்தோரென

உந்தித்தோற்றம் - நாபியினின்றுந் தோற்றமாகிய—ஓசைநி ன்றொடுங்க - ஓசையானது அங்ஙன நின்றொடுங்க—பாலையிலெ ழுப்பி - பாலையென்னும்பண்ணில் ஆரோகணமாக எழுப்பி—அ மரிசைபயிற்றி - அவரோகணமாக இறக்கி—தூங்கலும் - தூங் கலும்—துள்ளலும் - துள்ளலும்—சுண்டிநின்றெழுதலும்-மெ லிந்துநின்றெழுதலும்—தாரியிற்காட்டி - ஒழுங்காகக்காட்டி— தரும் - தந்த—சாதாரி-சாதாரியென்னும் இசையை—உலகுயி ர் - உலகத்திலுள்ளஉயிர்கள்—ஒன்றுபட்டொடுங்க - ஒருமைப பட்டடங்க—இசைவிதிபாடி - கந்தருவ நூன்முறை பாடிய ருளிய—இசைபபகைதுரந்த - பத்திரன்பகைவனாகிய பாணனை ஒட்டிய—கூடற்கிறையோன் - மதுரைக்கிறைவனாகிய சோமசு ந்தரமூர்த்தியினது—தாள்விடுத்தோரென - திருவடியை நினை யாதுவிட்டார்போல;

என்கண்டுஞ்சாநீர்மை
முன்கண்டோதாதவாக்குநங்குருகே.

என்கண்டுஞ்சா - என்கண்ணுறங்காத—நீர்மை - தன்மை யை—நங்குருகு - நமது குருகானது—முனகணடு - முன்னறிந

தும்—அவர்க்கு - அந்தத் தலைவர்க்கு—ஒதாது - சொல்லாது என்செய்கேன்—எ-று.

நாவலாதண்பொழி லின்புடன்றுயில கழுநுமுறங்க முளரி இதழ்க்கதவடைத்து மலர்க்கண்டுயில பூவொடும்வண்டொடும் பொங்கருமுறங்க இந்தனச்சுமை சேகாதிருத்தி அல்லெனுமங்கையு மெல்லெனப்பார்க்க வாதியைந்த வடபுலவிஞ்சையன் வைகிடத்தகன்கடை தென்திசைப்பாண னடிமையானென போகாவிறகுடன் தலைக்கடைப்பொருந்தி இசைவிதிபாடி இசைபபகைதுரந்த கூடற்கிறையோன் றுள்விடுத்தோரென என்கண்டுஞ்சா நீர்மைநங்குருகு அவர்கு ஒதாதென்செய்கேனென விணைமுடிவுசெய்க.　　　　(சு௫)

---

## சொல்லாதேகல்.

சொல்லாதேகலென்பது - நீயேகூறென்றதோழிக்கு, யானெவ்வாறுகூறினும் அவள்பிரிவுடம்படாளாதலின் ஒருகாலுமவளைந்துகொள்கையில்லை யான்வினையவருவேன் அவ்வளவும நீயாற்றுவித்துககொண டிருப்பாயாகவெனக்கூறித் தலைமகன் றலைமகளுக்குச்சொல்லாது பிரியாநிற்றல், அதற்குச்செய்யுள்.—

வருட்டிற்றிகைக்கும்வசிக்கிற்றுளங்குமனமகிழ்ந்து
தெருட்டிற்றெளியலள்செப்பும்வகையில்லைசீரருக்கன்
குருட்டிற்புகச்செற்றகோன்புலியூர்குறுகார்மனம்போன
றிருட்டிறபுரிகுழலாட்கெங்ஙனேசொல்லியேகுவனே.

நினைவலை வா　　　　ட
வுரையா தகன ற　　　　து.

இ-ள். வருட்டில் - நுதலுந தோளுமுதலாயி னவற்றைத் தைவந்து ஒன்றுசொல்லககுறிபபேனாயின்—திகைககும் -இஃதெ

ன்கருதிச் செய்கின்றானென்று மயங்காநிற்கும்—வசிக்கில் - இ ன்சொல்லின்வசித்து ஒன்று சொல்லலுறுவேனாயின்—துளங்கு ம் - அக்குறிப்பறிந்து உண்ணடுங்காநிற்கும்—தெருட்டில் - இ னி வெளிபபடப் பிரிவுணர்த்திப் பொருண்முடித்துக் கடிதின் வருவலென்று கூறூற்றுத் தெளிவிப்பேனாயின்—மனமகிழ்ந்து- மனமகிழ்ந்து—தெளியலள் - அதனைத்தேறாள்—செப்பும் வ கையில்லை - இவ்வாறொழிய அறிவிக்கும் வகைவேறில்லை—சிறு ருக்கன் - பெருமைமையயுடைய வருககன்—குருட்டிற்புக-குரு டாகிய இழிபிறப்பிற் புகும்வண்ணம்—செற்றகோன் - அவனை வெகுண்டதலைவனது—புலியூர் - புலியூரை—குறுகார் - அணு கசதார்—மனம்போன்று - மனம்போன்று—இருட்டில் - இருட் டுதலையுடைய—புரிகுழலாட்கு - சுருண்டகுழலையுடையாட்குப் பிரிவை—எங்ஙனே - எவ்வண்ணம்—சொல்லியேகுவன்- சொ ல்லிபபோவேன் ஒருவாற்றானுமரிது—எ-று. (௨௭0)

---

நேரிசையாசிரியப்பா.

இலைதெளிறுளதென் றுள்ளமொர்டுவிதித்துஞ்
சொல்லாநிலைபெறுஞ்கூறுறின் மயங்கிச்
செய்குறிக்குணனுஞ்சிந்தைபுட்டிரிவு
முறைமுனின்றறிந்துபழங்கண்கவர்ந்துங்
கண்ணெதிர்வைகிமுகன்கொளிற்கலங்கியும்
வழங்குறுகிளவியிற்றிசையெனமாழ்கியு
மொருதிசைநோக்கினுமிருக்கினுமுடைந்தும்
போகுகெனவுழையரயர்ப்பிடைகிளப்பினு
முலைக்குவட்டொழுக்கியவருவிதண்டாளுஞ்
செம்மணிகரிந்துதீத்தரவுயிர்த்தும்
போமெனவாய்ச்சொற்கேட்பினும்புகைந்துங்

கொள்ளாருந்திருங்கொண்டோரிசைத்தலு
மீதெனககாட்டியமயினமடவார்க்கு
முன்னொருவனிதனமகப்பேறின்மையின
மருமானறன்னைமகவெனச்சடங்குசெய
துள்ளமுங்கரவுமவனுழியொருகவி
முக்கவாததிருநதிதுணையுடன்மூழ்கி
யப்புலத்துயிர்கொடுத்தருட்பொருள கொண்டபி
மற்றவன்றாயம்வவ்வுறுமாக்கள் [ன்
காணிகைககொண்டமறுநிலைமைந்தனை
நினைத்துககிளைகொணடுவழககுய்த்தலு
மைந்தனுங்கேளிருமதிமுடிககடவுணின
புதறியொன்றன்றிப்புகலிலமென்றய
ரவழியொருசாரவனமாதுலனென
வறிவொளிநிறைவேயோருருத்தரித்துவந
தருள்வழக்கேறியவாவழக்குடைத்த
கூடனாயகனருள்பணியாரென
எவ்வழிக்கிளவிபிறகூறிச
செவ்விதிறசெல்லுந்திறமினியானே. ௬௯

---

இலதெனினுளதென றிறமினியானே. பகுதி - வரைபொருட்பிரிதல், துறை - சொலலாதேகல். *

இலதெனினுளதென்றுளமொடுவிதித்துஞ
சொலலாநிலைபெறுங்குருநின்மயங்கிச
செயகுறிகுணனுஞசிநதையுடடிரிவும

(இதனதுபதப்பொருள.)

இலதெனில - யான்பிரிவேனிலலையெனச சொலலின - உளதென்று - பிரிவுளதென்றுகருதி--உளமொடுவிதிதது - த

ன்னுள்ளத்தி னிச்சயித்தும்—சொல்லாநிலைபெறும் - ஒன்று சொல்லாதுமௌனமாகவிருக்கும்—சூளுறின் - சபதங்கொண்டால்—செய்குறிகுணனும்- செய்கைகளுங் குணங்களும்—மயங்கி - பிறழ்ந்து—சிந்தையுட்டிரிவும் - மநம் வேறுபட்டும்;

திரிந்துமென்பது - திரிவுமெனநின்றது.

உழைநின்றறிந்துபழங்கண்கவர்ந்துங்
கண்ணெதிர்வைகிமுகன்கொளிற்கலங்கியும்

உழைநின்று - பககங்களினின்று, அறிந்து - பேசுஞ்சொல்லிற் குறிப்பறிந்து—பழங்கண்கவர்ந்தும் - துன்பப்படுதற்குக காரணமானதைக கிரகித்தும்—கண்ணெதிர்வைகி - கண்முன்னேநின்று—முகன்கொளில் - முகத்தைப்பார்த்தால்—கலங்கியும் - மனங்கலங்கியும்;

வழங்குறுகிளவியிற்றிசையெனமாழ்கியு
மொருதிசைநோககினுமிருககினுமுடைந்தும்

வழஙகுறுகிளவியில் - பேசுஞ் சொற்களில்—திசையென- திசையென்றுசொன்னவளவில்—மாழ்கியும் - மயங்கியும்—ஒருதிசைநோக்கினும் - யாதொருதிசையை நோக்கினாலும்—இருக்கினும் - அத்திசையின்கணிருககினும்—உடைந்தும் - இஃது பிரிவின்குறியென மநமுடைந்தும்;

போககெனவுழையரயர்ப்பிடைகிளப்பினு
முலைக்குவட்டொழுக்கியவருவிதண்டாளஞ்
செம்மணிகரிந்துதீத்தரவுயிர்த்தும்

உழையா-ஏவலாளிகள்—அயர்பபிடைபோககெனக் கிளப்பினும் - போககுளசென்று மறவியிற சொல்லினும்—முலைககு

வட்டொழுக்கிய - மூலைகளாகிய மலைகளின்மேல்வீழ்த்திய—அருவி - கண்ணருவியுடன்—தணடாளம் - தட்பமாகிய முத்துக்களும்—செம்மணி - சிவப்பாகியமணிகளும்—கரிந்துதீத்தா - தீந்துகரியுமாறுநெருப்பாக—உயிர்த்தும் - பெருமூசசெறிந்தும்;

போமென்வாய்ச்சொற்கேட்பினும்புகைந்துங்
கொள்ளாரறுதியுங்கொண்டோரிசைத்தலு
மீதெனக்காட்டியமயின்மடவாற்கு

போமென் - நீவிரசெல்லுமென்னும்—வாய்ச்சொற்கேட்பினும் - பிறாவாய்ச்சொல்லைக காதாற கேட்பினும்—புகைந்தும்- மாம்புகைந்தும்—கொளளார் - பிரிவெனனுந் துன்பிணைக கொளளாதவர்களது—அறுதியும் - முடிவும்—கொணடோா - பிரிவென்னுந துன்பிணைககொண்டோரது—இசைததலும் - சொல்லுதலாகிய முடிவுமட—ஈதெனக்காட்டிய - இத்தன்மையதென்றுவெளிப்படுத்திய—மயின்மடவாற்கு - மயில்போலுநதலைவிக்கு;

இனியான
முன்னொருவணிகன்மகபபேறினமையின்
மருமானறன்னைமகவெனசசடங்குசெய
துள்ளமுங்கரணமுமவனுழியொருககி
முக்கவாத்திருநதிதுணையுடன்மூழ்கி
யப்புலத்துயிர்கொடுத்தருட்பொருளகொணடபினா

இனியான் - இப்பொழுதியான்—முன் - முற்காலத்தில்—ஒருவணிகன் - ஒருவணிகனனவன்—மகபபேறின்மையின் - பிள்ளைப்பேறில்லாமையால்—மருமான்றன்னை - மருமகனை—மகவென - பிள்ளையாக—சடங்குசெய்து - ஸ்ரீகாரஞ் செயதுகொ

ண்டு—உள்ளமுங்கரணமும் - தன்னுயிரு மந்தக்கரணமும்—அவனுழியொருக்கி - அபபிள்ளையினிடத் தொருங்குவைத்து—முக்கவர்த்திருநதி-கஙகை யமுனை வாணியெனனு முககூடலா கியமாதீர்த்தத்தில்—துணையுடன்மூழ்கி - மனையவளோடு ஸ்நா நஞ்செய்து—அபபுலதது - அவவடகாசியில்—உயிர்கொடுத்து-வியோகமடைந்து—அருட்பொருள் - அருளாகிய பொருளை—கொண்டபின - அவ்வணிகன்மறுமையிற கைககொண்டபின்னர்;

மற்றவன்றுயம்வவ்வுறுமாக்கள்
காணிகைககொண்டமறுநிலைமைந்தனை
நிரைத்துககிளைகொணெடுவழககுய்த்தலும்

மற்றவன்றுயம் - அவனுககுஞாதியாகிய—வவ்வுறுமாக்கள்-பொருள்கவருஞ் சுற்றத்தார—காணிகைககொணட-முன்னமவன் காணியைக கைக்கொணடிருந்த—மறுநிலைமைந்தனை-வேறுகோத்திரப்புத்திரனை—கிளைகொள் - சுற்றத்தாரைக் கொண்டு—நிரைத்து - சபைகூட்டி—நெடுவழககு - நெருங்கியவழக்கில்—உய்த்தலும் - செலுத்தித்தாங் காணிகைககொள்ளுதலும்;

மைந்தனுங்கேளிருமதிமுடிக்கடவுணின்
புந்தியொன்றன்றிப்புகலிலமென்றய
ரவ்வுழியொருசாரவன்மாதுலனென
வறிவொளிநிறைவேயோருருத்தரித்துவந்து

மைந்தனும் - அப்புதல்வனும்—கேளிரும் - மற்றையுறவினரும்—மதிமுடிக்கடவுள்-முடியின்கண் மதியைத்தரித்த கடவுளே—நின்புந்தியொன்றன்றி - உனதுதிருவுளமாகிய வோர்புகலிடனல்லாமல்—புகலிலமென்று - வேறுதர வில்லேமென்று—அயா - வருநதுகின்ற—அவ்வுழி - அந்நிலையில்—ஒருசார்-

ஒருபக்கத்திலிருந்து—அவன்மாதுலனென - அவன் மாமனைப
போல—அறிவொளிநிறைவே - அறிவாகிய பூரணபிர காசமே
—ஒருருத்தரித்துவந்து - ஓர் திருமேனியாகக்கொண்டுவந்து;

அருள்வழக்கேறியவர்வழக்குடைத்த
கூடலுநாயகன்றாள்பணியாரென
எவ்வழிக்கிளவியிற்கூறிச
செவ்விதிற்செல்லுந்திறம்

அருள்வழக்கேறி - அருளால் வழக்குப்பேசி—அவர்வழக்கு
டைத்த - அத்தாயத்தோரதுவழக்கைக் கெடுத்தருளிய—கூட
லுநாயகன்—மதுரைக்குநாயகனாகிய சோமசுந்தரமூர்த்தியினது—
தாள் - திருவடிகளை—பணியாரென - வணங்காதார்போல—எ
வ்வழி - எவ்வாற்றான்—கிளவியிற்கூறி - சொல்லாற்சொல்லி
—செவ்விதில் - நேர்மையாக—செல்லுந்திறம் - பிரிந்துசெல்
லும்வகை—எ-று.

விதித்தும் திரிந்தும் கவர்ந்தும் கலங்கியும் மாழ்கியும் உ
டைந்தும் உயிர்த்தும் புகைந்தும் அறுதியும் இசைத்தலும் காட்
டியமடவரற்கு யானினி கூடலுநாயகன்றாள்பணியாரென எவ்வழி
க்கிளவியிற்கூறிச் செல்லுந்திறனென வினைமுடிவுசெய்க.(சகூ)

---

## தெளிதல்.

தெளிதலென்பது - ஐயுற்றபின்னர் அவயவ மியங்கக்கண்
டு இவள் தெய்வமல்லளென்று தெளியாநிற்றல். அதற்குச் செ
ய்யுள்.—

பாயும்விடையரன்றில்லையன்னாள்படைக்கண்ணிமைக்கு
தோயுநிலத்தடிதூமலர்வாடுந்துயரமெய்தி [ந

யாயுமனனேயணங்கல்லளம்மாமுலைசுமந்து
தேயுமருங்குற்பெரும்பணைத்தோளிச்சிறுநுதலே. (௯)

அணங்கல்லளென் றயில்வேலவன்
குணங்களைநோக்கிக் குறித்துரைத்தது.

இ-ள். பாயும் - பாய்ந்துசெல்லும்—விடை - விடையையுடைய—அரன் - அரனது—தில்லையன்னாள் - தில்லையை யொப்பாளுடைய—படைக்கண் - படைபோலுங்கண்கள்—இமைக்கும் - இமையாநின்றன—நிலத்து - நிலத்தின்கண்—அடிதோயும்-அடிதீண்டாநின்றன—தூமலர் - தூயமலர்கள்—வாடும்-வாடாநின்றன; ஆதலின்—துயரமெய்தி-துயரத்தையெய்தி—ஆயுமனனே - ஆராயுமனனே—அம்மா - அழகியபெரியவாகிய—முலைசுமந்து - முலைகளைச்சுமந்து—தேயும் - தேயாநின்ற—மருங்குல் - மருங்குலையும்—பெரும்பணை - பணைபோலும்பெரிய—தோள் - தோள்களையுமுடைய—இச்சிறுநுதல் - இச்சிறுநுதல—அணங்கல்லள் - தெய்வமல்லள்—எ-று. (௯)

நேரிசையாசிரியப்பா.

நின்றறிகல்வியொன்றியமாந்தர்
புனைபெருங்கவியுட்டருபொருளென்ன
வோங்கிப்புடைபரந்தமுதமுள்ளூறிக்
காண்குறிபெருத்துக்கச்சவைகடிந்தே
யெழுத்துமணிபொன்பூமலையெனயாப்புற்
றணிபெருமுலைமேற்கோதையுமொடுங்கின
செங்கோலரசன்முறைத்தொழில்போல
வமுதமுங்கடுவும்வாளும்படைத்த
மதர்விழித்தாமரைமலர்ந்திமைத்தமர்த்தன

செய்குறைமுடிப்பவர்செனனம்போலப்
பதமலர்மண்மிசைப்பற்றிப்பரந்தன
வமுதம்பொடித்தமுழுமதியென்ன
முகம்வெயர்ப்புறுத்தினவுள்ளமுஞ்சுழன்றன
விதழியுந்தும்பையுமதியமுங்கரந்து
வளைவிலைமாக்கள்வடிவெடுத்தருளி
முத்தமிழ்நான்மறைமுளைத்தருள்வாக்கால்
வீதிகூறிவிதித்தமுன்வரத்தாற்
கருமுகில்விளர்ப்பவறனீர்குளிப்பக்
கண்புதையாப்புத்திணியிருள்விடிய
வுடனெறும்பிணித்தபாவமும்புலரக்
கண்டனீள்கதுப்பினர்கைகுவிபிடித்துக்
குருகணிசெறித்ததனிமுதனுயகன்
குருகுமன்னமும்வால்வளைக்குப்பையை
யண்டமும்பார்ப்புமாமெனவணைக்கும்
மலைநீர்ப்பழனமுதுநகர்க்கூட
லொப்புடைத்தாயவிப்பொற்றொடிமடந்தை
யணங்கினளாமெனநினையல்
பிணங்கிவீழ்ந்துமாழ்குறுமனனே.　　சஎ

---*---

நின்றறிகல்வி மாழ்குறுமனனே. பகுதி - இயற்கைப்புண
ர்ச்சி, துறை - தெளிதல். *

பிணங்கிவீழ்ந்துமாழ்குறுமனனே.

(இதனதுபதப்பொருள்.)

பிணங்கி - என்னெடுமாறுபட்டு—வீழ்ந்து - இச்சித்து-
மாழ்குறும் - மயங்காநின்ற—மனனே-மனமேகேட்பாயாக;

இதழியுந்தும்பையுமதியமுங்கரந்து
வளைவிலைமாக்கள்வடிவெடுத்தருளி

இதழியும்-கொன்றைமாலையையும்—தும்பையும்-தும்பைமாலையையும்—மதியமும் - இளமதியையும்—கரந்து-மறைத்து—வளைவிலைமாககள் - வளையல் விறபவராது—வடிவெடுத்தருளி-உருவங்கொண்டருளி;

முத்தமிழ்நான்மறைமுளைத்தருள்வாக்கால்

முத்தமிழ் - இயலிசைநாடகமாகிய முத்தமிழும்—நான்மறை - நான்குவேதங்களும்—முளைத்தருள் - பிறந்தருளிய—வாககால் - திருவாக்கால்;

வீதிகூறிவிதித்தமுன்வரத்தாற்
கருமுகில்விளர்பபவறனீர்குளிப்பக்
கணபுதையாப்புத்திணியிருள்விடிய
வுடற்றொறும்பிணித்தபாவமும்புலர

வீதிகூறி - வீதியின்கண் விலைகூறி—விதித்தமுன்வரத்தால் - முறகாலத்திற்கட்டளையிட்ட வரங்காரணமாக—கருமுகில் விளர்பப - கரியமேகங்கள் வெளிறுகவும்—அறனீர்குளிபப - கருமணல் நீரிற்குளிப்பவும்—கண்புதை - பார்க்கின்றோர் கண்கள் புதைந்திடத்தக்க—யாப்புத்திணியிருள் - திணிந்த விருட்பிழம்பானது—விடிய - விடியவும்—உடற்றொறும் - உடல்கடோறும்—பிணித்த - யாத்த—பாவமும் - பாவங்களும்—புலர-வாடவும்;

கணடநீள்கதுப்பினர்கைகுவிபிடித்துக்
. குருகணிசெறித்ததனிமுதனயகன்

கண்ட - செய்த—நீள்கதுப்பினர் - முடிகூடிய கூந்தலையுள்ள வணிகமாதர்களுடைய—கைகுவிபிடித்து - கைகளைக் குவித்துபபிடித்து—குருகணி-வளையலென்னுமணியை—செறித்த-

இசைத்த—தனிமுதலையகன் - தனக் கொப்பு முயர்வுமில்லாத தலைவனது;

குருகுமன்னமும்வால்வளைக்குப்பையை
யண்டமும்பார்ப்புமாமெனவணைக்கு
மலைநீர்ப்பழனமுதுநகர்க்கூட
லொப்புடைத்தாயவிப்பொற்றொடிமடந்தை

குருகும்-நாரைகளும்—அன்னமும்- அன்னப்பறவைகளும்—வால்வளைக்குப்பையை-வெள்ளிய சங்கினங்களை—அண்டமும்-தாந்தாமீன்றமுட்டைகளும்—பார்ப்பும் - குஞ்சுகளும்—ஆமென - ஆகுமாறுகருதி—அணைக்கும் - அடைகிடக்கின்ற—அலைநீர் - அலைபொருந்திய நீரினையுடைய—பழனம் - வயனிலங்களாற் சூழப்பட்ட—முதுநகர்க்கூடல் - நகரங்களுள் முதுமையான கூடலை—ஒப்புடைத்தாய - ஒப்புடையளாகிய—இப்பொற்றொடிமடந்தை - இந்தப் பொற்றொடியினையுடையபெண்ணானவள்;

நின்றறிகல்வியொன்றியமாந்தர்
புனைபெருங்கவியுட்டருபொருளென்ன
வோங்கிப்புடைபரந்தமுதமுள்ளூறிக்
காண்குறிபெருத்துக்கச்சவைகடிந்தே
யெழுத்துமணிபொன்பூமலையெனயாப்புற்
றணிபெருமுலைமேற்கோதையுமொடுங்கின

நின்றறிகல்வி - நிலைபெற்றறியத்தக்க கல்வியை—ஒன்றியமாந்தா - பொருந்திய அறிஞர்களால் செய்யப்பட்ட—புனைபெருங்கவியுள் - அலங்கரித்துச்சொல்லிய பெரிய கவிதைகளிடத்தே—தருபொருளென்ன - தந்த பொருளைப்போல—ஓங்கி - உயர்ந்து—புடைபரந்து - பக்கங்களிற பரந்து—அமுதமுள்ளூறி - உள்ளேயமுதமூறி—காண்குறிபெருத்து - காணுங

குறியுடன் பெருத்து—கச்சவைகடிந்து - வாளாக்கிழித்து—எ ழுத்துஎன - எழுத்தெனவும்—மணியென - மணியெனவும்—பொன்னென - பொன்னெனவும்—பூவென - பூவெனவும்—ம லையென - மலையெனவும்—யாப்புற்று - அச்செய்யுள்போற்கொண்டு—அணிபெறுமுலைமேல் - அழகுபெற்ற முலைமேற்றரித்த—கோதையுமொருங்கின-மாலைகளும் வாடாநின்றன;

செங்கோலரசன்முறைத்தொழில்போல
வமுதமுங்கடுவும்வாளும்படைத்த
மதர்விழித்தாமரைமலர்ந்திமைத்தமர்த்தன

செங்கோலரசன் - செங்கோலினையுடைய வரசனது—முறைத்தொழில்போல-மநுமுறைச் செய்கைபோல—அமுதமுங்கடுவும்வாளும்படைத்த - அமுதமும் விஷமும் வாளும் பெற்ற—மதர்விழி - மதர்த்த விழிகளாகிய—தாமரை - தாமரைமலர்கள்—மலர்ந்து - விரிந்து—இமைத்தமர்த்தன - அமர்செய்தலுடனிமையாநின்றன;

செய்குறைமுடிப்பவர்சென்னம்போலப
பதமலர்மண்மிசைப்பற்றிப்பரந்தன

செய்குறை - முன்செய்துவிட்ட குறையை—முடிப்பவர்-நிறைவேற்றவந்தவரது—சென்னம்போல-சென்னத்தைப்போல—பதமலர்-பாதங்களாகிய மலர்கள்—மண்மிசைப்பற்றி-மண மீதுபொருந்தி—பரந்தன-நடவாநின்றன;

அமுதம்பொடித்தமுழுமதியென்ன
முகம்வெயர்ப்புறுத்தினவுள்ளமுஞ்சுழன்றன
யணங்கினளாமெனநினையல்

அமுதம்பொடித்த - அமுதத்துளிக ளரும்பின—முழுமதியென்ன-நிறைமதி யென்னுமாறு—முகம்வியர்ப்புறுத்தின-மு

கத்தின்கண் வியர்வருமபாலின்றன—உள்ளமுஞ்சுழன்றன - இவளுள்ளமுஞ் சுழலாநின்றன (ஆதலால்)—அணங்கினளாமெனதெய்வபபெண்ணுமெனை—நினையல்-நீகருதற்க—எ-று.

மாழ்குறுமனனே இதழிமுதலிய காநதுவளைவிலைமாக்கள் வடிவெடுத்து நீள்கதுபபினர் கைகுவிபிடித்து குருகணிசெறித்த நாயகனது கூடலொப்புடைத்தாய மடந்தைபூலேமேற் கோதையுமொடுங்கின விழித்தாமரைமலர்ந் திமைத்தமர்த்தன பதமலர்மண்மிசைப் பற்றிப்பரந்தன முகம்வியாப்புறுத்தின வுள்ளமுஞ்சுழன்றன வாதலால் அணங்கினளாமென நினையலென வினைமுடிவுசெய்க. (௬௭)

---

கூதிர்கண்டுகவறல்.

கூதிர்கண்டுகவறலென்பது விழாநின்றபனியிடத்துஎல்லாரும் நெருப்புத்திரளைமேவாநிற்ப மலைத்திரளையேறித் துணையில்லாதாரைத்தேடும் புயலினம் நமக்கேயன்றித் தம்மையடைந்தார்க்குதவிசெய்யச்சென்றார்க்குஞ் சென்றுபொருந்துமோ, பொருந்துமாயின் நம்மைநினைந்து ஆற்றாராய் அவ்வினை முடிக்கமாட்டாரெனத்தலைமகள் கூதிர்கண்டுகவலாநிற்றல். அதற்குச்செய்யுள்:—

கருப்பினமேவும்பொழிற்றில்லைமன்னன்கண்ணாருளால், விருப்பினமேவச்சென் றார்க்குஞ்சென் றல்குங்கொல்வீழ்பனிவாய்,நெருப்பினமேநெடுமாலெழிற்றேன்றச்சென்றுங்குநின்ற, பொருப்பினமேறித்தமியரைப்பார்க்கும்புயலினமே. (௩௰௬)

இருங்கூதி ரெதிர்வுகண்  டு
கருங்குழலி கவலையுற்ற  து.

இ-ள். வீழ்பனிவாய் - வீழாநின்ற பனியிடத்து—நெருப பினமே - எல்லாரு நெருப்புத்திரளேமேவாநிற்ப—நெடுமால்-நெடியமாயனது—எழிறேன்றச்சென்று - எழில்கண்டார்க்குப் புலப்படச்சென்று—ஆங்குநின்ற - அவ்விடத்துநின்ற—பொருப்பினமேறி - மலைத்திரளையேறி—தமியரைப்பார்க்கும் - துணையில்லாதாரைத்தேடும்—புயலினம் - புயலினங்கள்—கருப்பினமேவும் - கருப்புத்திரள்பொருந்தும்—பொழிற்றில்லை - பொழிலையுடைய தில்லையின்—மன்னன்கண் - மன்னவன்கணுண்டாகிய—ஆரருளால் - மிக்க வருளால்—விருப்பினமேவச்சென்றோர்க்கும் - விருப்பையுடைய தமயினந் தமமாலுதவிபெற்றுப் பொருந்துவண்ணஞ் சென்றோர்க்கும்—சென்றலுங்கொல் - சென்றுதங்குமோ—எ-று.  (௩௧௧)

நேரிசையாசிரியப்பா.

பசிமயல்பிணித்தபிள்ளைவண்டரற்ற
வாசையிற்செறிந்தபொங்கர்க்குலத்தா
யருப்புமுலைக்கண்டிறந்துமிழ்மதுப்பால்
சினைமலர்த்துணைக்கரத்தன்புடனணைத்துத்
தேக்கிடவருத்தியலர்மலர்த்தொட்டில்
காப்புறத்துயிற்றுங்கடிநகர்க்கூட
லருளுடனிறைந்தகருவுயிர்நாயகன்
குரவரும்புடுத்தவாலெயிற்றழல்விழிப்
பகுவாய்ப்பாம்புமுடங்கலாக
வாலவாய்பொதிந்தமதிமுடித்தனிமுதல்
சேக்கொண்முளரியலர்த்திய திருவடி

கண்பருகாதகளவினருளம்போற்
காருடன்மிடைந்தகுளிறுகுரற்கணமுகி
லெம்முயிரன்றியிடைகண்டோர்க்கு
நெஞ்சறைபெருந்துயரோவாதுடற்றக்
கவையாநெஞ்சமொடுபொருவினைச்சென்றோர்
கண்ணினுங்கவருங்கொல்லோ
வுண்ணிறைந்திருந்தவாழியமனனே. ௪அ

---*---

பசிமயல்பிணித்த வாழியமனனே. பகுதி - பகைதணிவினை பிரிவு, துறை - கூதிர்கண்டுகவறல். *

பசிமயல்பிணித்தபிள்ளைவண்டரற்ற
வாசையிற்செறிந்தபொங்கர்க்குலத்தாய்

(இதனது பதப்பொருள்)

பசிமயல்பிணித்த - பசியாகியமயக்கத்தாற்கட்டுண்ட—பிள்ளைவண்டரற்ற - பிள்ளையாகியவண்டுகள்கோஷிக்க—ஆசையிற்செறிந்த - ஆசையின்மிக்க—பொங்கர்க்குலத்தாய் - சோலையாகியநற்றாய்;

அருப்புமுலைக்கண்டிறந்துமிழ்மதுப்பால்
சினைமலர்த்துணைக்கரத்தன்புடனணைத்து

அருப்புமுலைக்கண் - அரும்புகளாகியமுலைக்கண்களை—திறந்து - திறந்து—உமிழ்மதுப்பால் - உமிழாநின்றமதுவாகியபாலை—சினைமலர் - பூங்கொத்துகளாகிய—துணைக்கரத்து - இருகரங்களால்—அன்புடனணைத்து - ஆசையோடுதழுவி;

தேக்கிடவருத்தியலர்மலர்த்தொட்டில்
காப்புறத்துயிறறுங்கடிநகர்க்கூட
லருளுடனிறைந்தகருவுயிர்நாயகன்

தேககிடவருத்தி-தெவிட்டவுண்பித்து—அலர்மலர்த்தொட்டில் - விரிந்தமலர்த்தொட்டிலில்—காப்புற - சோர்வற—துயிற்றும் - துயில்விக்கின்ற—கடிநகர் - சிறப்பினையுடையநகராகிய—கூடல் - நான்மாடக்கூடலே—அருளுடனிறைந்த - அருட்சத்தியுடனிறைந்தருளிய—கருவுயிர்நாயகன் - கருவுயிர்த்தற்காதாரத்தலைவன்;

குரவரும்புடுத்தவாலெயிற்றழல்விழிப்
பகுவாய்ப்பாம்புமுடங்கலாக
வாலவாய்பொதிந்தமதிமுடித்தனிமுதல்
சேக்கொண்முளரியலர்த்தியதிருவடி
கண்பருகாதகளவினருளம்போல்

குரவரும்பு - குராவரும்புகள்—உடுத்த - சூழ்ந்தாலொத்த—வாலெயிறு - வெள்ளியபற்களையும்—அழல்விழி - அழலுகின்றவிழியினையும்—பகுவாய் - பிளவாகின்ற வாயினையுமுடைய—பாம்பு - தனதுகரகங்கணமாகியபாம்பு—முடங்கலாக - உடலைவளைத்துஎல்லைகாட்டுதலால்—ஆலவாய்பொதிந்த- ஆலவாயாகச்செய்தருளிய—மதிமுடி - சந்திரசேகரனாகிய—தனிமுதல் - ஒப்பற்றமுதல்வனது—சேக்கொள் - செந்நிறமுள்ள—முளரி - தாமரைபோல—அலர்த்திய - விரித்தாடியருளிய—திருவடி - திருவடியை—கண்பருகாத - கண்ணினுற்றறியாத—களவினருளம்போல் - வஞ்சகருள்ளத்தைப்போல:

காருடன்மிடைந்தகுளிறுகுரற்கணமுகி
லெம்முபிரன்றியிடைகண்டோர்க்கு
நெஞ்சறைபெருந்துயரோவாதுடற்றக்
கவையாநெஞ்சமொடுபொருவினைச்சென்றோர்

கண்ணினுங்கவருங்கொல்லோ
வுண்ணிறைந்திருந்தமனனே.

காருடன்மிடைந்த - கருமையாகிநெருங்கிய—கணமுகில்- மேகஜாலம்—குளிறுகுரல் - முழங்காநின்றகுரலுடனே—எம் முயிரன்றி - எம்முயிர்க்கும்—இடைகண்டோர்க்கும் - இடை யிலே தன்னைக்கண்ட ஏனையோ ருயிர்க்கும்—நெஞ்சறைப்பெ ருந்துயரோவாதுடற்ற - நெஞ்சானதறைபோதலாகியநெடுந்து யரொழியர்வண்ணந் தம்மைவருத்தாநிற்ப—கவையா- துன்பமு ருத—நெஞ்சமொடு - மநதுடனே—பொருவினைச்சென்றோர்- பகைவர்மேற்பொருந்தொழிலிற் சென்றோரது—கண்ணினுங்க வருங்கொல்லோ - மனத்திலில்லையாயினும் கண்ணினாலேனுமிக் கார்ப்பருவங் காணப்படுமோ—உள் - என்னுள்ளே—நிறைந்தி ருந்த - நிறைந்திருந்த—மனனே - என்மனனே—எ-று.

வாழியவென்பது-முன்னிலையசைச்சொல்.

மனனே கடிநகர்க்கூடலை ஆலவாய்பொதிந்த தனிமுதற்றி ருவடிபருகாதா ருளம்போல மிடைந்த கணமுகில் ஓவாதுடற் றபொருவினைச்சென்றோர் கண்ணினுங்கவருங்கொல்லோவென வினைமுடிவுசெய்க. (சஅ)

---

## முகிலொடுகூறல்.

முகிலொடுகூறலென்பது - பருவங்கண்டிரங்கி வினாவோ டுவாராநின்ற தலைமகன், இவ்விடத்தெல்லாம் முற்பட்டாயாயி னும் முதுபெண்டீர் இரண்டு அவளின்னுமையை நீக்கற்கு இல் லுறைகடவுட்குப் பூசனைசெய்யாநிற்கும் நிணகரத்திற்கு என் னின் முற்படாதொழிவாயாகவென முந்துற்றுச் செல்லாநின்ற முகிலொடுகூறாநிறறல். அதற்குச்செய்யுள்:—

அற்படுகாட்டினின்றாடிசிற்றம்பலத்தான்மிடற்றின் [மி
முற்படுநீண்முகிலென்னின் முன்னேன் முதுவோர்குழு
விற்படுவாணுதலாள்செல்லறீர்ப்பான்விரைமலர்தூய
நெற்படுவான்பலிசெய்தயராசிற்குநீணகர்க்கே. கூசஅ

எனைப்பலதுயரமோ டேகாநின்றவ ன்
துணைக்காரதற்குத் துணிந்துசொல்லிய து.

இ-ள். அற்படுகாட்டின் - மாலைக்காலத்து இருளுண்டா
கா நின்ற புறங்காட்டின்கண்—நின்றாடி - நின்றாடுவான்—சிற்
றம்பலத்தான் - சிற்றம்பலத்தின்கண்ணுன்—மிடற்றின் - அவ
னது மிடறுபோலவிருண்டு—முற்படு-முற்படாநின்ற—நீண்மு
கில்-நீண்ட முகிலே—என்னின் முன்னேல் - இவ்விடத்தெல்லா
முற்பட்டாயாயினும்—முதுவோர்குழுமி-முதுபெண்டீர்திரண்
டு—விற்படுவாணுதலாள் - விற்றாழுமொளிநுதலாளது—செல்
லறீர்ப்பான்-இன்னுமையைநீக்கவேண்டி—விரைமலர்தூய் - நறு
நாற்றத்தையுடைய மலர்களைத்தூவி—நெற்படு- நெல்விரவிய—
வான்பலிசெய்து-தூயபலியைக்கொடுத்து—அயராசிற்குநீணகா
க்கே - இல்லுறைகடவுட்குப் பூசனைசெய்யாசிற்கும் பெரியவில்ல
த்திற்குஎன்னின்முற்படாதொழி—எ-று. (கூசஅ)

---

நேரிசையாசிரியப்பா.

கருங்குழற்செவ்வாய்ச்சிற்றிடைமடந்தைக்
குளத்துயரீந்துகண்டுயில்வாங்கிய
வாணுவின்னுலழிபடக்காண்பான்
விரிபொரிசிந்திமணமலர்பரப்பித்
தெய்வக்குலப்புகைவிண்ணெடும்விம்ம
விருநாற்றிசையுமுண்பலிதூவி
நன்னூன்மாக்களணிக்குறிசொற்றுப்

பக்கஞ்சூழ்ந்தநெடுநகர்முன்றிற்
கோடகழ்ந்தெடுத்தமறிநீர்க்காலும்
வெண்கார்பெய்யுநாள்குறித்துழுநருஞ்
சூனிறைந்துளையுஞ்சுரிவளைச்சாத்து
மினக்கயலுண்ணுங்களிக்குருகினமும்
வளைப்பறையரிந்தவாசவற்றெழுது
நிரைநிரைவிளம்பிவழிமுடிநடுநரு
நாறுகழித்துற்றசகடர்க்குநருந்
தாமரைபாடுமறுகாற்கிளையு
முறைத்தெறிகம்பலையும்பணைத்தாவி
முடித்தலைதிமிரப்பவடிக்கடிகொடுக்கு
மள்ளற்பழனத்தணிநீர்க்கூட
னீங்காதுறையுநிமிர்சடைப்பெருமா
னுரகன்வாய்கீண்டமாதவன்போல
மண்ணகழ்ந்தெடுத்துவருபுனல்வையைக
கூலஞ்சுமக்கக்கொற்றாளாகி
னணைத்தலைமுதியோளிடித்தடுகூலிகொண்
ட்டைப்பதுபோல்வுடைப்பதுநோக்கிக
கோமகனடிக்கவவனடிவாங்கி
யெவ்வுயிரொவ்வுலகெத்துறைக்கெல்லா
மவ்வடிகொடுத்தவருணிலைநாயகன்
றிருமிடற்றிருளெனச்செறிதருமாமுகி
லெனதுகண்கடந்துநீங்கித்
துணைவுடன்செல்லலொருங்குபுரிந்தே. ௪௯

—*—

கருங்குழற்செவ்வா யொருங்குபுரிந்தே. பகுதி - பொரு ள்வயிற்பிரிவு, துறை - முகிலொடுகூறல். *

கருங்குழற்செவ்வாய்ச்சிற்றிடைமடந்தைக்
குளத்துயரீந்துகண்டுயில்வாங்கிய
வாளுவின்னலழிபடககாண்பான்

(இதனது பதப்பொருள்)

கருங்குழற்செவ்வாய் - கருங்குழலினையுஞ் செவ்வாயினையு ம்—சிற்றிடை - நுண்ணிடையையுமுடைய—மடந்தைக்கு - த லைவிக்கு—உளத்துயரீந்து - உள்ளத்திற் றுன்பத்தைதகொடுத் து—கண்டுயிலவாங்கிய - கண்ணுறக்கத்தைநீக்கிய—ஆளுவின் னல் - நீங்காத துன்பத்தால்—அழிபடககாண்பான் - வருத்தககா ணும்பொருட்டு;

விரிபொரிசிந்திமணமலர்பரப்பித்
தெய்வககுலபபுகைவிண்ணுடும்விம்ம
விருநாற்றிசையுமுண்பலிதூவி
நானூன்மாக்கணணிக்குறிசொற்றும்

விரிபொரிசிந்தி - வாய்விரிந்த பொரிதெளித்து—மணமலர் பரப்பி - மணமுளமலர்களைப்பரப்பி—தெய்வககுலப்புகை-தேவர் கோயில்களி லாராதிக்கும் குங்கிலியப்புகை—விண்ணுடும்விம் ம - ஆகாயமெங்கும்பரவ—இருநாற்றிசையும் - எட்டுத்திசையி னும்—உண்பலிதூவி - சோற்றுப்பலியிறைத்து—நானூன்மாக் கள - நாலுகின்ற வுபவீதத்தையுடைய வேதியர்—நணிக்குறி சொற்றும்—வந்து குறிகளைச்சொல்லியதால்;

பக்கஞ்சூழ்ந்தநெடுநெகாமுன்றிற்
கோடகழ்ந்தெடுத்தமறிநீர்க்காலும்
வெண்கார்பெய்புநாள்குறித்துமுளருஞ்

சூனிறைந்துளையுஞ்சுரிவளைச்சாத்து
மினகசயலுண்ணுங்களிகுருகினமும்

நெடுநகர்முன்றில்-நெடியநகரத்தினது முன்றிலின்கண்—பக்கஞ்சூழ்ந்த - பக்கங்களிற்சூழ்ந்துள்ள—கோடகழ்ந்தெடுத்த - கரையையகழ்ந்தெடுத்த—மறிநீர்க்காலும் - மறிக்கப்பட்ட நீரொழுகும்வாய்க்காலும்—வெண்கார்பெய்யும் - வெள்ளிய கார்நெல்லைவிதைக்கும்—நாள்குறித்து - நாளைநிச்சயித்து—உழுநரும் - உழுகின்றவர்களும்—சூனிறைந்துளையும் - சூல்நிறைந்து வருந்தாநின்ற—சுரிவளைச்சாத்தும்-சுரிந்தமுகமுள்ளசங்கினங்களின்கோஷ்டமும்—இனகசயலுண்ணும் - மீனினத்தையுண்ணாநின்ற—களிகுருகினமும் - களிப்பினையுடைய குருகினங்களும்;

வரைப்பறையரிந்தவாசவற்றொழுது
நிரைநிரைவிளம்பிவழிமுடிநடுநரும்

வரைப்பறையரிந்த - மலைச் சிறகறுத்த—வாசவற்றொழுது - மருதநிலத்தேவைவணங்கி—நிரைநிரைவிளம்பி - அணியணியாய்வினைமுபிராரத்தித்து—வழி - முறையே—முடிநடுநரும்-நாற்றுமுடிகளை நடுகின்றவர்களும்;

நாறுகழிதுற்றசகடர்க்குநரும்

நாறுகழிதுற்ற - நாற்றுமுடிகள் நிறையப்பெய்த—சகடு-வண்டில்களை—ஈர்க்குநரும் - ஈர்த்துச்செல்கின்றவர்களும்;

தாமரைபாடுமறுகாற்கிளையு
முறைத்தெறிக்கம்பலையும்பணைத்தாவி
முடித்தலைதிமிரபபவடிககடிகொடுகக்கு
மள்ளற்பழனத்தணிநீர்க்கூட
னீங்காதுறையுமிமிரசடைபெருமான்

தாமரைபாடும் - தாமரைமலரிலிருந்துபாடாநின்ற—அறுகா ற்கிளையும் - வண்டுகளின பண்ணோசையும்—உறைத்து - அதி ர்த்து—எறி - ஒலிக்கின்ற—கம்பலை - பேரொலியானது—உம் பரை - தேவரை—தாவி - அடைந்து—முடித்தலை - அவர்முடி த்தலைகளை—திமிர்ப்ப - திமிரேற—அடிக்கடிகொடுக்கும - இ டைவிடாமறசெய்கின்ற—அள்ளல் - சேடையுழுத—அணிநீர்- மிக்கநீரையுடைய—பழனத்து - வயல்களாற்சூழப்பெற்ற—கூ டல் - மதுரையின்கண்—நீங்காதுறையும் - நிலைபெற்றுவசித்த ருளுகின்ற—திமிர்சடைப்பெருமான-திமிர்ந்த சடையையுடைய எம்பெருமான் ;

உரகன்வாய்கீண்டமாதவன்போல
மண்ணகழ்ந்தெடுத்துவருபுனல்வையைக
கூலஞ்சுமக்கக்கொற்றாளாகி
நரைத்தலைமுதியோளிடித்தடுகூலிகொண
டடைப்பதுபோலவுடைப்பதுநோக்கி

உரகன்வாய்கீண்ட - பாம்பினது வாயைக்கிழித்த—மாதவன் போல-திருமால்போல—மண்ணகழ்ந்தெடுத்து-மண்ணைப்பிளந் தெடுத்து—வருபுனல் - பெருகிவருகின்றபுனலையுடைய—வை யை - வையைநதியின்—கூலம் - கரையை—சுமக்க - அடைக்கு மாறுமண்சுமக்க—கொற்றாளாகி-கொற்றுத்தொழிற்குரியஆளா கிவந்து—நரைத்தலைமுதியோள் - நரைத்தலையினையுடையமுதா ட்டியாகிய வந்தியென்பவள்—இடித்தடு - இடித்தமாவால் அட் டபிட்டுறைவை—கூலிகொண்டு - கூலியாகவேற்று—அடைப்ப துபோல - கரையை யடைக்கிறதுபோல்—உடைப்பதுநோக்கி- உடைத்திடுவதுபார்த்து ;

கோமகனடிக்கவவனடிவாங்கி
யெவ்வுயிரெவ்வுலகெத்துறைகளெல்லா

மவ்வடிகொடுத்தவருணிறைநாயகன்

கோமகன் - பாண்டியன் — அடிக்க - பிரம்பாலடிக்க — அவனடிவாங்கி - அவனடியைப்பெற்று — அவ்வடி - அந்தவடியை — எவ்வுயிர் - எந்தவுயிர்களுக்கும் — எவ்வுலகு - எந்தவுலகத்திற்கும் — எத்துறைக்கு - எவ்வகைக் கருவினுக்கும் — எல்லாம் - முழுதுமாக — கொடுத்த - படும்படி தந்த — அருணிறைநாயகன் - அருணிறைந்த சோமசுந்தரமூர்த்தியினது ;

திருமிடற்றிருளெனச்செறிதருமாமுகில்

திருமிடற்று - அழகிய கண்டத்தின்கணுள்ள — இருளென - இருள்போல — செறிதரும் - நெருங்கிவந்த — மாமுகில் - பெரியமுகிலே ;

எனதுகண்கடந்துநீங்கித்
துணைவுடன்செல்லலொருங்குபுரிந்தே

எனதுகண் - என்னுடையகண்ணை — கடந்துநீங்கி - தாண்டிப்போய் — ஒருங்குபுரிந்து - ஒன்றாய்க்கூடி — துணைவுடன் - வேகத்தோடும் — செல்லல் - நீ செல்லற்க — எ-று.

சிந்தி பரப்பி விம்ம தாவி சொறறு நகர்முன்றிலில் நீர்க்காலும் உழுநரும் வளைச்சாத்தும் குருகினமும் பகடேர்க்குநரும் அறுகாற்கிளையும் தாவி திமிரிப்பக்கொடுக்கும் நீர்க்கூடற் பெருமான் மாதவன்போல வரும்வையைக் கூலஞ்சுமக்க ஆளாகிக் கூலிகொண்டு அடிவாங்கி அவ்வடிகொடுத்த நாயகன் மிடற்றிருளெனச் செறிதருமுகிலே கண்கடந்துநீங்கி மடந்தைக்குத் துயர்ந்து துயில்வாங்கிய இன்னல்காண்பான் புரிந்துசெல்லலென வினைமுடிவுசெய்க. (சுகூ)

———

## தழைவிருப்புரைத்தல்.

தழைவிருப்புரைத்தலென்பது - தலைமகளைத் தழையேற்பித்துத் தலைமகனுழைச்சென்று, நீதந்த தழையை யான்சென்று கொடுத்தேன் அதுகொண்டு அவள் செய்ததுசொல்லிற் பெருகுமெனத் தலைமகளது விருப்பங்கூறுவிக்கல். அதற்குச்செய்யுள்:—

பாசத்தளையறுத் தாண்டுகொண்டோன் றில்லை யம்பலஞ்சூழ், தேசத்தனசெம்மனீதந்தனசென்றி யான்கொடுத்தேன், பேசிற்பெருகுஞ் சுருங்குமருங்குல் பெயர்ந்தரைத்துப், பூசிற்றிலளன்றிச் செயயாதனவில்லை பூந்தழையே. (கசரு)

விருப்பவடோ ழி
பொருப்பறகுரைத்த து.

இ-ள். பாசம் - பாசமாகிய—தளை - தளையிற்பட்டுக்கிடப்ப—அறுத்து - அத்தளையையறுத்து—ஆண்டுகொண்டோன்-தனக்குக் குற்றேவல்செய்ய என்னை யடிமைகொண்டோனது—தில்லையம்பலஞ்சூழ் - தில்லையம்பலத்தைச்சூழ்ந்த—தேசத்தன-தேசத்தின்கணுள்ளன அச்சிறப்பேயனறி—செமமல்-செம்மால்—நீதந்தன - நின்னாற்றரபபட்டன—சென்றியான் - அவற்றைச்சென்றுயான—கொடுத்தேன்-கொடுத்தேன் (கொடுப்ப)—பேசில்-ஆண்டுநிகழ்ந்தனவற்றைச்சொல்லுவேனாயின்—பெருகும்-பெருகும்—சுருங்கும - சுருங்கிய—மருங்குல்-மருங்குலையுடையாள—பூந்தழை - அப்பூந்தழையை—அரைத்து - அரைத்து—பூசிற்றிலளன்றி - தன்மேனியெங்கும்பூசிற்றிலளல்லது—செய்யாதனவில்லை - பெயர்த்துச் செய்யாதனவில்லை—எ-று. (கசரு)

நேரிசையாசிரியப்பா.

அறுகுந்தும்பையுமணிந்தசெஞ்சடையுங்
கலைமான்கணிச்சியுங்கட்டியவரவமும்
பிறிதுங்கரந்தொருகானவனாகி
யுருச்சுனைருந்தவமழித்திடர்செய்தவன்
கொடுமரத்தழும்புதிருமுடிக்கணிந்து
பொன்னுடையாவர்தொலையாதுசுரக்கப்
பாசுபதக்கணைபரிந்தருள்செய்தோன்
வாசவன்மகட்புணர்ந்துமூன்றெரிவாழத்
தென்கடனடுத்திடர்செய்துறைந்திமையவ
ருநடைத்துன்னருஞ்சூருடறுணித்த
மணிவேற்குமரன்களிமகிழ்செய்த
பேரருட்குன்றமொருபாற்பொலிந்த
வறப்பெருங்கூடற்பிறைச்சடைப்பெருமான்
றிருவடிப்பெருந்தேன்பருகுநர்போல
மணமுடன்பொதுளியவாடாமலர்த்தழை
யொருநீவிடுத்தனையானதுகொடுத்தன
னவ்வழிக்கூறினதத்தழைவந்து
கண்மலர்கவர்ந்துங்கைம்மலர்குவித்து
நெட்டுயிர்ப்பெறியமுலைமுகநெருக்கியு
மூடியுட்வணங்கியுமுவந்தனிகூறியும்
பொறையழிகாட்சியளாகி
நிறையழிந்தவட்குநீயாயினவே. ௩0

———*———

அறுகுந்தும்பையு நீயாயினவே. பகுதி-சேடபடை, துறை-தழைவிருப்புரைத்தல். *

அறுகுந்தும்பையுமணிந்தசெஞ்சடையுங்
கலைமான்கணிச்சியுங்கட்டியவரவமும்
பிறிதுங்கரந்தொருகானவனாகி

(இதனதுபதபொருள்)

அறுகும் - அறுகம்புல்லும்—தும்பையும் - தும்பைமலரு ம்—அணிந்த - தரித்த—செஞ்சடையும் - சிவபபாகியசடையு ம்—கலைமான் - கலைமானும்—கணிச்சியும் - மழுவும்—கட்டிய வரவமும் - அரைக்கசைத்தபாம்பும்—பிறிதும்-மற்றவையும்— கரந்து-தோன்றாமல்—ஒருகானவனாகி - ஒருவேடுவனாகி,

அருச்சுனனருந்தவமழித்தமாசெய்தவன்
கொடுமரத்தழும்புதிருமுடிக்கணிந்து
பொன்னுடையாவந்தொலையாதுசரககப
பாசுபதக்கணைபரிந்தருள்செய்தோன்

அருச்சுனன் - அருச்சுனனது—அருந்தவமழித்து - செய ற்கரிய தவத்தையூறுபடுத்தி—அமர்செய்து - போராடி—அவ ன்கொடுமரத்தழும்பு - அவன் வில்லாலடித்த தழும்பை—திரு முடிக்கணிந்து - தனது திருமுடியிற் றாங்கி—பொன்னுடையா வம் - அழகினையுடைய அம்புக்கூடு—தொலையாதுசுரக்க - வ ற்றுதலின்றியுமாறு—பாசுபதக்கணை - பாசுபதமென்னும் சிவா ஸ்திரத்தை—பரிந்து - அன்பாய்—அருளசெய்தோன் - அருள் புரிந்தவனது;

வாசவன்மகட்புணர்ந்துமூன்றெரிவாழத்
தென்கடனடுத்திடர்செய்துறைந்திமையவ
ரூருடைத்துண்ணுஞ்சூருடறுணித்த
மணிவேற்குமரன்களிமகிழ்செய்த
பேரருட்குன்றம்

தென்கடல்நடு - தென்சமுத்திரத்துமத்தியை—திடர்செய் து - மகேந்திரமென்னு நகராற்றிடர்பண்ணி—உறைந்து - அதி லிருந்து—இமையவர் - தேவர்களுடைய—ஊருடைத்து உண்

னும்-பட்டினங்களையழித்தாண்ட—சூருடல்-சூரபன்மனுடலை—மூன்றெரிவாழ - அந்தணர்முதலியோரது மூவகைத்தழலும் வளருமாறு—துணித்த - இருகூறுக்கிய—மணிவேல்குமரன்- மணிகட்டிய வேலுடைக்கடவுள்—வாசவன்மகட்புணர்ந்து - தெய்வயானைநாச்சியாரைமணந்து—களிமகிழ்செய்த - மிகமகிழ்சிறந்த—பேரருட்குன்றம் - பராசரன்புதல்வர்க்கு அருள்செய்தற்கிடனுகிய திருப்பரங்குன்றம்;

ஒருபாற்பொலிந்த
வறப்பெருங்கூடற்பிறைச்சடைப்பெருமான்
றிருவடிப்பெருந்தேன்

ஒருபாற்பொலிந்த - ஒருதிசையில்விளங்கியுள்ள—அறப்பெருங்கூடல் - மிக்கபுண்ணியபலனைத்தருகின்றகூடலிலே—பிறைச்சடைப்பெருமான் - சடையிற்பிறையணிந்தபெருமானது—திருவடிப்பெருந்தேன் - சிபாதங்களி னருட்பெருந்தேனை;

பருகுநர்போல
மணமுடன்பொதுளியவாடாமலர்த்தழை
யொருநீவிடுத்தனையானதுகொடுத்தனன்

பருகுநர்போல - உண்கின்றவர்போல—மணமுடன்பொதுளிய - மணத்தோடுதளிர்த்த—வாடாமலர்த்தழை - வாடாத மலருள்ளதழைகள்—ஒருநீவிடுத்தனை- ஒப்பற்றநீவிடுத்தாய்—யானதுகொடுத்தனன் - அவற்றை தலைமகட்கு யான் கொடுத்தேனுக;

அவ்வழிக்கூறினத்தழைவந்து
கண்மலர்கவர்ந்துங்கைம்மலர்குவித்து
நெட்டுயிர்ப்பெறியமுலைமுகநெருக்கியு
முடியுமவணங்கியுமுவந்தளிகூறியும

பொறையழிகாட்சியளாகி
நிறையழிந்தவட்குநீயாயினவே.

அவ்வழிக்கூறின் - அம்முறைமையைச்சொல்லுங்கால்—அத்தி ழைவந்து-அந்தத்தழைகள்வந்து—கண்மலர்கவர்ந்தும்-தலைவிக ண்மலராற்கவரப்பட்டும்—கைம்மலர்குவித்தும்-கைம்மலர்களா லஞ்சலிகப்பட்டும்—நெட்டுயிர்ப்பெறிய - பெருமூச்செறியுமா று—முலைமுகம் - முலையிடத்தே—நெருக்கியும் - ஒற்றிக்கொ ள்ளப்பட்டும்—ஊடியும் - சற்றேயூடப்பட்டும்—வணங்கியும்- மீண்டுதொழப்பட்டும்—உவந்தளிகூறியும் - களித்து முகமனு ரைக்கப்பட்டும்—பொறையழிகாட்சியளாகி - காமநோய் பொறு த்தலில்லாத் தோற்றத்தையுடையளாய்—நிறையழிந்தவட்கு - நிறையாற்கைவிடப்பட்ட அத்தலைவிககு—நீயாயின - நீயே யா யினவாம்—எ-று.

கானவனுகித் தழும்பணிந்து கணையருள்செய்தோன் மூன் றெரிவாழச் சூருடறுணித்த வேற்குமரன் புணர்ந்துமகிழ்செய் த குன்றமபொலிந்த கூடற்பெருமா னடித்தேன் பருகுநாபோ ல நீவிடுத்த மலர்த்தழையான் கொடுத்தனனத்தழை நிறையழி ந்தவட்கு நீயாயினவெண வினைமுடிவுசெய்க. (௫௦)

---

## விரவிக்கூறல்.

விரவிக்கூறலென்பது - வன்மொழியாற்கூறின் மனமெலி யுமென்றஞ்சி, ஓரலவன் தன்பெடைக்கு நாவற்கனியை நல்கக்க ண்டு ஒருபெருந்தகை பேய்கண்டாற்போல நின்றான் அந்நிலை மையை நீ கண்டாயாயின் உயிர்வாழமாட்டாய் யான் வன்கண் மை யேனுதலான் ஆற்றியுளேனுய்ப போந்தேனென மென்மொ

ழியோடு சிறிது வன்மொழிபடக் கூறுமிற்றல். அதற்குச்செய்யுள் —

நீகண்டனையெனின்வாழலைநேரிழையம்பலத்தான்,சேய்
கண்டனையன்சென் றாங்கோரலவன்றன் சீரப்பெடையி
ன், வாய்வண்டனையதொர் நாவற்கனிநனி நல்கக்கண்டு,
பேய்கண்டனையதொன் றாகின்றனப்பெருந்தகையே.()

வன்மொழியின்மன மெலிவதஞ் சி
மென்மொழிவிரவி மிகுத்துரைத்த து.

இ-ள். நேரிழை - நேரிழாய்—அம்பலத்தான் - அம்பலத்தான்—சேய்கண்டனையன் - புதல்வனைக்கண்டாற்போன் றிருக்குமொருவன்—ஆங்கோரலவன் - அவ்விடத்துஓரலவன்—தன் சீர்ப்பெடையின் - தனதழகையுடைய பெடையின்—வாய் - வாயின்கண்—வண்டனையதொர் - வண்டனையதொரு—நாவற்கனி - நாவற்கனியை—சென்று - சென்று—நனிநல்க - மிகவுங் கொடுப்ப—கண்டு அதனைக்கண்டு—அப்பெருந்தகை - அப்பெருந்தகை—பேய்கண்டனையதொன்றாகின்றனன் - பேயாற் காணப்பட்டாற்போல்வதோர் வேறுபாட்டையுடையனாகின்றான் அந்நிலையை—நீகண்டனையெனில் - நீகண்டாயாயின்—வாழலை-உயிர் வாழமாட்டாய்—யான்வன்கண்மையேனாதலின் - அதனைக்கண்டும் ஆற்றியுளேனாயினேன்—எ-று. (அச)

நேரிசையாசிரியப்பா.

வியரமுதரும்பிமுயற்கண்கலுழ்த்துத்
தண்ணனின் றுதவவினிறைமதியாகிப்
பொன்னம்பொருட்டுத்தாமரையிருத்து
நின் றயனிபுரக்கும்புதுமுகத்தணங்கின்

ஞெளிவளர்நோக்கமுற்றனையாயி
னின்னுயிர்வாழ்க்கையுடலொடும்புரக்கலை
யொருதனியடியாற்குதவுதல்வேண்டி
மண்ணவர்காணவட்டணைவாளெடுத்
தாதிசாரணையடர்நிலைப்பார்வை
வாளுடனெருக்கன்மார்பொடுமுனைத்தல்
பற்றிநின்றடாத்தலுட்கையின்முறித்த
லாகநத்தொட்டலணிமயிர்ப்புரோக
முட்கலந்தெடுத்தலொசிந்திடமழைத்தல்
கையொடுகட்டல்கடிந்துள்ளழைததலென்
றிவ்வகைப்பிறவுமெதிரமரேறி
யவன்பகைமுறித்தவருட்பெருங்கடவுள்
கூடலங்கானற்பெடையுடன்புல்லிச்
சேவலன்னந்திருமலர்க்கள்ளினை
யம்மலர்வள்ளமாகநின்றுதவுதல்
கண்டுகண்டொருவன்மாழ்கி
விண்டுயிர்சோர்ந்தகுறிநிலைமயக்கே. ருக

———*———

வியரமுதரும்பி குறிநிலைமயக்கே. பகுதி - குறையுநயப்பித்தல், துறை - விரவிககூறல். *

வியரமுதரும்பிமுயற்கண்கறுத்துத்
தண்ணநின்றுதவலினிறைமதியாகி

(இதனதுபதப்பொருள்.)

வயரமுது - வியர்வாகியவமுதம்—அரும்பி- முகிழ்த்து—முயற்கண்கறுத்து - போர்முயலுதலையுடைய கண்கறுத்து—தண்ணம் - குளிர்ச்சியை—நின்றுதவலின் - தந்துநிற்றலால்—நிறைமதியாகி - உவாமதியாகி ;

பொன்னம்பொகுட்டுத்தாமரைகுவித்து
நிறையளிபுரக்கும்புதுமுகத்தணங்கு

பொன்னம்பொகுட்டு - பொன்னிறமாகிய கர்ணிகையுள்ள—தாமரைகுவித்து - தாமரைப்பூவைக் கூம்பச்செய்து—நிறையளிபுரக்கும் - குறைவில்லாததண்ணளியைத் தன்னிடத்துப் பாதுகாவாநின்ற—புதுமுகத்தணங்கு - பார்க்குந்தோறும் புதுமைபயக்கு முகத்தையுடைய திருவே;

நின்னொளிவளாநோக்கமுற்றனையாயி
னின்னுயிர்வாழ்க்கையுடலொடும்புரக்கலை

நின்னொளிவளர் - உன்னுடைய விளக்கமிக்க—நோக்கம் - கண்களாலே—உற்றனையாயின் - நோக்குவையாயின்—இன்னுயிர்வாழ்க்கை - இனிய வுயிர்வாழ்க்கையை—உடலொடும்புரக்கலை - நின்னுடலிடத்தே காப்பாற்றவல்லாயல்லை;

ஒருதனியடியாற்குதவுதல்வேண்டி
மண்ணவர்காணவட்டணைவாளெடுத்
தாதிசாரணையடாநிலைப்பாவை
வாளுடனெருக்கன்மார்பொடுமூனத்தல்
பற்றிநின்றடர்த்தலுட்கையின்முறித்த
லாகநத்தொட்டல்

ஒருதனியடியாற்கு - தனிமையான வடியானுக்கு—உதவுதல்வேண்டி - உதவிசெய்யும்படி திருவுளங்கொண்டு—மண்ணவர்காண - பூமியிலுள்ளா ரறியுமாறு—வட்டணை - கேடகமும்—வாள் - வாளும்—எடுத்து- கையிலெடுத்து—ஆதிசாரணை- முதலில் சார்ந்துநிற்றலும்—அடர்நிலைப்பார்வை- நெருங்குநிலையிலே பார்வைவைத்தலும்—வாளுடனெருக்கல் - வாளொடுநெடுதலும்—மார்பொடுமூனத்தல் - வாளை மார்பிலேற்று எதிர்

த்தலும்—பற்றிநின்றடர்த்தல் - ஒருவரொருவனைப்பற்றிநின்று பொருதுதலும்—உட்கையின்முறித்தல் - கைக்குள்ளடக்கி முறித்தலும்—ஆநநத்தொட்டல் - கேடகத்துள்தாழ்ந்து முகத்தோடடங்குதலும் ;

அணிமயிற்புரோக
முட்கலந்தெடுத்தலொசிந்திடமழைத்தல்
கையொடுகட்டல்கடிந்துள்ளழைத்தல்

அணிமயிற்புரோகம் - அழகுள்ள மயில்போலும் ஞமலி போலுமுறையே பின்னே பறிந்துமுன்னே நடத்தலும்—உட்கலந்தெடுத்தல் - ஒருவருட லொருவருடலொடுமயங்கி மேலுற வெடுத்தலும்—ஒசிந்து - வளைந்து—இடம் - இடப்புறமாக—அழைத்தல்-அறைகூவலும்—கையொடுகட்டல்-ஒருவர்கையொடொருவர்கையேறச் சேரவிறுக்குதலும்—கடிந்து - குறிவழிபிழைத்து—உள்ளழைத்தல் - தாந்தாநிற்கு நிலைக்களத்தேயீர்த்தலும் ;

என்,றிவ்வகைபிறவுமெதிரமரோறி
யவன்பகைமுறித்தவருட்பெருங்கடவுள்

என்று - என்றுசொல்லப்படும்—இவ்வகை - இவ்வகுப்புகளாகிய—பிறவும் - பிறவாள் விஞ்சைத் தொழில்களும்—எதிர்-காணப்படுகின்ற—அமரோறி - வாட்போரின் மிகமுயன்று—அவன் - அவ்வடியவனது—பகை - பகைவனாகிய சித்தனென்னுஞ் சாதகனை—முறித்த- அவனங்கங்களைத் தனித்தனிதடிந்த—அருட்பெருங்கடவுள்- அருளேதிருமேனியாகிய மாதேவனது ;

கூடலங்கானற்பெடையுடன்புல்லிச்
சேவலன்னந்திருமலர்க்கள்ளினை
யுண்மலர்வள்ளமாகநின்றுதவுதல்

கண்டேகண் டொருவன்மாழ்கி
விண்டுயிர்சோர்ந்தகுறிநிலைமயக்கே.

கூடல் - மதுரையினிடத்தே—அங்கானல் - அழகுள்ளநெய்தலில்—சேவலன்னம் - ஆணன்னம்—பெடையுடன்புல்லி-தனதுபெடையைத்தழுவி—திருமலர்க்களிளினை - திருமகட்கிடனாகிய தாமரைப்பூவின்மதுவை—அம்மலர் - அந்தத்தாமரைமலரே—வள்ளமாக - கிண்ணமாகக்கொண்டு—நின்று - தானின்று—உதவுதல் - உண்பித்தலை—கண்டேகண்டு - பார்த்துப்பார்த்து—ஒருவன் - ஓரரசன்—மாழ்கி - மயங்கி—விண்டு - நிலைமாறி—உயிர்சோர்ந்த - உயிர்தளர்ந்த—குறிநிலைமயக்கே - மயக்கநிலைக்குறிப்பினை—எ-று.

புதுமுகத்தணங்கே - வேணடிவாளெடுத் தமரேறி பகைமுறித்தகடவுள் கூடற்கானலன்னம் பெடையுடன்புல்லிகள்ளினையுதவுதல் கண்டேகண் டொருவன்மாழ்கி யுயிர்சோர்ந்த குறிப்பைநோக்க முற்றனையாயின் உயிர்வாழ்க்கை புரக்கலையென வினைமுடிவுசெய்க.

பிறவுமென்றதனால் - வாள்விதிர்த்தல் சாரிகைதிரிதல் வெட்டிவிலக்கிமீளுதல் சுழன்றுவிளித்தல் ஆண்மைகூறல் முதலியவுங்கொள்க.　　(௫௧)

---

## ஊடறணிவித்தல்.

ஊடறணிவித்தலென்பது - விருந்தேற்றுகொண்ட தலைமகளுழைச்சென்று, நம்முடையதோன்றலைத் தனக்குத் துணையாகக்கொணடுவந்து தோன்றுதலான் நினதுளத்துக்கவற்சியையொழிந்து இனிநம்மரசற்குக் குற்றேவல் செய்வா யாகவெனத் தோழி அவளை யூடறணிவியாநிற்றல். அதற்குச்செய்யுள்.—

கவலங்கொள்பேய்த்தொகைபாய்தரக்காட்டிடையாட்டு
வந்த,தவலங்கிலாச்சிவன்றில்லையன்னாய்தழுவிம்முழுவி
ச், சுவலங்கிருந்தநந்தோன்றற்றுணையெனத் தோன்றுத
லா,லவலங்களைந்துபணிசெய்பாலையரசனுக்கே.௩௮௯

தோன்றலைத்துணையொடு தோழிகண்டு
வான்றகைமடந்தையை வருத்தந்தணித்தது.

இ-ள். கவலங்கொள் - கவற்சிகொள்ளுதற்கேதுவாகிய—பேய்த்தொகை - பேய்த்திரள்—பாய்தர - கரணங்களைப்பாயவிரிற்ப—காட்டிடை - புறங்காட்டின்கண்—ஆட்டுவந்த - ஆடுதலைவிரும்பிய—தவலங்கிலா - கேடங்கில்லாத—சிவன்-சிவனது—தில்லையன்னாய் - தில்லையையொப்பாய்—தழுவிம்முழுவி - தழுவி முத்தங்கொண்டு—சுவலங்கிருந்த - சுவலிடத் தேறியிருந்த—நந்தோன்றல் - நம்முடையதோன்றலை—துணையென - தமக்குத்துணையெனக்கருதிவந்து—தோன்றுதலால் - தோன்றுதலான்—அவலங்களைந்து - நினதுள்ளத்துக் கவற்சியைநீக்கி—அரசனுக்கு - இனியரசற்கு—பணிசெய்பாலை - குற்றேவல் செயற்பாலை—எ-று. (௩௮௯)

நேரிசையாசிரியப்பா.

அவ்வுழியவ்வுழிப்பெய்புணவுன்னி
முகன்பெறுமிருசெயலகன்பெறக்கொளுவும்
புல்லப்பாண்மகன்சில்லையுமின்றி
யின்பக்கிளவியன்பினர்ப்போக்கி
முடித்தலைமன்னர்செருக்குநிலையொருவிப்
பொன்னுறுஞாழற்பூவுடன்கடுக்கும்
பேழ்வாய்ப்புலியுகிர்சிறுகுரல்விளங்க

வமுதந்துளிக்குங்குமுதவாய்குதட்டிப்
பழங்கொடத்தைவழங்குசொற்போலு
மழலைககிளவியுமிருநிலத்தினபமு
மொருவழியளிக்குமிருங்கதிச்சிறுவனைத்
தழல்விழிமடங்கற்கொலையரிக்குருளையைப்
பொன்மலைகண்டபொலிவுபோல
மணிகெழுமார்பகததணிபெறப்புகுத்தலிற்
கறங்கிசையருவியறைந்துமிர்திவலையுந்
துருத்திவாயதுக்கியகுங்குமக்காண்டமுங்
குறமகார்கொழிக்குங்கழைநித்திலமு
நெடுநிலையரங்கிற்பரிபெறுதரளமும்
புனம்படவெறிந்தகாரகிற்றூமமு
மந்தணர்பெருக்கியசெந்தீப்புகையும்
வேங்கையின்றூதுடன்விரும்பியசுரும்புங
கந்திவிரிபடிந்தமென்சிறைவண்டுஞ்
சந்தனப்பொங்கர்த்தழைசிறைமயிலு
முன்றிலம்பெண்ணைக்குடம்பைகொளன்றிலு
மொன்றினோடொன்றுசென்றுதலைமயங்குங்
குளவன்குன்றக்கூடலம்பதிநிறை
மஞ்சடைகுழற்பெறுசெஞ்சடைப்பெருமா
னருந்தமிழ்க்கீரன்பெருந்தமிழ்ப்புனைவல்
வாவியிறகேட்டகாவியங்களத்தினன்
றிருக்கணக்கண்டபெருக்கினர்போல
முளரியங்கோயிறறளைவிடவந்து
நல்லறம்பூத்தமுல்லையந்திருவின
ணின்னுளத்தின்னன்மன்னறக்களைந்து
பொருத்தங்காண்டிவண்டாரு
மருததியங்கோதைமன்னவனபாலே. ௫௨

அவ்வுழியவ்வுழி மன்னவன்பாலே. பகுதி - பரத்தையிற்பி ரிவு, துறை - ஊடறணிவித்தல். *

கறங்கிசையருவியறைந்தெழிர்திவலையுந்
துருத்திவாயதுக்கியகுங்குமக்காண்டமும்

(இதனதுபதப்பொருள்)

கறங்கிசை - முழங்காநின்ற வொலியையுடைய—அருவி- அருவியானது—அறைந்து - எறிய—எழிர் - எழுகின்ற—திவலையும் - துளிகளும்—துருத்திவாய் - நீர்சொரிகருவியின் வாயை —அதுக்கிய - அழுத்துவதாற் சிந்தும்—குங்குமக்காண்டமு ம் - குங்குமங்கலந்தநீரும் ;

குறமகார்கொழிக்குங்கழைமுத்திலமு
நெடுநிலையரங்கிற்பரிபெறுதாளமும்

குறமகார் - குறப்பெண்கள்—கொழிக்கும் - வண்டலாட் லிற்கொழிக்கின்ற—கழைமுத்திலமும் - மூங்கின்முத்தங்களு ம்—நெடுநிலை - நெடிய மேனிலையினையுடைய—அரங்கில் - நாத் தனசாலையில்—பரிபெறுதாளமும் - மாலைகளிலறுந்துசிந்துகின் ற முத்தங்களும் ;

புனம்படவெறிந்தகாரகிற்றூமமு
மந்தணர்பெருக்கியசெந்தீப்புகையும்
வேங்கையின்றுதுடன்விரும்பியசுரும்புங
காந்திவிரிபடிந்தமென்சிறைவண்டும

புனம்படவெறிந்த - காடுகெடவெட்டிய—காரகிற்றூமமும்- சேகாகியவகிற்கட்டையின் புகையும்—அந்தணர்பெருக்கிய-அந் தணரால் வளர்க்கப்பட்ட—செந்தீப்புகையும் - சிவந்த வேள்வி த்தீயின புகையும்—வேங்கையின்றுதுடன் - வேங்கைமலர்த்தா

துகளை—விரும்பியசுரும்பும்-இச்சித்தபெடைவண்டுகளும்—கந்திவிரி - விரிவாகியகமுகில—படிந்த- தங்கிய—மென்சிறை-மெல்லியசிறைகளையுடைய—வண்டும் - ஆண்வண்டுகளும் ,

சந்தனப்பொங்கர்த்தழைசிறைமயிலு
முன்றிலம்பெண்ணைகுடம்பைகொளன்றிலும்

சந்தனப்பொங்கர் - சந்தனச்சோலையில்—தழைசிறைமயிலும்-சிறைவிரித்தாடுகின்ற மயில்களும்—முன்றிலம்பெண்ணை-நீட்சியாகியபனைமரத்தின்மேல்—குடம்பைகொள்-கூட்டிற்றங்குகின்ற—அன்றிலும் - அன்றிற்பறவைகளும் ,

ஒன்றிரேடொன்றுசென்றுதலைமயங்குங்
குளவன்குன்றக்கூடலம்பதிநிறை
மஞ்சடைகுழற்பெறுசெஞ்சடைப்பெருமான்

ஒன்றிரேடோன்று - ஒன்றுடனென்று—சென்று - சேர்ந்து—தலைமயங்கும் - தம்மிலமயங்குதற்கிடமாகிய—குளவன்-முருகக்கடவுளது—குன்றம் - திருப்பரங்கிரிசூழ்ந்த—கூடலம்பதிநிறை - கூடலென்னும்பதியில் நிறைந்திருக்கின்ற—மஞ்சடைகுழற்பெறு - மேகத்தையொத்தவளகத்தையுடைய கங்கைப்பெண் தனக்கிடமாகப்பெற்றுள்ள—செஞ்சடைப்பெருமான்-செஞ்சடைக்கடவுள் ,

அருந்தமிழ்க்கீரன்பெருந்தமிழ்ப்பனுவல்
வாலியிறகேட்டகாவியங்களத்தினன்
நிருககணகண்டபெருக்கினர்போல

அருந்தமிழ் - அரியதமிழிறகைவந்த—கீரன் - நக்கீரதேவன்—பெருந்தமிழ் - பெரியதமிழாகிய—பனுவல் - பெருமையுள்ளதமிழ்ப்பனுவலை—வாலியில் - பொற்றாமரைவாவியினின்றுபாட—கேட்ட - காதாற்கேட்டருளிய—காவியங்களத்தினன் - நீலகண்

டனது—திருக்கண்கணட - திருகோலத்தைக் கண்ணுற்கண்ட—பெருகஇனர்போல - செல்வபபெருகஇனர்போல,

முளரியங்கோயிற்றலைவிடவந்து
நல்லறம்பூத்தமுல்லையந்திருவினள்

முளரியங்கோயில் - தாமரையாகிய வாலயமானது—தலைவிடவந்து - இதழ்க்கதவந்திறக்கவநது—நல்லறம்பூத்த முல்லையந்திருவினள் - நன்மைபயக்கும் இல்லறத் தருமமுண்டான அறக்கற்பினையுடைய திருமகளே,

அவ்வுழியவவுழிப்பெய்யுணவுன்னி
முகன்றருமிருசெயலகன்பெறக்கொளுவும்
புல்லபபாண்மகன்சில்லையுமின்றி
யின்பக்கிளவியன்பினர்ப்போக்கி
முடித்தலைமன்னர்செருக்குநிலையொருவி

அவ்வுழியவ்வுழி - வீடுகள்தோறும்—பெய்யுணவுன்னி - இடப்பட்ட பலியைக்கருதி—முகன்றருமிருசெயல் - முகந் தராநின்ற வுவப்பு வெறுப்பென்னு மிருசெயலையும்—அகலபெற - மனத்திற்பொருந்த—கொளுவும்-கொள்ளுகின்ற—புல்லப்பாண்மகன் -புன்மையுள்ள பாணனுகிய—சில்லையுமின்றி - கீழ்மகனுமில்லாமல்—இன்பககிளவி - இன்பம்போலுவதாகிய சொற்களுடன்—அன்பினர் - அன்பையுடைய பரத்தையரை—போக்கி - நீக்கி—முடித்தலைமன்னர் - முடியணிந்த தலையினையுடைய அரசர்க்குரிய—செருக்கு - நிலையானசெருக்கையும்—நிலைஒருவி - தன்னினீங்கி,

பொன்னுறுநாழற்பூவுடன்கடுக்கும்
பேழ்வாய்ப்புலியுகிர்சிறுகுரல்விளங்க
வழுதிந்துளிக்குங்குமுதவாய்குதட்டிப

பழங்கொடத்தைவழங்குசொற்போலு
மழலைக்கிளவியுமிருநிலத்தின்பமு
மொருவழியளிக்குமிருங்கதிச்சிறுவனை

பொன்னூறு - பொன்மையாகிய—ஞாழற்பூவுடன் கடுக்கும் - ஞாழற்பூவையொத்த—பேழ்வாய்ப்புலியுகிர் - வாயாற் பெரியபுலிநகமாகிய அணி—சிறுகுரல்விளங்க- சிறியகழுத்தில்விளங்காநிற்க —அமுதந்துளிக்கும் - அமுதஞ்சிந்துகின்ற—குமுதவாய்குதட்டி - செங்குமுதம்போலும் வாயைக்குதட்டி—பழங்கொள் - பழநுகர்கின்ற—தத்தை - கிள்ளை—வழங்குசொற்போலும் - பேசுஞ்சொற்கள் போலுகின்ற—மழலைக்கிளவியும்- மழலைச்சொல்லும்—இருநிலத்தின்பமும் - இகபரங்களினின்பமும்—ஒருவழியளிக்கும - ஓரிடத்துதவுகின்ற—இருங்கதி- பெருங்கதியிற்செலுத்தத்தக்க—சிறுவனை - பிள்ளையை ,

தழல்விழிமடங்கற்கொலையரிக்குருளையப
பொன்மலைகண்டபொலிவுபோல
மணிகெழுமார்பகத்தணிபெறப்புகுத்தலில்

தழல்விழி - அழற்கண்களையுடைய வேற்றுமிருகங்கள்—மடங்கல் - மடங்குதற்குக் காரணமாகிய—கொலையரிக் குருளையை - கொலைத்தொழிலை யுடைய சிங்கக்குருளையை—பொன்மலைகண்ட - பொன்மலைமேற்கண்ட—பொலிவுபோல - காட்சியையொப்ப—மணிகெழு - மணிவடமணிந்த—மார்பகத்து - அவன்மார்பினிடத்தே—அணிபெற - இனிமைபெற—புகுத்தலில் - ஏந்திவிளையாடலால் ,

நின்னுளத்தின்னன்மன்னறக்களைந்து
பொருத்தங்காண்டிவண்டாரு
மருத்தியங்கோதைநன்னயனபாலே.

வண்டாரும் - வண்டுகள்மொய்த்தற்கேதுவாகிய—அருந்தி - ஆலசதாரத்தக்க—அங்கோதை - அகவிதழ்செறிந்த மலர்மாலைபூண்ட—மன்னவன்பால் - நமது தலைவனிடத்தேயுள்ள—நின்னுளத்தின்னல் - உனது மனக்கோட்டத்தை—மன்னறக்களைந்து - முழுதுமறக்களைந்து—பொருத்தங்காண்டி - ஒற்றுமை கொள்வாயாக—எ-று.

இவைமுதலன்றில்காறும் தலைமயங்கும் குன்றக்கூடல்பெருமானாகியகாவிக்களத்தின்னதிருக்கண்டாரபோல திருவினளே இன்றி போககி யொருவி யிருங்கதிச் சிறுவனை மலைகண்ட பொலிவுபோல் மார்பகத்துப்புகுத்தலால் மன்னவன்பால் உன் னின்னல்களைந்து பொருத்தங்காண்டியெனவினைமுடிவுசெய்க.(௫௨)

---

குலமுறைகூறிமறுத்தல்.

குலமுறைகூறி மறுத்தலென்பது - நீயேகூறெனச் சொல்லகேட்டு, உலகத்து ஒருவர்கண் ஒருவர் ஒருகுறைவேண்டிச் சென்றால் அக்குறை நீயே முடித்துககொள்ளெனபாரில்லை அவ்வாறன்றி இவளிந்நாளெல்லாம் என்குறை முடித்துத் தருவேனென்று என்னை யவமேயுழற்றி இன்று நின்குறை நீயேமுடித்துக்கொள்ளென்று நின்றாளெனத் தலைமகன் ஆற்றாதுநிற்ப, அவனை யாற்றுவிப்பது காரணமாக, நீா பெரியீர் யாஞ்சிறியேம், ஆதலான எம்மோடு நுமக்குச் சொல்லாடுதல் தகாதெனக குலமுறைகூறி மறுத்துரையாநிற்றல். அதற்குச்செய்யுள.—

தெங்கம்பழங்கமுகின்குலைசாடிக்கதலிசெற்றுக்
கொங்கம்பழனத்தொளிர்குளிர்நாட்டினைநீயுமைகூர்
பங்கம்பலவன்பரங்குன்றிற்குன்றன்னமாபதைப்பச்
சிங்கந்திரிதருசீறூர்ச்சிறுமியெந்தேமொழியே. (௧00)

தொழுகுலத்திர சொற்காகே    ம்
இழிகுலததே மெனவுரைதந    து.

இ-ள். தெங்கம்பழம் - மூக்கூழ்ந்துவிழுகின்ற தெங்கம்பழம்—கமுகினகுலை - கமுகினதுகுலையை—சாடி - உதிரமோதி—கதலிசெற்று - வாழைகளைமுறித்து—கொங்கு- பூந்தாதையுடைய—அம்பழனத்து - பழனத்துககிடந்து—ஒளிர - விளங்கும்—குளிர்நாட்டினை நீ - குளிர்ந்தநாட்டினுள்ளாய் நீ—எமதே மொழி - எம்முடையதேமொழி—உமை - உமை—கூர் - சிறந்த—பங்கு - பாகத்தையுடைய—அம்பலவன - அம்பலவனது—பரங்குன்றில்-பரங்குன்றிடத்து—குன்றன்ன- மலைபோலும்—யா - யானைகள்—பதைபப - நடுங்க—சிஙகம் - சிஙகங்கள்—திரிதரு - வேட்டந்திரியும்—சீறூர் - சீறூர்ககணுள்ளாள்—சிறுமி- ஓர்சிறியாள்-அதனால்-எம்மோடு நீ சொல்லாடுதல் தகாது-எ-று.

நேரிசையாசிரியபபா.

பெருமறைநூல்பெறக்கோன்முறைபுரக்கும
பெருந்தகைவேந்தனருங்குணம்போல
மணந்தோர்க்கமுதுந்தணந்தோர்க்கெரியும்
புக்குழிப்புக்குழிப்புலன்பெறக்கொடுக்கு
மலையத்தமிழ்க்கால்வாவியுட்புகுந்து
புல்லிதழ்த்தாமரைப்புதுமுகையவிழ்ப்ப
வண்டினம்படிந்துமதுககவாந்துண்டு
சேயிதழ்க்குவளையினிரைநிரையுறங்கு
நிலைநீர்நாடனீயேயிவளே
மலையுறைபகைத்துவானுறைக்கணக்கும
புட்குலஞ்சூழ்ந்தபொருப்புடைக்குறவாதம
பெருநதேன்கவருஞ்சிறுகுடிமகளே

நீயே-யாயமோடார்ப்பவரிகிணைமுழக்கி
மாயாநல்லறம்வளர்நாட்டினையே
யிவளே-தொண்டகந்துவைப்பத் தொழிற்புனம்வ
பகட்டினங்கொல்லும்பழிநாட்டவளே [ளைந்து
நீயே-யெழுநிலைமாடத்திளமுலைமகளிர்
நடஞ்செயத்தரளவடந்தெறுநகரோ
யிவளே-கடம்பெறுகரிக்குலமடங்கல்புக்ககழத்
தெறித்திடுமுத்தந்திரட்டுவைப்பினளே
நீயே-யணிகெழுநவமணியலமொனத்தொடுத்த
பொற்கொடித்தோமிசைப்பொலிகுவையன்றே
யிவளே-மணிவாய்க்கிள்ளை துணியாதகற்ற
நெட்டிதணேறுமிப்புனத்தினளே
யாதலிற்பெரும்புகழணைகுதியாயி
ரரணன்படரத்தேவர்கெட்டோட
வளிசுழல்விசும்பின்கிளாமுகடணவிக்
கருமுகில்வளைந்துபெருகியபோல
நிலைகெடப்பரந்தகடல்கெழுவிடத்தை
மறித்தவருயிர்பெறக்குறித்துண்டருளித்
திருக்களங்கறுத்தவருட்பெருநாயகன்
கூடல்கூடினர்போல
நாடணியிவள்கழைத்தோணசையே. ருந

---*---

பெரும்மறைநூல்பெற கழைத்தோணசையே. பகுதி - சே
ட்படை, துறை - குலமுறைகூறிமறுத்தல். *

நீயே
பெருமறைநூல்பெறகோன்முறைபுரக்கும்
பெருந்தகைவேந்தனருநகுணமபோல

(இதனது பதப்பொருள்)

நீயே - நீயோவென்றால்—பெருமறை - பெரியவேதத்தினி ன்றும்—நூல்பெற - மநுநூல் விதிவழியேபிறந்த—கோல்-செ ங்கோலாகிய—முறைபுரக்கும் - அரசியல்செய்யும்—பெருந்த கை - மேம்பாடுள்ள—வேந்தன் - அரசனதாகிய—அருங்குண ம்போல - பிறரால் பெறலரியநற்குணமென்ன ;

மணந்தோர்க்கமுதுந்தணந்தோர்க்கெரியும்
புகுகுழிப்புகுகுழிபுலன்பெறக்கொடுக்கு
மலையத்தமிழ்க்கால்வாவியுட்புகுந்து
புல்லிதழ்த்தாமரைப்புதுமுகையவிழ்ப்ப
வண்டினம்படிந்துமதுககவாந்துண்டு
சேயிதழ்க்குவளையினிளைகிளையுறங்கு
நிலைநீர்நாடன்

மணந்தோர்க்கு - பிரிவில்லாதவர்களுக்கு—அமுதும் - அ முதத்தையும்—தணந்தோர்க்கு - பிரிந்தவர்க்கு—எரியும் - அழ லையும்—புக்குழிபுக்குழி - புகுந்தபுகுந்த விடங்களில்—புலன் பெறக்கொடுக்கும்-இந்திரியவுணர்ச்சிபெறக் கொடுக்காநின்ற— மலையத்தமிழ்ககால் - தமிழுக்கிடமாகிய பொதிகையினின்றும் தென்றலானது—வாவியுட்புகுந்து-தடங்களிற்படிந்து—புல்லி தழ்த்தாமரை-புறவிதழ்த்தாமரைகளின்—புதுமுகையவிழ்ப்ப- புதிய வரும்புகளை மலர்த்தலால்—வண்டினம்படிந்து - வண்டி னம்புகுந்து—மது - தேனை—கவர்ந்துண்டு - விரும்பியுண்டு— சேயிதழ்க்குவளையினிளை-கிளையாகிய செவ்விதழ்க் குவளைமலர் களில்—கிளைஉறங்கும் - சேர்ந்து தங்குதற்கிடமாகிய—நிலைநீர் நாடன் - நீர்நிலைசூழ்ந்த மருதத்தலைவனுகுவை,

இவளே
மலையுறைபகைத்துவானுறைக்கணக்கும்

புட்குலஞ்சூழ்ந்தபொருப்புடைக்குறவர்தம்
பெருந்தேனகவருஞ்சிறுகுடிமகளே

இவளே - உன்னால்விரும்பட்பட்ட இவளோவென்றால்—மலை யுறை - மலையருவியை—பகைத்து - வெறுத்து—வானுறைக்கு- மழைத்துளிக்கு—அணகும - அங்காத்தல்செய்கின்ற—புட்கு லம்-சகரவாகபுள்ளினம்—சூழ்ந்த- சூழ்ந்திருக்கின்ற—பொ ருப்புடை-மலையையிடமாகவுடைய—குறவர்தம - குறவர்களது —பெருந்தேன் - இறாலிலுள்ள தேனை—கவரும்-விரும்புகின்ற —சிறுகுடி - சிறியகுடியிற்பிறந்த—மகளே - பெண்ணுவள்,

நீயே-யாயமோடாரப்பவரிகிணைமுழக்கி
மாயாநல்லறம்வளர்நாட்டினையே

நீயே - நீயோவென்றால்—ஆயமோடு- மகளிர்கூட்டத்தோ டு—ஆர்ப்ப - ஆரவாரிக்க—அரிகிணைமுழகக - மரவயிரத்தாற் செய்த மருதபபறைகொட்டி—மாயாநல்லறம் - அழியாதநல்ல றத்தை—வளர்நாட்டினை-வளாக்காநின்ற நாட்டினையுடையாய்,

இவளே-தொண்டகந்துவைப்பத்தொழிற்புனம்வளைந்து
பகட்டினங்கொல்லும்பழிநாட்டவளே

இவளே - இவளோவென்றால்—தொண்டகம் - குறிஞ்சிப் பறை—துவைப்ப - முழங்க—தொழில் - தன்னாற்காத்தல்செய் யப்பட்ட—புனம்வளைந்து - புன்பயிர்க்கொல்லைகளைச்சுற்றி— பகட்டினம் - யானைக்குலங்களை—கொல்லும்- வருத்துகின்ற— பழிநாட்டவள் - சீறூருடையவள் ;

நீயே-யெழுநிலைமாடத்திளமுலைமகளிர்
நடஞ்செயத்தாளவடந்தெறுநகரோய்

நீயே - நீயோவென்றால்—எழுநிலைமாடத்து - நிலைகளான் மேலெழுந்த மாளிகைகளில்—இளமுலைமகளிர - பருவமஙகை

யர்—நடஞ்செய - ஆடல்செய்ய—தாளவடம் - முத்துவடங்க ள்—தெறும் - சிந்துதற்கிடமாகிய—நகரோய - நகரத்தையுடை யாய்;

இவளே-கடம்பெறுகரிகுலமடங்கல்புக்ககழத்
தெறித்திடுமுத்தந்திரடடுவைபபினளே

இவளே - இவளோவென்றால்—கடம்பெறு - மதமொழுக் காநின்ற—கரிகுலம் - யானைகுலங்களை—மடங்கல்புக்கு - சி ங்கமெதிர்ந்து—அகழ - மத்தகத்தைபபிளத்தலால்—தெறித்தி டுமுத்தம் - தெறித்திட்டமுத்தங்களை—திரட்டு - சேர்க்கின் ற—வைபபினள் - சிலதத்தினளாவள்;

நீயே-யணிகெழுநவமணியலரொனத்தொடுத்த
பொற்கொடித்தோமிசைபபொலிகுவையன்றே

நீயே - நீயோவெனின்—அணிகெழுநவமணி - அலங்கரிக்க பபட்ட வொனபான்மணிகளும்—அலரொனத்தொடுத்த - மலர் மாலைபோலக்கோத்துள்ள—பொற்கொடித்தேர்மிசை- கொடிக ளாடாநின்ற பொற்றேர்மேல்—பொலிகுவை - விளங்குவை;

இவளே-மணிவாய்கிள்ளை துணியாதகற்ற
நெடடிதணேறுமிப்புனத்தினளே
யாதலின்

இவளோ - இவளோ வெனின்—மணிவாய்க்கிள்ளை - செவ் வாய்கிளிகளை—துணியாது - தெளியாமல்—அகற்ற - ஒச்சுமா று—நெட்டிதண் - நெடுமையாகியபரண்மேல்—ஏறும் - ஏறுத ற்கிடமாகிய—இப்புனத்தினள் - இத்தினைப்புனத்தினள்—ஆத லின் - ஆகையால்;

பெரும்புகழணைகுதியாயி
னாரணன்படரத்தேவர்கெட்டோட
வளிசுழல்விசும்பின்கிளர்முகடணவிக
கருமுகில்வளைந்துபெருகியபோல
நிலைகெடப்பரந்தகடல்கெழுவிடத்தை
மறித்தவருயிர்பெறகுறித்துண்டருளித்
திருக்களங்கறுத்தவருட்பெருநாயகன்
கூடல்கூடினர்போல
நாடனீயிவள்கழைத்தோணசையே.

பெரும்புகழ் - மிககபுகழை—அணைகுதியாயின் - பெறவேண்டினையாயின்—நாரணன்படர - திருமால்பின்னிட—தேவர் கெட்டோட - தேவாக ணிலைகெட்டோடாநிற்ப—வளிசுழல்- வீசுகின்றகாற்றுக்கிடனாகி—விசும்பின்கிளர்முகடணவி - மாசில்லாதவிண்மீதிலளாவி—கருமுகில் - கரியமுகில்கள்—வளைந்து - சூழ்ந்து—பெருகியபோல - பரந்தாற்போல—நிலைகெட- கீழ்மேலாக—பரந்த - பரவிய—கடல்கெழு - கடலிற்பிறந்த—விடத்தை - ஆலாலத்தை—மறித்து- தடுத்து—அவருயிர்பெற- அத்தேவர்முதலியோ ருயிருடன்வாழுமாறு—குறித்து-கடைக கணித்து—உண்டருளி - உட்கொண்டருளி—திருக்களங்கறுத்த-ஸ்ரீகண்டங்கறுத்த—அருட்பெருநாயகன் - பேரருட்கடவுளது—கூடல் - மதுரையை—கூடினாபோல - அடைந்தவர்பற்றற்றாற்போல—இவள் - இழிகுலத்த...கிய விவளது—கழைத்தோள் - பசியமூங்கில்போலும் தோளைப்புணரும்—நசையை- ஆசையை—நாடல் - நீ நாடாதொழிக—எ-று.

நீயே நிலைநீர்நாடனிவளே சிறுகுடிமகள்-நீயே-அறம்வளர் நாட்டினை இவள்பழிநாட்டவள்-நீ-நகரோய் இவள் முத்தந்திர

டுமைபபினள் நீ-தேர்மிசைப பொலிகுவை-இவள் இதணோறு மிபபுனத்தினள் ஆதலிற்புகழிணைகுதியாயின் அருட்பெருநாயக ன் கூடல்கூடினர்போல இவள் தோணசை நாடனீயென வினை முடிவுசெய்க.　　　　(௫௩)

---

## உரியகாவற்பிரிவறிவித்தல்.

பிரிவறிவித்தலென்பது - தருமநூல்விதியால் நமர்உலகத் தைப்பாதுகாப்பான் பிரியக் கருதாநின்றாரெனத் தலைமகன் கா வலுக்குப பிரியக்கருதாநின்றமை தோழி தலைமகளுககறிவியாநி றறல் அதறகுச்செய்யுள்:—

மூப்பானிளையவன்முன்னவன்பின்னவன்முப்புரங்கள்
வீப்பான்வியன்றில்லையானருளாலவிரிநீருலகங
காப்பான்பிரியக்கருதுகின்றார்நமர்கார்க்கயற்கட்
பூப்பானலமொளிரும்புரிதாழ்குழற்பூங்கொடியே. ௩௧௨.

இருநிலங்காவற் கேகுவர்நமரெனப்
பொருசுடர்வேலோன் போக்கறிவித்தது.

இ-ள். கார் - கரிய—கயல் - கயல்போலும்—கண் - கண் ணிணையும்—பூப்பால் - பூவின்கண்—நலமொளிரும் - நறுநாற்ற முடைமையாகிய நன்மைவிளங்கும்—புரிதாழ்குழல் - சுருணட தாழ்ந்தகுழலையுமுடைய—பூங்கொடியே - பூங்கொடியையொப பாய்—மூபபான் - எல்லார் யாக்கைககுமுன்னே தனதிச்சையா ற்கொளளபபட்ட திருமேனியையுடைய னாதலின் எல்லார்க்குந் தான் மூபபான்—இளையவன் - பின்றோன்றியயாகக்கையையுடை யா ரெல்லாரு மூபபவுந்தானிலைபெற்ற விளமையையுடைய னாத லின் எல்லார்ககுமிளையான்—முன்னவன்பின்னவன் - உலகத்

திற்குமுன்னுளோன் அதற்குப பின்னுமுள்ளோன்—முப்புரங்கள்—மூன்றுபுரங்களையும்—வீப்பான் - கெடுப்பான்—வியன்றில்லையான் - அகன்ற தில்லைக்கணனுன்—அருளால் - அவன்தேவலால்—நமர் - நமர்—விரிநீருலகம் - விரிந்தநீரால் சூழப்பட்டவுலகத்தை—காப்பான - காக்கவேண்டி—பிரியக்கருதுகின்றா- பிரியக்கருதாநின்றார்—எ-று. (கூ௪உ)

நேரிசையாசிரியப்பா.

நடைத்திரைப்பரவைநாற்கடலணைத்து
வரையறுத்தமைந்தவகைநான்காக
விதிவரத்திருத்தியமேதினிப்பொறையைக்
குருமணிவிரித்தலிற்றேறெடுகிடந்து
மாயாதுதொடுத்தமணமலர்சுமத்தலின்
வரையெனநிறுத்தியதிருவுறைபெருந்தோ
டரித்துமணைத்துந்தானெனக்கண்டுஞ்
செய்ததுமன்றித்திருமநம்பணைத்துக்
காக்கவுங்குரிசில்கருததுறும்போலும்
விடையாவடங்தைசெய்வெள்ளியஞ்சிலம்பினுந்
தென்கால்விடுக்குஞ்செம்பிற்பொருப்பினுங்
கொண்டல்வந்துலவுநீலக்குவட்டினுங்
கோடைசென்றுடற்றுங்கொல்லிக்கிரியினும்
பிறந்தவர்பிறவாப்பெரும்பதியகத்து
முடிந்தவர்முடியாமூதூரிடத்துங்
கண்டவர்காணுக்காட்சிசெய்நகரினும்
வேதத்தலையினும்விதியாகமத்தினுங்
கல்வியருளத்துங்கலர்நெஞ்சகத்துந்
தெய்வம்விடுத்துப்பொய்கொள்சிந்தையினுங்
கொலையினர்கண்ணுங்குன்றுநியைந்து

வெளியுறத்தோன்றியிருளூறமறைந்த
விஞ்சைவந்தருளியநஞ்சணிமிடற்றேன்
சந்தமும்பதமுஞ்சருக்கமுமடக்கமுஞ்
சின்னக்குறளுஞ்செழுங்காபோலப்
பெருமறைமுழுங்குந்திருநகாக்கூட
லொப்புற்றடைமலர்சுமந்த
மைப்புறக்கூந்தறகொடிவணங்கிடையே. ருச

———*———

நடைத்திணைபபரவை கொடிவணங்கிடையே. பகுதி - கா
றபிரிவு, துறை - பிரிவறிவித்தல். *

விடையாவடந்தைசெய்வெள்ளியஞ்சிலம்பினுந்
தென்காலவிடுகுஞ்செமபிறபொருபபினுங
கொணடல்வநதுலவுநீலக்குவட்டினுங்
கோடைசென்றுடற்றுங்கொல்லிககிரியினும்

(இதனதுபதப்பொருள்)

விடையா - வருத்தஞ்செய்யாத—வடந்தை - வடகாற
றை—செய் - செய்கின்ற—வெளளியஞ்சிலம்பினும் - கைலை
ககிரியினும்—தென்கால் - தெனறற்காற்றை—விடுகுட்-வெ
ளிபபடுத்தாநின்ற—செம்பிறபொருபபினும் - தாம்பிரபரணி
யென்னு நதியையுடைய பொதிகைமலையினும்—கொண்டல் - கீ
ழ்காற்று—வந்துலவும் - வநதுலவுகின்ற—நீலக்குவட்டினும -
நீலமலையினும்—கோடை - மேல்காற்று—சென்று - வந்து—
உடற்றும் - வெபபஞ்செய்கின்ற—கொல்லிககிரியினும் - கொல
லிமலையினும் ;

பிறந்தவாபிறவாபபெரும்பதியகத்து
முடிநதவாமுடியாமூதூரிடத்துங்
கண்டவாகாணுககாட்சிசெயநகரினும

வேதத்தலையினும்விதியாகமத்தினுங்
கல்வியருளத்துங்
குன்றுதியைந்து
வெளியுறத்தோன்றி

பிறந்தவர் - உலகிற்பிறந்தவர்கள்—பிறவா - பின்னும்பிற வாத—பெரும்பதியகத்தும் - பெருமையாகியதிருவாரூரிலும்—முடிந்தவர்-இறந்தவர்கள்—முடியா-பின்னும் பிறந்திறவாத—மூதூரிடத்தும் - பழமையானவடகாசியிலும்—கண்டவர் - தரிசித்தவர்கள்—காணு - பின்னும்பிறந்து காணப்படாத—காட்சி. செய் - தம்மை அறிவுருவாக்குகின்ற—நகரினும் - சிதம்பரத்திலும்—வேதத்தலையினும் - வேதத்தி னுச்சியிலும்—விதியாகமத்தினும் - விதித்தஆகமங்களிலும்—கல்வியருளத்தும் - கற்றறிந்தவருள்ளத்திலும்—குன்றுதியைந்து - குறையாதுபொருந்தி—வெளியுறத்தோன்றி - வெளிப்படத்தோன்றியும் ;

கலர்நெஞ்சகத்துந்
தெய்வம்விடுத்துப்பொய்கொள்சிந்தையினுங்
கொலையினர்கண்ணும்
யிருளுறமறைந்த
விஞ்சைவந்தருளியநஞ்சணிமிடற்றோன்

கலர்நெஞ்சகத்தும் - தவத்தினிடை யூறுகிய சினமுள்ள நெஞ்சத்தும்—தெய்வம்விடுத்து - தெய்வமுண்டென்பதைவிட்டு—பொய்கொள் - பொய்மையை மேற்கொண்ட—சிந்தையினும் - உள்ளத்தும்—கொலையினர்கண்ணும் - கொலைத்தொழிலினரிடத்தும்—இருளுற - இருளாகப்பொருந்தி—மறைந்த - ம றையும்—விஞ்சைவந்தருளிய - வித்தையிற்கைவந்த—நஞ்சணிமிடற்றோன் - விடத்தைத்தரித்த கண்டத்தையுடையவனது;

சந்தமும்பதமுஞ்சருக்கமுமடக்கமுஞ்
சின்னக்குறளுஞ்செழுங்காரபோலப
பெருமறைமுழங்குந்திருநகாககூட
லொபபுறநடைமலாகமழ்ந்த
மைபபுறககூந்தறகொடிவணஙகிடையே.

பெருமறை - பெருமையான வேதத்திலுள்ள—சந்தமும்- சந்தங்களும்—பதமும் - பதங்களும்—சருக்கமும் - சருககங்களும்—அடக்கமும் - அடக்கங்களும்—சின்னககுறளும் - சின்னக்குறளுமாகிய சாகைகள்—செழுங்காரபோல - கார்காலமேகம்போல—முழங்கும் - முழங்குகினற—திருநகர் - அழகியநகராகிய—கூடலொபபுற்று - மதுரையை ஒப்பாகி—அடைமலர் - தேன்பொருந்தியமலாகள்—கமழ்ந்த - பரிமளித்த - புறம்- பின்புறத்திலுள்ள—மை - கரிய—கூந்தல்- கூந்தலையும்—வணங்கு - வணங்குகின்ற—கொடி - கொடிபோலும—இடையே- இடையையும உடையாய் கேள,

நடைத்திரைபபரவைநாற்கடலணைத்து
வரையறுத்தமைந்தவகைநான்காக
விதிவரத்திருத்திபமேதிநிபபொறையைய
குரிசில்

குரிசில் - நமதரசனுக்கு—நடை - எழுதலுள்ள—திரை- அலைசூழ்ந்த—பரவை - பரபபாகிய—நாற்கடலணைத்து- நாற்றிசைக்கடல்களாற் சோலி—வரையறுத்து - எல்லைபபடுத்தி—அமைநத-எல்லாவளமும்நிறைந்த—வகைநான்காக - நான்குவகைநிலத்ததாக—விதிவரத்திருத்திய-மநுநூல்விதியோடுபொருந்துமாறுதிருத்திய—மேதிநிபபொறையை - பூமியாகியபாரத்தை,

குருமணிவிரித்தலிறநேரெடுகிடந்து
மாயாதுதொடுததமணமலாசுமத்தலின

வளையெனசிறுத்தியதிருவுறைபெருந்தோட்
டரித்துமணைத்துந்தானெனக்கண்டுஞ்
செய்ததுமன்றித்திருமநமபணைத்துக்,
காக்கவுங்கருத்துறும்போலும்

குருமணிவிரித்தலின் - (தோளணியில்) குருவிந்தமணிகள் பதிந்திருத்தலாலும்—தேனுடுகிடந்து - வண்டுகளோடுபொருந்தி—மாயாதுதொடுத்த - வாடாதுதொடுக்கப்பட்ட—மணமலர் - நறுமலர்மாலைகளை—சுமத்தலின் - மேற்கொண்டிருத்தலாலும்—வளையென - மலைகளிவை யென்ன—சிறுத்திய - சிலைபெறுத்திய—திருவுறை - சயமகள் வசிக்கின்ற—பெருந்தோள-திரண்டதோளினிடத்தே—தரித்தும் - தாங்கியும்—அணைத்தும் - தழுவியும்—தானெனக்கண்டும் - மன்னுயிர்களைத் தன்னுயிரெனநினைந்தும்—செய்ததுமன்றி - அரசியல்செய்துவந்ததுமல்லாமல்—திருமநம்பணைத்து - மாசின்மையான மநம்பூரித்து—காக்கவும் - பகைக்குட்படாவண்ணம் பாதுகாக்கவும்—கருத்துறும்போலும்- கருத்துளான்போலுங் காணப்படுகின்றது-எ-று.

கூடலையொப்பாகிய கொடி வணங்கிடையாய் குரிசில் விதிவரத் திருத்திய மேதிநிப் பொறையை பெருந்தோ டரித்துமணைத்துந் தானெனக் கண்டுஞ் செய்ததுமன்றி திருமநம்பணைத்துக் காக்கவுங் கருத்துறும் போலுமென வினைமுடிவுசெய்க. (ருச)

---

உண்மகிழ்ந்துரைத்தல்.

உண்மகிழ்ந்துரைத்தலென்பது - பொருண்முடித்து இளைஞரெதிர்கொள்ளவந்து புகுந்ததலைமகன், தலைமகளுடன் பள்ளியிடத்தினிருந்து, இம மானைப்பிரிநது பொருள்தேட யான்வெ

ய்ய சுரஞ்சென்ற துன்பமெல்லாம் இவள் கொங்கைகள் என்னு றுப்புகளிடைமூழ்க இப் பூவணைமே லணையாமுன்னம் துவள் வுற்றதெனத் தன்னுள்ளே மகிழ்ந்து கூறுகிற்றல். அதற்குச் செய்யுள்.—

மயின்மன்னுசாயலிம் மானைப்பிரிந்துபொருள்வளர்ப் பான், வெயின்மன்னுவெஞ் சுரஞ்சென்றதெல்லாம் வி டையோன்புலியூர்க், குயின்மன்னுசொல்லிமென்கொங் கையென்னங்கத் திடைக்குளிப்பத், துயின்மன்னுபூவ ணைமேலணையாமுன் றுவளுற்றதே. (௩௱௧)

பெருநிதியோடு திருநகர்புகுந்தவ ன்
வளமனைக்கிழத்தியோ டுளமகிழ்ந்துரைத்தது.

இ-ள். மயின்மன்னுசாயல் - மயில்போலு மென்மையையு டைய—இம்மானைப்பிரிந்து - இம்மானைப் பிரிந்து—பொருள்வ ளர்ப்பான் - பொருளையீட்டுவான—வெயின்மன்னு - வெயினி லைபெற்ற—வெஞ்சுரஞ்சென்றதெல்லாம் - வெய்ய சுரத்தைச் சென்ற துன்பமெல்லாம—விடையோன் - விடையையுடையவ னது—புலியூர் - புலியூரிடத் துளவாகிய—குயின்மன்னுசொல் லி - குயிலோசை போலுஞ் சொல்லையுடையா ளுடைய—மென் கொங்கை - மெல்லிய கொங்கைகள்—என்னங்கத் திடைகுளிப் ப-என்னுறுப்புக்களினிடை மூழ்குமவகை—துயின்மன்னு-துயி னிலைபெறும—பூவணைமேல் - பூவணையிடத்து—அணையாமுன்- அணைவதன்முன்னம்—துவளுற்றது-மாய்ந்தது—எ-று. ௩௱௧

நேரிசையாசிரியப்பா.

நுனிக்கவினிறைந்ததிருப்பெருவடிவின
ளுயிர்வைத்துடலமுழன்றனபோல

நெடும்பொருளீட்டநிற்பிரிந்திறந்து
கொன்றுணலஞ்சாக்குறியினாபோகுங்
கடுஞ்சுரந்தகல்லழல்வெப்பந்
தேவர்மருந்துந்தென்றமிழ்ச்சுவையு
மென்னுயிர்யாவையுமிட்டடைததேந்திக்
குருவியுங்குன்றுங்குரும்பையும்வெறுத்தநின்
பெருமுலைமுழ்கவென்னுளத்தினிறறொடாமுன்
வீழ்சுற்றொழுக்கியபராரைத்திருவடக்
குளிர்நிழலிருந்துகுணச்செயன்மூன்று
முடலொடுபடருநிலைநிழல்போல
நீங்காப்பவத்தொகைநிகழமுதனானகு
முடனிறந்தொழியாவுட்பகையைநது
மதியினிற்பழித்தவடுவிருமூன்று
மனுகாதகற்றிப்பணிமுனிநால்வாக
கறமுதனான்கும்பெறவருள்செயத
கூடற்பெருமானீடருண்மூழ்கி
யிருபதமுள்வைத்திருந்தவாவினைபோற்
போயினதுணைவினைநோக்கி
யேகினவெனக்கேயற்புதந்தருமே. ௫௫

—*—

நுனிக்கவினிறைந்த வற்புதந்தருமே. பகுதி - பொருள்வயிற்பிரிவு, துறை - உண்மகிழ்ந்துரைத்தல். *

நுனிக்கவினிறைந்ததிருப்பெருவடிவினள்

(இதனது பதப்பொருள்.)

நுனிக்கவின் - உணர்வுடையோர் நுனிக்கத்தக்க வழகு— நிறைந்த - குறைபடாத—திருப்பெருவடிவினள் - திருமகளினு மிக்க வடிவையுடையாய் ;

உயிரைவைத்துடலமுழன்றனபோல
நெடுமபொருளீட்டநிறபிரிந்திறந்து

உயிரைவைத்து - உயிரை யோரிடத்தே வைத்து—உடலம் - தேகமானது—உழன்றனபோல - தனியேதிரிந்தாற்போல—நெடும்பொருள் - பெரியபொருளை—ஈட்ட - சம்பாதிககும்பொருட்டு—நிறபிரிந்திறநது - நின்னைவிட்டுப்பிரிநதுபோய் ;

கொன்றுணலஞ்சாக்குறியினாபோகுங
கடுஞ்சுரந்தநதகல்லழல்வெபபம

கொனறு - உயிாகளைககொனறு—உணலஞ்சா - உண்ணுதற் கச்சபபடாத—குறியினர் - பாவிகள்—போகும-செல்லுமிடமாகிய—கடுஞ்சுரந்தநத - கொடியபாலையி லுணடான—கல்லழலவெபபம - கலவழியின்வெமமையானது ;

தேவாமருந்துந்தென்றமிழ்ச்சுவையு
மென்னுயிராயவையுமிட்டடைததேநதிக
குருவியுஙகுனறுஙகுரும்பையுமவெறுத்தநின்
பெருமுலைமூழ்கவென்னுளத்தினிறறொடாமுன்

தேவா - தேவருணணுகினற—மருந்தும் - அமிர்தமும்—தென்றமிழ்ச்சுவையும - இனிமையுள்ள தமிழின்மதுரமும்—என்னுயிராயவையும் என்னுயிரெல்லாமும்—இட்டடைததேநதி - தமககுளளேயடைத்துவைத் திருமாந்து—குருவியும் - சககரவாகபபறவையையும்—குன்றும் - மலைகளையும்—குரும்பையும் - இளநீரையும்—வெறுத்த - கோபித்த—நின்பெருமுலை - நினது பெரியதனஙகளில்—மூழ்க - மூழ்குதற்கு—என்னுளத்தினில் - எனனுளளத்தே—தொடாமுன - நினைபபதற்குமுன்னே ;

வீழ்சுற்றொழுக்கியபராரைத்திருவடக
குளிர்நிழலிருந்துகுணசசெயன்மூன்று
முடலொடுபடருநிலைநிழலபோல

வீழ் - விழுதுகளை—சுற்றொழுக்கிய - சுற்றிலுமிறக்கிய—பரரை - பருமையான வடியுள்ள—திருவடம் - ஸ்ரீ கல்லாலவிருக்ஷத்தின்—குளிர்நிழலிருந்து - குளிர்ந்தநீழலின்கண் குருமூர்த்தமாகவிருந்தருளி—குணச்செயன்மூன்றும் - இராசதமுதலிய முக்குணசசெயகைகளும்—உடலொடுபடரும் - உடலோடுசெல்கின்ற—நிலைநிழல்போல - நிழலின் தன்மைபோல,

நீங்காப்பவத்தொகைநிகழ்முதனான்கு
முடனிறைந்தொழியாவுட்பகையைந்து
மதியினிறபழித்தவடுவிருமூன்று
மணுகாதகற்றி

நீங்கா - தம்மைவிடடுநீங்காத—பவத்தொகை - பிறவிக்கேதுவாகிய வினைககூட்டம்—நிகழ்முதல் - நிகழ்தற்காதாரமாகிய—நான்கும் - மநமுதலிய நான்குமு—உடனிறைந்து - தம்முடன் அநாதியாயிருந்து—ஒழியா - நீங்கற்கரிய—உட்பகையைந்தும் - உட்பகையாகிய ஆவரண மைந்தும்—மதியினில் - அறிஞரால்—பழித்த - பழிக்கபபட்ட—வடுவிருமூன்றும் - காமமுதலிய குற்றங்களாறும்—அணுகாதகற்றி - தம்மை நெருங்காமற றுரத்தி,

பணிமுனிநால்வர்க
கறமுதனான்கும்பெறவருள்செய்த
கூடற்பெருமானீடருணமூழ்கி
யிருபதமுள்வைத்திருந்தவர்வினைபோல்

பணி - தன்னைவணங்கபபெற்ற—முனிநால்வர்க்கு - சனகாதிநான்கு பிரமருஷிகட்கும்—அறமுதனான்கும் - அறமுதலி

ய புருஷார்த்த நான்கையும்—பெற - அவர்களடையுமாறு—அருள்செய்த - சொல்லாமற் சொல்லியருளிய—கூடற்பெருமான் - மதுரைநாயகனது—நீடருள் - அழிவில்லாத கிருபாசமுத்திரத்தில்—மூழ்கி - முழுகி—இருபதம - அவனிரண்டுதிருவடிகளையும்—உளவைத்து - உள்ளத்திலிருத்தி—இருந்தவர் - சிவாநுபூதியிலிருந்தவர்களுடைய—வினைபோல் - வினை ஒழிந்தாற்போல,

> போயின துனைவினைநோக்கி
> யேகினவெனககேயறபுதந்தருமே.

போயின - நீங்கிபபோன—துனைவினை - விரைவை—நோக்கி - ஆராய்படத்து—ஏகினவெனக்கே - பொருண்மேற் சென்றவெனககே—அறபுதந்தரும் - அதிசயத்தைத் தராநிற்கும்—எ-று.

நோக்கிஎன்பது வினையெச்சத்திரிபு.

திருப்பெருவடிவினளே நிற்பிரிந்திறந்துபோகுங் கடுஞ்சுரந்தந்த கல்லழல்வெபபமானது (நினபெருமுலைமுழ்க வென்னுளத்தி னிற்றொடாமுன் கூடற்பெருமா னீடருண்மூழ்கி யிருபதமுள்வைத்திருநதவர் வினைபோற) போயின துனைவினை நோககி ஏகினவெனககே யற்புதநதருமென வினைமுடிவுசெய்க(௫௫)

---

## புனலாட்டுவித்தமைகூறிப்புலத்தல்.

புனலாடடுவித்தமைகூறிப புலத்தலென்பது - அணைந்தவழியூடாநினற தலைமகள் ஊடறீராநின்ற தலைமகனோடு, இவர் செய்த பிழையெல்லாம் பொறுககலான, பலருமறிய வொருத்தியைப புனலாட்டுவித்து அது செய்யாதாரபோல என்மனையின்

கணிவர் வந்துநிற்கின்றவிது எனக்குப பொறுத்தலரிதெனத் த ணிகைத் தணியாதுபரத்தையைப புனலாட்டுவித்தமைகூறிப பு லவாநிற்றல். அதற்குச்செய்யுள்.—

செந்தார்நறுங்கொன்றைச்சிற்றம்பலவர்தில்லைநகரோர்
பந்தார்விரலியைப்பாய்புனலாட்டிமன்பாவியெற்கு
வந்தார்பரிசுமன்றுய்நிற்குமாறென்வளமனையிற்
கொந்தார்தடந்தோள்விடங்காலயிற்படைக்கொற்றவரே

ஆங்கதனுக் கழுககமெய் தி
வீங்குமென்முலை விட்டுரைத்த து.

இ-ள். கொந்தார் - கொத்துமாலை நிறைந்த—தடந்தோ ள் - பெரியதோளினையும்—விடங்கால் - நஞ்சைக்காலும்—அயி றபடை - கூரிய படையினையுமுடைய—கொற்றவர் - கொற்ற வர்—பாவியெற்கு - தீவினையேற்கு—வந்தாரென்வள மனையினி ற்குமாறு - எனது வளமனையில்வந்து நிறகின்றபடி—பந்தா ர - பந்துபயின்ற—விரலியை - விரலாளொருத்தியை—செந்தா ர் - செய்யதாராகிய—நறுங்கொன்றை - நறிய கொன்றைபபூவி னையுடைய—சிற்றம்பலவர் - சிற்றம்பலவரது—தில்லைநகர் - தி ல்லையாகிய நகர்வரைப்பில்—பாய் - பாயநத—புனலாட்டி - பு னலையாட்டுவித்து—வந்தார் - வெளிப்படத தவறுசெய்து வந் தார்—பரிசுமன்றுய் - சிலாநிற்கும் பரிசுமன்றுய்—மனத்தவறு செய்யாதார்வந்து நிற்குமாறு - வாதுநின்றுராயின் அதுபொறுத் தலரிது—எ-று. (௩௬௧)

நேரிசையாசிரியபபா.

கொன்றையந்துணரிற்செவ்வழிகுறித்தும்
வாலுளையெருக்கில்வளருழைபாடியுங
கூவிளங்கண்ணியிற்குலக்கிளைமுரற்றியும்

வெண்கூதளத்தின்விளரிநின்றிசைத்தும்
வண்டுந்தேனுஞ்சிமிறுஞ்சுரும்பு
முமிழ்நறவருந்தியுறங்குசெஞ்சடையோன்
மதுமலர்பறித்துசதிருவடிநிறைத்த
நான்மறைபபாலனைநலிநதுயிர்கவருங்
காலனைக்காய்ந்தகாலினன்கூடற்
றிருமருங்கணைந்துவருபுனல்வையை
வளாபுரண்டென்னத்திரைநிறைதுறையகத்
தணர்தெடுத்தேந்தியவரும்புமுகிழ்முலையோண்
மதிநுதற்பெருமதிமலர்முகதொருத்தியை
யாட்டியுமணைத்துங்கூட்டியுங்குலவியு
மேந்தியுமெடுத்துமொழுக்கியுமீர்த்து
முழுக்கியுந்தபுதியுமுலையொளிநோக்கியும்
விளிமொழியேற்றும்விதலையிற்றிளைத்தும்
பூசியும்புனைந்தும்பூட்டியுஞ்சூட்டியு
நிறுத்தியுநிரைத்துநெறித்துஞ்செறித்து
மெழுதியுந்தப்பியுமியைத்தும்பிணித்துங்
கட்டியுங்கலத்தியுங்கமழ்த்தியுமறைத்துச்
செய்தனவெல்லாஞ்செய்யலர்போலவென்
னெட்டிலைபொலிந்தபொன்னிறைதிருவுறையுளிற்
பாசடைக்குவளைச்சுழன்மனக்காட்டினைக்
கருவரிச்செங்கண்வராலினங்கலக்க
வெரியலர்முண்டகத்தடவிதிக்கெறிய
வெள்ளுடற்கருங்கட்கயனிரையுகைப்ப
மரகதப்பன்னத்தாம்பலங்குப்பையைச்
சொரியெயிற்றுப்பேழ்வாய்வாளைகடுவைப்பப்
படிந்துசேடெறியுஞ்செங்கட்கவரியு
மலைசூழ்கிடந்தபெருங்குலைப்பரப்பை
மலைகொடுமலைந்தமுதுநீர்வெள்ளமு

மிடைந்துவயவிரிந்துமுதுகுசரிந்துடைந்து
சிறியோன்செருவெனமுறியப்போகி
யுழவக்கணத்தைக்குலைகுடிபுகுத்தும்
பெருநீரூரர்சிறைநீர்விடுத்துச்
செறிந்ததென்னெனக்கேட்டி
மறிந்துழைவிழித்தமறிநோக்கினளே. ௫௬

---*---

கொன்றையந்துணரில் மறிநோக்கினளே. பகுதி-பரத்தை யிற்பிரிவு, துறை-புனலாட்டுவித்தமைகூறிப்புலத்தல். *

மறிந்துழைவிழித்தமறிநோக்கினளே.

(இதனதுபதப்பொருள்)

மறிந்துழை - மறிபட்டஇடத்தே—விழித்த - விழிக்கின் ற—மறிநோக்கினளே - மான்போலும்பார்வையினையுடையாய்,

பாசடைக்குவளைச்சுழன்மணக்காட்டினைக்
கருவரிச்செங்கண்வராலினங்கலக்க

சுழல் - சுற்றுகின்ற—மணம் - மணம் பொருந்திய—பாச டை - பசியஇலைகளையுடைய—குவளைககாட்டினை - குவளைமலர் த்திரளை—கருவரி - கரியவரியினையும்—செங்கண் - சிவப்பாகிய கண்களையுமுடைய—வராலினம - கூட்டமாகிய வரால்கள்—க லக்க - கலக்கா நிற்கவும்,

எரியலர்முண்டகத்தடவிதிக்கெறிய
வெள்ளுடற்கருங்கட்கயனிரையுகைப்ப

முண்டகத்து - தாமரைகளின்—எரியலரடவி - எரிபோல மலர்கின்ற பூத்திரளை—திககெறிய - திசைதோறுஞ் சிந்துமாறு —வெள்ளுடல் - வெள்ளிய வுடலையும்—கருங்கண் - கரியகண்

ணையுமுடைய—கயனிரை - சேன்மீன்கூட்டம்—உகைப்ப - பா யாநிற்பவும்,

மரகதபபன்னத்தாம்பலங்குப்பையைச்
சொரியெயிற்றுடபேழ்வாய்வாளைகடுவைப்ப

மரகதபபன்னத்து - மரகதமணிபோன்ற விலைகளோடு—ஆம்பலங்குபபையை - ஆம்பற் பூத்திரளை—சொரியெயிற்று - சொரிந்தாலொத்த பற்களையும்—பேழ்வாய் - பெரியவாயையுமுடைய—வாளைகள் - வாளைமீன்கள்—துவைப்ப-பாய்ந்து துவைக்காநிற்கவும்,

படிந்துசேடெறியுஞ்செங்கட்கவரியு
மலைசூழ்கிடந்தபெருங்குலைப்பரபபை
மலைகொடுமலைந்தமுதுநீரவெள்ளமு
மிடைந்துவயலிரிந்துமுதுகுசரிந்துடைந்து
சிறியோனசெருவெனமுறியப்போகி

படிந்து - நீரிற்குளித்து—சேடெறியும்-சேறுக்குகின்ற—செங்கண் - சிவப்பாகிய கண்ணையுடைய—கவரியும் - எருமைகளும்—மலைசூழ்கிடந்த - மலைசூழ்ந்திருந்தாலொத்த—பெரும்-உயர்வாகிய—குலைப்பரபபை - சனையின்பரப்பை—மலைகொடு - தான் போத்துககொண்டுவரும் மலைகளால்—மலைந்த - உடைகின்ற—முதுநீர்வெள்ளமும்-கடல்போலுநீர்ப்பெருக்கும்—மிடைந்து - நெருங்கி—வயலிரிந்து - வயல்கள்மாறுபட்டு—முதுகுசரிந்துடைந்து- அவ்வரபபுமேடுகள் சரிந்துடை பட்டு—சிறியோன் - குறுநிலமன்னன்செய்யும்—செருவென - போர்போல—முறியப்போகி - முறியுமாறுசென்று ;

உழவக்கணத்தைக்குலைக்குடிபுகுத்தும்
பெருநீருரா

உழவக்கணத்தை - உழவாகூட்டங்களை—குலைக்குடிபுகுத்தும் - செய்களையினிடத்துக குடிபோகச்செயகின்ற—பெருநீரூரர்—பெருமைத்தன்மையுள்ள நாட்டையுடைய தலைவா ;

கொன்றையந்துணரிறசெவ்வழிகுறித்தும்
வாலுழையெருக்கில்வளருழைபாடியுங்
கூவிளங்கண்ணியிற்குலககிளைமுரற்றியும
வெண்கூதளத்தில்விளரிநின்றிசைந்தும
வண்டுநதேனுஞ்சிமிறுஞ்சுருமபு
முமிழ்நறவருந்தியுறஙகுசெஞ்சடையோன்

கொன்றையந்துணரில் - கொன்றைப்பூங் கொத்தில்—செவ்வழிகுறித்தும் - செவ்வழியென்னும்பணணை இசைத்தும்—வாலுழையெருக்கில் - வெண்மையான யெருககமலரிடததே—வளருழைபாடியும்—உழையென்னும் பணணைமிகப் பாடியும—கூவிளங்கண்ணியில்-வில்வமாலையில்—குலககிளைமுரற்றியும்-சிறப்புள்ளகிளையென்னும் பண்ணைப்பாடியும்—வெண்கூதளத்தில்-வெள்ளியு கூதளமலரில்—விளரிநின்றிசைத்தும்-விளரியென்னும்பண்ணை ஒழிவறப் பாடியும்—வண்டுந்தேனுஞ் சிமிறுஞ் சுரும்பும்-ஆகிய இந்நால்வகை அளிககுலம்—உமிழ்நறவருந்தி - அம்மலர்களுமிழ்கின்ற மதுவையுண்டு—உறங்கும - களிகூருகின்ற—செஞ்சடையோன - செஞ்சடையன்,

மதுமலர்பறித்துத்திருவடிநிறைத்த
நான்மறைப்பாலனைநலிநதுயிாகவருங்
காலனைக்காய்ந்தகாலினன்

மதுமலர்பறித்து - தேனுள்ளமலர்களைக்கொய்து—திருவடிநிறைத்த - திருவடியின்கண ணருச்சித்து நிறைத்த—நான்மறைப்பாலனை - வேதியச்சிறுவனை—நலிந்து - வருத்தி—உயிாக

வரும் - அவனுயிரைக கவரவந்த—காலனை - இயமனை—காயநத - சினந்த—காலினன் - திருவடியுள்ள கடவுளது ,

கூடற்
றிருமருங்கணைந்துவருபுனல்வையை
வரைபுரண்டென்னதிரைநிறைதுறையகத்
தணந்தெடுத்தேந்தியவரும்புமுகிழ்முலையோள்
மதிநுதற்பெருமதிமலர்முகத்தொருத்தியை

கூடல - மதுரைநகரின்—திருமருங்கணைந்து- செல்வமிகக ந்நகரினருகணைந்து—வரும் - பெருகிவந்த—புனல் - நீர்நிறைந்த—வையை- வையைநதியின்—வரைபுரணடென்ன - மலைபுரண்டாறபோன்ற—திரைநிறை- நிரையாகிய அலைகள்வீசும்—துறையகத்து - துறையினிடத்தே—அணநதெடுத்தேந்திய - அண்ணாந்துயாந்தோங்கிய—அரும்பு - அரும்புமுகிழ்த் தாலொத்த—முகிழ்முலையோள் - குவிநத முலையையுடையாளாகிய—மதிநுதல் - இளமதிபோன்றநுதலையும—பெருமதி- நிறைமதிபோன்ற—மலர் - பரந்த—முகத்தொருத்தியை- முகத்தையுமுடைய வொருத்தியை ,

ஆட்டியுமணைத்துங்கூட்டியுங்குலவியு
மேந்தியுமெடுத்துமொழுகியுமீர்த்து
முழுகியுநதபுத்தியுமுலையொளிநோககியும்
விளிமொழியேற்றும்விதலையிற்றிளைத்தும்
பூசியும்புனைந்தும்பூட்டியுஞ்சூட்டியு
நிறுத்தியுநிரைத்துநெறித்துஞ்செறித்து
மெழுதியுந்தபபியுமிசைத்தும்பிணிததுங்
கட்டியுங்கலத்தியுங்கமழ்த்தியுமறைத்துச்
செய்தனவெல்லாஞ்செய்யலர்போல

ஆட்டியும் - நீராடச்செய்தும்—அணைத்தும் - தோளோடணைத்தும்—கூட்டியும - தோழிகளோடு சேர்த்தும—குலவியும் - கொண்டாடியும்—ஏந்தியும் - தாங்கியும்—எடுத்தும் - தூக்கியும்—ஒழுக்கியும் - நடத்துவித்தும்—ஈர்த்தும் - இழுத்தும்—முழுக்கியும் - நீரின்முழுத்தியும்—தபுத்தியும் - மேலேயெடுத்தும—முலையொளி - முலையினிறுமாப்பை—நோக்கியும்-பார்த்தும—விளிமொழி - தன்முகமாக அழைக்கும் விளிமொழியை—ஏற்றும் - காதாற் கேட்டும்—விதலையில - அவள் குளிரால்நடுங்குமபோது—திளைத்தும் - கட்டியணைத்தும்—பூசியும - சந்தனமுதலிய சாந்தங்களைப்பூசியும்—புனைந்தும் - மாலை அணிந்தும்—பூட்டியும் - பூணத்தக்க அணிகளைபபூட்டியும்—சூட்டியும் - சூட்டத்தக்க கவரறைசசூட்டியும்—இறுத்தியும் - ஊடாவைசுஇறுத்தியும்—கிளர்த்தும் - திருத்திசெய்தும்—செறித்தும்- பெருமிதமுற்றும—செறித்தும்- செருக்கியும்—எழுதியும்-தொய்யிலெழுதியும்—தபபியும் - எழுதுங்கால்தபபியும்—இசைத்தும் - பின்னுந்திருத்தியும்—பிணித்தும் - கச்சைத்தனத்தில் வீசித்தும்—கட்டியும் - துகிலை யுடுத்தும்—கலத்தியும் - கலப்புறுத்தியும்—கமழ்த்தியும் - பனிநீர்முதலி யவற்றால் பரிமளிக்கப்பண்ணியும்—மறைத்து - மறைவாய்—செய்தனவெல்லாம் - தாம்செய்த குற்றங்களெல்லாம்—செய்யலாபோல - செய்யாதவர் போல,

வென்
னெட்டிலைபொலிந்தபொன்னிறைதிருவுறையுளில்
நிறைநீர்விடுத்துச்
செறிந்ததென்னெனக்கேட்டி

என் - எனது—பொன்னெட்டிலைப்பொலிந்த - நெடிய பொற்றகட்டால் விளங்கிய—திருநிறை - எல்லாவளத்தாலும்

நிறைந்த—உறையுளில் - மாளிகையினின்றும்—நீங்கிவிடுத்து - மேன்மைக்குணத்தைகைவிட்டு—செறிந்தது - நெருங்கிவந்தது—என்னென - யாதுகாரணமென்று—கேட்டி - நீகேட்பாயாக—எ-று.

மறிநோக்கினளே பெருநீரூரர் செஞ்சடையோன் காலினன்கூட்டற திருமருங்கணைந்து வருபுனல்வையைத் துறையகத்துமலர்முகத்தொருத்தியை மறைத்துச்செய்தனவெல்லாஞ் செயலாபோலவென னுறையுளிற செறிந்த தென்னெனக கேட்டினை வினைமுடிவுசெய்க.　　　(ருசு)

---

தன்னைவியந்துரைத்தல.

தன்னை வியந்துரைத்தலெனபது - சேடிமார் பின்வருந்தாது முன்னுறககாபபேமென்று தம்முட் கூறுவதனைக்கேட்டு, இவனை அமரபபுலவும பரத்தையாமாட்டு இவனருளசெல்லாமலவிலககேனுயின் என் மாட்டிவனைத்தந் தழாநின்ற இவன்மனைகிழத்தி யாகின்றேனெனப பரத்தைத்தலைவி தன்னைவியந்து கூறுமிற்றல் அதற்குச்செய்யுள் —

கனலூர்கணை துணையூர்கெடச்செற்றசிற்றம்பலத்தெம்
மனலூர்சடையோனருள்பெற்றவரினமரப்புல்லு
மினலூர்நகையவர்தம்பாலருள்விலக்காவிடின்யான்
புனலூரனைப்பிரியும்புனலூர்கணப்பூங்கொடியே. ருஎஉ

அரத்தத்துவர்வாய்ப பரத்தைத்தலை　　　வி
முனிவுதோன்ற நனிபுகன்ற　　　து.

இ-ள். கனலூர் - கனல்பரந்த—கணை - கணையான—துணையூர்கெட - ஒத்தவூர்கெட—செற்ற - வெகுண்ட—சிற்றம்ப

லத்து - சிற்றம்பலத்தின்கணுளனாகிய—எம் - எம்முடைய—அனலூர்சடையோன் - அனலையொக்குஞ்சடையையுடையவனை—அருள்பெறறவரின் - அருளைப்பெற்றவர்போல—அமரப்புல்லும் - செம்மாந்து அவனைசசெறியபபுல்லாநின்ற—மினலூர்-ஒளிபரந்த—நகையவர் - நகையை யுடையவா—தம்பால் - தம்மிடத்து—அருள்விலககாவிடின் - அவனருள் செல்லாமைவிலக்கேனுயின்—யாளபுனலூரனை - யான்புனலூரனை—பிரியும் - பிரிந்திருக்கும்—புனலூர்கண் - புனல்பரக்குங்கண்ணையுடைய—அபபூங்கொடியே - அவன் மனைககிழத்தியாகிய அபபூங்கொடியாகின்றேன்—எ-று. (ருஎஉ)

நேரிசையாசிரியபபா.

விடங்கொதித்துமிழும்படங்கெழுபகுவாய்க்
கண்டன்முண்முளை ததகடியெயிற்றரவக்
குழுவினுக்குடைந்துகுளிர்மதியொதுங்கத்
தெய்வப்பிறையிருந்ததிருநுதற்பேதையைக்
கண்டுகெண்டரவமயிலெனக்கலங்க
நெடுஞ்சடைக்காட்டினையடுந்தீக்கொழுந்தெனத்
தலையேதலையாநகுதலைதயங்க
வணிதலைமாலையைநிறைமதித்திரளெனப்
புடைபுடையொதுங்கியரவுவாய்பிளப்ப
வொன்றினுக்கொன்றுதுன்றியநடுக்கொடு
கிடங்தொளிபிறழுநெடுஞ்சடைப்பெருமான்
படைநான்குடன்றுபஞ்சவற்றுரந்து
மதுராவவ்வியகருநடர்வேந்த
னருகர்ச்சார்ந்துநின்றருட்பணியடைப்ப
மற்றவன்றன்னைநெடுந்துயில்வருத்தி - -
யிறையவன்குலத்துமுறையரின்மையினாற்

குருதித்தாரைகல்லொடுபிறங்க
மெய்யணியளருக்கைம்முழந்தேய்த்த
பேரன்புருவப்பசுக்காவலனை
யுலகினிற்றமதுமுக்குறியாக
மணிமுடிவேணியுமுருத்திரக்கலனு
நிலவுமிழ்புண்ணியப்பாணிறச்சாந்தமு
மணிவித்தருள்கொடுத்தரசனுக்கி
யடுமாலகற்றிநெடுநாள்புரக்க
வையகமளித்தமணியொளிக்கடவு
ணெடுமதிறகூடல்விரிபுனல்வையையுட்
பிடிகுளிசெய்யுங்களிறதுபோல
மயிலெனுஞ்சாயலொருமதிநுதலியை
மருமமுந்தோளினும்வரையறப்புல்லி
யாட்டுறுமூரனன்புகொணலத்தினைப்
பொன்னுலகுண்டவர்மண்ணுலகின்பந்
தலைநடுக்குற்றதன்மைபோல
வொன்றறவகற்றியுடன்கலந்திலனே
லன்னவூரனையெம்மிற்கொடுத்துத்
தேரினுங்காவினுமடிக்கடிகண்டு
நெட்டுயிர்ப்பெறிந்துநெடுங்கணீருகுத்துப்
பின்னுந்தழுவவுன்னுமவ்வொருதனி
யவளேயாகுவல்யானேதவலருங்
கருநீர்க்குண்டகழுடுத்த
பெருநீராழித்தொல்லுலகுழிக்கே. ௫௰

—*—

விடங்கொதித்துமிழுந்-தொல்லுலகுழிக்கே. பகுதி - பரத்தையிற்பிரிவு, துறை - தன்னைவியந்துரைத்தல். *

விடங்கொதித்துமிழும்படங்செழுபகுவாய்க
கண்டன்முண்முளைத்தகடியெயிறரவக

குழுவினுக்குடைந்துகுளிர்மதியொதுங்கத்
தவலரும்
கருநீரகுண்டகழுடுத்த
பெருநீராழிதொல்லுலகுழிககே.

(இதனதுபதப்பொருள்)

தவலரும் - வற்றுதலில்லாத—கருநீர் - கருமைநீராகிய—குண்டு அகழ் உடுதத - ஆழ்கடலைத் துகிலாயுடுத்த—பெருநீர்-பரப்பாகிய நீர்மையுள்ள—ஆழி - வட்டவடிவாகிய—தொல்உலகுழிக்கு - பழைமையான இவ்வுலகினிடத்தே—குளிர்மதி - தண்ணிலவானது—விடங்கொதிர்து - நஞ்சுகொப்புளித்து—உமிழும் - வெளிப்படுகின்ற—படநூசெழு - படமுள்ள—பகுவாய் - பிளவுபட்ட வாயிடத்தே—கண்டல்முள் - தாழைமுட்போல் —முளைத்த - அருமபியுள்ள—கடி எயிற்று - கடிக்கும்பற்களையுடைய—அரவககுழுவினுககு - பாம்பினதைத—உடைந்து- அஞ்சி—ஒதுங்க - ஒதுங்கவும்,

தெய்வப்பிறையிருந்ததிருநுதற்பேதையைக்
கண்டுகண்டரவமயிலெனககலங்க

அரவம்- அப்பாம்பினம்—தெய்வபபிறையிருந்த—அழியாத்தன்மை யுள்ள—திருநுதல்பேதையை - நன்னுதற்பிராட்டியை—கண்டு - நோககி—மயிலென - மயிலென்று கருதி—உகண்டுகலங்க - நெளிந்து மநங்கலங்கவும்,

நெடுஞ்சடைக்காட்டிளையடுந்தீக்கொழுந்தெனத்
தலையேதலையாநகுதலைதயங்க

நகுதலை - நகுவெண்டலையானது—நெடுஞ்சடைக் காட்டிளை - நெடியசடாடவியை—அடும்-கொல்லத்தகக—தீக்கொழுந்து - தன்னைக்கொளுத்தும் தீக்கொழுந்தென் றெண்ணி—த

லையேதென-இனிநமக்கிடமேதென்று—அலையா-அலைந்து—தய ங்க-தயங்கவும், எனவென்பது-செய்யுள்விகாரத்தாற்றொக்கது.

அணிதலைமாலையைநிறை மதித்திரளெனப்
புடைபுடையொதுங்கியரவுவாய்பிளப்ப

அரவு-பாம்புகள்—அணி-அணியப்பட்ட—தலைமாலையை-சிரமாலையை—நிறைமதித்திரளென-முழுமதிக்குலமென்று கருதி—புடைபுடையொதுங்கி - பக்கங்களிற பதுங்கி—வாய்பிளப்ப - தம் வாயைத்திறக்கவும்,

ஒன்றினுக்கொன்றுதுன்றியசுகொடு
கிடந்தொளிபிறழுநெடுஞ்சடைபபெருமான்

ஒன்றினுக்கொன்று - (இவ்வாறு) ஒன்றின்பொருட்டு மற்றொன்று—துன்றியசுகொடு - மிக்க அசசத்துடனே—கிடந்து - இருக்க—ஒளிபிறழும் - ஒளிமிகுந்த—நெடுஞ்சடைப்பெருமான் - நெடுஞசடைபபெருமான்,

படைநான்குடன்றுபஞ்சவற்றுரந்து
மதுரைவவ்வியகருநடர்வேந்த
னருகாச்சார்ந்துநின்றரன்பணியடைப்ப

படைநான்கு - நாற்கருவிச்சேனையுடன்—உடன்று - போருடற்றி—பஞ்சவற்றுரந்து - பாணடியனைத் துரத்தி—மதுரைவவ்விய - மதுரையைக்கைககொணட—கருநடர்வேந்தன் - கருநாட்டரசன் —அருகர்சசார்ந்து - சமணரைச்சார்ந்து—நின்று-அருகதநெறியிலொழுகி—அரன்பணி - சிவபணிவிடையை—அடைபப - செய்யாமறறடுத்ததனால்,

மற்றவன்றன்னைநெடுந்துயில்வருத்தி
யிறையவன்குலத்துமுறையரிசமையிஞற்

குருதித்தாரைகல்லொடுபிறங்க
மெய்யணியளறுக்கைம்முழந்தெய்த்த
பேரன்புருவப்பசுக்காவலனை

மற்றவன்றன்னை - அககருநாட் டரசனை—நெடுந்துயில்வருத்தி - நெடுந்தூக்கத்திலிறக்க—இறையவன்குலத்து - அம்மன்னவன்குலத்திலே—முறையரின்மையினால்- அரசியற்குரியோரில்லாமையால்—குருதித்தாரை - இரத்தத்தாரை—கல்லொடுபிறங்க - சந்தனக்கல்லிறபெருகுமாறு—மெய்யணி - சிவபிரான்றிருமேனிப்பூச்சாகிய—அளறு - சந்தனக்குழம்பாக—கைம்முழந்தேய்த்த - முழங்கையாறதேய்த்த—பேரன்புருவ - சிவனேசவுருவமாகிய—பசுக்காவலனை - கோவைசியராகிய மூர்த்திநாயனாரை,

உலகினிற்றமதுமுககுறியாக
மணிமுடிவேணியுமுருத்திரககலனு
நிலவுமிழ்புண்ணியப்பாணிறச்சாந்தமும்

உலகினில் - இவ்வுலகத்தின்கண்—தமது - சிவபிரானது—முகக்குறியாக - அடையாளமென்றும் விளங்குமாறு—மணிமுடிவேணியும் - சடைமுடியாகிய வழகியமகுடமும்—உருத்திரக்கலனும்-உருத்திராக்ஷமென்னு மாபரணமும்—நிலவுமிழ்-சந்திரிகையைவிரிக்கின்ற—பாணிறபுண்ணியச்சாந்தமும்—தூய்மையாகியநிறமுள்ள திருநீறும் ,

அணிவித்தருள்கொடுத்தரசனாக்கி
யடுமாலகற்றிநெடுநாள்புரக்க
வையகமளித்தமணியொளிக்கடவுள்

அணிவித்து அருள்கொடுத்து - அணியும்படி யனுக்கிரகித்து—அரசனாக்கி - மதுரைக்கரசனாகச்செய்து—அடுமாலகற்

றி - செடுத்தற்குககாரணமாகிய ஆருகதமயககத்தைத் தொலைத்து—நெடுநாள்புரக்க - பல்லாண்டுநின்று புரக்குமாறு—வையகம் - மன்னுயிர்களை—அளித்த - புறச்சமயங்களி னின்றும் பாதுகாத்த—மணியொளிககடவுள் - மணியுமொளியும் போலுமுள்ள கருணைககடவுளது,

நெடுமதிற்கூடல்விரிபுனல்வையையுட
பிடிகுளிசெய்யுங்களிறதுபோல

நெடுமதில் - நெடியமதில்சூழ்ந்த—கூடல் - நான்மாடக்கூடலில்—விரிபுனல்வையையுள் - புனனிறைந்தவையையாற்றில்—பிடிகுளிசெய்யும் - யானையைநீராட்டுகின்ற—களிறதுபோல - யானைப்பகடுபோல,

மயிலெனுஞ்சாயலொருமதிநுதலியை
மருமமுந்தோளினும்வரையறபபுல்லி
யாடடுறுமூரனன்புகொணலத்தினை

மயிலெனுஞ்சாயல் - மயிற்சாயலையும்—ஒருமதிநுதலியை- மதிநுதலையுமுடைய ஒருத்தியை—மருமமும் - மார்பினிடத்தும்—தோளினும் - தோளிடத்துமம—வரையறப்புல்லி - பலகாற்றழுவி—ஆட்டுறும் - தன்னுட னீராடல்செய்வித்த—ஊரன்-தலைவன்—அன்புகொள் - அன்பானுகர்ந்த—நலத்தினை - இன்பத்தை,

பொன்னுலகுண்டவர்மண்ணுலகின்பந்
தலைநடுக்குற்றதன்மைபோல
வொன்றறவகற்றியுடன்கலந்திலனே
லன்னவூரனையெம்மிற்வொடுத்துத்

தேரினுங்காவினுமடிககடிகண்டு
நெட்டுயிர்ப்பெறிந்துநெடுங்கணீருகுத்தும்
பின்னுந்தழுவவுன்னுமவ்வொருத்தி
யவளேயாகுவல்யானே

பொன்னுலகு - சுவர்ககத்தில்—உணடவர் - போகநுகர்ந்தோர்—மணணுலகின்பம் - மண்ணுலகத்தினின்பத்தை—தலைநடுக்குற்ற தன்மைபோல - அருவருபபுற்ற தன்மைபோலாமா று—ஒன்றறவகற்றி- ஒருங்கேநீக்குவித்து—உடன்கலத்திலனேல் - அத்தலைவனுடன் கலவேனாயின்—யானே - நான்றானே—அன்னவூரனை - அத்தலைவனை—எம்மிறகொடுத்து - எம இல்லின்கண்போகவிடுத்து—தேரினும் - தேரமேற்செல்லுநதோறும்—காவினும் - சோலைகளிறபாங்கருடன் விளையாடுநதோறும்—அடிககடிகண்டு- இடைவிடாமறகணடு—நெட்டுயிரபபெறிந்து- பெருமூச்சுவிட்டு—நெடுங்கணீருகுத்தும்-கண்ணினிடத்தே மிகவும் நீர்சிநதி—பின்னும் - மீண்டும்—தழுவ - புணர—உன்னும் - எண்ணுகின்ற—அவ்வொருத்தி - அவ்வொருத்தியாகிய—அவளேயாகுவல் - பொதுமகளே யாககடவன்—எ-று.

நெடுஞ்சடைப்பெருமான் வேந்தன்சார்ந்து பணியடைப்பத் துயில்வருத்தி முழுநகைதேய்த்த பசுககாவலனைமுக்குறியாக வேணியுங்கலனுஞ சாந்தமுமணிவித் தரசனுக்கிப்புரக்கவளித்த கடவுளது கூடல்வையயுள் களிறுபோல மதிநுதலியைய புல்லியாட்டுறு மூரனதுநலத்தை யகற்றிக் கலந்திலனேல் ஊரனைக் கொடுத்துக்கண்டு எறிந்துநீருகுத்துத் தழுவவுன்னு மவளே யானுகுவ லித்தொல்லுலகிலென வினைமுடிவுசெய்க. (ருஎ)

———

## புதல்வன்மேல்வைத்துப் புலவிதீர்தல்.

புதல்வன்மேல்வைத்துப் புலவிதீர்தலென்பது - துனியொழித்துக்கூடிப் பிரிந்தவழிப் பின்னும் பரத்தைமாட்டுப் பிரிந்தானென்றுகேட்டுப் புலந்துவாயின்மறுக்க, வாயிற்கணின்று விளையாடாநின்ற புதல்வனையெடுத்தணைத்துத் தம்பலமிட்டு முத்தங்கொடுத்து அதுவாயிலாகக்கொண்டு தலைமகன்செல்லாநிற்ப, அப்புதல்வனைவாங்கி யணைத்துக்கொண்டு, அவன்வாயிற் றம்பலந் தன்மெய்யிற் படுதலான் எல்லார்க்கும் பொதுவாகிய தம்பலத்தைக்கொண்டுவந்தோ நீயெம்மைக் கொண்டாடுவது, அதுகிடக்க, இதனை நினக்குத்தந்தவாறு சொல்லுவா யாகவெனப் புதல்வன்மேல்வைத்துத் தலைமகள் புலவிதீராநிற்றல். அதற்குச்செய்யுள்.—

கதிர்த்தநகைமன்னுஞ் சிற்றவ்வைமார்களைக்-கண்பிழைப்பித், தெதிர்த்தெங்குநின்றெப் பரிசளித்தானிமையோரிறைஞ்சு, மதுத்தங்கியகொன்றைவார்சடையீசர்வண்டில்லைநல்லார், பொதுத்தம்பலங்கொணர்ந்தோபுதல்வாவெம்மைப்பூசிப்பதே. (ஙகூசு)

புதல்வனது திறம்புகன்று
மதரரிக்கண்ணி வாட்டந்தவிர்ந்தது.

இ-ள். மதுத்தங்கிய - தேன்றங்கிய—கொன்றை - கொன்றைப்பூவையுடைய—வார்சடையீசர் - நீண்டசடையையுடைய வீசரது—இமையோரிறைஞ்சும - இமையோரால் வணங்கப்படும்—வண்டில்லை - வளவியதில்லையிலுளராகிய—நல்லார் - நல்லோரெல்லார்க்கும்—பொதுத்தம்பலங்கொணர்ந்தோ - பொதுவாகிய தம்பலத்தைக்கொண்டுவந்தோ—புதல்வா - புதல்வா—

எம்மைப்பூசிப்பது - நீயெம்மைக் கொண்டாடுவது—அதுநிற்க- இது நினக்குத்தருகின்றவிடத்து நின்றந்தை—கதிர்த்த - ஒளி விட்ட—நகைமன்னும் - முறுவல்பொருந்திய—சிற்றவ்வைமார் களை - நினசிறிய வன்னைமாரை—கணபிழைப்பித்து - கண்ணை த்தப்புவித்து அவர்காணுவண்ணம்—எதிர்த்து - ஒருவாற்றுனி ன்னை யெதிர்பபட்டு—எங்குநின்று - எவ்விடத்துநின்று—எப்ப ரிசு - எவ்வண்ணமிதனை—அளித்தான் - நினக்குத்தந்தான் நீயி துசொல்லவேண்டும்—எ-று. (௫௯௬)

நேரிசையாசிரியப்பா.

அடியவருளத்திருளகற்றலின் விளக்கு
மெழுமலைபொடித்தலினனைறெறுமசனியுங்
கருங்கடல்குடித்தலிற்பெருந்தழற்கொழுந்து
மாவுயிர்வௌவலிற்றீவிழிக்கூற்று
மென்னுளமிருத்தலினியைந்துணருயிரு
நச்சினகொடுத்தலினளிர்தருவைந்துங்
கருவழிநீக்கலினுயர்நிலைக்குருவு
மிருநிலங்காத்தலின்மதியுடைவேந்து
மாகியமணிவேற்சேவலங்கொடியோன்
வானகமங்கையுந்தேன்வனாவள்ளியு
மிருபுறந்தழைத்ததிருநிழலிருக்கு
மொருபரங்குன்றமருவியகூடற்
பெருநதிச்சடைமிசைச்சிறுமதிசூடிய
நாயகன்றிருவடிநண்ணலர்போலப்
பொய்பலபுகன்றுமெய்யொழித்தின்பம்
விற்றுணுஞ்சேரிவிடாதுறையூர
னூருணியொத்தபொதுவாய்த்தம்பல
நீயுங்குதட்டினையாயிற்சேயாய்

நரம்பெடுத்துமிழும்பெருமூலைத்தீம்பாற்
குள்ளமுந்தொடாதுவிள்ளமுதொழுகுங்
குதலைவாய்துடிப்பக்குலக்கடையுணங்கியு
மண்ணுறுமணியெனப்பூழிமெய்வாய்த்தும்
பொலன்மணிவிரித்தவுடைமணியிழுக்கியுஞ்
சுட்டியுஞ்சிகையுஞ்சோர்ந்துகண்பனித்தும
பறையுந்தேருப்பறிபட்டணங்கியு
மறிக்கட்பிணைவினரிழைக்குஞ்சிற்றிலிற்
சென்றழியாதுநின்றயர்காண்ப
னுறுவதுமிப்பயனன்றேற்
பெறுகுவதென்பாலின்றுநின்பேறே. ருஅ

—*—

அடியவருளத்திரு லின்றுநின்பேறே. பகுதி-பரத்தையிற்பிரிவு, துறை - புதல்வன்மேல்வைத்துப்புலவிதீர்தல். *

அடியவருளத்திருளகற்றலின்விளககு
மெழுமலைபொடித்தலினனறெறுமசனியும்
(இதனது பதபொருள்)

அடியவா - அடியாரது—உள்த்திருள் - மனவிருளை—அகற்றலின் - நீககலால்—விளக்கும் - தீபமும்—எழுமலை - எழுமலையையும்—பொடித்தலின் - நீறுசெய்தலால்—அனறெறும்-அனலபோலவிழுகின்ற—அசனியும் - இடியேறும் ;

கருங்கடல்குடித்தலிற்பெருந்தழற்கொழுந்து
மாவுயிரவௌவலிற்றீவிழிக்கூற்றும்

கருங்கடல் - கரியகடல்நீரை—குடித்தலில் - உண்ணுதலால்—பெருந்தழற்கொழுந்தும்—வடவாககினியும்—மாவுயிர்-மாமரவுருவாகிய சூரனுயிரை—வௌவலில் - கைக்கொள்ளுதலால்—தீவிழி - தீககண்ணையுடைய—கூற்றும் - இயமனும் ;

என்னுளமிருத்தலினியைந்துணருயிரு
நச்சினகொடுத்தலினளிர்தருவைந்தும்

என்னுளம் - எனதுள்ளத்தே—இருத்தலின்- இருத்தலா ல்—இயைந்து - பொருந்தி—உணர் - அறிவாகிய—உயிரும்- ஆ ன்மாவும்—நச்சின - விரும்பினவற்றை—கொடுத்தலின் - கொ டுத்தலால்—நளிர்தருவைந்தும் - பெருமையுள்ளஐந்தருவும்,

கருவழிநீக்கலினுயர்நிலைக்குருவு
மிருநிலங்காத்தலின்மதியுடைவேந்தும்

கருவழி - பிறவிவருதற் கேதுவாகிய வழியை—நீக்கலின்- அடைத்தலால்—உயர்நிலை - நிலைமையுயர்ந்த—குருவும் - ஆசிரி யனும்—இருநிலம் - பேருலகத்தை—காத்தலின் - பாதுகாத்த லால்—மதியுடைவேந்தும் - மதிமரபின் அரசனும்;

ஆகியமணிவேற்சேவலங்கொடியோன்
வானகமங்கையுந்தேன்வனைவள்ளியு
மிருபுறந்தழைத்ததிருநிழலிருக்கு
மொருபரங்குன்றமருவியகூடல்

ஆகிய - நிகராகிய—மணிவேல்- மணியுள்ள வேலேந்தி— சேவலங்கொடியோன் - சேவற்கொடியையுயர்த்த கடவுள்— வானகமங்கையும் - தெய்வயானை நாச்சியாரும்—தேன்வனை- தேனொழுகுகின்ற மலையிடத்தேவளர்ந்த—வள்ளியும் - வள்ளி நாச்சியாரும்—இருபுறம்-இருபக்கங்களிலும்—தழைத்த-தழை த்திருக்கின்ற—திருநிழல் - தண்ணிழலின்கண்—இருக்கும்- வீ ற்றிருத்தற் கிடமாகிய—ஒருபரங்குன்றம் - ஒப்பற்றதான ஸ்ரீ பராசலம்—மருவியகூடல் - பொருந்தியமதுரையுள்,

பெருநதிச்சடைமிசைச்சிறுமதிசூடிய
நாயகன்றிருவடிநண்ணலர்போல

பெருநதிச்சடைமிசை - பெரியகங்கையையேற்ற சடைமேல்—சிறுமதி - இளம்பிறையை—சூடிய - தரித்தருளிய—நாயகன்றிருவடி - இறைவனது திருவடியை—நண்ணலாரபோல - அடையாதார்போல,

பொய்பலபுகன்றுமெய்யொழித்தின்பம்
விற்றுணுஞ்சேரிவிடாதுறையூர
னூருணியொத்தபொதுவாய்த்தம்பல
நீயுங்குதட்டினையாயிற்சேயாய்
நரம்பெடுத்துமிழும்பெருமுலைத்தீம்பாற்
குள்ளமுங்தொடாதுவிள்ளமுதொழுகுங்
குதலைவாய்துடிப்பகுலக்கடையுணங்கியும்

சேயாய் - புதல்வனே—பொய்பலபுகன்றும் - பலபொய்களைச்சொல்லியும்—மெய்யொழித்து- உண்மையைக்கைவிட்டு—இன்பம் - இன்பத்தை—விற்றுணும் - விற்றுண்டுவாழ்கின்ற—சேரி - பரத்தையர்சேரியில்—விடாதுறை - இடைவிடாதிருக்கின்ற—ஊரன் - உன்தந்தைபோல்—ஊருணியொத்த-ஊர்ப்பொதுவாகிய ஊருணியையொத்த—பொது - யாவர்க்கும்பொதுவாகிய—வாய்த்தம்பலம் - பரத்தையர்வாய்த் தம்பலத்தை—நீயும்- நீயும்—குதட்டினையாயின் - மென்றனையாயின்—நரம்பெடுத்து- நரம்புதோன்றி—உமிழும் - வெளிப்படுகின்ற—பெருமுலைத்தீம்பாற்குள்ளமுங்தொடாது - மிக இனிய முலைப்பாலைக்குறித்து மனத்தாலும் நினையாமல்—விள்ளமுதொழுகும் - அமுதம்விண்டொழுகாநின்ற—குதலைவாய் - மழலைவாயானது—துடிப்ப-துடிக்கும்படி—குலக்கடை - பெரிய கடைவாய்தனில்—உணங்கியும் - வருந்தியும்,

மண்ணுறுமணியெனப்பூழிமெய்வாய்த்தும்
பொலன்மணிவிரித்தவுடைமணியிமுக்கியுஞ்

சட்டியுஞ்சிகையுஞ்சோர்ந்துகண்பனித்தும்
பறையுந்தேரும்பறிபட்டணங்கியும

மண்ணுறும் - மண்ணிற்புதைந்த—மணியென-மணிபோல்—பூழி - மட்புழுதி—மெய்வாய்த்தும் - உடலிற் பொதியவும் —பொலன்மணிவிரித்த - பொன்னுமணியும் விரிந்த—உடைமணி - அரைமணியானது—இழுக்கியும் - சரிந்தும்—சுட்டியும் - நெற்றிச்சுட்டியுடனே—சிகையும் - தலைமயிரும்—சோர்ந்து-அவிழ—கண்பனித்தும் - கண்ணீர்சிந்தியும்—பறையும்- முழக்குஞ் சிறுபறையும்—தேரும் - சிறுதேரும்—பறிபட்டு - பறித்துக்கொள்ளப்பட்டு—அணங்கியும் - நொந்தும்,

மறிக்கட்பிணைவினரிழைக்குஞ்சிற்றிலிற்
சென்றழியாதுநின்றயர்காண்ப
னுறுவதுமிப்பயன்

மறிக்கண் - மான்போற்கண்களையுடைய—பிணைவினர்-பெதும்பைகள்—இழைக்கும் - அமைத்த—சிற்றில் - சிறுவீட்டினிடத்தே—சென்று - போய்—அழியாது - அழித்திடாமல்—நின்று - மயங்கிநின்று—அயர் - தளர்ச்சியுறுதலை—காண்பன்-யான்காணுவேன்—உறுவதும் - நீயடைவதும் (பொதுவாய்த் தம்பலம் நீயும் குதட்டினதால்)—இப்பயன் - இந்தப்பயனாகும்;

அன்றேற்
பெறுவதென்பாலின்றுநின்பேறே.

அன்றேல் - அங்ஙன நீஇனிச் செய்யாயானால்—என்பால்-எனதுமுலைப்பாலை—பெறுகுவது - பெறுவது—இன்று - இப்பொழுதே—நின்பேறு - நின்னுடைய பேறாகும்—எ-று.

சேயாய் - சேவலங்கொடியோ னிருக்கு மொருபரங்குன்றப நூ[illegible]யகூடலுயகன் றிருவடிநண்ணலர்போல வூரனூருணியொ

த்த பொதுவாய்த் தம்பலநீயுங் குதட்டிலேயாயில் துடிப்பவுண ங்கியும் வாய்த்துமிழுகவியும் பனித்தும் அணங்கியும் நின்றயர்த ல்காண்பன் உறுவது மிபபயனும் அன்றேல் என்பால் பெறுவதி ன்று நின்பேறெனை வினைமுடிவுசெய்க. (௫௮)

---

## கலவிகருதிப்புலத்தல்.

கலவிகருதிப்புலத்தலென்பது - புனலாடுவித்தமை கூறி ப் புலவாநின்றதலைமகள், ஊடறீர்க்க நுதலுந்தோளு முதலாயி னவற்றைத் தைவந்துவருடித் தலையளி செய்யாநின்ற தலைமக னோடு, எம்முடைய சிறிய வில்லின்கண்வருது அன்று நீயிர்செய் த தலையளிஎங்கட்கு அன்று வேண்டுதுமாயினும் இன்று உமது திருவருள் எங்கட்கு நீயிரவந்த இத்துணையுமமையும் வேறு நீயி ர் தலையளிசெய்ய வேண்டுவ தில்லையெனக் கலவிகருதிப் புலவா நிற்றல். அதற்குச்செய்யுள்.—

மின்றுன்னியசெஞ்சடைவெண்மதியன்விதியுடையோர்
சென்றுன்னியகழற்சிற்றம்பலவன்றென்னம்பொதியி
னன்றுஞ்சிறியவரில்லெமதில்லநல்லூரமன்னோ
வின்றுன்றிருவருளித்துணைசாலுமன்னெங்களுக்கே. ()

கலைவளரல்குறலை மகன்றன்னொ டு
கலவிகருதிப புலவிபுகன்ற து.

இ-ள். மின்றுன்னிய - மின்னையொத்த—செஞ்சடை - செ ஞ்சடைக்கண்வைத்த—வெண்மதியன் - வெண்பிறையையுடை யான்—விதியுடையோர் - நற்பாலை யுடையோர்—சென்றுன்னி ய - சிற்றின்பத்திற்குக் காரணமான புலன்களை விட்டுச்சென்று நினைந்த—கழல் - கழலையுடைய—சிற்றம்பலவன் - சிற்றம்பல

வன்—தென்னம்பொதியின் - அவனது தெற்கின்கணுண்டாகிய பொதியிலிடத்து—எமதில்லறம் - எமதுகுடி—நன்றுஞ்சிறியவரில் - பெரிதுஞ் சிறியவாதகுடி அதனை—நல்லூர - நல்லவூரையுடையாய்—மன்னேமுற்காலத்து - நின்றலையளிவேண்டுதுமாயினும்—இன்று - இப்பொழுது—உன்றிருவருள் - உனது திருவருள்—எங்கட்கு - எங்கட்கு—இத்துணை சாலும் - நீவந்தவித்துணையு மமையும் நீ தலையளி செய்ய வேண்டுவதுண்டோ—எ-று. (௬௰௨)

---

நேரிசையாசிரியப்பா.

நடைமலைபிடித்தசொரியெயிற்றிடங்கணா
யாழிவலவனடர்த்தனபோலப்
புன்றலைமேதியைப்புனலெழமுட்டிய
வரியுடற்செங்கண்வராலுடன்மயங்க
வுட்கவைத்தூண்டிலூரம்புகுந்துழக்கு
நிறைநீரூரர்நெஞ்சகம்பிரிக்கும்
பிணிமொழிப்பாணனுடனுறைநீக்கி
நூலொடுதுவளுங்தோறிளையுரத்தின்
மால்கழித்தடுத்தநரைமுதிர்தாடிசெய்
வெள்ளிமுகிழ்த்தவொருகட்பார்ப்பான்
கோலுடன்படருங்குறுநகையொருவிப்
பூவிலைத்தொழின்மகன்காவல்கைவிட்டுத்
திக்குவிண்பெருகத்திருமதிகயிலை
நாமகள்பெருங்கடனூற்கோட்டொருத்தல்
புண்ணியமிவைமுதல்வெள்ளுடற்கொடுக்கும்
புகழ்க்கவிப்பாடகர்புணர்ச்சியின்பகற்றி
யெல்லாக்கல்வியுமிகழ்ச்சிசெய்கல்வியர்
பெருநகைக்கூட்டமுங்கழிவுசெய்திவ்விடை

மயக்குறுமாலைமாமகளொதிர
வொருவழிபடர்ந்ததென்னைத்திருமுக
மாயிரமெடுத்துவான்வழிபடர்ந்து
மண்ணேழுருவிமறியப்பாயும்
பெருங்கதத்திருநதியொருங்குழிமடங்க
வைம்பகையடக்கியவருந்தவமுனிவ
னிரந்தனவரத்தாலொருசடையிருத்திய
கூடற்பெருமான்குரைகழல்கூழுஞ்
செம்மையர்போலக்கோடா
தெம்மையுநோக்கிச்சிறிதுகண்புரிந்தே. ௫௧

---*---

நடைமலைபிடித்த சிறிதுகண்புரிந்தே. பகுதி - பரத்தையிற்பிரிவு, துறை - கலவிகருதிப்புலத்தல். *

நடைமலைபிடித்தசொரியெயிற்றிடங்கரை
யாழிவலவனடர்த்தனபோல
(இதனது பதப்பொருள்)

நடைமலை - நடையுள்ள மலையையொத்த யானையை—பிடித்த - பற்றிக்கொண்ட—சொரி - புழுச்சொரிகின்ற—எயிற்று - பற்களையுடைய—இடங்கரை - முதலையை—ஆழிவலவன் - சக்கரத்தை வலக்கையி லேந்திய திருமால்—அடர்த்தன போல - கொன்றதுபோல,

புன்றலைமேதியைப்புனலெழமுட்டிய
வரியுடற்செங்கண்வராலுடன்மயங்க
வுட்கவைத்தூண்டிலூரம்புகுந்துழகரு
கிறைகிளூரர்

புன்றலை - புன்மையாகிய தலையையுடைய—மேதியை - எருமையை—புனலெழ - நீரினின்றுமேலே எழுமாறு—முட்டிய-

தாக்கிய—வரியுடற்செங்கண - வரியுடலையும் சிவந்தகண்களையு முடைய—வரால் - வரால்மீன்—உடன்மயங்க- உடனேமயங்கு மபடி—உட்கவைதூண்டில்- உள்ளேபிளப்பாகிய தூண்டிலுள் ளே—ஊன்புகுந்து - விசையுடன்புகுந்து—உழக்கும் - கலக்கா நின்ற—நிறைநீர் - தடாகஞ்சூழ்ந்த—ஊர - ஊரனே,

திருமுக
மாயிரமெடுத்துவான்வழிபடர்ந்து
மண்ணேழுருவிமறியப்பாயுமப்
பெருங்கதத்திருநதி

திருமுகமாயிரமெடுத்து - வளம்பயக்கும் அநந்தமுகமுட னே—வான்வழிபடர்ந்து- விண்ணிற்பரவி—மண்ணேழுருவி- ஏழுலகமும்ஊடுருவி—மறிய - அங்கங்குள்ளவை தலைதடுமாறு ம்படி—பாயும் - பெருகின—அப்பெருங்கதம்- அந்த மிக்கவேக முள்ள—திருநதி - ஆகாயநதியானது ,

ஒருங்குழிமடங்க
வைம்பகையடக்கியவருந்தவமுனிவ
னிரந்தனவரத்தாலொருசடையிருத்திய
கூடற்பெருமான்குணகழல்கூறுஞ்
செம்மையர்போல

ஒருங்குழி - ஓரிடத்து ஒருங்கே—மடங்க - அடங்குமாறு —ஐம்பகையடக்கிய - புலப்பகை யைந்தையும் தன்னுள்தணிய அடக்கிய—அருந்தவமுனிவன் - செய்தற்கரிய தவத்தை முப்ப . தாயிரம் ஆண்டளவுநோற்ற பகீரதனென்னு முனிவன் தன் மூதாதைகள் பதியடைய—இரந்தன - கேட்டனவாகிய—வரத் தால் - வரங்களால்—ஒருசடைஇருத்திய - சடையொன்றில் வை; தருளிய—கூடற்பெருமான் - மதுரை நாயகனது—குண

கழல் - வேதநூபுரமடைந்த விருபாதங்களை—கூறும் - ஏத்துகி ன்ற—செம்மையர்போல - நடுநிலையுடையார்போல ,

பிணிமொழிப்பாணனுடனுறைநீக்கி
நெஞ்சகம்பிரிக்கும
கோடா
தெம்மையுநோக்கிச்சிறிதுகண்புரிந்தே.

கோடாது - மாறுபடாமல்—எம்மையும் - எம்மையும்—நோக்கி - நோக்கி—சிறிதுகண்புரிந்து - சிறிதுகடாக்ஷித்து—நெஞ்சகம் - மநத்தை—பிரிக்கும் - வேறுபடுத்துகின்ற—பிணிமொழிப்பாணனுடன் - பிணிபபையுள்ள பாடல்வல்ல பாணனுடன்—உறைநீக்கி - உறைதலைவிட்டு ,

நூலொடுதுவளுந்தோறிணையுரத்தின்
மால்கழித்தடுத்தநணாமுதிர்தாடிசெய்
வெள்ளிமுகிழ்த்தவொருகட்பார்ப்பான்
தோலுடன்படருங்குறுநகையொருவி

நூலொடுதுவளும் - முந்நூலொடு அசைகின்ற—தோல்திணை - தோல்திணைந்த—உரத்தின் - மார்பினிடத்தே—மால்கழித்து - கருமைநீங்கி—அடுத்த - நெருங்கிய—நணாமுதிர் - நணாமிகக—தாடிசெய் - தாடியைவளர்த்த—வெள்ளி - சுக்கிரன்போல—முகிழ்த்த - அரும்பின—ஒருகட்பார்பபான் - ஒற்றைக்கண்பாாபபானுகிய—கோலுடன் - ஊன்றுகோலுடனே—படரும் - உண்டாகின்ற—குறுநகை - சிறுநகையை—ஒருவி- விட்டு ,

பூவிலைத்தொழின்மகன்காவல்கைவிட்டுத்
திக்குவிண்பெருகத்திருமதிகைலை
நாமகள்பெருங்கடனுற்கோட்டொருத்தல்

புண்ணியமிவைமுதல்வெள்ளுடல்கொடுக்கும்
புகழ்க்கவிப்பாடகர்புணர்ச்சியின்பகற்றி

பூவிலைத்தொழின்மகன் - பூவிற்குந் தொழிலையுடையவன
து—காவல் - பாதுகாத்தலை—கைவிட்டு - நீங்கி—திக்கு - எட்டுத்திசையினும்—விண் - விண்ணுலகத்தினும்—பெருக - பெருகும்படி—திருமதி - நிறைமதியும்—கைலை - கைலைமலையும்—நாமகள் - கலைமகளும்—பெருங்கடல் - பாற்கடலும்—நாற்கோட்டு - நாற்கொம்புள்ள—ஒருத்தல் - ஐராவதமும்—புண்ணியம் - புண்ணியமும்—இவைமுதல்- இவைமுதலானவற்றிற்கு—வெள்ளுடல் - உடல் வெளுத்தலை—கொடுக்கும் - செய்யாநின்ற—புகழ் - புகழை—கவிப்பாடகர் - கவியிற்கட்டிப்பாடுகின்ற வரது—புணர்ச்சியின்பு - சேர்க்கை யின்பத்தை—அகற்றி - விட்டு,

எல்லாக்கல்வியுமிகழ்ச்சிசெய்கலவியர்
பெருநகைக்கூட்டமுங்கழிவுசெய்து

எல்லாக்கல்வியும் - சகலகல்விகளையும்—இகழ்ச்சிசெய் - பழிக்கின்ற—கலவியர் கலவித்தொழிலில் வல்லபரத்தையரது—பெருநகை - மிகுந்தமகிழ்ச்சிககுக் காரணமாகிய—கூட்டமும்- சேர்க்கையையும்—கழிவுசெய்து - தொலைத்து,

இவ்விடை
மயக்குறுமாலைமாமகளெதிர
வொருவழிபடர்ந்ததென்

இவ்விடை - இந்த இடத்தில்—மயக்குறுமாலை - மாலைஇருளுகின்ற காலமென்னும்—மாமகளெதிர - பெரியபெண்ணெதிர்ப்ப—ஒருவழி - ஒரோவழியாய்—படர்ந்ததென் - வந்தது யாது காரணம்—எ-று.

நிறைநீரூர - கூடறபெருமான் குனைகழல்கூறுஞ் செம்மை யர்போலக கோடாது எம்மையுநோக்கிச் சிறிதுகண்புரிந்து பா ணனுடனுறைநீக்கி பார்ப்பான்கோலுடன்படருங்குறுநகையொ ருவி பூவிலைத் தொழின்மகன் காவல்கைவிட்டு கவிபாடகர் புண ர்ச்சியின்பகற்றி பெருநகைக்கூட்டமுங்கழிவுசெய்து இவ்விடை மாலை மாமகளொதிர வொருவழி படர்ந்ததென்னெனை வினைமுடி வுசெய்க. (௫௪)

---

## வழிபாடுகூறல்.

வழிபாடுகூறலென்பது - மணஞ்செய்தபின்னர் மணமனை காணவந்த செவிலிக்கு, காவலர் உடம்புமுயிரும்போல ஒருவ னையொருவர் இன்றியமையாமையால் இவள்கருத்தைக்கடவார், கமலங்கலந்ததேனுஞ் சந்தனமரமும்போல விரைந்து இவள்கற் புவழியிலே நிற்றலையுடையராய் இவள்வழியே நின்றொழுகாநி ன்றானெனத் தோழி தலைமகன் றலைமகள் வழியொழுகா நின்ற மை கூறுநிற்றல். அதற்குச்செய்யுள்:—

சீரியலாவியும்யாக்கையுமென்னச்சிறந்தமையாற்
காரியல்வாட்கண்ணியெண்ணகலார்கமலங்கலந்த
வேரியுஞ்சந்தும்வியறந்தெனக்கற்பினிற்பரன்னே
காரியல்கண்டர்வண்டில்லைவணஙகுமெங்காவலரே. ௩0௧

மணமனைகாண வந்தசெவிலிக்குத்
துணைமலர்கக்குழலி தோழிசொல்லியது.

இ-ள். அன்னே - அன்னாய்—காரியல்கண்டர் - கார்போலு ங் கண்டத்தையுடையவரது—வண்டில்லை - வளவிய தில்லையை —வணங்கும் - வணங்கும்—எங்காவலர் - எம்முடைய காவலர்

—சீரியல் - சீர்மையியலும்—ஆவியும்யாக்கையுமென்ன - உயிரு முடம்பும்போல—சிறந்தமையால் - ஒருவரையொருவர் இன்றி யமையாமையால்—காரியல் - கரியவியல்பை யுடைய—வாட்கண் ணி - வாள்போலுங் கண்ணையுடையாளது—எண்ணகலார் - எ ண்ணத்தைக்கடவார்—கமலங்கலந்த - தாமரைப்பூவைச் சேர்ந் தவேரியுஞ்சந்தும்—தேனுஞ்சந்தனமரமும் - வியறந்தென— இடத்து நிகழ்பொருளு மிடமுமாயியைந்து தம்பெருமையைப் புலப்படுத்தினாற்போலவியைந்து—கற்பினிற்பா - இவளது வழி பாட்டின்கண்ணேநிற்பர்—எ-று. (கூ0௩)

நேரிசையாசிரியப்பா.

நிரையிதழ்திறந்துமதுவண்டருந்தும்
விருந்துகொண்மலரும்புரிந்துறைமணமுஞ்
செந்தமிழ்ப்பாடலுந்தேக்கியபொருளும்
பாலுஞ்சுவையும்பழமுமிரதமு
முடலுமுயிருமொன்றியதென்னக்
கண்டுந்தெளிந்துங்கலந்தவுள்ளுணர்வாற்,
பாலுமமுதமுந்தேனுமபிஷிற்றிய
வின்பமர்சொல்லிநண்புமனக்குறியும்
வாய்மையுஞ்சிறப்புநிழலெனக்கடவார்|
விண்ணவர்தலைவனும்வீயாமருந்து
மளகைக்கிறையுமரும்பொருளீட்டமுங்
கண்ணனுங்காவலுமுனியுமபசுவு
மொன்றினுந்தவறாவொருங்கியைந்தனபோ
னீடிநின்றுதவுங்கற்புடைநிலையினர்
தவங்கற்றீன்றநெடுங்கற்பன்னை|
முன்னொருநாளின்முதற்றொழிலிரண்டினர்
பன்றியும்பறவையுமென்றுருவெடுத்துக்

கவையாவுளத்துக்காணுங்கழலுங்
கல்வியிலறிவிற்காணுமுடியு
மளவுசென்றெட்டாவளவினராகி
மண்ணுமும்பருமகழ்ந்தும்பறந்து
மளவாநோன்மையினெடுநாள்வருந்திக்
கண்ணினிற்காணுநுளத்தினிற்புணராது
நின்றனகண்டுநெடும்பயன்படைத்த
திருவஞ்செழுத்துங்குறையாதிரட்ட
விருநிலமுருவியவொருதழற்றூணத்
தெரிமழுநவ்விதமருகமமைதத
நாற்கரநுதல்விழித்தீப்புகைகடுக்கள
முலகுபெற்றெடுத்தவொருதனிசசெல்வி
கட்டியவேணிமட்டலர்கடுக்கை
யாயிரந்திருமுகத்தருணதிசிறுமதி
பகைதவிர்பாம்புநகைபெறுமெருக்கமு
மொன்றியதிருவுருநின்றுநனிகாட்டிப்
பேரருள்கொடுத்தகூடலம்பதியோன்
பதமிரண்டமைத்தவுள்ளக்
கதியிரண்டாயவோரன்பினரே. ௯0

---*---

நிலையிதழ்திறந்து வோரன்பினரே. பகுதி - மணச்சிறப்புரைத்தல், துறை - வழிபாடுகூறல்.

விண்ணவர்தலைவனும்வீயாமருந்து
மளகைகிறையுமருமபொருளீட்டமுங்
கண்ணனுங்காவலுமுனியும்பசுவு
மொன்றினுந்தவறுவொருங்கியைந்தனபோல்

(இதனதுபதப்பொருள்.)

விண்ணவர்தலைவனும் - விண்ணிலுள்ளார்க்கு அரையனும்—வீயாமருந்தும் - அவனது இறவாமைக்குக் காரணமான அ

மிர்தமும்—அளகைக்கிறையும் - அளகைக்குத் தலைவனும்—அரும்பொருளீட்டமும் - அவனது கிடைத்தற்கருமையான பொருட்குவையும்—கண்ணனும் - திருமாலும்—காவலும் - தனது காத்தற்றொழிலும்—முனியும் - வசிட்டமுனிவனும்—பசுவும்- தனது காமதேனும்—ஒன்றினும் - யாதொன்றினாலும்—தவறு - தவறுபடாமல்—ஒருநிலையர்தனபோல் - ஒன்றுபட்டிலையந்தனபோல்,

நீடிநின்றுதவுங்கற்புடைநிலையினர்
தவங்கற்றீனறநெடுங்கற்பன்னை

நீடிநின்று - மிகவுநிலைபெற்று—உதவும் - பயனைத்தருகின்ற—கற்புடைநிலையினர் - கற்பைத் தம்மிடத்தேயுடைய நிலையினரது—தவங்கற்று - தவத்தைமேற்று—ஈன்ற - தலைவியைப் பெற்ற—நெடுங்கற்பு-மிகுந்தகற்பினையுடைய—அன்னை- தாயே

முன்னொருநாளின்முதற்றொழிலிரண்டினர்
பன்றியும்பறவையுமென்றுருவெடுத்துக்
கவையாவுளத்துககாணுங்கழலுங்
கல்வியிலறிவிற்காணுமுடியும்

முன்னொருநாளில் - முன்னொருகாலத்தில்—முதற்றொழிலிரண்டினர் - முத்தொழிலுண் முதலனவாகிய இரண்டுதொழில்களையுடையவ ரிருவரும்—பன்றியும்பறவையும் - வராகமும் அன்னப்பறவையும்—என்று - என்றுசொல்லும்படியான—உருவெடுத்து - உருவமெடுத்து—கவையாவுளத்து - பேதியாதவுள்ளத்தினாலே—காணும் - காணத்தக்க—கழலும்- திருவடியையும்—கல்வியில் - நூற்கல்வியினாலும்—அறிவில் - அறிவினாலும்— காணும் - காணத்தக்க—முடியும் - திருமுடியையும்,

அளவுசென்றெட்டாவளவினராகி
மண்ணுமும்பருமகழ்ந்தும்பறந்து
மளவாநோன்மையினெடுநாள்வருந்தி

அளவுசென்றெட்டா - தம்மாற்கூடிய அளவினாலே சென்றும் எட்டாத—அளவினராகி - அளவினையுடையவராகி—மண்ணும் - பூமியினும்—உம்பரும் - ஆகாயத்திலும்—அகழ்ந்தும் - பிளந்தும்—பறந்தும் - பறந்தும்—அளவா - அணியராகாத—நோன்மையின் - வலிமையினாலே—நெடுநாள் - நெடுங்காலம்—வருந்தி - வருத்தமுற்று,

கண்ணினிற்காணுதுளத்தினிற்புணராது
நின்றனைகண்டுநெடும்பயன்படைத்த
திருவஞ்செழுத்துங்குறையாதிரட்ட

கண்ணினில் - கண்ணினாலும்—காணாது - காணாமல்—உளத்தினில் - உள்ளத்தினாலும—புணராது - அணுகாமல்—நின்றனைகண்டு - நின்றநிலைகண்டு—நெடும்பயன் படைத்த-அழியாப் பயன் பொதிந்துள்ள—திருவஞ்செழுத்தும் - ஸ்ரீபஞ்சாக்ஷரத்தை—குறையாதிரட்ட - நிறைவாகவுச்சரிக்க,

இருநிலமுருவியவொருதழறறுணத்
தெரிமழுநவ்வி தமருகமமைத்த
நாற்கரநுதல்விழித்தீபபுகைகடுகளம்

இருநிலமுருவிய - பெரியபூமியைக்கடந்துசென்ற—ஒருதழற்றூணத்து - ஒரு அக்கினிஸ்தம்பத்தினிறும்—எரி - எரிகின்ற—மழு - மழுவும்—நவ்வி - மானும்—தமருகம் - தமருகமும்—அமைத்த - வைத்த—நாற்கரம் - நான்கு கைகளும்—நுதல்விழி - நெற்றிக்கண்ணும்—தீப்புகை - தீப்புகையாகின்ற—கடுக்களம் - காளகண்டமும்,

முலகுபெற்றெடுத்தவொருதனிச்செல்வி
கட்டியவேணிமட்டலர்கடுக்கை
யாயிரந்திருமுகத்தருணதி

உலகு - உலகங்களையெல்லாம்—பெற்றெடுத்த - பெற்றுவ் ளர்த்த—ஒருதனிச்செல்வி - ஒப்பற்ற தன்னுடன் பிரிவில்லாத அருட்சத்தியும்—கட்டிய - சுற்றிக்கட்டிய—வேணி - சடைமு டியும்—மட்டலர்கடுக்கை - தேனொடுமலர்ந்த கொன்றைப்பூமா லையும்—ஆயிரந்திருமுகத்து- பயனுள்ள அநந்தமுகங்களா யொ ழுகும்—அருணதி - அருள்போலுள்ள கங்கையும்,

சிறுமதி
பகைதவிர்பாம்புநகைபெறுமெருக்கமு
மொன்றியதிருவுருநின்றுநனிகாட்டிப
பேரருள்கொடுத்தகூடலம்பதியோன்

சிறுமதி - இளம்பிறையும்—பகைதவிர் - நண்புள்ள—பாம் பும்-அரவமும்—நகைபெறுமெருக்கமும் - வெண்மைபெற்றவெ ருக்கலர்மாலையும்—ஒன்றியதிருவுரு - பொருந்திய திருவுருவத் தை—நின்று - நீங்காமல்—நனிகாட்டி - வெளிபபடக்காட்டி— பேரருள்கொடுத்த - பேரருளைத்தந்த—கூடலம்பதியோன் - ம துரைத் திருப்பதியை யிடமாகவுடையவனது,

பதமிரண்டமைத்தவுள்ளக்
கதியிரண்டாயவோரன்பினரே
பாலுமமுதமுந்தேனும்பிலிற்றிய
வின்பமர்சொல்லி

பதமிரண்டமைத்த - இரண்டுதிருவடிகளையும்வைத்த—உ ள்ளம் - உள்ளத்தையுடைய—கதியிரண்டாய - அநுசந்தானரா கிய —ஓரன்பினர் - பகுப்பற்ற அன்பையொத்த தலைவரும்—பா

லும் - ஆன்பாலும்—அமுதமும் - தேவாமிர்தமும்—தேனும் - செந்தேனும்போல—பிலிற்றிய - வெளிப்படுகின்ற—இன்பமர் சொல்லி - இனிமைபயக்கும் சொல்லையுடைய தலைவியும்,

நனையிதழ்திறந்துமதுவண்டருந்தும்
விருந்துகொண்மலரும்புரிந்துறைமணமுஞ்
செந்தமிழ்ப்பாடலுந்தேக்கியபொருளும்
பாலுஞ்சுவையும்பழமுமிரதமு
முடலுமுயிருமொன்றியதென்ன

நனையிதழ் - நெருங்கிய விதழ்களை—திறந்து - விரித்து—வண்டு - வண்டுகள்—விருந்து - விருந்தினர்போல—கொண்மது - உள்ளதேனை—அருந்தும் - அருந்துகின்ற—மலரும் - மலரும்—புரிந்துறை - அம்மலருடனீங்காதிருக்கின்ற—மணமும் - மணமும்—செந்தமிழ்ப்பாடலும் - செந்தமிழ்ச் செய்யுளும்—தேக்கியபொருளும் - நிறைந்த வதன்பொருளும்—பாலும் - பாலும்—சுவையும் - அதன்மதுரமும்—பழமும் - பழமும்—இரதமும் - அதன் இரசமும்—உடலுமுயிரும் - உடலும் அதனுள் உயிரும்—ஒன்றியதென்ன - பொருந்தியதுபோல,

கண்டுந்தெளிந்துங்கலந்தவுள்ளுணர்வால்

கண்டும் - கண்டும்—தெளிந்தும் - தெளிந்தும்—கலந்தவுள்ளுணர்வால் - இருவரிடத்தும் வேறின்றிக்கலந்த வுள்ளுணர்ச்சியால்,

நண்புமனக்குறியும்
வாய்மையுஞ்சிறப்புமிழலெனக்கடவார்

நண்பும் - நண்பினாலும்—மனக்குறியும் - மனக்குறிப்பினாலும்—வாய்மையும் - உண்மையினாலும்—சிறப்பும் - தமக்குரியபல

லகைச்சிறப்பினும்—நிழலென - தத்தம் நிழலைப்போல—கட்வார் - பிரிதலிலர்—எ-று.

நெடுங்கற்பன்னையே கூடலம்பதியோன் பதமிரண்டமைத்த வுள்ளக்கதியினராய வோரன்பினரும் இன்பமர் சொல்லியும் நண்பு மநக்குறியும் வாய்மையுஞ்சிறப்பு நிழலெனக்கடவாரென வினைமுடிவுசெய்க. (சு0)

---

## ஆதரங்கூறல்.

ஆதரங்கூறலென்பது - போக்கருமைகூறிய தலைமகனுக்கு நின்னோடுபோகப்பெறின் அவளுக்கு வெஞ்சுரமுந் தண்சுரமாம் நீயருமைகூறாது அவளைக் கொண்டுபோவெனத் தோழி தலைமகளா தாதரங்கூறுநிற்றல். அதற்குச்செய்யுள்.—

பிணையுங்கலையும் வன்பேய்த்தேரினைப் பெருநீர்நசையா லணையுமுரம்புநிரம்பியவத்தமுமையமெய்யே, யிணையு மளவுமில்லாவிறையோனுறைதில்லைத்தண்பூம், பணையு ந்தடமுமன்றேநின்னொடேகினெம் மைபந்தொடிக்கே. ()

அழற்றடம்புனையு மருஞ்சுரமது - வு
நிழற்றடமவட்கு நின்னொடேகினென்ற து.

இ-ள். பிணையுங்கலையும் - பிணையுங்கலையும்—பெருநீர்நசையால் - மிக்கநீர்வேட்கையால்—வன்பேய்த்தேரினை - பெரியபேய்த்தேரினை—அணையும் - சென்றணுகும்—முரம்புநிரம்பிய - முரம்பானிரம்பிய—அத்தமும் - சுரமும்—ஐய- ஐயனே—நின்னொடேகின் - நின்னோடுசெல்லின்—மெய்யே - மெய்யாக—எம்பைந்தொடிக்கு - எம்பைந்தொடிக்கு—இணையுமளவுமில்லா - ஒப்பும் பெருமையுமில்லாத—இறையோனுறை - இறையோனுறைகின்

ற—தில்லை - தில்லைவரைப்பில்—தண்பூம்பணையும் - பூக்களையுடைய குளிர்ந்தமருதநிலமும்—தடமும் - பொய்கையும்—அன்றே-அல்லவோ நீயிவ்வாறு கூறுவதென்—எ-று. (௨௦௨)

---

நேரிசையாசிரியப்பா.

நெடுவரைப்பொங்கர்ப்புனமெறிகாரகிற்
கரும்புகைவானங்கையுறப்பொதிந்து
தருநிழற்றேவர்தம்முடல்பனிப்பப்
படர்ந்தெறிகங்கைவிடுங்குளிரகற்றும்
பொன்னமபொருப்பநின்னுளத்தியையிற்
கனறலைப்பழுத்ததிரள்பரன்முரம்பு
வயல்வளைகக்கியமணிநிரைப்பரப்பே
யதர்விரிந்தெழுந்துபடர்புகைநிழல்
பொதுளியகாஞ்சிமருதணிநிழலே
தீவாய்ப்புலிப்பற்செறிகுரலெயிற்றியர்
கழுநீர்மலையும்வயன்மாதினரே
யயற்புலமெறியுமெயினர்மரத்துடி
நெடுநகரிரட்டுங்களியரிகிணையே
யிருட்கலர்புலனெனச்சுழற்றருஞ்சூறை
மதுமலரளைந்தமலையக்காலே
யெழுசிறைதீயுமெருவையும்பருந்துங்
குவளையங்காட்டுக்குருகொடுபுதாவே
வலியழிபகடுவாய்நீர்ச்செந்நாய்
தழைமடிமேதியும்பிணரிடங்கருமே
பட்டுலாகள்ளிநெற்றுடைவாகை
சுருள்விரிசாலியுங்குலையரம்பையுமே
வடதிருவாலவாய்திருநடுவூர்
வெள்ளியம்பலநள்ளாறிந்திரா

பஞ்சவனீச்சரமஞ்செழுத்தமைத்த
சென்னிமாபுரஞ்சேரன்றிருத்தளி
கன்னிசெங்கோட்டங்கரியோன்றிருவுறை
விண்ணுடைத்துண்ணுங்கண்ணிலியொருத்தன்
மறிதிரைக்கடலுண்மாவெனக்கவிழ்ந்த
களவுடல்பிளந்தவொளிகெழுதிருவேற்
பணிப்பகையூர்தியருட்கொடியிரண்டுடன்
முன்னும்பின்னுமுதுக்கொளநிறைந்த
வருவியஞ்சாரலொருபரங்குன்றஞ்
சூழகொளவிருந்தகூடலம்பெருமான்
முழுதுறநிறைந்தவிருபதம்புகழாா
போம்வழியெனுஞ்சுரமருத
மாமையூர்தருமணிநிறத்திவட்கே. ௬௧

—*—

நெடுவரைப்பொங்கர் மணிநிறத்திவட்கே. பகுதி - உடன்போக்கு, துறை - ஆதரங்கூறல். *

நெடுவரைப்பொங்கர்ப்புனமெறிகாரகிற்
கரும்புகைவானங்கையுறப்பொதிந்து
தருநிழற்றேவர்தம்முடல்பனிப்ப

(இதனதுபதப்பொருள்)

நெடுவரை - நெடியமூங்கில்செறிந்த—பொங்கர் - மலைச்சார்பினில்—புனம் - தினைப்புனம் ஓம்பும்பொருட்டு—எறி-வெட்டப்படுகின்ற—காரகில் - வயிரம்பற்றிய அகில்மரங்களைக்கொளுத்துகின்ற—கரும்புகை - மிக்கபுகையானது—வானம்- விண்ணில்—கையுறப்பொதிந்து - மூடிக்கொண்டு—தருநிழல் - கற்பகநிழலிடமாகவுடைய—தேவர்தம் - தேவர்களது—உடல்பனிப்ப - உடனடுங்கும்படி,

படர்ந்தெறிகங்கைவிடுங்குளிரகற்றும்
பொன்னம்பொருப்பநின்னுளத்தியையின்

படர்ந்து - பரவி—எறி - அலைகளைவீசுகின்ற—கங்கை- ஆகாயகங்கை—விடும் - தருகின்ற—குளிர்- குளிரை—அகற்றும்- நீக்குகின்ற—பொன்னம்பொருப்ப - அழகிய மலையையுடையாய்—நின்னுளத்து - உன் னுள்ளத்தே—இயையின் - சம்மதியானல்,

கனறலைபபழுத்ததிரள்பரன்முரம்பு
வயல்வளைகக்கியமணிநிரைப்பரப்பே
மாமையூர்தருமணிசிறத்திவட்கே.

மாமையூர்தரும் - இளமைப் பருவமிக்க—மணிசிறத்திவட்கு - மணிபோலு சிறத்தினளாகிய இத்தலைவிக்கு—கனல்தலைபழுத்த - அழலுதல் தம்மிடத்துமுதிர்ந்த—திரள்-திரண்ட—பரல்- பரற்கற்களையுள்ள—முரம்பு - பாறைகள்—வயல்வளை-வயற்சங்குகள்—கக்கிய - உமிழ்ந்த—மணிநிரைப்பரப்பே - கூட்டமாகிய முத்தினமேயாகும்,

அதர்விரிந்தெழுந்துபடர்புகைநிழல்
பொதுளியகாஞ்சிமருதணிநிழலே

அதர்விரிந்து - அக்கல்வழியிற் கிளைத்து—எழுந்து - மேலெழுந்து—படர் - படராநின்ற—புகைநிழல் - புகைநீழலானது—பொதுளிய- தளிர்நிறைந்த—காஞ்சி - காஞ்சியும்—மருது- மருதுமாகியமரங்களின்—அணிநிழலே - நல்லநீழலேயாகும்,

தீவாய்ப்புலிப்பற்செறிகுரலெயிற்றியர்
கழுநீர்மலையும்வயன்மாதினரே

தீவாய் - திப்போற் புகையாநின்ற வாயினை யுடைய—புலிப்பல் - புலிநகங்கள்—செறி - அணிந்துள்ள—குரல் - கழுத்

தையுடைய — எயிற்றியர் - பாலைநிலப்பெண்கள் — கழுநீர் - கழுநீராகிய களைகளை — மலையும் - பறிக்கின்ற — வயன்மாதினரோ - கடைசியரோயாவர்,

அயற்புலமெறியுமெயினர்மரத்துடி
நெடுநெகரிரட்டுங்களியரிகிணையே

அயற்புலமெறியும் - அப்பாலையின் அயலிடத்தில் முழக்குகின்ற — எயினர் - மறவர்களது — மரத்துடி - மரத்தாற்செய்த துடிப்பறையானது — நெடுநெகரிரட்டும் - நெடியநகரத்தில் முழக்காநின்ற — களி - இனிமைபயக்கும் — அரிகிணையே - இந்திரனுக்குரிய மருதப்பறையேயாகும்,

இருட்கலர்புலனெனச்சுழற்றருஞ்சூறை
மதுமலரளைந்தமலையக்காலே

இருட்கலர் - மயக்கமேலிட்ட கீழ்மக்களது — புலனென - ஐம்புலன்போல — சுழல்தரும் - சுழற்சியைத்தருகின்ற — சூறை - சூறைக்காற்றானது — மதுமலரளைந்த - மலர்த்தேனொடுபடிந்து வீசுகின்ற — மலையக்காலே - தென்றற்காற்றேயாகும்,

எழுசிறைதீயுமெருவையும்பருந்துங்
குவளையங்காட்டுக்குருகொடுபுதாவே

எழுசிறைதீயும் - எழாநின்ற சிறைகள் தீந்திடுகின்ற — எருவையும் - கழுகுகளும் — பருந்தும் - பருந்துகளும் — குவளையங்காட்டு - குவளைமலர்களாகியவனத்திலுள்ள — குருகொடுபுதாவே - நாரைகளுங் கொக்குகளுமேயாகும்,

வலியழிபகடுவாய்நீர்ச்செந்நாய்
தழைமடிமேதியும்பிணரிடங்கருமே

வலியழிபகடு - வெப்பத்தால் வன்மைகுன்றிய யானைகளு ம்—வாய்நீர - நீர்சொரியும் வாயுள்ள—செந்நாய் - செந்நாய்களு ம்—தழைமடி - பால்பெருகும் மடியினையுடைய—மேதியும் - எ ருமைகளும—பிணரிடங்கருமே - பொருக்குடலுள்ள முதலை களுமேயாகும்,

பட்டுலர்கள்ளிநெற்றுடைவாகை
சுருள்விரிசாலியுங்குலையரம்பையுமே

பட்டுலர்கள்ளி - இலைகள்வெந்து உலர்ந்தகள்ளிமரமும்—நெற்றுடைவாகை - நெற்றையுள்ள வாகைமரமும்—சுருள்விரி-சுருள்விரிந்த—சாலியும் - நெற்பயிரும்—குலையரம்பையுமே-கு லைகள்தூங்குகின்ற வாழையுமேயாகும்,

வடதிருவாலவாய்திருநடுலூர்
வெள்ளியம்பலநள்ளாறிந்திளா
பஞ்சவனீச்சரமஞ்செழுத்தமைத்த
சென்னிமாபுரஞ்சேரன்றிருத்தளி
கன்னிசெங்கோட்டங்கரியோன்றிருவுறை

வடதிருவாலவாய் - இடைக்காடன் பொருட்டுக் கோயில் கொண்டருளிய மதுரையும்—திருநடுலூர் - நடுவூரென்னுந்திருப் பதியும்—வெள்ளியம்பலம் - வெள்ளியம்பலமும்—நள்ளாறு - திருநள்ளாறும்—இந்திளா - இந்திளாயும்—பஞ்சவனீச்சரம் - ப ஞ்சவனீச்சரமும்—அஞ்செழுத்தமைத்த - பஞ்சாக்ஷரமமைத் த—சென்னிமாபுரம் - பெருமையுள்ள சோழபுரமும்—சேரன் றிருத்தளி - சேரன்றிருத்தளியும்—கன்னிசெங்கோட்டம் - அ ழிவில்லாத திருச்செங்கோட்டமும்—கரியோன்- திருமாலது—திருவுறை - அழகியசோலைமலையும்,

விண்ணுடைத்துண்ணுங்கண்ணிலியொருத்தன்
மறிதிரைக்கடலுண்மாவெனக்கவிழ்ந்த
களவுடல்பிளந்தவொளிகெழுதிருவேல்

விண்ணுடைத்துண்ணும் - விண்ணுலகத்துள்ளாரை யழித்துண்ட—கண்ணிலி - கண்ணோட்ட மில்லாதவனாகிய—ஒருத்தன் ஒரு சூரபன்மனுடைய—மறிதிரைக்கடலுள் - மறித்துவீசாநின்ற வலைகடலில்—மாவெனக்கவிழ்ந்த - மாமரமாகத் தலைகீழாகமுளைத்த—களவுடல்பிளந்த-களவானவுடலைக்கூறுக்கிய—ஒளிகெழு - ஒளியிடைவிடாத—திருவேல்-கூரியவேலேந்திய,

பணிப்பகையூர்தியருட்கொடியிரண்டுடன்
முன்னும்பின்னுமுதுக்கொளநிறைந்த
வருவியஞ்சாரலொருபரங்குன்றம்

பணிப்பகையூர்தி - பாம்புகளுக்குப் பகையாகிய மயிலைநடத்து முருகக்கடவுள்—அருட்கொடியிரண்டுடன் - தனதருளாகிய தெய்வயானைநாச்சியாரும் வள்ளிநாச்சியாருமாகிய விரண்டுதேவியருடனே—முன்னும்பின்னும் - முன்னரும்பின்னரும்—முதுக்கொளநிறைந்த - பழமைகொள்ளும்படி நிறைந்துள்ள—அருவியஞ்சாரல் - அருவிச்சாரலையுடைய—ஒருபரங்குன்றம்-ஒப்பற்ற திருப்பரங்குன்றமும்,

சூழ்கொளவிருந்தகூடலம்பெருமான்
முழுதுறநிறைந்தவிருபதம்புகழார்
போம்வழியெனுஞ்சுரமருதம்

சூழ்கொளவிருந்த - புடைசூழவிருந்த—கூடலம்பெருமான் - மதுரைநாயகனது—முழுதுறநிறைந்த - இடையறநிறைந்த—இருபதம் - இரண்டு திருவடிகளையும்—புகழார் - புகழ்ந்து

ரையார்—போம்வழியெனும் - போகும்வழியென்று சொல்லப்ப டுகின்ற—சுரம் - பாலைநிலமும்—மருதம் - மருதநாடே யா கும்—எ-று.

பொன்னம்பொருப்ப நின்னுளத் தியையின் மணிநிறத்தில ட்கு பரன்முரம்பு மணிநிரைப் பரப்பே புகைநீழல் மருதணிநிழ லே எயிற்றியர்வயன்மாதினரோ எயினர்மரத்துடி களியரிகிணை யே குறைமலையக்காலே எருவையும் பருந்தும் குருகொடுபுதுவே பகடுசெந்நாய் மேதியுமிடங்கருமே கள்ளிவாகை சாலியுமரவையுமே கூடற்பெருமான் பதம்புகழார் போம்வழியெனுங்க டுஞ்சுரம் மருதமேயென வினைமுடிவுசெய்க.　　(சுக)

---

முகங்கண்டுமகிழ்தல்.

முகங்கணடுமகிழ்தலென்பது - மருங்கணை யிறுதிக்கட் டலைமகளது முகமகிழ்தல்கண்டு, இவளும்யானும் மலருமதியுமெனத தலைமகன் றன்னயபபுணர்த்தி மகிழாநிற்றல். அதற்குச் செய்யுள்.—

அழுந்தேனரகத்தியானென்றிருப்பவந்தாண்டுகொண்ட, செழுந்தேன்றிகழ்பொழிற் றில்லைப்புறவிற் செறுவகத்த, கொழுந்தேன்மலர்வாய்க்குமுதமிவள்யான்குரூஉச்சுடர்கொண், டெழுந்தாங்கதுமலர்த் தும்முயர்வானத் திளமதியே.　　(கசுசு)

முகையவிழ்குழலி முகமதிகண்　　டு
திகழ்வேலண்ணன் மகிழ்வுற்ற　　து.

இ-ள். அழுந்தேனரகத்தியானென்றிருபப - யானினி நரகத்திறபுக் கழுந்தேனென்று செம்மாந்திருக்கும் வண்ணம்—

வந்தாண்டுகொண்ட - தானேவந்தாண்டுகொண்ட—செழுந் தேன்றிகழ்பொழில் - செழுந்தேன் போல்வானது விளங்கும் பொழிலையுடைய—தில்லைப்புறவில் - தில்லையைச்சூழ்ந்த இளங் காட்டில்—செறுவகத்த - செய்யின்கண்ணன வாகிய—கொழுந் தேன்-கொழுவியதேனையும்—மலர்வாய் - மலராநின்ற வாயையு முடைய—குமுதமிவள் - குமுதமலரிவள—யான்குரூஉச்சுடர் கொண்டெழுந்து - யானிறத்தையுடைய நிலாவைக்கொண் டெழுந்து—ஆங்கது - அக்குமுதத்தை—மலர்த்தும் - மலர்த்தும் —உயர்வானத்திளமதியே - உயர்ந்தவானத்தின்கட டிசழுமுதி ராமதி—எ-று. (கசுசு)

---

நேரிசையாசிரியப்பா.

நிறைமதிபுரையாதுநிறைமதிபுரையாது
தேரான்றெளிவெனுந்திருக்குறட்புகுந்து
குறைமதிமனனோநிறைமதிபுரையா
துவர்க்கடற்பிறந்துங்குறையுடற்கோடியுங்
கருங்கவைத்தீநாப்பெரும்பொறிப்பகுவாய்த்
தழல்விழிப்பாந்தடானிரைமாந்தியு
மிச்சிலுமிழ்ந்துமெய்யுட்கறுத்துந்
தணந்தோர்சினத்துமணந்தோர்க்களித்துங்
குமுதமலர்த்தியுங்கமலங்குவித்துங்
கடல்சூழுலகின்மதிநடுவிகந்தும்
பெருமறைகூறியறைவிதிதோறு
முத்தழற்குடையோன்முக்கட்கடவுளென்
றறுத்திடும்வழக்குக்கிடக்கவொருகால்
வான்வரநதிக்கணாமருண்மகமெடுத்த
தீக்குணத்தக்கன்செருக்களந்தன்னுட்
கண்டொறும்விசைத்தகருப்புத்தாளமும

வளையுமிழாரமுஞ்சுரிமுகச்சங்கும்
வலம்புரிக்கூட்டமுஞ்சலஞ்சலப்புஞ்சமு
நந்தினக்குழுவும்வளவயினந்தி
யுழவக்கணததர்படைவாணிறுத்துங்
கூடற்கிறையோன்குளகழற்படையா
லிரொண்கலேபும்பூழிபட்டுதிர
நிலவெளுடுதேய்ப்புண்டலமந்தலறியுஞ்
சிறைந்துறைந்தெழுபழித்தீமதிபுனையா
முண்டகம்விளர்ததிமுதிராதலர்ந்து
மமுதநின்றுறைந்துமறிவறிவித்துந்
தீககதிருட்லுட்செல்லாதிருந்துந்
திளையாததாரைகள்சேரா
முளையாவென்றியிவண்முகமதிக்கே. சா௨

---*---

நிறைமதிபுனையாது இவணமுகமதிக்கே. பகுதி-இரவுக்குறி, துறை-முகஙகணடுமகிழ்தல். *

நிறைமதிபுனையாதுநிறைமதிபுனையாது
தேரான்றெளிவெனூஉதிருககுறடபுகுநது
குறைமதிமனனேநிறைமதிபுனையாது

(இதனதுபதபபொருள்.)

தேரான்றெளிவெனும் - தேரான்றெளிவெனு முதற்குறிப்பையுடைய—திருக்குறட்புகுந்தும் - திருக்குறளின்பொருளை யாராய்ந்தறிந்தும்—குறைமதிமனனே - அறிவுகுறைந்த மனனே —நிறைமதிபுனையாது - முழுமதி யெத்துணையு மொவ்வாது— நிறைமதிபுனையாது - முழுமதி என்று மொவ்வாது—நிறைமதி புனையாது - முழுமதி எவ்வாற்றானுமொவ்வாது;

உவர்க்கடற்பிறந்துஙகுறையுடல்கோடியுங்
கருங்கவைத்தீநாப்பெரும்பொறிபபகுவாய்த்
தழல்விழிப்பாந்தடானிளைமாந்தியு
மிசசிலுமிழந்துமெய்புட்கறுத்தும்

உவர்க்கடற்பிறநதும - உபபுக்கடலிற்பிறந்தும்—குறையு டல்கோடியும் - குறைகின்ற வுடலானது கூனியும்—கரும் - கருமையாகிய—கவை - பிளவுள்ள—தீநா - நெருப்புமிழ்கின்ற நாகவையும்—பெரும் - பெரிய—பொறி - புள்ளிபரந்த—பகுவாய் - பேழ்வாயையும்—தழல்விழி - கனலும்விழியையுமுடைய—டாந்தள்தான் - இராகுவென்னும் பாம்பினால்—இளைமாந்தியும் - இளையாகவுண்டும்—மிச்சிலுமிழ்ந்து-உச்சிட்டமாக உமிழபபட்டு—மெய்யுட்கறுத்தும் - தன்னுடலினுண் மறுப்பட்டும்,

தணந்தோர்ச்சினத்துமணநதோர்க்களித்தும
குமுதமலாத்தியுங்கமலங்குவித்துங்
கடல்சூழுலகின்மதிநடுவிசுநதும்

தணந்தோர்சசினத்தும்-பிரிந்தவரைக்கோபித்தும்—மணந்தோர்க்களித்தும் - புணர்ந்தவரைத் தண்ணளி செய்தும்—குமுதமலர்த்தியும் - குமுதமலரை யலரச்செய்தும்—கமலங்குவித்தும் - தாமரைமலரைக் கூம்பச்செய்தும்—கடல்சூழுலகின்-கடலாற்சூழப்பட்ட வுலகத்தே—மதிநடுவிசுந்தும் - மாதமத்தியின்மறைந்தும்,

பெருமறைகூறியறைவிதிதோறு
முத்தழற்குடையோன்முக்கட்கடவுளென்
றறுத்திடும்வழக்குககிடக்க

பெருமறை - பெரியவேதங்கள்—கூறியறை - வெளிப்படையாய் முரசறைகின்ற—விதிதோறும் - விதிகளெல்லாம்—

முத்தழறகுடையோன் - முத்தழலாலாகிய வேள்விக்கருத்த ன்—முககட்சடவுளென்று - சோமசூரியாகக்கினியாகிய மூன்று கண்ணுள்ள பரமசிவனென்று—அறுத்திடும்வழக்கு - கண்டித் துச்சொல்லியமுறைமை—கிடக்க - ஒருசாரிருக்க,

ஒருகால்
வான்வரநதிககரைமருண்மகமெடுத்த
தீகுணத்தககன்

ஒருகால் - ஓர்காலத்தில்—வான் - தேவர்களுடனே—வர நதிக்கரை - காசிக்கங்கைக்கரையிடத்தே—மருள் - தனதுமரு ளால்—மகமெடுத்த - யாகம்பண்ணத்தொடுத்த—தீகுணத்த ககன் - குணத்தால் தீயனாகிய தக்கனுடைய,

செருககளந்தன்னுட்
கண்டொறும்விசைததகருப்புத்தாளமும்
வளையுமிழாரமுஞ்சுரிமுகச்சங்கும்
வலம்புரிககூட்டமுஞ்சலஞ்சலபபுஞ்சமு
நந்தினககுழுவும்

செருககளந்தன்னுள் - போர்க்களத்தில்—கண்டொறும்- கணுககள்தோறும்—விசைத்த - சிதறிய—கருப்புத்தாளமும்- கருப்பின் முத்தங்களும்—வளையுமிழாரமும் - சங்கங்களீன்ற முத்தங்களும்—சுரிமுகச்சங்கும் - சுரிந்தமுகமுள்ள இடம்புரி ச்சங்கங்களும்—வலம்புரிக்கூட்டமும் - வலம்புரிச்சங்கின் கூ ட்டமும்—சலஞ்சலபபுஞ்சமுஞ் - சலஞ்சலச் சங்கத்திரளும—நந்தினககுழுவும் - இப்பியென்னும் சங்கக்கூட்டமும்,

வளவயினந்தி
யுழவக்கணத்தர்படைவாணிறுத்துங்
கூடற்கிறையோன்குளகழற்படையா

ஈரொண்கலையுமபூழிபட்டுதிர
நிலனொடுதேயபபுண்டலமந்தலறியும்

வளவயினந்தி - வளத்தவிடத்தேபெருகி—உழவக்கணத்தர் - கூட்டமாகிய உழவர்களெட்டும்—படைவாள் - கலபபைக்கொழுவை—நிறுத்தும் - இடறபபணணு மருதஞ்சூழ்ந்த—கூடறகிறையோன் - மதுரைநாயகனது—குரைகழற்படையால்-நூபுரமொலிக்கின்ற திருவடியாகியவாயுதத்தால்—ஈரொணகலையும் - பதினறுகலைகளும்—பூழிபட்டுதிர - புழுதிபட்டுச்சிந்துமாறு—நிலனொடுதேய்ப்புண்டு - நிலத்தோடுதேய்ககபபட்டு—அலமந்தலறியும் - சுழன்றலறியும்,

சினைதந்துறைந்தெழுபழித்தீமதிபுரையாது

சினைதந்துறைந்து - அழிந்திருந்து—எழும்- எழாநின்ற—பழி - பழியுள்ள—தீமதிபுரையாது-கொடிய திங்களொவ்வாது,

முண்டகமவிளர்த்திமுதிராதலர்ந்து
மமுதநின்றுறைந்துமறிவறிவித்துந்
தீக்கதிருடனுட்செல்லாதிருந்துந்
திளையாத்தாரைகளசேரா
முளையாவெனறியிவணமுகமதிக்கே.

முண்டகம் - செந்தாமரைப்பூவை—விளர்த்தி - வெளுக்கச்செய்து—முதிராதலர்ந்தும- வாடாது எப்போதுமலர்ந்தும்—அமுதநின்றுறைந்தும் - அமிர்தம் ஒழியாமற்பொருந்தியும்—அறிவறிவித்தும் - தன்கருத்தை யறிவித்தும்—தீககதிருடனுள் - வெம்மையான கதிருடலில்—செல்லாதிருந்தும் - மறையாதிருந்தும்—திளையாத்தாரைகள் - விண்மீன்களோடு கூடி—சேரா- சேராமலும்—முளையா - காலையிற்பட்டு மாலையில் முளையாமலு

முள்ள்—வென்றி - வெற்றி கொண்ட—இவண்முகமதிக்கே-இவள்முகமாகிய மதிக்கு—எ-று.

குறைமதிமானே இவண்முகமதிக்கு கூடற்பெருமான் சுழற்படையால் தக்கன் யாகசாலையாகிய செருக்களத்தில் நிலனொடு தேய்ப்புண்டலறிச் சிதைந்தெழுந் திமதியாகிய நிறைமதி புணையாது புணையாதென வினைமுடிவுசெய்க. (௬௨)

---

## கற்புப்பயப்புரைத்தல்.

கற்புப்பயப்புரைத்தலென்பது - கற்பறிவித்தசெவிலி, அவள் அவனையொழிய வணங்காமையின் அவனூருங்களிறும் வினையிறசென்றால் அவ்வினைமுடித்துக்கொடுத்துவந்து தன்பந்தியிடத்தலலது ஆணடுத்தங்கா தாதலான், அவளதுகற்பு, அந்திக்காலத்து வடமீனையும் வெல்லுமென அவளது கற்புப்பயந்தமை நற்றாய்க்குக் கூறாநிற்றல். அதற்குச்செய்யுள்.—

சிற்பந்திகழ்தருதிண்மதிற்றில்லைச்சிற்றம்பலத்துப்
பொற்பந்தியன்னசடையவன்பூவணமன்னபொன்னின்
கற்பந்திவாயவடமீனுங்கடக்கும்படிகடந்து
மிற்பந்திவாயன்றிவைகல்செல்லாதவனீர்ங்களிறே. ௩௦௫

கற்புப் பயந்த
அற்புத முரைத்தது.

இ-ள். நுண்டொழில்விளங்கும்—திண்மதில் - திண்ணிய மதிலையுடைய—தில்லைச்சிற்றம்பலத்து - தில்லையிற சிற்றம்பலத்தின்கணுள்ளனாகிய—பொற்பந்தியன்ன - பொற்றகட்டுநிரை போலும்—சடையவன் - சடையையுடையவனது—பூவணமன்ன - பூவணத்தையொக்கும—பொன்னின் - பொன்னினது—

கற்பு - கற்பு—அந்திவாய்- அந்திக்காலத்துளதாகிய—வடமீனு ங்கடக்கும் - வடமீனையும்வெல்லும் அதனால்எடுத்துக்கொண்ட வினையை யிடையூறின்றி யினிதின் முடித்து—அவனீர்ங்களிறு- அவனூரும் மதத்தாளீரியகளிறு—படிகடந்து - நிலத்தைக்கட ந்தும்—இற்பந்திவாயன்றி - இல்லின்கட் டன்பந்தி யிடத்தல்ல து—வைகல்செல்லாது - தங்காது—எ-று. (௯௦௩)

நேரிசையாசிரியப்பா.

ஏழ்கடல்வளைந்தபெருங்கடனுப்பண்
பத்துடைநூறுபொற்பமர்பரப்பு
மாயிரத்திரட்டிக்கீழ்மேனிலையும்
யோசனையடுத்தமாசறுகாட்சிப்
பளிங்கப்பொருப்பிற்றிடர்கொண்மூதூர்
களவுடைவாழ்க்கையுளமனக்கொடியோன்
படர்மலையேழுங்குருகமர்பொருப்பு
மாவெனக்கவிழ்ந்தமறிகடலொன்றுங்
கடுங்கனற்பூழிபடும்படிநோக்கிய
தாளையெட்டுடையகூர்இலைநெடுவேற்
காற்படைக்கொடியினன்கருணையோடமர்ந்த
புண்ணியக்குன்றம்புடைபொலிகூடற்
பிறைச்சடைமுடியினன்பேரருளடியவர்க்
கொருகாற்றவறுவுடைமைத்தென்னட்
பிரியாக்கற்பெனுநிறையுடன்வளர்ந்த
நெடுங்கயலெறிவிழிக்குறுந்தொடித்திருவின
டெய்வமென்றொருகாற்றெளியவுமுளத்திலள்
பலவுயிர்தழைக்கவொருகுடைநிழற்று
மிருபுலவேந்தர்மறுபுலப்பெரும்பகை
நீரவடுப்பொருவசிறுத்திடப்படரினு

மேழுயரிரட்டிமதலைநட்டமைத்த
தன்பழங்கூடந்தனிநிலையன்றி
யுடுநிறைவானப்பெருமுகடுயரச்
செய்யுமோராகூடம்புணர்த்தி
னெய்ம்மிதியுண்ணுந்தவன்கடக்களிறே.    சுரு

—*—

ஏழ்கடல்வளைந்த தவன்கடக்களிறே. பகுதி-மணஞ்சிறப்புரைத்தல், துறை-கற்புப்பயபபுரைத்தல். *

ஏழ்கடல்வளைந்தபெருங்கடனுப்பண
பத்துடைநூறுபொற்பமாபரப்பு
மாயிரத்திரட்டிகீழ்மேனிலையும்
யோசனையடுத்தமாசறுகாட்சி

(இதனதுபதபொருள்.)

ஏழ்கடல்வளைந்த- ஏழுகடலாற்சூழப்பெற்ற—பெருங்கடனுப்பண் - பெரும்புறக்கடனடுவில்—பத்துடைநூறு - ஆயிரம்—யோசனை - யோசனையளவுள்ள—பொற்பமர்பரப்பும் - சிறப்பமைந்தவகலமும்—ஆயிரத்திரட்டி - இரண்டாயிரம்—யோசனை - யோசனை யளவுள்ள—கீழ்மேனிலையும் - கீழ்நிலையு மேனிலையும்—அடுத்த - அடுத்த—மாசறுகாட்சி - குற்றமற்ற தோற்றத்தினையுடைய,

பளிங்கபொருப்பிற்றிடர்கொண்மூதூர்
சளவுடைவாழ்க்கையுளமனககொடியோன்
படாமலையேழுங்குருகமாபொருபபு
மாவெனக்கவிழ்ந்தமறிகடலொன்றுங்
கடுங்கனற்பூழிபடும்படிநோக்கிய

பளிங்கபொருப்பில் - பளிங்குமலை போலும்—திடர்கொள் - உயர்ச்சிகொண்ட—மூதூர் - மகேந்திர மென்னும் பேருரி

டத்தே—களவுடை - மாயமுடைய—வாழ்க்கையுள - வாழ்க்கையுள்ள—மாகக்கொடியோன் - கொடிய மாத்தையுடையோன—படர்மலையேழும் - சென்றுள்ளவேழுமலையும்—குருகமர்பொருப்பும்—கவுஞ்சமென்னும் பறவைவடிவாகிய மலையும்—மாவெனக்கவிழ்ந்த - மாமரமாகத் தலைகீழாகவிருந்த—மறிகடலொன்றும் - அலைகளை மறித்தெறியாநின்ற கடலொன்றும்—கடுங்கனற்பூழிபடும்படி - வேகமாகிய நெருப்புப்பொறிக ளாகும்படி—நோக்கிய - சினந்த,

தாரையெட்டுடையகூரிலைநெடுவேற்
காற்படைக்கொடியினனகருணையோடமர்ந்த
புண்ணியக்குன்றம்புடைபொலி

தாரையெட்டுடைய - எட்டுக்கண்களையுடைய—கூரிலைநெடுவேல் - கூரிய இலைத்தொழில்வாய்ந்த நெடியவேலையேந்திய—காற்படைக்கொடியினன் - கோழிக்கொடியை யுடையவன்—கருணையோடு - கிருபையோடு—அமர்ந்த - எழுந்தருளிய—புண்ணியக்குன்றம் - மோக்ககாரணமாகிய திருப்பரங்குன்றம்—புடைபொலி - பக்கத்தி லழகுபெற்றிருக்கின்ற ;

கூடற்
பிறைச்சடைமுடியினன்பேரருளடியவர்க்
கொருகாற்றவறுவுடைமைத்தென்ன

கூடல் - மதுரையில்—பிறைச்சடைமுடியினன் - பிறையைத்தரித்த சடைமுடிக் கடவுட்குரிய—பேரருளடியவர்க்கு - பேரருள்பெற்ற தொண்டர்கட்கு—ஒருகால் - ஒருகாலத்திலும்—தவறுவுடைமைத்தென்ன - தப்பிப்போகாதபொருள்போல.

பிரியாக்கற்பெனுநிறையுடன்வளர்ந்த
நெடுநகையலெறிவிழிகுறுந்தொடித்திருவின

டெய்வமென்றொருகாற் பெட்ரியவுமுளத்திலள

பிரியா - தன்னைவிட்டு நீங்காத—கற்பெனும் - கற்பென்று சொல்லுகின்ற—நிறைபுடன்வளர்ந்த - மாட்சிமையுடன் வளர்ந்த—நெடுங்கயலெறிவிழி - நெடுமையாகிய கயலைத்தோல்வித்த விழியையும—குறுந்தொடி - சிறிய தொடியையு முடைய—திருவினள - திருவையொத்தவள்—ஒருகால் - ஒருகாலத்திலேனும—உளத்து - தனதுள்ளத்தில்—தெய்வமென்று - நாயகனைப் பார்க்கிலும் பிறதெய்வமுண்டென்று—தெளியவும்இலள் - ஆராயவுமெண்ணாள்,

பலவுயிர் தழைக்கவொருகுடைநிழற்று
மிருபுலவேந்தர் மறுபுலப்பெரும்பகை
நீவடுப்பொருவநிறுத்திடப்படரினும்

பலவுயிர் தழைக்க - பலவுயிர்களுந் தழைக்குமாறு—ஒருகுடைநிழற்றும - ஒருகுடையால் தண்ணளிசெய்கின்ற—இருபுல வேந்தர் - இரண்டு தேயத் தரையர்களுக்குள்—மறுபுலம் - வேற்றுபபுலத்தின் பொருட்டு விளைந்த—பெரும்பகை - நெடுநாட்பகைமையை—நீவடுப்பொருவ - நீரானது பிளவுபடவந்த வடுவைப்போல—நிறுத்திட - நீக்கி யொன்று படுத்தும்படி—படரினும - அரசன்சென்றாலும் ;

ஏழுயரிரட்டிமதலைநட்டமைத்த
தனபழங்கூடந்தனிநிலையன்றி
யுடுநிறைவானப்பெருமுகடுயரச்
செய்யுமோர்கூடம்புணர்த்தி
னெய்ம்மிதியுண்ணுதவன்கடக்களிறே.

ஏழிரட்டி - பதினன்கு முழவளவையின்—உயர் - உயர்ச்சியுள்ள—மதலைநட்டு - தூண்களைநிறுத்தி—அமைத்த - செய்த

—தன்பழங்கூடந் தனிநிலையன்றி - தனதுபழமையான கூடமாகிய ஓரோவிடத்தன்றி—அவளகடகளிறு - தலைவனது மதயானையானது—உரிமைற - உரிமைகணிறைந்த—வானம - வானளவும்—பெருமுகடு - நெடியசிகரமானது—உயரசசெய்யும- உயரும்படி இயற்றப்படட—ஓர்கூடம் - பிறிதோரகூடத்தில்—புணாத்தின் - இருத்தினால்—நெய்ம்மிதி - நெய்யோடுகலந்த கவளத்தை—உண்ணாது - உணணப்பெறாது—எ-று.

மிதவையென்பது-மிதியென்றாயது செய்யுள்விகாரம்.

காற்படைக் கொடியினன் புண்ணியக்குன்றம் புடைபொலி கூடற் சடைமுடியினன் பேரருளடியவாக்குத் தவறுவுடைமைத்தென்ன பிரியாக்கற்பெனு நிறையுடன் வளாநத திருவினளுளத்திற் பிறதெய்வமுண்டெனத் தெளிந்தில ளாதலால் தலைவன் வேந்தர் பெரும்பகையை நீவடுபொருவ நிறுத்திடபபடாிறு மவன்களிறு தன்பழங் கூடத்தன்றி பிறிதோரகூடம் புணாத்தினெய்ம்மிதி யுண்ணாதென வினைமுடிவுசெய்க. (சுரு)

வாழ்க்கைநலஙகூறல்.

வாழ்க்கைநலங்கூறலென்பது - மணமனைகண்ட செவிலி, மகிழ்வோடுசென்று நின்மகளுடைய வில்வாழ்க்கை நலத்திற்கு உவமைகூறில், நின்னுடைய வில்வாழ்க்கை நலமல்லது வேறுவமையில்லையென நற்றாய்க்குத் தலைமகளது வாழ்க்கைநலங்கூறா நிற்றல். அதற்குச்செய்யுள்.—

தொண்டினமேவுஞ்சுடர்க்கழலோன்றில்லைத்தொன்னக
கண்டினமேவுமினியவணின்கொழுநன்செழுமென் [றிற்
றண்டினமேவுதிண்டோளவன்யானவடற்பணிவோள்
வண்டினமேவுங்குழலாளயன்மன்னுமிவ்வயலே. ருOஉ

மணமனைச்சென்று மகிழ்தருசெவி லி
யணிமனைகிழத்திக் கதன்சிறப்புரைத்த து.

இ-ள். தொண்டினமேவும - தொண்டரினத்தைப் பொருந்தும—சடாககழலோன் - சடாககழலையுடையவனது—தில்லை - தில்லையாகிய—தொன்னகரில் - பழையநகரிடத்து—கண்டினம - யான்கண்ட அவளதில்லம்—மேவுமில் - மேவப்படு நமதில்லத்தோடொக்கும்—நீயவள - அவ ணின்னோடொக்கும்—செழுமென்றண்டினமேவும் - தண்டாகிய வினத்தை யொக்கும்—செழுமெனவளவியவாய் - மெல்லியவாகிய—திண்டோளவன்-திண்ணிய தோள்களையுடையான்—நின்கொழுநன் - நின்கொழுநனோடொக்கும்—அவடற்பணிவோள் - அவடன்னைப்பணிந்து குற்றேவல்செய்வாள்—யான் - என்னோடொக்கும்—வண்டினமேவுங்குழலாளயல் - வண்டினம்பொருந்துங் குழலையுடையா ளதயல்—இவ்வயல் - இவ்வயலோ டொக்கும் வேறுசொல்ல லாவதில்லை—எ-று. (௧0௨)

நேரிசையாசிரியப்பா.

பெண்ணெனப்பெயரியபெருமகட்குலனு
ஞானிலனுண்டுபராயவப்பெருந்தவங
கண்ணுறவுருப்பெறுங்காட்சியதென்னக்
கருவுயிர்த்தெடுத்தகுடிமுதலன்னை
நின்னையுங்கடந்ததன்னவளருங்கற்
பரிகடன்மூழ்கிப்பெறுமருள்பெற்ற
நிலமகட்கடந்ததுநலனவள்பொறையே
யிருவினைநாடியுயிர்தொறுமமைத்த
வூழையுங்கடந்ததுவாய்மையின்மதனே
கற்பகம்போலுமற்புதம்பழுத்த

நினைவிலங்கடந்தனனவளில்லம்
பேராவூரயமைந்தனனூரனைக்கடந்தது
பிறநவளூரனகொறறவெண்குடையே
யேழுளைப்புரவியோடெழுசுதிர்நோக்கிய
சிறநிலைநெரிஞ்சிற்பொறபூவென்ன
நின்முசுகக்கிளையின்றமமைமையுங்கடந்தனர்
மற்றவட்பார்த்தமதிக்கிளையினரோ
யுடனிழன்மானவுனதழுணிறகு
மென்மையுங்கடந்தனளன்னவட்கினியோள்
கொலைமதின்மூனறுமிகலறக்கடந்து
பெருநிலவெறித்தபுகாமுகத்துளைகமைப்
பொழிமதக்களறையடியழிதரககடநது
களவுத்தொழில்செயரியகனுடலந்
திருநுதவெருக்கந்தெரிபெறக்கடந்து
மாறுகொண்டறையுமதிநூறகடல்கிளர்
சமயக்கணக்கர்தந்திறங்கடந்து
புலனெறிடுநியங்கும்பொய்யுளங்கடந்த
மலருடனிறைந்துவான்வழிகடக்கும்
பொழினிறைகூடற்புதுமதிச்சடையோன்
மன்னிலைகடவாமனததவர்போல
வொன்னலரிடுந்திறைசசெலினுந்
தன்னிலைகடவாதவனபரிதசேரோ.  சுஉ

—*—

பெண்ணெனப்பெயரிய தவன்பரித்தேரோ. பகுதி - மணஞ்சிறப்புரைத்தல், துறை - வாழ்க்கைநலங்கூறல். *

பெணணெனபபெயரியபெருமகட்குலனு
ஞனுநிலனுண்டுபேராயவப்பெருந தவம்

(இதனது பதப்பொருள்)

பெண்ணென - பெண்ணென்று—பெரிய - பெயருள்ள—பெருமகட்குலனுள - நல்ல மகளிர்கூட்டத்துள்—உணு - உணவை—நிலனுண்டு - நிலத்தை மெழுகியதிலுண்டு—பராய-மகட்பேறு கருதிநோற்ற—அப்பெருந்தவம் - அம்மாதவமானது ;

கண்ணுறவுருப்பெறுங்காட்சியதென்னக்
கருவுயிர்த்தெடுத்தகுடிமுதலன்னை

கண்ணுற - கண்கூடாகக்காணுமாறு—உருப்பெறும் - ஓர்வடிவெடுத்துவந்த—காட்சியதென்ன - காட்சிபோல—கருவுயிர்த்தெடுத்த - கருப்பங்கொண்டு பெற்றெடுத்த—குடிமுதலன்னை - நங்குடிக்குமுதல்வியாகிய அன்னையே ;

நின்னையுங்கடந்ததன்னவளருங்கற்பு

அன்னவள் - நம்மகளது—அருங்கற்பு - பெறுதற்கரியகற்பு—நின்னையுங்கடந்தது - நினது கற்பினுமேற்பட்டது ;

அரிகடன்மூழ்கிப்பெறுமருள்பெற்ற
நிலமகட்கடந்ததுநலனவள்பொறையே

நலனவள்பொறை - அந்நல்லாளது பொறுமை—கடன்மூழ்கி - கடலின்மூழ்கி—அரி - திருமாலிடத்தே—பெறுமருள்பெற்ற-பெறத்தக்க வருளைப்பெற்ற—நிலமகள் - நிலமகள்பொறுமையினும்—கடந்தது - மேற்பட்டது ,

கடல்சூழ்ந்தவென்பது - கடன்மூழ்கியென்றதிலக்கணை.

இருவினைநாடியுயிர்தொறுமமைத்த
வூழையுங்கடந்ததுவாய்மையின்மதனே

வாய்மையின்மதன் - அவளது சத்தியநிலைமையானது—இருவினைநாடி - இருவினைகாரணமாக—உயிர்தொறுமமைத்த -

எல்லாவுயிரிடத்து மமைத்த—ஊழையுங்கடந்தது-ஊழ்முறைமையினும் மேற்பட்டது ;

கற்பகம்போலுமற்புதம்பழுத்த
நின்னிலங்கடந்ததன்னவளில்லம்

அன்னவளில்லம் - அவளது மனைச்செல்வமானது—கற்பகம்போலும் - கற்பகத்தருப்போலும்—அற்புதம்பழுத்த - அதிசயமிகுந்த—நின்னிலங்கடந்தது - உனது மனைச்செல்வத்தினு மேற்பட்டது ;

பேராவாய்மைநின்னூரனைக்கடந்தது
மற்றவளூரன்கொற்றவெண்குடையே

மற்றவள் - அவள்—ஊரன்-தலைவனது—கொற்றம்-வெற்றியாலாகிய—வெண்குடை - அரசியல்—பேரா வாய்மை - தவறுபடாத வாய்மையுள்ள—நின்னூரனை - உனது தலைவனரசியலினும்—கடந்தது - மேற்பட்டது ;

வெண்குடை - ஆகுபெயர்.

எழுபரிப்புரவியோடெழுகதிர்நோக்கிய
சிற்றிலைநெரிஞ்சிற்பொற்பூவென்ன
நின்முகக்கிளையினர்தம்மையுங்கடந்தனர்
மற்றவட்பார்த்தமதிக்கிளையினரே

மற்றவள் - அவளை—பார்த்த - ஆதரவாகநோக்கியுள்ள—மதி - மதிப்புள்ள—கிளையினர் - உறவினர்—உளை - பிடரிமயிரினையுடைய—எழுபுரவி - எழுபுரவித்தேரில்—எழும் - தோன்றுகின்ற—கதிர்நோக்கிய - சூரியனைப்பார்த்திருந்த—சிற்றிலை - சிறியவிலை நெருங்கிய—நெரிஞ்சிற்பொற்பூவென்ன - நெரிஞ்சிலின் செடியின் பொன்மையுள்ள மலர்போல—நின்முகம் - நின

முகநோககிய—கிளையினா தம்மையும் - உறவினரைப் பார்க்கிலும்—கடந்தனா-அதிகரித்தனா ;

உடனிழன் மானவுன தருணிற்கு
மெனனையுங்கடநதனளனனவட்கினியோள்

அன்னவடகு - அத்தலைவிககு—இனியோள் - அன்புள்ள பாஙகியானவள்—உடனிழன்மான - உன்னுடலி னிழலைப்போல—உன தருணிற்கும - உன தருள்வயத்தே நிலைபெற்ற—என்னையும் - என்னிலும்—கடந்தனள் - உயாநதனள,

புலனெறிதியஙகும்பொய்யுளங்கடந்து
மலருடனிறைந்துவான்வழிகடக்கும
பொழினிறைகூடற்புதுமதிச்சடையோன்

மலருடனிறைந்து - மலர்களுடனிறைநது—வான்வழிகடக்கும் - ஆகாயவீதியை யூடுருவிசசெல்லுகின்ற—பொழினிறை- சோலைகளானிறைநத—கூடல் - மதுரையி னிடத்து—புலனெறி தியங்கும் - புலனெறிகூடிமயஙகுகினற—பொய்யுளங்கடந்த- உண்மைபபொருளறிதலிலலா உள்ளத்துககெட்டாத—புதுமதி இளமதியைத தரித்த—சடையோன - வேணியனுகியகடவுளது;

கொலைமதின்மூன்றுமிகலறககடந்த
பெருநிலவெறித்தபுகர்முகத்துளைககைப
பொழிமதககறையடி

கொலை - கொலைத்தொழில்கொண்ட—மதில்மூன்றும்- மூப்புரத்தையும்—இகலறசகடந்து - பகையறவென்று—பெருநில வெறித்த - மிகுநதசந்திரிகையை வீசிய தந்தங்க ளுள்ள—புகர் முகம் - புள்ளியுளளமுகத்தினிடத்து—துளைக்கை - துளையாகிய துதிக்கையையும்—பொழிமதம - மதமழையையுமுடைய—கறையடி - யானையானது,

அழிதரக்கடந்து
களவுத்தொழில்செயரிமகனுடலந்
திருநுதனோக்கத்தெரிபெறக்கடந்து

அழிதரக்கடந்து - அழியும்படிவென்று—களவுத்தொழில் செய் - களவாகிய போர்த்தொழில்புரிந்த—அரிமகனுடலம் - மன்மதனுடலானது—திருநுதல்நோக்கத்து - அழகிய நெற்றிக் கண்ணின்—எரிபெறக்கடந்து - நெருப்பிற் பொடியும்படிவென்று,

மாறுகொண்டறையுமதிநூற்கடல்கிளர்
சமயக்கணக்கர்தந்திறங்கடந்து
மன்னிலைகடவாமனத்தவர்போல

மாறுகொண்டு - ஒன்றுகொன் றொவ்வாமல்—அறையும்- தருக்கஞ்செய்கின்ற—மதிநூற்கடல்கிளர் - புத்தியானது பன்னூற்பொருளை யாய்தலி னாக்கமிக்க—சமயக்கணக்கர் - சமயவாதிகளது—திறங்கடந்து - விகற்பங்களுக கப்பாலாய்—மன் - நிலைபெற்ற—நிலைகடவா - அருணிலையிற பிறழாத—மனத்தவர போல - மனமுள்ள அன்பரபோல,

ஒன்னலரிடுந்திறைச்செலினுந்
தன்னிலைகடவாதவன்பரித்தேரோ.

ஒன்னலர் - பகைவரால்—இடு - செலுத்தப்படுகின்ற—திறை - திறைப்பொருட்டு—செலினும்-அரசன் சென்றாலும்—அவன் - அத்தலைவனது—பரித்தேர்-குதிரைபூண்ட தேரானது—தன்னிலைகடவாது - தன்னிடம்விட்டுத் தங்குதலில்லை—எ-று.

கருவுயிர்த்தெடுத்த வன்னை அன்னவள் கற்பினினையுங் கடந்து அவள்பொறை நிலமகட்கடந்தது வாய்மையின் மதன்

ஊமையுங்கடந்தது அன்னவளிலலம நின்னிலங்கடந்தது மற்ற ஊரன் கொற்றவெண்குடை நின்னூரனைக் கடந்தது மதிக்கி ளையினா நம்மையுங்கடந்தனர் பொன்னவட்கினியோள் என்னை யுங்கடந்தனள் புதுமதிச்சடையோன் மன்னிலைகடவா மாந்த வர்போல ஒன்னல ரிடுந்திறைசெலினும் அவன்பரிந்தேர் தன்னி லைகடவாதென வினைமுடிவுசெய்க. (௬௪)

---

## பள்ளியிடத்தூடல்.

பள்ளியிடத்தூடலென்பது - வாயின்மறுத்ததலைமகள், ஆற்றாமையே வாயிலாகப் புகுதப் பள்ளியிடத்தா னாகிய தலைமக னோடு, நின்னை யிடைவிடாது நுகாதற்கு முற்காலத்துத் தவத் தைச்செய்யாத தீவினையேனைநோவாது, இன்றிவ்வா றாகிய நின்னை நோவதென்னோ, அதுகிடக்க, நின்காதலிமார் புறமேகற்று நினக்குப் புதிதாகச்செய்த அப்புல்லுதலை யாஞ்செய்ய மாட்டேம், அதனாலெம்மைத்தொடாதே, எங்கலையை விடுவாயாகவெனக் கலவிகருதிப் புலவாநிற்றல். அதற்குச்செய்யுள்:—

தவஞ்செய்திலாதவெந்தீவினையேம்புன்மைத்தன்மை
க்கென்னா, தெவஞ்செய்துநின்றினி யின்றுனைநோவ
தெனத்தன்முத்தன், சிவன்செய்தசீரரு ளார்தில்லையூர
நின் சேயிழையார், நவஞ்செய்தபுல்லங்கண் மாட்டேந்
தொடல்விடு நற்கலையே. (௩௫௮)

பிடிவர்கற்பிற் றேடிவர்கோ	தை
ஆடவன் றன்னோ டேடியுரைத்த	து.

இ-ள். அத்தன் - உலகத் துள்ளா ரெல்லார்க்குந்தந்தை— முத்தன் - இயல்பாகவே பாசங்களினீங்கியவன்—சிவன் - எவ்

வுயிர்க்கும் எப்பொழுதும் நன்மையைச்செய்தலார்சிவன்—செய்த - அவனாற் செய்யப்பட்ட—சீரருளாா - சீரியவரு ணிறைந்த—தில்லையூர - தில்லையிலூரனே—தயஞ்செய்திலாத - முற்காலத்துத் தவத்தைச்செய்யாத—வெந்தீவினையேம் - வெய்ய தீவினையையுடையயாம்—புன்மைத்தன்மைக்கு-நின்னா லாதரிக்கப்படாத எமதுபுன்மைத் தன்மை காரணமாக—எள்ளாது - எம்மையேயிகழாது—எவஞ்செய்துநின்று - நினக்குத் துன்பத்தைச்செய்யாநின்று—இனி - இப்பொழுது—நின்னை நோவதென்-நின்னை நோதலென்னும் அதுகிடக்க—நின்சேயிழையார்- நின்னுடைய சேயிழையார்—நவஞ்செய்த - நினக்குப் புதிதாகச்செய்த புல்லங்கள் புல்லுதல்களை—மட்டேம்-யாமாட்டேம் அதனால்—நற்கலை - எமதுநல்லமேகலையை—தொடல் - தொடாதொழி—விடு - விடுவாயாக—எ-று. (௰௫௮)

நேரிசையாசிரியப்பா.

நீரரமகளிர்நெருங்குறப்புகுந்து
கண்முகங்காட்டியகாட்சியதென்னப்
பெருங்குலைமணந்தநிறைநீர்ச்சிறைப்புனன்
மணிநிறப்படாமுதுகிடையறப்பூத்துச்
சுரும்பொடுகிடந்தசொரியிதழ்த்தாமரை
கண்ணினுங்கொள்ளாதுண்ணவும்பெறாது
நிழறலைமணந்தபுனல்கிடவாது
விண்ணுடைத்துண்ணும்வினைச்சூர்கவர்ந்த
வானவர்மங்கையர்மயக்கம்போலப்
பிணர்க்கருமருப்பிற்பிதிர்படவுழக்கி
வெண்காரக்கழனிக்குருகெழப்புகுந்து
கடுக்கைச்சிறுகாயமைத்தவாற்கருப்பை

யிணையெயிறென்னவிடையிடைமுட்பயில்
குறும்புதன்முண்டகங்கருமபெனத்துய்த்துச
செங்கட்பகடுதங்குவயலூரர்க்
கருமறைவிதியுமுலகியல்வழக்குங்
கருத்துறைபொருளும்விதிப்படநினைந்து
வடசொன்மயக்கமுமவருவனபுணர்த்தி
யைந்திணைவழுவாதகப்பொருளமுதினைக்
குறுமுனிதேறவும்பெறுமுதற்புலவர்க
ளேழுமுபெயருங்கோதறபபருகவும்
புலனெறிவழக்கிற்புணருலகவாக்கு
முறறவம்பெருககுமுதற்றுபதர்க்கு
நின்றறிந்துணாத்தவுந்தமிழுபபெயாநிறுத்தவு
மெடுத்துப்பரப்பியவிமையவர்நாயகன்
மெய்த்தவககூடல்விளைபொருண்மங்கையா
முகத்தினுங்கண்ணினுமுண்டகமுலையினுஞ்
சொல்லினுந்தொடககும்புல்லமபோல
வெம்மிடத்திலதாலென்னை
தம்முளந்தவறிப்போந்ததிவ்விடனே. கூரு

———*———

நீரரமகளிர் போந்ததிவ்விடனே. பகுதி - பரத்தையிற்பிரிவு, துறை-பள்ளியிடத்தூடல். *

நீரரமகளிர்நெருங்குறப்புகுந்து
கண்முகங்காட்டியகாட்சியதென்ன

(இதனதுபதப்பொருள்)

நீரரமகளிர் - நீரில்வாழுமரமகளிர்—நெருங்குறப்புகுந்து- நெருங்கப்புகுந்து—கண்முகங்காட்டிய - கண்களு முகங்களும் காட்டுகின்ற—காட்சியதென்ன - தோற்றத்தைப்போல ;

பெருங்குலைமணந்தசிறைநீர்ச்சிறைப்புனல்
மணிநிறப்படாமுதுகிடையறப்பூத்துச்
சுரும்பொடுகிடந்தசொரியிதழ்த்தாமரை

பெருங்குலைமணந்த - பெரியகரைசெறிந்த—சிறை - சிறையுள்ள—நீர்ச்சிறைப்புனல் - நீர்த்தடாகத்தின்—மணிநிறப்படாம—மணிநிறமாகிய படாம்போர்த்த—முதுகு - முதுகில்—இடையறப்பூத்து - வெறிதிடையின்றி மலர்ந்து—சுரும்பொடுகிடந்த - வண்டுகளோடுசூழ்ந்திருந்த—சொரியிதழ்த்தாமரை - தேன்சொரியுமகவிதழ்த்தாமரைப்பூவை ;

கண்ணினுங்கொள்ளாதுண்ணவும்பெறாது
நிழறலைமணந்தபுனல்கிடவாது

கண்ணினுங்கொள்ளாது - கண்ணாலு நோக்காமல்—உண்ணவும்பெறாது - உண்ணவும் விருப்பம் பெறாமல்—நிழறலைமணந்த - குளிர்ச்சியைத் தன்னிடத்தேகொண்ட—புனல்கிடவாது - நீரிலும் படுத்திராமல் ;

விண்ணுடைத்துண்ணும்வினைச்சூர்கவர்ந்த
வானவர்மங்கையர்மயக்கம்போல

விண்ணுடைத்துண்ணும - விண்ணுலகத்தை யழித்துக்கவர்ந்த—வினை - தீத்தொழிலையுடைய—சூர் - சூரபன்மனாலே—கவர்ந்த - சிறைகோட்பட்ட—வானவர்மங்கையர் - தேவமங்கையர்களது—மயக்கம்போல - தடுமாற்றம்போல,

பிணாக்கருமருப்பிற்பிதிர்படவுழக்கி
வெண்கார்க்கழனிக்குருகெழப்புகுந்து
கடுக்கைச்சிறுகாயமைத்தவாற்கருப்பை
யிணையெயிறென்னவிடையிடைமுட்பயில்
குறும்புதன்முண்டகங்கரும்பெனத்துயத்து

பிணர் - பொருக்காகிய—சருமருபபின - சருங்கொப்புக ளால்—பிதிர்பட - சேருகும்படி—உழக்கி - கலக்கி—வெ ண்கார் - வெண்மையான கார்நெறபயிருளள—கழனி - கழனி களிடத்தே—ருருகெழ - பறவைகள சிறையடித்தெழுமாறு— புகுந்து - பாய்ந்து—கடுக்கைச் சிறுகாயமைதத - கொன்றையி னது சிறிகாய் போன்ற—வால் - வாலை யுடைய—கருபபை - கா ரெலியின்—இணையெயி றென்ன - தம்மி லொத்த பற்கள் போல—இடையிடை - நடுவேநடுவே—முட்டயில் - முள்ளுக ள்பொருந்திய—குறும்புதல் - குறியபுதலாகிய—முண்டகம் - நீர்முள்ளிச்செடியை—கருப்பென - கரும்பைபுணணுதல்போ ல—துய்த்து - தின்று,

செங்கடபகடுதங்குவயலூரர்க்
கருமறைவிதியுமுலகியலவழககுமா
கருததுறைபொருளுமவிதிபபடாமிணர்ந்து

செங்கட்பகடு - செங்கணெருமை—தங்கும - மேய்கின்ற —வயலூராககு - மருதநாட்டுத் தலைவாககு—அருமறைவிதியு ம் - எழுதறகரிய வேதவிபந்தனைகளும—உலகியல்வழக்கும - உ லகவழககமும்—கருத்துறைபொருளும - கருத்திலுளளபொரு ளும்—விதிபபடாமிணர்நது - முறைபபடத் திருவுளங்கொண்டு,

வடசொன்மயக்கமுமவருவனபுணர்த்தி
யையந்திணைவழுவாதகபபொருளமுதிணை

வடசொன்மயககமும - வடமொழிபபுணர்ச்சியும்—வருவ னபுணர்த்தி - வருவனவற்றைசசேர்த்து—ஐந்திணைவழுவாது- ஐவகைத் திணைமுறைமையும வழுவாமே—அகபபொருளமுதி ணை-அன்பினைநதிணையென முதலெடுத்த வபிாதத்தை,

குறுமுனிதேறவும்பெறுமுதற்புலவர்க
ளோெழுபெயருங்கோதறப்பருகவும

புலனெறிவழக்கிற்புணருலகவர்க்கு
முற்றவமபெருக்குமுதற்ருபதாக்கு
நின்றறிந்துணர்த்தவுந்தமிழ்ப்பெயர்நிறுத்தவு
மெடுத்துப்பரப்பியவிமையவர்நாயகன்
மெய்த்தவக்கூடல்

குறுமுனிதேறவும்- அகத்தியமுநிவன் றெளியவும்—பெறு முதல் - தலைமைபெற்ற—புலவர்களேழெழு பெயரும்—சங்கப்புலவர்களாகிய நாற்பத்தொன்பதின்மரும்—கோதற - ஐயந்திரிபின்றி - பருகவும் - உணரவும்—புலனெறி - ஐம்புலநெறியின்கண்—வழக்கில் - இயக்கத்தில்—புணர் - கலவாநின்ற—உலகவர்க்கும் - உலகவியலினாக்கும்—முற்றவம்பெருக்கும் - இளைமைதொட்டுத் தவத்தைவளர்க்காநின்ற—முதற்ருபதர்க்கு - ஐந்தவித்த முநிவரர்கரும்—நின்றறிந்து - தாநதா நிலைபெற்றுணர—உணர்த்தவும் - அறிவுறுத்தவும்—தமிழ்பபெயர்நிறுத்தவும்- தமிழெனனும்பெயனா நிலைபெறுத்தவும்—எடுத்துப்பரப்பிய-திருவாகவெடுத்துவிரித்த—இமையவர்நாயகன - தேவர்பெருமானது—மெய்த்தவம - தவத்தான் மெய்ம்மையுளள—கூடல் - மதுரையினிடத்து,

விளைபொருண்மங்கையா
முகத்தினுங்கண்ணினுமுண்டகமுலையினுஞ்
சொல்லினுநதொடக்கும்புலலம்போல

விளைபொருள் - பொருளைச் சம்பாதிக்கினற—மங்கையர்- பரத்தையர்கள்—முகத்தினும் - முகத்திலும்—கண்ணினும்- கணகளிலும்—முணடகம் - தாமரை யரும்பையொத்த—முலையினும் - முலைகளாலும்—சொல்லினும் - சொற்களாலும்—தொடக்கும் - வயபபடுத்தும்—புல்லம்போல- அபிநயம்போல,

எம்மிடத்திலதாலென்னை
தம்முளாந்தவறிப்போந்ததிவ்விடனே.

எம்மிடத்து - எம்போலியாளிடத்து—இலது - இல்லையாக—இவ்விடன் - இந்தவிடத்தில்—தம்முளம் - நமதுள்ளம்—தவறி - இடந்தெரியாமல்—போநதது - வந்தவாறு—என்னையாதோவறியேன்—எ-று.

ஊரர்க்கு விதியும் வழக்கும் பொருளும் நினைந்துபுணர்த்தி அகப்பொருளமுறைதத்தேறவும் பருகவும்உலகவர்க்குந்தாபதர்க்கும் உணாத்தவுசிறத்தவும் பரபபியநாயகன் கூடலில் பொருண்மங்கையர் புல்லம்போல எம்மிடத்திலது அற்றேல் இவ்விடத்தே யுள்ளந்தவறித் தாம்போந்த தென்னையென வினைமுடிவு செயக. (சுரு)

---

## வழிப்படுத்துரைத்தல்.

வழிப்படுத்துரைத்தலென்பது - ஓம்படுத்துரைத்ததோழி, ஆயமுமன்னையும் பின்வாராமல்.இவ்விடத்தேநிறுத்தி இவ்வூரிடத்துள்ள அலரையு மொருவாற்முனிசுகி யானும்வந்து நுங்களைக காண்பேனக, நீயிருந் திருவொடு சென்று நும்பதியிடைச் சேர் வீராமினென இருவரையும் வழிப்படுத்துக் கூறுநிற்றல். அதற்குச்செய்யுள்.—

ஈண்டொல்லையாயமுமௌவையுநீங்கவிவ் வூர்க்கௌவைதீர்த், தாண்டொல்லைகண்டிடக் கூடுகநும்மையெம்மைப்பிடித்தின், ருண்டொல்லைதீரின்பந் தந்தவன்சிற் றம்பலநிலவு, சேண்டில்லைமாநகர் வாய்ச்சென்றுசேர்க திருத்தகவே. (உகசு)

மதிநுதலியை வழிபபடுத்து ப
பதிவயிற்பெயரும் பாங்கிபகர்ந்த ஆ.

இ-ள். ஏம்மைப்பிடித்து - எம்மைவலிந்துபிடித்து—இன்றுண்டு - இன்றுண்டு—எல்லைதிர் - எல்லையைநீங்கிய—இன்பந்தந்தவன் - இன்பத்தைத்தந்தவனது—சிற்றம்பலநிலவு - சிற்றம்பல நிலைபெற்ற—சேண்டில்லை- சேய்த்தாகியதில்லையாகிய—மாநகர்வாய் - பெரியநகரிடத்து—திருத்தகச்சென்று - நீர்பொலிவுதரச்சென்று—சேர்க - சேர்வீராமின்—ஆயமு மௌவையு நீங்க - ஆயமும்மன்னையும் பின்வாராது இவ்விடத்தேநீங்க—இவ்வூர்க்கவ்வைதீர்த்து - இவ்வூரின்க ணுண்டாகிய வலரை யொருவாற்றான் விளையநீக்கி—ஆண்டொல்லை கண்டிடக்கூடுக - யானுண்டுவந்து நும்மை விளையக்காணக் கூடுவதாக—எ-று.உகச



நேரிசையாசிரியபபா.

செங்கோற்றிருவுடன்றெளிந்தறம்பெருக்கிய
மறுபுலவேந்தனுறுபடையெதிர்ந்த
கொடுங்கோற்கொற்றவனெடும்படையனைத்துஞ்
சேரவறந்ததிருத்தகுநாளி
லவன்பழிநாட்டுநெடுங்குநற்குடிகள்
கண்ணெடுகண்ணிற்கழறியபோல
வொருவரிதொருவருள்ளத்தடக்கித்
தோன்றுநகையுடன்றுண்டமுஞ்சுட்டி
யம்பறாற்றுமிவ்வூரடக்கிக்
கடல்கிடந்தன்னநினைநினையாய
வெள்ளமுமற்றையர்கள்ளமுங்கடந்து
தாயவர்மயங்குந்தனித்துயர்சிறுத்திப்
பறவைமக்களைப்பரியுநர்க்கொடுத்துக்

இடைப்பல்வல்யானே நம்மைத்தழைத்தெழு
தாளியுங்கொன்றையுந்தழைத்தலின்முல்லையும்
பாந்தளுந்தரக்கும்பயிறலிற்குறிஞ்சியு
முடைத்தலையெரிபொடியுடைமையிற்பாலையு
மானமயுஞ்சலமுமேவலின்மருதமுங்
கடுவுஞ்சங்குமொளிர்தலினெய்தலு
மாகததனதுபேரருண்மேனியிற்
றிணையைந்தமைதலிணையிலிநாயகன்
வருந்தொழிலனைத்தும்வளர்பெரும்பகலே
யெரிவிரிந்தன்னவிதழ்ப்பஃறாமரை
யருண்முகத்திருவொடுமலர்முகங்குவிய
மரகதப்பாசடையிடையிடைநாப்ப
ணீலமுமணியுமிளாடுதொன்ன
வண்டொடுகுமுதமலர்ந்திதழ்விரிப்பக்
குருகுஞ்சேவலும்பார்ப்புடன்வெருவிப்
பாசடைக்குடம்பையூடுகண்படுப்பத்
துணையுடன்சகோரங்களியுடன்பெயர்ந்து
விடுமமுதருந்தவிண்ணத்தணைக்கச்
சுரிவளைச்சாத்துநிறைமதிதவழு
மெறிதிரைப்பழனக்கூடற்
செறிகவின்றம்மதிருவொடும்பொலிந்தே. உரு

—*—

செங்கோற்றிருவுடன் திருவொடும்பொலிந்தே. பகுதி- உடன்போக்கு, துறை - வழிப்படுத்துரைத்தல். *

செங்கோற்றிருவுடன்றெளிந்தறம்பெருக்கிய
மறுபுலவேந்தனுறுபடையெதிர்ந்த
கொடுங்கோற்றொற்றவன்

(இதனதுபதபபொருள்.)

செங்கோல் - செங்கோலாகிய—திருவுடன் - திருமகளுட னே—தெளிந்து - மநுநூலாய்ந்து—அறம்பெருக்கிய—அரசிய ற்றருமத்தை விருத்திசெய்த—மறுபுலவேந்தன் - வேற்றுப்புல த்தரசனது—உறுபடை - பெருஞ்சேனையால்—ஏதிர்ந்த - எதிர் க்கப்பட்ட—கொடுங்கோற்கொற்றவன் - கொடுங்கோ லரசன து,

னெடும்படையனைத்துஞ்
சேரவறந்ததிருத்தகுநாளி
லவன்பழிநாட்டுநடுங்குநற்குடிகள்

நெடும்படையனைத்தும் - அளவிறந்தசேனைமுற்றும்—சே ரவறந்த - ஒருசேரமாய்ந்திட்ட—திருத்தகுநாளில் - நன்மைபய க்கு நாளையில்—அவன் - அககொடுங்கோன் மன்னனது—பழி நாட்டு - பழிபட்டநாட்டிலுள்ள—நடுங்குநற் குடிகள் - அவன து கொடுமையானடுங்கின நல்ல குடிகள்,

கண்ணொடுகண்ணிற்கழறியபோல
வொருவரினொருவருள்ளத்தடக்கித்
தோன்றுநகையுடன்றுண்டமுஞ்சுட்டி
யம்பறூற்றுமிவ்வூரடக்கிக்

கண்ணொடுகண்ணில்-பிறர்கண்களோடு தமது கண்களால்—கழறியபோல- பேசிக்கொண்டதுபோல—ஒருவரினொருவர்-ஒரு வரோ டொருவர்சொல்லி—உள்ளத்து-தத்தமுள்ளத்தி னிடத் தே—அடக்கி - வெளிவிடாதடக்கி—தோன்றுநகையுடன்- வெ ளிப்படாதசிரிப்புடன்—துண்டமுஞ்சுட்டி - மூக்கின்மேல் விர லிட்டுக்குறித்து—இவ்வூர்தூற்றும் - இவ்வூரார் புறங்கூறு கின் ற—அம்பலடக்கி - அலர்தூற்றலையடக்கி,

கடலகிடநதனனகிளைகிளையாய
வெள்ளமுமற்றையர்களளமுங்கடந்து

கடல்கிடந் தன்ன - கடலிருந்தாலொத்த—கிளைகிளை- பெருங்கூட்டமாகிய—ஆயவெள்ளமும் - மகளிர்கூட்டத்தையும்—மற்றையர் - பிறசுற்றத்தாரது—கள்ளமும- கரவடத்தையும்—கடந்து - நீங்கி,

தாயவாமயங்குநதனிததுயாசிறுத்திப
பறவைமககளைபபரியுநாககொடுத்துக
கிடைபபல்வல்யானேநும்மை

தாயவர் - நமதுதாய்மார்—மயங்கும் - நின்னைக் குறித்து மயங்கும்—தனித்துயர்சிறுத்தி - பெருந்துன்பத்தை ஆற்றி—பறவைமக்களை - கிள்ளைமுதலிய பறவைப பார்ப்புகளை—பரியுநர் - நம்போற் பரிவுள்ளவரிடத்து—கொடுத்து - வளர்க்கும்படி சோப்பித்து—வல் - விரைவில்—நும்மை-நுங்களிடத்தே—யானேகிடைப்பல் - யானேவந்து சேருவேனாக,

தழைத்தெழு
தாளியுங்கொன்றையுந்தழைத்தலின்முல்லையும்
பாந்தளுந்தரக்கும்பயிறலிற்குறிஞ்சியும்

தழைத்தெழு - தளிர்த்தெழுந்த—தாளியும் - தாளிமலரும்—கொன்றையும் - கொன்றைமலரும்—தழைத்தலின் - தழைத்திருத்தலால்—முல்லையும் - முல்லைநிலமும்—பாந்தளும் - பாம்பும்—தரக்கும் - புலியும்—பயிறலில் - கூடியிருத் தலினால்—குறிஞ்சியும் - குறிஞ்சிநிலமும்,

முடைத்தலையெரிபொடியுடைமையிற்பாலையு
மாமையுஞ்சலமுமேவலின்மருதமுங்

முடைத்தலை - நிணாற்றம வீசுகின்ற—எரி - நெருப்பும்—பொடி - சாம்பரும்—உடைமையில் - உண்டாயிருத்தலால்—பாலையும - பாலைநிலமும்—ஆமையும் - ஆமையும்—சலமும் - நீரும்—மேவலின் - பொருந்தியிருத்தலால்—மருதமும - மருதநிலமும்,

கடுவுஞ்சங்குமொளிர்தலினெய்தலு
மாகத்தனதுபேரருணமேனியிற்
றிணையைந்தமைத்த

கடுவும - விடமும்—சங்கமும் - சங்கங்களும்—ஒளிர்தலின் - விளங்குதலால்—நெய்தலும் - நெய்தனிலமும—ஆக - ஆக—தனதுபேரருணமேனியில் - தன்னுடைய பேரருளாகிய தன்றிருமேனியில்—திணையைந்து அமைத்த - ஐந் திணைகளையுமேற்ற,

இணையிலிநாயகன்
வருந்தொழிலனைத்தும்வளர்பெரும்பகலே
யெரிவிரிந்தன்னவிதழ்பபஃறாமரை
யருண்முகத்திருவொடுமலர்முகங்குவிய

இணையிலி - ஒப்பில்லாதவனாகிய—நாயகன் - முதல்வனது—வருந்தொழிலனைத்தும்- நடத்துந்தொழில்யாவும்—வளர்- வளர்தற்கிடமாகிய—பெரும்பகலே - பெரியமத்தி யானத்திலே—எரிவிரிந்தன்ன - நெருப்பு விரிந்தாற்போல—இதழ்பபஃறாமரை - இதழையுள்ள பலதாமரை மலர்கள்—அருண்முகத் திருவொடு—முகத்தி லருணிறைந்த திருமக ளுடனே—மலர்முகங்குவிய - தமது முகமலர்ச்சிகூம்பவும்,

மரகதப்பாசடையிடையிடைநாப்ப
ணீலமுமணியுநிரைகிடந்தென்ன

வண்டொடுகுமுதமலர்ந்திதழ்விரிபபக்

மரகதப்பாசடை - மரகத மணிபோன்ற பச்சிலைகளின்— இடையிடைநாப்பண் - நடுவேநடுவே—நீலமு'மணியும்-நீலமணியும் மாணிக்கமணியும்—கிளாகிடந்தென்ன - அணிபெறக கிடந்தாலொத்த—வண்டொடுகுமுதம் - வண்டுடனே செவ்வல்லி மலர்கள்—மலர்ந்திதழ்விரிபப - முகைவிண்டிதழ்களை விரிபபவும,

குருகுஞ்சேவலும்பார்ப்புடன்வெருவிப
பாசடைகுடம்பையூடுகணபடுபப

குருகுஞ்சேவலும்- குருகுகளுஞ் சேவல்களும்—பாரபபுடன்-தத்தங்குஞ்சுகளுடனே—வெருவி - பொழுதுபோயிற்றென றஞ்சி—பாசடைகுடம்பையூடு - பசசிலைகளாகியகூடுகளிடத்தே—கண்படுபப - கண்ணுறங்கவும்;

துணையுடனசகோரங்களியுடனபெயாந்து
விடுமமுதருந்தவிணணத்தணககச்

சகோரம் - சகோரப்பறவைகள்—துணையுடன் - தத்தம் பேடுடனே—களியுடன்பெயர்ந்து - மகிழ்ச்சியாய்ப்பறந்து—விடுமமுது - உமிழாநின்ற கிரணவமிர்தத்தை—அருந்த - உண்ணும்படி—விணணத்து - ஆகாயத்தில்—அணகக - அண்ணாந்திடவும்.

சுரிவளைசசாத்துநிலைறமதிதவழு
மெறிதிரைபபழனக்கூடற்
செறிகவின்றம்மதிருவொடும்பொலிந்தே.

சுரிவளைசாத்து - முகஞ்சுரிந்த சங்கினாயாகிய மூத்தவரிசைகளினின்றும்—நிறைமதிதவழும் - சந்திரிகைநிறைந்த நிலாத்தவழ்கின்ற—எறிதிரை - அலையெறிகின்ற நீரையுடைய—

பழனக் கூடல்-வயல்சூழ்ந்த மதுரையினிடத்து—திருவொடும் பொலிந்து - நீவிர் சுகமாகச்செழித்து—செறிகவின்று - இந்நாளிற் சேர்ந்துவாழ்க—எ-று.

ஒருவரினொருவ ருள்ளத்தடக்கி ஊரடக்கி வெள்ளமுங் கள்ளமுங்கடந்து தனித்துயராற்றிக்கொடுத்து யானே நும்பாற்கிடைப்பன் இணையிலிநாயகன் பழனக் கூடலில் திருவுடன் பொலிந்திந் நாணீவிர்செறிகவென வினைமுடிவுசெய்க. (௬௬)

---

கடலிடைவைத்துத்துயரறிவித்தல்.

கடலிடைவைத்துத் துயரறிவித்தலென்பது - தலைமகளிரவுறுதுயரம், தலைமகன் சிறைப்புறமாக, இவள்வாட நீயிரையாநின்றாய் இதுநினக்கு நன்றோவெனத் தோழி, கடலொடு புலந்து கூறாநிற்றல். அதற்குச்செய்யுள்.—

சோத்துன்னடியமென்றோனைக்குழுமித்தொல்வானவர்சூழ்ந்,தேத்தும்படிநிற்பவன்றில்லையன்னாளிவடுவளவார்த்துன்னமிழ்துந்திருவுமதியுமிழந்தவநீ, போர்த்துமிரைப்பொழி யாய்பழிநோக்காய் பெருங்கடலே. (௬௭)

எறிகடன்மேல்வைத் திரவருதுயரம்
அறைகழலவற் கறியவுரைத்தது.

இ-ள். பெருங்கடலே - பெருங்கடலே—ஆர்த்து - முற்காலத்துமிவ்வாறொலித்து—உன்னமிழ்தும் - உன் னமிர்தத்தையும்—திருவும் - திருவையும்—மதியும் - திங்களையும்—இழந்து - இழந்துவைத்தும்—போர்த்துமவம் - பெயர்த்து மொருபயனின்றியே—சோத்துன் னடியமென்றோனா - சோத்தமுன் னடியமென்றொருகாற் சொன்னானை—குழுமித்தொல் வானவர் சூழ்ந்

து - பழையராகிய வானவர்குழுமிப் பரிவாரமாச் சூழ்ந்துநின் று—ஏத்தும்படி - ஏத்தும்வண்ணம்—நிற்பவன் - நிற்குமவன து—தில்லையன்னுள் - தில்லையன்னுளாகிய—இவள்துவள - இ வள்வாட—இளைப்பொழியாய் - இளையாநின்ருய்—பழிநோக்கா ய் - காரணமின்றிப் பிறரை வருத்துதலான் வரும்பழியையும் நோககுகின்றிலே நினக்கிதுநன்றே—எ-று. (கஎரு)

நேரிசையாசிரியப்பா.

இருநிலந்தாங்கியவலிகெழுநோன்மைப்
பொன்முடிச்சயிலக்கணவற்புணர்ந்து
திருவெனுங்குழவியுமமுதெனும்பிள்ளையு
மதியெனுமகவுமலருலகறியக்
கண்ணெடுமுத்தங்கலுழ்ந்துடல்கலங்கி
வாய்விட்டலறிவயிறுநொந்தீன்ற
மனனெழுவருத்தமதுடையையாகலிற்
பெருமயலெய்தாநிறையினளாக
வென்னெருமயிலையுநின்மகட்கொண்டு
தோன்றிநின்றழியாத்துகளறுபெருந்தவ
நிதியெனக்கட்டியகுறுமுனிக்கருளுடன்
றாளமுஞ்சந்துமெரிகெழுமணியு
முடங்குளையகழ்ந்தகொடுங்கரிக்கோடு
மகிலுங்கனகமுமருவிகொண்டிறங்கிப்
பொருநையங்கன்னிக்கணியணிபூட்டுஞ்
செம்புடற்பொதிந்ததெய்வப்பொதியமு
முவட்டாதமையாவுணர்வெனும்பசியெடுத்
துள்ளமுஞ்செவியுமுருகிநின்றுண்ணும்
பெருந்தமிழமுதும்பிரியாதுகொடுத்த
தோட்ணிகடுக்கைக்கூடலெம்பெருமா

னெவ்வுயிரிருந்துமவ்வுயிரதற்குத
தோன்றுதடங்கியதொன்மைத்தென்ன
வார்த்தெழுபெருங்குரலமைந்துநின்றொடுங்கிநின்
பெருந்தீக்குணனுமொழிந்துளங்குளிரு
மிப்பெருநன்றியின்றெறகுதவுதி
யெனிற்பதம்பணிகுவலன்றேநன்கமர்
பவளவாயுங்கிளர்பச்சுடம்பு
நெடுங்கயல்விழியுநிறைமலைமுலையு
மாசறப்படைத்துமணியுடனிறத்த
பெருமுகில்வயிறளவூட்டித்
திருவுலகளிக்குங்கடன்மடமகளே. ௬௭

---

இருநிலந்தாங்கிய கடன்மடமகளே. பகுதி - இரவுக்குறி, துறை - கடலிடைவைத்துத்துயரறிவித்தல். *

நன்கமர்
பவளவாயுங்கிளர்பச்சுடம்பு
நெடுங்கயல்விழியுநிறைமலைமுலையு
மாசறப்படைத்து

(இதனதுபதப்பொருள்)

நன்கமர் - நன்மையாகப்பொருந்திய—பவளவாயும் - பவளமாகிய வாயும்—கிளர் - ஒளிமிகுந்த—பச்சுடம்பும் - மிக்க பசுமையாகிய மேனியும்—நெடுங்கயல்விழியும் - நீண்டகயலாகியகண்ணும்—நிறைமலைமுலையும் - பெரிய மலைகளாகியமுலைகளும்—மாசறப்படைத்து - குற்றமறப்படைத்து ;

மணியுடனிறத்த
பெருமுகில்வயிறளவூட்டித்
திருவுலகளிக்குங்கடன்மடமகளே.

மணியுடன் - மணிகளுடனே—சிறந்த - நன்னிறத்தையுடைய—பெருமுகில் பெரியமுகிலை—வயிறளவு-வயிறுநிரம்ப—ஊட்டி - நீராகிய வமுதத்தையூட்டி—திரு - வளப்பத்தை—உலகளிக்கும்-உலகத்துக்குக் கொடுக்காநின்ற—கடன்மடமகளே-கடலாகிய மடந்தையே ;

இருநிலந்தாங்கியவலிகெழுநோன்மைப்
பொன்முடிச்சயிலக்கணவற்புணர்ந்து

இருநிலந்தாங்கிய - பெரிய பூமியைத்தாங்கிய—வலிகெழு-வலிமையுள்ள—நோன்மை - அசைவில்லாத—பொன்முடி - பொன்முடியையுடைய—சயிலக்கணவன் - மந்தரமென்னுங்கணவனை—புணர்ந்து - கூடி ;

திருவெனுங்குழவியுமமுதெனும்பிள்ளையு
மதியெனுமகவுமலருலகறிய

திருவெனுங் குழவியும் - திருமகளாகிய பெண்ணையும்—அமுதெனும் - அமுதமாகிய—பிள்ளையும் - பிள்ளையையும்—மதியெனு மகவும் - சந்திரனாகிய மகவையும்—மலருலகறிய - பரந்தவுலகமறியும்படி ;

கண்ணொடுமுத்தங்கலுழ்ந்துடல்கலங்கி
வாய்விட்டலறிவயிறுநொந்தீன்ற
மனனெழுவருத்தமதுடையையாகலில்

கண்ணொடு - கண்ணில்—முத்தங்கலுழ்ந்து- முத்தங்கலுழ—உடல்கலங்கி - உடல்நொந்து—வாய்விட்டலறி - வாய்திறந்தலறி—வயிறுநொந்து - கருப்பவேதனை யடைந்து—ஈன்ற - பெற்றதனால்—மனனெழுவருத்தமது-மனத்திலுண்டான வருத்தத்தை—உடையையாகலில் - உடையளாயிருக்கின்றனை யாதலால்,

பெருமயலெய்தாநிறையினளாக
வென்றொருமயிலையுநின்மகட்கொண்டு
தோன்றிநின்றழியாத்துகளறுபெருந்தவ
நிதியெனக்கட்டியகுறுமுனிக்கு

பெருமயலெய்தா - மிக்க மயகத்தைப் பொருந்தாத—நி றையினளாக - மாட்சிமை யுடையளா யிருககுமாறு—எனறொருமயிலையும் - மயில்போன்ற வெனதொரு பெண்ணையும்—நின் மகட்கொண்டு - நின்மகளாகவெண்ணி—தோன்றிநின்றழியா - பிறந்திருந் திறவாமைக்குக்காரணமான—துகளறுபெருந்தவம் - காமாதிகளாகியதுகளற்றமாதவமே—நிதியெனககட்டிய-தனது நிக்ஷேபமாகச் சேர்த்துள்ள—குறுமுநிக்கு - அகததியனாககு,

அருளுடன்
றாளமுஞ்சந்துமெரிகெழுமணியு
முடங்குளையகழ்ந்தகொடுங்கரிகோடு
மகிலுங்கனகமுமருவிகொண்டிறங்கிப
பொருநையங்கன்னிககு

அருளுடன் - அன்புடனே—தாளமும் - முத்தங்களையும் —சந்தும் - சந்தனத்தையும்—எரிகெழுமணியும் - ஒளிபொருந் திய மாணிக்கங்களையும்—முடங்குளையகழ்ந்த - சிங்கத்திறைபி ளக்கபபட்ட—கொடுங்கரிக்கோடும்- யானையினதுகோணியகொ ம்புகளையும்—அகிலும் - அகிலையும்—கனகமும் - பொன்னையும் —அருவிகொண்டு - அருவிநீராற்கைக்கொண்டு—இறங்கி - இ ழிந்து—பொருநையங்கன்னிக்கு - பொருநையாகியதிருமகட்கு;

அணியணிபூட்டுஞ்
செம்புடற்பொதிந்ததெய்வப்பொதியமு
மூவட்டாதமையாவுணர்வெனும்பசியெடுத்

துள்ளமுஞ்செவியுமுருகிநின்றுண்ணும்
பெருநதமிழமுதும்பிரியாதுகொடுத்த
தோடணிகடுகஙைகககூடலெம்பெருமான்

அணியணிபூட்டும் - அழகிய வாபரணங்களைத் தரிக்கரநின்ற—செம்புடற்பொதிந்த-தாம்பரவுடலான் மூடப்பெற்ற—தெய்வப்பொதியமும - தெய்வத்தன்மையுள்ளபொதியமலையும்—உவட்டாது - தெவிட்டாமல்—அமையாவுணர்வெனும்- அடங்காதவறிவெனும்—பசியெடுத்து - பசிதோன்றி —நின்று- நிலைத்து—உள்ளமுருகி - மநதுருகி—செவியுணனும் - செவியாகியவாயாலுண்ணத்தகக—பெருந்தமிழமுதும் - பெருமையாகியதமிழென்னுமமுதத்தையும்—பிரியாதுகொடுத்த - பிரிவற்றிருக்குமாறுதந்தருளிய—தோடணிகடுகைகை - இதழ்நெருங்கியசங்கத்தோட்டினையுங்கொன்றைமலரையுமணிந்த—கூடலெம்பெருமான - மதுரைநாயகனது,

எவ்வுயிரிருந்துமவவுயிரதறகுத்
தோன்றுதடங்கியதொன்மைத்தென்ன
வார்த்தெழுபெருங்குரலமைந்துநின்றொடுங்கிநின்
பெருந்தீக்குணனுமொழிந்துளங்குளிரு
மிபபெருநன்றி

எவ்வுயிரிருந்தும் - எவ்வகைபபட்ட வுயிரிடத்துங் கலந்திருந்தும்—அவ்வுயிர் - அந்தவுயிர்கள்—அதற்கு - அத்தொன்மையை யறியும்படி—தோன்றுதடங்கிய - வெளிப்படாதடங்கிய—தொன்மைத்தென்ன - அறுதித்தன்மைபோல—ஆர்த்தெழு - ஆரவாரித்துமேலெழுகின்ற—பெருங்குரலமைந்துநின்று - பெருங்குரலடங்கி—ஒடுங்கி- தணிந்து—நின்பெருந்தீக்குணனும் - உனது மிக்க கொடுங்குணனும்—ஒழிந்து - நீங்கி—உளங்கு

ளிரும் - என்னுளங்குளிரத்தக்க—இப்பெருநன்றி - இந்தப்பே ருதவியை,

> இன்றெற்குதவுதி
> யெனிற்பதம்பணிகுவலன்றே

இன்று - இப்பொழுது—எற்கு - எனக்கு—உதவுதியேல்- தருவாயெனின்—நின்பதம்பணிகுவல் - நின்பாதம் பணிவேனு க—எ-று. நின்று-அன்று-ஏ-அசைநிலை.

கடன்மடமகளோ புணர்ந்து உலகறிய கலுழ்ந்து கலங்கி அலறி நொந்து குழவியும்பிள்ளையும் மகவுமீன்ற வருத்தமுடை யையாதலால் நிறைபயினளாக என்மயிலையு நினமகளாக்கொண்டு கூடற்பெருமானது தொன்மைதனை குரலமைந்தொடங்கி நீகுணமொழிந்துளங்குளிரும் பெருநன்றியுதவுதியெனில் நின் பதம்பணிகுவலெனவினைமுடிவுசெய்க (௬௭)

---

## பிரிவுணர்த்தல்.

பிரிவுணர்த்தலென்பது - ஐவகைப்புணர்ச்சியும்பெற்றுப்பு ணர்வதன்முன்னும் புணர்ந்தபின்னும் ஓதுதவன்பினுய் நின்ற தலைமகன் பிரியுமாறெனனையெனின், இப்புணர்ச்சி நெடுங்கால ஞ்செல்லக்கடவதாக இருவரையுங் கூட்டியதெய்வந் தானேபிரி யாமற்பிரிவிக்கும், அது பிரிவிக்குமாறு, தலைமகன் தனதாதரவி னு னலம்பாராட்டக் கேட்டு, எம்பெருமான் முன்னின்று வாய் திறந்து பெரியதோர் நாணினமைசெய்தேனெனத் தலைமகள் நா ணிவருந்தாநிற்ப, அதுகண்டு இவள் வருந்துகின்றது யான்பிரி வேனுகநினைந் தாகவேண்டுமென் றுட்கொண்டு, அவளுககுத்தா ன் பிரிவின்மைகூறுநிற்றல். அதற்குச்செய்யுள்.—

சிந்தாமணிதெண்கடலமிர்தந்தில்லையானருளால்
வந்தாலிகழப்படுமேமடமான்விழிமயிலே
யந்தாமரையன்னமேநின்னையானகன்றாற்றுவனே
சிந்தாகுலமுற்றென்னேயென்னைவாட்டந்திருத்துவதே

பணிவளரல்குலைப் பயிரப்புறுத் தி
பிணிமலர்த்தாரோன் பிரிவுணர்த்திய து.

இ-ள். சிந்தாமணி - ஒருவன் றவஞ்செய்து பெறுஞ்சிந்தாமணியும்—தெண்கடலமிர்தம் - தெளிந்த கடலினமிர்தமும்—தில்லையானருளால் - வருத்தமின்றித் தில்லையானருளால்—வந்தால் - தாமேவந்தால்—இகழப்படுமே - அவை அவனு லிகழப்படுமோ—மடமான்விழிமயிலே - மடமானவிழிபோலும் விழியையுடையமயிலே—அந்தாமரை யன்னமே - அழகிய தாமரைக்கணவாழுமன்னமே—நின்னையானகன்றாற்றுவனே - நின்னையான்பிரிந் தாற்றியுளனாவனோ—சிந்தாகுலமுற்று - சிந்தையின் மயக்கமுற்று—என்னைவாட்டந் திருத்துவது - என்னைவாடுவது—என்னே - என்னோ—எ-று. (௬௨)

நேரிசையாசிரியப்பா.

நிலையுடைப்பெருந்திருநோபடுகாலைக்
காலாறறுத்துக்கனன்றெதிர்கறுத்து
நனிநிறைசெல்வநாடுநன்பொருளு
மெதிர்பெறிற்கண்சிவநதெடுத்தவைகளைந்துந்
தாமரைநிதியும்வால்வளைத்தனமு
மில்லம்புகுதரிலிருங்கதவடைத்து
மரியயனமரர்மலைவடமபூட்டிப்
பெருங்கடலவயிறுகிடங்கலக்கடைந்த
வமுதமுட்கையிலுதவுழியூற்றியு
மெய்யுலகிரண்டினுட்செயகுருளோ

லெழுகதிர்விரிக்குமணிகெழுதிருந்திழை
நிற்பிரிவுள்ளுமனனுளனுகுவன்
முழுதுறநிறைந்தபொருண்மனநிறுத்திமுன்
வேடந்துறவாவிதியுடைச்சாத்திய
னருட்கணாகாணுவன்பெனும்பெருங்கடல்
பலநாட்பெருகியொருநாளுடைந்து
கரைநிலையின்றிக்கையகன்றிடலு
மெடுத்தடைகன்மலர்தொடுத்தவைசாத்திய
பெரொளியிணையாக்கூடன்மாமணி
குலமலைக்கன்னியென்றருள்குடியிருக்கும்
விதிநிறைதவறுவொருபங்குடைமையும்
பறவைசெல்லாதுநெடுமுகடுருவிய
சேகரத்துறங்குந்திருநதித்துறையு
நெடும்பகலூழ்நினைவுடனீந்தினு
மருங்கரையிறந்தவாகம்க்கடலு
மிளங்கோவினர்களிரண்டறிபெயரு
மன்னமும்பன்றியுமொல்லையினெடுத்துப்
பறந்துமகழ்ந்தும்படியிதுவென்று
தறிவகன்றுயர்ந்தகழன்மணிமுடியு
முடைமையன்பொற்கழல்பேணி
யிடையலர்போலவருண்மனந்திரிந்தே. ௬அ

———*———

நிலையுடைப்பெருந்திரு வருண்மனந்திரிந்தே. பகுதி-இயற்கைபுணர்ச்சி, துறை - பிரிவுணர்த்தல். *

எழுகதிர்விரிக்குமணிகெழுதிருந்திழை

(இதனதுபதபொருள்.)

எழுகதிர் - உதயஞ் செய்கின்ற சூரியகிரணங்களை—விரிக்கும் - பூப்புகின்ற—மணிகெழு - மாணிக்கங்குயிற்றிய—திருந்

திழை - திருந்தியவணிகளையுடையாய, (திருந்திழையெனப தண்மைவிளி)

நிலை புடைபபெருந்திருநோபடுகாலைக்
காலாற்றடுதலுக்கனன்றெதிர்கறுத்தும்

நிலையுடை - நிலைமையுள்ள—பெருந்திரு - பெருஞ்செல்வமானது—நோபடுகாலை - கிடைத்தகாலத்து—காலாற்றடுத்து-அதனைக காலாற்றள்ளி—எதிர் - எதிராக—கனன்று - அழன்று—கறுத்தும - கோபித்தும்,

நனிசிறைசெலவநாடுநன்பொருளு
மெதிர்பெறிற்கணசிவந்தெடுத்தவைகளைந்தும்

நனிசிறை - ஒழியாதுநிரமபிய—செல்வநாடும் - வளப்பத்தைத்தருகின்ற நாடும்—நன்பொருளும் - அதனை யாளுதற்குரிய கருவிகளும—எதிர்பெறில் - நேரிடின்—கண்சிவந்தெடுத்தவைகளைந்தும் - அவையவற்றைமுனிந்து எடுத்தெறிந்தும்,

தாமரைநிதியும்வால்வளைத்தனமு
மிலலம்புகுதரிலிருங்கதவுடைத்தும்

தாமரைநிதியும - பதுமநிதியும்—வால்வளைத்தனமும்- சங்கநிதியும்—இல்லமபுகுதரில் - வீடுதேடிவரின்—இருங்கதவடைத்தும் - கதவைமூடித்தடுத்தும்,

அரியயனமரர்மலைவடம்பூட்டிப்
பெருங்கடல்வயிறுகிடங்கெழகடைந்த
வமுதமுட்கையிலுதவுழியூற்றியும்

அரி - திருமாலும்—அயன் - பிரமனும்—அமரர் - தேவர்களும்—மலை - மந்தரமென்னு மலையைநட்டு—வடம்பூட்டி - வாசுகியென்னும் வடத்தைப்பூட்டி—பெருங்கடல் - பெரியகடலி

னது—வயிறு - வயிறுனது—கிடங்கெழ - பள்ளம்படுமாறு—கடைந்த - கடைந்ததாலுண்டான—அமுதம - அமுதமானது—உட்கையில் - உள்ளங்கையில்—உதவுழி - கிடைகருங்காவ- ஊற்றியும் - அதனைத் தனையிற்கவிழ்த்தும்,

மெய்யுலகிரண்டினுட்செய்குநருளரேல்

மெய்யுலகிரண்டினுள்- மெய்ம்மையுள்ளவிண்ணுமண்ணுமாகிய விரண்டுலகத்திலும்—செய்குநருளரேல் - செய்தாருணடாயிருந்தால்,

முழுதுநநிறைந்தபொருணமநிறுத்திமுன்
வேடந்துறவாவிதியுடைச்சாக்கிய
னருட்கணகாணுவன்பெனும்பெருங்கடல்
பலநாட்பெருகியொருநாளுடைநது
கணநிலையின்றிக்கையகன்றிட லும்

முழுதுறநிறைந்த - உள்ளுமபுறம்புமாக எங்குநிறைநதுள்ள—பொருள - சிவமெனும்பொருளை—மநநிறுத்தி - சித்தத்தின்கண்ணே நிலைபெறவைத்து—முன்-ஆதியிலுள்ள—வேடந்துறவா-சமணர்க்குரிய வேடத்தைக்கைவிடாத—விதியுடை-முறைமையையுடைய—சாககியன்- சாக்கியநாயனுர—அருட்கணகாணு-அருளாகியகணயைக்காணப்பெற்று—அன்பெனும்பெருங்கடல் - அன்பாகியபெருங்கடலானது—பலநாட்பெருகி-அநேகநாளாகப் பெருக்கெடுத்து—ஒருநாளுடைந்து- ஒருநாளுடைபட்டு—கணநிலையின்றி - கணையாயினுநிலைபெறுமல்—கையகன்றிடலும் - செயலற்றுச்செல்லுதலும்,

எடுத்தடைகன்மலர்தொடுத்தலைசாத்திய
பேரொளியிணையாக்கூடன்மாமணி
குலமலைக்கன்னியென்றருள்குடியிருக்கும்

விதிசிறைதவருவொருபங்குடைமையும்
பறவைசெல்லாதுநெடுமுகடொருவிய
சேகரத்திறங்குந்திருநதித்துறையு
நெடும்பகலூழிசினைவுடனீந்தினு
மருங்கணையிறந்தவாகமக்கடலும்

எடுத்தடை - எடுத்துச்சோத்துவைத்த — நன்மலரவை - நல்லாகியமலர்களை — தொடுத்துச்சாத்திய - அடுக்காகவரிசிசித்த — இணையா - ஒப்பில்லாத — பேரொளி - பேரொளியாகிய — கூடன்மாமணி - மதுரையிலுள்ளமாணிக்கம் — குலம் - மேன்மையாகிய — மலைமகன்னியென்று - மலைமகளென்றுசொல்லப்பட்டு — அருள் - தனதுகருணையானது — குடியிருக்கும் - பிரியாதிருக்கின்ற — விதி - வேதத்தால்விதிக்கப்பட்ட — சிறைதவரு - விபுத்துவந்தவருத — ஒருபங்குடைமையும் - ஒருபாகமுடைய தன்மையும் — பறவைசெல்லாது - பறவைகள்செல்லாமல் — நெடுமுகடு - நெடியவாகாயமுகட்டை — ஒருவிய - கடந்தப்பாற்சென்ற — சேகரத்து - திருமுடியில் — இறங்கும் - இறங்கித்தங்கிய — திருநதித்துறையும - கங்காதீரமும — நெடும்பகலூழி - அநேகவூழிகாலங்களை — சினைவுடனீந்தினும் - சினைப்புடனே கடந்தாலும் — அருங்கணையிறந்த - அருமையாகிய கணைகாணக் கூடாத — ஆகமக்கடலும் - ஆகமசமுத்திரமும்,

இளங்கோவினர்களிரண்டறிபெயரு
மன்னமும்பன்றியுமெரில்லையிநெடுத்துப்
பறந்துமகழ்ந்தும்

இளங்கோவினாகள - இளவரசராகிய — இரண்டறிபெயரும் - படைப்பளிப்பென்னுந் தொழிலறிந்தவிருவரும் — அன்னமும்பன்றியுமெடுத்து - அன்னமாகவும் பன்றியாகவும் உருவெ

டுத்து—ஒல்லையிற்பறந்துமகழ்ந்தும் - காலந்தாழ்க்காமல் விண்ணிற்பறந்து மண்ணைப்பிளந்தும ;

படியிதுவென்று
தறிவகன்றுயர்ந்தகழன்மணிமுடியு
முடைமையன்

படியிதுவென்று - அளவு இதுவாமென்று—அறிவகன்று - அறியப்படாமல—உயர்ந்த - மேலுங்கீழு மூடுருவிய—கழன்மணிமுடியும் - திருவடியும திருமுடியும—உடைமையன் - உடையவனது;

(மணியென்பதனைக் கழலுக்குங்கூட்டுக)

பொற்கழல்பேணி
யடையலர்போலவருணமனந்திரிகதே
நிற்பிரிவுள்ளுமனனுளனாகுவன்

பொற்கழல்பேணி- பொன்னடியையருச்சித்து—அருள்திரிந்து - அருட்பேறுதிரிந்து—அடையலாமனம்போல- அடையாதார்மனம்போல—நிற்பிரிவு - நின்னைப்பிரிதலுக்கு—உள்ளும் - நினையாநின்ற—மனனுளனாகுவன் - எண்ணமுடையேனாவேனாக—எ-று.

திருந்திழையே - பெருந்திருவை கறுத்தும் நாடும் பொருளும்பெறின் கணைசிவந்து களைந்தும் நிதியுந்தனமும புகின் கதவடைத்தும் அமுதமுதவுழி யூற்றியும் செய்தாருளரோல் கூடன் மாமணியாகிய வுடைமையன் கழல்பேணி அடையலரது அருள் திரிந்த மனம்போல நிற்பிரிவுள்ளு மனனுளனாவேனென வினைமுடிவுசெய்க. (சுஅ)

## ஊடனீடவாடியுரைத்தல்.



ஊடனீடவாடியுரைத்தலென்பது - தணிககத் தணியாது மிகுத்துரைத்துத் தலைமகள் மேன்மேலூடாநிற்ப, அன்று அம்மலையிடத்துத் தன்னை யெய்துதற்கோருபாயமின்றி வருந்தாநிற்ப யானுய்யுமவண்ணந் தன்னிணை மலர்க்கண்ணினது இனியநோக்கத்தைத் தந்தருளி என்னைத் தனவயமாக்கிய நம்பெண்ணமுதம் அதுவன்று, இது நம்மை வருத்துவதோர் மாயமாமெனத் தன்னெஞ்சிற்குச்சொல்லி ஊடனீடத் தலைமகன் வாடாநிற்றல். அதற்குச்செய்யுள்.—

திருந்தேனுயநின்ற சிற்றம்பலவர்தென்னம்பொதியி,
லிருந்தேனுயவந்திணைமலர்க்கண்ணினின்னோக்கருளிப்,
பெருந்தேனெனநெஞ் சுகப்பிடித்தாண்டநம பெண்ணமிழ்தம், வருந்தேலதுவன் றிதுவோவருவதோர் வஞ்சனையே. (௩௯௪)

ஊடா நீடா வாடிய, டு து.

இ-ள். திருந்தேனுயநின்ற - ஒருவாற்றானுந் திருந்தாதயான் பிறவித்துன்பத்திற பிழைக்கவந்துநின்ற—சிற்றம்பலவர்-சிற்றம்பலவரது—தென்னம்பொதியில் - தெற்கின்கணுளதாகிய பொதியிலிடத்து—இருந்தேன் - ஒருமுயற்சியு மின்றியிருந்தயான்—உயவந்து - உய்யும் வண்ணம் வந்து—இணைமலர்க்கண்ணின் - தன்னுடைய இணைந்த மலர்போலுங் கண்களினது—இன்னோக்கருளி-உள்ளக்கருத்தைவெளிப்படுத்தும் நாணோடுகூடியநோக்கமாகிய இனிய கடைக்கணோக்கத்தை முன்னெனக்குத்தந்து—பெருந்தேனென - பெருந்தேன்போலவினிதாய்—நெ

ஞ்சுக - என்னெஞ்சமுருக—பிடித்தாண்ட-என்னைப்பிடித்துத் தன்வயமாக்கிய—நமபெண்ணமிழ்தம - நமது பெண்வடிவையுடைய அமிழ்தமாகிய—அது - அது—அன்று - இதுவன்று—இதுவோவருவதொரவஞ்சனை - இதுவோ வருவதொருமாயம்—வருந்தேல் - அதனுன் நீவருந்தாதொழி—எ-று. (ருகூச)

நேரிசையாசிரியப்பா.

நிணாவளையிட்டமுந்தரளக்குப்பையு
மன்னக்குழுவுங்குருகணியினமுங்
கருங்கோட்டுப்புன்னையரும்புதிரகிடையு
முடவெண்டாழையூழ்த்தமுண்மலரு
மலவன்கவைக்காலன்னவெள்ளலகும்
வாலுகம்பரப்பிவலைவலிதொற்றினர்க
கிதெனவறியாதொன்றிவெள்ளிடையா
மாதுடைக்கழிக்கானசசேரியோாபாங்கர்ப்
புள்ளொடுபிணங்குமபுட்கவராது
வெள்ளிறவுணங்கல்காவலாக
வுலகுயிாகவருங்கொடுநிலைக்கூற்ற
மகளெனத்தரித்தநிலையறிகுவனேல்
விண்குறித்தெழுந்துமேலவர்ப்புடைத்து
நான்முகற்றுங்குந்தேனுடைத்தாமரை
யிதழுங்கொட்டையுஞ்சிதறக்குதர்ந்து
வானவரிறைவன்கடவுகாாபிடித்துப்
பஞ்செழப்பிழிந்துதண்புனல்பருகி
யைந்தெனப்பெயரியநெடுமரமொடித்துக்
கண்ணுளத்தளவாவெள்ளுணவுண்டு
பொரியெனத்தாரகைக்கணனுடல்குத்தி
யுடுந்திறலினையகொடுந்தொழில்பெருக்கிய

பேழ்வாய்க்கொய்யுளையரிசுமந்தெடுத்த
பன்மணியாசனத்திருந்துசெவ்வானி
னெடுஞ்சடைக்குறுஞ்சுடர்நீக்கியைந்தடுக்கிய
வானைறஞ்ஞான்றொருவேறுநிலையடுத்த
பன்மணிமிளிர்முடிபலர்தொழக்கவித்துப்
பஃறலைப்பாந்தட்சுமைதிருத்தோளிற்
றரித்துலகளிக்குந்திருத்தகுநாளி
னெடுநாட்டிருவயிற்றருளுடனிருந்த
நெடுஞ்சடையுக்கிரற்பயந்தருணிமலன்
மற்றவன்றன்னல்வடவையின்கொழுந்துசுட்
டாற்றுதுடலமுமிமைக்குறுமூத்தமும்
விளர்த்துநின்றணங்கிவளைக்குலமுழங்கும்
கருங்கடல்பொரியவொருங்குவேல்விடுத்த
வதற்கருள்கொடுத்தமுதற்பெருநாயகன்
வெம்மையுந்தண்மையும்வினையுடற்காற்று
மிருசுடரொருசுடர்புணர்விழியாக்கிமுன்
விதியவன்றராவுடலொடுநிலைத்த
முத்தமிழ்க்கூடன்முதல்வன்பொற்றான்
கனவினுங்காணாக்கண்ணினர்துயரும்
பகுத்துண்டகுநர்நிலைதிருமுன்ன
ரில்லெனுந்தீச்சொலிறுத்தனர்தோழ
மனைத்துயிரோம்புமறத்தினர்பாங்கர்க்
கோறலென்றயலினர்குறித்தனகுற்றமு
நன்றறிகல்வியர்நாட்டுறுமொழிபுக்
கல்வரணிழுந்தோராக்கருவிடமாயது
மொருகணங்கூடியொருங்கே
யிருசெவிப்புக்கதொத்தனவிவட்கே. ௧௭

பெருந்துயரகற்றி ஒத்தனவிவட்கே. பகுதி - ஒதற்பிரிவு, துறை - கலகக்கண்டுரைத்தல். *

பெருந்துயரகற்றியறங்குடிநாட்டி
யுளச்சுருள்விரிக்குநலத்தகுகல்வியொன்
றுளதெனக்குரிசிலொருமொழிசாற்ற
இவட்கே.

(இதனதுபதபொருள்)

இவட்கு - இத்தலைவிக்கு—பெருந்துயரகற்றி - மிக்க துன்பத்தைநீக்கி—அறம் - தருமத்தை—குடிநாட்டி - மனத்திற் குடியாகவிருத்தி—உளச்சுருள் - உணர்வின்றிச் சுருங்கியவுள்ளத்தை—விரிக்கும் - மலர்விக்கின்ற—நலத்தகு - நலஞ்சிறந்த—கல்வியொன்று - ஒரு கல்வியானது—உளதென - உண்டாயிருக்கின்றதென்று—குரிசில் - நமதரசன்—ஒருமொழிசாற்ற-ஒருவார்த்தைசொல்லலும் ;

பேழ்வாய்க்கொய்யுளையரிசுமந்தெடுத்த
பன்மணியாசனத்திருந்து

பேழ்வாய் - பெரியவாயையும்—கொய்யுளை- கொய்தாலொத்த பிடரி மயிரினையுமுடைய—அரி - சிங்கத்தினாலே—சுமந்தெடுத்த - சுமந்து தாங்கப்பட்ட—பன்மணி - பலவகைமணிகுயிற்றிய—ஆசனத்து இருந்து - ஆசனத்தில் வீற்றிருந்து ;

செவ்வானி
னெடுஞ்சடைக்குறுஞ்சுடர்நீக்கியைந்தடக்கிய
வாறைஞ்ஞூற்றெருவேறுநிரையடுத்த
பன்மணிமிளிர்முடிபலாதொழக்கவித்து .

செவவானின் - செவ்வானமபோலும்—நெடுஞ்சடை - நெடியசடையையும்—குறுஞ்சுடர் - சிறு பிறையையும்—நீக்கி -

மறைத்து—ஐந்தடுக்கிய - ஐந்தென்னு மெண்ணாற் பெருக்கப்ப ட்ட—ஆறைஞ்ஞூற்றுடு - மூவாயிரத்தா லாகிய பதினையாயிர மென்னு மெண்பெற்ற—வேறுநிரையடுத்த - வேறுவேறான வரி சையடுத்த—பன்மணி - பல வகைமணிகளோடு—மிளிர் - விளங்காநின்ற—முடி - திருமுடியை—பலர்தொழ - பல்லோரும் வணங்கும்படி—கவித்து - முடியிற்றரித்து ;

பஃறலைப்பாந்தட்சுமைதிருத்தோளிற்
றரித்துலகளிக்குந்திருத்தகுநாளில

பஃறலைப்பாந்தள் - பலதலைகளையுடைய பாந்தளுக்கு— சுமை - சுமையாகிய மாநிலத்தை—திருத்தோளில் - தனதழகி யதோளில்—தரித்து - தாங்கி—உலகளிக்கும் - உலகத்தைக்கா வாநின்ற—திருத்தகுநாளில் - செல்வமல்கியநாளில் ;

நெடுநாட்டிருவயிற்றருளுடனிருந்த
நெடுஞ்சடையுக்கிரற்பயந்தருணிமலன்

அருளுடன் - தடாதகைப் பிராட்டியாரது—திருவயிற்று- திருவயிற்றில்—நெடுநாளிருந்த - நெடுநாட்டங்கியிருந்த—நெடு ஞ்சடை - பாண்டிக்குலத்திற்கு முதலாகிய—உக்கிரற் பயந்தரு ள - உக்கிரபாண்டியனைப் பெற்றருளிய—நிமலன் - சோமசுந்த ரமூர்த்தி ;

மற்றவன்றன்னல்வடவையின்கொழுந்துசுட்
டாற்றுதுடலமுமிமைக்குறுமுத்தமும்
விளாத்துநின்று-வளைக்குலம

மற்றவன்றன்னால் - அந்தவுக்கிரபாண்டியனால்—வடவை யின் - வடவாக்கினியின்—கொழுந்துசுட்டு - கொழுந்தானதுசு ட்டதனால்—வளைக்குலம் - சங்கினங்கள்—ஆற்றாது - சகியாது

—உடலமும் - தமதுடலும்—இமைக்குறும் - பிரகாசிக்கின்ற—முத்தமும் - முத்தங்களும—விளர்த்துநின்று - வெளுக்கும்;

அணங்கி-முழங்குங்
கருங்கடல்பொரியவொருங்குவேல்விடுத்த
வதற்கருளகொடுத்தமுதற்பெருநாயகன்

அணங்கி - வருந்தி—முழங்கும் - ஒலித்தற் கிடமாகிய—கருங்கடல் - பெரியகடலானது—ஒருங்கு- ஒருமிகக—பொரிய- வெந்துபொரியுமாறு—வேல்விடுத்த - வேலாயுதத்தை யேவுவித்த—அதற்கு - அதுகாரியததிற்கு—அருள்கொடுத்த - கிருபை செய்த—முதறபெருநாயகன் - யாவாககு முதல்வனுகிய பெரிய கடவுள் ;

வெம்மையுந்தண்மையும்வினையுடற்காற்று
மிருசுடரொருசுடாபுணர்விழியாககி

வெம்மையும் - வெபபத்தையும்—தண்மையும் - தட்பத்தையும்—வினையுடற்கு - இருவினை காரணமாகவநத சராசரங்களுக்கு—ஆற்றும் - செய்யாநின்ற—இருசுடா - சாதிர சூரியாகளாகிய விருசுடரையும்—ஒருசுடர் - மறறொருசுடராகியநெருபபையும்—புணர்விழியாக்கி - புதுமையான கணகளாகக கொணடு ;

முன
விதியவன்றராவுடலொடுங்கிலைத்த
முத்தமிழ்க்கூடன்முதல்வன்பொற்றாள்
கனவினுங்காணுககண்ணினாதுயரும்

முன் - ஆதியில்—விதியவன்றரா - எவரரையும் விதிக்கின்றவனுகிய பிரமனுலே தரப்படாத—உடலொடுங்கிலைத்த - உடலோடுநிலைபெற்ற—முத்தமிழ்க்கூடல் முதல்வன் - இயலிசைநா

டகமாகிய முத்தமிழுங்கேழும் மதுரைப் பெருமானது—பொற்று ள - பொன்னடியை—கனவினுங்காணு - சொப்பனத்திலுங் கா ணப்பெறாத—கணணினர் - பேதையருடைய—துயருமம - துன் பமும் ;

பகுத்துண்டீகுநாிலேத்திருமுன்ன
ரில்லெனுநதீச்சொலிறுத்தனாதோமும்

பகுத்துண்டு - உள்ளதைப் பிறர்க்குப் பகுத்துணடு—ாகு நா் - அறஞ் செய்வோரது—நிலேத்திருமுன்னா - வீட்டின்முன் சென்று—இல்லெனுந்தீச்சொல் - இல்லே யென்னுங் கொடிய சொல்லே—இறுத்தனா - சொல்லியவிரவலரது—தோமும் - து ன்பமும் ;

அனேத்துயிரோம்புமறத்தினர்பாங்கர்க்
கோறலென றயலினர்குறித்தனகுற்றமும்

அனேத்துயிரோம்பும் - உயிரனேத்தும் பாதுகாக்கின்ற— அறத்தினாபாங்கர் - புண்ணியரிடத்து—அயலினர் - பிறர்— கோறலென்று - கொல்லுதலென்ற மொழியை—குறித்தனகுற் றமும் - சொல்லியனவாகிய குற்றமும் ;

நன்றறிகல்வியாநாட்டுறுமொழிபுக
கவவரணிழந்தோர்ககருவிடமாயதும்

நன்றறிகல்வியர் - நன்மையை யறிதற்குக் கருவியாகிய கல் வியாளா—நாட்டுறுமொழி - சொல்லியசொல்லானது—அவ்வர ணிழந்தோாககு-அககல்வியரணைக் கைவிட்டார்மாட்டு—புக்கு - சென்று—அருவிடமாயதும - அரிய நஞ்சுபோலாயவருத்தமும்,

ஒருகணங்கூடியொருங்கே
யிருசெவிபுககதொத்தன

ஒருகணங்கூடி - ஒரு கூட்டமாகக்கூடி—ஒருங்கே-ஒருமி க்க—இருசெவி - இருசெவியினிடத்தும்—புக்கதொத்தன - புகுந்தாற்போல்கின்றது—எ-று.

வினையுடல் காற்றுமெனப் பாடமுள தாயின் உடலானது. வெம்மை தண்மைகளை காலும்படி செய்கின்ற விருசுடரென வுரைத்துக்கொள்க.

வினையுடலென்பது - இருவினை காரணமாகவந்த சராசரவுடல்களெனககொள்க.

விதியவன்ருராவுடலென்றது - சத்துச்சித்தானந்த மாகிய திருமேனியை.

இவளுக்குக் குரிசில நலத்தகுகல்வியொன்றுளதென்று கூறியவோர் மாற்றமானது கூடன்முதல்வனது தாளை கனவிலுங் காணுதவர் துயரமும் தீச்சொ லிறுத்தனர்தோமும். அறத்தினர்பாஙகர் கோறலென்றனர் குற்றமும் கல்வியர்மொழி மூடர்க்கு விடம்போலாயவருத்தமும் ஒருங்குகூடி செவிபுக்க தொத்ததென்று வினைமுடிவுசெய்க. (எஎ)

---

## முன்பனிக்குநொந்துரைத்தல்.

முன்பனிக்கு நொந்துரைத்த லென்பது - மக்களேயன்றிப புள்ளுந்தம்பெடையைச் சிறகானெடுக்கிப் பிள்ளைகளையுந்தழுவி இனஞ்சூழ வெருவாதுதுயிலப்பெறுகின்ற இம்மயங்கிருட்கண், இடையறுது விழாநின்ற பனியிடைக் கிடந்து வாடித் துயாவாயாகவென்று என்னைப் பெற்றவளை நோவதல்லது யான் யாரை நோவேனென முன்பனிக் காற்றுது தாயொடு நொந்து கூறுநிற்றல். அதற்குச்செய்யுள்.—

சுற்றினவீழ்பனி தூங்கத்துவண்டு துயர்கலெ
பெற்றவளேயெனைப்பெற்றாள்பெடைசிற
புற்றிலவாளரவன்றில்லைப்புள்ளுந்தம்பிள்
மற்றினஞ்சூழ்ந்து துயிலப்பெறுமிம்மயங்கி

ஆன்றபனிக் காற்றுதழி ந்
தீன்றவளே யேழைநொந்த து.

இ-ள். புற்றையுடையவல்லாத ஒளியையுடைய பாம்பையணிந்தவனது தில்லையின் மக்களே யன்றிப் புள்ளும் பெடையைச்சிறகாலொடுக்கித் தமது பிள்ளைகளையுந் தழுவி இனஞ்சூழ்ந்து வெருவாது துயிலப்பெறுகின்ற இச்செறிந்த விருட் கண்ணே மேனியெங்குஞ் சுற்றி வீழாநின்ற பனி இடையறாதுநிற்ப, அதற்கோர்மருந்தின்றித் துயர்வாயாகவென்று, என்னை யீன்றவளேயான்றாள், இனி யான் யாரைநோவது—எ-று. (௬௨௦)

நேரிசையாசிரியப்பா.

கடன்மகளுள்வைத்துவடவைமெய்காயவு
மலைமகடழற்றருமேனியொன்றணைக்கவு
மாசறுதிருமகண்மலர்புகுந்தாயிரம்
புறவிதழ்ப்புதவடைத்ததன்வெதுப்புறுக்கவுஞ்
சயமகள்சீற்றத்தழன்மனம்வைத்துத்
திணிபுகும்வென்றிச்செருவழல்கூட்டவு
மையர்பயிற்றியவிதியழலோம்பவு
மவ்வனற்கமரரைத்தும்வந்தணையவு
முன்னிடைக்காடன்பின்னெழநடந்து
நேரான்புறுவிரதியர்நுகரவுள்ளிருந்தென்
னெஞ்சகநிறைந்துநினைவினுண்மறைந்து
புரையறுமன்பினர்வழிபெறத்தோற்றி

வானவர்நெடுமுடிமணித்தொகைதிரட்டிப்
பதுக்கைசெய்யம்பலத்திருப்பெரும்பதியினும்
பிறவாப்பேரூர்ப்பழநகரிடத்து
மகிழ்நடம்பேய்பெறும்வடவனக்காட்டினு
மருமறைமுடியினுமடியவருளத்தினுங்
குனித்தருணயகன்குலமறைபயந்தோ
னருந்தமிழ்க்கூடற்பெருந்தவர்காண
வெள்ளியம்பலத்துட்டுள்ளியஞான்று
நெருப்பொடுசுழலவும்விருப்பெடுததவழல்
கையினிற்கொள்ளவுங்கரியுரிமூடவு
மாக்கியபனிப்பகைக்கூற்றிவைகிறக
வாங்கவர்துயர்பெறவீன்றவென்னொருத்தி
புகல்விழுமின்புதற்கின்றி
மகவினைப்பெறலாமவரம்வேண்டினளே. எஅ

---*---

கடன்மகளுள்வைத்து வரம்வேண்டினளே. பகுதி - பகை தணிவினைப்பிரிவு, துறை-முன்பனிக்குநொந்துரைத்தல்.

கடன்மகளுள்வைத்துவடவைமெய்காயவு
மலைமகடழற்றருமேனியொன்றணைககவும
(இதனதுபதபொருள்)

கடன்மகள் - கடலாகியபெண்—வடவை - வட்வாக்கினியை—உள்வைத்து - தன்னிடத்து வைத்திருந்து—மெய - தனதுடல்—காயவும் - காயவும்—மலைமகள் - பார்வதி—தழறறருமேனியொன்று - நெருபபுமயமாகிய மேனியொன்றனை—அணைககவும் - அணைத்துக்கொண்டிருக்கவும்,

மாசறுதிருமகண்மலாபுகுந்தாயிரம்
புறவிதழ்ப்புதவடைத்ததன்வெதுபபுறுக்கவும்

மாசறு - குற்றமற்ற—திருமகள் - திருமகள்—மலர் - தாமரைமலரில—புகுந்து - புகுந்து—ஆயிரம - ஆயிரமாகிய—புறவிதழ் - புறவிதழெனனும்—புதவு - கதவை—அடைத்து - சாத்தி—அதனை-அத்தன்மையாலுண்டாகும—வெதுப புறுககவும்-வெபபத்தைப பொருநதவும்,

> சயமகள்சிறறத்தழன்மனம்வைத்துத்
> திணிபுகும்வென்றிசெருவழல்கூட்டவும்

சயமகள - விசயமகள்—மாம் - மாத்தின் கண்—சிற்றத்தழல் - கோபாக்கினியை—வைத்து - வைத்து—திணிபுகும்- பலத்தோடு செல்லுதறகுரிய—வென்றி - வெறறியுளள—செருவழல கூட்டவும் - யுத்தமாகிய வெம்மையைப் பொருந்தவும்,

> ஐயர்பயிற்றியவிதியழலோம்பவு
> மவ்வனறகமரரனைவருமணையவும்

ஐயா - வேதியர்—பயிற்றிய - பயிலுகின்ற—விதியழல்- விதிமுறை வேளவியை—ஓம்பவும் - செய்யவும்—அமரரனைவரும் - தேவர்யாவரும்—அவ்வனறகு - அந்த யாகாக்கினியின்பொருட்டு—அணையவும் - வந்துசேரவும்,

> முனனிடைககாடன்பின்னெழநடந்து
> கோன்புறவிரதியாநகரவுள்ளிருந்தென

இடைககாடன் - இடைககாடனென்பவன்—முன்னெழ - முன்சென்றபோது—பின்னடந்து-அவன் பின்னே சென்று—கோனபுறவிரதியர் - தவஞ்செய்கின்றவிரதியர்கள்—நகர - அமுதமுன்னுறுமாறு—உள்ளிருந்தென - அவர்களுள்ளததி லிருந்ததுபோல ;

> கெஞ்சகசிறைநந்துசினைவினுண்மறைநது
> புணையறுமனபினாலிபெறறதோறறி

நெஞ்சகநிறைந்து - நெஞ்சிடத்தே நிறைந்து—நினைவினு ண்மறைந்து - நினைப்பினிடத்தே தெரியாமனின்று—புணையறு மன்பினா-பற்றற்ற சிவநேசா—விழிபெற - ஞானம பெறுமாறு —தோற்றி-குருமூர்த்தமாகத்தோற்றி;

வானவர்நெடுமுடிமணித்தொகைதிரட்டிப்
பதுககைசெய்யம்பலத்திருப்பெரும்பதியினும்

வானவர்நெடுமுடி-தேவர்களது நீண்ட முடிகளிலுள்ள— மணித்தொகைதிரட்டி-மாணிக்கத் திரளைச்சேர்த்து—பதுக கைசெய்-மேடாகின்ற—அம்பலம- பொன்னம்பலமாகிய—திரு ப்பெரும்பதியினும்-பெரிய திருப்பதியினிடத்தும்,

பிறவாப்பேரூர்ப்பழநகரிடத்து
மகிழ்நடம்பேய்பெறும்வடவனக்காட்டினும்

பிறவாப்பேரூர்-பிறவாமைக்குக் காரணமான பெரியவூராகி ய—பழநகரிடத்தும்-பழமையான காசியினிடத்தும்—மகிழ்நட ம்-ஆனந்தத் தாண்டவக காட்சியை—பேய்பெறும்-காரைக்கால ம்மையார்பெற்ற—வடவனககாட்டினும் - திருவாலங்காட்டினி டத்தும்,

அருமறைமுடியினுமடியவருளத்தினுங்
குனித்தருளுயகன்குலமறைபயந்தோ
னருநதமிழ்க்கூடற்பெருநதவர்காண

அருமறைமுடியினும்-எழுதற்கரிய வேதாந்தத்தினிடத்து ம்—அடியவருளத்தினும் - அடியாராயுள்ளார் ரிதயத்தினிடத்தும் —குனித்தருளுயகன் - ஆடியருளியமுதல்வன்—குலமறை பய ந்தோன்-நால்வேதப்பொருளையுரைத்த கடவுளது—அருநதமிழ் க்கூடல் - அருமையாகிய தமிழ்க்கிடமான நான்மாடககூடலில

—பெருந்தவர்காண - பெரிய பதஞ்சலி வியாக்கிரபாதர் தரிசிக்
கும்படி,

> வெள்ளியம்பலத்துட்டுள்ளியஞான்று
> நெருப்பொடுசுழலவும்விருப்பெடுத்தவ்வழல
> கையினிற்கொள்ளவுங்கரியுரிமூடவு
> மாகியபனிப்பகைக்கூற்றினைவிற்றக

வெள்ளியம்பலத்துள் - இரசிதசபையில்—துள்ளியஞான்று-நடித்தருளியநாளில—நெருப்பொடு - அக்கினியோடு—சுழலவும்-சுழலவும—விருப்பெடுத்து - விருப்பங்கொண்டு—அவ்வழல-அந்தவக்கினியை—கையினிற்கொள்ளவும - கையிலேந்தவும—கரியுரிமூடவும-யானைத்தோலைப் போர்த்துக் கொள்ளவும்—ஆகிய-இவ்வகைப் பாடுபடுத்திய—பனிப்பகை-பனியாகிய நோயின்—கூற்றினைவிற்றக-இக்கூறுபாடுகளைவிற்றக,

> ஆங்கவர்துயர்பெறவீன்றவென்னொருத்தி
> புக●விழுமன்புதற்கின்றி
> மகவினைப்பெறலாம்வரம்வேண்டினளே.

அவா-அவர்களெல்லாம—ஆங்கு - அவ்வாறு—துயர்பெற-துன்பத்தை யடையாநிற்ப—ஈன்றவென்னொருத்தி-என்னையீன்ற தாயானவள்—புகலவிழும்-புகலாக விரும்பத்தக்க—அன்புதற்கின்றி-அன்பு தனக்கில்லாமல்—மகவினை - பிள்ளையை—பெறலாம்-பெறுதற்குரிய—வரம்வேண்டினள்-வரங்கேட்டாள்.எ-று

காயவும் அணைக்கவும் உறுக்கவும் கூடவும் ஓம்பவும் சுழலவும் கொள்ளவும் மூடவும் ஆகியபனிப்பகைக் கூற்றுவிற்றக அவர் துயர்பெற ஈன்றவொருத்தி அன்பின்றி மகவுபெறலாம் வரம வேண்டினளென வினைமுடிவுசெய்க.　　　(௭அ)

---

## மறவாமைகூறல்.

மறவாமைகூறலென்பது - வினைமுற்றிவந்து தலைமகளோடு பள்ளியிடத்தானாகிய தலைமகன், நீயிர் வினையிடத்தெம்மைமறந்தீரேயென்றதோழிக்கு, யான் பாசறைக்கட் டாழ்த்தவிடத்தும், கண்முத்திலங்கநின்று, இவள் என்னுடைய நெஞ்சைவிட்டு நீங்கிற்றிலள் ஆதலால், யான்மறக்குமாறென்னோவெனத்தானவளை மறவாமை கூறாநிற்றல். அதற்குச்செய்யுள்.—

கருங்குவளைக்கடிமாமலர்முத்தங்கலந்திலங்க
நெருங்குவளைக்கிள்ளைநீங்கிற்றிலணின்றுநான்முகனோ
டொருங்குவளைகரத்தானுணராதவன்றில்லையொப்பாய்
மருங்குவளைத்துமன்பாசறைநீடியவைகலுமே. ருருக

பாசறைமுற்றிப் பைந்தொடியோடிருந் து
மாசறுதோழிக்கு வள்ளலுரைத்த து.

இ-ள். நான்முகனோடெங்கூடச் சங்கையேந்தி[illegible] கையையுடையவனு மறியாதவனது தில்லையை யொப்பாய், முனைமருங்குசூழ்ந்து மன்னனது பாசறைக்கண் யான்றாழ்த் தவைகறகணுறும், கண்ணாகிய கருங்குவளையது புதியபெரியமலர் கண்ணீராகிய முத்தத்தைக கலந்துவிளங்க நின்று நெருங்கின வளையையுடைய இக்கிளியையொப்பாள ஒருகாலமுமெனனைவிட்டு நீங்கிற்றிலள, அதனாற்பிரிவில்லை—எ-று. (ருருக)

நேரிசையாசிரியப்பா.

மருவளர்குவளைமலர்ந்துமுத்தரும்பிப்
பசுந்தாட்டோன்றிமலர்நனிமறித்து
நெட்டெறியூதைநெருப்பொடுகிடந்து
மணிபுறங்காண்றபுரிவளைவிம்மி

விதிப்பவன்விதியாவோவலின்றெனவென்
னுள்ளமுங்கண்ணுநிலையுறத்தழீஇயின
ளுவணக்கொடியினனுந்திமலர்த்தோன்றிப்
பார்முதற்படைத்தவனடுத்தலையறுதத்துப்
புனிதக்கலனெனவுலகுதொழக்கொண்டு
வட்டமுக்கோணஞ்சதுரங்கார்முக
நவத்தலைத்தாமரைவளைவாய்ப்பருந்தெனக்
கண்டனமகந்தொறுங்கலிபெறசசென்று
நறவிரந்தருளியபெரியவர்பெருமான்
கூக்குரல்கொள்ளக்கொலைதருநவ்வியும்
விதிரொளிகாற்றக்கனல்குளிரமழுவு
மிருகரந்தரித்தவொருவிழிநுதலோன்
கூடலொப்புடையாய்குலவுடுத்தடவுந்
தலைமதில்வயிற்றுட்படுமவருயிர்க்கணந்
தனித்தனியொளித்துத்தணக்கலுமரிதெனப்
போக்கறவளைந்துபுணரிருணுளுங்
காவறகாட்டினவழியுந்
தேவாக்காட்டும்பாசறையினுமே. ௭௯

---*---

மருவளர்குவளை பாசறையினுமே. பகுதி - வேந்தற்குற்றுழிப்பிரிவு, துறை - மறவாமைகூறல் *

உவணக்கொடியினனுந்திமலர்த்தோன்றிப
பாரமுதறபடைத்தவனடுத்தலையறுத்துப
புனிதககலனெனவுலகுதொழககொணடு

(இதனதுபதப்பொருள்.)

உவணகொடியினன்-திருமாலது—உந்திமலர்த்தோன்றி-நாபிக்கமலத்திற் பிறந்து—பார்முதல்படைத்தவன் - பார்முதலியவற்றைப்படைத்த பிரமனது—நடுத்தலையறுத்து-நடுத்தலையை

நகத்தாற்கிள்ளி—புனிதக்கலனென - புனிதபாத்திரமென்று—
உலகுதொழக்கொண்டு - உலகத்தார் வணங்கக்கைக்கொண்டு;

வட்டமுக்கோணஞ்சதுரங்கார்முக
நவத்தலைத்தாமரைவளைவாய்ப்பருந்தெனக்
கண்டனமகந்தொறுங்கலிபெறச்சென்று
நறவிரந்தருளியபெரியவர்பெருமான்

வட்டம் - வட்டவடிவாகவும்—முக்கோணம்- முக்கோண வடிவாகவும்—சதுரம் - சதுரவடிவாகவும்—கார்முகம் - வில்வடிவாகவும்—நவத்தலை - நவகோணமாகவும்—தாமரை - தாமரைவடிவாகவும்—வளைவாய் - வளைந்த வாயினை யுடைய—பருந்தென - பருந்துவடிவாகவும்—கண்டன - செய்தன வாகிய—மகந்தொறும் - யாககுண்டந்தோறும்—கலிபெறச் சென்று - வேதமுழக்கத்துடன்போய்—நறவு - அவியாகிய வுணவை—இரந்தருளிய - கேட்டருளிய—பெரியவர்பெருமான் - நீத்தோர்பெருமான்;

கூக்குரல்கொள்ளக்கொலைதருநவ்வியும
விதிரொளிகாற்றக்கனல்குளிர்மழுவு
மிருகரந்தரித்தவொருவிழிநுதலோன்
கூடலொப்புடையாய்

கூக்குரல் - கூவுகின்ற குரலொலியானது—கொள்ள-உலகமெல்லாம்வியாபிக்க—கொலைதரும் - கொலைசெய்யவந்த—நவ்வியும் - மானையும்—விதிர் - யாவரு நடுங்கும்படி—ஒளிகாற்ற-சோதிவீசலால்—கனல் - அழற்கட்வுளும்—குளிர் - வெம்மையிற்குறைபடுகின்ற—மழுவும் - மழுவையும்—இருகரந்தரித்த-வலக்கரத்திலும் இடக்கரத்திலு மேந்திய—ஒருவிழிநுதலோன்-ஒருவிழிபொருந்திய நெற்றியனது—கூடலொப்புடையாய் - மதுரையையொப்பானவளே;

குலவுடுத்தடவும்
தலைமதில்வயிற்றுட்படுமேவருயிர்க்கணந்
தனித்தனியொளித்துத்தணக்கலுமரிதெனப்
போக்கறவளைந்துபுணரிருளுறுநுங்
காவற்காட்டினவழியுந்
தேவர்க்காட்டும்பாசறையினுமே.

குலவுடுத்தடவும் - கூட்டமான விண்மீனைத்தடவாநின்ற—தலைமதில்வயிற்றுள் - மதில்சூழ்ந்த அரணுள்—படும் - துயர்பட்டிருந்த—அவருயிர்க்கணம் - மாற்றலருயிர்கள்—தனித்தனியொளித்து - தனித்தனியாகவொளித்து—தணக்கலுமரிதென - ஓடிப்போதலுமரிதென்றுகருதுமாறு—போக்கறவளைந்து - தப்பிப்போகாதபடி மதிலைச்சூழ்ந்து—புணரிருளுறும் - மூத்திகையிட்ட விருளுளினும்—காவல்காட்டினவழியும் - காவல்காத்தவிடத்தும்—தேவர்க்காட்டும் - தேவரைக் காட்டுகின்ற—பாசறையினும் - பாசறையிடத்தும்;

மருவளர்குவளைமலர்ந்துமுத்தரும்பிப்
பசுந்தாட்டோன்றிமலர்கனிமறித்து
நெட்டெறியூதைநெருப்பொடுகிடந்து

மருவளர் - வாசனைமிகுந்த—குவளைமலர்ந்து - கண்களாகிய குவளையலர்ந்து—முத்தரும்பி - பற்களாகிய முத்தங்கள் தோன்றி—பசுந்தாட்டோன்றிமலர் - கைகளாகிய பசியதாளையுடைய காந்தட்பூ—கனிமறித்து - மிகவுமறித்து—நெட்டெறியூதை - வேகமாய்வீசாநின்ற பனிக்காற்றாகிய—நெருப்பொடுகிடந்து - நெருப்போடிருந்து;

மணிபுறங்கான்றபுரிவளைவிம்மி
விதிப்பவன்விதியாலோவாவின்றெனவென்

னுள்ளமுங்கண்ணுநிலையுறத்தழீஇயினள்

மணிபுறங்கான்ற - மணிகளைப் புறத்தி லுமிழ்ந்த—புரிவ ளைவிம்மி - கழுத்தாகிய வளைபொருந்திய சங்கம்விம்மி—விதிப்ப வன் விதியா - பிரமன்விதித்தற் கிசையாத—ஓவம் - சித்திரப்பா வை—நின்றெனநிலைபெற்றிருந்தாற் போல—என்னுள்ளமும்- என்னுள்ளத்தையும்—கண்ணும் - கண்ணையும்—நிலையுற-விட் டு நீங்காமல்—தழீஇனள் - தழுவியிருந்தனள்—எ-று.

அறுத்து கொண்டு சென்று தரித்தநுதலோன் கூடலொப புடையாய் புணரிருணூளும் வழியும் பாசறையினும் மலர்ந்து அ ரும்பி மறித்து கிடந்து விம்மி ஓவநின்றென உள்ளமுங் கண் ணுந் தழீஇனளென வினைமுடிவுசெய்க. (எக)

---

## அணைந்தவழியூடல்.

அணைந்தவழி யூடலென்பது - தோழியாலூடல் தணிவிக்க ப்பட்டுப் பள்ளியிடத்தாளாகியதலைமகள், நீ செய்கின்றவிதனை யறியின் நின்காதலிமார் நின்னைவெகுள்வர், அதுகிடகக, யாம் மேனிமுழுதுஞ் சிறுவனாலுண்டாக்கப்பட்ட பால்புலப்படுந்தன் மையையுடையேம், அதன்மேல்யாமும் நீ செய்கின்றவிக்கள்ளத் தை விரும்பேம், அதனால் எங்காலைத்தொடாதொழி,எங்கையை விடுவாயாகஎனத் தலைமகன்றன்னை யணைந்தவழி ஊடாநிற்றல். அதற்குச்செய்யுள்.—

சேறுன்றிகழ்வயற்சிற்றம்பலவர்தில்லைநகர்வாய்
வேறுன்றிகழ்கண்ணிணையார்வெகுள்வர்மெய்ப் பாலன்
பாறுன்றிகழும்பரிசினமேவும்படிறுவவேங் [செய்த
தாறுன்றொடுறொடோல்விடுதீண்டலெங்கைத்தலமே.()

தெளிபுனலூரன் சென்றணைந்தவ ழி
ஒளிமதிநுதலி யூடியுரைத்த து.

இ-ள். சேல்விளங்கும் வயலையுடைய சிற்றம்பலவரது தில்லைநகரிடத்துளாராகிய வேல்போலுங்கண்ணையுடைய நின்காதலியாராகிய விளையவா நீ செய்கின்ற விதனையறியின் நின்னைவெகுள்வர், அதுவேயுமன்றி, மேனி சிறுவனா லுண்டாக்கப்பட்ட பால்புலப்படுந் தன்மையையுடையே மாதலின் நினக்குத் தகேம்,இதன்மேலே யாமும் நீயும் மேவுநாணின்மையோடுகூடிய கள்ளத்தைவிரும்பேம், அதனால் எங்காலைத் தொடாதொழி, எம்மைத் தொடாவேண்டா, எங்கைத்தலத்தைத் தீண்டற்பாலையல்லை,விடுவாயாக—எ-று. (௬௬0)

நேரிசையாசிரியப்பா.

மதியமுடல்குறைத்தவெள்ளாங்குருகினம்
பைங்காறடவிச்செங்கயறுரந்துண்டு
கழுக்கடையன்னறன்கூர்வாய்ப்பழிப்புல
வெழின்மதிவிரித்தவெண்டலையிதழ்த்தாமரை
மலாமலர்துவட்டும்வயலணியூர
கோளகைக்குடிலிற்குளிர்ந்திடைந்தப்புறத்
திடைநிலையற்றபடர்பெருவெளியகத்
துடன்முடக்கெடுத்ததொழில்பெறுவாழ்க்கைக்
கவைத்தலைப்பிறையெயிற்றிருளெழிலரக்க
னமுதருண்டிமையாதவருமங்கையருங்
குறவருங்குறவத்துணையருமாகி
நிலம்பெற்றிமைத்துநெடுவரையிறும்பிடைப்
பறவையுண்டூட்டியவிருணறவருந்தி
யங்கிலதசவொனவடிக்கடிவணங்கும்

வெள்ளியங்குன்றகமுள்ளுறப்புகுந்தொரு
தேவனுமதன்முடிமேவவுமுளனு
மெனப்புயங்கொட்டிநகைததெடுத்தார்க்கப்
பிலந்திறந்தன்னபெருவாயொருபது
மலைபிணைத்தொழுக்கியகரமிருபத்தும்
விண்ணுடைத்தரற்றவுந்திசையுட்கிமுரியவுந்
தாமரையகவயிற்சேயிதழ்வாட்டிய
திருவடிப்பெருவிரற்றலைநகநுதியாற்
சிறிதுமலையுறுத்தமதிமுடியந்தணன்
பொன்னணிமாடம்பொலிநகர்க்கூட
லாவணவீதியனையவரறிவுறி
லூருணியன்னநின்மார்பகந்தோய்ந்தவெள
ளிணைமுலைநன்னரிழந்தனவதுபோன்
மற்றவர்கவைமனமாழ்கிச்
செற்றநிற்பகர்வரிக்காறீண்டலையே. ௮0

—*—

மதியமுடல்குறைத்த காறீண்டலையே. பகுதி - பரத்தையிற்பிரிவு, துறை-அணைந்தவழியூடல். *

மதியமுடல்குறைத்தவெள்ளாங்குருகினம்
பைங்காறடவிச்செங்கயறாரந்துண்டு
கழுக்கடையன்னறன்கூர்வாய்ப்பழிபபுல
வெழின்மதிவிரித்தவெண்டளையிதழ்த்தாமரை
மலாமலர்துவட்டும்வயலணியூர

(இதனதுபதப்பொருள்.)

மதியம் - சந்திரனை—உடல்-உடல்நிறத்தில்—குறைத்த-குறைபடுத்திய—வெள்ளாம்-வெண்மையாகிய—குருகினம் - கொக்கினங்கள்—பைங்காறடவி - மெல்லிய காலாற்றடவி—செங்க

யல் - இளங்கயல்களை—துரந்துண்டு - துரத்தி யுண்டு—கழுக்கடையன்ன - ஈட்டிமுனையையொத்த—தன்கூர்வாய் - தமது கூரியவாயிலுள்ள—பழிப்புலவு - பழிக்கத் தக்க புலாலுற்றத்தை—மதியெழில்விரித்த - நிறைமதியி னழகைக்காட்டிய—வெண்டளையிதழ்த்தாமரை - முறுகக்குடைந்த வெள்ளிதழ்த்தாமரையின்—மலர் மலர் - மலர்ந்தமலரிலே—துவட்டும் - துடைத்துக்கொள்கின்ற—வயலணியூர - வயனெருங்கிய வூரனே;

கோளகைக்குடிலிற்குனிந்திடைந்தப்புறத்
திடைநிலையற்றபடர்பெருவெளியகத்து

கோளகை - அண்டகோளகையாகிய—குடிலில் - வீட்டிற் செல்லும்போது—குனிந்து - தலைகுனிந்து—இடைந்து - விலகி—அப்புறத்து - பாகீரண்டத்தில்—இடைநிலையற்ற - தடையற்ற—படர்பெருவெளியகத்து - மிகவுமபரந்தவெளியிடத்து;

உடன்முடக்கெடுத்ததொழில்பெறுவாழ்க்கைக்
கவைத்தலைப்பிறையெயிற்றிருளெழிலரக்கன்

உடன்முடக்கெடுத்த - முடங்கிய வுடலை நிமிர்த்த—தொழில்பெறு - தொழிலைப்பெற்ற—வாழ்க்கை - வாழ்க்கையினை யுடைய—கவைத்தலை - பிளவான நுனியினையுடைய—பிறை - பிறைபோன்ற—எயிற்று - பற்களையும்—இருளெழில் - இருணிறத்தையுங்கொண்ட—அரக்கன் - இராவணன்,

அமுதமுண்டிமையாதவருமங்கையருங்
குறவருங்குறவத்துணையருமாகி
நிலம்பெற்றிமைத்துநெடுவரையிறும்பிடைப்
பறவை

அமுதமுண்டு - அமுதத்தை யுண்ணலால்—இமையாதவரும் - கண்ணிமையாத தேவரும்—மங்கையரும் - தேவமகளிரு

ம்—குறவரும் - குறவர்களும்—குறவத்துணையருமாகி - குறத்தியருமாகி—நிலம்பெற்று - பூமியிலவந்து—இமைத்து - கண்களிமைத்து—நெடுவரையிறும்பிடை - நெடியமலைபபாறையில்—பறவை-தேன் ஈக்கள்,

உண்டீட்டியவிருணறவருந்தி
யந்நிலத்தவரொனவடிக்கடிவணங்கும்
வெள்ளியங்குன்றகமுள்ளுறப்புகுந்து

உண்டீட்டிய - மலர்தொறுங் கவர்ந்துசேர்த்த—இருணறவு - இருட்டின்கண்ணுள்ள தேனை—அருந்தி - உணடு—அந்நிலத்தவரொன - அக்குறிஞ்சி நிலத்தாரைப போல—அடிககடிவணங்கும் - இடைவிடாமல் வணங்குகின்ற—வெள்ளியங்குன்றகம் - வெளளி மலையிடத்து—உள்ளுறபபுகுந்து - உள்ளேநுழைநது,

ஒரு,தேவனுமதன்முடிமேவவுமுளனு
மெனபபுயங்கொட்டிநகைத்தெடுததாரகக

அதன்முடி - அதன்சிகரத்தில்—ஒருதேவனும் - சிவனென்னு மொருதெய்வமும்—மேவவுமுளனுமென - இருககின்றுனுமென்று—புயங்கொட்டி - தோளைக் கையாற்றட்டி—நகைத்து - சிரித்து—எடுத்து - அம்மலையைத் தூககி—ஆர்கக - ஆரவாரிக்க,

பிலநதிறந்தன்னபெருவாயொருபது
மலைநிரைத்தொழுக்கியகரமிருபத்தும
விண்ணுடைத்தரற்றவுநதிசையுட்கிழரியவும்
தாமரையகவயிற்சேயிதழ்வாட்டிய
திருவடிப்பெருவிரற்றலைநகநுதியாற்
சிறிதுமலையுறுத்தமதிமுடியந்தணன்

பிலந்திறந்தன்ன - குகைதிறந்தாலொத்த - பெருவாயொருபதும் - பத்தாகிய பெரியவாயும்—மலைமிசைத்தொழுகிய - மலையை வரிசையாகவைத்தாலொத்த—கரமிருபததும் - இருபதாகிய கைகளும்—விண்ணுடைத்து - விண்ணுடையுமாறு முறையே—அரறறவும் - அழவும்—திசையுட்க - திககுகளநடுங்க—முரியவும் - நெரியவும்—தாமரை - தாமரை மலரின்—அகவயிற்சேயிதழ் - செகப்பாகியவகவிதழை—வாட்டிய - வாடச்செய்த—திருவடிப்பெருவிரற்றலை-ஸ்ரீபாதத்தின்பெருவிரலது—நகநுதியால் - நகத்தின் நுனியால்—சிறிது - சற்றே—மலையுறுத்த-அம்மலையை யழுத்திய—மதிமுடியந்தணன் - சந்திரசேகரப் பெருமானது,

பொன்னணிமாடம்பொலிநகர்க்கூட
லாவணவீதியனையவரறிவுறில்

பொன்னணிமாடம் - பொன்னா லணியப்பட்ட மாடங்கள்—பொலிநகாககூடல் - பொலிவுபெற்ற மதுரைமாநகரில்—ஆவணவீதி - கடைவீதியை—அனையவர் - ஒப்பானபரத்தையர்—அறிவுறில் - அறிவாராயின், :

ஊருணியன்னநின்மார்பகந்தோய்ந்தவென்
னிணைமுலைநன்னரிழந்தனவதுபோல
மற்றவர்கவைமனமாழ்கிச்
செற்றநிற்பகர்வரிக்காறீண்டலையே.

ஊருணியன்ன - ஊருணியை யொத்த—நின்மார்பகந்தோய்ந்த-நின்மார்பைப்புணர்ந்த—என் - எனது—இணைமுலை - இரண்டுமுலைகளும்—நன்னரிழந்தனவதுபோல - நன்மையிழந்ததுபோல—மற்றவர் - அவர்களது—கவைமனம் - இரண்டுபட்டமனமானது—மாழ்கி - வருந்தி—செற்ற நிற்பகர்வர் - நின்

னைகோவிப்பார்கள்(ஆதலால்)—இக்கால் - என்னுடையவிந்தக் காலை—தீண்டலை - தீண்டாதொழிக—எ-று.

ஊரனே அரககன் ஒருபதுவாயானு மரற்றவும் இருபது கைகளுமுரியவும் பெருவிரனகநுதியால் மலையுறுத்த மதிமுடிய ந்தணனகூடல் ஆவணவீதியனையவர் அறிவுறினின் மார்பகந்தோ ய்ந்த என்னிணைமுலைநன்னரிழந்தனபோல்மற்றவர் மாழ்கிச்செ ற்றம்பகர்வ ராதலாற் கால்தீண்டலையென வினைமுடிவுசெய்க.()

---

## பொறையுவந்துரைத்தல்.

பொறையுவந்துரைத்தலென்பது - தலைமகனைப பரத்தைய ரெதிர்கொண்டமை கேட்ட தலைமகள் நெஞ்சுடைந்து புறத்து வெளிபபடாமற் பொறுத்தமைகண்ட தோழி, யானிவவாருகவு ம் கலங்காதுநின்ற பெரும்பொறையாட்டியை யான் இன்றுபே சுவன என்னென்று அவளையுவந்து கூறுநிற்றல். அதற்குச் செ ய்யுள் —

சுரும்புறுகொன்றையன் றொல்புலியூர்ச்சுருங் கும்மரு ங்குற், பெரும்பொறை யாட்டியை யென்னின் றுபேசுவ பேரொலிநீர்க், கருமபுறையூரன்கலந்தகன் றானென் றுக ண்மணியு, மரும்பொறையாகுமென் னுவியுந்தேய்வுற்ற ழிகின்றதே. ௩௫௩

கள்ளவிழ்கோதையைக் தோதற்றோ ழி
உள்ளவிழ்பொறைகண் டுவந்துரைத்த து.

இ-ள். பெரியவொலிக்கு நீரையுடைய கரும்புதங்கு மூரை யுடையவன் கலந்துவைத்து நீங்கினானென்றுகருதுதலான் என் கண்மணியும் பயனின்மையாற்றுதற்கரிய பாரமாகாநின்றன

எனதுயிருந் தேய்ந்தழியா நின்றது, யானிவ்வா றாகவுங் கல ங்கா துநின்ற பெரும்பொறையையுடையவளை யான் இன்று பே சுவனவென்—எ-று. சுரும்புகள்வாழுங் கொன்றைப்பூவினையு டையானது பழையதாகிய புலியூரிற் சுருங்கினமருங்குலையுடை ய பெரும்பொறையாட்டியையெனக் கூட்டுக. (௬௫௬)

நேரிசையாசிரியப்பா.

உலர்கவட்டோமைப்பொரிசினைக்கூகையும்
வீசுகோட்டாந்தையுஞ்சேவலோடலமரத்
திரைவிழிப்பருந்தினம்வலையுகிர்ப்படையாற்
பார்ப்பிரைகவரப்பயனுறுமுலகிற்
கடனறும்யாக்கைக்கவர்கடன்கழித்துத்
தழலுணக்கொடுக்கவதனுணவிடையே
கைவிளக்கெடுத்துக்கனாயினங்களையப்
பிணம்பிரித்துண்ணுங்குணங்கினங்கொடுப்பச்
சூற்பேயேற்பவிடாகினிகரப்பக்
கண்டுளந்தளிர்க்குங்கருணையஞ்செல்வி
பிறைநுதனோட்டிகடுவள்ர்கண்டி
யிருனறவருவியெழுபரங்குன்றத்
துறைசூர்ப்பகையினற்பெறுதிருவயிற்றின
ளொருபாற்பொலிந்தவுயர்நகர்க்கூடற்
கடுக்கையஞ்சடையினன்கழலுளத்திலர்போற்
பொய்வருமூரன்புகவருமிற்புக
வெண்ணுளஞ்சிகைவிட்டெழுமனற்புக்க
மதுப்பொழிமுளரியின்மாழ்கினவென்றூற்
றேறெளிற்றுவண்டுங்தொங்கலுண்மறைந்துந்
தைவரலேற்றுங்கனவினுந்தடைந்துந்
திரைக்கடற்றெய்வமுன்றெளிசூள்வாங்கியும்

'பொருட்கான்றடைந்தும்பாசறைப்பொருந்தியும்
போக்கருங்கடுஞ்சுரம்போகமுன்னிறந்துங்
காவலிற்கவன்றுங்கல்வியிற்கருதியும்
வேந்துவிடைக்கணங்கியும்விளைபொருட்குருகியு
கின்றனவிவட்கினியென்னுங்
கன்றியவுடலுட்படுநனியுயிரோ. அக

—*—

உலர்கவட்டோமை படுநனியுயிரோ. பகுதி - பரத்தையிற்பி ரிவு, துறை-பொறையுவந்துரைத்தல். *

உலர்கவட்டோமைபொரிசினைக்கூகையும்
வீசுகோட்டாந்தையுஞ்சேவலோடலமர

(இதனது பதப்பொருள்)

உலர்கவட்டு - உலர்ந்தகொம்பினையுடைய—ஓமை - ஓமை யென்னுமரத்தின்—பொரிசினை - பொரிந்த கிளையினுள்ள—கூ கையும் - கோட்டானும்—வீசுகோட்டு-அம்மரத்தினது நீண்ட கோட்டிலுள்ள—ஆந்தையும் - ஆந்தையும்—சேவலோடு- தத்த ஞ்சேவலோடு—அலமர - பறந்து சுழலாநிற்ப ;

திரைவிழிப்பருந்தினம்வளையுகிர்ப்படையாற்
பாரப்பிரைகவரப்பயனுறுமுலகிற்
கடனறும்யாக்கைக்கவர்கடன்கழித்து

திரைவிழி-திரைந்தவிழியினையுடைய—பருந்தினம் - பருந் துகள்—வளையுகிர்ப்படையால் - வளைந்தநகமாகிய வாயுதத்தால் —பார்ப்பு - தங்குஞ்சுகளுக்கு - இரைகவர - இரைகவர்ந்திடுமா று—பயனுறுமுலகில் - பயனைக்கொண் டிருக்கின்ற பாலைநிலத் தில்—கடனறும் - வந்தவினைப் போகமற்ற—யாக்கை - உடலின் பொருட்டு—கவர்கடன் - செய்யத்தகும் கடன்களை—கழித்து- செய்துமுடித்து ;

தழலுணக்கொடுக்கவதனுண்விடையே
கைவிளக்கெடுத்துக்கனாயினங்காயப்
பிணம்பிரித்துண்ணுங்குணங்கினங்கொடுப்ப

தழலுணகொடுக்க - அக்கினிதத்தஞ்செய்ய—அதனுண விடையே - அந்நெருபபின்வேகும்போது—கைவிளக்கெடுத்து- கையில்விளகககேந்தி—கனா - அவ்வெல்லேயில்—இனங்காய-த னினத்தையழைத்து—பிணம் - பிணத்தை—பிரித்து - மூடு பிரித்து—உண்ணும் - புசிக்கின்ற—குணங்கினம் - பிசாசங்க ள்—கொடுபப - கொடுக்க ;

சூறபேயேறபவிடாகினிகரபபக்
கண்டுளாதளிாக்குங்கருணையஞ்செல்வி

சூற்பேய் - சூலேயுடையபேய்கள்—ஏற்ப - கையேந்திவாங் க—இடாகினி - இடாகினிகள்—கரபப - அதனைப் பிடுங்கிக்கொ ள்ள—கண்டு - இதனைக்கண்டு—உளாந்தளிாக்கும் - உள்ளங் க ளிககாகின்ற—கருணையஞ்செல்வி - கருணையை யுடைய வழகிய காளியாகிய ;

பிறைநுதலாட்டிகவெளர்கண்டி
யிருனறவருவியெழுபரங்குன்றத்
துறைசூர்ப்பகையினன்

பிறைநுதல்சாட்டி - பிறைபோன்ற நுதலினாட்டத்தை யு டையாள்—கவெளர்கண்டி - விடந்தங்கியகண்டத்தையுடையா ள்—இருனறவு - இருட்டினின்றுந் தேனானது—அருவியெழு- அருவியாவோடுகின்ற—பரங்குன்றத்து - திருப்பரங் குன்றத்தி ல்—உறை - எழுந்தருளிய—சூாப்பகையினன் - சூர்ப்பகையின னாகிய முருகக்கடவுளை ;

பெறுதிருவயிற்றின
ளொருபாற்பொலிந்தவுயர்நகர்க்கூடற்
கடுக்கையஞ்சடையினன்கழலுளத்திலர்போல்

பெறு - பெற்ற—திருவயிற்றினள் - அழகியவயிற்றினளாகிய மாதேவி—ஒருபாற்பொலிந்த - ஒருபாகத்தில் விளங்கிய—உயர்நகர்க்கூடல் - நகரங்களு ளுயர்வாகிய மதுரையின்கண்—கடுக்கையஞ்சடையினன் - கொன்றைமாலையணிந்த சடைமுடிப்பெருமானது—கழல் - திருவடி—உளத்திலர்போல்- உள்ளத்தி லில்லாதார்போல,

பொய்வருமூரன்புகவருமிற்புக
வென்னுளஞ்சிகைவிட்டெழுமனற்புகக
மதுப்பொழிமுளரியின்மாழ்கினவென்றால்

பொய்வருமூரன் - பொய்யிற் கைவந்த தலைவன்—புகவரும்-செல்லத்தகாத—இல்புக-பரத்தையரில்லிற்புகுதலால்—என்னுளம் - என் னுள்ளமானது—சிகைவிட்டெழும் - கொழுந்துவிட்டெரிகின்ற—அனற்புக்க - நெருப்பிற்பட்ட—மதுப்பொழிமுளரியின் - தேன்பொழிகின்ற தாமரைமலர்போல—மாழ்கினவென்றால் - கருகியதானால்,

தோளிற்றுவண்டுங்தொங்கலுண்மறைந்துங்
கைதவரலேற்றுங்கனவினுந்தடைந்துந்
தினைக்கடற்றெய்வமுன்றெளிசூள்வாங்கியும்
பொருட்கான்றடைந்தும்

தோளிற்றுவண்டும் - அத்தலைவனதுதோளில் துவண்டும்—தொங்கலுண்மறைந்தும் - அணிந்தமாலையுண் மறைந்தும்—கைதவரலேற்றும்-கையால்வருடுதலைப் பெற்றும்—கனவினும்-அவனைக்கண்ட கனவிலும்—தடைந்தும்-போகேலென மறித்தும்

—நினைக்கடறதெய்வமுன் - அலைகடலாகிய தெய்வத்தின் மு ன்பு—தெளிசூளவாங்கியும் - ஐயமில்லாத ஆணைவாங்கியும்— பொருட்கான் - பொருணிமித்தம்காட்டுவழிபோகாமல்—தடை ந்தும் - தடுத்தும்;

பாசறைப்பொருந்தியும்
போக்கருங்கடுஞ்சுரம்போகமுன்னிறந்தும்
காவலிற்கவன்றுங்கல்வியிற்கருதியும்
வேந்துவிடைகணங்கியும்விளைபொருட்குருகியு
நின்றவிவட்கு

பாசறை - பாசறைக்குச் சென்றபோது—பொருந்தியும்-வ ருத்தத்தைப் பொறுத்திருந்தும்—போக்கருங்கடுஞ்சுரம் - யாவ ருஞ் செல்லுதற்கரிய வெய்யசுரத்தில்—போக - போகத்துணிந் ததால்—முன் - அதற்குமுன்னமே—இறந்தும் - மூர்ச்சித்தும் —காவலிற்கவன்றும் - நகரங் காத்தற்குச்சென்றபோது கவலை ப்பட்டும்—கல்வியிற்கருதியும் - கல்விமேற்சென்றபோ தெண் ணமுற்றும்—வேந்துவிடைகணங்கியும் - அரசனாற் றூதுவிடு க்கப்பட்டபோதுவருந்தியும்—விளைபொருட்கு - மேல்நடக்குஞ் செய்திக்கு—உருகியும் - மனமுருகியும்—நின்றவிவட்கு - நின் ற விவளுக்கு ;

இனியென்னும்
கன்றியவுடலுட்படுநனியுயிரோ

கன்றியவுடலுள் - நொந்த வுடலுள்ளே—படும் - இருக்கி ன்ற—நனியுயிர் - சிறிய வுயிர்—இனியென்னும் - இனி யாதாய் முடியுமோ யானறிகின்றேனில்லை—எ-று.

கருணைச் செல்வியாகிய திருவயிற்றின ளொருபாற்பொலி ந்த கூடற்பெருமானது கழனினையார்போல் பொய்மொழிபுகன்

றவூரன் தகாத வில்லிடத்தேபுகுதலால் என்னுளம அனற்புக்க முளரியின் மாழ்கினவென்றால் அவ்வூரன் பிரியாதகாலத்தில நீ வண்டும் மறைநதும் ஏற்றுந தடைந்தும் வாங்கியும் நின்றுற போல, பிரிந்தகாலத்தில் தடைந்தும் பொருநதியும் இறநதும் க வன்றும் கருதியும அணங்கியும் உருகியும் நின்ற விவட்கு கனரி யவுடலுள்ளே சிறியவுயிர் இனி யென்னகுமென வினைமுடிவு செய்க. (அக)

---

## வாயிலவர்வாழ்த்தல்.

வாயிலவர்வாழ்த்தலென்பது - செவ்வணி விடுக்கப் பூப்பிய ற்செவ்விகெடாமல் மெலிவறிந்து இவளது பொலிவோடு வந்த மையான் இவன் மெய்யே தக்கவாய்மைய னெனத் தலைமகனை வாயிலவர்வாழ்த்தாநிறறல். அதற்குச்செய்யுள்:—

வில்லைப்பொலிநுதல்வேற்பொலிகண்ணிமெலிவறிந்து
வல்லைப்பொலிவொடுவந்தமையானின்றுவான்வழுத்துந்
தில்லைப்பொலிசிவன்சிற்றம்பலஞ்சிந்தைசெய்பவரின்
மல்லைப்பொலிவயலூரன்மெய்யேதக்கவாய்மையனே. ()

தலைமகனது தகவுடை மை
நிலைதகுவாயி னின்றோருரைத்த து.

இ-ள். விற்போலுநுதலையும் வேல்போலுங் கண்களையு மு டையாளது வாட்டமறிந்து விரைய இவளதுபொலிவோடு வந்த மையால், வானத்துள்ளார் நின்றுவழுத்துந் தில்லைக்கட்பொலியு ஞ் சிவனது சிற்றம்பலத்தைக் கருதுவாரைப் போல வளத்தாற் பொலியும் வயலையுடைய வூரையுடையவன் மெய்யாக நல்லமெய் ம்மையன்—எ-று. (ரூசுஅ

நேரிசையாசிரியப்பா.

நிலநீர்மொக்குளின்விளைவாய்த்தோன்றி
வான்றவழூடறகறைமதியெனச்சுருங்கிப்
புல்லாவாயசகூவெனப்பொருளுடனழியுஞ்
சீறுணவின்பதிருந்தாவாழ்க்கையைக
கான்றிடுசொன்றியிற்கண்டருவருத்துப்
புலனறத்துடைத்தநலனுறுகேள்விய
ராராவின்பப்பேரமுதருந்தித்
துறவெனுந்திருவுடனுறவுசெய்வாழ்க்கையர்
வாயினுங்கண்ணினுமனத்தினுமகலாப்
பேரொளிநாயகன்காரொளிமிடற்றோன்
மண்டிருவேட்டுப்பஞ்சவற்பொருத
கிள்ளியுங்கிளையுங்கிளர்படைநான்குந்
திண்மையுஞ்செருக்குந்தேற்றமுமபொன்றிட
வெரிவாயுரகரிருணைட்டொருவக
கொலைக்கொண்டாழிகுறியுடன்படைத்து
மறியப்புதைத்தமறங்கெழுபெருமா
னீரமாகொன்றசேயோன்குன்றமுங்
கல்வியுந்திருவுங்காலமுங்கொடியு
மாடமுமோங்கியமணிநகர்க்கூட
லாலவாயினுளருளுடனிறைந்த
பவளச்சடையோன்பதந்தலைசுமந்த
நல்லியலூரநின்புல்லமுண்மங்கைய
ரோவியவில்லமெம்முறையுளாகக்
கேளாச்சிறுசொற்கிளக்குங்கலதிய
ரிவ்வுழியாயத்தினர்களுமாக
மௌவலிதழ்விரிந்துமணஞ்சூழ்பந்தர்செய்
முன்றிலுமெம்முடைமுன்றிலாக
மலர்ச்சமச்சேக்கைமதுமலர்மறுத்தவித்

திருமனங்கொள்ளாச்சேக்கைபதாக
நின்னுளங்கண்டுநிகழுணவுன்னி
நாணுநவப்பொயபேணிபுட்புணர்த்தி
யாழொடுமுகமன்பாணனுநீயுந்
திருப்பெறுமயலவர்காண
வரப்பெறுமாதவம்பெரிதுடையேமே. ௮௨

—*—

நிலைநீர்மொகுளின் பெரிதுடையேமே. பகுதி - பரத்தை யிற்பிரிவு, துறை - வாயிலவர்வாழ்த்தல்.

நிலைநீர்மொக்குளின்விளைவாய்த்தோன்றி
வான்றவழுடற்கறைமதியெனச்சுருங்கி
(இதனதுபதப்பொருள)

நிலைநீர் - அசைவற்ற ஓடையி லெழாநின்ற—மொகுளி ன் - குமிழியைப்போல—விளைவாய்த்தோன்றி- விளைவாகத்தோ ன்றி—வான்றவழ் - ஆகாயத்தி லியங்குகின்ற—உடற்கறை- உ டலிற்களங்கமுள்ள—மதியென - மதிபோல—சுருங்கி- குறை ந்து;

புல்லர்வாய்ச்சூளெனப்பொருளுடனழியுஞ்
சிறுணவின்பத்திருந்தாவாழ்க்கையை

புல்லர்வாய்ச்சூளென - கீழ்மக்கள்வாயி லுண்டான சபத ம்போல—பொருளுடனழியும் - பொருளோடு கெடுகின்ற—சி றுணவின்பம் - சிறியவுணவாகிய வின்பத்தையுடைய—திருந்தா வாழ்க்கையை - திருத்தமில்லாத வில்லறவாழ்வை ;

கான்றிடுசொன்றியிற்கண்டருவருத்துப்
புலனறத்துடைத்தநலனுறுகேள்வியர்

கான்றிடுசொன்றியில் - கக்கியசோற்றைப்போல—கண்டு- அறிந்து—அருவருத்து - அருவருப்படைந்து—புலன் - ஐம்புல

வாசனையை—அறத்துடைத்த - முற்றுந் துடைத்த—நலனுறு கேள்வியா - நன்மையுண் டாதற்குக் காரணமான நூற்கேள்வி யை யுடையவரும்;

ஆராவின்பப்பேரமுதருந்தித்
துறவெனுந்திருவுடனுறவுசெய்வாழ்க்கையர்

ஆராவின்பம் - கிடைத்தற்கரிய பேரின்ப மாகிய—பேரமு தருந்தி - பெரிய வமுதத்தையுண்டு—துறவெனுந் திருவுடன்- துறவறமென்னுஞ்செல்வியுடன்—உறவுசெய்- உறவுசெய்து—வாழ்க்கையர் - வாழும் வாழ்க்கையை யுடையவருமான பெரி யோரது;

வாயினுங்கண்ணினுமனத்தினுமகலாப்
பேரொளிநாயகன்காரொளிமிடற்றோன்

வாயினும் - வாயாற்சொல்லுந் துதியினும்—கண்ணினும்- கண்ணின்காட்சியினும்—மனத்தினும் - மனத்திற் சிந்தித்த லினு ம்—அகலா - நீங்காத—பேரொளி-பேரொளிமயமாகிய—நாயக ன் - தலைவன்—காரொளிமிடற்றோன் - கரியவொளி பொருந்தி ய கண்டத்தையுடையவன்;

மண்டிருவேட்டுப்பஞ்சவற்பொருத
கிள்ளியுங்கிளையுங்கிளர்படைநான்குந்
திண்மையுஞ்செருக்குந்தேற்றமும்பொன்றிட
வெரிவாயுரகரிருணூட்டொருவக்
கொலைக்கொணடாழிகுறியுடன்படைத்து
மறியப்புதைத்தமறங்கெழுபெருமான்

மண்டிருவேட்டு - பூமிச்செல்வத்தை விரும்பி—பஞ்சவற் பொருத - பாண்டியனோடு யுத்தஞ்செய்த—கிள்ளியும் - சோழ

னும்—கிளையும் - அவன்சுற்றமும்—கிளர்படைநான்கும் - மிகு ந்தவவனது நான்குவகையாகவெழுந்த நால்வகைச்சேனையும்—திண்மையும் - வலிமையும்—செருக்கும் - இறுமாப்பும்—தேற் றமும் - வெற்றிகொள்வே மென்னுந் தெளிவும்—பொன்றிட- கெட்டு—எரிவாயுரகர் - விஷாக்கினி பொருந்திய வாயினையுடை யநாகராது—இருணாட்டொருவ - இருண்டநாட்டில்வீழுமாறு—கொலைக்கொண்டு - கொலையைமேற்கொண்டு—ஆழி - ஆழமா கியமடுவில்—உடன் - முற்பட்டுவீழ்ந்தபாண்டியனுடன்—குறி படைத்துமறிய - குறிகொண்டு தானும்வீழ்ந்த போது—புதை த்த - அதில் புதைந்திடும்படி செய்தருளிய—மறங்கெழுபெரு மான் - வேடுருவாய்வந்தருளிய பெருமான் ;

நீர்மாகொன்றசேயோன்குன்றமுங்
கல்வியுந்திருவுங்காலமுங்கொடியு
மாடமுமோங்கியமணிநகர்க்கூட
லாலவாயினுள்

நீர் - கடலில்—மாகொன்ற - மாமரத்தைத் தடிந்த—சே யோன்-முருகக்கடவுளது—குன்றமும் - திருப்பரங் குன்றமும் —கல்வியும் - கல்வியும்—திருவும் - செல்வமும்—காலமும்-ஆயு ளும்—கொடியும் - கொடிகளும்—மாடமும் - மாடங்களும்—ஓங்கிய - நீடித்துள்ள—மணிநகர்க்கூடல் - நகரங்களுள மணி யையொத்த கூடலென்னும்—ஆலவாயினுள் - திருவாலவாயி ன்கண்,

அருளுடனிறைந்த
பவளச்சடையோன்பதந்தலைசுமந்த
நல்லியலூர

அருளுடனிறைந்த - அங்கயற்க ணம்மையுடன் நிறைந்து ள்ள—பவளச்சடையோன் - பவளம்போன்ற செஞ்சடைப்பிரா

னது—பதம் - திருவடிகளை—தலைசுமந்த - தலைமேற் கொண்ட—நல்லியலூர - நல்லவழகையுடைய தலைவனே,

நின்புல்லமுண்மங்கைய
ரோவியமில்லமெமமுறையுளாகக்
கேளாச்சிறுசொற்கிளக்குங்கலதிய
ரிவவுழியாயத்தினர்களுமாக
மௌவலிதழ்விரிந்துமணஞ்சூழ்பந்தர்செய்
முன்றிலுமெம்முடைமுன்றிலாக

நின் - நினது—புல்லமுண மங்கையர் - புன்மையாகிய வுள்ளத்தையுடைய பரத்தையரது—ஓவியவில்லம் - சித்திரமெழுதியவில்லம்—எம்முறையுளாக - அவ்வாறில்லாத வெமதில்லமாகவும்—கேளாச்சிறுசொல் - கேழ்கத்தகாத கீழ்மைச் சொற்களை—கிளக்கும் - பேசுகின்ற—கலதியர் - கலகமியற்றுந் தோழிகள்—இவ்வுழியாயத்தினர்களுமாக - இவ்விடத்துள்ள தோழிகளாகவும்—மௌவலிதழ்விரிந்து-மல்லிகைமலர் மலர்ந்து—மணஞ்சூழ்-மணத்தைச் செய்கின்ற—பந்தர்செய் - பந்தரமைந்த—முன்றிலும் - வாயிலும்—எம்முடை - அவ்வாறில்லாத வெங்களுடைய—முன்றிலாக - வாயிலாகவும்,

மலர்ச்சுமைச்சேக்கைமதுமலர்மறுத்தவித்
திருமணங்கொள்ளாச்சேகையதாக
நினனுளங்கன்னெகிழுணவுன்னி

மலர்ச்சுமைச்சேக்கை-மலர்நிறைவாகியவவர்வீட்டைப்போல—மதுமலர்மறுத்த-தேமலர்களில்லாமையால்—திருமணங்கொள்ளா - நுமதுமனம் விருப்பங்கொள்ளாத—இச்சேக்கையதாக-இந்தவெனது படுக்கையாகவும்—நின்னுளங்கன்னெ - நின்னுள்ளத்தையறிந்து—நெகிழுணவுன்னி - தன்க்கு நெகிழ்கின்ற வுணவைக்கருதி,

நாணுநவப்பொய்பேணியுட்புணர்த்தி
யாழொடுமுகமன்பாணனுநீயுந்
திருப்பெறுமயலவர்காண
வரப்பெறுமாதவம்பெரிதுடையேமே.

நாணு - நாணுமல்—நவப்பொய்பேணி - புதுமையானபொய்களைவிரும்பி—உட்புணர்த்தி - உள்ளே கற்பித்து—முகமன்-உபசாரஞ்சொல்லுகின்ற—யாழொடுபாணனும் - யாழோடு கூடிய பாணனும்—நீயும் - நீயும்—திருப்பெறும் - திருவின்வளம்பெற்ற—அயலவர்காண - அயலாரறிய—வரப்பெறும் - வரும்படிபெற்ற—மாதவம் - நல்ல தவத்தை—பெரிதுடையேம்-மிகவுமுடையேம் யாமாக—எ-று.

ஆலவாயினில் அருளுடனிறைந்த பவளச்சடையோன் பதந்தலைசுமந்த நல்லியலூரனே பாணனுநீயும் அயலார்காண எமதுறையுளாகவும் இவ்வுழித்தோழியாகவும் எம்முன்றிலாகவும் மலர்மறுத்த சேக்கையாகவும் நின்னுள்ளத்தி லெண்ணி இங்கே வரப்பெறு மாதவமுடையேம் என வினைமுடிவுசெய்க. (அஉ)

---

## வறும்புனங்கண்டுவருந்தல்.

வறும்புனங்கண்டு வருந்தலென்பது - தலைமகளுந் தோழியும் புனங்காவலேறிப் போகாநிற்ப, தலைமகன் புனத்திடைச்சென்றுநின்று இப்புனம் யாமுன் பயின்றதன்றோ, இஃதின்றிருக்கின்றவா றென்னோவென்று அதன் பொலிவழிவுகூறித் தலைமகளைத்தேடி வருந்தாநிற்றல். அதற்குச்செய்யுள்.—

பொதுவினிற்றீர்த்தென்னை யாண்டோன்புலியூரரன்
பொருப்பே, யிதுவெனிலென்னின் றிருக்கின்றவாறெம்

மிரும்பொழிலே, யெதுநுமக்கெய்திய தென்னுற்றனிர றையீண்டருவி, மதுவினிற்கைப்புவைத்தாலொத்தவா மற்றிவ்வான்புனமே. கசசு

மென்புனம்விடுத்து மெல்லியல்செல் ல
மின்பொலிவேலோன் மெலிவுற்ற து.

இ-ள். அதுவோவிதுவோ வழியென்றுமயங்கிப் பொதுவாகநின்ற நிலைமையைநீக்கி என்னையாண்டவன் புலியூரிலரன், அவனதுபொருப்பாய் யான்முன் பயின்றவிடமேயாயின் இஃதின்றிருக்கின்றவாறென், எம்முடைய பெரியபொழிலே, நுமக்குத்தான் இன்றுவந்ததியாது! நீரொன்னுற்றீர்! இதுவேயுமன்றி இப்பெரியபுனம் ஒலியாநின்ற பெருகியவருவியாய்விழும் மதுவின்கண் அதனின்சுவையைமாற்றிக் கைப்பாகியசுவையைவைத்தாலொத்தவாறென்—எ-று. (கசசு)



நேரிசையாசிரியப்பா.

உள்ளிருந்தெழுந்துபுறம்புகின்றெறியு
மளவாத்திருமணியளித்தலானுங்
கொலைமுதிர்கடமான்முதிர்முகம்படர்ந்து
கொழுஞ்சினைமிடைந்துருளிரொடுபொதுளிய
நெடுமரத்திளங்காநிலைத்தலானும்
பாசடையும்பர்நெடுஞ்சுனைவிரிந்த
பேரிதழ்த்தாமரைபெருகலானு
நெடுவிசும்பணவும்பெருமதிதாங்கி
யுடையாவமுதமுறைதலானு
மிளமையுந்தொங்கலுமின்பமுமொருகால்
வாடாத்தேவர்கண்மணத்தலானும்
நூறுடைமகத்திற்பேறுகொண்டிருந்த

புரந்தரன்போலும்பொன்னெயிலெறிந்த
மணிவேற்குமரன்றிருவளர்குன்றம்
பேரணியுடுத்தபெருநகர்க்கூடல்
கோயில்கொண்டிருந்தகுணப்பெருங்குன்ற
மருந்தவக்கண்ணினோடடைந்தமாமுனிபாற்
பேரிருண்மாயைப்பெண்மகவிரக்க
வுவர்முதல்கிடந்தசுவையேழமைத்துக்
கொடுத்தமெய்ப்பிண்டக்குறியுடன்றோன்றிய
வெழுநிறச்சகரர்களேழணிநின்று
மண்புகழ்கியவான்பரிபிணிக்கப்
பன்முகவிளக்கிற்பரிதியிற்றோட்டிய
வேலைக்குண்டகழ்வயிறலைத்தெழுந்த
பெருங்கார்க்கருங்கடுவரும்பியமிடற்றோ
னெறிந்துவீழுருவியுமெரிமணியீட்டமு
முள்ளுநோறுள்ளுந்தோறுணவமுதுறைக்குந்
திருமுத்தமிழும்பெருகுதென்மலயத்
தாரப்பொதும்பரடைகுளிர்சாரற்
சுரும்புடன்விரிந்ததுணர்மலர்க்கொடியே
விண்விரித்தொடுக்குமிரவிவண்கவிகைக்
கிட்டுறைகாம்பெனவிட்டெழுகாம்பே
மரகதஞ்சினைத்தசிகரமயிற்குலமே
நீலப்போதும்பேதையும்விழித்த
பொறியுடனுழையேயெறிபுனமணியே
பாசிழைப்பட்டுநூற்கழிபரப்பிய
கிளைவாய்க்கிடைத்தவளைவாய்க்கிளியே
மைந்தர்கண்சென்றுமாதருட்டடைந்த
பொழிலைப்புதுமலர்ப்போக்குடைச்சுரும்பே
வெறிமுகிழ்ச்செம்மன்முறிமுகங்கொடுக்குஞ்
சந்தனப்பொதும்பர்த்தழைசினைப்பொழிலே

கொள்ளையஞ்சுகமுங்குருவியுங்கடிய
விருகாற்கவணிற்கெறிமணிசுமந்த
நெடுங்காற்குற்றுழிவிழல்வைப்பிதணை
நெருநற்கண்டவெற்குதவியவின்ப
மிற்றையிற்கரந்தவிருண்மனமென்னே
விவணிற்கவைத்தவேலாக்கடுங்கண்
கொடுத்துண்டவர்பின்கரந்தமைகடுக்கு
மீங்கிவைகிடக்கவென்னிழலிரும்புனத்
திருந்தோளிருந்தேனிலதானிரு
நின்புனமல்லவினறென்புலன்வெளிப்பட
வறைதல்வேண்டுமெப்புனநீரோன்
முன்னநகண்டவனன்றென்
றுன்னுவுதவுதலுயர்ந்தோர்கடனே. ௮௫

——*——

உள்ளிருந்தெழுந்து உயர்ந்தோர்கடனே. பகுதி-பகற்குறி, துறை-வறும்புனங்கண்டுவருந்தல்.

உள்ளிருந்தெழுந்துபுறம்புநின்றெரியு
மளவாத்திருமணியளித்தலானும்

(இதனுட்பொருள்.)

உள்ளிருந்தெழுந்து - உண்ணின்றுமேலெழுந்து—புறம்புநின்றெரியும் - பக்கங்களினின்று சுடர்விடுகின்ற—அளவாத்திருமணி - அளவிடப்படாத வழகியமாணிக்கத்தை—அளித்தலானும் - பாதுகாத்தலானும்,

கொலைமுதிர்கடமான்முதிர்முகம்படர்ந்து
கொழுஞ்சினைமிடைந்துகுளிர்சொரிபொதுளிய
நெடுமரத்திளங்காவிலைத்தலையானும் - ௨

கொலைமுதிர - கொலைத்தொழின்முதிர்ந்த—கடமான் - கடமாக்கள்—முதிர்முகம் - [illegible]—படர்ந்து-

சஞ்சரித்து—கொழுஞ்சினை - தழைந்த கிளைகள்—மிடைந்து-நெருங்கி—குளிரொடு - குளிர்ச்சியோடு—பொதுளிய - தளிர்த்த—நெடு - நெடிய—மரத்துஇளங்கா - தருக்களையுளள பசிய சோலைகள்—நிலைத்தலானும் - நிலைபெற்றிருத்தலானும்,

பாசடையும்பர்நெடுஞ்சுனைவிரிந்த
பேரிதழ்த்தாமரைபெருகலானும்

உம்பர் - மேலிடத்தில்—நெடுஞ்சுனை - பெரிய சுனையின்கண்—பாசடைவிரிந்த - இலைகளோடுவிரிந்த—பேரிதழ் - பெரிய விதழ்களையுடைய—தாமரை - தாமரை மலர்கள்—பெருகலானும் - பெருகுதலானும்,

நெடுவிசும்பணவும்பெருமதிதாங்கி
யுடையாவமுதமுறைதலானும்

நெடுவிசும்பணவும் - பெரியவாகாயத்தையளாவிய—பெருமதி - பெரியசந்திரனை—தாங்கி - பொறுத்து—உடையாவமுதம் - அழியாதவமுதமானது—உறைதலானும் - நீங்காதிருத்தலானும்,

இளமையுந்தொங்கலுமின்பமுமொருகால்
வாடாத்தேவர்கண்மணத்தலானும்

இளமையும் - நரைதிரையின்மையும்—தொங்கலும் - மாலையும்—இன்பமும் - மகிழ்ச்சியும்—ஒருகால் - ஒருகாலத்தும்—வாடா - கெடாத—தேவர்கள் - அமரர்கள்—மணத்தலானும்-பொருந்தியிருத்தலானும்,

நூறுடைமகத்திற்பேறுகொண்டிருந்த
புரந்தரன்போலும்பொன்னெயிலெறிந்த
மணிவேற்குமரன்றிருவளர்குன்றம்
பேரணியுடுத்தபெருநகர்க்கூடல்

நூறுடைமகத்தில் - நூறென்னு மெண்ணையுடைய யாகங் காரணமாக—பேறுகொண்டிருந்த - பேற்றைக் கொண்டிருந்த —புரந்தரன்போலும் - இந்திரனைப்போலுமிருக்கின்ற—பொன் னெயிலெறிந்த- பொன்மதில்சூழ்ந்த மயேந்திரபுரியையழித்த— மணிவேற்குமரன் - அழகியவேலாயுதத்தையுடைய குமாரக்கட வுளது—திருவளர்குன்றம்-வளமைமிக்க திருப்பரங்குன்றத்தை —பேரணியுடுத்த - பெரிய வரணைக் கொண்ட—பெருநகர்க்கூ டல் - நகரங்களுள் மேன்மைத்தாகிய மதுரையை,

கோயில்கொண்டிருந்தகுணப்பெருங்குன்ற
மருந்தவக்கண்ணிேைடைடந்தமாமுநிபாற்
பேரிருணமாயைப்பெண்மகவீரக்க

கோயில்கொண்டிருந்த - திருக்கோயில்கொண்டருளிய— குணபபெருங்குன்றம - பெரிய குணமலை—அருந்தவக் கண் ணிேைடு - அரிய தவமாகிய கண்ணுடனே—அடைந்த - ஆர ணியததிலிருநத—மாமுநிபால் - பெரியகாசிபமுநிவனிடத்து— பேரிருள் - பெரியவிருளையொத்த—மாயைப்பெண் - மாயையெ ன்னுமபெண்ணானவள்—மகவீரக்க - பிள்ளைவேண்டு மென்று யாசிகக,

உவர்முதல்கிடந்தசுவையேழமைத்துக்
கொடுத்தமெய்பபிண்டக்குறியுடன்றோன்றிய
வெழுநிறச்சகரர்களேழுணிநின்று
மண்புகழும்கியவான்பரிபிணிக்க

உவர்முதல்கிடந்த - உவர்ப்பு முதலாயுள்ள—சுவையேழ மைத்து - எழுவகைச் சுவையையு மமைத்து—கொடுத்தமெய்ப் பிண்டம் - அளித்தவவ் வுண்மைப் பிண்டத்தின்—குறியுடன் றோன்றிய - அடையாளங்களுடன் றோன்றிய—எழுநிறச்சகரர்

கள் - ஏழுநிறத்தினையுடைய சகரர்களும்—ஏழணிநின்று - ஏழணியாகநின்று—மண்புகழ்ந்திய - பாதலத்தி லொளிக்கப்பட்ட—வான்பரி - சிறப்புள்ள அசுவமேதக்குதிரையை—பிணிக்க - கண்டுபிடித்துக்கட்ட,

பன்முகவிளக்கிற்பரிதியிற்றோட்டிய
வேலைக்குண்டகழ்வயிறலைத்தெழுந்த
பெருங்கார்க்கருங்கடுவரும்பியமிடற்றோன்

பன்முகவிளக்கின் - பலமுகங்களை யுடைய விளக்குப்போல—பரிதியில் - சக்கிராயுதத்தினால்—தோட்டிய - தோண்டிய—வேலைக்குண்டகழ் - ஆழமாகிய பரந்தகடலின்—வயிறலைத்தெழுந்த - வயிற்றையலைத்துத் தோன்றிய—பெருங்கார்க்கருங்கடு - மிகுந்த கரிய நிறத்தையுடைய ஆலாலம்—அரும்பியமிடற்றோன் - காணப்படுங் கண்டத்தையுடையவனது,

எறிந்துவீழருவியுமெரிமணியீட்டமு
முள்ளுதோறுள்ளுதோறுணவமுதுறைக்குந்
திருமுத்தமிழும்பெருகுதென்மலயத்
தாரப்பொதும்பரடைகுளிர்சாரற்
சுரும்புடன்விரிந்ததுணர்மலர்க்கொடியே

எறிந்துவீழருவியும் - ஒலித்தொழுகுகின்ற அருவிநீரும்—எரிமணியீட்டமும் - சுடர்விடுகின்ற மணிக்கூட்டமும்—உள்ளுதோறுள்ளுதோறும் - நினைக்குந்தோறு நினைக்குந் தோறும்—உணவமுதுறைக்கும் - உண்ணத்தக்க வமுதஞ் சுரக்கின்ற—திருமுத்தமிழும் - அழகிய இயலிசைநாடகமென்னுமூன்றுதமிழும்—பெருகு - மலர்தற்கிடமாகிய—தென்மலயத்து - தெற்கிலுள்ள பொதிகையில்—ஆரப்பொதும்பர் - சந்தனச்சோலையுள்—அடைகுளிர்சாரல் - நெருங்கிய குளிர்ந்தசாரலின்கண்—

சுரும்புடன் - வண்டுகளுடனே—துணாமலர்விரிந்தகொடியே-பூங்கொத்துகள்மலர்ந்த கொடியே ;

விண்விரித்தொடுக்குமிரவிவண்கவிகைக்
கிட்டுறைகாம்பெனவிட்டெழுகாம்பே
மரகதஞ்சினைத்தசிறைமயிற்குலமே

விண்விரிததொடுக்கும் - விண்ணில் கிரணங்களை பரப்பிச்சுருக்காகின்ற—இரவிவண்கவிகைக்கு - சூரியனாகியநல்லகுடைக்கு—இட்டுறைகாம்பென - அமைததிருக்குங்காம்புபோல—விட்டெழுகாம்பே - மேலோங்கி யெழுந்த மூங்கிலே—மரகதஞ்சினைத்த - மரகதமணி கிளைத்தாறபோலும்—சிறைமயிற்குலமே-சிறையையுள்ள மயிலினமே,

நீலப்போதும்பேதையும்விழித்த
பொறியுடலுழைழையேயெறிபுனமணியே

நீலபபோதும் - நீலோறபலமலரும்—பேதையும் - பெண்களது கண்ணும்போல—விழித்த- விழித்த —பொறியுடலுழையே - உடலிற புள்ளியுள்ள மானினமே—எறிபுனமணியே - இனையறுத்த புனங்களிலுளளமணியே,

பாசிழைப்பட்டுநூற்கழிபரப்பிய
கிளைவாய்க்கிடைத்தவளைவாய்க்கிளியே
மைந்தர்கண்சென்றுமாதருட்டடைந்த
பொழிமதுப்புதுமலர்ப்போக்குடைசுரும்பே

பாசிழைப்பட்டுநூல் - பசியவிழையாகிய பட்டுநூலை—கழிபரபபிய - கழியிற்பரபபியதுபோல—கிளைவாய்கிடைத்த-மூங்கிலின்கண்ணிருககின்ற—வளைவாய்க்கிளியே - வளைந்த வாயினையுடைய கிள்ளையே—மைந்தர்கண்சென்று - ஆடவர்கண்கள் சென்று—மாதருட்டடைந்த - மாதரிடத்தே தடைபட்டாற்

போலும்—பொழிமதுப்புதுமலர் - மதுப்பொழிகின்ற நாண்மல ரிடத்து—போக்குடைச்சுரும்பே-போதலையுடைய வண்டே,

வெறிமுதிர்செம்மன்முறிமுகங்கொடுக்குஞ்
சந்தனப்பொதும்பர்த்தழைசினைபபொழிலே
கொள்ளையஞ்சுகமுங்குருவியுங்கடிய
விருகாற்கவணிற்கெரிமணிசுமந்த
நெடுங்காற்குற்றுழிநிழல்வைப்பிதணே

வெறிமுதிர்செம்மல் - மணமுதிர்ந்த பழம்பூவை—முறி முகங்கொடுக்கும் - தளிர்முகத்தினின்றுஞ் சொரியாநின்ற—சந் தனப்பொதும்பர்- சந்தனமரங்களால்—தழைசினைப்பொழிலே- கிளைகள் தழைந்துள்ள சோலையே—கொள்ளையஞ்சுகமும் - புன மழிவுசெய்யும் அழகிய கிளிகளையும்—குருவியுங்கடிய - குருவிக ளையும் ஏனைப்பறவைகளையு மோச்சுமாறு—இருகாற்கவணிற்கு- இரண்டு நுனியையுடைய கவணில்வைத்துவீசுதற்கு—எரிமணி சுமந்த - சிவந்தபரன் மணிகளைச்சுமந்த—நெடுங்காற்குற்றுழி- நெடிய காலையுஞ் சிறிய விடத்தையு முடைய—நிழல்வைப்பித ணே-பந்தலானிழல்செய்யும் பரணே,

நெருநற்கண்டவெற்குதவியவின்ப
மிற்றையிற்கரந்தவிருண்மனமென்னே

நெருநற்கண்டவெற்கு - நேற்றுக் கண்டவெனக்கு—உத வியவின்பம் - தந்தவின்பத்தை—இற்றையிற்கரந்த - இன்று தராம லொளித்த—இருண்மனமென்னே - வஞ்சித்த மனதென் னே,

இவணிற்கவைத்தவேலாக்கடுங்கண்
கொடுத்துண்டவாபின்கரந்தமைகடுகசு
மீங்கிவைகிடகக

இவண் - இவ்விடத்தே—சிறக்கவைத்த - யான்மயங்கி நிற்கும்படிவிட்ட—ஏலாக்கடுங்கண் - தகாதகொடுமை—கொடுத்துண்டவா - முன்னே யொருவற்குப பகிர்ந்துணடவர்—பின் - பின்பு—கரந்தமைகடுக்கும் - கொடாமலொளித்த தன்மைபோலுகின்றது—ஈங்கிவைகிடக்க - இவையிம்மட்டிருகக ;

என்னிழலிரும்புனத்
திருநதொளிரருந்தேனிலதானீரு
நின்புனமல்லவென்றென்புலம்வெளிப்பட
வறைதல்வேண்டும்

என்னிழல் - எனதுநிழல்போல—இருமபுனத்து - இப்பெரியபுனத்தின்கண்—இருநதொளிர - விளங்கியிருந்த—அருந்தேன் - அருமையுள்ள தேனையொபபாள்—இலதால் - ஈங்கு இலளாதலால்—நின்புலமல்லவென்று - இஃதுநினதாகிய புனமன்றென்று—என்புலம்வெளிப்பட - எனதறிவிற்கு விளங்குமாறு—நீரும் அறைதல்வேண்டும் - நீவிருஞ்சொல்லல்வேண்டும் ;

அப்புனநீரேல்
முன்னங்கண்டவனன்றென்
றுன்னாவுதவுதலுயர்ந்தோர்கடனே.

அப்புனம் - அப்புனத்திலுள்ளோர்—நீரேல் - நீவிராயிருப்பீராயின்—முன்னங்கண்டவன் - முன்னமீங்குவரக்கண்டவன்—அன்றென்றுன்னா-யான் அல்லனென்றுன்னாமல்—உதவுதல்-(தேனையொப்பாள் சென்றவழி) சொல்லுதல்—உயர்ந்தோர்கடன்-பெரியராயினோர் முறைமையாகும்—எ-று.

துணர்மலர்விரிந்த கொடியே காம்பே மயிற்குலமே எறிபுனமணியே வளைவாய்க்கிளியே சுரும்பே பொழிலே இதனை நெருநற்கண்டவெற்கு உதவியவின்பம் இற்றையிற் கரந்த விருண்

மனமென், நிற்கவைத்த வேலாககடுங்கண் கொடுத்துண்டவர்பி ன் காந்தமைகடுக்கும் இவைகிடக்க இரும்புனத் திருந்தொளி ரருந்தேனிலதால் நின்புல மல்லவென்று என்புலம் வெளிப்பட நீ ரும் அறைதல்வேணடும் அபபுனம்நீரோல் முன்னங் கண்டவன் அன்றென்றுன்னு உதவுதல் உயர்ந்தோர் கடனென வினைமுடி வுசெய்க. (அ௩)

---

## நெஞ்சொடுவருந்தல்.

நெஞ்சொடுவருந்தலென்பது - பிரிந்தமை கூறககேட்ட த லேமகள், அன்றவனைவிடாது என்னைவிட்டு அவரது தேர்பபின் சென்றநெஞ்சம் இன்று மவ்வாறுசெய்யாது என்னை வருத்தாநி ன்றதெனத் தன்னெஞ்சொடு வருந்தா நிற்றல். அதற்குசசெய் யுள்:—

ஏர்ப்பின்னைதோண்முன் மணந்தவனேத்த வெழிறிக ழூஞ், சீர்ப்பொன்னைவென்றசெறிகழலோன்றில்லைச் சூ ழ்பொழில்வாய்க், கார்ப்புன்னைபொன்னவிழமுத்தமண விற்கலந்தகன்றூர், தேர்ப்பின்னைச் சென்றவென் னெஞ் சென்கொலாமின்று செய்கின்றதே. (உ௭௩)

வெற்ப ஷீங்க ப்
பொற்பு வாடிய து.

இ-ள். அழகையுடைய பின்னையென் கின்ற தேவியுடைய தோள்களை முற்காலத்துக் கலந்த மாயோன்நின்றுபரவ எழில்வி ளங்குஞ் செம்பொன்னை வென்ற திருவடிகளை யுடையவனது தி ல்லைக்கட்சூழ்ந்த பொழிலிடத்துக் கரியபுன்னை பொன்போல ம லராநின்ற முத்துப்போலு மணலையுடையதோ ரிடத்துக் கூடி

நீங்கினவராது தோர்ப்பின் சென்ற என்னெஞ்சம் இவ்விடத் தின்று செய்கின்றதென்னோ! அறிகின்றிலேன்—எ-று. (௨எ௩.)

---

நேரிசையாசிரியப்பா.

வடமொழிவிதித்தவிசை நூல்வழக்குடை
னடுத்தனவெண்ணான்கங்குலியகத்தினு
நாற்பதிற்றிரட்டிநாலங்குலியினுங
குறுமையுநெடுமையுங்கோடல்பெற்றைதா
யாயிரந்தந்திரிநிறைபொதுவிசித்துக்
கோடிமூன்றிற்குறிதுமணிகுயிற்றி
யிருநிலங்கிடத்திமகரங்கரங்கதுவ
வாயிரத்தெட்டிலமைந்தனபிறப்புப்
பிறவிப்பேதத்துறையதுபோல
வாரியப்பதங்கொளாரதப்பேரியாழ்
நன்னர்கொளன்பானனிமுகம்புலம்ப
மூந்நான்கங்குலிமுழுவுடற்சுற்று
மைம்பதிற்றிரட்டியாறுடன்கழித்த
வங்குலிநெடுமையுமமைதுட்டோங்கே
யொன்பதுதந்திரியுறுத்திநிலைநீக்கி
யறுவாய்க்காயிரண்டிணைத்துவகைகட்டித்
தோள்கால்வதிந்துதொழிற்படத்தோன்றுந்
தும்புருக்கருவியுந்துன்னிநின்றிசைப்ப
வெழுவெனவுடம்புபெற்றெண்பதங்குலியின்
றந்திரிநூறுதழங்கியமுகத்த
கிசகப்பேரியாழ்கிளையுடன்முரல
நிறமதிவட்டத்துமுயலுரிவிசித்த
நாப்பணெற்றைநரம்புகடிப்பமைத்
தந்நரம்பிருபத்தாறங்குலிபெற

விடக்கரந்துவக்கியிடக்கீழமைத்துப்
புறவிரன்மூன்றினுனிவிரலகத்து
மறுபததிரண்டிசையனைத்துயிரவணங்கு
மருத்துவப்பெயர்பெறும்வானக்கருவி
தாங்கலுந்துள்ளலுந்துவக்கினின்றிசைப்ப
நான்முகன்முதலாமூவரும்போற்ற
முனிவரஞ்சலியுடன்முகமணியும்பத்
தேவர்களனைவருந்திசைதிசையிறைஞ்ச
வின்பப்பசுங்கொடியிடப்பாற்படர
வெள்ளியங்குன்றமவிளங்கவீற்றிருந்த
முன்னவன்கூடன்முறைவணங்காரொன
வரவப்பசுந்தலையரும்பவிழ்கணைக்கா
னெய்தற்பாசடைநெடுங்காட்டொளிக்குங்
கண்ணெனக்குறித்தகருங்கயற்கணத்தை
வெள்ளுடற்கூர்வாய்ச்செந்தாட்குருகின
மரவெயிறனைத்தமுள்ளிலைமுடக்கைதைகள்
கான்றலர்கடிமலர்க்கரந்துறைந்துண்ணுங்
கருங்கழிகிடந்தகானலங்கரைவாய்
மெய்படுகடுஞ்சூண்மின்னெனத்துறந்தவர்
சுவலுளைக்கவனப்புள்ளியற்கலிமா
னோக்கமறைத்தபரிதிகொணெடுந்தேர்ப்
பின்னொடுசென்றவென்பெரும்பிழைநெஞ்சஞ்
சென்றுழிச்சென்றுழிச்சேறலுமுளவோ
வவ்வினைப்பயனுழியருந்தவம்பெறுமோ
விடைவழிநீங்கியென்னைதிருறுங்கொல்லோ
வன்றியுநெடுநாளமைந்துடன்வருமோ
யாதெனநினைகிலன்மாதோ
பேதைகொள்ளாதொழிமனங்கடுத்தே. ௮௪

---*---

வடமொழிவிதித்த ஒழிமனங்கடுத்தே. பகுதி-வரைபொருட்பிரிதல, துறை-நெஞ்சொடுவருந்தல். *

வடமொழிவிதித்தவிசை நூல்வழக்குட
னடுத்தனவெண்ணுனகங்குலியகத்தினு
நாற்பதிற்றிரட்டிநாலங்குலியினுங்
குறுமையுநெடுமையுங்கோடல்பெற்றைதாய்

(இதனதுபதபொருள)

வடமொழிவிதித்த - தேவபாடையி னிருமித்த—இசைநூல்வழககுடன் - இசைநூன்முறைப்படி—அடுத்தன - பொருந்தியனவாகிய—எண்ணுன்கு - முப்பத் திரண்டு—ஆங்குலியகத்தினும் - விரலளவினும்—நாறபதிற்றிரட்டிநாலங்குலியினும் - எணபத்திநான்கு விரலளவினும்முறையே—குறுமையுநெடுமையும் - குறுக்கமும் நீட்சியும்—கோடல்பெற்று - கொள்ளுதலைப் பெற்று—ஐதாய் - அழகினதாய் ;

ஆயிரந்தந்திரிநிறைபொதுவிசித்துக்
கோடிமூன்றிற்குறித்துமணிகுயிற்றி
யிருநிலங்கிடத்திமகங்காங்கதுவ
பிறவிப்பேதத்துறையதுபோல

ஆயிரந்தந்திரி - ஆயிரந்தந்திகள—நிறைபொதுவிசித்து - நிறைவாச் சமனுறவிறுககிய—கோடிமூன்றில் - மூன்றுமூலையாக—குறித்து-செய்து—மணிகுயிற்றி - மணிகளிழைத்து—இருநிலங்கிடத்தி - பூமியிற்கிடத்தி—மகங்காங்கதுவ - மகமுங்கையும் விடாதுபற்ற—பிறவிப்பேதத்துறையதுபோல-பிறப்பின்வேறுபாட்டின் தோறறம்போல ;

ஆயிரத்தெட்டிலமைந்தனபிறப்பு
வாரியப்பதங்கொளுரைதபபேரியாழ்
நன்னாகொளனபானனிமுகம்புலம்ப

ஆயிரத்தெட்டில் - ஆயிரத்தெண் வகையாக—அமைந்தன பிறப்பு - தோற்றுவன வாகிய நாதங்க ளமைந்த—ஆரியப்பதங் கொள் - ஆரியபதத்தைக்கொண் டிருக்கின்ற—நாரதப்பேரியாழ் - நாரதமென்னும் பெயரினையுடைய யாழ்—நன்னர்கொளன்பால் - நன்மையைக கொண் டிருக்கின்ற வன்புடனே—நனிமுகம்புலம்ப - மிருதியும் வாயாற்பாடவும் ;

முந்நான்கங்குலிமுழுவுடற்சுற்று
மைம்பதிற்றிரட்டியாறுடன்கழித்த
வங்குலிநெடுமையுமமைத்துட்சேர்ந்தே
யொன்பதுதந்திரியுறுத்திநிலைநீக்கி
யறுவாய்க்காயிரண்டணைத்துவளைகட்டித்
தோள்கால்வதிந்துதொழிற்படத்தோன்றுந்
தும்புருக்கருவியும்

முந்நான்கங்குலி - பன்னிரண்டுவிரலளவாகிய—முழுவுடற்சுற்றும் - உடற்சுற்று முழுமையுமாகிய குறுக்கமும்—ஐம்பதிற்றிரட்டியாறுடன்கழித்த - தொண்ணூற்றுநான்கு—அங்குலி நெடுமையும்-விரலளவாகிய நெடுமையுமாக—அமைத்து - செய்து—உட்சேர்ந்து - உள்ளடைத்து—ஒன்பதுதந்திரி - ஒன்பதுதந்திகளை—உறுத்தி - பொருத்தி—நிலைநீக்கி - நிலைகளைநீக்கஞ்செய்து—அறுவாய்க்கு - வளையறுத்த நிலையில்—ஆயிரண்டணைத்து-இரண்டாச்சேர்த்து—வளைகட்டி- எல்லைகட்டி—தோள்கால்வதிந்து - தோளிலுங் காலிலுந்தங்கவைத்து—தொழிற்படத்தோன்றும் - நாதந்தோன்றுகின்ற தொழிலுண்டாம்படி—தும்புருக்கருவியும் - தும்புருவென்னும் வீணையும் ;

துன்னிநின்றிசைபப
வெழுவெணவுடம்புபெற்றெண்பதங்குலியின்

றந்திரிநூறுதழங்கியமுகத்த
கீசகபேரியாழ்கிளையுடன்முரல

துன்னிநின்றிசைப்ப - பொருந்திநின்றுபாடவும்—எழுவெணவுடம்புபெற்று - வயிரமானவுடல்பெற்று—எண்பதங்குலியின் - எண்பதுவிரலளவு நீட்சியுடனே—தந்திரிநூறுதழங்கிய-நூறுதந்திரிகளா லொலிக்காநின்ற—முகத்த- முகத்தினையுடைய—கீசகப்பேரியாழ் - கீசகமென்னும் பெயரினையுடையயாழ்—கிளையுடன்முரல - பண்ணோடுபாடவும் ;

நிறைமதிவட்டத்துமுயலுரிவிசித்த
நாப்பணொற்றைநரம்புகடிப்பமைத்
தந்நரம்பிருபத்தாறங்குலிபெற
விடக்கரந்துவக்கியிடக்கீழமைத்துப்
புறவிரன்மூன்றினுனிவிரலகத்து
மறுபத்திரண்டிசையனைத்துயிர்வணங்கு
மருத்துவப்பெயர்பெறும்வானக்கருவி
தாங்கலுந்துள்ளலுந்துவக்கிநின்றிசைப்ப

நிறைமதிவட்டத்து - முழுமதிபோலும் வட்டவடிவாய்—முயலுரிவிசித்த - முயலின் றோலினாற்கட்டி—நாப்பண் - நடுவில்—ஒற்றைநரம்பு - ஒரு நரம்பாகிய—கடிப்பமைத்து - மார்ச்சனை யமைத்து—அந்நரம்பு - அந்த நரம்பு—இருபத்தாறங்குலிபெற - இருபத்தாறு விரலளவு பெறும்படி—இடக்கரந்துவக்கி - இடக்கரத்தாற்கட்டி—இடக்கீழமைத்து- இடப்பாலிலமைத்து—புறவிரன்மூன்றின் - மூன்றுவிரலின் புறத்திலும்—நுனிவிரலகத்தும் - விரனுனியினிடத்தும்—அறுபத்திரண்டிசை- அறுபத்திரண்டுவகையாகிய இசையை—அனைத்துயிர்வணங்கும - எல்லாவுயிரும் வணங்காநின்ற—மருத்துவப்பெயர்பெறும்-மரு

த்துவமென்னும் பெயர்பெற்ற—வானக்கருவி - தேவயாழ்—தூங்கலுந் துள்ளலும் - தூங்கலோசையுந் துள்ளலோசையும்—துவக்கின்றிசைப்ப - தழுவின்றுபாடவும் ;

நான்முகன்முதலாமூவரும்போற்ற
முனிவரஞ்சலியுடன்முகமனியம்பத்
தேவர்களனைவருந்திசைதிசையிறைஞ்ச
வின்பப்பசுங்கொடியிடப்பாற்படர
வெள்ளியங்குன்றம்விளங்கவீற்றிருந்த
முன்னவன்கூடன்முறைவணங்காரென

நான்முகன்முதலா - பிரமன்முதலாகிய—மூவரும்போற்ற - முத்தேவருந் துதிக்க—முனிவரஞ்சலியுடன் - முனிவர்களஞ்சலியோடு—முகமனியம்ப-உபசரிக்க—தேவர்களனைவரும்-தேவர்கள்யாரும்—திசைதிசையிறைஞ்ச- திசைகள்தோறும்வணங்கவும்—இன்பப்பசுங்கொடி - இன்பத்தைத்தரும் இளமையான ஆனந்தவல்லி—இடப்பாற்படர - இடப்பாலிருக்க—வெள்ளியங்குன்றம் - வெள்ளிமலையில்—விளங்கவீற்றிருந்த - ஞானபிரகாசந் தோன்றுமாறுவீற்றிருந்தருளும்—முன்னவன் - முதல்வனது—கூடல் - மதுரைத்திருப்பதியை—முறைவணங்காரென-விதிமுறைவணங்கார்போல ;

அரவப்பசுந்தலையரும்பவிழ்கணைக்கா
னெய்தற்பாசடைநெடுங்காட்டொளிக்குங்
கண்ணெனக்குறித்தகருங்கயற்கணத்தை

அரவப்பசுந்தலை - பாம்பின்பசிய தலைபோலும்—அரும்பவிழ் - அரும்புவிரிந்த—கணைக்கால் - திரண்ட தாளையுடைய—நெய்தற்பாசடை - அல்லியினது பச்சிலைகளாகிய—நெடுங்காடு-பெரியகாட்டில்—ஒளிக்கும் - மறைகின்ற—கண்ணெனக்குறித்

த - மாதர்கண்ணென்று குறிக்கப்பட்ட—கருங்கயற்கணத்தை- பெரியசேல்மீன்களை ;

வெள்ளுடற்கூர்வாய்ச்செந்தாட்குருகின
மரவெயிறணைத்தமுள்ளிலைமுடக்கைதைகள்
கான்றலர்கடிமலர்காந்துறைந்துண்ணும்

வெள்ளுடல் - வெள்ளியவுடலையும்—கூர்வாய் - கூரியவாயையும்—செந்தாள் - செங்காலையுமுடைய—குருகினம்- நாரைகள்—அரவெயிறணைத்த - பாம்பின் பல்லைப்போலும் பொருந்திய—முள்ளிலை - முண்மடல்நெருங்கிய—முடக்கைதகள் - வளைவாகிய தாழைகளிடத்து—கான்றலர்கடிமலர் - வாசனையை வீசியலர்ந்த மலர்களோடு—காந்துறைந்து - ஒன்றியொளித்திருந்து—உண்ணும் - கொத்தியுண்ணுகின்ற ;

கருங்கழிகிடந்தகானலங்கனைவாய்
மெய்ப்படுகடுஞ்சூண்மின்னெனத்துறந்தவர்
சுவலுளைக்கவனப்புள்ளியற்கலிமா
னேக்கமறைத்தபரிதிகொணெடுந்தேர்ப்
பின்னுெடுசென்றவென்பெரும்பீழைநெஞ்சம்

கருங்கழிகிடந்த - பெரியகழிசூழ்ந்த—கானலங்கனைவாய்- கடற்கரையில்—மெய்ப்படுகடுஞ்சூள் - உண்மையாகச்சொல்லிய பெரியசத்தியத்தை—மின்னெனத்துறந்தவர்- மின்னலைப்போல விரைவின்மறந்தவரது—சுவலுளை - பிடரிமயிரினையுடைய—கவனம்- விரைவுள்ள—புள்ளியல்- புள்ளின்றன்மையையுடைய—கலிமான் - கனைக்கின்றகுதிரைபூண்ட—நோக்கமறைத்த - பார்க்கின்றகண்களைமறைத்த—பரிதிகொணெடுந்தேர் - உருளைபூட்டிய பெரியதேரின்—பின்னுெடுசென்ற - பின்னுற்சென்ற—என பெரும்பீழைநெஞ்சம் - எனதுமிகுந்த துயருறுகின்றமனம்;

சென்றுழிச்சென்றுழிச்சேறலுமுளவோ
வவ்வினைப்பயனுழியருந்தவம்பெறுமோ
விடைவழிநீங்கியென்னெதிருறுங்கொல்லோ
வன்றியுநெடுநாளமைந்துடன்வருமோ
யாதெனநினைக்கிலன்மாதோ
பேதைகொள்ளாதொழிமனங்கடுத்தே.

சென்றுழிச்சென்றுழி - அத்தேர்சென்ற விடங்களெல்லாம்—சேறலுமுளவோ - செல்லுதலுமுண்டோ—அவ்வினைப்பயனுழி- அவர்சென்றவினைமுற்றுமளவும்—அருந்தவம்பெறுமோ- அரியதவத்தைச் செய்யுமோ—இடைவழிநீங்கி - நடுவழியிலவரைவிட்டு—என்னெதிருறுங்கொல்லோ - எனக்கெதிராக வருமோ—அன்றியும் - அப்படியல்லது—நெடுநாளமைந்து-நெடுநாளவருடனிருந்து—உடன்வருமோ - அவர் வருங்காற் கூடவருமோ—யாதென - எதுவென்று—மனம் - மனமே—கடுத்து-விரைய—நினைக்கிலன் - நினைக்கவல்லேனில்லை—பேதைகொளளாது - பேதைமைப்படாமல்—ஒழி-நிற்பாயாக—எ-று.

முன்னவன் கூடல் வணங்காரென கருங்கயற் கணத்தை செந்தாட்குருகினம் உண்ணும் கானலங்கனைவாய் கடுஞ்சூள் மின்னெனத் துறந்தவர் பரிதிநொணெடுந்தேர் பின்னுடுசென்ற நெஞ்சம் சேறலுமுளவோ அருந்தவம்பெறுமோ இடைவழி நீங்கி எதிருறுங்கொல்லோ அன்றியுடன்வருமோ யாதெனநினைக்கிலன் ஒழியென வினைமுடிவுசெய்க. (அச)

---

## காப்புச்சிறைமிக்ககையறுகிளவி.

காப்புச்சிறைமிக்க கையறுகிளவியென்பது - காமமிக்கெதிர்ப்பட விரும்பாநின்ற தலைமகள், இவ்விடையிடெல்லா நீந்தி ஒ

ருவழியான் வந்தாராயினும் இஞ்ஞானி குறைதராயின் றமையின் யாமிவரை யெதிர்ப்படுதலரிதெனக் காபபுச்சிறைமிக்கு வருநதா நிற்றல். அதற்குச்செய்யுள்.—

இன்னறவார்பொழிற்றில்லைநகரிறைசேர்விழவிற்
பன்னிறமாலைத்தொகைபகலாம்பல்விளக்கிருளின்
றுன்னறவுய்க்குமில்லோருந்துயிலிற்றுறைவாமிக்க
கொன்னிறவேலொடுவந்திடின்ஞாளிகுறைதருமே.

மெய்யுறு காவலி	ற்
கையறு கிள	வி.

இ-ள். இனியநறவார்ந்த பொழிலையுடைய தில்லைநகர்க் கி றைவனுகியவனது சீரையுடைய விழவின்கண் மாணிக்கமுதலா யினவறறுற் பல்நிறத்தை யுடையவாகிய மாலைகளின் றெகைக ளான் இராபபொழுதும் பகலாகாநிற்கும். அதுவேயுமன்றிப்பல வாகிய விளககு இருளின்பொருந்துத லறத் தூரகரும். இவ்வி டையீடே யன்றி ஒருபொழுதும்துயிலாத இல்லோருமொரு கா ற்றுயில்வராயின், துறைவா அச்சத்தைச் செய்யு மிக்கநிறத்தை யுடைய வேலோடொருகால் வருவராயின், அப்பொழுது நாய்கு ரையாநிற்கும். அதனால், அவரை நாமெதிர்ப்படுத லரிதுபோலு ம்—எ-று.	(கஎடு)

நேரிசையாசிரியபபா.

கடுவினையங்குரங்காட்டியுள்ளழுக்கா
றெண்டிசைச்சாகைகொண்டிருண்மனம்பொதுளி
கொடுங்கொலைவடுத்துக்கடும்பழிச்சடையலைந் [க்
திரண்டைஞ்ஞூறுதிரண்டவக்காவதற்
சுற்றுடல்பெற்றுத்துணைப்பதிறையிர

மற்றதுநீண்டுமெணியுடற்போகி
யைம்பதுநூறுடனகன்றுசுற்றெழுக்கிப்
பெருங்கவிழிணாதந்தவைகீழ்க்குலவிய
விடமாக்கொன்றநெடுவேற்குளவன்
குன்றமர்வள்ளியங்கொடியொடுதுவக்கிப்
பன்னிருகண்விழித்தென்வினைதுரக்கு
மருட்பரங்குன்றமுடுத்தணிகூடற்
குறும்பிறைமுடித்தநெடுஞ்சடையொருத்தனைத்
தெய்வங்கொள்ளார்சிந்தையதென்னக்
கிடந்தவல்லிரவிற்கிளர்மழைகான்ற
வயலுழும்பருமடக்குபுனலொருவித்
தேவரிற்கல்லார்சிந்தையிற்புரண்ட
கவலையங்காற்குறிகண்டுபொழிற்றுள்ளு
மிமையாச்சூரும்பலகண்டொருங்காத்
துடியுங்கண்ணிற்றுஞ்சாக்கண்ணினர்
கடியுந்துனைவிற்கையகன்றெறிமணித்
தொகையிருள்கொல்லுமுன்றிற்பக்கத்
தினைமுகப்பறையறைகடிப்புடைத்தோகை
வயிற்றுளடக்கிவளைகிடைகிடக்கு
முழக்கிமெய்கவருமுகக்கொலைஞாளி
யதிர்குரைப்படக்கியிற்புறத்தணைந்தநம்
பூம்புனலூரனைப்பொருந்தாநெடுங்க
ணன்னையிற்போக்கியவரும்பெருந்தவறு
மாலையுங்கண்ணுமேனியுமுள்ளமு
மடங்காத்தேவர்மருந்துவாய்மடுக்க
முகங்கவிழ்வேலையிலறங்குடிபோகிய
மாயவல்லரக்கர்தட்டிக்
காய்புருகுத்தவிதியொத்தனவே. ௮௫

---*---

கடுவினையங்குரம் விதியொத்தனவே. பகுதி - இரவுக்குறி, துறை - காப்புச்சிறைமிக்ககையறுகிளவி. *

கடுவினையங்குராங்காட்டியுள்ளழுக்கா
றெண்டிசைச்சாகைகொண்டு

(இதனதுபதப்பொருள்)

கடுவினை - நஞ்சையொத்த மாயையாகிய—அங்குராங்காட்டி - முளையைத்தோற்றுவித்து—உள்ளழுக்காறு - உள்ளத்தின் கண்ணழுக்காறாகிய—சாகை - கிளைகளை—எண்டிசைகொண்டு - எட்டுத்திக்கிலும்பரப்பி ;

இருண்மனம்பொதுளி
இரண்டைஞ்ஞூறுதிரண்டவக்காவதஞ்
சுற்றுடல்பெற்று

இருண்மனம் - இருண்டமனமாகிய தளிர்களை—பொதுளி - தளிர்த்து—சுற்றுடல் - மரத்தடியின் சுற்றளவானது—இரண்டைஞ்ஞூறு திரண்டவக்காவதம்பெற்று - ஆயிரங்காததூரங் இட்ரசியாகப்பெற்று;

துணைப்பதினாயிர
மற்றதுநீண்டுமணியுடற்போகி
யைம்பதுநூறுடன்கன்றுசுற்றொழுகி

மற்றது - அந்த மரமானது—துணைப்பதினாயிரம் - இருபதினாயிரம—நீண்டு - காவததூர முயர்ந்து—மணியுடற்போகி - அழகியவுடலானதுசென்று—சுற்று - சுற்றிலும்—ஐம்பது நூறுடன் - ஐயாயிரங்காததூரம்—அகன்றொழுகி - அகன்று பரவி ;

கொடுங்கோலேவடுத்துக்கடும்பழிச்சடையலேந
பெருங்களவிணர்தந்தவைகீழ்க்குலவிய
விடமாக்கொன்றநெடுவேற்குளவன்

பெருங்களவு - மிகுந்த வஞ்சகமாகிய—இணர்தந்து - பூங்கொத்துக்களைத்தந்து—கொடுங்கோலே - கொடியகோலேயாகிய பிஞ்சுகளே—வடுத்து - அரும்பி—அவை - இளேமுதலியவைகள்—கீழ்க்குலவிய - கீழேபொருந்திய தாகி—கடும்பழிச்சடையலேந்து-மிகுந்தபழியாகியவேர்மேலே யலேந்ததாகிய—விடமாக்கொன்ற - விடத்தையொத்த மாமரத்தைத்தடிந்த—நெடுவேற்குளவன் - நெடியவேலாயுதத்தையுடைய முருகக்கடவுள்,

குன்றமர்வள்ளியங்கொடியொடுதுவக்கிப்
பன்னிருகண்விழித்தென்வினைதுரக்கு
மருட்பரங்குன்றமுடுத்தணிகூடல்

குன்றமர்வள்ளியங்கொடியொடு-குன்றினிடத் தமர்ந்திருந்த வள்ளிநாச்சியாரென்னுங்கொடியுடனே—துவக்கி-கட்டுப்பட்டு—பன்னிருகண்விழித்து - பன்னிரண்டு கண்களாலுநோக்கி—என்வினைதுரக்கும் - எனதிருவினையையும்போக்காநின்ற—அருட்பரங்குன்றம் - அருளுக்கிடமாகிய திருப்பரங்குன்றத்தால்—உடுத்தணி - சூழ்ந்தலங்கரிக்கப்பட்ட—கூடல் - மதுரையில்,

குறும்பிறைமுடித்தநெடுஞ்சடையொருத்தனைத்
தெய்வங்கொள்ளாரசிந்தையதென்ன

குறும்பிறைமுடித்த - சிறியபிறையைத்தரித்த—நெடுஞ்சடை - நெடியசடையை யுடைய—ஒருத்தனை - ஒப்பற்றவனை—தெய்வங்கொள்ளார் - தெய்வமென்றுமதியாதார—சிந்தையதென்ன - மனம்போல,

இடந்தவல்லிரவிற்றிளர்மழைகான்ற
வயலுமும்பருமடக்குபுனலொருவித்
தேவருட்கல்லாசிந்தையிற்புரண்ட

இடந்தவல்லிரவில் - இருண்டபெரிய விராக்காலத்தில்—தி ளர்மழைகான்ற - நிறைநத மழையைப்பொழிந்த—அயலுமும்ப ரும் - மண்ணையும் விண்ணையும்—அடக்குபுனல் - தன்னுக்கு ளடக்கிய புனலை—ஒருவி - கடந்து—தேவருள் - தெய்வத்தின ருளை—கல்லார் - அறியாதவர்களது—சிந்தையில்- மனதைப்போ ல—புரண்ட - மாறுபட்ட,

கவலையுங்காற்குறிகண்டுபொழிற்றுள்ளு
மிமையாச்சூரும்பலகண்டொருங்காத்
துடியின்கணணிற றுஞ்சாக்கண்ணினர்
கடியுந்துனைவிற்கையகன்று

கவலையும் - கவர்வழியையும்—காற்குறிகண்டு-காற்குறியா ற்கண்டு—பொழிற்றுள்ளும் - சோலைகளில் கடமாகின்ற—இ மையாச்சூரும் - கண்ணிமைத்தலில்லாததெய்வங்களையும்—பல கண்டு-பலவர்கக் கண்டு—ஒருங்கா - அடங்காத—துடியின்கண் ணில் - குறிஞ்சிப்பறையி ேனாசையால்—துஞ்சாக்கண்ணினர் - உறங்காத கண்ணையுடையவர்களது—கடியும் - காவலையும்—து னைவில்-சிகிரத்தில்—கையகன்று - நீங்கி ;

எரிமணித்
தொனகையிருள்கொல்லுமுன்றிற்பக்கத்
திணைமுகபபறையறைநகடிப்புடைத்தோகை
வயிற்றுளடகிவனை இடைஇடககு
முழகதிமெய்கவருமுககமொலிஞாலி
யதிாகுமாபபடககி

எரிமணித்தொகை - ஒளிருகின்ற மணிக்கூட்டங்கள்—இருள்கொல்லும்-இருளைநீக்கும்—மூன்றிற்பக்கத்து - வாய்தலினமுன்பு—இணைமுகப்பறை-இருமுகங்களையுடைய பறைகளை—அறை-அடிக்குங் கருவியாகிய—கடிப்புடை - குறுந்தடிபோலுமுடைய—தோகை-வாலை—வயிற்றுளடக்கி-வயிறறின்கண்ணடக்கி—வளைகிடைகிடக்கும் - வளைந்து படுத்திருக்கும்—முழக்கிமெய்கவரும்-குரைத்துத் தமரொன்று மயலாரொன்று முண்மையறிகின்ற—முககொலைஞாளி - கொலைமுகத்தையுடைய நாய்—அதிர்குரைப்படக்கி - குரைகின்ற வொலியையடக்கி;

இற்புறத்தணைந்தநம்
பூம்புனலூரனைப்பொருந்தாநெடுங்க
ணன்னையிற்போக்கியவரும்பெருநதவறு

இற்புறத்து-வீட்டின் பின்புறத்தே—அணைந்த - வந்த—நம்பூம்புனலூரனை - நமதழகிய நீராற்சூழப்பட்ட வூரையுடைய தலைவனை—பொருந்தாநெடுங்கண - உறங்காத நெடிய கண்ணையுடைய—அன்னையில் - நந்தாயினலே—போக்கிய - போய்விடச செய்த—அரும்பெருந்தவறு-நீக்கற்கரிய பெரிய விடையூறுனது (என்போன்றிருந்ததென்னில்);

மாலையுங்கண்ணுமேனியுமுள்ளமு
மயங்காத்தேவாமருந்துவாய்மடுகக

மாலையும்-தரித்தமாலைகளும்—கண்ணும் - இருகண்களும்—மேனியும்-தேகமும்—உள்ளமும் - மநமும்—மயங்கா-வேறுபடாத—தேவா் - தேவர்களது—மருந்து- அமிர்தத்தை—வாய்மடுக்க-வாயாலுண்ணுதற்கு ;

முகங்கவிழ்வேலையிலறங்குடிபோகிய
மாயவல்லரககாதட்டிக
காய்பாருகுத்தவிதியொத்தனவே.

முகங்கவிழ்வேலையில் - முகத்தைச்சாய்த்தசமயத்தில்—அறங்குடிபோகிய-தருமந் தம்மைவிட்டுக்குடிபோன—மாயவல்லரக்கர்-வஞ்சனையில்வல்ல வரக்கர்கள்—தட்டி- தட்டி—காய்-காய்ந்த—பார்-பூமியின்கண்—உகுத்த - சிந்தும்படிசெய்த—விதி-முறைமையை—ஒத்தன-ஒத்திருந்தது—எ-று.

விடமாகொன்ற நெடுவேற்குளவன் பன்னிருகண்விழித்து என்வினைதுரக்கு மருட்பரங்குன்ற முடுத்தணிகூடல் நெடுஞ்சடை யொருத்தனைகொள்ளார் சிநதையதென்ன வல்லிரவில் அயலுமும்பரு மடகருபுனலொருவி கல்லார் சிநதையிற்புரண்ட கவலையுங்காற்குறி கணடுரும்பலகண்டு கடியுங் கையகன்றுஞாளியதிர்குரைப்படக்கி இறபுறத் தணைந்த நம்புனலூரனை பொருந்தாநெடுங்க ணன்னையில் போககிய அரும்பெருந்தவறு தேவர்மருந்து வாய்மடுகக முகங்கவிழ்வேலையில்அரக்கர்தட்டி பாருகுத்த விதியொத்தனவென வினைமுடிவுசெய்க. (அடு)

---

## மணமுரசுகேட்டு மகிழ்ந்துரைத்தல்.

மணமுரசுகேட்டு மகிழ்ந்துரைத்தலென்பது - தோழி தலைமகளுக்குத் தேர்வரவு கூறுகின்ற அந்நிலைமைக்கண் மணமுரசு கேட்டு மனையிலுள்ளாா, இஃதிவ்வேநோக்கி யொலியாநின்றது மணமுரசெனவுட்கொண்டு, யாம் பூரணபொற்குடந் தோரண முதலாயினவற்றான் மனையை யலங்கரிப்போமென மகிழ்வொடு கூறாநிற்றல். அதற்குச்செய்யுள்:—

பூரணபொற்குடம்வைக்கமணிமுத்தம்பொன்பொதிந்த
தோரணநீடுகதூரியமார்க்கதொன்மாலயற்குங்
காரணனேரணிகண்ணுதலோன்கடற்றில்லையன்ன
வாரணவும்முலைமனறலென்றேங்குமணமுரசே. (உகசு)

நிலங்காவலர் நீண்மணத்      தி
னலங்கண்டவர் நயந்துரைத்த      து.

இ-ள். பழையராகிய அரியயனுக்குங் காரணனாயுள்ளான், அழகுண்டாகியகண்ணையுடைய நுதலையுடையான், அவனது கூடலையடைந்த தில்லையையொக்கும் வாராற்கட்டப்படு மளவைச் சென்றணையும் முலையையுடையாளது மணமென்று மணமுரசேங்காநின்றது, அதனால், வாயில்கடோறும் நீரானிறைக்கப்பட்ட பொற்குடத்தைவைக்க, மணியுமுத்தும் பொன்னின்கணழுத்திய தோரணம் எங்குமோங்குவதாக, ஆரியங்கணின்றார்ப்பனவாக—எ-று. (உகூசு)

---

நேரிசையாசிரியப்பா.

நாற்கடல்வளைத்தஞாலத்துயிரினை
யைந்தருக்கடவுளவன்புலத்தினைா
நடந்துபுக்குண்டும்பிறந்துபுக்கயின்று
முத்தொழிற்றேவருமுருங்கவுள்ளுறுத்து
நோன்றலைக்கொடுஞ்சூர்க்களவுயிருகாந்த
தழல்வேற்குமரன்சால்பரங்குன்ற
மணியொடும்பொன்னொடுமார்பணியணைத்த
பெருந்திருக்கூடலருந்தவாபெருமா
னிருசரணகலாவொருமையருளமெனச்
சுடர்விளக்கெடுமின்கோதைகடூக்குமின்
பூவும்பொரியுந்தூவுமினெழுதுமின்
சுண்ணமுந்தாதுந்துணைந்துகடூற்றுமின்
கரும்பெயற்குளிறிற்களிமயிலென்னக்
கிளர்ந்தயர்வாட்குமுன்கிளர்வினைச்சென்று
ருடலுயிர்தழைக்குமருள்வரவுணர்த்த
முல்லையம்படர்கொடிநீக்கிப்பிடவச

சொரியலர் நள்ளித் துணாப்பொலங்கடுக்கைக்
கிடைதரவொருவிககளவலாகிடநதிப்
பூவையயபுதுமலாபோயரக்கடுதத
கழுவியதிருமணிகால்பெற்றென்ன
நறபெருந்தாதுகாட்டு
மறபுதக்கோபததிருவரவதற்கே ௮௬

—*—

நாற்கடல்வளைத்த திருவரவதற்கே. பகுதி-வணாபொருட்பிரிதல், துறை-மணமுரசுகேட்டுமகிழ்ந்துரைத்தல். *

நாறகடல்வளைத்தநானிலத்துயிரினை
யைநதருககடவுளவன்புலத்தினரை

(இதனதுபதபபொருள.)

நாற்கடல்வளைத்த - நான்குதிசைக்கடலுந் தம்முளடக்கிய—நானிலத்துயிரினை - நானகுநிலத்தினு முள்ள வுயிரையும்—ஐந்தருக்கடவுள் - இந்திரனையும்—அவன்புலத்தினரை - அவனது நிலத்திலுள்ளதேவரையும் ;

நடந்துபுககுண்டும்பறந்துபுகாயின்று
முத்தொழிற்றேவருமுருஙகவுளளுறுத்தும்

நடந்துபுக்குண்டும் - நடந்துபோ யழித்தும்—பறந்துபுககயின்றும் - பறந்துபோ யுண்டும்—முத்தொழிறறேவரும் - முத்தொழிலையுடையதேவர்களும்—முருங்கவுள்ளுறுத்தும் - உளநடுங்கச்செய்யும் ;

நோன்றலைக்கொடுஞ்சூர்க்களவுயிர் நுகர்ந்த
தழல்வேற்குமரன்

நோன்றலை - வலியையுடைய—கொடுஞ்சூா - கொடியசூரனது—களவுயிர் நுகர்ந்த - கள்ளத்தன்மையதாகிய வுயிரையுண்

ட—தழல்வேற்குமரன் - அழலுகின்ற வேலையுடைய குமரக்கடவுள் ;

சால்பரங்குன்ற
மணியொடும்பொன்னொடுமொர்பணியணைத்த

சால் - நிறைந்துளள—பரஙகுன்றம் - திருபபரங் குன்றத்தை—மணியொடும - மாணிக்கங்க ளோடும்—பொன்னொடும்-பொன்னோடும்—மார்பணி - மதாணிப பதக்கமாக—.
தரித்த

பெருந்திருக்கூடலருநதவாபெருமா
னிருசரணகலாவொருமையருளமென

பெருந்திருககூடல் - பெரியவளப்பமுள்ள கூடலில்—அருந்தவர்பெருமான் - அரிய தவர்களது பெருமான்—இருசரணகலா - இரண்டுதிருவடிகளையும் விட்டுநீங்காத—ஒருமையருளமென - ஒருமைப்பாட்டினையுடையவர்களதுள்ளத்தைபபோல;

கரும்பெயற்குளிறிற்களிமயிலென்னக்
கிளர்ந்தயர்வாட்கு-கிளர்விணைச்சென்றோ
ருடலுயிர்தழைக்குமருள்வரவு

கரும்பெயற்குளிறின் - கரியமழைபெய்தலி னொலியினாலே—களிமயிலென்ன - களிக்கின்ற மயிலைப்போல—கிளர்வினைச சென்றோர் - மேலான வினையின்கட்சென்ற தலைவரது—உடலுயிர்தழைக்குமருள்வரவு - உடலுமுயிருந் தழைத்தற்குக்காரணமான கிருபையுள்ள வரவை—கிளார்ந்தயர்வாட்கு - மிகுதியாகத் தளருகின்ற தலைவிக்கு ;

முன்
உணர்த்த
முல்லையம்படாகொடிநீக்கிபபிடவச்

சொரியலர்தள்ளித்துணாபபொலங்கடுக்லைக்க
கிடைதரவொருவி

முன் - எதிராகவந்து—உணர்த்த - அறிவிக்க—முல்லையம்படர்கொடி - அழகாகபபடருகின்ற முல்லைக்கொடிகளை—நீக்கி - போக்கி—பிடவசொரியலர் - பிடவத்தினது மிகுதியாகச் சொரிகின்ற மலர்களை—தளளி - விலக்கி—துணர் - பூங்கொத்துக்களையுடைய—பொலங்கடுக்கை- பொற்கொன்றையானது—கிடைதரவு - இருக்குமிடத்தை—ஒருவி - நீங்கி ;

களவலாகிடததிப
பூவையமபுதுமலாபோயரககடுத்த
கழுவியதிருமணிகாலபெற்றென்ன
அறபுதககோபத்திருவரவு

களவலா - களாவினதலரை—கிடத்தி - உதிாத்து—பூவையம்புதுமலா - காயாவினது புதியமலரை—போக்கி - போக்கி—அரககடுத்த - அரக்கிலொட்டி—கழுவியதிருமணி - சாணைதீர்த்த வழுகியமாணிககம்—கால்பெற்றென்ன - கால்பெற்று வந்தாற்போல—அறபுதககோபத்திருவரவு - அற்புதமான விந்திரகோபத்தினல்லவரவானது,

அதற்கு
நற்பெருந்தூதுகாட்டும
சுடர்விளககெடுமின்கோதைதகடுக்குமின்
பூவும்பொரியுநதூவுமினெழுதுமின
சுணணமுநதாதுநதுணைத்துகடுேற்றுமின்

அதறகு - அவ்வருள வரவிறகு—நற்பெருந்தூது - மிகவு நன்மையான தூது—காடடும் - காட்டாநிறகும (ஆதலால்)—சுடர்விளக்கெடுமின - மாணிககவிளககமேந்துவீராக—கோதைதக

ள் - மலர்மாலைகளை — தூக்குமின் - நாறுவீராக — பூவும்பொரி யும் - மலருமபொரியும — தூவுமின் - தூவுவீராக — எழுதுமின் - தரைமெழுகிக் கோலமிடுவீராக — சுண்ணமுநதாதும் - வாசனை ச்சுண்ணமும் மலாத்தாதுகளுமாகிய — துணைத்துகள் - இருவ கைப்பொடிகளையும் — தூறுமின் - இறைப்பீராக — எ-று.

கூடலருந்தவர் பெருமான் இருசரணகலா ஒருமையருள மெனக் கிளாவினைச்சென்றோவரவை அயர்வாட்கு முன்னுண ர்த்த அரக்கடுத்த கழுவியதிருமணி கால்பெற் றென்ன அற்புத க்கோப நற்பெருந் தாதுகாட்டும்,ஆதலால், விளக்கெடுமின் கோ தைகள்தூக்குமின் பூவும்பொரியுந்தூவுமின் எழுதுமின் தூற்று மின்னென வினைமுடிவுசெய்க. (அகூ)

---

## வாய்மொழிகூறித் தலைமகள் வருந்தல்.

வாய்மொழிகூறித் தலைமகள் வருந்தலென்பது - கலகக்ங்க ண்டொத்ததோழிக்கு, முன்னிலைப் புறமொழியாக நின்னிற்பிரி யேன் பிரிவுமாற்றேனென்று சொன்னவர்தாமே பிரிவராயின், இதற்கு நாஞ்சொல்லுவ தென்னோவெனத் தலைமகனது வாய் மொழிகூறித தலைமகள் வருந்தாநிற்றல். அதற்குச்செய்யுள் —

பிரியாமையுமுயிரொன்றுவதும்பிரியிற்பெரிதுந் [ற்
தரியாமையுமொருங்கேநின்றுசாற்றினர் தையன்மெய்யி
பிரியாமைசெய்துநின்றோன்றில்லைப்பேரியலூரரன்ன
புரியாமையுமிதுவேயினியென்னும்புகல்வதுவே.(நககூ)

தீதறுகல்விகருச செல்வன்செல்லுமென ப்
போதுறுகுழலி புலம்பிய து.

இ-ள். தையலாடனது திருமேனியினின்றும் பிரியாமையை ச்செய்து நின்றவனது தில்லையிற் பெருநதன்மையையுடைய வூ

ரர் நம்மிற்பிரியாமையையும், இருவருக்கு முயிரொன்றுதலையும், பிரியிற் பெரிதுமாற்ருமையையும் ஒருங்கே அக்காலத்து நம்மு ன்னின்றுகூறிஞர், இப்பொழுது அவற்றுட்பிரியாமை பொய்யா கக்கண்டமையின், உயிர்வேறுபடக்கருதுதலும் பிரிவாற்றுதலு மாகிய அன்னவற்றைச் செய்யாமையும் இப்பிரியாமையோடொ க்கும், இனி நாஞ்சொல்லுவதென்—எ-று. (௬௧௧)

நேரிசையாசிரியப்பா.

பழூதறுதெய்வங்காட்டப்பண்டையி
னுமுழுவனலத்தாலோருயிரொன்றுங்
கடுஞ்சூடந்துங்கைபுனைபுனைந்தும்
பூழியமபோனகம்பொதுவுடனுண்டுங்
குழமகக்குறித்துச்சிலமொழிகொடுத்துங்
கையுறைசுமந்துங்கடித்தழைதாங்கியு
முயிரிற்றளரவிரங்கியுமுணங்கியும்
பணையுங்கிழியும்படைக்குவனென்று
மிறடியஞ்சேவற்கெறிகவண்கூட்டியும்
புனமுமெம்முயிரும்படர்கரிதடிந்து
மழுங்குறுபுனலெடுத்தகிற்புகையூட்டியு
மொளிர்மணியூசல்பரிய்விட்டுயர்த்து
மிரவினிற்றங்கவெளிவரவிரந்து
மிருவியம்புனத்திடையெரியுயிர்ப்பெறிந்துந்
தெரிந்தலர்கொய்தும்பொழிற்குறிவினவியு
முடலொடும்பிணைந்தகையாய்துயிலொற்றிச்
செறியிருட்குழம்பகஞ்சென்றுபளிங்கெடுத்த
விறபொழிறகிடைக்குமளவுநின்றுலேந்தும்
பன்ருட்பன்னெறியழுங்கினரின்று
முகனேந்துமணத்தமுழவந்துவைக்க

வொருகாற்றூக்கிக்கிலையமொளிர்வித்து
மூவுடலணைத்தமும்முகத்தொரோமுகத்
தெண்கடிப்புவிசித்தகல்லலல்செறிய
விருட்குறளுடன்றியெம்மருட்களியாற்றி
யுருள்வாய்க்கொக்கனையம்பாநாட்டொலிக்கக்
கரங்கால்காட்டித்தலையமியக்கி
யிதழவிழ்தாமரையெனுந்தகுணித்தந்
துவைப்பநின்றமைகரத்துக்கவைகடோற்றிக்
கரிக்காலன்னமொந்தைகலித்திரங்கத
துடியெறிந்திசைப்பத்துகளம்பரப்பி
வள்ளம்பிணைத்தசெங்கரடிகைமல்க
வெரியகலேந்திவெம்புயங்கமிசையாக்கி
யெரிதளிர்த்தன்னவேணியிற்குழவிப்
பசும்பிறையமுதொடுநிரம்பியதென்ன
மதுக்குளிர்மத்தமுமிலைத்தொருமறுபிறை
மார்பமுமிருத்தியதென்னக்கூன்புறத்
தேனக்கோடுவெண்பொடிப்புறத்தொளிரப்
பொலன்மிளிர்மன்றப்பொதுவகநாடித்
தனிக்கொடிகாணவெவ்விடத்துயிர்தழைப்ப
வுர்டியபெருமானமர்ந்துநிறைகூடல்
கனவினும்வினவாத
சூளும்வாய்மையுந்தோற்றி
நீளவும்பொய்த்தற்கவர்மனங்கரியே. அஎ

—*—

பழுதறுதெய்வம் அவர்மனங்கரியே. பகுதி-ஒதற்பிரிவு, துறை-வாய்மொழிகூறித் தலைமகள்வருந்தல். *

பழுதறுதெய்வங்காட்டப்பணடையி
னுழுவல்நலத்தாலோருயிரொன்றும்

(இதனதுபதப்பொருள்)

பழுதறுதெய்வம - குற்றமற்ற ஊழானது—காட்ட - கூட்டுவித்ததால்—பண்டையின் - முன்னாளில்—உழுவல்நலத்தால - எழுமையுந்தொடர்ந்த அன்போடு—ஒருயிரொன்றும் - நம்மிருவர்க்கு முயிரொன்றென்றும்;

கடுஞ்சூடந்துங்கைபுனைபுனைந்தும்
பூழியம்போனகம்பொதுவுடனுண்டுங்
குழமகக்குறித்துச்சிலமொழிகொடுத்தும்

கடுஞ்சூடந்தும் - அருமையான சூளுரைத்தும்—கைபுனை புனைந்தும் - கையா லணிகளணிந்தும்—பூழியம்போனகம்-வண்டற்சோற்றினை—பொதுவுடனுண்டும் - ஆயத்தோடிருந் தருந்தியும்—குழமகக்குறித்து - வண்டற்பாவையாகிய இளமகவைப்பாராட்டி—சிலமொழிகொடுத்தும்-சிலவார்த்தை பயிற்றியும்,

கையுறைசுமந்துங்கடித்தழைதாங்கியு
முயிரிற்றளரவிரங்கியுமுணங்கியும்
பனையுங்கிழியும்படைக்குவனென்றும்

கையுறைசுமந்தும் - கையுறைதந்தும்—கடித்தழை தாங்கியும் - மணத்தையுடைய தழையை யேந்தியும்—உயிரிற்றளர-உயிரோடு தளரும்படி—இரங்கியும் - வருந்தியும்—உணங்கியும் - வாடியும்—பனையும் - பனைமடலாற் குதிரையும்—கிழியும் - ஓவியப்படமும்—படைக்குவனென்றும் - படைப்பேனென்றும்,

இறடியஞ்சேவற்கெறிகவண்கூட்டியும்
புனமுமெம்முயிரும்படர்கரிதடிந்து
மழுங்குறுபுனலெடுத்தகிற்புகையூட்டியும்

இறடியஞ்சேவற்கு - தினைகாவற்கு—எறிகவண் கூட்டியும் - எறிதற்குக கவண்கட்டிக் கொடுத்தும்—புனமும் - தினைப்

புனத்தின்மேலும்—எம்முயிரும் - எம்முயிரின்மேலும்—படர்கரிதடிந்தும் - வந்தயானையைக் கொன்றும்—அழுங்குறுபுனலெடுத்து - யானமுழுந்தியபுனலினின்று மேலெடுத்தும்—அகிற்புகையூட்டியும் - குளிர்மையைநீக்குமாறுஅகிற்புகைகொடுத்தும்,

ஒளிர்மணியூசல்பரியவிட்டுயர்த்து
மிரவினிற்றங்கவெளிவரவிரந்து
மிருவியம்புனத்திடையெரியுயிர்ப்பெறிந்தும்

ஒளிர்மணியூசல் - மணிகள் விளங்காநின்ற வூசல்வடமானது—பரிய - அற்றபோது—இட்டு - கயறிட்டு—உயர்த்தும் - ஆட்டியும்—இரவினிற்றங்க - இரவினி லெம்மிடத்துத்தங்க—எளிவரவிரந்தும் - எளிமையாக யாசித்தும்—இருவியம்புனத்திடை - அறுத்த தினைப்புனத்தின்கண்—எரியுயிர்ப்பெறிந்தும்- என்னைக்காணுமையால் பெருமூச்சுவிட்டும்,

தெரிந்தலர்கொய்தும்பொழிற்குறிவினவியு
முடலொடும்பிணைந்தகையாய்துயிலொற்றிச்
செறியிருட்குழம்பகஞ்சென்றுபனிங்கெடுத்த
விற்பொழிற்கிடைக்குமளவுநின்றுலைந்தும்
பன்னாட்பன்னெறியழுங்கினரின்று

தெரிந்தலர்கொய்தும் - மலர்களையாராய்ந்து பறித்துக்கொடுத்தும்—பொழிற்குறிவினவியும் - தங்கும்பொழிலுக்கு அடையாளங் கேட்டும்—உடலொடும்பிணைந்தகை - தன்னுடலோடுமிணைத்த கையையுடைய—ஆய்துயிலொற்றி - தாயினது துயில் சோதித்துநீங்கி—செறியிருட்குழம்பகம் - குழம்பாகச்செறிந்தவிருளாகியசுள்ளிரவில்—சென்று - வந்து—பனிங்கெடுத்தஇல்- பனிக்குப்பாறையாலியற்றிய இல்லிலிருந்தும்—பொழில்- அக்குறித்தபொழிலினிடத்தே—கிடைக்குமளவும் - நான்வந்துசேரு

ங்ளவும்—நின்றுலேந்தும் - ஓயாம லச்சத்தால் வருந்தியும்—பன்னுள் - பலநாளாக—பன்னெறி-இவ்வாறு பலவகைப்பட—அழுங்கினர் - வருந்தின தலைவர்—இன்று - இப்பொழுது,

முகனைந்துமணத்தமுழவந்துவைக்க
வொருகாற்றூக்கிநிலையமொளிர்வித்து
மூவுடலணைத்தமும்முகத்தொரோமுகத்
தெண்கடிப்புவிசித்தகல்லலல்செறிய

முகனைந்துமணத்த - ஐந்துமுகம்பொருந்திய—முழவந்துவைக்க - முழவமென்னும் வாச்சியமொலிக்க—ஒருகாற்றூக்கி - ஒருகாலைத்தூக்கி—நிலையமொளிர்வித்து - கூத்தினைத் தோற்றுவித்து—மூவுடலணைத்த - மூன்றுடல் பொருந்திய—மும்முகத்து - மூன்றுமுகத்துள்—ஒரோமுகத்து- ஒவ்வோர்முகத்தில்—எண்கடிப்புவிசித்த - எட்டுக்கடிபபால்விசித்த—கல்லல்செறிய - கல்லலென்னும் வாச்சியமுழங்க,

இருட்குறளுன்றியெம்மருட்களியாற்றி
யுருள்வாய்கரொக்கணையும்பர்நாட்டொலிக்கக்
கரங்கால்காட்டித்தலையமியக்கி
யிதழவிழ்தாமரையெனுந்தகுணித்தந்
துவைப்ப

இருட்குறளுன்றி-கருமையாகிய பூதங்கள் கீழேநாட்டி—எம்மருட்களியாற்றி - எமக் கருளால் மகிழ்ச்சியுண்டாக்கி—உருள்வாய் - உருட்சியாகியமுகத்தையுடைய—கொக்கணை-வலம்புரிச்சங்கத்தை—உம்பர்நாட்டு - தேவர்நாடளவு மூடுருவுமாறு—ஒலிக்க - போய்சத்திக்க—கரங்கால்காட்டி - கையையுங்காலையுங்காட்டி—தலையமியக்கி - தலையுமென்னுங்கூத்தைத்தோற்றுவித்து—இதழவிழ்தாமரையெனும் - இதழ்விரிந்த தாமரைமல

ளையொத்த—தகுணித்தந்துவைப்ப - தகுணித்தமென்னும்வா ச்சியமொலிக்க,

நின்றமைகரத்துக்கலைகடோற்றிக
கரிக்காலன்னமொந்தைகலித்திரங்கத்
துடியெறிந்திசைபபத்துகளம்பரபபி
வள்ளம்பிணைத்தசெங்கரடிகைமல்க
வெரியகலேந்திவெம்புயங்கமிசையாக்கி

நின்றமைகரத்து - நிலைபெற்றமைந்த கையால்—கலைகள் தோற்றி-கிளைக்கின்றவொலிகளையெழுப்பி—கரிக்காலன்ன- யா னைக்காலை யொத்த—மொந்தை - மொந்தையென்னும் வாச்சிய ம்—கலித்திரங்க - மிகுந்தொலிக்க—துடியெறிந்திசைப்ப- சிறு பம்பையென்னுமவாச்சியமெழுந்தொலிக்க—துகளம்பரப்பி- நு ட்பமானவொலிகளையெழுப்பி—வள்ளம்பிணைத்த-மரக்கால் கட் டிய—செங்கரடிகைமல்க - செவ்வியகரடிகையென்னும்வாச்சிய த்தினொலியதிகரிப்ப—எரியகலேந்தி- மழுவேந்தி—வெம்புயங்க மிசையாக்கி - வெவ்விய பாம்பணியை மேலேதரித்து,

எரிதளிர்த்தன்னவேணியிற்குழவிப்
பசும்பிறையமுதொடுநிரம்பியதென்ன
மதுக்குளிர்மத்தமுமிலைத்தொருமறுபிறை
மார்பமுமிருத்தியதென்னககூன்புறத்
தேனக்கோடுவெண்பொடிப்புறத்தொளிர

எரிதளிரத்தன்ன - நெருப்புத்தளிர்த்தாலொத்த—வேணி யில் - சடையில்—குழவிப்பசும்பிறை - இளம்பிறையின்—அமு தொடு - அமிர்தத்துடனே - நிரம்பியதென்ன - நிரம்பி யிருந்தா ற்போல—மதுக்குளிர்மத்தமும் - மதுவாற் குளிர்ந்த மத்தம்பூ வையும்—மிலைத்து - தரித்து—ஒருமறுபிறை - வேறொருபிறை யை—மார்பமும் - மார்பினிடத்தும்—இருத்தியதென்ன - வை

த்தாற்போல—கூன்புறத்து - வளைந்தமுதுகையுடைய—ஏனக் கோடு - வராககக்கொம்பும்—வெண்பொடிப்புறத்து - வெள்ளிய திருநீற்றுப் பொடியானது திருமேனியில்—ஒளிர - ஒளிசெய்ய,

பொலன்மிளிர்மன்றப்பொதுவகநாடித்
தனிக்கொடிகாணவெவ்விடத்துயிர்தழைப்ப
வாடியபெருமானமர்ந்துநிறைகூடல்
கனவினும்வினவாதவரினும்

பொலன்மிளிர் - பொன்மயமாக விளங்காநின்ற—மன்றப் பொதுவகம் - மன்றமாகிய சபையினிடத்து—நாடி - திருவுளங் கொண்டு—தனிக்கொடிகாண- ஒப்பற்றபார்வதியார் தரிசிக்க—எவ்விடத்து - எந்தவிடத்தினுமுள்ள—உயிர்தழைப்ப - உயிர்கள்பெருக—ஆடியபெருமான - ஆடியகடவுள்—அமர்ந்து - வீற்றிருந்து —நிறைகூடல் - எங்குநிறைந்திருக்கின்ற மதுரைப் பதியை—கனவினும் - சொப்பனத்திலும்—வினவாதவரினும்- கேட்டறியாதவரைப பார்க்கிலும்,

நீங்கிச
சூளும்வாய்மையுந்தோற்றி
நீள்வும்பொய்த்தற்கவர்மனங்கரியே

நீங்கி-அன்பு சிறிதுமின்றிநீங்கி—சூளும்வாய்மையும் - சத்தியத்தையும் இனியவாயமொழியையும்—தோற்றி-சொல்லி வெளிக்குக்காட்டி—நீளவும் - பெரும்பாலும்—பொய்த்தற்கு-உள்ளே வஞ்சித்ததற்கு—அவர்மனம்-அவர்மனமொன்றே—கரி-சாட்சியாகுமல்லவோ—எ-று.

பொழில்கிடைக்குமளவும் பன்னாள் பன்னெறியமுழங்கினர் இன்று எவ்விடத்துயிர்தழைப்ப ஆடியபெருமான் கூடல் கனவினும் வினவாதவரினும் நீங்கிச்சூளும் வாய்மையுந்தோற்றி நீளவும்பொய்த்தற்கு அவர்மனங்கரியென வினைமுடிவுசெய்க.(அஎ)

## தோழியியற்பழித்தல்.

தோழியியற்பழித்தலென்பது - பாணன்வர வுரைத்ததோழி, இவள்வருந்த அயலாரிடத்து நல்குதலால் எம்முடைய வள்ளல் இன்றுதக்கிருந்திலனெனத் தலைமகனை யியற்பழித்துக்கூறுநிற்றல். அதற்குச்செய்யுள்:—

திக்கினிலங்குதிண்டோளிறைதில்லைச்சிற்றம்பலத்துக்
கொக்கினிறகதணிந்துநின்றாடிதென்கூடலன்ன
வக்கின்னகையிவளையவயல்வயினல்குதலாற்
றக்கின்றிருந்திலனின்றசெவ்வேலெந்தனிவள்ளலே. ()

தலைமகனைத் தகவிலனென ச்
சிலைநுதற்பாங்கி தீங்குசெப்பிய து.

இ-ள். திக்கின்கண் விளங்காநின்ற திண்ணியதோள்களையுடைய விறைவன், தில்லையிற் சிற்றம்பலத்தின்கட் கொக்கினிறகதனை யணிந்துநின்றாடுவோன், அவனது தெற்கின்கணுண்டாகிய கூடலையொக்கும் அக்குமணிபோலும் இனியநகையை யுடைய இவள் வருந்த அயலாரிடத்து நல்குதலால், எல்லாராலு மறியபட்டுநின்ற செவ்வேலையுடைய எம்முடைய வொப்பில்லாதவளளல் இன்றுதக்கிருந்திலன்—எ-று. (கூஎசு)

நேரிசையாசிரியப்பா.

பாசடைக்கருங்கழிப்படர்மணலுலகமு
மெழுமலைபொடித்தவர்க்கிசைதல்வேண்டி
வளையுலகனைத்தும்வருவதுபோலத்
திரைநிரைதிரைத்துக்கரைகரைகொல்லும்
வையைநீர்விழவுபுகுந்தணமெனவொரு

நமக்கும்பங்கடத்தவிதிப்பேறறடியவர்
நிலையருட்கற்பெனநெடுங்கற்புடையோண்
முன்னுறிலவண்மனமாங்கே
நன்னரிற்கொண்டுகுளிரும்பெறுமே. ௮௮

———*———

பாசடைககருஙகழி குளிரும்பெறுமே. பகுதி-பரத்தையிற
பிரிவு, துறை - தோழியியறபழித்தல். *

பாசடைககருங்கழிபடாமணலுலகமு
மெழுமலைபொடிததவறகிசைதலவேணடி

(இதனதுபதபபொருள்.)

பாசடை - பாசியால்மூடுதலுள்ள—கருங்கழி- பெருங்கட லானது—படர் - பரந்துளள—மணலுலகமும் - மணல்மிகுந்த நெய்தனிலமும—எழுமலைபொடித்தவறகு - ஏழுமலையையுந்து களாககிய வேலவனுககு—இசைதல்வேணடி - பொருந்துதலை விரும்பி,

வளையுலகனைத்தும்வருவதுபோலத்
திரைநிரைதிரைத்துககரைகரைகொல்லும்
வையையநீரவிழவுபுகுந்தனமெனவொரு
பொய்யினளன்றிமெய்யினைநீயும்

வளையுலகனைத்தும் - குறிஞ்சியிலுள்ள வெல்லா மலைகளு ம்—வருவதுபோல - வருகின்றதன்மைபோல—திரைநிரைதிரை த்து - அலைகளை யணியாகத்திரைத்து—கரைகரைகொல்லும் - க ரையைககரைத்தழிககின்ற—வையைநீர்விழவு - வையைபபெரு க்கத்தின் போதுசெய்யும் விழாவிறகு—புகுந்தனமென - போ ய்வந்தோமென்னுமபடி—ஒருபொய்யினளன்றி - பொய்யுள்ள வவ்வொருத்தி போலல்லாமல்—மெய்யினைநீயும் - நீயுமெய்ம்மை யுள்ளாயு,

பொலம்பூண்பெயர்ந்துறைபூணையருடரு
குளிர்ச்சிநீங்கிகொடுங்கோலவேந்தெனச
சேககொள்கண்ணைசெம்மொழிபெயாதந
தொன்றுடனில்லாமொழியை

பொலம்பூண - பொன்னணிகள—பெயாந்துறை - கலைந்துகிடக்கின்ற—பூணை - அலங்காரமுடையவளுயினை—அருளதரும - இனிமையைத தருகின்ற—குளிர்ச்சிநீங்கி - தணணளியொழிந்து—கொடுங்கோல்வேந்தென-கொடுங்கோலரசன்போல—சேககொள்கணணை - சிவபபைகொணட கண்ணையுடையவளுயினை—செம்மொழிபெயாதநது - இனியசொல்நீங்கி—ஒன்றுடனிலலா - ஒருதனமையதாயிலலாத—மொழியை - சொல்லையுடையவளுயினை,

மறுத்த
முதிராநாட்செயமுண்டகமலாநது
கவிழ்ந்தமுகத்தையெககணமனநதோன்ற
வருமபியநகையை

மறுத்த - மலர்ச்சிககிடமில்லாது—முதிராநாள் - பருவமில்லாதநாளில—செய் - உண்டான—முண்டகம் - தாமரைபபூபோல—மலர்ந்துகவிழ்ந்த - மலர்ந்து கீழ்நோக்கிய—முகத்தை-முகத்தையுடையாய்—எக்கண் - எந்தவிடத்தோ—மனந்தோனற - மனம்போய்ப் பதியுமாறு—அரும்பியநகையை - உண்டானநகையையுடையவளுயினை ;

அன்றேநின்கெ
ழனகணகண்டவிவ்விடையென்னுள
மன்னிநின்றடங்காககுடுமியம்பெருதழல்

பசுங்கடல்வலைத்துப்பருகக்கொதித்த
தோற்றமுங்கடந்ததென்றல

அன்றே - அல்லவோ—இவ்விடை - இவ்விடத்தில்—எல்லன் - எனதுகண்ணுல்—நின்சேட்கண்ட - உனது தன்மையைக்கண்ட—என்னுளம் - எனதுநெஞ்சமானது—மன்னிநின்றடங்கா - நிலைபெற்றுநின்றடங்காமல்—குடுமியம்பெருந்தழல்-கொழுந்துவிட்டெரிகின்ற வடவாக்கினியானது—பசுங்கடல்வலைத்து - கருங்கடலைச்சூழ்ந்து—பருக - அதனைச் சுவற்றும்படி—கொதித்ததோற்றமும் - கொதித்தெழுந்தகொடுமையினையும்—கடந்ததென்றால் - கடந்துபோதிபபதென்றால ;

ஆற்றல்செய்
விண்ணகம்புடைத்துநெடுவரைகரக்கும்
கொடுஞ்சூர்கொன்றகூரியநெடுவேற
குன்றக்குறவர்கொம்பினுக்கினியன்
குருகொலியோவாப்பனிமலைவாவி
வயிறுவாய்த்தகுழவியங்கிழவோன்

ஆற்றல்செய் - போர்புரிந்து—விண்ணகம்புடைத்து - தேவருலகங்களையழித்து—நெடுவரை - பெரியமலையினுளளே—கரக்கும் - ஒளித்த—கொடுஞ்சூர்கொன்ற - வெவ்விய சூரனைதசடிந்த—கூரியநெடுவேல் - கொடிய கூரியவேலை யேந்தியவனும்—குன்றக்குறவர்- மலைவேடுவர்தந்த—கொம்பினுக்கினியன - மகளுக்கினியவனும்—குருகொலியோவா - பறவைகளொலித்தல் நீஙகாத—பனிமலைவாவி - இமமலைச்சாரற் சுனை யானது—வயிறுவாய்த்த - தன்னிடத்தேயீன்ற—குழவியங்கிழவோன் - குழநதையுமாகியநாயகன் ;

வாழ்பரங்குன்றெனுமணியணிபூண்ட
நான்மறைபுகழுங்கூடலம்பெருமான்

வாழ்பரங்குன்றெனும் - வாழ்கின்ற பரங்கிரி யென்கின்ற — மணியணிபூண்ட - மாணிக்க பூடணத்தைத்தன்னிற் கொண்ட — நான்மறைபுகழும் - வேதங்கணான்கு மேத்துகின்ற — கூடலம்பெருமானை - மதுரைக்கிறைவனை ;

வான்முதலீன்றமலைமகடன்னொடு
முழுதுணர்ஞானமெல்லாமுடைமை
முழுதனுக்கிரகஞ்செழுபரமநாதி
பாசமிலாமைமாசறுநிட்கள
மவிகாரக்குறியாகியதன்குண
மெட்டுந்தரித்து

வான்முதல் - விண்முதலியவனைத்தையும் — ஈன்ற - தந்தருளிய — மலைமகடன்னொடும் - பார்வதியாருடனே — முழுதுணர்ஞானம் - அனைத்துமுணர்கின்ற பேரறிவும் — எல்லாமுடைமை - அனைத்துந்தன் வயத்தேயுடைமையும் — முழுதனுக்கிரகம் - பேரருளுடைமையும் — செழுபரம் - முடிவிலாற்றலும் — அநாதி - தோற்றமின்மையும் — பாசமிலாமை - பாசமின்மையும் — மாசறுநிட்களம் - குற்றமற்றநிட்களமும் — அவிகாரக்குறி - விகாரமில்லாதசகளமும் — ஆகிய - இவையாகிய — தன்குணமெட்டுந்தரித்து - தனக்குரிய வெண்குணங்களையும் தானுள்ளவாறு ;

விட்டறுகுற்றம்
அருச்சனைவணக்கம்பரவுயிர்க்கன்பகம்
பேரருட்டிருநூல்பெருக்குறவெங்கு
நிறைபொருளழுக்கலருவினைக்கூட்ட
மிருட்பவரோகவெனுங்குணமெட்டுந்
தமக்கும்படைக்கவிதிப்பேறடியவர

விட்டறுகுற்றம் - காமமுதலிய அறுவகைக்குற்றத்தினின் றுநீக்கி—அருச்சனை - சிவாசசனையும்—வணக்கம- வணககமு ம்—பரவுயிர்க்கன்பகம் - பெரியசிவ காருண்ணிய வுள்ளமும்—பேரருட்டிருநூல் - பெரியஅருட்குக காரணமாகிய திருமுறை யுணர்ச்சியும்—பெருந்துறவு-எவற்றினும் பெரியதுறவும்—எங் குநிறைபொருளுழுந்தல்- எங்குநிறைநதுள்ள சிவத்தோடழுநது தலும—அருளினக்கூட்டம் - அருளையடைாத சாதுசங்கபபுண ர்ச்சியும்—இருட்பவநடுங்கல்- சனமாந்தகார நடுஙகுதற்கேதுவா கிய ஆத்மஞாநமும்—எனுங்குணமெட்டும் - ஆகிய வெண்வகைக் கருணங்களையும்—தமககும்படைக்க - அடியாராகிய தமககு ம ளித்தருள—விதிபபேற்றடியவா - அவவாறுபெறற முறைபபா டுடையவர்களது ;

நிலையருடகற்பெனநெடுங்கறபுடையோண
முன்னுறிலவணமனமாங்கே
நன்னாிற்கொணடுகுளிரும்பெறுமே

நிலை - நிலைமை யான—அருடகற்பென - அருட்கறபைப போல—நெடுங்கற்புடையோள - நீங்காதகற்பையுண்டைய தலைம களுக்கு—முன்னுறில்-எதிரிலிவ்வணணஞ்சென றனையாயின்—அவள்மநம் - அவளுள்ளமானது—ஆங்கே - அதுபோழ்தே—நன்னாிற்கொண்டு - நன்மையை யுட்கொண்டு—குளிரும்பெறு மே - தணிவும்பெறக்கூடுங்கொலலோ—எ-று.

நீயும் வையைநீாவிழவு புகுந்தனமென மெய்யினை பெயர்ந துறைபூணை சேக்கொளகண்ணை ஒன்றுடனில்லா மொழியை க விழ்ந்தமுகத்தை மநந்தோன்று நகையையன்றே நின்கேழ்கண ட என்னுள்ளம் கடல்பருகக்கொதித்த பெருந்தழற் றேறறமு ந் ந்தஓதன்றால் கூடற்பெருமாள் மலைமக ளொடுதன் குண

மெடுத்தரித்த படியருச்சனை முதலிய வெண்வகைக குணங்க ளையுந் தமக்கும்படைக்கப்பெற்ற அடியவரருட கற்பெணகற்பு டையோள் முன்னுறின அவள்மனம குளிரும்பெறுமோ வென வினைமுடிவுசெய்க. (அஅ)

---

## புனலாட்டுவித்தமைகூறிப்புலத்தல்.

புனலாட்டுவித்தமைகூறிப புலத்தலென்பது - அணைந்தவ ழியூடாநின்றதலைமகள் ஊட நீராநினற தலைமகனோடு, இவாசெ யத பிழையெல்லாம் பொறுககலாம், பலருமறியவொருத்தியைப் புனலாட்டுவித்து அதுசெய்யாதாரபோல என்மனையின்கணிவர் வந்துநிறகின்றவிது எனக்குபபொறுத்தலரிதெனத் தணிக்கத்த ணியாதுபரத்தையைப புனலாட்டு வித்தமைகூறிப் புலவாநிறற ல். அதறகுச்செய்யுள்.—

செந்தார்நறுங்கொன்றைச்சிற்றம்பலவர்நில்லைநகரோர்
பந்தார்விரலியைப்பாயபுனலாட்டிமனபாவியெற்கு
வந்தாரபரிசுமன்றுய்நிறகுமாறென்வளமனையிற்
கொந்தாரநடந்தோளவிடங்காலயிற்படைக்கொற்றவரோ

ஆஙகதனுக கழுககமெய்	தி
வீஙகுமெனமுலை விடலொத்த	து.

இ-ள். கொத்துமாலைநிறைந்த பெரியதோளினையும் நஞ்சை ககாலுங்கூரிய படையினையுமுடைய கொற்றவர் தீவினையேற்கு எனது வளமனையில்வாநது நிற்கின்றபடி, பநதுபயின்ற விரலா ளொருததியைப் பாய்ந்தபுனலையாட்டுவித்து வெளிபபடத் தவ றுசெய்துவந்தார சிலர் நிறகும் பரிசுமன்றுய் மனத்தவறு செய் யாதார் வந்துநிற்குமாறு வந்து நின்றாராயின், அதுபொறுத்தல

கீஞ—எ-று. செயயதாராகிய கறியகொன்றைப் பூவினையுடைய சிற்றமபலவரது தில்லையாகிய கார்வளைபதிற்பாயும் புனலையாட் டயெனக்கூட்டுக. (௬௯)

நேரிசையாசிரியப்பா.

மாயமுயலின்புமருட்டியுந்தெருட்டியு
நகைத்தொகைகூட்டிக்கலைத்தொழுசொல்லி
லழுதழுங்கவுமவிழ்பயில்லவந்நயிக்கு
மிருமனப்பொய்யுளத்தொருமகடன்னைக்
கரியோன்கடுப்பத்துகில்கவர்ந்தொளிர
விதியினும்பனைமைசெய்முகப்படைத்தனவாக்
சோதியிற்படைக்கண்செலவுய்த்தருப்புசெய்
முண்டகமுலையிற்சாந்தழித்தமைந்தோ
னெழுதியகழைக்கரும்பெறிந்து நூல்வளர்த்த
கோலைதலைகைபரிந்துமணிக்கலன்கொண்டு
கழைதோனெகிழ்ந்தழையுடல்குழையத்
திரையெதிரதள்ளியலாததுகில்கண்புதைத்
தொண்ணிறவேங்கையின்றதுபொனனுஞ்
சுண்ணமுங்கலந்துதிமிர்ந்துடறாற்றி
வண்டொடுமெகிழ்கவிழ்தோட்டலாகூட்டி
யிருல்புணர்புதுத்தேலீததுடன்புணரும்
வைவையின்மறித்துமன்னவடன்னுடன்
செழுமியவிழவுட்புகுமதிகீயோ
கவைகாக்கட்செவியணநதிரைதுய்த்த
பாசுடறபகுவாய்ப்பிறையந்தவனையும்
பேழ்வாய்தழல்விழித்தாக்கடிததவிந்த
கிலம்படர்தோகைக்குலங்கொள்சேரவ
லவ்வுழியாததிரையமையெழுகாலைத்
திருநுதற்கன்னுமடமகட்பக்கழு

மெரிமழுநவ்வியும்பெறுமருட் டிருவுரு
வெடுத்துடனந்தககடுககொலையரவினைத்
தீவாய்ப்புலியினைத்திருத்தவர்நகைப்ப
வெடுத்தணிபூணவுரிதறுடையுடுப்ப
முனிவருந்தேவருநகரமலாமுகிழுப்பத்
தருவனவன்றிமலரவனவன்றொழி
லரணறுநகவனகூருடைக்காவல்
சேரத்துடைககும்பேரருணுளின்
முதறொழிலிற்றன்முதற்றொழிலாக்கி
யொருதாட்டாளைகொண்முக்கவைச்சுடர்வேற்
றலையிருந்தருங்கதிமுழுதுநன்றளிக்குந்
திருநகர்க்காசிப்பதியகதறென்றும
வெளியுறத்தோன்றியவிருண்மணிமிடற்றோ
னேமியங்குன்றகழநெடுவேற்காளையன்
றன்பரங்குன்றந்தமர்பெறுகூடற்
கிறையோன்றிருவடிநிறையுடன்வணங்கும்
பெரும்புனலூரவெமமில்ல
மருமபுனல்வையையப்புதுநீரன்றே. ௮௬

---

மாயமுமின்பும் புதுநீரன்றே. பகுதி - பரத்தையிற்பிரிவு, துறை - புனலாட்டுவித்தலைமகூறிப்புலத்தல்.

மாயமுமின்புமருட்சியுநெருட்சியு
நகைத்தொகைகூட்டிக்கவைத்தெழுசொல்லி
லமுதமுங்கடுவும்விழியில்வைத்தளிக்கு
மிருமனப்பொய்யுளத்தொருமகடன்னை

(இதனதுபதப்பொருள்)

நகைத்தொகைகூட்டி - சிரிப்புமிகுதியுஞ்சேர்த்து—கவைத்தெழுசொல்லில் - இருவேறாகிய சொலலினிடத்து—மாய

மும் - வஞ்சமும்—இன்பும் - இன்பமும்—மருட்சியும் - மயக்க மும்—தெருட்சியும் - தெளிவும்—விழியில் - கண்ணினிடத் தே—அமுதமுங்கவேம் - நஞ்சமும் அமிர்தமும்—வைத்தளிக் கும் - இருத்தித் தமதுதொழிலேயோம்புகின்ற—இருமனம்-இரு வகைப்பட்டமனத்தையும்—பொய்யுளத்து-பொய்ம்மைபட்ட வு ள்ளத்தையு முடைய—ஒருமகடன்னை - விசாதிகமான விலேம களை ;

கரியோன்கடுப்பத்துகில்கவர்ந்தொளிர
விதியினும்பன்மைசெய்முகம்படைத்தளவாச்
சோதியிற்படைக்கண்செலவுய்த்து

கரியோன்கடுப்ப - கண்ணன்போல—துகில்கவர்ந்து - ஆ டையைக்கவர்ந்தும்—ஒளிர - ஒளிரும்படி—விதியினும் - நான் முகனைப்பார்க்கினும்—பன்மைசெய் - பற்பலவிதத்தைச் செய்கி ன்ற—முகம்படைத்து - அவன் முகத்தைப்பெற்று—அளவாச் சோதியின் - அளவுபடாத சோதியினாலே—படைக்கண்-கூரியக ண்கள்—செலவுய்த்து - பதியுமாறுநோக்கியும் ;

அரும்புசெய்
முண்டகமுலேயிற்சாந்தழித்தமைத்தோ
ளெழுதியகழைககரும்பெறிந்துநூல்வளர்த்த
கோதைவகைபரிக்தும்

முண்டகவரும்புசெய்-தாமரைமொக்குள்போலு மழகுசெ ய்கின்ற—முலேயிற்சாந்தழித்து - தனத்திற்பூசிய சந்தனத்தை யழித்தும்—அமைத்தோள் - மூங்கில்போன்ற தோளில்—எழு திய - தொய்யில்வரைந்த—கழைக்கரும்பெறிந்தும் - மாரன்கரு ப்பு வில்வடிவத்தைக் களைத்தும்—நூல்வளர்த்த-நாரானீளக்க டிய—கோதைவகைபரிந்தும் - மாலேவகைகளையறுத்தும்;

மணிகலன்கொண்டு
கழைத்தோணெகிழத்தழையுடல்குழையத்
திரையெதிர்தள்ளிமலாத்துகில்கண்புதைத்
தொண்ணிறவேங்கையின்றாதும்பொன்னுஞ்
சுண்ணமுங்கலந்துதிமிர்ந்துடறாற்றி
வண்டொடுமகிழ்ந்தவிழ்தோட்டலர்சூட்டி
யிறல்புணர்புதுத்தேனீத்துடன்புணரும்
வையையின்மறித்தும்

மணிக்கலன்கொண்டு - மணியணிகளை கழற்றி—கழைத்தோணெகிழ - மூங்கில்போன்றதோணெகிழவும்—தழையுடல்குழைய - பூரித்தவுடல்குழையவும்—திரையெதிர்தள்ளி - அலைகடெதிரேதள்ளியும்—மலாத்துகில் - பூந்துகிலாலே—கண்புதைத்து - கண்ணைமூடியும்—ஒண்ணிறவேங்கையின் - நன்னிறமுள்ள வேங்கைமலர்களின்—தாதும்பொன்னும் - மகரந்தத்தையும் பொற்பொடியையும—சுண்ணமுங்கலந்து - சுண்ணத்தோடுகலந்து—திமிர்ந்துடறாற்றி- அவளுடலிற்பூசியுமிறைத்தும்—வண்டொடுமகிழ்ந்தவிழ்-வண்டுகள்மொய்க்கச் செழித்துமலர்ந்த—தோட்டலர்சூட்டி - மலரிதழாற்றொடுத்த மாலைதரித்தும்—இறல்புணர்புதுத்தேன் - இறுட்டிற்கட்டின புதியதேனை—ஈத்துடன்புணரும் - உண்பித்துஅவளுடன்கூடி—வையையில்- வையைநதியில—மறிததும் - மீளவும் ;

அன்னவடன்னுடன்
கெழுமியவிழவுட்புகுமதிநீயே
கவைநாக்கட்செவியணந்திரைதுய்த்த
பாசுடற்பகுவாய்ப்பீழையந்தவளையும்
பேழ்வாய்த்தழல்விழித்தரகடித்தவிடத
நிலம்படாதோகைகடுலங்கொள்சேதாவும

கெழுமியவிழவுள் - சிறப்பித்த விழாவில்— அன்னவடன்னுடன் - அவவிலைமகளுடனே—புகுமதிநீயே - சென்றனையாகியநீயே—கவைநாககட்செவி - பிளவாகிய நாவையுடைய பாம்பானது—அணந்திரைதுய்த்த - வாய்திறந்திரையாகவுண்ட—பாசுடற்பகுவாய் - பச்சுடலையும் பெரியவாயையு முடையதாய—பிழையந்தவனையும் - மரணவாதனைகருட்பட்ட தவனையும்—பேழ்வாய் - பிளப்பாகியவாயையும்—தழலவிழி - நெருபபெரிகின்ற கண்களையுமுடைய—தரசுநடித்தவிந்த - புலியடித்தலாலிறந்த—நிலம்படர்தோகை - மண்ணிற்படரும்வாலையுடைய—குலங்கொளசேதாவும் - உத்தமப்பிறவியுளள செவவியபசுவும்;

> அவ்வுழிமாத்திரையனையெழுகாலைத்
> திருநுதற்கண்ணுமடமகடபககமு
> மெரிமழுஙவ்வியும்பெறுமருட்டிருவுரு
> வெடுத்து

அவ்வுழி - அவைபட்டவிடத்தே—மாத்திரையனை - அரைநொடியில்—எழுகாலை - உயிர்பெற்றெழுந்த அமயத்தில்—திருநுதற்கண்ணும் - விளககமான நெற்றிககணணும்—மடமகட்பக்கமும் - பார்வதியார்பாகமும்—எரிமழுஙவ்வியும் - எரிகின்றமழுவுமானும்—பெறும் - கொண்ட—அருட்டிருவுருவெடுத்து-அருளே திருமேனியாகத்தோற்றி ;

> உடனாற்றக்கடுக்கொலையரவினைத்
> தீவாய்ப்புலியினைசதிருத்தவாநகைப்ப
> வெடுத்தணிபூணவுரிததுடையுடுப்ப
> முனிவருநதேவருங்கரமலர்முகிழ்ப்பத்
> தருவனவன்றி

உடன் - விரைந்து—அந்த - மேற்கூறிய—கடுக்கொலை-விடத்தாற் கொல்லுதலைத் தன்னிடத்துள்ள—அரவினை - பாம்பை

யும்—தீவாய்ப்புலியினை-தீபபுகையெழும் வாயையுடையபுலியை யும்—திருத்தவாகைகபப- தருவனத்திருடிகள்கைககுமாறு(மு றையே)—எடுத்தணிபூண-தூககியணியாக வணிந்துகொளளவு ம்—உரித்துடையுடுபப - தோலையுரித துடையாக வுடுப்பவும்— முனிவருந்தேவரும் - அதனைககண்ட முனிவருந்தேவரும்—கர மலர்முகிழ்ப்ப - மலாபோன்ற கைககளைக கூப்பவும்--தருவனவ ன்றி - செய்வதுமல்லாமல்;

மலரவனவன்றொழி
னாரணனுஙகவனகூருடைக்காவல்
சேரத்துடைககும்பேரருளின

மலரவனவன்றொழில் - பிரமனது டைப்பும—ஆங்கு-அ வ்வாறே—நாரணனவன் - திருமாலின்—கூருடைககாவல்- பெ ருமையையுடைய காப்பும்—சேரத்துடைககும் - ஒருங்கேயழிக கின்ற—பேரருளின் - பேரருளைசசெய்கின்ற வூழியினும்;

முத்தொழிலிற்றன்முதற்றொழிலாககி
யொருதாட்டாளாகொண்முககவைச்சுடர்வேற்
றலையிருந்தருங்கதிமுழுதுநன்றளிக்குந
திருநகாககாசிபபதியகத்தென்றும்
வெளியுறத்தோன்றியவிருண்மணிமிடற்றோன்

முத்தொழிலில் - மூவகைத் தொழிலுள்ளும்—தன்முதற் றொழிலாககி - தனறொழிலை முதன்மைத்தாககி—ஒருதாள -ஒ ருதாளின்மேல்—நாளகொள் - கூாமை கொண்ட—முச்சுடர் க்கவைவேல் - மூன்றுசுடர்போலுங் கவருள்ள சூலத்தின—தலை யிருந்து - தலைககட்டங்கி—அருஙகதிமுழுதும் - அரியகதி யனை த்தும்—நன்றளிககும் - குறைவின்றியளிக்காகின்ற—திருநகர்- நகரங்களுட் சிர்மைத்தாகிய—காசிப்பதியகத்து- காசியென்னுந

திருபபதியில்—என்றும் - எந்நாளினும்—வெளியுறத்தோன்றிய - வெளிப்படத்தோன்றுகின்ற—இருண்மணிமிடற்றோன்- நீலமணிபோலுங்கண்டத்தினன் ;

நேமியங்குன்றகழ்நெடுவேற்காளையன்
றன்பரங்குன்றந்தமர்பெறுகூடற்
கிறையோன்றிருவடிநிறையுடன்வணங்கும்
பெரும்புனலூர

நேமியங்குன்று - பெரியகௌஞ்சமலையை—அகழ் - பிளந்த—நெடுவேற்காளையன் - நெட்டிலைவேற்குமரன்—தன்பரங்குன்றம் - தனது திருப்பரங்குன்றத்தை—தமர்பெறு - தன்னினமாகப் பெற்றுள்ள—கூடற்கிறையோன் - மதுரைப் பெருமானது—திருவடி - ஸ்ரீபாதங்களை—நிறையுடன்வணங்கும் - பத்திமையுடன்வணங்குகின்ற—பெரும்புனலூர - ஊரனே ;

எம்மில்லம்
அரும்புனல்வையையபபுதுநீரன்றே.

எம்மில்லம் - எமதுவீடானது—அரும்புனல் - புண்ணிய நதியாகிய—அவ்வையை- அந்தவையையைபோலும்—புதுநீரன்றே- புதுமையாகிய நீர்மைத்தன்று—எ-று.

கூடற்கிறையோன் றிருவடிநிறையுடன் வணங்கும் பெரும்புனலூர! இருமடப்பொய்யுளத்து ஒருமக டன்னைத் துகில்கவர்ந்து படைக்கண் செலவுய்த்தும் முலையிற்சாந் தழித்துத் தோளெழுதிய கழைக்கரும்பெறிந்தும் கோதைவகைபரிந்தும் திரையெதிர்தள்ளி மலர்த்துகில் கண்புதைத்து உடறாற்றி அலாகூட்டிப்புதுத்தே னீத்துடன்புணரும் வையையின்மறித்துங் கெழுமிய விழவுள் அன்னவ டன்னுடன் புகுமதிநீயேவர எம்மில்லம் அரும்புனல்அவ்வையைப்புதுநீரன்றெனவினைமுடிவுசெய்க.அகூ

—————

## வருத்தந்தணித்தல்.

வருத்தந்தணித்தலெனபது - தலைமகனது பிரிவுகேட்டு உள்ளுடைந்து தனிமையுற்றுவருந்தாநின்ற தலைமகளை, நின்னைவிட்டு அவர்பிரியார், நீ நெருப்பையுற்ற வெணணெயும் நீரையுற்ற வுபபும்போல இவ்வாறுருகித் தனிமையுற்று வருந்தாதொழியெனத் தோழி அவளது வருத்தந்தணியாநிற்றல். அதற்குச்செய்யுள்.—

நெருப்புறுவெண்ணெயு நீருறுமுப்புமெனவிங்ஙனே
பொருப்புறுதோகைபுலம்புறல்பொய்யன்பர் போக்குமிக்க, விருப்புறுவோரைவிண்ணோரின்மிகுத்துநண்ணார்கழியத், திருப்புறுசூலத்தி னோன்றில்லைபோலுந் திருநுதலே. (கூகரு)

மணிப்பூண்மன்னவன் றணப்பதில் லை
அஞ்சல்பொய்யென வஞ்சியைத்தணித்த து.

இ-ள். தன்கண் மிக்கவிருப் புறுமவரை விண்ணோரினு மிகச்செய்து பகைவர் மாய விதிர்க்கப்படுஞ் சூலவேலை யுடையவனது தில்லையையொக்குந் திருநுதால், பொருப்பைச்சேர்ந்த மயில்போல்வாய், தீயையுற்றவெணணெயும் நீரையுற்ற வுபபும்போல இவ்வாறுருகித் தனிமை யுறுதொழி, அன்பர் போக்குப்பொய்—எ-று. (கூகரு)

நேரிசையாசிரியப்பா

வேலியங்குறுஞ்சூல்விளைகாய்ப்பகுசினம்
பெறுவெள்ளிடையிற்சிறுகாற்பட்டெனா
நிறைநாண்வேலிநீங்கித்தமியே
யோருழிநில்லாதலமரல்கொள்ளுமென்

ணருந்துணைநெஞ்சநிற்குறும்பயன்கேண்மதி
மண்ணுளர்வணங்குநதன்னுடைந்சகைமையு
மிருள்றுபுலனுமெய்ப்பொருளுறுகல்வியு
மமரர்பெற்றுண்ணுமமுதுருக்கொண்டு
குறுஞ்சொற்குதட்டியமழலைமென்கிளவியில்
விளரியுள்விளைக்குந்தளர்நடைச்சிறுவனு
நின்னலம்புகழ்ந்துணுநீதியுந்தோற்றமுந்
துவருறத்தீர்ந்தநங்கவர்மனத்தூரன்
பொம்மலங்கதிர்முலைபுணர்வுறுங்கொல்லெனச்
சென்றுசென்றிரங்கலையன்றியுந்தவிர்மோ
னெட்டுகிர்க்கருங்காற்றேன்முலைப்பெரும்பே
யமர்பெற்றொன்னலரறிவுறப்படரப்
பேழ்வாயிடாகினிகாறொழுதேத்திக்
கையடைகொடுத்தவெண்ணிணவாய்க்குழவி
யீமம்பெருவிளக்கெடுப்பமற்றதன்
சுடுபொடிக்காப்புடனுளங்கச்சுரிகுர
லாந்தையுங்கூகையுமணிதாலுறுத்த
வோரிபாட்டெடுப்பவுவணமுங்கொடியுஞ்
செஞ்செவிச்சேவற்கவர்வாய்க்கழுகு
மிட்டசெம்பந்தரிடையிடைக்காலெனப்
பட்டிலர்கள்ளியம்பாற்றுயில்கொள்ளுஞ்
சுள்ளியங்கானிடைச்சுரர்தொழுதேதத
மரகதத்துழாயுமர்சிறக்கிளியுந்
தோகையுஞ்சூலமுந்தோளின்முன்கையின்
மருங்கிற்கரததினில்வாடாதிருத்திப்
போர்வலியவுணர்புகப்பொருதுடற்றிய
முக்கட்பிறையெயிற்றெண்டோட்செல்வி
கண்டுளங்களிப்பக்கனைகழற்றமணா
வானகவாவியூடுறமலர (

வொருதாளொழுபுவியொருவத்திண்டோள்
பத்துத்திசையுளொட்டவையுடைப்ப
வொருநடங்குலவியதிருவடியுரவோன்
கூடலம்பதியகம்பரவி
நீடநின்றெண்ணருளமெனநீயே. ௬0

---

வேலியங்குறுஞ்சூல் உளமெனநீயே. பகுதி - பகைதணிவி
னைப்பிரிவு, துறை-வருத்தந்தணித்தல் *

வேலியங்குறுஞ்சூல்விளைகாய்பபஞ்சினம்
பெறுவெள்ளிடையிற்சிறுகாறபட்டென

(இதனதுபதபபொருள)

வேலியங்குறுஞ்சூல - முள்ளிலவின் சிறிய சூலானது—வி
ளைகாய்ப்பஞ்சினம் - முதிர்ந்தகாயிலுள்ள பஞ்சிகள்—பெருவெ
ள்ளிடையில் - பெரியவெளியிடத்து—சிறுகாறபட்டென - தெ
ன்றறகாற்றிலகபபட்டாற்போல ;

நிறைநாண்வேலிநீங்கித்தமியே
யோருழிநில்லாதலமரல்கொள்ளுமென்
னருந்துணைநெஞ்சம்

நிறைநாண் - நிறையுநாணமுமாகிய—வேலிநீங்கி - காப்பா
னதுநீங்காநிறப—தமியே - தனியாய்—ஓருழிநில்லாது - ஒருநி
லையினில்லாமல்—அலமரல்கொள்ளும் - உழலுகின்ற—என்ன
ருந்துணை - எனதரியதுணையாகிய—நெஞ்சம்- நெஞ்சமானது;

நிற்குறும்பயன்கேண்மதி
மண்ணுளர்வணங்குந்தன்னுடைத்தகைமையு
மிருளறுபுலனுமெய்ப்பொருளுறுகல்வியு
மமரர்பெற்றுணவுமமுதுருககொண்டு

குறுஞ்சொற்குதட்டியமழலைமென்கிளவியில்
விளரியுள்விளைக்குந்தளர்நடைச்சிறுவனும்

நிற்குஉறும்பயன் - உன்பால் பொருந்தத்தக்க பயனை—கேண்மதி - கேட்பாயாக—மன்னுனர் - உலகத்தார்—வணங்கும்- பணியாநின்ற—தன்னுடைத்தகைமையும் - தனது பெருமையும்—இருளறுபுலனும் - மாசற்றவறிவுடைமையும்—மெய்ப்பொருள் - உண்மைப் பொருளை—உறும் - அடையத்தக்க—கல்வியும் - கல்விவளமும்—அமரர்பெற்றுண்ணும் - தேவர்பெற்றுண்ணுகின்ற—அமுதுருக்கொண்டு - அமுதத்தின் சுவையையுடைத்தாய்—குறுஞ்சொல் - இளஞ்சொல்லாகிய—குதட்டிய - குழறிய—மழலைமென்கிளவியில் - மென்மையாகிய மழலைச்சொல்லால்—விளரியுள்விளைக்கும் - உள்ளத்தில் வேட்கையை விளைக்கின்ற—தளர்நடைச்சிறுவனும் - தளர்நடையையுடைய மைந்தனும் ;

இன்னலம்புகழ்ந்துணுநீதியுந்தோற்றமுந்
துவரத்தீர்ந்தகங்கவர்மனத்தூரன்

புகழ்ந்து - புகழ்ந்துபேசி—இன்னலம்- இனிதின்பத்தை—உணும் - அனுபவித்த—நீதியுந்தோற்றமும் - மெய்ம்மையும் மாண்பும்—துவரத்தீர்ந்த - முற்றுந்துறந்த—கங்கவர்மனத்தூரன் - கெதிரண்டுபட்ட மனத்தையுடைய தலைவன் ;

பொம்மலங்கதிர்முலைபுணர்வுறுங்கொல்லென
நீயே
சென்றுசென்றிரங்கலையின்றியுந்தவிர்மோ

பொம்மலங்கதிர்முலை - பூரிப்பால் விளங்குகின்ற தனங்களை—புணர்வுறுங்கொல்லென - தழுவுவனோவென்று—நீயே- நீ

தானே—சென்றுசென்றிரங்கலை - அடிக்கடிவருந்தாதொழிக— இன்றியும் - இரங்கல்சிறிதுமின்றி—தவிர்மோ-விடுவாயாக;

நெட்டுயிர்க்கருங்கா றோன்முலைப்பெரும்பே
யமர்பெற்றொன்னலரறிவுறப்படர

நெட்டுயிர்க்கருங்கால் - நெடிய நகமுள்ள கரியகாலையும்— தோன்முலை - தோல்முலையையு முடைய—பெரும்பேய் - பெரியபேய்கள்—அமர்பெற்று - போர்கிடைத்து—ஒன்னலரறிவுற- பகைஞரறியுமாறு—படர - செல்லவும்;

பேழ்வாயிடாகினிகாறொழுதேத்திக்
கையடைகொடுத்தவெண்ணிணவாய்க்குழவி

பேழ்வாய் - பெரியவாயுள்ள—இடாகினி - ஏவற்பெண்— கால்தொழுதேத்தி - பாதத்தைவணங்கித் துதித்து—கையடை கொடுத்த - அடைக்கலமாகக் கொடுத்த—வெண்ணிணவாய்க்கு ழவி - வெள்ளியநிணம்பற்றிய வாயையுடையகுழந்தை,

ஈமம்பெருவிளக்கெடுப்பமற்றதன்
சுடுபொடிக்காப்புடறுளங்கச்சரிகுர
லாந்தையுங்கூகையுமணிதாலுறுத்த

ஈமம் - மயானமானது—பெருவிளக்கெடுப்ப - பெரியதீப மெடுக்க—அதன் - அம்மயானத்தின்—சுடுபொடிக்காப்பு- பிண ஞ்சுட்ட சாம்பற்பொடியால்—உடல்துளங்க - உடல் வருந்தவு ம்—சரிகுரல் - சரிந்தகுரலையுடைய—ஆந்தையுங்கூகையும்- ஆந் தையுங்கோட்டானும்—அணிதாலுறுத்த - அருகில் நரவாலொ லிக்கவும்,

ஓரிபாட்டெடுப்பவுவணமுங்கொடியுஞ்
செஞ்செவிச்சேவற்வர்வாய்க்கழுகு

மிட்டசெம்பந்தரிடையிடைககாலெனப்
பட்டுலர்கள்ளியம்பாற்றுயில்கொள்ளுஞ்
சுள்ளியங்கானிடை

ஓரிபாட்டெடுப்ப - முதுநரிகள் ஊளையிடவும்—உவணமு ங்கொடியும் - பருந்துங்காக்கையும்—செஞ்செவி- சிவந்தகாதை யும்—கவர்வாய் - பிளவாகிய வாயையுமுள்ள—சேவற்கழுகும- சேவலுடன்பெண்கழுகுகளும்—இட்ட - அமைத்த—செம்பந் தரிடையிடை - செவவியபந்தருக்கு நடுவேநடுவே—காலெனா- ந ட்டகால்களையொத்த—பட்டுலர் - பட்டுப்போன—கள்ளியம்பா ல் - கள்ளியினிடத்து—துயில்கொளளும் - தங்குதறகிடமாகிய —சுள்ளியங்கானிடை-இலையுலர்ந்தகள்ளிபொருந்திய பாலையுள்,

சுரர்தொழுதேத்த
மரகதத்துழாயுமஞ்சிறக்கிளியுந்
தோகையுஞ்சூலமுந்தோளின்முன்கையின்
மருங்கிற்காத்தினில்வாடாதிருத்தி

சுரர்தொழுதேத்த - தேவர்வணங்கித்துதிக்க—மரகதத்து ழாயும் - பசியதுளபமாலையையும்—அஞ்சிறக்கிளியும் - பசியகிள ளையையும்—தோகையும் - மயிலிறகுகளையும்—சூலமும் - சூலத் தையும் (முறையே)—தோளில் - தோளி னிடத்தும்—முன்கை யில் - முன்கையிலும்—மருங்கில் - இடையிலும்—காத்தினில்- கையிலும் - வாடாதுஇருத்தி - நீங்காமலிருநதி ,

போர்வலியவுணர்புகப்பொருதுடற்றிய
முக்கட்பிறையெயிற்றெண்டோட்செல்வி
கண்டுளங்களிப்ப

போர்வலி - போாசெய்தலில் வலிமைமிகக—அவுணர்-அர க்கர்கள்—புக - எதிர்நதபோது—பொருது - அமர்புரிந்து—உ

டற்றிய - அழித்த—முகககண - மூன்றுகண்களும்—பிறையெயி று - பிறைபோறபல்லும்—எணதோள் - எட்டுத்தோளு முள் ள—செல்வி - காளியம்மை—கண்டு - கூத்தின்விகற்பத்தைநோ க்கி—உளங்களிபப - உள்ளத்தில் மகிழ்ச்சிமிக,

கனைகழற்றாமரை
வானகவாவியூடுறமலர
வொருதாளெழுபுவியொருவ

கனைகழல் - வேதச்சிலம் பொலிக்கின்ற திருவடியாகிய—தாமரை - ஒருதாமரைபபூ—வானகம் - ஆகாயத்தி லுள்ள—வாவியூடு - கங்கையினிடத்தே—உறமலர - பொருந்திமலராநிற்பவும்—ஒருதாள் - ஒருதிருவடியானது—எழுபுவி - ஏழுபாதலத்திற்கும்—ஒருவ - அபபாற்சொல்லாநிற்பவும,

திண்டோள்
பத்துத்திசையுளெட்டவையுடைப்ப

திண்தோள்-திண்ணியபுயஙகளும்—பத்துத்திசையுள்-மேலுங்கீழுஞ்சேர்ந்து பத்தாகியதிசைகளுள்—எட்டு - எட்டுத்திசையையும்—அவையுடைப்ப - தாமேகடநதூஊடுருவாநிற்பவும்,

ஒருநடங்குலவியதிருவடியுரவோன்
கூடலம்பதியகம்பரவி
நீடநின்றெண்ணருளமென

ஒருநடங்குலவிய - ஒப்பில்லாத நடனத்தைச் செய்தருளிய—திருவடி - அவ்விரண்டு திருவடியை யுடைய—உரவோன்-பெரியோனது—கூடலம்பதியகம் - கூடலாகிய திருப்பதியினிடத்தே—பரவி - சொக்கலிங்கத்தைப்போற்றி—நீடநின்று - ஒழியாமணிலைபெற்று—எண்ணார் - நினையாதவரது—உளமென - உள்ளத்தைப்போல—எ-று.

திருவடி உரவோன்கூடல் பரவியென்னு ருளமென நீயே
நெஞ்சிற் குறும்பயன்கேள் கவர்மனத்தூரன் சதிரமுலைபுணரு
ங்கொல்லென இரங்கலை இன்றியுந் தவிரமோ என வினைமுடிவு
செய்க. (கூ0)

---

## பாணனொடுவெகுளுதல்.

பாணனொடுவெகுளுதலென்பது - தோழிக்குவாயின்மறுத்
த தலைமகள, நின்னிடத்து அவர் நீங்காதவருள பெரியரென்று
நீசொல்லவேண்டுமோ, அதுகிடக்க, கொற்சேரியி லூசிவிற்றுப
புலையா எம்மில்லத்து நின்னுடைய நல்லநல்ல பொய்யைப்பொரு
ந்தி நிற்கலுற்றோ நீபோந்ததென வாயில்வேண்டிய பாணனொடு
வெகுண்டுகூறாநிற்றல். அதற்குச்செய்யுள்.—

மைகொண்டகண்டர் வயல்கொண்ட தில்லைமல் கூரர்
நின்வாய், மெய்கொண்டவன்பினரென்பதென்னிள்ளா
வருள்பெரியர், வைகொண்டவூசிகொற்சேரியின்விறமெ
ம்மில்வண்ணவண்ணப், பொய்கொண்டுநிற்கலுற்றோபு
லையாத்தின்னி போந்ததுவே. (ரு அரு)

மன்னியாழ்ப்பாணன் வாயில்வேண ட
மின்னிடைமடந்தை வெகுண்டுரைத்த து.

இ-ள். கருமையைப்பொருந்திய கண்டத்தையுடையவரது
வயலைப்பொருந்திய தில்லைக்கண்ணுளராகிய வளமல்கிய வூராயு
டையவர் நின்கண் மெய்ம்மையைப் பொருந்திய வன்பையுடைய
ரென்று நீசொல்லவேண்டுமோ, அவர் எம்மிடத்து நீங்காதவரு
ள் பெரியரன்றோ, அதுகிடக்க, கூர்மையைப பொருந்திய ஊசி
யை கொற்சேரியின்கண்விற்று எம்மில்லத்து நின்னுடைய நல்

லல்ல பொய்ம்மையைப் பொருந்தி நிற்கலுற்றே, புலையனாகிய ஆத்தின்னி, ஈண்டுநீ போக்கது, இது சாலநன்று—எ-று. ௯.௮௯

நேரிசையாசிரியப்பா.

ஊர்நகைந்துட்கலூக்குமோர்விருந்தினைக்
குவளைவடிபூத்தகட்டவளவாணகைக்
குறுந்தொடிமடந்தைதநந்தோழியுங்கேண்மோ
கவிரலர்பூத்தசெஞ்செம்மைவிற்குமி
மஞ்சடைகிளைத்தவரிக்குறுமுட்டாட்
கூரரிவாளின்றோகையஞ்சேவற்
கொடியோன்குன்றம்புடைவளர்கூடற்
கணிச்சியங்கைத்தலத்தருட்பெருங்காரண
னுலகுயிர்மகவுடைப்பசுங்கொடிக்கொருபாற்
பகுத்துயிர்க்கின்பந்தொகுத்தமெய்த்துறவினன்
முளரிநீர்ப்புகுத்தியபதமலர்த்தாட்டுணை
மணிமுடிசுமந்தநல்வயலணியூரர்பின்
வளர்மறித்தகரெனத்திரிதருமபாண்மக
னெனக்குறித்தறிகிலம்யாமேயெமது
மணியொளிர்முன்றிலொருபுடைநிலைநின்
றன்னவூரர்புல்லமுழ்விழுக்குடிக்
கடாஅக்களவியும்படாஅப்பழியு
மெங்கையர்புலவியிவியம்பினநம்பாற்
றனதுமுன்புன்மொழிகீளத்தந்து
மொன்றுபத்தாயிரநன்றுபெறப்புனைந்துங்
கட்டியபொய்ப்பரப்பனைத்துநிற்குறுத்திற்
பேரொறுழ்ச்சகரரேழெனப்பறித்த
முதிர்திரையடிக்குப்பரிதியந்தோழன்
காட்டைபுளிம்பர்காணத்
தோட்டிநின்றளிக்குந்தொன்மையதுபெறுமே. ௯௧

ஊர்நகைத்துட்க தொன்மையதுபெறுமே. பகுதி-பரத்தை யிற்பிரிவு, துறை-பாணனொடுவெகுளுதல்.

குவளைவடிபூத்தகட்டவளவாணகைக
குறுந்தொடிமடநதைநந்தோழியுங்கேண்மோ
(இதனதுபதப்பொருள்.)

குவளைபூத்த - குவளைமலரை யொத்த—வடிக்கண்-கூர்மை யானகணகளையும்—தவளவாணகை - வெள்ளியவொளிபொருந் திய நகையையும—குறுந்தொடி - குறியதொடியையுமுடைய— மடந்தை - மடபபத்தையுள்ள—நநதோழியுங்கேண்மோ - என் றுதோழியேகேட்பாயாக ;

ஊரநகைத்துட்கலுக்குமோர்விருந்தினைக
கவிரலர்பூத்தசெஞ்செம்மைவிற்குடுமி
மஞ்சடைகிளைத்தவரிகுறுமுட்டாட்
கூரரிவாளின் .

ஊர்நகைத்துட்க - ஊரார்பழித்து அஞ்ச—ஊக்குமோர் விருந்தினை - ஏவப்பட்டவிருந்தை—கவிரலர்பூத்த - முருக்கலர் ந்தாலொத்த—வில் - ஒளி பொருந்திய—செஞ்செம்மைக்குடுமி- மிக்கசெம்மையுள்ள சூட்டையுடைய—மஞ்சஅடைகிளைத்த- இ ளமைநீங்காத—வரிக்குறுமுட்டாள் - வரிபொருந்திய சிறுமுள ளொடுகூடிய காலாகிய—கூரரிவாளின் - கூரிய அரிவாளினையும்,

தோகையஞ்சேவற்
றொடியோன்குன்றம்புடைவளர்கூடற்
கணிச்சியங்கைத்தலத்தருட்பெருங்காரண
னுலகுயிர்மகவுடைப்பசங்கொடிக்கு

தோகை - தோகையையுமுடைய—அஞ்சேவற்கொடியோ ன்—அழகிய கோழிக்கொடியையுயர்த்தோனது—குன்றம்- திருப்

யரங்கிரி—புடைவளர் - சூழ்ந்திருக்கின்ற—கூடல் - மதுரை யினகணை—கணிச்சி - மழுப்படையை—அங்கைத்தலத்து- அழகியகையினிடத்தேந்திய—அருட்பெருங்காரணன் - அருளாற் பெரியகாரணன்—உலகுயிர் - உலகிலுள்ள அனைத்துயிருமாகிய —மகவுடை - மக்களையுடைய—பசுங்கொடிக்கு- உமாதேவிக்கு,

ஒருபாற்
பகுத்துயிர்களின்பந்தொகுத்தமெய்த்துறவினன்
முளரிநீர்புகுத்தியபதமலர்த்தாட்டுணை
மணிமுடிக்கமைத்தம்வயலணியூரனின்

ஒருபாற்பகுத்து - ஒருபாகத்தந்து—உயிர்க்கு - மேற்குறித்தவுயிராகியமக்கட்கு—இன்பந்தொகுத்த - இன்பத்தைத்தொகுத்தருளிய—மெய்த்துறவினன - உண்மைத்துறவியினது—முளரி - தாமரைமலரை—நீர்புகுத்திய - நீரிற்போக்கிய—பதமலர்த்தாட்டுணை - அன்பர்பெறும்பதமாகிய இரண்டுதிருவடிமலரையும—மணிமுடிக்கமைத்த - அழகிய முடிமேற்கொண்ட—நம்வயலணியூரனின்-நமதுவயலான் வளப்பமுள்ளவயலூருடனே;

வளர்மறித்தகனைத்திரிதருபாண்மக
னெனக்குறித்தறிகிலமியாமே

வளர்மறித்தகனை - அவரால் வளர்க்கப்பட்ட ஆட்டுக்குட்டிபோல—திரிதரும - திரிகின்ற—பாண்மகனெனக் குறித்து - பாணனென்றுகுறிப்பாய்—அறிகிலமியாமே - நாமேயறியோம்;

எமது
மணியொளிமுன்றிலொருபுடைச்சிலசிற
றனைவரூராபுல்லுமவிழ்முகைக்குடிசு
கடாஅக்கிளவியும்பாடாஅப்பழிய

மெங்கையாபுலவியிலியம்பினநமபாற
றனதுமுன்புனமொழிநீளத்தந்தும்

எமது - நமமுடைய—மணியொளிமுன்றில் - மணியால்
விளங்கும்முற்றத்தில்—ஒருபுடைநிலைநின்று - ஒருசாரொழியா
மல்நின்று—அன்னவூரர் - அவவூரரது—புல்லமும் - புன்மையு
ம்—விழுக்குடிக்கு - அவரது உயாகுடிப பிறப்பிறகு—அடாககி
ளவியும் - தகுதியில்லாதசொல்லும—படாபபழியும் - இல்லாத
வசையுமாகிய—தனதுபுனமொழி - தனது புன்சொறகளை—
முனஎங்கையாபுலவியில் - முன்னம் எந்தங்கையராகியபரத்தை
யருடலில்—இயமபின - சொல்லியவைபோல—நம்பால்-நமமிட
த்தில்—நீளத்தந்தும் - மிகுதியாகசசொல்லியும்,.

ஒன்றுபத்தாயிரநன்றுபெறபபுனைந்துங்
கட்டியபொய்ப்பாபபனைத்துநிறகுறுத்தின்

ஒன்றுபத்தாயிரம் - ஒன்றுபத்து ஆயிரமாக—நன்றுபெற-
நாம்நம்பும்படி—புனைந்தும் - சிறபபித்தும்—கட்டிய-அவனு ல
லங்கரிக்கப்பட்ட—பொய்பபரபபு அனைத்தும் - பொய்யின்விரிவு
முழுவதும—நிற்குறுத்தின - உனககுச்சொல்லப்புகுந்தால்,

பேரெறுழ்ச்சகரரேழெனப்பறித்த
முதிர்திரையடிக்கும்பரிதியந்தோழுங்
காட்டையுளிம்பாகாணத்
தோட்டிநின்றளிகருநதொனமையதுபெறும்

பேரெறுழ்ச்சகரர் - அடங்கா வலிமைபெற்ற சகரர்கள்—
ஏழெனப்பறித்த - ஏழென்னும்படி அகழ்ந்த—முதிர்திரையடிக்
கும் - பெரியஅலைவீசுகின்ற—பரிதியந்தோழும் - சூரிய னுதித்த
ற்கிடமாகிய கடலின்—காட்டையுள - உள்ளிருக்கின்ற பொரு
ள்களை—இப்யாகாண - இவ்வுலகத்துகாணுமபடி—தோட்டி நின்

று - பேர்த்தெடுத்து—அளிக்கும் - காட்ட வல்ல—தொன்மை - பழமையுண்டெனில—அதுபெறும்-அதனையாக்கும்—எ-று.

நந்தோழியுங்கேண்மோ! தோகையஞ் சேவற்கொடியோன் குன்றமபுடைவளர் கூடலமெய்த்துறவினன முளரிநீர்புகுந்திய பதமலர்த்தாட்டுணை மணிமுடிசுமந்த நமவயலணி யூரரின் தக வொனத்திரிதரும் பாணமகன் எமதுமுன்றி லொருபுடை நின்று அன்னவூரர் புல்லமும அடாஅகக்ளவியும படாஅப்பழியும் எங் கையர்புலவியி லியம்பின நமபால் நீளத்தரனும் நன்றுபெறப் புனைந்தும் கட்டிய பொய்ப்பாபபனைத்தும் நிற்குறுத்தின் சகரர்ப றித்த பரிதியஞ்சோழன காட்டையுள் இம்பர்காணத் தோட்டின் றளிக்குந் தொன்மையதுபெறுமென வினைமுடிவுசெய்க.(௯௧)

---

## பாணன்புலந்துரைத்தல்.

பாணனபுலந்துரைத்தலென்பது- தலைமகள்வெகுண்டுரையாநிறப, நினபுருவநெரிய வாய்துடிபப என்னையெறிதற்குக் கல்லெடுக்கவேண்டா, நினதுகரியகண்களின சிவபபாறறுவாயாக, நீவெகுளபபடுவதனறு, நினககுப பல்லாணடுசெல்வதாக, யான் வேணடியவிடத்துபபோக நின்னடியை வலங்கொள்ளா நின்றே னென வாயிலபெறாமையிற பாணன புலந்து கூறாநிற்றல். அதற்குசசெய்யுள.—

கொல்லாண்டிலங்குமழுப்படையோன் குளிர் தில்லையன்
னாய்,வில்லாண்டிலங்குபுருவநெரியச்செவ்வாய்துடிப்பக்
கல்லாண்டெடேல்கருங்கண் சிவப்பாற்றுகறுப்பதன்று
பல்லாண்டடியேனடிவலங்கொள்வனபணிமொழியே.()

கருமலர்க்கண்ணி கனன்றுகட்டுனொப்ப ப்
புரியாழ்ப்பாணன் புறப்பட்ட து.

இ-ள். கொற்றெழில் அவ்விடத்துவிளங்கும் மழுவாகியபடையையுடையவனது குளிர்ந்த தில்லையையொப்பாய், வில்லையடிமைக்கொண்டுவிளங்காநின்ற புருவமெரியச் செவ்வாய் துடிப்ப எறிதற்குக்கல்லை அவ்விடத்தெடுக்கவேண்டா, கரியகண்களைச் சிவப்பாற்றுவாயாக, வெகுளப்படுவதன்று, நினக்குப பல்லாண்டுகள் உளவாகவேணடுமே, பணிமொழியை யுடையாய், யான் வேண்டிய தேயத்துக்குப்போக அடியேன் நின்னடியை வலங்கொள்ளாநின்றேன்—எ-று. (௬௮௭)

நேரிசையாசிரியப்பா.

இலவலர் துற்றியணிச்சங்குழைத்துத்
தாமரைகுவித்தகாமர்சேறடித்
திருவினொருநகையரிதினிற்கேண்மோ
வெல்லாந்தோற்றவிருந்தோற்றமுந்
தன்னுட்டோன்றித்தானதிற்றோன்றாத்
தனிநடைநிறையுமொருதனிக்காலத்
திருவடிவாகியப்பூமறைவேதிய
ஞன்மறைநாபதர்முத்தழற்களம்புக்
கரக்கர்துய்த்துடற்றுமதுவேமானப்
பாசவட்டமறைத்தெழுமுளரியங்கயத்துட்
காரானினங்கள்சேடெறிந்துழக்குங்
கூடற்கிறையவன்காலற்காய்ந்தோன்
றிருநடங்குறித்தநம்பொருபுனலூரனை
யெங்கையர்குழூமியெமக்குந்தங்கையைப்
புணர்த்தினன்பாண்டொழிற்புல்லனென்றிவனைக்
கோலிற்காத்திற்றேறலிற்புடைப்ப

கிளைமுட்செறித்தவேலியம்படப்பைப்
படர்காய்ச்சுகளைந்தபுன்கூரைப்பைங்குறுநரி
யுடையோதிமிரப்பவருமுயிர்ப்பெருகி
யுயிர்பிரிவுற்றமைகாட்டியவாங்கு
வோட்டங்கொண்டனகடுக்கு
நாட்டவாதடையமற்றுதிர்த்துநடந்ததுவே. ௬௨

---

இலவலர்தூற்றி உதிர்த்துநடந்ததுவே. பஃறி - பரத்தையிற்பிரிவு, துறை - பாணனைப்புடைத்தமை பாங்கிக்குரைத்தல். *

இலவலர்தூற்றியனிச்சங்குழைத்துத்
தாமரைகுவித்தகாமர்சீறடித்
திருவினளொருநங்கையரிதினிற்கே[illegible]

(இதனது பதப்பொருள்)

இலவலர்தூற்றி - இலவமலரைப் பழித்து—அனிச்சங்குழைத்து - அனிச்சப்பூவைவாடச்செய்து—தாமரைகுவித்த - தாமரைப்பூவைக் குவியச்செய்த—காமர்சீறடி - அழகிய சிறியகாலையுடைய—திருவினள் - பாக்கியையே—ஒருநங்கை - பரிதாசம்நடந்ததை—அரிதினிற்கேண்மோ - புதுமையாய்க்கேட்பாயாக,

எல்லாந்தோற்றமுமிருந்தோற்றமுந்
தன்னுடன்றோன்றித்தானதிற்றோன்றாத்
தனிநடைநிறையுமொருதனிக்கோலத்
திருவடிவாகியபழமறைவேதியன்

எல்லாம் - பிரபஞ்சமெல்லாம்—தோற்ற - தன்சந்நிதியின் கண்தோற்றுமாறு—இருந்தோற்றமும் - தானொழிவற வீற்றிருந்தகாட்சியும்—தன்னுடன்றோன்றி - தன்னிடத்திலுண்டாகி—தான் அதில்தோன்றா - தானதிற்றோன்றாத—தனிநடைநிறை

யும் - தனியான வியாபகனாகி எங்குநிறைந் துள்ள—ஒருதனிக் கோலத்து - ஒப்பில்லாதவொருருவில்—இருவடிவாகி - சிவன்சத்தி யென்றிருருவாகி—பழமறைவேதியன் - பழமையான வேதப பொருளாயுள்ளவன்,

நான்மறைத்தாபதர்முத்தழற்களம்புக
கரககர் துய்த்துடறறுமதுவேமான

நான்மறை - நால்வேதமுமுணர்ந்த—தாபதர் - இருடிகளா து—முத்தழற்களம - மூன்றழலாலோங்கிய வேள்வியில்—புக் கு - புகுந்து—அரககர் - அரககாகள்—துற்றுடறறும்- அவியை யுண்டழிக்கின்ற—அதுவேமான - அத்தன்மையேபோல,

பாசடைமறைதெழுமுளரியங்கயத்துட்
காரானினங்கள்சேடெறிநதுழககும்

பாசடை - பச்சிலைகளை—மறைத்தெழும - மறைத்துமிகு தியாய்ப்பூத்தெழுந்த—முளரியஙகயத்துள் - தாமரைமலாநிறை ந்த பொய்கையுள—காரான்சேட்டினஙகள் - எருமைப பகடுக ள்—எறிந்துழக்கும் - வீழ்ந்துகலககாநின்ற,

கூடற்கிறையவன்காலற்காய்ந்தோன்
திருநடங்குறித்தநம்பொருபுனலூரனை

கூடற்கிறையவன் - மதுரைநாயகன்—காலற்காய்ந்தோன்- இயமனைச்சினந்த கடவுளது—திருநடம் - திருநடனத்தை—கு றித்த - சிந்திக்காநின்ற—நம் - நமது—பொருபுனலூரனை - அ லைவீசும் புனலூரனுக்கு,

எங்கையர்குழுமியெமக்குந்தங்கையைப்
புணர்த்தினன்பாண்டொழிற்புல்லனென்றிவனைக்
கோலிற்காத்திற்றேலிறபுடைப்ப

எமக்குத்தங்கையை - எமக்குத்தங்கையாய்வந்த பரத்தையை—பாண்டொழில்புல்லன் - பாணபாடுந்தொழிலையுடையகீழ்மகன்—புணர்த்தினனென்று - சேர்த்துவைத்தது கருதி—எங்கையர்குழீஇ - எம்பாலுள்ள தோழிமார்கூடி—இவனை - இப்பாணனை—கோலில் - கோலினாலும்—கரத்தில் - கைகளாலும்—தோலில-வாரினாலும—புடைப்ப-அடித்ததால்,

கிளைமுட்செறித்தவேலியம்படப்பைப்
படர்காய்க்கவணைந்தபுன்கூழையங்குறுநரி

கிளைமுட்செறித்த - முள்ளுள்ள மூங்கில்களாலடர்ந்த—வேலியம்படப்பை - வேலிசூழ்ந்ததோட்டத்தின்கண்—படர்காய்க்கு - படர்ந்தகொடிக்காய்களைக் கவர்வதற்கு—அணைந்த - வந்த—புன்கூழையங்குறுநரி - சிறியவாலுள்ள குறியநரியை,

உடையோர்திமிர்ப்பவருமுயிர்ப்பொடுக்கி
யுயிர்பிரிவுற்றமைகாட்டி

உடையோர்திமிர்ப்ப - தோட்டத்திற் குரியவர் புடைத்தபோது—வருமுயிர்ப்பு ஒடுக்கி - வெளிவருகின்ற மூச்சையடக்கி—உயிர்பிரிவுற்றமை - உயிர்பிரிந்ததன்மையாக—காட்டி - காண்பித்து,

அவர்நீங்க
வோட்டங்கொண்டனகடுக்கு
நாட்டவர்தடையமற்றுதிர்த்துநடந்ததுவே.

அவர்நீங்க - அவ்வுரியவர் நீங்கக்கண்டு—ஓட்டங்கொண்டனகடுக்கும் - ஓடிப்போயினவாறு ஒக்கும்—நாட்டவர்- இவ்வூரார்—தடைய - தடுக்க—உதிர்த்துநடந்தது - அவர்களை விலக்கியோடிப்போயினது—எ-று மற்று-அசை.

தாமரைகுவித்த காமர்சேவடித் திருவினளோ ஒருநகை அரி தினிற்கேண்மோ கூடற்கிறையவன் கடங்குறுத்த கம்பொருபு னலூரனை எமக்குத்தங்கையைப் பாண்டொழிற் புலவன் புணர் த்தினனென்று எங்கையர்குழுமி யிவனை கோலிற்காத்திற் றே விற்புடைப்ப படர்காய்க கனைந்த குறுநரி உடையோர் திமிரப்ப உயிர்ப்பொடுக்கி யுயிரபிரிவுற்றமை காட்டி அவாநீங்க ஓட்டங் கொண்டனைபெருகும் காட்டவர்தடைய உதிர்த்து நடந்ததென வினைமுடிவுசெய்க. (கஉ)

---

## பாணன்வரவுரைத்தல்.

பாணன்வரவுரைத்தலென்பது - காதலொடுதனியிருந்துவரு ந்தாநின்ற தலைமகளுக்கு, இராப்பொழுதின்கட் சென்று திசை யைக்கடக்கும் வாவல் இரைதேருங் காலமன்மையாற் பகற்பொ ழுதின்கணுறையும் மரம்போலுந் தமியோமையறியாது விறலியு ம் பாணனும் நம் வேந்தற்குத் துயிலெழுமங்கலம் பாடவந்து நி ன்றாரெனத் தோழி பாணன்வரவு கூறுநிற்றல். அதற்குச்செய் யுள.—

விறலியும்பாணனும்வேந்தற்குத்தில்லையிறையமைத்த
திறலியல்யாழ்கொண்டு வந்துநின்றார்சென் றிராத்திசை
போம்,பறவியல்வாவல்பகலுறைமாமரம்போலுமன்றே
வறலியல்கூழைநல்லாய்தமியோமையறிந்திலரே. நஎரு

இகல்வேலவனகல் வறியாப்பாணனை ப்
பூங்குழன்யாதாககுப பாங்கிபகர்ந்த து.

இ-ள். விறலியும்பாணனும் தில்லையிறையா லமைக்கப்பட் ட வெற்றியியலும் யாழை நம்வேந்தற்குத் துயிலெழு மங்கலம் பாடக்கொண்டுவந்து நின்றார்கள், அறல்போலுங் கூழையை

யுடையனல்லாய், இராபபொழுதின்கட்சென்று திசையைக் கடக்கும பறத்தலாகிய வியல்பினையுடைய வாவல இனைசேருங் காலமன்மையாற் பகறபொழுதின்க ணுறையும பெரியமரம்போலும் இராபபொழுதிற் றுணையில்லா தோமை இவரறிந்திலர் போலும—எ-று. (கூஎ)

நேரிசையாசிரியப்பா.

வாய்வலங்கொண்டவயிறறெழுதழலுக்
காறுறுதலந்துகாற்றெனக்கோட்புற்
றுடைதிரையருவியொளிமணிகாலுஞ்
சேயோன்குன்றகத்திருப்பெறுகூடற்
கொழுஞ்சுடராகிளைத்தநெடுஞ்சடைப்புயங்கன்
பவளந்தழைத்தபதமலர்சுமந்தும்
பொருபுனலூரனைப்பொதுவெனவமைந்த
வக்காடுறுமனையவாமனைபுகுத்தி
யறுவாயளிறைந்தமதிப்புறத்தோவென
சுனாதலைகிடைத்தவிலைசயுளர்தண்டெடுத்
தளிதாரபாடுங்குரனீரவறந்த
மலைப்புட்போலநிலைக்குரலணந்தாங்
குணவுளங்கரைதியொளியிசைபாட
முட்டாண்மறுத்தமுண்டகந்தலையமைத்
தொருபாலணைந்தவிவ்வுயர்மதிப்பாணற்
கடுத்தனையுதவவேண்டுந
கடுந்திகழ்கன்னியங்கல்லையிக்கணமே. கூடு

வாய்வலங்கொண்ட கல்லையிககணமே, பகுதி - பரத்தையிற்பிரிவு, துறை-பாணனைவரவுரைத்தல்.

உடைதிரையருவியொளிமணிகாலுஞ்
சேயோன்குன்றகத்திருப்பெறுகூடல்

(இதனதுபதப்பொருள்)

உடைதிரையருவி - அலைமறிகின்ற வருவியானது—ஒளிமணிகாலும் - ஒளியுள்ள மணிகளைகொழிக்கின்ற—சேயோன்குன்று - பிள்ளையாரதுபரங்குன்றத்தை—அகம்- தன்பாற்கொண்டுள்ள—திருப்பெறு - தெய்வத்தன்மைபெற்ற—கூடல் - மதுரையின்கண்;

கொழுஞ்சுடர்கிளைத்தநெடுஞ்சடைப்புயங்கன்
பவளந்தழைத்தபதமலர்சுமந்தநம
பொருபுனலூரனை

கொழுஞ்சுடர் - கொழுமையுள்ள நெருப்பானது—கிளைத்த - கிளைவிட்டாற் போன்ற—நெடுஞ்சடைப்புயங்கன் - நீண்ட செஞ்சடைப் பெருமானது—பவளந்தழைத்த - பவளநிறமுள்ள—பதமலர் - ஸ்ரீபாததாமரைகளை—சுமந்த- தலைமேற்கொண்ட—நம்பொருபுனலூரனை - நமது தலைவனை;

பொதுவெனவமைத்த
வக்கடிகுடிமனையவர்மனைபுகுத்தி
யறுவாய்நிறைந்தமதிப்புறத்தோவெனச்
சுனைதலைகிடைத்தவிசையுளர்தண்டெடுத்து

பொதுவெனவமைத்த - யாவர்க்கும் பொதுவாகவமைக்கப்பட்ட—அக்கடிகுடிமனையவர் - நூலான் விலக்கப்பட்ட குடிவாழ்க்கையையுடைய வப்பொதுமகளிரது—மனைபுகுத்தி - இல்லிடத்திற்சேர்த்து—அறுவாய் - கார்த்திகை நட்சத்திரம்—நிறைந்தமதிப்புறத்தோவென - நிறைமதியினிடத் துள்ளதோவென்னும்படி—சுனைதலைகிடைத்த - சுனைபபத்தர் தனது தலையில்வைக்கப்பட்ட—இசையுளர் - இசைநரம்புகளைத் தடவுகின்ற—தண்டெடுத்து - யாழைகைகயிலெடுத்து;

வாய்வலங்கொண்டவயிற்றெழுதழலுக்
காற்றுதலந்துகாற்றெனக்கொட்புற்று

வாய்வலங்கொண்ட - வாயாற்பாடும் வன்மைகொண்டதா ல்—வயிற்றெழு - வயிறறின்மூளுகின்ற—தழலுக்கு - பசியாகி யதழலையவித்தற்கு—ஆற்றாது - தாங்க மாட்டாமல்—அலந்து- துன்புற்று—காற்றெனக்கொட்புற்று - காற்றைப்போ லெங்கு ஞ்சுற்றி;

அளிதார்பாடுங்குரனீர்வறந்த
மலைபபுட்போலநிலைக்குரலணந்து
உணவுளங்கருதியொளியிசைபாட

அளிதார்பாடும் - பூவில் வண்டுபாடுவபோல் பாடுகின்ற— குரனீர்வறந்த - தொண்டைநீர்வற்றிய—மலைபபுடபோல-மலை பபறவைபோல—நிலைக்குரலணந்து - தன்மையையுடையகுரலை த்திறநது—உணவுளஙகருதி - உள்ளத்திலுணவுபெறக்கருதி— ஒளியிசைபாட - ஒளியபாட்டைப்பாட;

முட்டாண்மறுத்தமுணடகந்தலையமைத்
தொருபாலணைநதவிவ்வுயாமதிபபாணற்குக
கடுத்திகழ்கண்ணி

முட்டாள்மறுத்த - முள்ளுள்ளகாம்பைநீக்கிய—முண்ட கம் - தாமரை மலரை—தலையமைத்து - தலையில் தரித்து—ஒரு பாலணைந்த - ஒருபுறத்திலிருந்து நிற்கின்ற—இவ்வுயர்மதிப்பா ணற்கு - இநத வுயாந்த புத்தியுள்ள பாணனுககு—கடுததிகழ்க ண்ணி - விடமெனககறுத்த கண்ணையுடையாய்;

அடுத்தனையுதவவேண்டும்
அகசுல்லையிககணமே.

அடுத்தனை - நீ அடுத்தாயாகி—இக்கணமே - இப்பொழுதே—அகல்லே - அந்தகல்லே—உதவவேண்டும் - கொடுத்தல்வேண்டும்—எ-று.

கல்லையென்பது இலைகலமெனவும் பாணனை யடித்தற்கு ஓர்கல்லினையெனவும உரைத்துக்கொள்க.

கூடல் நெடுஞ்சடைப புயங்கன் பதமலர்சுமந்த நம்மூரனை அக்கடி குடிமனை யவர்மனைபுகுத்தி இசையுளர் தண்டெடுத்து குரனீாவரந்த மலைப்புட்போல உணவுளாங்கருதி யிசைபாட ஒருபாலணைந்த இவ்வியாமதிபபாண நீ கடிதெதிசழ்ககணனி அடுத்தனை யிககணமே அகல்லே யுதவ வேணடுமென வினைமுடிவு செய்க. (கூரு)

---

அன்னமோடாய்தல்.

அன்னமோடாய்தலெனபது - கடலொடுபுலந்து கூறியதலைமகள், புன்னையொடு புலந்து, அகன்றவர் அகன்றேயொழிவரோ யானறிகின்றிலேன் நீயாயினுஞ் சொல்லுவாயாகவென அன்னமோடாய்ந்து வரவுகேளாநிற்றல. அதற்குச்செய்யுள் —

பகன்றுமனைக்கண்கெடக்கடந்தோன்புலியூர்ப்பழனத், தகன்றுயனையன்னமேவண்டுநீலமணியணிந்து, முகன்றுழ்குழைச்செம்பொன் முத்தணிபுன்னையின்னுமமுனையா, தகன்றாகன்றேயொழிவர்கொல்லோநம்மகன்றுறையே. (கஅசு)

மின்னிடை மடந்தை
யன்னமோடாய்ந்தது

இ-ள். பகனென்னும் பெயரையுடைய வாதித்தனது தாமரைப்பூவுங்கணகெட அவனைவென்றவனது புலியூரைச்சூழ்ந்த

பழனத்தின்கணுண்டாகிய அகன்றதாமரைக் கண்வாழும் அன்னமே, வண்டாகிய நீலமணியையணிந்து தாதாகிய செம்பொன்னையும் அரும்பாகிய முத்தையுமணிந்த முகத்துத் தாழ்ந்தகுழையையுடைய புன்னை இந்நிலைமைக்கண் ஒன்றுசொல்லுகின்றதில்லை அகன்றவர் நமதகன்றதுறையை யகன்றே விடுவரோ, அறியேன், நீயுரை—எ-று. (௧௮௪)

நேரிசையாசிரியப்பா.

வெறிமறிமடைக்குரற்றேற்காய்த்தென்ன
விருக்கினுமிரக்கினுமுதலாத்தேவாதம்
பொய்வழிக்கறியகமெய்யெனப்புகாது
விழியுடைத்தொள்டாகுழீஇமுடித்தெய்ப்பத்
தளர்ந்துசிவந்தண்டையத்துணைத்தாட்
சேயோனபரங்குன்றிழையெனச்செறிந்துத்
தமிழ்க்கலைமாலைசூடிநதாவாப்
புகழ்க்கலையுடுத்துப்புண்ணியக்கணவன்
பன்னெறிவளனிறப்பூட்சியிற்புல்லுந்
தொன்னிலைக்கூடற்றுடியிடையகத்தனை
யன்புளத்தடக்கியினபழலாறெனக்
தேவன்மண்டபிதருகசினையடைகிடக்குந்
கைதைவெண்குருகெழமொய்த்திரையுகளு
முளைகடற்சேர்ப்பனளிவிடந்தணிப்ப
நீலமுங்கருங்கொடியடம்புஞ்சங்குமுங்
கண்ணிற்கிடைபிற்களதிற்கழிந்து
அலர்ந்துமுலர்ந்துமுடைந்துமனுங்கலின்
வட்குடைமையலகறியன்பொருகாற்
கூறவும்பெறுமேயாறதுசிறக்க
விவணடைபெற்றுமிவட்பயின்றிரங்கியு

மோருழிவளர்ந்தநீரவிவ்வன்ன
மன்றெனத்தலையாக்கேண்மை
குனறுமசசூளினர்தம்மினுங்கொடிதே. கூசு

-----*-----

வெறிமறிமடைக்குரல் தம்மினுங்கொடிதே. பகுதி-ஒருவழித்தணத்தல், துறை-அன்னமோடாய்தல். *

வெறிமறிமடைக்குரற்றோல்காய்த்தென்ன
விருக்கினுமிறக்கினுமுதவாத்தேவாதம

(இதனதுபதப்பொருள.)

வெறிமறி - வெறியாடற்குரியஆட்டின்—மடைக்குரல்-துளையுளளகழுத்தினிடத்து—தோல்காய்த்தென்ன - அதாஉணடாயிருப்பதுபோல—இருக்கினும்இறக்கினும் - உயிரோடிருந்தாலும்இறந்தாலும்—உதவா - உயிாகுறுதி யுதவமாட்டாத—தேவர்தம் - ஏனைத்தேவர்களது ;

பொய்வழிக்கதியகமெயயெனப்புகாத
விழியுடைததொணடர்குழீஇமுடிதேய்ப்பத்
தளிாத்துசசிவந்ததண்டையநதுணைத்தாள்

பொய்வழி - பொய்ந்நெறியாகிய—கதியகம் - கதியினிடத்து—மெய்யெனபபுகாத - அதனை மெய்யென்று செல்லாத—விழியுடைத்தொண்டா - சிவஞானமாகிய கண்பெற்ற மெய்யடியர்—குழீஇ - கூடிவணங்கும்போது—முடிதேய்ப்ப - அவாமுடிகளாற் றேய்ப்புணடு—தளிாத்துசசிவந்த - மகிழ்வுற்றுச் சிவப்பேறிய—தண்டையந்துணைத்தான் - தண்டையணிந்த தாளிணையையுள்ள ;

சேயோன்பரங்குன்றிறைஎனச்செறித்துத்
தமிழ்க்கலைமாலைசூடித்தாவரப

புகழ்க்கலையுடுத்துப்புண்ணியக்கணவன்
பன்னெறிவளனிறப்பூட்சியிற்புல்லுந்
தொன்னிலைக்கூடற்றுடியிடையகத்தனை

சேயோன்பரங்குன்று - பிள்ளையாரது ஸ்ரீபராசலத்தை—இழையெனச்செறித்து - ஆபரணமாகப பூண்டு—தமிழ்க்கலை-முத்தமிழ்நூல்களாகிய—மாலைசூடி - மணிமாலை தரித்து—தாவா - நிலைபெற்ற—புகழ்க்கலையுடுத்து - புகழாகியவஸ்திரத்தையுடுத்து—புண்ணியக்கணவன் - தருமமாகியகணவனுலாகிய—பன்னெறிவளம் - பல்வகைப்பட்ட வளப்பங்களை—நிறம் - தனதுள்ளே—பூட்சியின - ஆபரணங்களாக—புல்லும் - பூண்டிருக்கின்ற—தொன்னிலை - தொன்மைப்பதியாகிய—கூடல் - மதுரையில்—துடியிடையகத்தனை - துடிபோலுமிடையுள்ள உமைபாகனை ;

அன்புளத்தடக்கியின்பமுண்ணுநரெனச்
சேவன்மண்டலித்துச்சினையடைகிடக்குங்
கைதைவெண்குருகெழமொய்த்திரையுகளும்

அன்பு - அன்பினால்—உளத்தடக்கி - உள்ளத்திலிருத்தி—இன்பம்உண்ணுநரென - பேரின்பத்தை யனுபவியார் போல—சேவல் - சேவலுடன்—மண்டலித்து - கூடி—சினையடைகிடக்கும் - முட்டைகளையடைகாக்கின்ற—கைதை - தாழைத்தூற்றினின்றும்—வெண்குருகு - வெள்ளியநாரை—எழ - அஞ்சிமேலெழும்படி—மொய்த்திரை - நெருங்கியஅலைகள—உகளும் - வீசுகின்ற,

உலைகடற்சேர்ப்பனளிவிடந்தணிப்ப
நிலமுங்கருங்கொடியடம்புஞ்சங்கமுங்
கண்ணிற்கிடையிற்களத்திற்கழிதந்
தலர்ந்துமுலர்ந்துமுடைந்துமனுங்கலின்

உளைகடற்சேர்ப்பன் - ஒலிக்கின்ற கடற்றுறையையுடைய தலைவன்—அளிவிடந்தணிப்ப - கொடுத்த சோலைவைத் தணிக்கும்பொருட்டு—நிலமும் - நீலோற்பல மலரும்—கருங்கொடியடம்பும் - கரியஅடம்பின்கொடியும்—சங்கமும் - சங்கும் (முறையே)—கண்ணிற்கு - கண்களுக்கும்—இடையில் - இடைக்கும்—களத்தில் - கழுத்திற்குங்கும—கடந்து - தோற்று—அலர்ந்தும் - விரிந்தும—உலர்ந்தும - வாடியுலர்ந்தும்—உடைந்தும்- முத்துகளையீனறுடைந்தும்—அறுங்கலின-ெ.டுதலால்,

> வட்குடையையலகற்றியன்பொருகாற்
> கூறவும்பெறுமேயாறதுமிறக

வட்குடை - மழுக்கமுடைய—மையலகற்றி - மயக்கத்தை நீக்கி—அன்பு - அன்பாக—ஒருகால் - ஒருமுறை—கூறவுமபெறுமே - போயச்சொல்லவும் பெறுவனவோ—ஆறதுமிறக - அவையவ்வாறிருகக,

> இவணடைபெற்றுமிவட்பயினறிரங்கியு
> மோருழிவளர்ந்தநீரவிவவன்ன
> மன்றெனததடையாககேண்மை
> குன்றுமசகுளினாதம்பிறுங்கொடிதே.

இவள்நடைபெற்றும் - இவளதுநடையைப்பெற்றும்—இவட்பயின்று - இவளொடுபயில்வுறறும—இரங்கியும்-ஒலித்தும்—ஓருழிவளர்ந்த - ஒரேயிடத்தில்வளர்ந்த—நீர - நீர்மையையுடைய—இவ்வன்னம் இநதவன்னம்—அன்றென - அவ்வாறிவளுடன் பயின்றதன்றென்னும்படி—தடையாககேண்மை - தடைபடாதநட்பில்—குன்றும் - குறைந்து நீங்கிய—அச்சூளினர்தம்பினும் அந்தச் சததியவாதியைப்பார்க்கிலும்—கொடிதே - மிகவுங் கொடியதாகவிருக்கின்றது—எ-று.

கூடற்றுடியிடையகத்தனை அன்புளத்தடக்கி இன்பமுண்
ணுமென இவணடைபெற்றும் இவட்பயின் றிரங்கியும், ஒருமிவ
ளர்ந்தநீர இவ்வன்னம் அன்றெனத் தடையாக்கேண்மை குன்று
மச்சூளினர் தம்மினுங் கொடிதேயென வினைமுடிவுசெய்க. கூச

---

வழியருமைகூறிமறுத்தல்.

வழியருமைகூறிமறுத்தலென்பது-தலைமக னிரவுக்குறிவே
ண்டிநிறப, யாங்களவாழும்பதி ஏற்றிழிவுடைத்தாகலின் அவ்வி
டத்து நினகுச்சிந்தைதகு மேறற்கரிதெனத் தோழி வழியரு
மைகூறி மறுத்துக்கூறுநிற்றல். அதற்குச்செய்யுள்.—

விசும்பினுக்கேணிநெறியன்னசின்னெறி மேன்மழை
தூங், கசும்பினிற்றுன்னி யளைநுழைந்தாலொக்கு மைய
மெய்யே, யிசும்பினிற்சிந்தைக்குமேறற்கரிதெழிலம்பல
த்துப், பசும்பனிக்கோடு மிலைந்தான்மலயத்தெம் வாழ்
பதியே. (கசகூ)

இரவரலேந்தல் கருதியுரைப்ப ப்
பருவரறபாங்கி யருமையுரைத்த து.

இ-ள். ஐயனே, விசும்பிற்கிட்டதோ ரேணிநெறிபோலுஞ்
சிறுநெறிமேல் மழையிடையறாதுநிற்றலான், இடையிடையுண்
டாகிய அசும்பின்கட்சென்று பொருந்தி யேறுமிடத்து இட்டி
மையால் அளைநுழைந்தாற்போன்றிருக்கும். அதுவேயுமன்றி எ
ம்வாழ்பதிவழுக்கினுன் மெய்யே சிந்தைக்குமேறுதற்கரிது. அந்
நுலாண்டுவாரத்தகாது—எ-று. எழிலையுடைய வம்பலத்தின்க
ணுளனாகிய குளிர்ந்தபனிமையுடைத்தாகிய பிறையைச்சூடியவ
னது மலயத்தினகணுண்டாகிய வெம்வாழ்பதியெனக்கூட்டுக

நேரிசையாசிரியப்பா.

முதுக்குறைபெண்டிர்வரத்தியல்குறிப்ப
வழிமுதற்றெய்வதம்வணாந்துமற்றதற்குப்
பருக்காடுறுத்திப்பலிமுதற்பராவக்
கிழமையவ்வயலினர்நாவுடன்றேத்தப்
பக்கஞ்சூழுநர்குரங்கமண்படப்
பெற்றுயிர்த்தவரும்பொற்றொடிமடந்தைதன்
ணிருவிழிபொலியத்திருநகர்ப்புறத்துக்
கரியுடனுண்ணூர்பழியுளமொத்த
விருளுடைப்பெருமுகில்வழிதெரிந்தேகன்மி
னரிமானுறுத்தநூற்றுவர்மதித்த
புடைமனச்சகுனிபுள்ளியங்கவற்றி
லைந்தொழிற்களைமந்தவைவரும்புறகிட்
டொலிவரவோதிமமெரிமலர்த்தவிசிருந்
தூடுகள்சிரலைபச்சிறவருந்தும்
பழனக்குருநாடளிபதிதோற்று
முன்னுறுமுழுவயிற்பன்னிருவருடங்
கண்டீரவத்தொடுகஃறயடிவளருங்
குளிர்நிழலடவியுறைகொண்டகன்றபி
னனைத்துளவஞ்சமுமழித்துநிணாமீட்சி
முடித்துத்தமதுமுடிமாப்பதிபுக
லூடிமுறையேயெமக்குள்ளமண்கருதிச்
சேறியென்றிசைப்பச்செல்பணித்தூதினர்க்
கொருகாலளித்ததிருமணிமிடற்றோன்
பாடல்சான்றதெய்வக்
கூடல்கூடார்குணங்குறித்தெனவே. ௯௫

—*—

முதுக்குறைபெண்டிர் குணங்குறித்தெனவே. பகுதி-இர வுக்குறி, துறை-வழியருமைகூறிமறுத்தல். *

முதுக்குறைபெண்டிர்வரத்தியல்குறிப்ப
வழிமுதற்றெய்வதம்வணைந்துமற்றதற்குப்
பருககாடுறுத்திப்பலிமுதற்பராவ

(இதனதுபதப்பொருள்)

முதுக்குறை - முதுக்குறைந்த—பெண்டிர் - மகளிர்—வரத்தியல்குறிபப - வரங்கேழ்க்கவும்—வழிமுதற்றெய்வதம்-தம் வழிமுதலாகிய குலதெய்வத்தை—வணைந்து - வரிந்து—அதற்கு - அத்தெய்வத்தின் பொருட்டு—முதல் - முதலில்—பருக்காடுபலியுறுத்தி - அடர்வாகிய காடுபலிகொடுத்து—பராவ - பரவுதல்செய்யவும் ;

கிழமையவ்வயலினர்நாவுடன்றேத்தப்
பக்கஞ்சூழுநர்

அக்கிழமை - அப்பரவுதற்குரிய—அயலினர் - அயலினுள்ளார்—நாவுடன்றேத்த- நாக்குழறியேத்தவும்—பக்கஞ்சூழுநர்-நாற்புறத்தினின்றும் வந்துசூழ்கின்றாராக ;

குரங்கமண்படப்
பெற்றுயிர்த்தவரும்பொற்றொடிமடந்தைதன்
னிருவிழிபொலியத்திருநகர்ப்புறத்து

குரங்கம் - ஒருமானானது—மண்பட - நிலத்திற்பட—பெற்றுயிர்த்த - கருக்கொண்டு ஈன்ற—அரும்பொற்றொடி - அருமையான வள்ளியம்மையையீகர்த்த—மடந்தைதன் - தலைமகளது—இருவிழி - இரண்டுகண்கள்போலும்—பொலி - விளங்காநின்ற—அத்திருநகர்ப்புறத்து-அந்தப் பெருநகரிடத்தினின்றும் ;

கரியுடனுண்ணூர்பழியுளமொத்த
விருளுடைபபெருமுகில்வழிதெரிந்தேகன்மின்

கரியுடன் - விருந்தினருடன்—உண்ணூர் - உண்டுவாழாத வர்களது—பழியுளமொத்த - மாசுள்ளமனமபோன்ற—இருளுடை - இருளையுடைய—பெருமுகில் - மேகஙகளான் மிகவுமழு டப்பட்ட மழையிரவில்—வழிதெரிந்து - வழிகண்டு—ஏகன்மின் - நீவிர்வாராதொழிவீராக;

அரிமானுறுத்தநூற்றுவாமதித்த
புடைமனச்சகுனிபுள்ளியங்கவற்றி
லைந்தொழிற்கமைந்தவைவரும்புறகிட்டு

அரிமானுறுத்த - சிஙகம்போறசினந்த—நூற்றுவர் - துரி யோதனன்முதலிய நூறறுவரால்—மதித்த - நன்குமதிககபபட் ட—புடையனச்சகுனி - புறம்போய மனமுள்ள சகுனியென்ப வனுல்—புள்ளியஙகவற்றில் - புள்ளிபொருந்திய சூதாடல்கார ணமாக—ஐந்தொழிறகு - ஐவேறு தொழில்கட்கு—அமைந்த- அமைந்தவ ராகிய—ஐவரும்புறகிட்டு - பாணடவரைவருந்தோ ற்று;

ஒலிவரவோதிமமெரிமலர்த்தவிசிருந்
தூடுகள்சிரலைபசசிறவருந்தும்
பழனககுருநாடளிபதிதோற்று

ஓதிமம் - அன்னப்பறவைகள—எரிமலர்த்தவிசிருந்து- செந்தாமரைத்தவிசின்கணிருந்து—ஒலிவர - ஒலிக்க—ஊடுஉகள்- அவ்விடத்திற்பாய்ந்து—சிரலை - சிச்சிலிபபறவை—பச்சிறவு அருந்தும் - சிறியஇறவென்னு மீனைக்குத்தி யருநதுகின்ற—பழனம் - வயல்கள்சூழ்ந்த —குருநாடு - குருநாடாகிய—அளிபதி-த ம்மாலளிக்கப்பட்ட பதியை—தோற்று - இழந்து,

முன்னுறுமுழுவயிற்பன்னிருவருடங்
கண்டீரவதடுதாடுசறையடிவளருங்
குளிர்நிழலடவியுறைந்கொண்டகன்றபின்

முன்னுறும்உழுவயினை - முன்செய்த வினைகாரணமாக— பன்னிருவருடம் - பன்னிரண்டாண்டுவரை—கண்டீரவத்தொடு - சிங்கமும்—கறையடி - யானையும்—வளரும் - ஒருமையாப் பெருகுகின்ற—குளிர்நிழல் - தருநிழலால்தட்பமான—அடவி- வனத்தில—உறைகொண்டு - தங்கியிருந்து—அகன்றபின் - பின்பு அகவியாத வாசமுங்கழித்து ;

அனைத்துளவஞ்சமுமழித்துநிரைமீட்சி
முடித்துத்தமதுமுடியாப்பதிபுக
வூடிமுறையேயெமக்குள்ளமணகருதிச்
சேறியெனவிசைப்பச்செல்பணித்தூதினாக்கு

அனைத்துளவஞ்சமும - இடையில நூற்றுவரால் நடந்த வஞ்சனைமுழுமையும்—அழித்து - கெடுத்து—நிரைமீட்சிமுடித்து - விராடனுடையபசுக்களைப போரின்மீட்டு—தமது - ஐவருந்தம்முடைய—முடியாப்பதிபுக - கேடில்லாத பதியைக் கைக்கொள்ள—ஊடி - பகைத்து—முறையே - மநு முறைப்படி— எமக்குள்ள - எமக்குரித்தான—மணகருதி - பூமியைபெறக்கருதி—சேறியெனவிசைப்ப - தேவர் செல்வீரென்று வேண்டலின் —செல்பணி - அப்பணிமுடிக்கச்சென்ற—தூதினாக்கு - தூதாகிய திருமாலுக்கு ;

ஒருகாலளித்ததிருமாமிடற்றோன்
பாடல்சான்றதெய்வக்
கூடல்கூடாகுணங்குறித்தெனவே.

ஒருகாலளித்த - ஒரு திருவடிதந்தருளிய— மா - கருமையாகிய— திருமிடற்றோன - ஸ்ரீகண்டன்வீற்றிருக்கின்ற—பாடல்சா

ன்ற-பெருமைநிறைந்த—தெய்வக்கூடல் - தெய்வத்தன்மையுள்ள கூடற்பதியை—கூடார் - அடையாதாரது—குணங்குறித்தென - குணத்தைக குறித்தாற்போல—எ-று.

தெய்வக்கூடல் கூடார் குணங்குறித்தென்ன குரங்கமண்படப்பெற் றுயிர்த்தமடந்தை தன்னிருவிழிபொலியத் திருநகர்ப்புரத்து கரியுடனுண்ணூர் பழியுளமொத்த இருளுடைப்பெருமுகில் வழிதெரிந்து ஏகனமின்னென வினைமுடிவுசெய்க. (௬௫)

---

## பருவங்காட்டி வற்புறுத்தல்.

பருவங்காட்டிவற்புறுத்தலென்பது - தலைமகன் தான்வருதற்குக் குறித்துப்போகிய கார்ப்பருவத்தினது வரவுகண்டு கலங்காநின்ற தலைமகளுக்கு, இக்கார்வந்து வானிடத்துப பரந்தமையான், நம்மைக்கலந்தவரது தேர் இன்றாக நாளையாக இங்கேவாராநிற்பக் காணப்படுவ்தே இனியுள்ளதெனத் தோழி அப்பருவந் தன்னையேகாட்டி, அவளை வற்புறுத்தாநிற்றல். அதற்குச்செய்யுள்.—

பூண்பதென்றேகொண்ட பாம்பன்புலியூரரன்மிடற்றின்
மாண்பதென்றேயெணவானின்மலருமணந்தவர்தேர்
காண்பதன்றேயின்றுநாளையிங்கேவரக்கார்மலர்த்தேன்
பாண்பதன்றேர்குழலாயெழில்வாய்த்தபணிமுகிலே.

கார்வருமெனக் கலங்குமாதனைத்
தேர்வருமெனத் தெளிவித்தது.

இ-ள். கார்காலத்துமலரா யூதுந்தேன் பாட்டினது செவ்வியையாராயுங் குழலையுடையாய், பூணப்படுமணியென்றே கொண்டிட்ட பாம்பினையுடையான், புலியூரான், அவனது மிடற்

றினழகதாமென்று கருதும்வண்ணம் எழில்வாய்த்தலையுடைய வாகிய பனிமுகில்கள் வானிடத்துப் பரவாநின்றன, அதனான், நம்மைக்கலந்தவரது தேர் இன்றாக நாளையாக இங்கேவாராநிற்ப காணப்படுவதல்லவே,இனியாற்றாயாகற்பாலையல்லை எ-று.௩௨௧

நேரிசையாசிரியப்பா.

அளிகள்பாட்டெடுப்பப்புறவுபாட்டொடுங்கக்
காந்தளங்கடுக்கைக்கனறனமலரக்
கோடலீன்றுகொழுமுனைகூம்பப்
பிடவமுங்களவுமொடுநிறைபூப்ப
வான்புறம்பூத்தமீன்பூமறையக்
கோபமூர்தரமணிநிலாகிடப்பத்
தென்காறிகைப்பவடகால்வளரப்
பொறிவிழிப்பாந்தள்புற்றளைவதிய
வரியுடலீயல்வாய்தொறுமெதிர்ப்ப
விடிக்குரலானேற்றினமெதிர்செறுப்பப்
பொரிக்குறிமடமான்சுழித்தலைக்கவிழ
முடையுடலண்டர்படலிடம்புகுதக்
கோவியரளையுடன்குலனொடுகுளிர்ப்பக்
காயாக்கண்கொளமுல்லையெயிறுறழ
முசுக்கலைபிணவுடன்மூழையுறையடங்கக்
கணமயினடனெழக்காளிகூத்தொடுங்கச்
சாதகமூரல்குரல்வாய்மடைதிறப்ப
மாக்குயின்மாழ்கிக்கூக்குரலடைப்பப்
பனிக்கதிருண்ணச்சகோரம்பசிப்ப
வுடைநறவுண்டுவருடைவெறுப்ப
வகில்சுடுபெரும்புனமுழுபதன்காட்ட
வெறிவிழிச்சவரர்மாவடியொற்ற
மணந்துடன்போகுநர்க்குயங்குவழிமறுப்பப்

புலிக்குரலெயிற்றியர்பூவினிற்பரப்பக்
குழவியங்கதிர்பெறத்திருமலரணங்க
வினத்தொடுகயிரவமெதிரெதிர்மலரக்
குமரியர்காமமுங்கூவலும்வெதுப்புற
நிலமகளுடலமுந்திங்களுங்குளிர
வொலிகடலிப்பிதரளஞ்சூற்கொள
விலைமுதன்மணக்கவெழுந்தகார்கண்டை
வறுநீர்மலரொனமாழகலைவிடுமதி
மறையடிவழுத்தியமறைவனத்தொருநாண்
மணிச்சுடர்நறுநெய்கவர்மதிக்கருப்பைக்
கிருவகையேழெனுந்திருவுலகனைத்துங்
கொடுத்தவன்கூடல்வழுத்தினர்போல
விருபுறமபோற்றவொருதேர்வரத்தினர்க்
கொன்னலாமுற்றியொருங்குபுபடரப்
பாசறைசென்றநாணிலங்குழிய •
வெண்ணிவிரற்றேய்ந்தசெஙகரங்கூப்புக
கொய்தளிரன்னமேனி
மொய்யிழைபூத்தகவின்மலர்க்கொடியே. ௬௬

———*———

அளிகள்பாட்டெடுப்ப கவின்மலர்க்கொடியே. பகுதி-பகை தணிவினைபபிரிவு, துறை-பருவங்காட்டிவற்புறுத்தல். *

கொய்தளிரன்னமேனி,
மொய்யிழைபூத்தகவின்மலர்க்கொடியே.

(இதனதுபதப்பொருள்.)

கொய்தளிரன்ன - கொய்ததளிரை யொத்த—மேனி - மேனியினிடத்து—மொய்யிழைபூத்த - அழகுமிக்க அணிகள்பூத்துள்ள—கவின்மலர்க்கொடியே - மெல்லியபூங்கொடியே ;

அளிகள்பாட்டெடுப்பப்புறவுபாட்டொடுங்கக்
காந்தளங்கடுக்கைக்கனறனமலர

அளிகள் - வண்டினம்—பாட்டெடுப்ப - இசைபாடத்தொடங்கவும்—புறவு - புறாக்கள்—பாட்டொடுங்க - குரலோசையடங்கவும—காந்தள் - செங்காந்தளும்—அங்கடுக்கை - அழகியசரக்கொன்றையும் (முறையே)—கனல்தனமலர - நெருப்புப்போலும் பொன்போலும்பூப்பவும் ,

கோடலீன்றுகொழுமுனைகூம்பப்
பிடவமுங்களவுமொடுநிறைபூப்ப

கோடல் - வெண்காந்தள்—ஈன்று - அரும்பி—கொழுமுனை - கலப்பைகொழுமுனைபோல்—கூம்ப - மேலேகூம்பிநிற்கவும்—பிடவமுங்களவும் - பிடவஞ்செடியுங் களாவும்—ஒடுநிறைபூப்ப - நிறைநதுமலரவும் ;

ஒடு - இசைநிறை.

வான்புறம்பூத்தமீன்பூமறையக்
கோபமூர்தரமணிநிலாகிடபபத்
தென்காறிகைபபவடகால்வளரப்
பொறிவிழிப்பாந்தள்புற்றளைவதிய

வான்புறம் - விண்ணினிடத்து—பூத்த - தோன்றிய—மீன்பூமறைய - தாராகணங்களாகிய மலர்கள்மறையவும்—கோபமூர்தர - இந்திரகோபங்கள் தவழவும்—மணிநிலாகிடப்ப- மணித்திரள்க ளசைவின்றிக்கிடக்கவும்—தென்கால்திகைப்ப-தென்றலடங்க—வடகால்வளர - வாடைதலையெடுக்கவும்—பொறிவிழி - கண்ணிற் கனற்பொறிசிதறுகின்ற—பாந்தள் - பாம்புகள்—புற்றுஅளைவதிய - புற்றின்வளையிலொடுங்கவும் ;

வரியுடலீயல்வாய்தொறுமெதிர்ப்ப

வரியுடல் - உடலில்வரியுள்ள—ஈயல் - ஈயற்பறவைகள்—வாய்தொறுமெதிர்ப்ப - திக்கெங்கும் எதிர்ப்படவும் ;

ஈயலென்பது - ஈசலெனவழங்குகின்றது.

இடிக்குரலானேற்றினமெதிரசெறுபபப்
பொடிக்குறிமடமான்சுழித்தலேக்கவிழ
முடையுடலண்டர்படலிடம்புகுத

இடிக்குரல் - இடியோசையுடனே—ஆனேற்றினம் - எருத்தினங்கள்—எதிர்செறுப்ப - எதிர்முழங்கவும்—பொடிக்குறி-புள்ளியரும்பிய—மடமான் - இளமான்கள்—சுழி-சுழியுள்ள—தலேகவிழ - தலேகவிழவும்—முடையுடல் - நாற்றம் பொருந்திய உடலேயுடைய—அண்டர்- இடையர்கள்—படலிடம்புகுத-படலால்மூடும் குடிலிற்புகவும் ;

கோவியரளேயுடன்குலனெடுகுளிர்ப்பக்
காயாக்கண்கொளமுல்லேயெயிறுறழ
முசுக்கலேபிணவுடன்முழையுறையடங்க

கோவியர் - இடைச்சியர்—குலனெடு - இனத்துடன்—அளேயுடன்குளிர்ப்ப - தயிரோடு குளிரடையவும்—காயா - காயா மலர்கள்—கண்கொள - கண்போன்றுமலரவும்—முல்லே - முல்லேச்செடிகள்—எயிறுஉறழ - பற்கள்போல் அரும்பவும்—முசுக்கலே - ஆண்முசுக்கள்—பிணவுடன் - தத்தம்பெண் முசுக்களுடன்—முழையுறை - மலேக்குகையாகிய இருக்கையில்—அடங்க - அடங்கவும்,

கணமயினடனெழக்காளிகூத்தொடங்கச்
சாதகமுரல்குரல்வாய்மடைதிறப்ப
மரக்குயின்மாழ்கிக்கூக்குரலடைப்ப

கணமயில் - மயில்கூட்டங்கள்—நடன்எழ - நடனஞ்செய்யவும்—காளிகூத்தொடுங்க - காளியாடலொழியவும்—சாதகம்-வானம்பாடிப்பறவைகள்—முரல்குரல் - பாடுங்குரலை—மடைவாய்திறப்ப - எடுத்துப்பாடவும்—மாகுயின்மாழ்கி - மாமரத்திற்குயில்கள்மயங்கி—கூக்குரலடைப்ப - கூவுங்குரலோசையடக்கவும்,

பனிக்கதிருணணச்சகோரம்பசிப்ப
வுடைநறவுண்டுவருடைவெறுப்ப

பனிககதிருண்ண - சந்திரகிரணத்தையுண்ண—சகோரம்பசிப்ப - சகோரங்கள் பசித்திருக்கவும—உடைநறவு - இருட்டிலுடைந்ததேனை—உண்டு - குடித்து—வருடைவெறுப்ப-வரையாடுகள் வெறுப்புக்கொள்ளவும்,

அகில்சுடுபெரும்புனமுழுபதன்காட்ட
வெறிவிழிச்சவராமாவடியொற்ற

அகில்சுடும் - அகின்மரங்களைச்சுட்ட—பெரும்புனம் - விசாலமானபுனங்கள்—உழுபதன்காட்ட - உழுதற்குப் பருவத்தைககாட்டவும்—வெறிவிழி - வெறித்தகண்களையுடைய—சவரா - புளினர்—மாவடியொற்ற - மிருகங்களின் அடிச்சுவடுகளையொற்றவும்;

மணந்துடன்போகுநர்க்குயங்குவழிமறுப்ப
புலிகுரலெயிற்றியர்பூவினிற்பரப்ப

மணந்துடன்போகுநர்க்கு - தலைமகளுடன் சுரத்திற்செல்பவர்க்கு—உயங்குவழிமறுப்ப - போம்வழியி லவரைத்தடுக்க—புலிக்குரல் - புலிநகந்தரித்த கண்டத்தையுடைய—எயிற்றியர்-குறமங்கையர்—பூவினிற்பரப்ப - அவ்விடத்திற் சஞ்சரியாநிற்பவும்;

குழவியங்கதிர்பெறாதிருமலரணங்க
வினத்தொடுகயிரவமெதிரொதிர்மலர

குழவியங்கதிர் - காலைக் கதிரவன கிரணத்தை—பெற-பெறுதற்கு—திருமலர் - தாமரைமலர்கள்—அணங்க - வாடவும்—கயிரவம் - ஆம்பல்கள்—இனத்தொடு-தம்மினத்துடனே—எதிரொதிர்மலர-எதிருமிடந்தோறு மலராநிற்பவும் ;

குமரியர்காமமுங்கூவலும்வெதுப்புற
நிலமகளுடலமுந்திங்களுங்குளிர

குமரியா - இளமைப்பருவ மாதர்களுள்ள—காமமும் - விரகமும்—கூவலும் - கேணிகளும்—வெதுபபுற - வெதும்பாநிற்பவும்—நிலமகளுடலமும்- பூதேவியினுடலும்—திங்களுங்குளிர-சந்திரனும் குளிர்ச்சியடையாநிற்பவும் ;

ஒலிகடலிப்பிதாளஞ்சூற்கொள
விவைமுதன்மணகக

ஒலிகடல் - ஒலிகின்ற கடலினிடத்து—இபபி - இபபிகள்—தாளஞ்சூற்கொள-முத்துக் கருப்பங்கொள்ளாநிற்கவும்—இவைமுதல்மணக்க - இவைமுதலியகுறிகள் தோனறும்படி ;

எழுந்தகார்கண்டை
வறுநீர்மலரொனமாழ்கலைவிடுமதி

எழுந்தகார்-வந்தகார்காலத்தை—கண்டை-நீகண்டாய்—வறுநீர் - வற்றியநீரிலுள்ள—மலரொன - மலர்கள்வாடுதல்போல—மாழ்கலை - உள்ளம்வாடுதலை—விடுமதி - ஒழிவாயாக;

மறையடிவழுத்தியமறைவனத்தொருநாண்
மணிச்சுடர்நறுநெய்கவர்மதிக்கருப்பைக

இருவகையேழெனுந்திருவுலகனைத்துங்
கொடுத்தவனகூடல்வழுத்தினர்போல

மறையடிவழுத்திய - வேதங்கள் பாதபூசைபண்ணிய—மறைவனத்து - திருமறைகநாட்டில்—ஒருநாள - முன்னொருகாலத்து—மணிச்சுடாநறுநெய் - அழகிய விளகக்கினெய்யை—கவர்மதி - உண்ணுமெணண முற்ற—கருப்பைகரு - காரொலிக்கு—இருவகையேழெனும் - மேலுங்கீழுமாகிய பதினுன்கென்னப்பட்ட—திருவுலகனைத்தும் - பெரியவுலகமுழுதும்—கொடுத்தவன் - தந்தருளிய கடவுளது—கூடல் - மதுரைத்திருப்பதியை—வழுத்தினாபோல - வாழ்த்தினவர்போல ;

இருபுறம்போறறவொருதோவரத்தினர்க்
கொன்னலர்முறறியொருங்குபுபடரப
பாசறைசென்றநாணிலங்குழிய
வெணணிவிரற்றேய்ந்தசெங்கரங்கூப்புக

ஒன்னலர்முற்றி - பகைவரைவென்று—ஒருதேர் வரத்தினர்க்கு - ஒப்பில்லாத தேர்மேல்வருந் தலைவருக்கு—இருபுறம்- இருபக்கத்தினும்—போற்ற - போற்றல்செய்ய—ஒருங்குபுபடர - சேனைகள்நெருங்கிச்சூழ—பாசறைசென்ற - முன்னாபாசறைக்குபோயின—நாள் - நாள்களை—நிலங்குழியஎண்ணி- தனாகுழிய எண்ணியெண்ணி—விரற்றேய்ந்த - விரல்கள் தேய்பபுண்ட—செங்கரங்கூப்புக-செங்கையைக்குவித்துவணங்குக- எ-று.

கார்வந்தது கணடனை இனி மாழ்குதலைவிடுக கூடல்வழுத்தினர் போல ஒன்னலரை முற்றி தோவரத்தினர்க்கு நிலங்குழிய எண்ணி விரல்தேய்ந்த கரங்கூப்புகவென வினைமுடிவுசெய்க. (௬௬)

## பள்ளியிடத்தூடல்.

பள்ளியிடத்தூடலென்பது - வாயின்மறுத்த தலைமகள், ஆற்றாமையே வாயிலாகப் புகுகுப பள்ளியிடத்தானாகிய தலைமகனோடு, நின்னை யிடைவிடாது நுகர்தற்கு முற்காலத்துத் தவத்தைச்செய்யாத தீவினையேனை நோவாது, இன்றிவ்வாறாகிய நின்னைநோவதென்னோ, அதுகிடக்க, நின்காதலிமார் புறமேற்று நினக்குப்புதிதாகச்செய்த அப்புல்லுதலை யாஞ்செய்யமாட்டேம் அதனாலெம்மைத்தொடாதே, எங்கலையை விடுவாயாகவெனக் கலவிகருதிப்புலவாநிற்றல். அதற்குச்செய்யுள்—

தவஞ்செய்திலாதவெந்தீவினையேம்புன்மைத்தன்மைக்கெள்ளா, தெவஞ்செய்துநின்றினியின்றுனைநோவதெனத்தன்முத்தன், சிவன்செய்தசீரருளாரதில்லையூரநின் சேயிழையார், நவஞ்செய்தபுல்லங்கண்மாட்டேநம்தொடல்விடுநற்கலையே. (௩௱௮)

பீடிவாகற்பிற் றேடிவர்கோ ... தை
ஆடவன்றன்னோ டேடியுரைத்த ... து.

இ-ள். உலகத்துள்ளாரெல்லார்க்குந் தந்தை இயல்பாகவே பாசங்களினீங்கியவன், எவ்வுயிர்க்கும் எப்பொழுதும் நன்மையைச்செய்தலாற் சிவன், அவனாற் செய்யப்பட்ட சீரிய வருணிறைந்த தில்லையிலூரனே, முற்காலத்துத் தவத்தைச்செய்யாத வெய்ய தீவினையையுடைய யாம் நின்னாலா தரிக்கப்படாத எமது புன்மைத்தன்மைகாரணமாக எம்மையேயிகழாது, நினக்குத்துன்பத்தைச்செய்யாநின்று இப்பொழுது இனிநின்னைநோதலென்னாம்! அதுகிடக்க, நின்னுடைய சேயிழையார் நினக்குப்புதிதாகச்செய்த புல்லுதல்களை யாமாட்டேம், அதனால் எமது நல்லமேகலையைத்தொடாதொழி, விடுவாயாக—எ-று (௩௱௮

நேரிசையாசிரியப்பா.

பெருநிலத்தேவர்கண்மறைநீருகுப்ப
மற்றவர்மகத்துள்வளரவிமாந்த
விடையோனருச்சனைக்குரிமையின்முன்னவ
னன்னவன்றன்னுடன்கடிகையேழமர
வன்றியுமிமையாக்கண்ணெனக்காட்ட
வாயிரமபணுடைவியரவுகடுவொங்கத்
தேவருண்மருந்துடனீடநின்றுதவ
வுடன்முனிசெருவினருடல்வழிநடப்ப
நாரணன்முதலாந்தேவர்படைதோற்றத்
தண்மதிக்கலைகடானறவொடுங்க
வெறிந்தெழுமரக்கரோனையர்மடிய
மறையவன்குண்டமுறைமுறைவாய்ப்ப
வவன்றருமுலகத்தருந்தொழிலோங்கப்
பாசுடலுளைமாவேழணிபெற்ற
வொருகாற்றேர்நிறைந்திருளுடைத்தெழுந்த
செங்கதிர்விரித்தசெந்திருமலர்த்தாமரைப்
பெருந்தேனருந்தியெய்ப்பேரிசையனைத்தினு
முதலிசைச்செவ்வழிவிதிபெறப்பாடியத்
தாதுடறுதைந்தமென்றழைச்சிறைவண்டினம்
பசுந்தாட்புல்லிதழ்க்கருந்தாளாம்பற்
சிறிதுவாமதுவமுங்குறைபெறவருந்தியப்
பாசடைக்குலகவர்பயிலாத்தாரியை
மருளொடுகுறிக்கும்புனலணியூர
தானவர்க்குடைந்துவானவரிரப்ப
வுழறேர்ப்பத்தினன்மகவெனநாறி
முனிதழற்செல்வமுற்றிப்பழங்கற்
பெண்வரச்சனகன்மிதிலையிற்கொடுமர
மிறுத்தவன்மகட்புணர்ந்தெரிமழுவிராமன்

விற்கவர்ந்தன்னைவினையுள்வைத்தேவத்
துணையுமிளவலுந்தொடரக்கான்படர்ந்து
மாக்குகனதிவிடவூக்கிவனத்துக்
கராதிமாரீசன்சவந்தனுயிர்மடித்
திருசிறைக்கழுகினர்க்குலந்தகடன்கழித்
தெறிவளிமகனைநட்டேழுமரத்தினுக்
கரிக்குக்கருங்கடற்கொடுராவொருகணைவிடுத்
தக்கடல்வயிறடைத்தரக்கனுயிர்வௌவி
யிலங்கையவ்வரக்கறகிளையோன்பெறுகெனத்
தமதூர்புகுந்துமுடிசுமந்தோர்க்கு
நான்முகத்தவாக்குமிருபாற்பகுத்த
வொருநுதற்கண்ணவனுறைதருகூடற்
றெளிவேற்கட்குறுந்தொடியினர்காணி
னின்பாலளியுநீங்கி
யின்புமின்றொழிக்குமெங்காறொடல்சென்மேகல

———*———

பெருநிலத்தேவர்கள் காறொடல்சென்மே. பகுதி-பரத்தை யிற்பிரிவு, துறை-பள்ளியிடத்தூடல்.

பெருநிலத்தேவர்கண்மறைநீருகுப்ப
மற்றவர்மகத்துள்வளரவிமாந்த

(இதனதுபதப்பொருள்.)

பெருநிலத்தேவர்கள் - பெரியநிலத்தேவர்களாகிய அந்தண ர்—மறை - வேதவொழுக்கத்திற் குரிய—நீருகுப்ப - நீரிறைக்க வும்—மற்றவர் - அவ்வந்தணரது—மகத்துள் - வேழ்விக்களத் தில்—வளர் அவிமாந்த - மிக்க அவியையுண்ணவும் ;

விடையோனருச்சனைக்குரிமையின்முன்னவ
னன்னவன்றன்னுடன்கடிகையேழமர

விடையோனருச்சனைக்கு - சிவ பூசனைக்கு—உரிமையின்-உரிமையினாலே—முன்னவன் - முதல்வனாகி—அன்னவன்றன்னுடன் - அச் சிவபிரானுடனே—கடிகையேழமர-எழுநாழிகைகளவும் பொருந்தவும்;

அன்றியுமிமையாக்கண்ணெனக்காட்ட
வாயிரம்பணுடவியரவுகவோங்க

அன்றியும் - இஃதல்லாமலும்—இமையா - இமைத்தலில்லாத—கண்ணென - தான் சிவபெருமானதுகண்களுளொன்றாயிருத்தலை—காட்ட - யாவர்க்குங் காட்டவும்—ஆயிரம்பணாடவி - அநேகம்படத்திரளையுடைய—அரவு - பாம்புகள்—கவோங்க - நஞ்சைக்கவரவும்;

தேவருண்மருந்துடனீடநின்றுதவ
வுடன்முனிசெருவினருடல்வழிநடப்ப

தேவர்உண்மருந்து - தேவர்களுண்கின்ற அமிர்தத்தை—உடல்நீடநின்றுதவ - நெடுங்காலந் தேகத்துடனிருக்கும்படி யுதவவும்—உடன்முனிசெருவினர் - உடலைவிரும்பாத வீரர்கள்—உடல்வழிநடப்ப-தன்னுடலாகிய மண்டிலநெறியேசெல்லவும்;

நாரணன்முதலாகதேவர்படைதோற்றத்
தண்மதிக்கலைகடானறவொடுங்க

நாரணன்முதலாநதேவர் - திருமான்முதலிய தேவரது—படைதோற்ற - திகிரிப்படையைக்காட்டவும்—தண்மதிக்கலைகள - தட்பமாகிய சந்திரனதுகலைகள்—தான்அறவொடுங்க - முழுதுந் தன்னிடத்திலொடுங்கவும்;

எறிந்தெழுமரக்கரோலையர்மடிய
மறையவன்குண்டமூறைறமுறைறவாய்ப்ப

எறிந்தெழும் - சினந்தெழுகின்ற—அரக்கரோனையர் - அரக்கர்முதலிய தீயோர்—மடிய - மாளவும்—மறையவன்குண்டம்- பிரமனது யாகுண்டம்—முறைமுறைவாய்ப்ப - விதிமுறை நடப்பவும் ;

அவன்றருமுலகத்தருந்தொழிலோங்கப்
பாசடலுளைமாவேழணிபெற்ற
வொருகாற்றேர்நிறைந்திருளுடைத்தெழுந்த

அவன்தரும் - அப்பிரமனாற் படைக்கப்பட்ட—உலகத்து - உலகங்களில்—அருந்தொழிலோங்க - தானின்றியமையாத தொழில்கள்பெருகவும்—பாசடலுளை - பச்சுடலும் பிடரிமயிரு முள்ள—மாவேழணிபெற்ற - ஏழுபரிக ளணியுறப்பூண்ட—ஒருகால்தேர்நிறைந்து - ஒற்றையாழித்தேரில் கிரணங்களெங்கும் பரவ—இருளுடைத்தெழுந்த - இருளைக்கிழித்துதித்த ;

செங்கதிர்விரித்தசெந்திருமலர்த்தாமரைப்
பெருந்தேனருந்தியெப்பேரிசையனைத்தினு
முதலிசைச்செவ்வழிவிதிபெறப்பாடி

செங்கதிர் - சூரியன்—விரித்த- மலர்த்தின—செந்திரு-செவ்விய திருமகட்கிடமாகிய—மலர்த்தாமரை - தாமரைப்பூவினிடத்து—பெருந்தேன்அருந்தி - மிக்கதேனையுண்டு—எப்பேரிசையனைத்தினும் - எவ்வகைப்பட்ட பெரியஇசைகள் பலவற்றினும் —முதலிசை - முற்பட்ட இசையாகிய—செவ்வழி - செவ்வழிப்பண்ணை—விதிபெறப்பாடி - முறையாகப்பாடி ;

அத்,தாதுடறுமைதந்தமென்றமைழச்சிறைவண்டினம்
பசுந்தாட்புல்லிதழ்க்கருந்தாளாம்பற்
சிறிதுவாமதுவமுங்குறைநுபெறவருந்தி

அத்தாது - அத்தாமலைப்பூந்தாதுக்களை—உடல்துதைந்த-தம்முடலிற்றிமிர்ந்த—மென்றழைச்சிறை - தளிர்போன்மென்மையாகிய சிறையுள்ள—வண்டினம் - வண்டின்கூட்டம்—பசுந்தாள் - பச்சைத் தண்டினையும்—புல்லிதழ் - சில இதழ்களையுமுடைய செவ்வல்லிப்பூவிலும்—கருந்தாளாம்பல் - கரிய தாளுள்ள நீலோற்பலப்பூவிலும்—சிறிதுமதுவமும் - சிறிது தேனையும்—உவா - வளர்மதிப்பருவத்தில்—குறைபெறஅருந்தி - நிறைவறவுண்டு;

அப்பாசடைக்குலகவர்பயிலாத்தாரியை
மருளொடுகுறிக்கும்புனலணியூர
தானவர்கடைந்துவானவரிரப்ப
வுழறேர்ப்பத்தினன்மகவெனநாறி

அப்பாசடைக்கு - அவற்றின் பச்சிலைப்பரப்பால்—உலகவர் - உலகத்திலுள்ளோரா—பயிலாத்தாரியை - செல்லமாட்டாத வழியை—மருளொடு - மயக்கத்துடனே—குறிக்கும் - குறித்தற்கிடமாகிய—புனலணியூர - நீரால்வளப்பமிக்கவூரனே—தானவர்க்குடைந்து - அரககரால்வருந்தி—வானவரிரப்ப - தேவர்கள்வேண்ட—உழல்தேர்ப்பத்தினன் - ஓடுகின்றதேர் பத்தும்வென்ற தயரதற்கு—மகவெனநாறி - மைந்தனென்றவதரித்து;

முனிதழற்செல்வமுற்றிப்பழங்கற்
பெண்வரச்சனகன்மிதிலையிற்கொடுமர
மிறுத்தவன்மகட்புணர்ந்து

முனி-விசுவாமித்திர முனிவனது—தழற்செல்வம்முற்றி-யாகம்பெருக நிறைவேற்றி—பழங்கல் - கௌதமனாற் சபிக்கப்பட்ட பழையகல்லானது—பெண்வர - பெண்ணுருவாகிவர—சனகன் - சனகனென்னு மன்னனது—மிதிலையில் - மிதிலைப் பட்

டினத்தில்—சொடுமரம்இறுத்து - வில்லையொடித்து—அவன்ம
கள்புணர்ந்து - அம்மன்னவனமகளை மணந்து ;

எரிமழுவிராமன்
விற்கவர்ந்தன்னைவினையுள்வைத்தேவத்
துணையுமிளவலுநதொடரககான்படர்ந்து

எரிமழுஇராமன் - பரசிராமனது—வில்கவர்ந்து-வில்லினை
வாங்கி—அன்னை - கைகேசி—வினையுள்வைத்துஏவ - வஞ்சத்
தையுள்ளேவைத்து அனுப்பலால்—துணைபுமஇளவலும்- தேவி
யும் இளையவனும்—தொடர - உடன்போத—கான்படர்ந்து-கா
ட்டிற்சென்று ;

மாக்குகனதிவிடவூக்கிவனத்துக்
கராதிமாரீசன்கவந்தனுயிர்மடித்து

மாக்குகன் - வேடனாகிய குகன்—நதிவிட - கங்கையினின்
றும் கடத்துவிக்க—ஊக்கி - கடந்து —வனத்து - காட்டில்—க
ராதி - கரன்முதலியோர்—மாரீசன்கவந்தன்-மாரீசன் கவந்தன
என்பவர்களது—உயிர்மடித்து - உயிரைவாங்கி ;

இருசிறைககழுகினறகுலந்தகடன்கழித்
தெறிவளிமகனைநட்டு ,

இருசிறைக்கழுகினற்கு - இருசிறையையுடைய கழுகினத்
திற்றோன்றிய சடாயுவுக்கு—உலந்தகடன் - உத்தரக்கிரியையி
னை—கழித்து - முடித்து—எறிவளிமகனை - வாயுபுத்திரனை—
நட்டு - சிநேகித்து ;

எழுமரத்தினுக்
கரிககுககருங்கடற்கொரோவொருகணைவிடுத்து

எழுமரத்தினுக்கு - மராமரம் எழுக்கும்—அரிக்கு - வாலி
யென்னுங் குரக்கிறைவனுக்கும்—கருங்கடற்கு - பெரியதென்க

டனுக்கும்—ஒரோவொருசணைவிடுத்து-தனித்தனியோரம்பினை யெய்து ;

> அக்கடல்வயிறடைத்தரக்கனுயிரவௌவி
> யிலங்கையவ்வரக்கறகிளையோனபெறுகென

அக்கடல்வயிறடைத்து-அக்கடலில் திருவணைகட்டி—அரக்கனுயிரவௌவி-இராவணனை மடிதது—இலங்கை-இலங்கைப் பட்டினத்தை—அவ்வரககறகிளையோன் - விபீடணனென்னும் அவன்சோதரன—பெறுகென - பெற்றுக்கொள்ளககடவனென த்தந்து ;

> தமதூர்புகுந்துமுடிசுமந்தோர்க்கு
> நானமுகத்தவறகுமிருபாறபகுத்த
> வொருநுதறகணணவன்

தமது - தமககுரிய—ஊர்புகுந்து - அயோத்தியின் மீண்டு வந்து—முடிசுமநதோாக்கும் - முடிதரித் தரசியல்நடாத்திய திருமாலுக்கும—நான்முகததவற்கும் - பிரமதேவற்கும—இருபாறபகுத்த - இரணடுபாகததையும பகுததருளிய—ஒருநுதறகண்ணவன் - ஒருகணணை நெறறியிலுளள சொக்கலிங்கம் ;

> உறைதருகூடற
> றெளிவேற்கட்குறுந்தொடியினர்காணி
> னின்பாலளியுநீங்கி
> யினபுமின்றெழிக்குமெங்காறொடல்சென்மே.

உறைதருகூடல் - வீற்றிருக்கின்ற மதுரையின்கண்—தெளிவேல்கண - அச்சவடிவாகிய வேல்போன்றகண்ணும்—குறுந்தொடியினர் - சிறியவளையணிந்த கையுங்கொண்ட பரத்தையர்—காணில் - எம்பால்வந்து நீரிங்ஙனம்புரிவது கண்டால்—நின்பால் - நம்மிடத்து அவர்க்குள்ள—அளியும்நீங்கி - அருளையும்

நீங்கி—இன்பும் - இன்பமும்—இன்றெழிக்கும் - இப்போதேஒழிவர் (ஆதலால்)—எங்கால்தொடல் - எமதுகாலைத்தீண்டன்மின்—சென்ம் - நீர் செல்லுமின்—எ-று.

இச்செய்யுளில் ஒருமைபன்மைகள மயங்கிவந்த வழுவமைதியை யுய்த்துணர்ந்துகொள்க. சென்ம்-என்பது செல்லுமென்னும் முற்றீறுகெட லகரம் மகரத்தோடு மயங்காமையின் னகரமாத்திரிந்து ஈரொற்றாய் மயங்கின்றதென்றுணர்க.

புனலணியூர முடிசுமந்தோர்க்கு நான்முகத்தவற்கும் இருபாற்பகுத்த ஒருநுதற்கண்ணவன் கூடலில் தொடியினர்காணில் நின்பாலளியு மின்புநீங்குவர், ஆதலால், எங்கால்தொடன்மின் சென்மினென விணைமுடிவுசெய்க. (கூஎ)

---

## நெறிவிலக்கிக்கூறல்.

நெறிவிலக்கிக்கூறலென்பது - அயர்வகற்றிக்கொண்டு செல்லாநின்றதலைமகனை, இனிச்செல்லு நெறிக்கண்நன்மக்களில்லை நீதனியை இவளவாடினுள் பொழுதுஞ்சென்றது ஈண்டுத்தங்கிப் போவாயாகவென, அவ்விடத்துளளோர் வழிவிலக்கிக் கூறுமிற்றல். அதற்குசெய்யுள்.—

விடலையுற்றாரில்லைவெம்முனைவேடர்தமியைமென்பூ
மடலையுற்றார்குழல்வாடினண்மன்னுசிற்றும்பலவர்க்
கடலையுற்றாரினெறிப்பொழிந்தாங்கருக்கனசுருக்கிக்
கீடலையுற்றான்கடப்பாரில்லையின்றிக்கடுஞ்சுரமே. உகஅ

சுரத்திடைக்கண்டவர் சுடர்க்குழைமாதொடு
சரத்தணிவில்லோய் தங்குகென்றது.

இ-ள். விடலாய், இனிச்செல்லுநெறிக்கண் நன்மக்களில்லை உள்ளார் வெய்யமுனையிடத்து வேடரோ, நீதனியை, மெல்லியபூ

வினிதழைப்பொருந்தி நிறைந்தகுழலையுடையாள் வழிவந்த வருத்தத்தால்வாடினுள், நிலைபெற்றசிற்றம்பலத்தையுடையவர்க்கா ட்படுந்தன்மையைய பொருந்தினவர்களல்லாலாப்போல விளக்க மொழிந்து அவ்விடத்து அருக்கன்றன் கதிர்களைச்சுருக்கிக் கடலைச்சென்றுற்றான், இக்கடியசுரத்தை யிப்பொழுது கடப்பாருமில்லை, அதனாலீண்டுத் தங்குவாயாக—எ-று. (உகஅ)

நேரிசையாசிரியப்பா.

வனப்புடையனிச்சம்புரைமூழ்கியதென
விவ்வணங்கவ்வதர்ப்பேய்த்தேர்க்கிடைந்தன
டென்றிசைக்கோமகன்பகடுபொலிந்தன்ன
கறையடிச்சென்னியினகநுதிபோக்கிக்
குருத்தயில்பேழ்வாய்ப்பற்படைச்சீய
மதர்தொறுங்குழுவுமவற்றினுமற்றவன்
கடுங்காற்கொற்றத்தடுந்தூதுவனொனத்
தனிபார்த்துழலுங்கிராதரும்பலரோ
டொருகாவிரதத்தெழுபரிபூட்டி
யிருவான்போகியவெரிசுடர்க்கடவுண்
மாதவராமெனமேன்மலைமறைந்தனன்
மின்பொலிவேலோயன்பினர்க்கருளுங்
கூடற்பதிவருமாடற்பரியோ
னெட்டெட்டியற்றியகட்டமர்சடையோ
னிருசரணடைந்தமறுவிலர்போல
வருளுடன்றமியைவாடினையைய
தண்ணீர்வாய்தருஞ்செங்நிறச்சிதலை
யுதவுதிரரிசியன்னசெந்தினை
நுண்பதந்தண்டேன்விளங்கனிமுயற்றசை
வெறிக்கட்கவையுடிக்கடுங்கான்மேதி

யன்புமகப்பிழைத்துக்கல்லறைப்பொழிந்த
வறட்பாலின்னவெம்முழையுளவயின்று
காருடலனுங்கியஞபஙகட்கறையடி
சென்னிதூங்கிநின்றதுகாட்டு
நெடுமரையதள்வேய்சில்லிடக்குரம்பையின்
மற்றதன்றேலிலுற்றிருவீருங்
கண்படுத்திரவிகிறமு
னெண்படநும்பதியேகுதல்கடனே. கூஅ

—※—

வனப்புடையனிச்சம ஏகுதல்கடனே. பகுதி - உடன்போக்கு; துறை-நெறிவிலக்கிக்கூறல். ※

மின்பொலிவேலோய்
வனப்புடையனிச்சம்புகைமூழ்கியதென
விவ்வணங்கவ்வதர்பபேய்த்தேர்க்கிடைந்தனள்

(இதனதுபதப்பொருள்)

மின்பொலிவேலோய் - மின்போல்விட்டுவிட்டு ஒளிர்கின்ற வேலையுடையாய்—வனப்புடையனிச்சம் - அழகுள்ள, அனிச்சமலரானது—புகை - புகையால்—மூழ்கியதென - மூடப்பட்டதுபோல—இவ்வணங்கு - இப்பெண்—அவ்அதர் - அப்பாலை வழியிற்கண்ட—பேய்த்தேர்க்கு - கானலுக்கு—இடைந்தனள்- அஞ்சினள்;

தென்றிசைக்கோமகன்பகடுபொலிந்தன்ன
கறையடிச்சென்னியினகநுதிபோக்கிக்
குருத்தயில்பேழ்வாய்ப்பறபடைச்சீயம

தென்றிசைக்கோமகன் - இயமனுடைய—பகடுபொலிந்தன்ன - எருமையேறு ஒங்கினாற்போன்ற—கறையடிச்சென்னியில் - யானையின் மத்தகத்தில்—நகநுதிபோக்கி - கூரிய நகத்தால்

அறைந்து—குருத்தயில் - மூளையையுண்ணுகின்ற—பேழ்வாய்-பெரியவாயையும்—பற்படை - படைபோற்கூரியபல்லையுமுடைய—சியம் - சிங்கங்கள்,

அதர்தொறுங்குழுவுமவற்றினுமற்றவன்
கடுங்காற்கொற்றத்தடுந்தூதுவனெனத்
தனிபார்த்துழலுங்கிராதருமபலரே

அதர்தொறும்குழுவும் - வழிகடோறும் நெருங்குவன—அவற்றினும் - அதுகளினும்கொடியராய்—மற்றவன் - இயமனது—கடுங்கால் - வேகமாகிய நடையையும்—கொற்றத்து-வெற்றியையுமுடைய—அடுந்தூதுவனே - கொல்கின்ற தூதர்போல—தனிபார்த்து - அவ்வழிசெல்வோரது தனிமையைநோக்கி—உழலும் - அங்குச் சஞ்சரிக்கின்ற—கிராதரும்பலரே - மறவர்களோ பலருளர்;

ஒருகாலிரதத்தெழுபரிபூட்டி
யிருவான்போகியவெரிசுடர்க்கடவுண்
மாதவராமெனமேன்மலைமறைந்தனன்

ஒருகால்இரதத்து - ஒற்றையாழித்தேரில்—எழுபரிபூட்டி-ஏழுகுதிரைகளைக் கட்டிநடத்தி—இருவான்போகிய - பெரியவிண்ணிற்செல்கின்ற—எரிசுடர்க்கடவுள் - சூரியன்—மாதவராமென - பெரியவிருடிகள்போல—மேல்மலைமறைந்தனன் - குடதிசைமலையிலொளித்தனன் (ஆதலால்);

அன்பினர்க்கருளுங்
கூடற்பதிவருமாடற்பரியோ
னெட்டெட்டியற்றியகட்டமர்சடையோ
னிருசரணடைந்தழுறுவிலர்போல
வருளுடன்றமியையாடிளையய

அன்பினர்க்கு - மெய்யன்பராகிய திருவர்தவூரர் பொருட்டு—அருளும் - அருளுக்கிடமாகிய—கூடல்பதிவரும் - மதுரைப்பதியி லெழுந்தருளிவந்த—ஆடல்பரியோன் - வெற்றியுள்ள வேதப்பரியுளளோன்—எட்டெட்டுஇயற்றிய - திருவிளையாடல றுபத்துநான்குஞ் செய்தருளிய—கட்டமர் - சுற்றப்பட்ட—சடையோன் - சடையையுடையவனது—இருசரண் - இரண்டுதிருவடியையும்—அடைந்த - புகலா யடைந்த—மறுவிலர்போல - தூயோர்போல—அருளுடன் - அருளுடனே—தமியை - தனியாய்—வாடினைஐய - இறைவனேவாடினை ;

> தண்ணீர்வாய்தருஞ்செந்நிறச்சிதலை
> யதவுதிரரிசியன்னசெந்தினை
> நுண்பதந்தண்டேன்விளங்கனிமுயற்றசை
> வெறிகட்கவையடிக்கடுங்கான்மேதி

தண்ணீர் - குளிர்ச்சியாகிய நீரினை—வாய்தரும் - வாயாலுமிழ்கின்ற—செந்நிறச்சிதலை - செய்யநிறமுள்ள செல்லினையும்—அதவுதிரரிசியன்ன - உதிருகின்ற அத்திவிதையையுமொத்த—செந்தினை - செவ்விய தினையாலாகிய—நுண்பதம் - சிறிய சோறும்—தண்தேன் - சுவையுள்ளதேனும்—விளங்கனி - விளம்பழமும்—முயற்றசை - முயலிறைச்சியும்—வெறிகண்-வெறித்தகண்களையும்—கவையடி - பிளவாகிய குளம்பினையும்—கடுங்கால் - விரைவாகியநடையையுமுடைய—மேதி - காட்டெருமைகள் ;

> அன்புமகப்பிழைத்துக்கல்லறைப்பொழிந்த
> வறட்பாலின்னவெம்முழையுளவயின்று

அன்புமகப்பிழைத்து - தமக்கினிய கன்றுகளைக் காணாமையால்—கல்லறை - பாறைக்குழிகளில்—பொழிந்த- சொரிந்த—

வறட்பால் - உலர்ந்தபாற்கட்டியும்—இன்ன-ஆகியவிவற்றை—எம்முழையுள - எம்மில்லில்உள்ளன—அயின்று-புசித்து ;

காருடலனுங்கியபைங்கட்கறையடி
சென்னிதூங்கிநின்றதுகாட்டும்

கார் - மேகத்தை—உடல்- தன்னுடலின்வண்ணத்தால்—அனுங்கிய - கெடுத்த—பைங்கண் - பசியகண்ணை யுடைய—கறையடி - யானை—சென்னி - தலையை—தூங்கிநின்றது - தொங்கவிட்டுநின்ற தன்மையை—காட்டும் - காட்டுகின்ற ;

நெடுமரையதள்வேய்ந்தசில்லிடக்குரம்பையின்
மற்றதன்றோலினுற்றிருவீரும்

நெடுமரை - பெரியமானினுடைய—அதள் - தோல்களால்—வேய் - மேற்கூரை வேய்ந்துள்ள—சில்லிடக்குரம்பையில்- நெருக்கமான இடமுள்ள குடிலினிடத்து—மற்றதன்தோலில்- அந்த மான்தோலாகியபாயலில்—உற்றுஇருவீரும் - நீவிரிருவருமிருந்து,

கண்படுத்திரவிகீறுமு
னெண்படநும்பதியேகுதல்கடன்

கண்படுத்து - இறைையிரவில் துயில்கொண்டு—இரவி-சூரியனல்—கீறுமுன் - இருள்விடியுமுன்னே—எண்பட - நுமது எண்ணம்முற்ற—நும்பதி - நுமக்குரிய பதியின்கண்—ஏகுதல் கடன் - செல்லுதல் முறைமையாம்—எ-று.

வேலோய் நின்தலைவி கனலதர்ப்பேய்த் தேர்க் கிடைந்தனள்,சீயம் அதர்தொறுங்குழூஉம் கிராதரும்பலருளர்,சுடர்க்கடவுளும் மலைமறைந்தனன்,அஞ்சு பர்க்கருளும் கூடல்வரும்பரியோனாகிய எட்டெட்டியற்றிய சடையோனது சரணடைந்த மறுவிலர்

போல அருளுடன் தமிழை வாடினை (ஆதலால்), தினைச்சோறுந் தேனும்முதலிய எமதில்லின்கண் ணுள்ளவற்றையுண்டு இருவீரும் இற்றையிரவில் எமதுகுரம்பையிற்றுயின்று, விடியுமுன எண்ணப்படி நும்பதிக்கேகுதல் கடனுமெனவினைமுடிவுசெய்க ()

## ஆறுபார்த்துற்றவச்சக்கிளவி.

ஆறுபார்த்துற்ற வச்சக்கிளவியென்பது - சிறைப்புறமாகத் தலைமகள் ஆற்றாமைகூறக்கேட்ட தலைமகன், குறியிடைச்சென்று நிற்ப, தோழி யெதிர்ப்பட்டு, நீ கான்யாறு பலவுநீந்திக் கைவேல்துணையாக அஞ்சாதுவருதல் யாங்களிச்சோலையிடத் துண்டாகிய தெய்வத்துக்களுக்கேம், அதனை லிவ்விருளிடை வரற்பாலையல்லையெனத் தங்களச்சங்கூறி வரவுவிலக்காநிற்றல். அதற்குச்செய்யுள்.—

தாருறுகொன்றையன் றில்லைச்சடைமுடியோன்கயிலை
நீருறுகான்யாறளவிலநீந்திவந்தானினது
போருறுவேல்வயப்பொங்குருமஞ்சுகமஞ்சிவருஞ்
சூருறுசோலையின்வாய்வரற்பாற்றன்றுதூங்கிருளே.

நாறுவார்குழ லவ்விநோக் கி
யாறுபார்த்துற்ற வச்சகிளவி.

இ-ள். தாராகிய மிக்ககொன்றையையுடையவன், தில்லைக்கணுள்ளாகிய சடையானியன்ற முடியையுடையவன் அவனது கைலையின் நீரான்மிக்க கான்யாறுகளெண்ணிறந்தனவற்றை நீந்திவந்தால், அவ்விடத்து வலியையுடைய பொங்குமிடியேறு நினதுபோர்மிக்க வேலையஞ்சி நின்பால் வாராதொழிக. ஆயினும் மஞ்சுபரக்கூர் தெய்வம்பொருந்துஞ் சோலையிடத்துச் செறிந்த

விருட்கண்வரும் பான்மைத்தன்று. அத்தெய்வங்களை யாமஞ்சு தும்—எ-று. (களகு)

நேரிசையாசிரியப்பா.

வெறிக்குறுங்கதுப்பின்வெள்ளெயிற்றெயிற்றியர்
செம்மணிசுழற்றித்தேனிலக்கெறிதரப்
பொருக்கெடுத்திழிதரும்வெள்ளப்பிரசக்
கானயாறுந்துங்கல்வரைநாட
சொற்றவறுவக்கும்பித்தினர்சேர்புலன்
சிறிதிடைத்தெருள்வதுமுடனுடன்மருள்வது
மாமெனக்காட்டுமெணியிருண்மின்னவி
ணிணமபுணர்புகர்வேலிணங்குதுணையாகக்
காமமாறுட்கவர்தரும்வெகுளுநர்
படிறுளங்கமழுஞ்செறிதருதீயுறழ்
கொள்ளிவாய்க்கணங்குள்ளுதோறிவறிய
மின்மினியுமிழுந்துன்னலர்கள்ளியை
யன்னையென்றணைதருமனையிருள்யாமத்துக்
கடுஞ்சுடரிரவிவிடுங்கதிர்த்தேரினை
மூலவிசாசரர்மேனிலம்புடைத்துத்
துணைக்காம்பிடித்தெனத்தோற்றிடும்பொழில்சூழ்
கூடற்பதிவருங்குணப்பெருங்குன்றினன்
றுமறைபழித்தவிருசரணடையாக்
கோளினர்போலக்குறிபலகுறித்தே
யைந்தமர்கதுப்பினளைமைதடோணைசைஇத்
தருவிற்கிழவன்றனைனவீற்றி
நின்னுயிர்க்கின்னனோர்தரத்திருவின்
றன்னுயிர்க்கின்னறவறிலவாவா
விரண்டுயிர்தணப்பெனவெனதுகண்புணரவிக்
கொடுவழியிவ்வரவிவன்றும்
விடுவதுநெடும்புகழுடுவேலோயே. கஎ

வெறிக்குறுங்கதுப்பின் அடுவேலோயே. பகுதி - இரவுக்குறி, துறை-ஆறுபார்த்துற்றவச்சக்கிளவி. *

வெறிக்குறுங்கதுப்பின்வெள்ளெயிற்றெயிற்றியர்
செம்மணிசுழற்றித்தேனிலக்கெறிதரப்
பெருகலெடுத்திழிதரும்வெள்ளப்பிரசம்

(இதனதுபதப்பொருள்.)

வெறி - நாற்றமுடைய—குறுங்கதுப்பின் - குறுமையாகிய கூந்தலையும்—வெள்ளெயிறு - வெள்ளியபற்களையும் உடைய—எயிற்றியர் - எயினமகளிர்—செம்மணிசுழற்றி - செவ்வியமணிகளைவைத்துச் சுழற்றி—தேன்இலக்கு - தேன்கூடாகிய இலக்கில்—எறிதர - கவணெறிதலால்—பெருக்கெடுத்து - பெருகி—இழிதரும் - இழியாநின்ற—வெள்ளப்பிரசம் - தேன் வெள்ளமானது;

கான்யாறுந்துங்கல்வரைநாட

கான்யாறு - காட்டாற்றில் மடுத்து—உந்தும் - பெருகசெடுக்கின்ற—கல்வரைநாட - மலைநாட்டையுடையாய்;

சொற்றவறுவக்கும்பித்தினர்சேர்புலன்
சிறிதிடைத்தெருள்வதும்முடனுடன்மருள்வது
மாமெனக்காட்டுமெணியிருண்மின்னலின்

சொல்தவறு - சொற்சோர்வில்—உவக்கும் - களிக்காநின்ற—பித்தினர்சேர்புலன் - பித்தர்களுடைய அறிவானது—சிறிதிடைத்தெருள்வதும் - சிறிதுபோழ்துதெளிவதும்—உடனுடன்மருள்வதும் - இடையிட்டு இடையிட்டுமயங்குவதும்—ஆமென - ஆகியதன்மைபோல—காட்டும் - தோற்றுவிக்கின்ற—அணியிருள்மின்னலின் - நெருங்கிய இருளின்மின்னல்போல,

நிணம்புணர்புகர்வேலிணங்குதுணையாகக்
காமமாறுட்கவர்தரும்வெகுளுநர்
படிறுளங்கமழுஞ்செறிதருதீயுறழ்

நிணம்புணர் - பகைவர் தசைசார்ந்தமுற்ற—புகர்வேல்- புகர்முகமுள்ள வேற்படை யொன்றுமே—இணங்குதுணையாக - பொருந்திய துணையாக்கொண்டு—காமமாறுள் - காமாதியாறு குணங்களுள்—கவர்தரும் - அறிவை மாறுபடுத்துகின்ற—வெகுளுநர்- கோபத்தையுடையவர்களது—படிறுஉளம்-மெய்ம்மை நீங்கிய உள்ளத்தில்—கமழும் - மேலெழுகின்ற—செறிதரும் - அடர்ந்த—தீஉறழ் - நெருப்பையொத்த,

கொளளிவாய்க்குணங்குள்ளுதோறிவறிய
மின்மினியுமிழுந் துன்னலர்கள்ளியை

கொள்ளிவாய்க்குணங்கு - கொள்ளிவாய்ப் பிசாசங்கள்—உள்ளுதோறு - இடந்தோறும்—இவறிய - எழுந்த—மின்மினி உமிழும் - மின்மினிகள் சுடர்தற் கிடமாகிய—துன்னலர்கள்ளியை - மலர்நிரம்பிய கள்ளிமரங்களை,

அன்னையென்றணைதருமனையிருள்யாமத்துக்
கடுஞ்சுடரிரவிவிடுங்கதிர்த்தேரினை
மூலநிசாசரர்மேனிலம்புடைத்துத்
துணைக்கரம்பிடித்தெனத்தோற்றிடும்பொழில்சூழ்

அன்னையென்றணைதரும் - அன்னையென்று அடைகின்ற—அனையிருள்யாமத்து - நள்ளிரவாகிய பெரும்பொழுதில்—கடுஞ்சுடர் - வெவ்விய கிரணங்களையுள்ள—இரவி - சூரியன்—விடும்நடத்தாநின்ற—கதிர்த்தேரினை - ஒளிபொருந்திய இரதத்தை—மூலநிசாசரர் - நிலைக்கெல்லா மூலமாகிய அரக்கர்—மேல்நிலம்

புடைத்து - விண்ணுலகத்தைக் கெடுத்து—துணைக்கரம்பிடித்தெனை - இருகைகளாலும் பிடித்தாற்போல—தோற்றிடும்-தோற்றுகின்ற—பொழில்சூழ் - சோலைசூழ்ந்துள்ள,

கூடற்பதிவருங்குணப்பெருங்குன்றினன்
றாமரைபழித்தவிருசரணடையாக்
கோளினர்போல

கூடற்பதிவரும் - மதுரைப்பதியிற் கோயில்கொண்டருளிய—குணப்பெருங்குன்றினன் - மங்கலகுணங்களால் பெரிய மலையையொத்த கடவுளது—தாமரைபழித்த - தாமரைப்பூவையிகழ்ந்த—இருசரணடையா - திருவடியிரண்டினையுமடையாத—கோளினர்போல - தவறுடையார்போல,

குறிபலகுறித்தே
யைந்தமர்கதுப்பினளமைத்தோணசைஇத்
தருவிற்கிழவன்றனெனசிற்றி

குறிபலகுறித்தே - பலகுறிகளையெண்ணி—ஐந்தமர்கதுப்பினள் - ஐம்பாலாகிய கூந்தலையுடையாளது—அமைத்தோள் - மூங்கிலையொத்த தோளைத்தழுவுதலை—நசைஇ - காதலித்து—தருவிற்கிழவன்தானெனை - இந்திரனே யென்னுமபடி—சிறறி - சிறகின்றயாகிய,

நின்னுயிர்க்கின்னலேர்தடத்திருவின்
றன்னுயிர்க்கின்னறவறிலவாவா
விரண்டுயிர்தணப்பெனவெனதுகண்புணர

நின்னுயிர்க்கு - நினது உயிர்க்கு—இன்னல்கோர்தர - துன்பம்கேரிட்டால்—திருவின்தன்னுயிர்க்கு - தலைமகளது உயிர்க்கு—இன்னல் - துன்பம்கேரிடல்—தவறில-தப்புதலில்லையாம்—

ஆவா - அந்தோ—இரண்டுயிர் - நம்முயிரிரண்டும்—தணப்பெ
ன - நீக்கமாமென்றஞ்சும்படி—என துகண்புணர - அவ்வாறுள
தாகாவண்ணம் என்கண்காண,

இக,கொடுவழியிவ்வரவென்றும்
விடுவதுநெடும்புகழுடுவேலோயே.

இக்கொடுவழி - இந்தக் கொடுமையாகியவழியில்—இவ்வர
வு - இவ்வாறு துணிந்துவருதலை—என்றும்விடுவது - எப்போ
தும் நினையாதொழிக—நெடும்புகழ்-பெரிய புகழாகும்—அடுவே
லோயே - பகைவரையட்ட வேலையுடையாய்—எ-று.

வரைநாட வேலோய் அரையிருள் யாமத்து கூடற்குணக்
குன்றினன் சரணடையாக் கோளினாபோல,குறித்து கதுப்பின
ள் தோள்நசைஇ இரண்டுயிர் தணப்பென என்கண்காண இக்
கொடுவழியில் நின்வரவுவிடுவது, நெடும்புகழாமென வினைமுடி
வுசெய்க. (௯௯)

---

மெலிவுகண்டுசெவிலிகூறல்.

வேயினமென்றோண்மெலிந்தொளிவாடி விழிபிறிதாய்ப்
பாயினமேகலைபண்டையளல்லள்பவளச்செவ்வி
யாயினவீசனமரர்க்கமரன்சிற்றம்பலத்தான்
சேயினதாட்சியிற்பட்டனளாமித்திருந்திழையே. ௨௮௨

நேரிசையாசிரியப்பா.

கதிர்நிரைபரப்புமணிமுடித்தேவர்கள்
கனவிலுங்காணப்புனைவருந்திருவடி
மாநிலந்தோய்ந்தோர்வணிகனுகி
யெழுகதிர்விரிக்குந்திருமணியெடுத்து

வரையாக்கற்புடனுன்கெனப்பெயர்பெற்
றுங்காங்காயிரகோடிசால்கைகண்
மிடலொடுவிரித்துச்சருக்கம்பாழி
வீயாவிந்தம்பதநிரைநாத
மறைப்புப்புள்ளிமந்திரமொடுக்கமென்
றினையவைவிரித்துப்பலபொருள்கூறும்
வேதமூளைத்தவேதமில்வாக்காற்
குடுமிச்சேகரச்சமனொளிசூழ்ந்த
நிரைதருநான்கினிகழ்ந்தனகுறியுங்
குருவிந்தஞ்சௌகந்திகோவாங்கு
சாதுரங்கமெனுஞ்சாதிகணென்குந்
தேக்கினெருப்பிற்சேர்க்கினங்கையிற்
றூக்கினற்றகட்டிற்சுடர்வாய்வெயிலிற்
குச்சையின்மத்தகக்குறியினோத்தி
னெய்த்துப்பார்வையினேர்ந்துசிவந்தாங்
கொத்தநற்குணமுடையபன்னிரண்டுங்
கருகிநொய்தாதல்காற்றுவெகுளி
திருகன்முரணேசெமமணிறுகன்
மத்தகக்குழிவுகாசமிலைச்சுமி
வெச்சம்பொரிவுபுகைதல்புடாயஞ்
சந்தைநெய்ப்பிலியெனத்தருபதினாறு
முந்தியநூலின்மொழிந்தனகுற்றமுஞ்
சாதகப்புட்கண்டாமரைகழுநீர்
கோபமின்மினிகொடுங்கதிர்விளக்கு
வன்னிமாதுளம்பூவிதையென்னப்
பன்னுசாதுரங்கவொளிக்குணம்பத்துஞ்
செம்பஞ்சரத்தந்திலகமுலோத்திர
முயலின்சோரிசிந்துரங்குன்றி
கவிரலொன்னக்கவர்நிறமெட்டுங்

குருவிந்தத்திற்குறித்தனசிறமு
மசோகப்பல்லவமன்றிசெம்பஞ்சு
கோகிலக்கண்ணீனிலவலர்செம்பெனத்
தருசௌகந்திதன்னிறமாறுஞ்
செங்கல்குராமலர்மஞ்சள்கோவை
குங்குமமஞ்சிற்கோவாங்குநிறமுந்
திட்டையேறுசிவந்தவிதாய
மொக்கல்புற்றுங்குருதிதொழுதினை
மணிகோகனகங்கசுறபம்பாடி
மாங்கிசகந்திவளர்காஞ்சுண்டையென்
றுநகொருபதின்மூன்றடைந்தனகுற்றமு
மிவையெனக்கூறியசிறையருட்கடவுள்
கூடல்கூடாக்குணத்தினர்போல
முன்னையளல்லண்முன்னையளல்ல
ளமுதவாய்க்கடுவிழிக்குறுந்தொடிநெடுங்குழற்
பெருந்தோட்சிறுநகைமுன்னையளல்ல
ளுலகியன்மறந்தகதியினர்போல
நம்முட்பார்வையுமவேறுவேறுயின
பகழிசெய்கம்மியருள்ளம்போல
வைம்புலக்கேளிருமொருவாய்ப்புக்கன
வதிருவர்க்கொக்கின்கனவுயிர்குடித்த
புகரிலைநெடுவேலறுமுகக்குளவன்
றகரங்கமழுநெடுவரைக்காட்சி
யுற்றனளாதல்வேண்டுஞ்
சிற்றிடைப்பெருந்தோட்டேமொழிதானே. கoo

---

## தேர்வரவுகூறல்.

பாவியைவெல்லும்பரிசில்லையேமுகில்பாவையஞ்சீ
ராவியைவெல்லக்கறுக்கின்றபோழ்தத்தினம்பலத்துக்

காவிளைபவெல்லுமிடற்றோனருளிற்கதுமெனப்போய்
மேவியமாநிதியோடன்பாதேர்வந்துமேவினதே.(௱௪௯)

நேரிசையாசிரியப்பா.

வடவனத்தொருநாண்மாறுபட்டெதிர்ந்து
வழிநடந்தனதுமரககாலன்றி
முதற்றொழிறபதுமன்முன்னைவவ்வுழி
மான்றலைக்கரத்தினிற்கூட்டினைவயகதித்
தூக்கல்வளையுடன்றொடர்ப்பதமெறிந்து
மற்றதன்றளம்புத்திரியாக
நிமிர்த்தெறிகாலிற்கடைக்கண்கிடத்திப்
பாணியிற்சிரம்பதித்தொருநடைபதித்துக்
கொடுகொட்டிக்குக்குறியடுதெடுக்கும்
புங்கவம்வாரம்புடைநிலைபொருத்துச்
சச்சபுடத்திற்றனியெழுமர்த்திரை
யொன்றைவிட்டொருசீரிரண்டுறவுறுத்தி
யெடுத்துத்துள்ளியவினமுத்திரைக்கு
மங்கலப்பாணிமாத்திரைநான்குடன்
சென்றெறிந்தொடுங்குந்துறுமிடைதிருத்தி
ஞெள்ளலிற்குனித்தவிருமாத்திரைக்குப்
பட்டடையெடுக்கப்புவிதம்பரப்பிப்
புறக்கான்மடித்துக்குவித்தெறிநிலையம்
பதினன்கமைத்துவிடுமாததிரைக்கு
வனமும்பிதாவும்பாணியில்வகுத்து
வட்டங்கொடுக்குமிந்திரைபணிக்கு
மாத்திரையாறுடன்கும்பம்பதித்து
வலவையிடாகினிமண்ணிருந்தெடுத்த
காலுடன்சுழலவாடியகாளி
நாணிநின்றொடுங்கத்தாலுமோர்நாடகம்

பாண்டரங்கத்தொருபாடுபெற்றமைந்த
மோகப்புயங்கமுற்றத்துறைதூக்கி
யதற்குச்சாரணியருட்கரமொன்றிற்
பாணியிரண்டுந்தாளமாக்கி
யொருதாண்மிதித்துவிண்ணுறவிட்ட
மறுதாண்மலரின்மலாக்கரநதுடக்கிப்
பாரப்பதிப்பாணியைத்துடிமணியெடுப்பச்
சுருதியைத்தண்டிவலிகொண்டமைப்ப
முதலேழதனையொன்றினுக்கேழென
வீணைபதித்துத்தானந்தெரிக்க
முறறுடிமணியிலொற்றியபாணியை
நாதநகூட்டிமாத்திரையறுத்து
மாநகனியிரண்டிலாங்கனியொன்றுன்
முன்னொருநாளின்மு ழுககதியடைந்த
வம்மைபெயாபெறுமருட்பேய்பிடிப்பப்
பூகமுங்கூளியும்பேருவகுணிப்ப
வமரர்கண்களிப்பவாடியபெருமான்
மதுரையம்பதியெனுமொருகொடிமடந்தை
சீறிதழ்ச்சாதிப்பெருமணமபோல
தின்னுளநிறைந்தநெடுநகற்பதனுல்
வினையுடறபுணரவருமுயிர்பற்றிப்
புண்ணியந்தொடருமபுணர்சசிபோலக்
காலமுற்றெறுடுங்குநீண்முகிற்கூட்டமு
மணிதருதெருவிற்கொடிதருதேரு
நாற்குறிப்புலவாகூட்டெழுநனிபுகழ்
மருநதயில்வாழ்க்கையர்மணிநகருருவின
வுருளெழுபூழியுமவ்வுருள்பூண்ட
கலிமான்றுகளுங்கதிர்மறைநீழலி
னின்றுமுன்னிட்டநிறையணிபொறுத்துப்

பெருங்குலைக்கயத்துட்கருந்தாட்கழுநீர்
நிறைவினுட்பூத்ததாமரையொன்றென
நின்னுயிராயநாப்பண்
மன்னுகவேந்தன்வரவினுக்கெழுந்தே. ருoக

தூதுகண்டழுங்கல்.

வருவனசெல்வனதூதுகளேதிலவான்புலியூ
ரொருவனதன்பரினின்பக்கலவிகளுள்ளுருகத் [ம்மை
தருவனசெய்தெனதாவிகொண்டேகியென்னெஞ்சிற்ற
யிருவினைகாதலரோதுசெய்வாரினிற்றிருக்கின்றதே. உஅக

நேரிசையாசிரியப்பா.

வளைந்துநின்றுடற்றுமலிகுளிர்க்குடைந்து
முகிற்றுகின்மூடிமணிநெருப்பணைத்துப்
புனமெரிகாரகிற்புகைபலகொள்ளுங்
குளவன்வீற்றிருந்தவளர்புகழ்க்குன்றமும்
புதவுதொட்டெனத்தன்புயன்முதிர்காத்தினை
வரன்முறைசெய்தகூன்மதிக்கோவுந்
தெய்வமறைத்தசெழுந்தமிழ்ப்பாடலு
மைந்திணிற்பங்குசெயதின்புவளர்குடியுந்
தவலருஞ்சிறப்பொடுசால்புசெய்தமைந்த
முதுநகர்க்கூடலுண்மூவாததனிமுத
லேழிசைமுதலிலாயிரங்கிளைத்த
கானங்காட்டும்புள்ளடித்துணையினர்
பட்டடையெடுத்துப்பாலையிற்கொளுவிக்
கிளையிற்காட்டியையமுறைகிளத்திக்
குரலும்பாணியுநெய்தலிற்குமட்டி
விளரியெடுத்துமத்திமைவிலக்கி

யொற்றைத்தாரியொருநரம்பிரட்ட
விழுந்துமெழுந்துஞ்செவ்வழிசேர்த்திக்
குருவிவிண்ணிசைக்குமந்தரக்குலிதம்
புறப்படுபொதுவுடன்முல்லையிற்கூட்டி
விரிந்தவுங்குவிந்தவும்விளரியில்வைத்துத்
தூங்கலுமசைத்தலுந்துள்ளலுமொலித்தலு
மாங்கவைநான்குமணியுழையாக்கிப்
பூரகங்கும்பகம்புடையெழுவிளரி
துத்தந்தாரங்கைக்கிளையதனுக்
கொன்றினுக்கேழுசின்றுநனிவிரித்துத்
தனிமுகமலர்ந்துதம்மிசைபாடக்
கூளியுந்துள்ளவாடியநாயக
னிணையடியேத்துமன்பினர்க்குதவுந்
திருவறம்வந்தவொருவன்றூதுக
ளின்பமுமியற்கையுமிகழாக்காமமு
மன்புஞ்சூழுமளியுறத்தந்தென்
னெஞ்சமுந்துயிலுநினைவுமுள்ளமு
நாணமுங்கொண்டநடுவினரின்னுங்
கொள்வதுமுளதோகொடுப்பதுமுளதோ
செய்குறியினியவாயிற்
கவ்வையிற்கூறுவிர்மறைகள்விட்டெமக்கே. ௧0௨

---

# கல்லாடம்
## மூலமும் - பதவுரையும்
## முற்றிற்று.

---

உ

## விளம்பரம்

இப்புத்தகம் வேண்டியவர்கள், சென்னையைச்சார்ந்த புரசைப்பாக்கம் சுந்தரப்பிள்ளைவீதியில் - கஅ - வது கதவிலக்கமுள்ளவீட்டில் புதுவை - க - சுப்பராயமுதலியாரிடத்திலும், மேற்படி சென்னை பெத்துநாயக்கன்பேட்டை முல்லாசாயபுவீதியில் - சஉ - வது நெம்பர் வீட்டில் லக்ஷ்மீவிலாஸ அச்சுக்கூடத்தலைவர் புதுவை - சுப்பு - அருணாசலகுருக்களிடத்திலும் விலைக்குப் பெற்றுக்கொள்ளலாம்.

பிரதேசங்களிலுள்ள கையொப்பக்காரர்கள் தங்கள் கையொப்பத்தொகையை தபால்தலைகளாக அனுப்பும் விஷயத்தில் ரூபா - க - க்கு - க - அணா வட்டமும், (இப்புத்தகத்தைக கையொப்பக்காரர்களுக்கு அனுப்புவதற்காக) புத்தகம் - க - க்கு தபால்கூலிஅணா-உ-ம்-சேர்த்து அனுப்பவும்.